KVC0028

# ஆனந்தபோதினி

ஒரு சிறந்த மாதாந்தத்

தமிழ்ச் சஞ்சிகை.



"எப்பொரு ளெத்தன்மைத் தாயினு மப்பொருண்
மெய்ப்பொருள் காண்ப தறிவு"—திருவள்ளுவர்.

(தொகுதி 21)

யுவஹு ஆடிமீ முதல் தாதுஹு
ஆனிமீ வரையில்
1935ஹு ஜூலைமீ முதல் 1936ஹு ஜூன்மீ வரையில்

---

நா. முனிசாமி முதலியார்,
"ஆனந்தபோதினி" ஆபீஸ்,
நெ. 6, லாயர் சின்னதம்பி முதலி தெரு,
சௌகார்பேட்டை, மதராஸ்.



---

காலிகோ பைண்ட் விலை ரூபா 1—6—0 | 1936. | தபாற் கூலி வேறு.

# ANANDA BODHINI

## GOLDEN OPINIONS

---

From Rao Saheb Late T. Ramakrishna Pillai Avl., B.A., F.M.U., F.R.H.S., Chairman, Board of Examiners in Dravidian Languages, Madras University.

I am a regular reader of "Ananda Bodhini" the Tamil monthly published in George Town and I am glad to take this opportunity of expressing my appreciation of the way the Journal is conducted. It is just the kind of magazine we want for the Indian women in their houses and the conductors of the Journal have my best wishes for the success of their undertaking.

*Madras, 28th Nov. 1915.*
THOTTAKADU HOUSE. } (Sd.) T. RAMAKRISHNA PILLAY.

---

From Rao Bahadur A. C. Pranatartihara Iyer Esq., B.A., I.S.O., Retired Inspector of Schools, and Registrar of Books, Nungambakkam.

I have read several numbers of "**Ananda Bodhini**." It is conducted on right lines. The matter is suitable and the diction is unobjectionable. I can unhesitatingly say that the journal deserves public encouragement and support.

NUNGAMBAKKAM,
*Madras, 5th Dec. 1915.* } (Sd.) A. C. PRANATARTIHARA IYER.

---

We have received the current number of the Tamil monthly "**Ananda Bodhini**," containing a variety of information on several subjects of every day importance. The special feature of the monthly is that a separate section is set apart for giving advice to women either in the form of abstract statements, or small stories containing moral lessons.—*Hindu 22-9-15*.

---

Dear Sir,

Your Tamil monthly entitled "**ANANDA BODHINI**"..........................is written in *easy*, *clear* and *readable* style, *well-suited*, *particularly*, to *ladies* who take a liking to it on account of the varied subjects of interest dealt therein, calculated to mould their characters. That such a monthly should be in existence, side by side with the Anglo-Indian contemporaries, is very much to be appreciated. The subjects dealt within the short compass of the monthly are such that they deserve to be *read* and *re-read* from the view point to quality in contradistinction from style and rhetoric, with a select few of our readers seem to yearn for, as is evident from the pages of the current number *i.e.* pages **288** and **289**. A majority of the subscribers now on the rolls will be at one with me when I say that the style now adopted would conduce to the well-being and uninterrupted continuances of the monthly, since it is being and has to be read by both sexes, ... ... ... ... ... Itis very much to be envied that there should be over **10000** subscribers, on the ro lls which no other monthly of the kind is able to secure, or has ever before secured since inception. I wish the monthly all success.

Trivandrum, } A. V. SUBRAMANIA AIYAR,
21-1-17. } F.N. S.A. (Lon.), F.G.I. (Birm.)

# ஆனந்தபோதினி

## 21-ம் வருடத்திய விஷய அட்டவணை.

உ

ஓம்

பரப்பிரஹ்மணே நம:

# ஆனந்தபோதினி.

"எப்பொரு ளெத்தன்மைத் தாயினு மப்பொருண்
மெய்ப்பொருள் காண்ப தறிவு"—திருவள்ளுவர்.



தொகுதி 21 | யுவஹூ தைமீ கஉ | பகுதி 7
1936ஹூ ஜனவரிமீ 14உ

## கடவுள் வணக்கம்.

தன்னை யொருவர்க் கறிவரிதாய்த்
    தானே தானய் எங்கு நிறைந்து
உன்னற் கரிய பரவெளியாய்
    உலவா அமுதாய் ஒளிவிளக்காய்
என்னுட் கலந்தாய் யானறியா து
    இருந்தாய் இறைவா இனியேனும்
நின்னைப் பெறுமாறு எனக்கு அருளாம்
    நிலையைக் கொடுக்க நினையாயோ. (1)

நினையு நினைவுக் கெட்டாத
    நெறிபெற்று உணர்ந்த நெறியாளர்
வினையைக் கரைக்கும் பரம இன்ப
    வெள்ளப் பெருக்கே நினதருளால்
மனைவி புதல்வர் அன்னைபிதா
    மாடு வீடென் றிடு மயக்கம்
தனையு மறந்திங்கு உனைமறவாத்
    தன்மை வருமோ தமியேற்கே. (2)

புலனைந்துந் தானே பொரமயங்கிச் சிந்தை
அலமந்து உழலும் அடிமை—நலமிகுந்த
சித்தான மோன சிவனேநின் சேவடிக்கே
பித்தானல் உண்டோ பிறப்பு. (3)

பாடிப் படித்துலகிற் பாராட்டி நிற்பதற்கோ
தேடி எனையடிமை சேர்த்தாய் பராபரமே. (4)

# அரும்பொருள் விளக்கம்

1. இதனால் இறைவனை அடையும் நிலையை அருளுமாறு இறைஞ்சுகின்றார்.

(இ-ள்.) தலைவனே! முதல்வனாகிய தன்னை மற்றொருவருக்கு அறிதல் அருமையாகித் தானே தானாகி, சர்வ வியாபகமாகி, நினைத்தற்கரிதாகிய பரமாகாயமாகிக் கெடாத அமுதமாகிப் பிரகாசத்தோடுங்கூடிய தீபமாகி அடியேனிடத்தில் கலந்திருந்தாய். அங்ஙனமிருந்தும், அடியேன் தேவரீரை அறியாதவாறு மறைந்திருந்தாய். இனியாயினும் தேவரீரை அடையுமாறு அடியேனுக்குத் திருவருளாகிய நிலையினை அளித்தருளக் கருதாயோ? என்க.

முதல்வன் அங்கு இங்கு எனாதபடி எங்கும் வியாபகமாய் ஆன்மாக்கள் தோறும் இருக்கினும், அவ் வான்மாக்கள் அஞ்ஞானத்தால் மறைக்கப்பட்டு முதல்வனை அறியமாட்டாமல் இருத்தலின் "என்னுட் கலந்தாய் யானறியா திருந்தாய்" என்றனர்.

2. இதனால் தமக்கு இறைவனை மறவாதிருக்கும் தன்மை வருமா என்று இரங்குகின்றார்.

(இ-ள்.) எண்ணுகின்ற கருத்தினுக்கு எட்டாத மௌனநிலை அடைந்து அந்நெறியால் உன்னை அறிந்த சன்மார்க்கருடைய வினைகளை நாளுக்குநாள் கெடுக்கும் மேலான இன்பப் பெருக்கே! தேவரீருடைய திருவருளால் மனைவி, மக்கள், தாய், தந்தை, மாடு, வீடு என்று சொல்லிடும் மயக்கத்தினையும் மறந்து இவ்விடத்தில் தேவரீரை மறவாத குணம் அடியேனுக்கு உண்டாகுமோ? என்க.

மனைவி மக்கள் முதலியோர் முதல்வன் திருவடிப் பேற்றினை அடைவதற்கு இடையூறாயிருத்தலின் அவர்களது பற்று மயக்கம்; அதனால் அவர்களிடமும் பற்று வைக்காமல் முதல்வனையே எண்ணி உய்தல் வேண்டும் என்பார் "மனைவி புதல்வர்......மறவாத் தன்மை வருமோ" என்றனர்.

3. இதனால் முதல்வனது திருவடிகளைச் சேராதாருக்குப் பிறப்பு அடிக்கடி உண்டாம் என்கின்றார்.

(இ-ள்.) நன்மை மிகுந்த ஞானசொரூபமான மௌனநிலையை உணர்த்த எழுந்த முதல்வனே பஞ்சேந்திரியங்களும் தாமே வலிய வந்து தாக்கலால் மனங்கலங்கிச் சுழன்று அடிமை தேவரீரது திருவடிக்கே பித்தேறப்பெற்றால் பிறவி உண்டாகுமோ என்க.

பித்தாதல்—முதல்வனது திருவடியினையே அடையவேண்டும் என்று மோகித்திருத்தல். அங்ஙன மடைந்தவர்க்கே பிறப்புண்டாவதில்லை என்றனர். ஆகவே முதல்வ னடியினைச் சேராதாருக்குச் சனனம் அடிக்கடி உண்டாமென்பதாம்.

4. (இ-ள்.) பராபரமே! பற்பல செய்யுட்களைப் பாடியும், பற்பல நூற்களைப் படித்தும் புகழ்ந்து நிற்கவோ அடியேனை அடிமையாகத் தேடிச் சேர்த்தாய்? என்க.

C

# * "ஆனந்தபோதினி"யின்

# பொங்கல் வாழ்த்து

தமிழ்த்திரு மக்களே ! தமிழ்த்திரு மக்களே !
அமிழ்தம் சொரியும் தமிழ்த்திரு மக்களே !
துங்கப் பொங்கற் றாய்மைசே ரிந்நாள்
உங்கள் நிலைமையும் கடமையும் சற்றே
உணர்மின் உணர்மின் உணர்மின் உணர்ந்து
புணர்மின் புணர்மின் புணர்மின் புதுநலம்
பண்டை நாள்நம் தண்டமிழ் நாட்டில்
மண்டு மின்பமே எங்கும் பொங்கிய
திந்நா ளிந்நா டிருக்கு மிழிநிலை
எந்நா வலரா லியம்பிட இயலும்?
வறுமை அறியாமை பிணிகளாம் பேய்களும்
குறுகிய சாதி சமயப் பூதங்களும்
விடுதலை வேட்கையை வீட்டியே வீழ்த்தும்
அடிமைப் புத்தியாம் அவல அரக்கரும்
கொண்டா னடிக்கும் கோரக் காட்சியே
தண்டமிழ் நாட்டின் தனிப்பெருங் காட்சி !
இந்நிலை மாற்ற இன்றே துணிமின் !
நன்னிலை நாட்ட நாடுமின் ! நாடுமின் !!
விளைபொருள் செழிக்க விளங்குக பொங்கலவ்
விளைபொருள் விலைபெற வீறுக பொங்கல்
கால்நடை வளரக் காணுக பொங்கல்
மேல்நடை கைவர மேவுக பொங்கல்
வாணிகம் செழிக்க வளர்கநம் பொங்கல்
மாணியல் தொழில்பெற வாய்க்கநம் பொங்கல்
பிணிகள் தொலையப் பிறங்குக பொங்கல்
பிணக்குகள் ஒழியப் பெருகுக பொங்கல்
அறிவுக் கலைதா அமைகநம் பொங்கல்
அறியாமை நீங்கிட ஆர்கநம் பொங்கல்
விடுதலை நாடுற மிளிர்கநம் பொங்கல்
கெடுதல்கள் கேடுற கிளர்கநம் பொங்கல்
பொங்கும் மங்களம் எங்கும் தங்கவே
பொங்குக மகிழ்வெனப் போற்றுமின் பெரிதே.

---

* வி. ரா. இயற்றியது.




# சென்னை மாகாணத் தமிழர் மகாநாடு





தமிழ் மொழியையும் தமிழர் வாழ்க்கை நிலையையும் பல துறைகளிலும் முன்னேற்றவேண்டும் என்னும் உயரிய நோக்கத்துடன் சென்ற மாதம் திருநெல்வேலியில் சென்னை மாகாணத் தமிழர் மகாநாடு நடைபெற்றது. அம் மகாநாட்டில் தலைமை வகித்த மேலைத் தஞ்சை ஜில்லாபோர்டு தலைவர் ஸ்ரீமான் வி. நாடிமுத்துப் பிள்ளை அவர்கள் தமிழ் மொழியின் இலக்கிய இலக்கணப் பெருமைகளையும், அதன் முற்கால - தற்கால நிலைமைகளையும் விரிவாக எடுத்துரைத்தார். தமிழ்மொழி இக்காலத்தில் அடைந்துள்ள சீர் கேட்டைப் பற்றி நாம் அடிக்கடி எடுத்துக்காட்டிக்கொண்டு வருவதையும் நேயர்கள் நன்கு அறிவார்கள். "ஒண்டவந்த பிடாரி ஊர்ப் பிடாரியை ஓட்டியது" போல் நேற்று வந்த ஆங்கிலம் ஆதிக்கம் பெற்றுத் தமிழ் மொழியைத் தலையெடுக்கவிடாமல் செய்துவிட்டது. வடமொழிக்கு ஏற்பட்டுள்ள ஆதரவுகூடத் தமிழகத்தில் தமிழ் மொழிக்கு இல்லாமற் போய்விட்டது. தமிழ் உயர்தனிச் செம்மொழி என்று நெடு நாட்கட்கு முன்னரே போறிஞர் பலரால் உறுதி செய்யப்பட்டிருந்தும் அது இன்னும் "சக்களத்தி பிள்ளை"யாகவே பாவிக்கப்பட்டு வருகிறது. இதற்கென்ன காரணம்? தமிழ் மக்களின் தூங்கு மூஞ்சித்தனம்—அசட்டைத்தனம் என்று வயிறெரிந்து கூறுவதைத் தவிர வேறு காரணம் எதுவும் எமக்குத் தோன்றவில்லை. "எங்கள் தமிழ்மொழி அநாதியானது; தெய்வத்தன்மை வாய்ந்தது; சிவபெருமான் அருளியது; தொண்டர் நாதனைத் தூது விடுத்தது; முதலை உண்ட பாலனை அழைத்தது; சங்கத்தில் வளர்ந்தது; மூவேந்தர் போற்றியது" என்று பெருமைபேசிக்கொள்ளுவதில் மட்டும் தமிழ்மக்களோடு யாரும் போட்டிபோட முடியாது. ஆனால் சர்வ கலாசாலைகளிலும், கல்லூரிகளிலும், கலாசாலைகளிலும் தமிழ் எக்கதியில் வைக்கப்பட்டிருக்கிறது? லௌகிகத் துறைகளில் உயரிய அந்தஸ்து வாய்ந்தவர்கள் தமிழ் மொழியை வாயால் பேசவும் கூசுவனேன்? என்று கேட்டால் பழம்

பெருமை பேசிக் களிக்கும் தமிழ் மக்கள் என்ன விடை கொடுப்பார்கள்? என்பதை நேயர்களே ஊகித்துக்கொள்ளுவார்களாக.

சென்ற இரண்டு மூன்றாண்டுகளாகச் சர்வகலாசாலைத் தமிழ் வித்துவான் பரீக்ஷைக்கு வரும் அபேக்ஷகர்களின் தொகை பெருகி வருவது குறிப்பிடத் தக்கதாகும். சில ஆண்டுகட்கு முன்பு தமிழ்ப் பயிற்சியை விரும்புவோர் வெகு சிலரே ஆவர். மதுரைத் தமிழ்ச் சங்கம் சென்ற முப்பத்துநான்காண்டுகளாகத் தமிழ்மொழி வளர்ச்சிக்கு ஆற்றிவரும் அருந்தொண்டு போற்றத்தக்கது. எனினும் காலத்துக்கேற்ப அது மேன்மேலும் முன்னேற்றமடையாமல் ஒரு குறிப்பிட்ட வரையறைக்குள் அடங்கிக் கிடப்பது வருந்தத்தக்கதாகும். கரந்தைத் தமிழ்ச் சங்கம் பொருள் முட்டுப்பட்டால் ஒரு ஆரம்பப் பாடசாலை—ஒரு மாதப் பத்திரிகை-ஒரு ஆண்டு விழாக் கூட்டத்தோடு அடங்கிக் கிடக்கிறது. செட்டி நாட்டிலும் பிற விடங்களிலுமுள்ள தமிழ்க் கழகங்களும், கலாசாலைகளும் தமிழ் மொழிப் பற்றை வெளிப்படுத்தும் அளவில் நிற்கின்றன. வடமொழி வேதப் பயிற்சிக்கும்—சர்வ கலாசாலைப் பட்டப் பயிற்சிக்கும் போதிய ஆதரவு நல்கியிருக்கும் தமிழகம் தமிழ்மறைப் பயிற்சிக்கும்-தமிழ்ப் புலமைப்பட்டப் பயிற்சிக்கும் ஏன் தகுந்த ஆதரவு அளிக்கலாகாது என்று அறிய விரும்புகின்றோம். சென்னை மாகாணத் தமிழர் மகாநாட்டுத் தலைவர் கூறியபடி இச் சென்னை மாகாணத்திற்கே அண்ணாமலைப் பல்கலைக் கழகத்திலும், தஞ்சை மாநாட்டாண்மைக் (ஜில்லாபோர்டு) கழகத்தைச் சார்ந்த திருவையாற்று அரசர் கல்லூரியிலுமே தனித்தமிழ் வித்துவான் பரீக்ஷைக் கல்வி அளிக்கப்படுகின்றது. மாகாணம் முழுவதற்கும் இரண்டொரு கல்லூரிகள் போதியவை அல்ல. ஆங்காங்கு பல தமிழ்க் கல்லூரிகள் நிறுவப்படவேண்டும். ஸ்ரீமான் நாடிமுத்துப் பிள்ளை அவர்கள் தமிழ்க் கல்லூரிகள் பல தோன்றவேண்டும் என்று வற்புறுத்தி அதற்குரிய ஆலோசனையும் கூறியிருப்பது கவனிக்கத்தக்கதாகும். "பெரும் பொருட் செலவில் தனித் தமிழ்க் கல்லூரிகள் வைத்து நடத்துவது எல்லாருக்கும் இயலாதாயினும் அரசாங்கத்தார், மாநாட்டாண்மைக் கழகத்தினர் (ஜில்லாபோர்டார்) சைவ—வைணவ மடாலயத் தலைவர்கள், மிக்க வருவாயுள்ள கோயில் தருமக் கருத்தர்கள், மிக்க செல்வ வளம் பொருந்திய சிற்றரசர்கள், பெருஞ் செல்வர்கள் முதலியவர்கள் ஆங்காங்குத் தமிழ்க் கல்லூரிகளை வைத்து நடத்துதல் அரிய செயலாகுமா?" என்று கேட்கிறார் ஸ்ரீமான் நாடிமுத்துப்பிள்ளை. பொருளற்ற மூடப் பழக்க வழக்கங்கட்கும், ஆடம்பரங்கட்கும், களியாட்டங்கட்கும், வாணவேடிக்கைகட்கும், சதிர்க் கச்சேரிகட்கும் பாழ்போகும் பெருந் தொகையில் ஒரு சிறு பகுதியை ஒதுக்கினாலும் போதும்—தமிழன்னை மணிமுடி தரித்து அரியாசனத்தில் வீற்றிருப்பாள் என்பதில் எள்ளளவும் சந்தேகம் இல்லை. கல்லூரிகளை நிறுவி அவற்றை நிர்வகிக்கும் பொறுப்பு அசாத்தியமாகச் சில

ருக்குத் தோன்றினும் மாணவர்கட்குப் போஷணை உதவி அளித்துக் கல்லூரிகள் இருக்குமிடங்கட்கேனும் அனுப்பலாம். இச்சமயத்தில் திருப்பனந்தாள் மடாதிபதிகட்குத் தமிழுலகம் நன்றி பாராட்டி வணக்கஞ் செலுத்தக் கடமைப்பட்டிருக்கிறது என்று எடுத்துக்காட்ட விரும்புகின்றோம். அவர்கள் ஆண்டுதோறும் சர்வகலாசாலைத் தனித்தமிழ் வித்துவான் பரீக்ஷையில் முதன்மையாகத் தேர்ச்சி பெறுகிறவருக்கு ஆயிரம் ரூபாய் ரொக்கப் பரிசளிக்க நிலையான ஏற்பாடு செய்திருக்கிறார்கள். இதனால் அநேகர் ஊக்கத்துடன் தமிழ் பயின்று வருவதை நாம் காண்கின்றோம். மற்ற மடாதிபதிகளும், கோயில் தருமக் கருத்தர்களும் ஏன் திருப்பனந்தாள் மடாதிபதிகளைப் பின்பற்றக் கூடாது என்று கேட்கின்றோம். சென்னை மாகாணத் தமிழர் மகாநாட்டார் தமிழில் புதுக் கலைச் சொற்களை ஆக்க முன் வந்திருக்கின்றனர். இஃது அரிய முயற்சி என்பதில் ஐயம் இல்லை. திருப்பனந்தாள் மடாதிபதிகள் புதிய கலைச் சொற்களை இருமுறை பதிப்பிக்கவும், அச்சொற்களைச் செப்பம் செய்து சீர்திருத்துவோருக்குப் பரிசுகள் வழங்கவும் ஒப்புக் கொண்டிருக்கிறார்கள். இதிலிருந்து அவர்களுடைய தமிழ்ப் பற்றும் தொண்டும் இனிது விளங்கும் என்றே நம்புகின்றோம்.

சென்னை மாகாணத் தமிழர் மகாநாட்டில் சில முக்கியமான தீர்மானங்கள் நிறைவேறியிருக்கின்றன. முதலில் புதுக்கலை ஆக்கச் சொற்களை அச்சிடும் பொறுப்பை ஏற்று ஆதரித்த திருப்பனந்தாள் மடாதிபதிகட்கு நன்றியறிதல் காட்டும் தீர்மானம் நிறைவேற்றியது போற்றத்தக்கதாகும். இத்தீர்மானம் மற்ற மடாதிபதிகட்கும் உணர்ச்சி ஊட்டவேண்டும் என்று எதிர்பார்க்கின்றோம். தமிழை உயர்தனிச் செம்மொழி வரிசையில் வைத்து வளர்க்கவேண்டும் என்று சென்னை—அண்ணாமலைப் பல்கலைக் கழகத்தாரைக் கேட்டுக்கொண்ட தீர்மானம் வெகு முக்கியமானது. இத் தீர்மானம் விரைவில் நடைமுறைக்கு வரவேண்டும். தமிழ் மக்கள் எல்லாரும் ஒருமுகமாகக் கிளர்ச்சி செய்தால் இது எளிதில் நிறைவேறும் என்றே நம்புகின்றோம். ஆங்கிலக் கலாசாலைகளில் ஆங்கிலம் ஒழிந்த மற்றெல்லாப் பாடங்களையும் தமிழ் மொழி வாயிலாகவே கற்பிக்கவேண்டும் என்று ஒரு தீர்மானம் நிறைவேற்றப்பட்டிருக்கிறது. இதன் அவசியம் வெகு நாட்களுக்கு முன்னரே உணரப்பட்டது. அங்ஙனம் கற்பிக்கவேண்டும் என்று விதியும் செய்யப்பட்டிருக்கிறது. தமிழில் போதிய புதிய நூற்களின்மையால் அது வெற்றிபெறவில்லை. புதுக்கலைச் சொற்கள் பெருகி மொழி பெயர்ப்பு நூல்கள் விரைவில் வெளிவந்தால் எல்லாப் பாடங்களையும் தமிழ்மொழி வாயிலாகவே கற்பிக்கலாம். அதற்குத் தமிழர் மகாநாட்டார் முயற்சிசெய்தால் விரைவில் வெற்றி காணலாம். ஆங்கிலக் கலாசாலைகளில் ஆங்கில ஆசிரியர்கள் எத்தகைய பொறுப்பை ஏற்றுக்கொண்டிருக்கிறார்களோ அதே பொறுப்பைத்தான் தமிழாசிரியர்க

ளும் வகித்து வருகிறார்கள். ஆனால் அவர்களுடைய சம்பள விகிதத்தில் மட்டும் மலைக்கும் மடுவுக்குமுள்ள வேற்றுமை இருக்கிறது. இது அநியாயம் என்று நீண்ட நாட்களாகவே கிளர்ச்சி நடைபெற்று வருகிறது. எனவே ஷை இருதிற ஆசிரியர்களிடையே சம்பள விஷயத்தில் வேற்றுமை கூடாது என்று நிறைவேற்றிய தீர்மானத்தைக் கண்டு மகிழ்கின்றோம். மற்றும் தமிழ்த் திருநாள் கொண்டாடவேண்டும்; தமிழில் பட்டமளிக்கவேண்டும்; நல்ல தமிழ்ப் பேச்சுப் படங்களும், பாட்டுத் தட்டுக்களுக்கும் ஏற்படவேண்டும்; பாடப் புத்தகங்கள் பிழையற்றனவாய் இருக்கவேண்டும் என்று நிறைவேற்றியுள்ள தீர்மானங்கள் வெகு முக்கியமானவை என்பதில் சிறிதும் ஐயம் இல்லை. இவற்றிற்கு விரிவுரை அநாவசியம் என்றே கருதுகின்றோம்.

ஆங்கிலத் தமிழ்ப் பேரறிஞரும், சிறந்த இசைவாணரும், பெரியாருமாகிய திருவனந்தபுரம் ஸ்ரீமான் டி. லக்ஷ்மணப்பிள்ளை அவர்களின் உருவப் படம் ஒன்று சென்னை மாகாணத் தமிழர் மகாநாட்டில் திறந்து வைக்கப்பட்டது. ஸ்ரீமான் பிள்ளை அவர்கள் சென்ற நாற்பதாண்டுகளாகத் தமிழ் இலக்கியம், நாகரிகம், சங்கீதம் முதலிய கலைகளின் முன்னேற்றத்திற்கு அருந்தொண்டாற்றி யிருக்கிறார். இவர் சுயமாகவே தமிழ்ப் பாட்டுகளும் கீர்த்தனைகளும் கவனம் செய்யும் அறிவாற்றல் வாய்ந்தவர். இத்தகைய தமிழ்ப் பெரியாருக்குச் சென்னை மாகாணத் தமிழ்ச் சங்கத்தார் மரியாதைகாட்ட முன்வந்தது பாராட்டத்தக்க செய்தியாகும். ஸ்ரீமான் லக்ஷ்மணப்பிள்ளை அவர்கள் தமது உருவப்படத் திறப்பு விழாவுக்கு விடைகூறு முகத்தான் தமிழிசைப் புலவருக்குச் செய்த உபதேசம் பொன்னேபோல் போற்றத்தக்கதாகும். சுமார் இரண்டாயிரம் ஆண்டுகட்கு முன் தமிழ் மக்கள் இசைக்கலையில் தேர்ச்சி பெற்றிருந்த செய்தியை அவர் ஆதாரங்களுடன் எடுத்துக்காட்டினார். இப்பொழுது தமிழ் இசை இருந்த விடம் தெரியாமல் மறைந்துவிட்டது. அதற்குரிய காரணம் என்ன? "பௌத்த—ஜைன சமயங்களின் ஆதிக்கத்தால் தமிழரின் லௌகிக வாழ்க்கைச் சம்பந்தமான சங்கீதம் இருந்தவிடம் தெரியாமல் போய் விட்டது. சைவ—வைஷ்ணவ சமயங்கள் தலைதூக்கத் தொடங்கிய போது மதத்துடன் சங்கீதம் பிணைக்கப்பட்டது. அதனால் தமிழர் இசைச் செல்வம் கருநாடக சங்கீதத்தோடு கலந்து மறைந்துவிட்டது. இன்றும் தேவாரம் முதலிய தெய்வப் பாடல்களில் சுத்தமான தமிழ்ப் பண்கள் 24 காணப்படுகின்றன" என்று தமிழிசை மறைவிற்குக் காரணங் காட்டுகின்றார் ஸ்ரீமான் பிள்ளை அவர்கள். "தமிழ்நாட்டுப் பாடகர்கள் தமிழ்ப் பாடல்களுக்கே முதன்மை அளிக்கவேண்டும்" என்ற அறிஞர் பிள்ளை அவர்கள் செய்துள்ள அரிய உபதேசத்தைத் தமிழ்மக்கள் நடைமுறையில் கடைப்பிடிக்கவேண்டும் என்று விரும்புகின்றோம்.

ஓம் தத் ஸத்.

# பாரதி சித்திரம்

—(0)—

## "கண்ணன்—என் காதலன்."

(ஆரியூர்-வ. பதுமநாப பிள்ளை.)

### V

குடதிசையில் மறையும் செஞ்சுடர்க் கதிரோன், தனது தங்கக் கிரணங்களை எங்கணும் பரப்பி எல்லாவற்றின் மேலும் பொன் மூலாம் பூச முயன்றுகொண் டிருக்கிறான். ஒன்றன்பின்னொன்றாக எழுந்து ஒன்றோடொன்று மோதி விழுந்து மீண்டும் எழுந்து கரையை நோக்கி வேகமாக ஓடிவரும் அலைகள், மீண்டும் விரைந்து திருப்பிச் சென்றுவிடுகின்றன. நிறத்திலும் பரப்பிலும் ஒன்றோடொன்று ஒத்து நிற்கும் கடலும் வானமும் ஒன்றை யொன்று தழுவி முத்தமிட்டுக் கொண்டிருப்பதுபோல் தோன்றும் காட்சி, காண்போர் நெஞ்சில் இன்பத்தைப் பெருக்கும் அற்புத மோசனக் காட்சியாக விளங்குகிறது. அக்கடற்கரையிலே அமைந்திருக்கும் அழகிய பூஞ்சோலை யொன்றிலே, வடிவழகிற் சிறந்த இளமங்கை ஒருத்தி வாடிய முகத்துடன் கூடியவளாய் வீற்றிருக்கிறாள். அவளெதிரில், அவளது தோழிப் பெண் ஒருத்தி அமர்ந்து கொண்டிருக்கிறாள். செவ்வானத்தில் செஞ்சுடர்க் கதிரோன் செய்யும் இந்திர ஜாலக் காட்சிகளும்—நீலக் கடலில் குதூகலத்துடன் விளையாடிக் கொண்டிருக்கும் பறவைகள் இன்ப கீதங்களும் ஏனைய இயற்கையழகு மிகுந்த இன்பக் காட்சிகளும், அவ்விரு பெண்களுக்கும் சிறிதளவும் இன்பூட்டக் கூடியனவாகவில்லை. தரையில் கிடந்து வெய்யிலால் உலரும் தாமரை மலரைப்



போல், அவர்களது மலர்முகம் நகையொளி இழந்து, இருந்துயர் மிகுந்து

காணப்படுவது மிக்க பரிதாபகரமான காட்சியாக இருக்கிறது. புகை படிந்து ஒளியிழந்த அரிய ஓவியத்தைப்போல் துயர் மிகுந்து விளங்கும் இந்தச் சுந்தரி, தன்னெதிரில் அமர்ந்துகொண்டிருக்கும் தனது இன்னுயிர்த் தோழியை நோக்கி என்ன பேசுகிறுளென்பதைக் கவனிப்போம்:—

"எனது இன்னுயிர்த் தோழியே! நான் படும் பாட்டை, உனக்கு என்னென்று விரித்துச் சொல்வேனடீ? இப்பரந்த உலகிலே, என் உள்ளத்தைக் கொள்ளை கொண்டது ஒன்றே ஒன்றுதான். அதுதான், எனது இன்னுயிர்த் தலைவனுகிய கண்ணபிரானது புன்னகை பூத்த மலர்முகம். ஐயோ! அம்மலர் முகம்—எனது எல்லா ஆசைகளுக்கும் புகலிடமாயிருந்த அந்த ஒப்புயர்வற்ற அற்புத ஒளி பொருந்திய அம்மதிமுகம்—இப்பொழுது மறந்து போய்விட்டதடீ! அப்பெருமானிடம் நான் கொண்ட நேசத்தை, எனது நெஞ்சம் சிறிதளவும் மறந்துவிடவில்லை. அவனிடம் கொண்ட சீரிய நேசத்தினுலேயே, எனது உயிர் எனது உடலைவிட்டு வெளிப்படாமல் இன்னும் ஒட்டிக்கொண்டிருக்கிறது. அங்ஙனம், அம்மலர்முகத்தை மட்டும், எனது பாழும் நெஞ்சம் மறந்துவிட்டது என்ன விந்தையடீ! இதை யாரிடம் முறையிட்டு ஆறுதல் பெறுவேன்?

எனது இன்னுயிர்த் தலைவனது மலர்முகத்தை மறந்துவிட்டதனுல் மேன்மேலும் எனது நெஞ்சில் பெருகிக்கொண்டே யிருக்கும் கொடுதுயரை, என்னுல் சகிக்க முடியவில்லையடீ! சற்று முன்னர், எனது சகிக்கமுடியாத பெருந்துயரத்தை எண்ணிய வண்ணமே இரு விழிகளையும் சற்று மூடிக்கொண்டிருந்தேன். அப்பொழுது, அழகியதொரு முகத்தோற்றங் கண்டேன். ஆனுல்—ஐயோ—என்ன ஏமாற்றம்! எனது நெஞ்சைக் கவர்ந்துகொண்டுவிட்ட கண்ண மன்னனது ஒப்பற்ற மலர்முகத்தின் அற்புதப் பேரழகு முழுவதையும் அதில் காண முடியவில்லையே! அந்த முகத் தோற்றம் ஓரளவு அழகுடையதாகத்தான் இருந்தது. ஆனுல் இந்த முகத்திலே, காலையிளங் கதிரவனின் கனக ஒளி பட்டவுடன் மெல்லிதழ்களை விரித்து காற்றில் அசைந்தாடும் செந்தாமரை மலரின் சிரிப்பைப்போல், காண்போர் நெஞ்சில் காதல் தீயை எழுப்பும் அந்த ஜகன்மோகன சிங்காரப் புன் சிரிப்பைக் காணேமே! இது என்ன ஏமாற்றமடீ!

இரவிலும் பகலிலும் எந்த நேரத்திலும் எனது உள்ளம், அக்கண்ணனுக்கும் எனக்கும் உள்ள உறவின் சிறப்பைப் பற்றியே சிந்தித்துக்கொண்டிருக்கிறது. அப்பெருமான் என்னுடன் கலந்துரையாடிக் கொண்டிருந்த காலத்திலே, என்னிடம் கூறிய இன்ப மொழிகளை எண்ணி எண்ணி எனது நெஞ்சம் பெரிதும் ஏங்கிக்கொண்டிருக்கிறது. அப்பெருமானுக்கும் எனக்கும் இடையிலுள்ள தொடர்பு, எத்தனை பிறவிகள் எடுப்பினும் என்னைவிட்டு அகன்றுவிடக் கூடியதோ? இப்பரந்த உலகிலே, எனக்கு இன்பூட்டக்கூடியதெல்லாம்—என்னை உய்விக்கக்கூடியதெல்லாம்—அப்பெருமானுடன் நான் கொண்டுள்ள உயரிய தொடர்பு ஒன்றேயன்றே! அச்சீரிய தொடர்பை நான் இன்றளவும் ஒருபோதும் மறந்ததுமில்லை; இனியும் ஒருநாளும் மறக்கவும் முடியாது. இப்பெருமானது அருட்பெரும் புகழைக் கூறுந்தோறும், எனது வாய் எனக்கு எவ்வளவு இனிக்கிறது தெரியுமோ? அவனது அருட்பெரும் புகழைக் குறித்து எவ்வளவு பேசினுலும், எனக்கு திருப்தியே உண்டாவ

தில்லை. எப்போதும் அவனது அருட்பெரும் புகழைச் சொல்லிச் சொல்லி மகிழ்ந்துகொண்டிருக்க, எனது வாய் செய்த அருந்தவந்தான் எத்தகையதோ அறியேன்.

எனது மனமும் வாயும் மட்டும் எந்த நேரத்திலும் அந்தச் சுந்தரனை மறவாமல் போற்றி மகிழ்ந்துகொண்டிருக்க, எனது கண்கள் மட்டும் எத்தகைய கொடிய பாவத்தைச் செய்துவிட்டனவோ தெரியவில்லையே! இப்பொழுது கண்கள், எனது இன்னுயிரின் தனிப்பெருந் தலைவனாக இலங்கும் எம்பெருமானது ஒப்புயர்வற்ற அற்புதப் பேரழகு பொருந்திய திருவுருவை மறந்துவிட்டனவே! எனது இன்னுயிர்த் தலைவன் என்னுடன் உரையாடிக்கொண்டிருந்தபோது, அப்பெருமானது வடிவழகாகிய இன்னமிர்தத்தை வாரிவாரிப் பருகி மகிழ்ந்துகொண்டிருந்த எனது கண்கள், இப்பொழுது எப்படித்தான் அப்பெருமானது அழகிய திருவுருவை மறந்துவிட்டனவோ தெரியவில்லையே!

எனது இன்னுயிர்த் தோழியே! இப்பாரத நாட்டிலே, முற்காலத்திலே காதலிலும் கற்பிலும் சிறந்து விளங்கிய எண்ணிறந்த மாதர்களுக்குள், என்னைப்போல் தனது இன்னுயிர்த் தலைவனது திருவுருவை மறந்துவிட்ட பேதை எவளேனும் ஒருத்தி இருந்திருப்பாளோ? எனது இன்னுயிர்த் தலைவனது திருவுருவை மறந்துவிட்ட நான், இன்னும் இவ்வுலகைச் சுமந்துகொண்டிருப்பதை நினைக்க நினைக்க, எனது நெஞ்சில் வெட்கமும் துயரமும் அவமானமும் ஆத்திரமும் ஒருங்கே பொங்கிப் பெருகிக்கொண்டிருக்கின்றனவே! அழகுபெற மலர்ந்து விரிந்துள்ள மலர்களிலே மறைந்திருக்கும் செந்தேனைத் தேடிச் சென்று ஆசை தீரப் பருகி ஆனந்திக்காமல், அதை மறந்து வீணே பறந்து திரிந்துகொண்டிருக்கும் வண்டு இவ்வுலகில் உண்டோ? அழகு பெற மலர்ந்து கண்ணுக்கினிய குளிரொளி பெற்று தலை நிமிர்ந்து மகிழ்ந்து சிரித்து நிற்காமல், குளிரொளிச் சிறப்பை மறந்து குவிந்துள்ள இதழ்களை விரிக்காமல் தனக்குத்தானே துக்கங்கொண்டாடிக் கொண்டிருக்கும் நறுமணமலர் இவ்வுலகில் ஏதேனும் உண்டோ? நீலவானின் கருணையை எதிர்பார்த்து இரவும் பகலும் எந்நேரத்திலும் தலை நிமிர்ந்து தவம் செய்தவண்ணம் காத்து நிற்காமல், நீலவானை மறந்து நிலத்தை நோக்கித் தலைகீழாக வளரும் பசும் பயிர் இவ்வுலகில் ஏதேனும் உண்டோ? கேவலம் வருணனையிலடங்காத ஒப்புயர்வற்ற பேரின்பத்தை அளிக்கக்கூடிய செந்தேனமிர்தம் ஊறித் ததும்பும் செம்பவள வாயையுடைய செல்வப் பெருமானது திருவுருவை—இரு செவிகளிலும் இன்பத் தேனருவி பாயுமாறு மணிமொழிகள் பேசும் மணிவண்ணனது திருவுருவை—அழகுபெற மலர்ந்து குளிரொளி வீசிப் புன்முறுவல் பூத்து நிற்கும் மலர்முகத்தினனாகிய மரகத வண்ணனது திருவுருவை—கைம்மாறு கருதாது கருணை மழை பொழியும் நீலமுகில் வண்ணனின் மோகன சுந்தரத் திருவுருவை—எனது கண்கள் எப்படித்தான் மறந்துவிட்டனவோ தெரியவில்லையே! அதோ அம்மலரில் அமர்ந்து செந்தேன் பருகும் அப்பொன் வண்டையும், தன்னிடமுள்ள செந்தேன் அவ்வண்டு பருகுவதைக் குறித்துச் சிறிதும் வருந்தாமல் தன்னிடமுள்ள தேனையெல்லாம் அது ஆசைதீரப் பருகும் வண்ணம் தனது இதழ்களை விரித்துச் சிரித்து நிற்கும் அக்குளிரொளி பொருந்திய நறுமண மலரையும், நீலவானின் கருணையையே எதிர்பார்த்துத் தலை நிமிர்ந்தவண்ணம் தவம் செய்து நிற்பதுபோல் தோன்றும் அந்த நெற் பசும் பயிரையும் பார்க்கப்

பார்க்க, எனக்கு எவ்வளவு அவமானமாக இருக்கிறது தெரியுமோ? கண்ண பிரானோடு கூடிக் குலவியிருந்து அவனது சம்பந்தம் பெற்றறியாத அவற்றிற் கிருக்கும் குணங்கள்கூட, அப்பெருமானுடன் எண்ணிறந்த முறைகளில் கூடிக் குலவியிருந்துவிட்டு வல்வினைப் பயனாக இப்பொழுது அவனைப் பிரிந்து தனித்துத் தவித்து நிற்கும் என்னிடம் அமையாமற் போய்விட்டதை எண்ண எண்ண எனது நெஞ்சம் மிகமிகக் குமுறுகிறதடீ!

எனது இன்னுயிர்த் தலைவனாகிய கண்ணபிரானது மலர் முகத்தை மறந்து போய்விட்ட பின்னர், என் முகத்தில் இந்தக் கண்களிருந்து என்ன பயன்? எனது கண்ணனது திருவுருவை—கண்ணிற் கருமணி போன்ற காதல் நாயகனது திருவுருவை—வீரமும் பேரழகுமே ஒருருக்கொண்டது போல் சிறந்து விளங்கும் எனது சிந்தைக்கினிய சீரிய வீரச்செல்வனது திருவுருவை மறந்து போய்விட்ட இக் கண்கள், வெறும் புண்களே யன்றோ! எனது மனத்திற்கு மகிழ்வூட்ட இயலாத இப் புன்கண்களால், இனி எமக்கு என்ன பயன்? இந்தக்கண்கள் அப்பெருமானது ஆசை முகத்தை மறந்து விட்டாலும், அவனது அழகிய திருவுருவப் படமொன்று கிடைத்தால் அதைப் பார்த்தாவது எனது மனத்துயரை ஒருவாறு ஆற்றிக்கொள்வேன். இப் பாவியேற்கு, அப் பெருமானது படங்கூட கிடைத்த பாடில்லையே! எனது இன்னுயிர்த் தலைவனாகிய கண்ணனைக் கண் குளிரக்கண்டு ஆராத பேரன்புடன் தழுவி மகிழ்ந்து நிற்கும் தனிப்பெரும் பேறு, என்றேனும் ஒருநாள் எனக்கு வாய்க்கக் கூடுமென்னும் ஆசை யொன்றினாலேயே, இன்னும் இவ்வுலகில் உயிர் தரித்திருக்க விரும்புகிறேன். இன்று, இவ்வுலகிலே உன்னையன்றி எனக்கு உற்றதுணை வேறு எவர்? அவ்வாசையை நிறைவேற்றிக் கொள்வதற்காக இன்னும் இவ்வுலகில் உயிர் வாழ்ந்திருக்கக்கூடிய வழி என்னவென்பதை, இனியேனும் எனக்குச் சொல்லாயோ தோழி!''

## VI

திருவாய்ப்பாடியிலே, அழகிற் சிறந்ததொரு மாளிகையின் மேன்மாடியிலே, சிறந்த அலங்காரங்களுடன் கூடிய அழகு மிகுந்த இளமங்கை ஒருத்தியும் அவளது தோழிப்பெண் ஒருத்தியும் அமர்ந்து உரையாடிக் கொண்டிருக்கின்றனர். அந்தச் சுந்தரி, தனது தோழியை நோக்கி என்ன கூறுகிறாளென்பதைக் கவனிப்போம்:—

''ஏண்டீ, கமலா! எனது அலங்காரங்கள் உனக்குப் பிடித்திருக்கின்றனவா, இல்லையா? எனது சிந்தைக்கினிய செல்வக் காதலனாகிய கண்ண பிரான் மட்டும் இப்பொழுது இங்கிருந்தால், எனது அலங்காரங்களைக் கண்டு எவ்வளவு மனம் பூரித்துப் போவான் தெரியுமா? பிறர் கண்டு புகழவேண்டுமென்னும் ஆசையினாலோ ஆத்ம—திருப்திக்காகவோ, நான் என்னை இப்பொழுது இவ்வண்ணம் அலங்கரித்துக்கொண்டு விட்டேனென்று எண்ணி விட்டாயா என்ன? அவ்வண்ணம் ஏதேனும் நீ தவறாக எண்ணிக்கொண்டு விடாதே! இருந்தாற்போலிருந்து, சற்று முன்னர் திடீரென்று என்மனதில் ஓர் எண்ணம் உதயமாயிற்று. எனது இன்னுயிர்க்காதலனாகிய கண்ணபிரானைப் பிரிந்து தனித்துத் தவித்து நிற்க நேர்ந்துள்ள வருத்தத்தை, எவ்வளவு காலந்தான் என்னால் சகித்துக் கொண்டிருக்க முடியும்? அப் பெருமான் எத்

தகைய அலங்காரங்களைக்கண்டு எனது வடிவழகில் மதிமயங்கி மகிழ்ந்து கின்ருனே, அத்தகைய அலங்காரங்களுடன் சிறிது நேரமேனும் மகிழ்ந் திருக்க நினைந்தே இப்போது இவ்வாறு என்னை நானே அலங்கரித்துக்கொள்ளத் துணிந்தேன். எனது அழகும் அலங்காரங்களும் அப்பெருமானுக்கு மகிழ்வூட்டுவதற்கு உரியனவே யன்றி, பிறர் கண்டு மெச்சிப் புகழ்வதற்காக வன்று என்பதை நான் உனக்குச் சொல்லவும் வேண்டுமோ? ஆ! இந்நேரம் எனது சிந்தைக்கினிய செல்வக் காதலன் இங்கிருந்தால், எவ்வளவு ஆனந்தமாயிருக்கும்!



எனது இன்னுயிர்க் காதலனுக்கு என்னிடம் எவ்வளவு ஆசை தெரியுமா? அப்பெருமான் இத் திருவாய்ப்பாடியில் இருந்தபோது, என்னிடம் அவன் கொண்ட பேரன்பின் சின்னங்களாக எனக்கு என்னென்ன பரிசுகள் வழங்கினுன் தெரியுமோ? ஒருநாள், உயர்ந்த மாம்பழங்கள் — சுவை மிகுந்த தேன் பலாச் சுளைகள் — சிறந்த வாழைப் பழங்கள் முதலிய பலவகைப்பட்ட இனிய கனிகளைக் கொண்டுவந்து என்னெதிரில் வைத்த அவன், "என் அன்பே! இக் கனிகள் கற்கண்டைக் காட்டிலும் இன்சுவை மிகுந்தனவாகும். இவற்றை நீ உண்டுகளிக்க வேண்டு மென்பதே எனது ஆசை. அதனுலேயே இவற்றை வேறெங்கும் எடுத்துச் செல்லாமல் உன்னிடமே கொண்டு வந்தேன்."—என்று அன்பொழுகும் இன்பக் குரலில் கூறிநின்ருன். அதைக் கேட்ட நான், "என் ஆருயிரே! என் இந்த மாயச் சோதனை? எனது சிந்தைக்கினிய காதற் செழுங்கனியாகிய நீயே என் எதிரில் நிற்கும் போது, எனது மனம் கேவலம் இக் கனிகளைச் சுவைக்க விரும்புமா? இக் கனிகள் எனது நாவுக்கே யன்றி, எனது ஆன்மாவுக்கு இன்பூட்டக் கூடியனவாகுமோ? தேவாமிர்தத்தைப் பெற ஏங்கிநிற்போர், கேவலம் ஈனக் கள்ளில் இச்சை கொள்வது முண்டோ? எனது இதழ்களுக்கும் நெஞ்சுக்கும் ஒருங்கே பேரின்ப மூட்டக் கூடிய சீரிய செங்கனியை உனது முகமலரில் வைத்துக் கொண்டுள்ள நீ, என்னை இவ்வாறு சோதிக்கத் துணிந்தது தருமந்தானே?" —என்றுரைத்து அப் பெருமானது செங்கனிவாயை ஆராத பெருங்காதலுடன் கூர்ந்து நோக்கி நின்றேன். என் மனக்கிடக்கையை உணர்ந்து

கொண்டு விட்ட அப் பெருமான், என்னைத் தழுவியணைத்து தனது செங் கனிவாயமிர்தத்தை எனது செவ்விதழ்களுக்கு அளித்தருளினன். அவ் வேளையிலே, நான் அனுபவித்த ஆனந்தத்தை என்னென்று சொல்வேனடி!

மற்றொருநாள் மாலையிலே என்னிடம் வந்த அந்த மோகனக் கண்ணன் தான் கொண்டுவந்திருந்த நறுமணம் மிகுந்த குளிர்ந்த சந்தனக் குழம்பைத் தனது திருக்கைகளினாலேயே எனது இருகரங்களிலும் பூசினன். அது மட்டுமோ? பலவகைப்பட்ட மலர்களிலிருந்து தயாரிக்கப்பட்ட விலையுயர்ந்த பலவித அத்தர்களை எனது மேனி முழுதும் தெளித்தான். பின்னர், எனது நெற்றியிலே தனது திருக்கையினாலேயே விலையுயர்ந்த சவ்வாதினால் பொட் டிட்டு மகிழ்ந்து நின்றான். அப் பெருமான் அவ்வளவு செய்த பின்னரும், வெட்கமிகுதியினால் குனிந்த தலை நிமிராதிருந்த நான் பதுமையைப் போல் அசைவற்றிருந்தேன். எனது உடலும் உள்ளமும் உயிரும் அப் பெருமானுக் கே அடிமைப்பட்டு விட்டன வாதலின், அவனது சொத்தாகிய என்னை அவன் விரும்பியபடி செய்து கொள்ளட்டு மென்று நான் செயலற்றுச் சும்மா இருந்தேன். பின்னர், அந்தச் சுந்தரச் செல்வன், குனிந்திருந்த எனது முகத்தை நிமிர்த்தி, எனது இதழ்களில் ஒரு.........ஒரு.........ஒரு......... சொல்லக் கூசுகிறதடி, கமலா! அந்தக் கணத்திலே, எனது ஆத்மா அனுப வித்த அந்த ஆனந்தத்தை, வருணித்துச் சொல்லக்கூடிய வார்த்தைகளும் உண்டோ?



உடனே, அப் பெருமான் தான் கொண்டுவந்திருந்த மணம் மிகுந்த வாசனைத் தைலத்தை எனது கருங் கூந்தலில் தடவி எவ்வளவு அருமையாக வாரினன் தெரியுமோ? நீயுந் தான் எனது கூந்தலை எவ்வ ளவோ முறைகளில் வாரியிருக் கிறாய்! எனது இன்னுயிர்ச் செல்வன் வாரியதைப் போல் கூந்தல் வார நீ எவ்வளவுதான் முயன்றாலும் உன்னால் முடி யுமோ? அன்பர்களுக்கு அருள் புரியும் அப்பெருமானது செந் தாமரைக்கைகள் எனது சென் னியில் பட, நான் முன்புசெய்த பெருந்தவந்தான் எத்தகைய தோ அறியேன். அவனது மணிக்கரங்கள் எனது கூந்த லில் பட்டவுடனே, எனது உடல் முழுவதும் பரவிய இன்ப உணர்ச்சியை நான் என் னென்று சொல்வேனடி?

எனது இரு கருவிழிகளும் அப் பெருமானது திருமுக அழகைப் பருகு வதிலேயே தம்மை மறந்து லயித்திருந்தன. அதைக் கவனித்த அவ்வடிவழ கன், புன்னகை பூத்த இன்முகத்துடன் கூடியவனாய் என்னை நோக்கி, "ஓகோ! உனது கருவிழிகளாகிய வண்டுகளுக்குத்தான் என்ன ஆசையடீ! எனது முக மலரை, அவை எவ்வளவு பேரார்வத்துடன் நோக்குகின்றன! இதோ இந்தக் கரிய மையை அவற்றின் இருபுறமுந் தடவி, அவற்றிற்கு எவ்வளவு விநோத மான வேஷம் போடுகிறேன் பார்!"— என்று சொல்லிவிட்டு, எனது கரு விழிகளின் ஓரத்தில் கரிய மையைத் தடவிவிட்டு, கலகலவென்று சிரித்து நின்றான். அவன் செய்த செயலை என்னால் பொறுக்க முடியாமற் போய் விட்டது. எனவே, அவன்மேல் கோபங் கொண்டுவிட்டவளைப் போல் திடீ ரென்று எழுந்த நான், எனது பொற்சிலம்பிலுள்ள மணிகள் கணகணவென ஒலிக்க நாலடி நடந்து சென்று முகத்தைத் திருப்பிக் கொண்டு நின்றேன். அதைக் கண்ட அப் பெருமான், "அடடா! தேவியாருக்குக் கோபம் பெருகி விட்டாற் போலிருக்கிறதே! ஐயோ, பாவம்! மல்லிகை மலரினும் மெல்லிய இப்பாதங்கள், இப் புல்லிய தரையில் பட்டு அழுக்கடையலாமோ? இதோ, செம் பஞ்சுக் குழம்பு! இதை உனது மலரடிகளில் தடவிக்கொள்; இன்றேல், நானே தடவி விடுவேன்."— என்றான். அவனது அன்புப் பெருக்கை நான் என்னென்று சொல்வேனடீ? எனக்கு மட்டுமா? இவ்வாய்ப் பாடியிலுள்ள எல்லாப் பெண் களுக்குமே, எனது இன்னு யிர்த் தலைவனாகிய கண்ண பிரான் கருணையே உருவாக அவதரித்தருளிய — வருணித் தற்கரிய மகிமைபொருந்திய— பிரத்தியட்ச தெய்வம் என் பதில் ஐயமும் உண்டோ? எனது நெஞ்சக் கோயிலில் என்றென்றும் இடையறாமல் வீற்றிருந்தருளும் எனது தெய்வத்தின் கைம்மாறற்ற தனிப்பெருங் கருணையை என்னென்று புகழ்ந்துரைப் பேனடீ?



அவையெல்லாம் ஒருபுறம் இருக்கட்டும்; கடைசியாக, எனது இன்னுயிர்க் காதலன் செய்த இருசெயல்களை வெளி யிட்டுரைக்க எனக்கே வெட்க மாயிருக்குதடீ! எனினும், எனது இன்னுயிர்த் தோழியாகிய உன்னிடம் அவற்றை வெளியிடாமல் ஒளிக்கவும் என் மனச்சாட்சி இடந்தரவில்லை. எனது மார்பகத்தில் தனது மணிக்கையால் எழுதி மகிழ, அப்பெருமான் சிவந்த குங் குமக் குழம்புகூட குழைத்துக் கொண்டு வந்திருந்தானடீ! அவன் என்னை

இறுகக் கட்டித் தழுவிக் கொள்ளும் போது, அவனது திருமார்பில் ஒட்டிக் கொண்டுவிடுவது அவனுக்குப் பெருமகிழ்வூட்டும் போலும்!

எனது மனநிலையைச் சோதிக்கும் எண்ணத்துடனோ என்னவோ, தான் மறைத்து வைத்துக் கொண்டிருந்த ஏராளமான பொற்பணங்களை எடுத்து என் எதிரில் கொட்டிய அப்பெருமான், என்னை இறுகக் கட்டித் தழுவிக் கொண்டு பெரு மையல் விளைவித்தான். அதைக் கண்ட நான், இருவிழி களிலும் நீர்பெருகி வழிய அவனை நோக்கி என்ன சொன்னேன் தெரியுமோ? "இதுதானோ நீ என்னிடம் கொண்டுள்ள அன்பு? எனது நெஞ்சில் ஆழ்ந்து ஊறிக்கிடக்கும் தெய்வத்தன்மை பொருந்திய எனது சீரிய காதலை, இவ்வற்பப்பணத்திற்கு விற்கக்கூடிய கேவலத்தன்மை பொருந்தியதாகவோ எண்ணிக்கொண்டு விட்டாய்? எனது எல்லா ஆசைகளையும் இனிது நிறைவேற்றி வைக்கக்கூடிய ஒப்புயர்வற்ற ஒரு பெருங் கற்பகத்தருவாகவே உன்னை நான் எண்ணியிருக்கும்போது, இவ்வற்பப் பணத்தால் எனக்கு என்ன பயன்? உன்னை உன்பொருட்டே நான் விரும்பி நிற்கிறேனேயன்றி, இவ் வற்பப் பொருள்களுக்காகவோ உன்னை விரும்புகிறேன்? உன்னிடத்தில் நான் எதிர் பார்த்து நிற்பது உனது மனப்பூர்வமான சீரிய உண்மைக்காதல் ஒன்றேயன்றி, வேறு எதுவுமில்லையே! எனது நெஞ்சக் கோயிலில் வீற்றிருந்து செங்கோல் செலுத்தும் செந்தாமரைக்கட் செங்கனிவாய்ச் செல்வனே! உனது மாய லீலைகளை உள்ளபடி உணர வல்லவர், இவ்வுலகில் உண்டோ? எனது இன்னுயிரே! என் இத்தகைய சோதனைகள்? எல்லாவற்றையும் எளிதில் அறிய வல்லவனாகிய நீ, எனது மனநிலை எத்தகையதென்பதை அறியாயோ? நெஞ்சில் ஆழ்ந்து ஊறி ஆன்மாவோடு இரண்டறக் கலந்து கொண்டு விட்ட எனது சீரிய மெய்க்காதலை, இன்னும் நீ சோதிக்கத் துணிவதும் தருமந்தானோ?"—என்று கூறி நின்றேன்



நான். எனது மொழிகளைக் கேட்டுப் பரவசமடைந்த அப்பெருமான், எனது கன்னத்தில்.............ஒரு.........ஒரு............சொல்லக் கூசுதேடி கமலா!

அந்தோ! அப்பழைய நினைவுகளையெல்லாம் இப்பொழுது நினைத்துக் கொண்டுவிட்டால், எனது மனம் என்ன பாடு படுகிறது தெரியுமோ? இப்பொழுது நான் இங்கிருந்து கொண்டு தினந்தோறும் எண்ணாத எண்ணமெல்லாம் எண்ணி எண்ணி நெஞ்சம் புண்பட்டுக்கொண்டிருக்க, எனது நெஞ்சைக் கவர்ந்து கொண்டுவிட்ட கண்ணபிரானோ வடமதுரையில் சீரிய சிங்காதனத்தில் செருக்கோடு வீற்றிருந்து செங்கோல் செலுத்திக் கொண்டிருக்கிறான்! ஊராரின் பழிமொழிகளைப் பொருட்படுத்தாமல் நானே வடமதுரைக்குச் சென்று அப்பெருமானது சபையில் நிற்கத் துணிந்தாலும், பழைய நினைவுகளை யெல்லாம் நினைவூட்டிக்கொண்டு மீண்டும் என்னை அவன் ஏற்றுக் கொள்வானென்பது என்ன நிச்சயம்? அப்பெருமான் இங்கிருந்தபோது அவனுடன் நான் அனுபவித்த இன்பங்களெல்லாம் மீண்டும் எனக்குக் கிடைக்கக் கூடுமென்னும் நம்பிக்கை, இப்பொழுது எனக்குச் சிறிதளவும் இல்லை. எனினும், அந்த ஜகன்மோகன சிங்காரப் புன்னகை தவழும் அவனது மலர்முகத்தை இன்னொரு முறை கண் குளிரக்கண்டு களிக்கும் தனிப்பெரும் பேறு மட்டும் எனக்குக் கிடைத்து விட்டால், அஃதொன்றே எனக்குப் போதும். அத்தகைய சீரிய பேறு மட்டும் எனக்கு மீண்டும் ஒருமுறை வாய்த்து விட்டால், எல்லாவகைப்பட்ட மங்களங்களும் எனக்கு இனிதில் எய்துமென்பது உறுதி. அதன்பின், அஃதொன்றையே எனது நெஞ்சில் பதிய வைத்துக் கொண்டு, எல்லா வருத்தங்களையும் மறந்துவிட்டு என்றென்றும் மகிழ்ந்து கொண்டிருப்பேன். எனடீ, கமலா! எனக்கும் அத்தகைய தனிப்பெரும் பேறு, இனி வாய்க்குமோ?'

---



# சாங்கிய தரிசனம்

(திரு. எஸ். ஏ. திருமலைக் கொழுந்துப் பிள்ளை, பி.ஏ.)

(411-ம் பக்கத் தொடர்ச்சி.)

## 14-வது காரிகை

*அவிவேக்யாதிః சித்தஸ் திரைகுணயாத்தஹி பர்யயாபாவாத்—காரணாத்ம-ககுணத்வாத் கார்யஸ்யாவ் யக்தமம் பிசித்தம்.*

*[பிரகிருதி யுண்மையும், அதற்கும் அதன் மாட்டுத் தோற்றமுற்ற தத்துவங்கட்கும் பகுத்தறிவும் சுய உணர்ச்சியுங் கிடையா என்பது நாட்டப்படுகின்றது.]*

தோற்றமுற்ற பொருள்களிடத்து பகுத்தறிவின்மை முதலியன எவ்வாறு நாட்டப்படுமெனின், அவற்றினிடத்து முக்குணங்கள் காணப்படுகின்றன, புமான் மாட்டோ அவை காணப்படவில்லை.

தோற்றமுறாது நிற்கும் பிரகிருதியின் உண்மை காரியமான தோற்றமுள்ள பொருள்களால் துணியப்படும். அன்றியும் காரியமும் காரணமே போறலின் (போல இருத்தலின்) பிரகிருதியி னிடத்தும் முக்குணங்கள் உள்ளன.

உரை:—புமான் மட்டுமே அறிவன்; பிரகிருதியும் அதனின்றும் காரியப்பட்ட தத்துவங்களும் அறிவு படையாதன. முக்குணங்கள் அவற்றில் விளையாடுவதால் அவை ஒரு வழியில் பிரகாசத்தையும் ஒரு வழியில் தூண்டுதலையும் ஒரு வழியில் இருளையும் கொடுக்கின்றன.

மண் ஒரு பொருளேயாக, சட்டியென்றும் பானையென்றும், குடமென்றும், கலயமென்றும் பற்பல உருவங்கள் தோன்றினும் யாவும் மண்ணே; உருவ பேதம் ஏற்பட்ட காரணம் சக்தியாம்.

அவ்வாறே பிரகிருதியும் ஒன்றே; அதனிடம் ஓர் சக்தி மூன்று விதம் மூன்றுவித விளையாட்டுகளை (லீலைகளை)ச் செய்வதால் தத்துவங்களும் பஞ்சபூதங்களும், பிரபஞ்சமும் தோன்றின.

பஞ்சு ஒரு பொருளேயாக அதனிடம் மூன்று நிறங்கள் கலக்குங்கால் விசித்திரமான பற்பல வஸ்திர பேதங்கள் எல்லாம் உண்டாகின்றன. இவ்வஸ்திரங்கள் யாவும் நன்கு ஆராயுமிடத்து எந்த வஸ்திரத்திற்கும் முதற் பொருளாயிருப்பது பஞ்சு அல்லது வேறு பொருளில்லை என்பது விளங்கும்.

அடுத்த இரண்டு காரிகைகளால் பிரகிருதியின் உண்மை நன்கு நாட்டப் பட்டு, விகார ரூபங்களுக்குக் காரணமும் உணர்த்தப்படும்,

## 15-வது காரிகை

பேதானும் பரிமாணுத் சமன்வயாச் சக்திதః பிரவிருத்தேஸ்ச— காரண கார்யா விபாகாதவிபாகாஹை ஸ்வரூபஸ்ய.

(இப் பிரபஞ்சத்தில் தோன்றி நிற்கும்) பலவகைப் பொருள்களும் அலவக்கு உட்படுதலானும், (ஆயினும் அவற்றினிடத்து உற்று நோக்கின்) ஒருபடித்தான தன்மை காணப்படுதலானும், காரிய ரூபமான பொருள்கள் யாவும் சத்தியால் உந்தப்பட்டு விருத்தி யடைகின்றமையாலும், (சத்தியால்) காரண உருவமாயிருந்த ஒன்று தன்னினின்று சிறிது பாகம் பிரிவுற்று காரிய ரூபமான பலவேறு பொருளாய்க் காணப்படுதலானும், காரியமாய்ப் காணப் படும் பல் வகைத்தாய பொருள்களும் முடிவில் ஒன்றுகூடி ஒரே விஸ்வரூப மாதலானும்;

## 16-வது காரிகை

காரண மஸ்தவ்யக்தம் பிரவர்த்ததே திரிகுணதః சமுதயாச்ச—பரி ணுமதః சலிலவத் பிரதிப் பிரதி குணுஸ்ரய விசேஷாத்.

தெளிவுபடத் தோற்றத்திற்கு வராத ஓர் காரணப் பொருள் உளது. இப் பொருள் (சத்தியின் மூன்று கூறுகளாகிய) முக்குணங்களால் விருத்தி யடைகின்றது. எவ்வாறெனின் (விசும்பின் கண்) ஒரு தன்மையதாயிருக் கும் நீர் (நிலத்தின் இயல்பால்) பலவித நீர் ஆகுவது போல், ஏகமான மூலப் பிரகிருதி தன்னுள் முக்குணங்கள் ஒன்று கூடுவதாம், ஒன்று கூடிப் பலவிதக் கோலங்களை (உருவங்களைக்) காட்டுவதாலும் இப் பிரபஞ்சரூபமாய் விளங்கி நின்றது.

உற்று நோக்கின் எல்லாப் பொருட்கும் ஒரு தன்மைத்தான மூலப் பிர கிருதியே அடிப்படையா யிருப்பதும் ரூப பேதங்கள் யாவும் குண விசேடத் தன்மையால் விளைந்தன வென்பதும் வெளிப்பட அறியலாகும்.

உரை:—வஸ்திரங்கட் கெல்லாம் பஞ்சே முதற்பொருள்; ரூப பேதங் கள் ஏற்பட்டதன் காரணமாவது சாயமென்னும் நிறங்களாகும்.

The rest of cosmic matter is homogeneous; it is played on by three humours blackness, redness, and whitness; the world with its diverse forms owes its manifestation to these humours.

## 17-வது காரிகை

ஸம்ஹதபரார்த்த த்வாத்திரிகுணுதி விபர்ய வாத திஷ்டானுத்—புரு ஷோஸ்தி போக்த பாவாத் கைவல்யார்த்த பிரவிருத்தேச்ச.

(சிற்றறிவனுகிய புருஷன் உளன் என்பது நாட்டப்படுகிறது.)

[மூலப் பிரகிருதி, குணத்திரையம் ஆகிய இரண்டையும் நிறுவி, இவற் றிற்கப்பாற் பட்டுள்ள புருஷனது உண்மை நாட்டப்படுகிறது. புருஷன்

இல்லாத வழி பிரகிருதி ஒரு பிரயோஜனத்திற்கும் உதவாது என்பதால் புருஷன் என்னும் பொருளின் உண்மை பெறப்படுவதைக் காட்டுகின்றார்.]

சேர்க்கையால் ஒரு பொருள் உண்டாகுமாயின் அஃது மற்றொன்றின் பொருட்டாகலானும்,

முக்குணங்களைக் கொண்ட பிரகிருதிக்கு மாறாக அவற்றின் வேறாக ஒரு பொருள் நாடப்படுதலானும்,

எஜமானத்துவத்தோடு பிரகிருதியை நிலைக்களனாகக் கொண்டு மேற் பார்ப்பான் ஒருவன் வேண்டப் படுதலானும்,

பிரகிருதியால் விளையும் போகங்களை யனுபவிப்பான் ஒருவன் வேண்டப்படுதலானும்,

சகல லோகங்களையும் அனுபவித்த பின் வெறுப்புற்று அவற்றை விட்டுத் தனிமை தேடும் ஒருவன் வேண்டப்படுதலானும், (யாவற்றிற்கும் முடிவு கண்டு ஒழிவு தேடும்) புருஷன் உளன் என்பது திண்ணம்.

உரை:—அசேதனமாகிய (அறிவில்லாத) பிரகிருதியும், குணங்களும் சேஷ்டை செய்வதால் இவற்றுட் கலத்திற்கும் பின்னர் விலகுதற்கும் திறமையுள்ள சைதன்னியன் உளன் என்பது ஊகத்தால் துணியப்படும். உபயோக மின்றி ஓர் பொருளும் இராது. புருஷன் இல்லாத வழி பிரகிருதியாலும் குணங்களாலும் ஒரு பிரயோஜனமும் ஏற்படாது.

சேர்க்கையாலாகிய உடம்பின் உள்ளிருந்து புருஷன் வாழ்தற்பொருட்டே சமைக்கப்படுவ தென்றும், புருஷன் முக்குணங்கட்கு அப்பாலனென்றும் புருஷன் எஜமானத்துவம் உடையா னென்றும், புருஷன் போகி யென்பதும் அவனே தனி யிருக்கவும் வல்லன் என்பதுவும் நிறுவப்பட்டன.

## 18–வது காரிகை

ஜனன மரண கரணனாம் பிரதி நியமாதயுக பத்பிர விருத்தேச—புருஷ பகுத்வம் ஸித்தம் திரை குண்ய விபர்யாச்சைவ.

[சிற்றறிவினராகிய புருஷர் பலர் என்பது காட்டப்படுகின்றது.]

ஒவ்வொரு ஜீவர்க்கும் தனித்தனி பிறப்பு, இறப்பு, கரணங்கள் அமைந்திருப்பதனாலும், ஒரே காலத்தில் யாவரும் ஒரே தொழிலைச் செய்யாது வேறு வேறு தொழில் செய்வதனாலும், ஒவ்வோரிடத்தும் குணம் ஒன்றாக இல்லாது பற்பல விதமாய் ஒன்றிற்கொன்று மாறாகக் காணப்படுதலானும் புருஷர் பலர் உளர் என்பது திண்ணமாகக் கொள்ளலாகும்.

உரை:—ஒரே ஜீவன் (புருஷன்) பற்பல கூட்டிற்குள் வாசஞ் செய்யின் எல்லா ஜீவரும் ஒரே காலத்திற் பிறத்தலும், ஒரே காலத்தில் இறத்தலும், ஒரே காலத்தில் நினைத்தல் முதலியனவும் செய்யவேண்டும். அன்றியும் ஒரு ஜீவன் இயங்கித் தொழில் செய்யுங்கால் மற்றைய ஜீவர்கள் யாவரும் இயங்கித் தொழில் செய்ய வேண்டும். ஓர் உயிரே எங்கும் இருப்பின் அதன் குணமே மற்றை யாவரிடத்தும் இருத்தல் வேண்டும். ஒருவன் விழிக்குங்கால் உலகத்திலுள்ள யாவரும் விழித்தலும், தூங்கப் புகுங்கால் யாவரும்

தூங்கப் புகவும் வேண்டும். இவ்வாறு இல்லாமையால் ஜீவர்கள் பலரே யாவர். அன்றியும் ஒருவன் கோபமுறுங்கால் யாவரும் கோபமுறுதலும், காமுறின் யாவரும் காமுறுதலும் இல்லாமையால் ஜீவர்கள் யாவரும் ஒரு பொருள் என்பது உண்மையன்று.

ஜீவர்கள் பலரெனக் கபிலன் நாட்டாநிற்க, வேதாந்தம் ஒன்றே எனக் கூறுவது வேறொரு கருத்துப்பற்றியதாகும். பித்தகோரஸ் (Pythagoras) என்னும் மேல் நாட்டுத்தத்துவ நிபுணர் "பல வகைப்பட்ட ஜீவரும் ஏகமான பரமனது பாகங்கள்" என்றனர். பிளேட்டோ (Plato) என்பாரும் "மனிதரது ஆத்துமாக்கள் யாவும் கடவுள் மாட்டு உதித்து அண்ட ஆத்துமாவின் வழித்தாய் வெளிப்பட்டன" எனக் கூறியுள்ளார்.

ஆயினும் பரம புருஷன் ஒருவனே.

"ஒன்று என்றது ஒன்றே காண் ஒன்றே பரம், ஒன்று என்ற நீ பாசத்தோடுளைகாண்" என்றபடி பரமன் அடியுண்டபோது சகல ஜீவராசிகளும் அடியுண்டன. சூரியன் மறையின் ஜல சூரியர் எல்லா மறைவர்; ஜலம் ஓரிடத்தில் வற்றின் ஆங்குச் சூரியன் பிரதி பிம்பிக்காது. ஆயினும் சூரியன் ஒழிந்திலது.

## 19-வது காரிகை

தஸ்மாச்ச விபர்யா ஸாத்ஸித்தம் சாக்ஷித்வமஸ்ய புருஷஸ்ய—கைவல்யம் மாத்யஸ்த்யம் திருஷ்ட்ருத்வமகத்ருபாவச்ச.

[புருஷனுகிய சிற்றறிவினனது இலக்ஷணத்தை விளக்கலுற்ருர்.]

முன்னர் புருஷன் மூலப் பிரகிருதிக்கு மாறுயவன் என்று கூறியவாறு, புமான்:—சாக்ஷி மாத்திரையன், தண்டாய் நிற்பவன் (தோயாது நிற்பவன்) நடுவண் நிற்பவன், பார்ப்பவன், கர்த்தாவாயில்லாதவன் என்பது திட்டம்.

உரை:—கபிலன் கூறிய புருஷ லக்ஷணம் சுதந்தரம் பெருது பிறவிக் கடலில் அலமறும் சிற்றறிவினராகிய புருஷரைக் குறிக்கும். முத்திக்கரையேறிய புருஷரைக் குறிக்காது. பிரகிருதிக்குச் சுய அறிவு கிடையாது எனவும் புருஷனுக்கே அறிவு உளதெனவும் நாட்டப்படின் ஜகத் வியாபாரத்தை நடத்தும் சுதந்திரம் எவரிடத்துள்ளது? ஈசுரனுகிய பரம புருஷனுலேயாம். ஆயினும் கபிலன் இவ்வாறு கூருது பிரகிருதியே ஜகத்லதை நடத்துகின்றதென ஓர் மருட்டு ஞானத்தை நாட்டுவன்.

சாக்ஷி மாத்திரையன் என்றதால் சுக துக்கங்களைப் பாராட்டுவது புருஷனுக்குக் கிடையாதென்பதும், தண்டாய் நிற்பவன் (கைவல்யன்) என்றமையின் அவன் பிரகிருதிக்கு அப்பாற் பட்டிருக்கிருன் என்பதும், நடு விடத்தில் நிற்பவன் என்றமையால் பிரகிருதிக்கும் பரமனுக்கும் நடுவே இருக்கின்ருன் என்பதும், அவ்வாறு உறைவதால் பிரகிருதியோடு தோய்தற்கும், அன்றி பரமனோடு ஒன்ருதற்கும் உகந்த இடமே புருஷத்தான மென்பதும், பார்ப்பவன் என்றதால் எல்லா இரகசியங்களையும் அறியவல்ல விஞ்ஞான சொரூபக் காட்சி அவனிடத்து அமைந்துளது என்பதும், கர்த்தத்துவம் இல்லான் என்றது பிரகிருதியது வியாபாரம் இவனது சுதந்தரத்தால் நிகழாது பரமனது அருளால் நடைபெறுகின்றதென்பதும் பெறப்பட்டன.

## 20-வது காரிகை

தஸ்மாத்தத்ஸம் யோகாத சேதனம் சேதநாவதிவலிங்க—குணகர்த்தி ருத்வேசததா கர்த்தேவபவ தீத்யுதாஸீந:

[புமான் தண்டாய் நின்று மத்தியஸ்தனுய் சாக்ஷியாய் எல்லாவற்றையும் தெரிந்து கொள்வதற்காகப் பார்ப்பானுயிருப்பின், சுய அறிவில்லாத தேகத்தின் மாட்டும் கரணங்களின்மாட்டும் அறிவுடைமை தோற்றுவது எங்ஙன மெனின் கூறுகின்றூர்.]

ஆதலின் அறிவில்லா இலிங்கம் அறிவதாய்த் தோன்றும் காரணம், அவ் இலிங்கம் புமானோடு ஒன்ற கூடி யிருப்பதாலாம்.

வாளா (சும்மா) நிற்கும் புமான் தொழில் செய்வதாகத் தோன்றுவதன் காரணம் குணங்களின் இயக்கத்தால் உண்டாகிய பிராந்தியேயாம்.

உரை:—அக்கினி எப் பொருளோடு ஒன்றினும் அப் பொருள்கள் யாவும் அக்கினிமயமாகின்றது போல், புமானோடு கூடிய இலிங்கத்திற்கும் அறிவு இருப்பது போல் தோன்றுகின்றது.

கிருத்தியங்கள் நிகழ்வதன் காரணமோ முக்குணங்களாகிய (முச்சத்திகள்) கலைகளால்.

இலிங்கம் புத்தியாதி கரணங்களை யுணர்த்தும்.




# 36. ஸ்காட்லந்து ஐக்கியமும் வேறு சில விவரங்களும்

(T. S. ராஜகோபாலன், B. A., L. T.)

இங்கிலாந்து ஜனங்கள் தங்களுடைய உரிமைகளை, ஸ்தாபித்துக் கொள்ளுவதற்கு அனுகூலமாக தெய்விக உரிமைக் கொள்கையை (The Divine Right theory) பிரகடனம் செய்த ஸ்டுவர்ட் அரசர்கள் ஸ்காட்லந்துக் காரர்கள் என்பது வாசகர்கள் அறிந்ததே. இங்கிலாந்து அரசர்கள் ஸ்காட்லந்தைப் பிடித்துக்கொண்டு ஆளச்செய்த முயற்சிகள் ஒருவாறு பலியாமல் இங்கிலாந்து அரசரில்லாமல் ஸ்காட்லந்து ஒரு அரசரைக் கொடுக்க நேர்ந்தது ஒரு விநோதமேயாகும். அது ஒரு நன்மைக்கான சௌகரியமாகி விட்டது.

ஸ்காட்லந்து அரசனை ஏற்றுக் கொண்டதற்கு அடையாளமாக இரண்டு தேசங்களின் கொடிகள் மட்டும் ஒன்றாக்கப்பட்டு அந்தக் கொடிக்கு "ஐக்கியக் கொடி" (The Union Jack) என்ற பெயரும் ஏற்பட்டது. Jacobus என்பது ஜேம்ஸ்ன் லத்தீன் பாஷைப் பெயராம்! இந்த ஒரு அம்சம் தவிர இரண்டு தேசங்களுக்கும் தனித் தனி பார்லிமெண்டு சபைகள், பிரிவிகௌன்ஸில்கள், நியாயசபைகள், சட்டதிட்டங்கள், பழக்கவழக்கங்கள் இருந்தன. ஆங்கிலேயருடைய சுதந்திரமோ, உரிமையோ, சௌகரியமோ ஸ்காட்லந்து ஜனங்களுக்குக் கிடையாது! ஏனெனில் ஸ்காட்லந்துக் காரர்கள் என்றாலே "கஞ்சித் தொட்டிகள்" என்ற ஒரு உணர்ச்சி ஆங்கில மக்களிடம் வெகு காலம் வரையில் இருந்தது. தங்கள் பாகதது நாட்டிலேயே, பூமியோடு பூமியாய்ச் சேர்ந்து மலைக்கு இப்புறமும் அப்புறமுமாய் இருந்து வந்த ஸ்காட்லந்து மக்களையே அவ்வளவு ஒட்டாமலும், அலக்ஷிய புத்தியுடனும், உரிமைகளுக்கு அருகதையற்றவர்கள் என்றும் அந்தரங்கத்தில் நினைத்து வருவது பொதுவாக ஆங்கிலேயரின் மனப் போக்கு என்பதை மட்டும் குறிப்பிட்டு மேலே எழுதுவது உசிதம். இந்த விஷயங்களுக்கு ஆதாரமாக ஆங்கில இலக்கியங்களில் வேண்டிய அத்தாக்ஷிகள் உள. தங்களுடைய விசேஷ உரிமைகளில் என்னளவும் விட்டுக் கொடுக்க இணங்க வில்லை ஆங்கிலேயர்.

அரசனையும் தங்களுடைய ஆங்கிளிகன் மதத்தையே ஆதரிக்கச் செய்தனர். ஸ்காட்லந்து மக்கள் தீவிர சீர்திருத்த இனத்தைச் சேர்ந்த ப்ரெஸ்பிடீரியன் மதத்தினர் என்பது முன்பு குறிப்பிடப்பட்ட விவரம். அது பற்றி இங்கிலாந்துக்கு வந்தவர்களுடைய ஸ்டுவர்ட் அரசர்கள் மூலமே சொல்லொணாத அல்லல்களை அனுபவித்தனர். கிராம்வெல் ப்யூரிடன் மதத்தின

ஞயினும் அவன் காலத்தில் தங்களுடைய அரசன் என்ற அபிமானங் காரண மாக, சார்ல்ஸ் II ஐ (இளவாசராயிருந்த போது) ஆதரித்து டன்பார் என்ற விடத்தில் தோல்வியை யடைந்தனர். "கப்பல் போக்கு வரத்துச் சட்டம்' (The Navigation Act) அமுல் ஸ்காட்லந்து ஜனங்களை கிராம்வெல் காலத் திலும் பாதித்தது! சார்ல்ஸ் II ன் காலத்திலும் பாதித்தது. எப்படி யெனில், அந்தச் சட்டத்தில் குறிக்கப்பட்ட பிரதேசங்களில் ஸ்காட்லந்தும் ஒன்ருகும். ஆக இங்கிலந்துடன் ஸ்காட்லந்து ஐக்கிய மானதில் "நீ அவல் கொண்டுவா; நான் உமி கொண்டு வருகிறேன்; இரண்டையும் கலந்து ஊதி, ஊதித் தின்போம்!" என்ற சிறு பிள்ளைகளின் விளையாட்டு பழமொழி யைப் போல் இருந்தது ஸ்காட்லந்து மக்களின் நிலை! ஏனெனில் சௌகரி யங்கள் ஒன்றிலும் பங்கு இல்லை. அசௌகரியங்கள் பூராவும் அணுவளவும் குறையாமல் உண்டு. இந்த வித சேர்க்கை எவருக்குத் தான் திருப்தியைத் தரும்? மேலும் வில்லியம் III ன் காலத்தில் நடந்த கில்ள் கிரான்கீ சண்டை, க்ளென்கோ சதிகோலை ஸ்காட்லந்து ஜனங்களுக்கு ஆங்கிலேயரை அறவே வெறுக்கும் புத்தியை உண்டாக்கின.

தவிர ஸ்டுவர்ட் காலத்திய பரபரப்பு உணர்ச்சியை மேற்கொண்டு ஸ்காட்லாண்டு மக்களும், இரண்டு அமெரிக்காக்களுக்கும் இடையிலுள்ள டரையன் (Darien) பூசந்தியில் குடியேற முயற்சி செய்து அதற்கென ஒரு கம்பெனி ஏற்படுத்தி வேலை செய்தார்கள். அந்தப் பிரதேசம் தற்காலத்திய பனமாக் கால்வாய்க்குச் சமீபமுள்ளது. அங்கே சீதோஷ்ணம், இதா கஷ் டங்கள் முதலியவற்றுடன் ஸ்பானியர்களுடைய தொல்லை தொலையாததாக இருந்தது. அப்படி அவர்களால் ஏற்படும் தொல்லைகளிலிருந்து ஆங்கிலே யர்கள் விடுவித்து உதவி செய்யவேண்டியிருக்க, "வெந்த புண்ணில் வேலுரு வியது" போல, இவர்களும் சேர்ந்து தொந்தரவுகள் செய்தார்களாம்! ஆகக் கூடிய அந்தியபலன் டரையன் கம்பெனி முறிந்தது! ஸ்காட்லந்து மக்கள் ஸ்வபாவமான கஷ்ட தசையில் நஷ்டமும் அடைந்தது "பிச்சைக்குடியில் சனீஸ்வரன் புகுந்தது" போலாயிற்றென்பது சொல்லத் தேவையில்லை. அதன் காரணமாக ஆங்கிலேயருடன் சேர்ந்திருப்பதில் யாதொரு புண்ணிய மும் இல்லை என்ற எண்ணம் அதிகரித்துப் புகைந்துகொண்டிருந்தது. சம யம் பார்த்துக்கொண்டிருந்தனர்.

அவர்கள் எதிர்பார்த்த சமயம், இங்கிலாந்து ஸ்பெயின் வார்சு யுத்தத் தில் கலந்துகொண்டபோது வந்தது. "காற்றுள்ளபோதே தூற்றிக்கொள்ள வேண்டும்" என்றதற்கொப்ப ஸ்காட்லந்து மக்கள் வேலை செய்தனர். சுமார் 1704ல் The Act of Security என்றதொரு சட்டத்தை தங்களுடைய பார்லிமெண்டில் நிறைவேற்றினார்கள். அதன்படி ஆன் ராணிக்குப் பிறகு தாங்கள் வேறு அரசனை ஏற்படுத்திக்கொள்ளுவதாகவும், இங்கிலாந்தின் தீர் மானச் சட்டத்தின்படி அரசராக இருந்த ஹானோவர் சிற்றரசர் தங்களுக்குத் தேவையில்லை யெனவும், தாங்கள் இங்கிலாந்தினின்றும் வேறுபட்டு பிரிந்து விடுவதென்றும், தங்களுடைய ப்ரெஸ்பிடீரியன் மதத்தை எந்த விதத்திலும் காப்பாற்றிக்கொள்ளுவதென்றும் அந்தச் சட்டத்தின் ஷரத்துகளாகும். இந்த மாதிரி செய்தபோது அதுவும் அந்தச் சந்தர்ப்பத்தில், உண்மையில் ஆங்கிலே யர் அருண்டே போய்விட்டனர். ஏனெனில் ஆளுவது ராணி; நடத்துவதோ பெரிய யுத்தம். அதுவும் மஹா தந்திரசாலியும், நிபுணனும் செல்வாக்கும்

படைத்தவனுமான லூயி XIV என்ற அரசனுடன். யுத்தம், வழக்கம்போல் ஏற்பட்டது ஒரு கமிஷன்! இங்கிலந்து நிபுணர்களில் ஒருவரான கொடால்பின் பிரபுவின் தலைமையில் ஒரு சபை ஸ்காட்லந்துக்குச் சென்று 2 வருஷ காலம் விசாரணை செய்து, ஆலோசனை நடத்தி, குறைபாடுகளைக் கவனித்து, சமாதானங்கள் பேசி, கலந்து சிரமப்பட்டு, ஒப்பம் வாங்கிய திட்டமான ஐக்கியச் சட்டம் பிறக்க ஏற்பாடு செய்துவிட்டனர். அது அமுலுக்கு 1707ல் வந்தது.

அதன்படி ஸ்காட்லந்தின் தனிப் பார்லிமெண்ட், தனி நீதிஸ்தலம், தனிச் சட்டதிட்டங்கள் ஒழிந்தன. இங்கிலாந்தின் நீதிஸ்தலம், சட்டதிட்டங்கள், உரிமைகள், வியாபார சௌகரியங்கள் ஸ்காட்லந்து மக்களுக்கும் உண்டென ஆயிற்று. முக்கியமாகக் கப்பல் போக்குவரத்துச் சட்டம் அமுலி லிருக்காதென்பது நிச்சயமாகியது.

ஸ்காட்லந்திலிருந்து பொது சபைக்கு 45 பிரதிநிதிகளும் பிரபுக்கள் சபைக்கு 16 பிரதிநிதிகளும் தேர்ந்தெடுகப்பட்டு வெஸ்ட்மின்ஸ்டரில் கூடிய இங்கிலந்து பார்லிமெண்டுக்கு வந்து இருந்துவிட வேண்டியது.

ஸ்காட்லந்துகாரர்களுடைய ப்ரெஸ்பிடீரியன் மதம் எந்த விதத்திலும் பாதிக்கப்படுவதில்லை என்பதாக வாக்குறுதியும் கொடுக்கப்பட்டது. ஒரு வாறு சமஅந்தஸ்து போன்ற நிலை வந்ததில் ஸ்காட்லந்து மக்களில் பெரும் பாலானவர்கள் திருப்தி யடைந்து விட்டனர் என்று சொல்லலாம். இருந்தாலும், பழையவாசனை பின்னும் ஒரு 40 வருஷங்களுக்கு இருக்கத்தான் செய்தது. ஒருமுறை கலகங்களும் நடந்தன. முடிவாக கொஞ்சம் கடுமையான முறையில் அவமானமாக தண்டிக்கவும் பட்டார்கள்! (விவரம் பின்பொரு சந்தர்ப்பத்தில் வரும்.)

(ஆழ்ந்து கவனிப்பவர்களுக்கு இங்கிலந்தின் சாமர்த்தியம் விளங்கும். தனிப் பார்லிமெண்டில் தங்கள் தேசத்திலிருந்து கூக்குரல் போட்டுக் கொண்டு ஏதேனும் ஒரு சமயத்தில் தாறுமாறாக காரியங்கள் செய்து விடாதபடி, அவர்களில் சிலரைப் பெரும்பான்மையினர் இடையில் விட்டு அவ்வளவு பேர்களும் ஒன்றுசேர்ந்து விட்டபோதிலும் பெரிய கூட்டத்தில் சிறுபான்மையராகத் தோன்றச் செய்துவிட்டனர். எந்தத் தீர்மானமும் பெரும்பான்மை யங்கத்தினரால் விவாதிக்கப்பட்டு ஆமோதிக்கப் படவேண்டும். அதற்குள் சந்தர்ப்பத்திற் கேற்றபடி அங்கத்தினர்கள் மனதைச் சரிசெய்து கொள்ள முடியும். அந்த முறையில் ஜனங்களைத் திருப்திசெய்ய தீராத முறையில் சில சௌகரியங்களையும் உரிமைகளையும் கொடுக்க நேர்ந்து விட்டது.)

இந்த ஸ்காட்லந்து ஐக்கியத்தைப்போலவே, புரட்சித் திட்டத்தை ஸ்தாபனம் செய்வதற்காக ஏற்பட்ட மற்றொரு முக்கிய விஷயம் கொடால்பின் பிரபுவின் முயற்சியில்தான் ஏர்பட்டது. அதுதான் இங்கிலாந்தின் பாங்கி ஸ்தாபனம் (The establishment of the Bank of England) ஆகும். வில்லியம் பட்டத்தைப் பெற்றதனால் ஏற்பட்ட புரட்சி யுத்தங்கள் காரணமாக அரசாங்கத்திற்கு ஏராளமான கடன் ஏற்பட்டது. அது வரையில் சிறுகாலத்திய கடன்களாக அப்போதப்போது லண்டன் தங்க வேலைக்காரர்களிடமிருந்து வாங்கிக்கொள்வதும் வரிப்பணம் சேர்ந்ததும் திருப்பிக்கொடுத்து

விடுவதுமான நிலைமை யிருந்தது. தங்கவேலைக்காரர்கள் ஆனதால் அவர்களிடம் எப்போதும் தங்கம் ஜாமீன் உண்டென்ற எண்ணத்தில் பல ஜனங்கள் தங்கள் சேமிப்புகளை அவர்களிடம் கொடுத்துவைப்பது வழக்கம். ஆக பெரும்பாலான லண்டன் பாங்கர்கள் அவர்களாகவே யிருந்தனர். அம்மாதிரியாக வாங்கப்பட்ட சிறு காலக்கடன்கள் (Short term loans) மூலம் சமாளிக்க முடியாத பெரிய கடனாக இப்போது ஏற்பட்டு விட்டது. ஆகவே 1694-ல் வில்லியம் பாட்டர்ஸன் (William Paterson) என்ற ஸ்காட்ஸ்காரரின் யோசனையின் பேரில், பொக்கிஷ மந்திரியாக இருந்த மாண்டேகு என்பவர் ஒரு வழி கண்டுபிடித்தார். அதுதான் இங்கிலாந்து பாங்கு என்ற ஒன்றை ஆரம்பித்து பங்குகள் பிடித்து, அதன்பேரில் சில வியாபாரிகள் சாசுவதமாக கடன் கொடுக்கும்படி சம்மதிக்க வழி செய்தார். இதற்கு கெடால்பின் சம்மதித்து சந்தோஷப்பட்டு, அதுமுதல் தேசியக்கடன் என்ற சாசுவத ஸ்தாபனம் ஏற்பட்டது. அதற்கு வட்டி மட்டும் உரிய காலங்களில் கணக்காய் கொடுக்கவேண்டியது. அதற்குத் தகுந்த வரிப் பணம் ஒதுக்கினால் போதுமானது என்று ஏற்பட்டது. முழுக்கடன் தொகையையும் கொடுத்து விடவேண்டியதான முயற்சியும் கவலையும் ஒரு பாடு தீர்ந்தது. மேலும் இங்கிலாந்து பாங்குக்கு அரசாங்கத்திற்குக் கடன் கொடுத்திருக்கிறதென்ற பெருமையும் அரசாங்க ஆதரவு ஜாமீன் இருக்கும் பலமும் ஏற்பட்டது. தவிரவும் பாங்கு நோட்டுகள் போட்டுக் கொள்ளும் படியான கௌரவமும் உண்டாகி, அந்த நோட்டுகளுக்கு அரசாங்க நோட்டுகளுக்குரிய செலாவணி சக்தியும் உண்டாக்கிவிட்டது. அரசாங்கத்திற்குண்டான பணமுடை நெருக்கடியும் ஒருவாறு சமனப்பட்டது. அதேபோல ஸ்காட்லண்டுக்கும் ஸ்காட்லண்டு பாங்கு ஸ்தாபனம் ஆயிற்று. செல்வ நிலை சம்பந்தமான ஒரு மஹத்தான காரியம் ஆனதுடன் அரசியல் முறையிலும் ஒரு முக்கிய சம்பவம் ஆகிவிட்டது. எப்படியெனில், பெரும் புரட்சியினால் ஏற்படுத்தப்பட்ட இந்த அரசாங்கத்திற்குக் கடன் கொடுத்தவாகள் எல்லாத தங்கள் கடன் திரும்பி வரவேண்டியதை யொட்டி புரட்சி அரசாங்கத்தை ஆதரிக்க வேண்டியதாகிவிட்டது. துரத்திவிடப்பட்ட ஜேம்ஸ்க்கு ஆதரவு குறைய ஒரு சாதனமாக ஆகிவிட்டதுதான் அரசியல் சாமர்த்தியம். ஏனெனில் புரட்சி அரசாங்கத்திற்குக் கொடுத்த கடன்களை ஜேம்ஸ் மீண்டும் அரசனாகிவிட்டால் ஒப்புக்கொள்ள மாட்டானல்லவா? ஆகவே அவன் மீண்டும் அரசனாவதை விரும்பாத கோஷ்டியினர் இங்கிலாந்தில் அதிகமாயினர். ஆக இந்த முறையிலும் புரட்சி ஸ்திரப்பட்டு, ஆங்கிலேயர்களுக்கு அதிர்ஷ்டவசமாய் பலவித உரிமைகள் பெறுவதற்கும், கட்சியாட்சி ஏற்படவும், அதன் மூலம் முன்பு விவரிக்கப்பட்ட காபினெட் ஆட்சிமுறை ஸ்தாபனம் ஆகவும், பொதுஜனங்களுக்கு அரசியல் நிர்வாகத்தில் பங்கு ஏற்படவும் ஆயிற்று.

ஆக ஸ்டுவர்ட் ஆட்சி முடிவில் உரிமைகள் போராட்டம் ஜனங்களுக்கு வெற்றிகரமாக முடிந்தது. புரட்சி ஸ்தாபனமும், திட்டமும் உறுதி செய்யப்பட்டன. மந்திரிகள் பொதுஜனப் பிரதிநிதி சபையின் பெரும்பான்மைக் கட்சியிலிருந்து தேர்ந்தெடுக்கப் பட்டனர். அரசன் உயர்ந்த சம்பளம் பெறும் ப்ரம்பரை உத்தியோகஸ்தர் நிலைமைக்கு வந்தாகிவிட்டது. அந்நிய நாட்டு யுத்தங்களையும் கட்சியினர் நோக்கப்படி நடத்தலாம். சேனைகளை வைத்துக் கொள்ள அனுமதி, அதற்குச் செலவுக்குப் பணம் பார்லிமெண்டார் கொடுக்க

வேண்டும். அதேபோல் இதர வரிகளும் அனுமதிக்கப்படவேண்டி ஏற்பட்டன. பிற்காலத்தில் வால் போலின் செய்கையில் பிரதம மந்திரியுடன் கூடின காபினெட்டே தேச நிர்வாகத்திற்குப் பொறுப்புப் பெற்றதாயிற்று. அந்தச் சபைக்கு அங்கத்தினர்கள் பொதுஜன சபைக்கு தேர்ந்தெடுக்கப்பட்டவர்களாக இருக்கவேண்டிய அவசியமும் வந்துவிட்டது. குடியேற்ற நாடுகளும் வளர்ந்தன. வியாபாரமும் அபிவிருத்தி யாகிவிட்டது ஆனால் அதே துறையில் முயன்று முன்னேற முயன்ற பிரான்சுடனும் விரோதம் ஏற்பட்டு விட்டது. ஆகவே சுமார் ஒரு நூறு வருஷங்களுக்குக் குறையாமல் இங்கிலாந்துக்கும் பிரான்ஸுக்கும் தொடர்ந்து விரோத மனப்பான்மை ஏற்பட்டு யாதேனும் ஒரு காரணத்தை முன்னிட்டு எதிரெதிர் கக்ஷிகளில் சேர்ந்து கொண்டு வரிந்து கட்டிக்கொண்டு சண்டையிடலாயின. அதற்கு முன்னாக இருந்த ஒரு சமாதான காலத்தை அடுத்த தொடர்ச்சியில் எழுதுவோம்.

---

# ஞானச்சுடர்.

ஞானமுடையவன் சந்தோஷம் ஞானமே. சந்தோஷமடைவன்; மண்ணும் பொன்னும் மலைபோல் பெற்றாலும் ஞானம் பெறாதான் பரம ஏழையே.

அதி சீக்கிரத்தில் ஆத்திரப்படாதவன் அமர்ந்த புத்தியுடையோன். ஆத்திரமும் கோபமும் அவலப்படுத்தும். கோபக்காரனும் குடிகாரனும் சமமே. இருவர் பாபமும் ஒன்றே.

விசால ஹிருதயமும் ; விரிந்த நோக்கமும் உடம்புக்கு புஷ்டியளிக்கும். ஆனால் பொறாமையும் பேராசையும் எலும்பை உருக்கி ஒடுக்கிக் கொல்லும்.

உடலும், உயிரும், செல்வமும் செல்வாக்கும் உன் அடக்கத்தாலும், கடவுளிடத்து உன் பக்தியாலுமே உன்னிடம் தங்கி நிற்கும். எனவே ஜாக்கிரதையாய் நடந்துகொள்.

ஏழைகளை ஒடுக்குவோர் ஈசனை அடிப்பராவர். ஏழைகளே ஈசன். ஈசனே ஏழை. ஏழைகளிடம் அன்புடையோன் ஈசனது அன்பை யடைவன்.

அண்டை அயலார்களை அன்புடன் நேசி. எவரிடமும் பிரியமாய் நட. அப்படிச் செய்தால் உலகமே சுவர்க்கமாகி விடும்.

கெட்டவர்கள் வாசல்வழி நடவாதே. எப்பொழுதும் பரிசுத்தமுள்ளவனாய் நடந்துகொள்.

இனிமை மொழி என்றைக்கும் இறக்காது. அன்பு மொழி ஆழமாய் பதியும். ஆண்டவன் இருதயத்தை, அவை பற்றி இழுக்கும். ஆகவே பிறரிடம் அன்பாகவும், இனிமையாகவும் நடந்துகொள்.

ஆத்திரத்தால் அநியாயமாகப் பேசியதை மறக்கிறோம். ஆனால் அவை இறக்காமல் இறைவன் இருதயத்தில் பதிந்து நிற்கும். சாக்கிரதை !

மோட்சத்தையோ நரகத்தையோ நம் வாக்கினாலேயே நாம் தேடிக்கொள்ளுகிறோம். நாவை கட்டுப்படுத்தினால் நன்மை யடையலாம். என தென்னாபிரிகா-டர்பன், சரஸ்வதி சபைத் தலைவர் திரு. ச. முனிசாமி பிள்ளை எழுதுகிறார்.

# மாதர் உலகம்



## ஔவையார்



(ஸ்ரீமதி. பண்டிதை-அசலாம்பிகை அம்மையார்.)

"தக்கோன் எனத் திரி" என்பது அடுத்த நீதி. இது உன்னைப் பெரியோர்கள் யோக்கியன் என்று புகழும்படி நீ சஞ்சரி என்று உணர்த்தியதாகும். குற்றமாகிய செய்கைகளையறிந்து கண்டிப்பாக அவைகளை வெறுத்துத் தள்ளும் உள்ளவுறுதியுடையவர்களுக்கே யோக்கியன் என்ற பெயர் வரும். பிறர் காண நற்காரியங்களைப் புரிவதும் ஒருவரும் காணவில்லையென்கிற எண்ணத்தால் மறைவிடத்தில் குற்றச் செயல்களில் ஈடுபடுவோரும் உளர். இவர்கள் வெளிப்படையாகக் குற்றம் புரிந்து அயோக்கியர்கள் எனப் பெயர் பெறுவோர்களை விட மிகக் கொடியவர்களாவர். இவர்களுக்குப் பரம அயோக்கியர்களெனப் பட்டம் சூட்டலாம்,

"செருக்கும் சினமும் சிறுமையு மில்லார்
பெருக்கம் பெருமித நீர்த்து"

என்றருளினர் அறிஞர் பிறரும். குற்றமாக முடியும் செயல்களிலேயே சாதாரணமாக மனம் செல்லுதல்கூடும். அம்மனதை அந்தந்தத் தருணங்களிலும் அடக்கித் தடுத்து நிறுத்தப் பழகுதல் வேண்டும். பகுத்தறிவில்லாத மிருகம் பறவைகளாதி பிராணிகளுக்கே குணம் குற்றம் இவை இவையெனத் தெரியாது. மனிதப் பிறவிக்கு இப்பகுத்தறியும் அறிவு இருத்தலால் மானிடப் பிறவி அரிதரிதென்றனர் பலரும். மனிதராய்ப் பிறந்தும் குற்றங் கடியமாட்டாதவர்கள் மானிடப் பிறவி கொடிது கொடிதெனக் கூசாது கருதுவர். இத்தொடரில் "திரி" என்றமைத்தது களங்கமற்ற மனமுடையவர்கள் எங்கும் அச்சமற்று சஞ்சரிக்கலாம் என்பதைச் சுட்டுவதாகும்.

"நஞ்சுடைமை தானறிந்து நாகம் கரந்துறையும், அஞ்சாப் புறங்கிடக்கும் நீர்ப்பாம்பு, நெஞ்சிற்—கரவுடையார் தம்மைக் கரப்பர் கரவார், கரவிலா நெஞ்சத்தவர்" என்ற முதுமொழியே "திரி" என்ற மொழிக்கு விளக்கவுரையாகும். ஒருவர் கடவுளை நோக்கிப் புத்திரன் வேண்டுமென வரங்கிடந்தாராம்-கோரிய கடவுள் அவர் முன்றோன்றி எத்தகைய புதல்வன் வேண்டுமெனக் கேட்டாராம். அதற்கு அடியவர் இருந்த இடத்தினின்றும் எழுந்திராத மைந்தன் வேண்டுமென்று கோரினாராம். அதற்குப் பொருள் என்னவென வினவியபோது ஒரு பேரவையில் நடுநாயகமாகத் தலைமை வகித்து நிற்கும் ஒருவர் எவரைக் கண்டும் எழுந்திருந்து மரியாதை செலுத்த வேண்

டுவதில்லை; அத்தகைய உயர்வை வகிக்கக் கூடியவனாக எனக்குப் பிறக்கும் புதல்வன் இருப்பதையேதாம் விரும்புவதாக விடைபகர்ந்தாராம். இதனால் தக்கோன் எனத் தன் மைந்தன் பேர்பெற வேண்டுமென்பது பெறுவோரின் விருப்பமும் என்று பெறப்படுகின்றது. இது கல்வி யறிவு பெறாத பழம் பெண்டிர் கூற்றெனின் கல்வியின் பயனையும் அருமையும் உணர்ந்தவர்களின் ஆவல் எவ்வளவு இருக்குமென்பதை எவ்வெவர்களும் உணரலாம்.

இனி "தானமது விரும்பு" என்ற நீதித்தொடர். ஈகையென்பதும் தானம் என்பதும் வெவ்வேறு பிரிவுகளாகும். பிறர் துயர்காணத் தரியாமல் தன்னாலியன்ற அளவு எவ்வித உதவியாயினும் அன்போடு செய்வதாகும். இத்திறம் செய்பவரிடம் சுயநலத்திற்கு இடமில்லை. இது பழம் புண்ணியத்தினால் பிறக்கும்போதே உடன் பிறக்கவேண்டிய அருட்குணங்களுள் ஒன்றாகும். ஔவையாரே பிறிதோரிடத்தில்,

"சித்திரமும் கைப்பழக்கம் செந்தமிழும் நாப்பழக்கம்
வைத்ததொரு கல்வி மனப்பழக்கம்—நித்தம்
நடையும் நடைப்பழக்கம் நட்பும் தயையும்
கொடையும் பிறவிக் குணம்"

என்று ஈகையைப் பிறவிக் குணமாக வகுத்திருக்கின்றார். இந்நீதியில் தானம் என்பது பாவம் கழியவும் புண்ணியம் பெருகவும் கோரிச் செய்யும் கொடையாகும். இது எப்போதும் உத்தம பாத்திரத்தையே தேடிக் கொடுப்பதொன்றாகும். தானம் என்னும் மொழியே ஸ்தானம்; உரிய இடம் எனப் பொருள்படும். ஆதலினால் தானம் என்ற சொல்லே சத்பாத்திரம் என்பதை உணர்த்துகின்றது. தீய செய்கையை யுடையவர்களுக்கு விசாரியாமல் ஒரு பொருளை யளித்தால் அவ்வுதவியால் அத்தீயோர் செய்யும் பாவச்செயல்களிலும் முன் உதவி செய்தவருக்குப் பங்கு உண்டாகுமாதலினால் புண்ணியங் கருதித் தானம் புரிவோர் உத்தமர்களைத் தெரிந்தே செய்தல் வேண்டும் என்பது அவசியமாகிறது. பக்த விஜயத்தில் சஞ்ஞன சாருகர் என்னும் பக்தரைப் பற்றிய கதை ஒன்றுளது. அது யாதெனில், இப்பெயருடைய இல்வாழ்வான் ஒருவர் ஜகந்நாத யாத்திரை செல்லும்போது ஓர் ஊரில் இரவில் ஒரு வீட்டுத் திண்ணையில் உறங்கினர். நடுநிசியில் இவர் அழகைக் கண்டு இச்சைகொண்ட அவ்வீட்டுக்காரியான தூர்த்த ஸ்திரீ தன் எண்ணத்தை வெளியிட்டாள். இவர் தகாதென்று தடுத்து உன் புருடனை அடைக என்று நீதி கூறினர். அதுகேட்ட அக்கொடியாள் தனது கணவன் தலையைத் தூக்கத்திலேயே வெட்டிவிட்டு தன் வீட்டில் வந்து தங்கிய இந்த சஞ்ஞன சாருகர் என்னும் அந்நியனே தன்னைப் பெண்டாளக் கருதித் தன் கணவன் தலையைக் கொய்தான் எனக் கூச்சலிட்டு அவ்வூர் அரசனிடம் முறையிட்டனள். அரசனும் அவள் வாய்மொழியை நம்பி இவருடைய இருகரங்களையும் வெட்டச் செய்தானும். அடியார் பெருந்துயருழந்து, தான் நிராபராதியாயிருந்தும் தனக்கிந்தத் தண்டனை வந்த தெப்படி? எனப் பகவானை நோக்கி மனங் குழைந்து அழுதார். ஜகந்நாதக் கடவுள் எதிர்தோன்றி வெட்டப்பட்ட கரங்கள் வளரும்படி செய்ததோடு இவ்வித கொடிய தண்டனை வந்த காரணம்

நீ முற்பிறப்பில் உத்தம வேதியன்; கங்கையில் நீராடிக் கரையில் நின்று ஜபம் செய்துகொண்டிருந்தாய். கொல்லுவதற்காகப் பசுவை வாங்கிக் கட்டிவைத் திருந்த பாதகன் கட்டை யறுத்துக்கொண்டு ஓடிவந்த அப்பசுவைத் தேடி வந்தான். அவன் உன்னை நோக்கி ஒரு பசு இவ்வழி வந்ததுண்டா? எனக் கேட்டான். அவன் யாவன்? எதற்காகப் பசுவைத் தேடுகிறான்? என்பது தெரி யாமல் வாயாற் பேசாவிடினும் இந்த வழியாகச் சென்றதென்று குறிப்பிட் டாய். அந்தப் பாவத்தினால் அந்தப் பசுவைக் கொலை செய்தவன் புருடனாக வும் அப் பசு சோர ஸ்திரீயாகவும் பிறந்து பழிக்குப்பழி வாங்கப்பட்டாய் என்றறிவித்து புத்தி பூர்வமாகப் பிழை செய்யாததால் அவருக்கு நற்கதி கொடுத்தார் என்பதாகும். அறியாமற் செய்த சிறு உதவிக்கே இப்பெரிய பாவம் விளைவதாயின் அறிந்து செய்யும் உதவிக்கு எப்படிப்பட்ட தண்டனை விளையும் என்பதை விவரிப்பதெப்படி? பாவங்களுட்பெரிது உயிர்க்கொலை. புண்ணியங்களுட் பெரியது ஜீவகாருண்யம். அது,

"யானை யடியு ளடங்கா அடியில்லை
தானது போல் நிற்கின்ற தன்மைதான்—ஊனுயிரைக்
கொல்லா வறத்தின் கொழுநிழற்கே யுள்ளடங்கும்
எல்லா வறமும் இசைந்து"

என்ற பாவினாலும் விளங்கும். ஆதலினால் உயிர்க்கொலையாளர்க்கு ஒன்றை உதவுவது குளிக்கப்போய்ச் சேற்றைப் பூசிக்கொள்ளுவதாகவே முடியுமென் பது உறுதி.

"கொல்லா விரத குலமே குலமென்று
நல்லார்க ளெல்லா நவின்றிருக்கக்—கொல்வாற்
றெரிசித்தாலும் பாவம் தீயர் முகநோக்கிப்
பரிசித்தாலும் பாவம் பார்"

உத்தம பாத்திரமே கிடையாவில் எவருக்காவது தானம் செய்வதென்பது சிலர் கொள்கை. இது தவறு என்பதே இக்கட்டுரையின் நோக்கம். எப் பயனையும் கோராமல் உள்ள நெகிழ்ச்சி காரணமாக உதவி செய்வோர்க்கு இவ்வித குற்றம் ஏற்படாது. பசியால் வருந்துவோர் முகம்பார்க்க மாட்டாமல் அப்பசிப்பிணி நீக்க மனம் கரைந்து இயல்வதொன்றை யுதவுவதே அவற் றினும் சிறந்த அறமாகும். அதற்கடுத்தவைகளே வித்தியாதான முதலாகிய மற்றெல்லாத் தானங்களும். ஈண்டு தானமது விரும்பு என்று அமைத்திருத் தலால் உத்தம பாத்திரம் என்னும் ஒன்றையே சுட்டுவதாகக் கொள்ளல் வேண்டும். அறம் என்பதும் ஈகையென்பதும் வெவ்வேறு பொருள்களைக் குறிக்கும்.

நன்மை தீமைகள் ஆகிய பலன்கள் இரண்டையும் ஈசுர அர்ப்பணம் செய்வதாகச் சொல்வதுண்டு. அதுவும் தவறே. தருமபுத்திரர் ஒரு காலத்தில் தாம் தெரிந்தும் தெரியாமலும் செய்த பாவங்கள் யாவும் கிருஷ்ண பக வானுக்கு அர்ப்பிதம் செய்ய எத்தனித்தாராம். அதுகண்ட வீமன் தடுத்து "அண்ணா அதுகூடாது. எதை அர்ப்பணம் செய்தாலும் ஒன்றுக்குப் பலவாக

நம்மிடமே திரும்பும்; ஆதலின் நற்புண்ணியங்களை பரமாத்மாவுக்கு அர்ப்பணம் செய்தால் அப்பயன்களும் ஒன்று அநந்தமாக நமக்கே திரும்பும். ஆதலின் அவ்வாறு செய்யவேண்டாம்" என்று கூறியதாக நாம் பாரதத்தினால் அறிகிறோம். இவ்வுதாரணத்தினால் நாம் செய்யும் நன்மை தீமைகளின் பயன்கள் ஒன்று அநந்தமாக நமக்கே திரும்ப வரும் என்பது தெளிவாகிறது. ஆதல்பற்றியே சத்பாத்திரமாக ஆராய்ந்து தருமம்புரிய நீ விரும்பு என்றருளினர் பெருமாட்டியார்.

இனி "திருமாலுக் கடிமைசெய்" என்ற நீதித் தொடர். இது விஷ்ணுவுக்கு நீ தொண்டு செய் என்று உணர்த்தியதாகும். விஷ்ணு என்ற மொழிக்கு வியாபகன் என்பது பொருள் எங்கும் நீக்கமற நிறைந்துள்ளவன் ஈசனேயாகும். கடவுள் சர்வ வியாபகர் என்பதை மறுக்கும் சமயங்கள் ஒன்றுமில்லை. வியாபகம் என்னும் பொருள் விஷ்ணு சப்தத்தின் விளக்கம் என்பதையும் மறுப்பதற்கில்லை. இரண்டையும் ஒப்புக்கொள்ளும் அறிவாளிகளிலும் ஒரு சிலர் விஷ்ணு என்னும் காத்தற் றொழிலையுடைய கடவுள் என்னும் எண்ணம் வரும்போது இழித்துக் கருதவும், பேசவும் முற்படுகின்றனர். இது புத்திக்கெட்டாத விநோத விஷயம். தவிர சைவர்களும் வைணவர்களும் போர் முனையில் நிற்கும் சத்துருக்களாகவே கருதி பேச்சாலும் எழுத்தாலும் நாட்டை அவமானப்படுத்திய காலமும் உண்டு. கடவுளே இல்லையென்கிற உணர்ச்சியும் ஆங்கில பாஷா மோகமும் தலையெடுக்க ஆரம்பித்த பிறகு நந்தமிழ் நாட்டில் சமயப் போர் பெரும்பாலும் மறைந்ததென்றே சொல்லலாம். நமது ஔவையார் சமயங் கடந்த சமரச ஞானியாதலினால் இளைஞர்கள் கல்வியையும் செல்வத்தையும் நல் வாழ்வையும் மேன்மேலும் பெற்றுச் சிறக்கவேண்டுமென்னும் கருணையினால் காக்குங் கடவுளை, அதிலும் செல்வத்தின் அதிதேவதையாகிய இலக்குமி கேள்வனை, வழிபட்டு அவர்பால் அன்பு செலுத்தி அவர் திருவடித் தொண்டுகளைச் செய்யும்படி பணிக்கின்றார். அவ் விஷ்ணுவுக்கு எவ்விதம் பணிவிடை செய்வதெனின், அவர் திருக்கோயில் கொண்டுள்ள ஆலயங்களிலும் அவருடைய மெய்யடியார்களிடையிலும் உன்னால் இயன்ற அளவு பணிவிடை செய்வாயாக என்று அறிவூட்டுகின்றார். ஒரே கடவுள் தொழிற்றலையீடுபற்றி மூவராகக் கூறப்படுகின்றார் என்பதே நமது பெருமாட்டியாரின் தீர்மானம். "தெய்வம் ஒருவனே என்றிங்குணர வல்லீரேல் அருவினைகள் ஐந்தும் அறும்" என்று ஔவையார் பின்னும் கூறியுள்ள வெண்பாவே இதனை வலியுறுத்தும். இம் முடிவு எந்தப் பேர் அறிஞருக்கும் ஏற்றதேயாகும். திருவிளையாடற் புராணம் இயற்றிய சைவப் பரஞ்சோதி முனிவரும்

"மலரயனாகி மூன்று வையமும் படைத்து மாலாய்
அலைவற நிறுத்தி முக்கண் ஆதியாய்
அழித் தம்மூவர் தலைவனாய்"

என்றருளி யுள்ளார். ஆழ்வாராதிகளும் "அரன் நாரணன் நாமம்" என்று அழகுறப் பாடி வைத்துள்ளார்கள்.

கல்வியிற் பெரியவராகிய கம்பநாடரே,

"மூவரு மொருவராய மூர்த்தி" எனவும்,

"ஆலமும், மலரும், வெள்ளிப் பொருப்பும் விட்டயோத்தி வந்தான்" எனவும்,

"அரன் அதிகன் உலகளந்த அரியதிகன் என்றுரைக்கும் அறிவிலார்க்கு" எனவும் அழுத்தமாக விளக்கியுள்ளார்.

கீதாசாரியனுகிய கண்ணபிரானும் நானே ஈசன், நானே நாரணன், நானே பிரமன் என்றும், எவர் எவர் எந்தெந்த பிம்பத்தில் பக்தி செய்தாலும் அந்தந்த பிம்பத்தில் அந்தந்த மூர்த்தமாக நின்று அவர்களுக்கு அருள் புரிகின்றேன் என்றும் போதித்திருக்கின்றூர். அற்ப கல்வியாளர்களுக்கன்றி பெரும் பண்டிதர்களுக்கு இதில் மயக்க வுணர்ச்சி யில்லை யென்பது தெளிவு. ஆயினும் இளைஞர் மனம் பேதவுணர்ச்சி கால் கொள்ளாதிருக்கத் திருமாலுக் கடிமை செய் எனப் பெருமாட்டியார் அமைத்துள்ளார்.

பிறப்பின் அடியாக ஒவ்வொருவருக்கு ஒவ்வொரு பிம்பத்தில் விசேஷ அபிமானம் உதிக்கும். அதற்குக் காரணம் அவரவர்களின் பூர்வ ஜென்மப் பழக்க வாசனைகளேயாகும். அதனை அவரவர்களுடைய ஜன்மகால நிலைக்குரிய ஜாதகங்களினுலே அறியலாம். ஜன்மராசிக்கு ஐந்தாமிடத்தில் நிற்கும் கிரகம் பார்க்கும் கிரகம் இவற்றைக் கொண்டே அவரவர்களின் உள்ளத்தைக் கவர்ந்து நிற்கும் மூகூர்த்தங்கள் இன்னின்னவெனக் கண்டறியலாம். புதன் வலுவுற்றிருந்தால் வீரசைவராயினும் அவர்க்கு விஷ்ணு நாமங்களில் துவேஷமும் வெறுப்பும் இடம்பெறுது. அந்தரங்கத்தில் பக்தியே பரிணமிக்கும். குரு இடம் பெற்றூல் வீர வைணவராயினும் சிவநேயம் இல்லாமற் போகாது. புதனும் குருவும் கூடினுலோ பார்வையாலோ சம்பந்தம் பெறுவராகில் இரண்டிலும் சம திருஷ்டி லபிக்கும். முக்கியமாக அவர்கள் நிற்கும் ஸ்தானங்களின் வன்மையும் கவனித்தல்வேண்டும். செவ்வாய் சம்பந்தம் திறமுடையதாஞல் குமாரக் கடவுள்பால் பேரன்பு முகிழ்க்கும், சுக்கிரனும் சந்திரனும் சேர்ந்தாலும் நோக்கினுலும் அம்பாள் உபாசனை இல்லாதொழியாது. சனியும் சூரியனும் வன்மையாஞல் நிவர்த்தி மார்க்கத்தில் முயற்சியும் விருப்பமும் ஏற்படாமற் போகாது. சனி நிற்கும் இடம் கெட்டதாயின் க்ஷுத்ர தேவதா வுபாசனை யேற்படும். ராகுவுக்கும் அவ்விதமே. ஆதலின் தெய்வ பக்தி எவ்விதமாயினும் பிறிதொரு பிம்பத்தில் துவேஷம் ஒருபோதும் ஏற்படுதல்கூடாது. தமக்கு ஆறுதல் அளிக்கும் எல்லா மூர்த்தங்களாகவும் இருப்பதாக ஒவ்வொரு தேவதா உபாசகர்களும் பார்ப்பாராஞல் இடர்ப்பாடென்பதே இல்லை. முற்காலத்தில் தெய்வ வழிபாட்டின் பேதம்பற்றிப் பிளவேற்பட்டதாகத் தெரியவில்லை. அங்ஙனமிருந்தால் திருவிளையாடற் புராணத்தில் காணப்படும் கௌரியை வைணவ பிரமசாரிக்குக் கன்னிகாதானம் செய்து கொடுத்ததாகச் சரித்திரம் ஏற்பட்டிராது.

இடைக் காலத்தில் மதப் பகையுணர்ச்சி மிக்கெழுந்து தலைவிரித்தாடியதன் பயனுக ஒரே குலத்தில் கூட தெய்வப் பற்று பெருந்தடையாக மேற்கொள்ளப்பட்டது. இன்றும் அவ்வுணர்ச்சி அநுஷ்டானத்தில் கையாளப் பட்டு வருகிறது. இக் கொடுமை மறையவே நமது பெருமாட்டியார் "தெய்வம் ஒருவனேயென் றிங்குணர வல்லீரேல் அருவினைகள் ஐந்தும் அறும்" என்றருளிச் செய்தனர். தவிர, நமது புராண கதைகளில் இவ்வித தெய்வப்பகை வாசகர்களுக்கு எழாமல் இருக்கும் நன்னேக்கம் கொண்டேபோலும் மும்

மூர்த்திகளுக்கும் நெருங்கிய உறவு முறையும் வகுக்கப்பட்டிருப்பதோ எனவும் ஊகிக்கவேண்டியிருக்கிறது. அதிலும் எல்லா முறைகளிலும் சிறந்த மைத்துன முறையேயாகும். அதுபற்றியே ஆழம் காணமுடியாத கடலில் உயிருக்கும் துணிந்து முத்துக் குவியல் சேகரிக்கும் முயற்சியாளர்களும் மைத்துனரைத் தவிர பிற உறவினரைத் துணையாகக்கொண்டு செல்வதில்லை என்பது பண்டை வழக்காகும். தன் உயிர் நீங்குமாயினும் தனது சகோதரி கணவன் உயிர் இழப்பதை விரும்பமாட்டான் என்பதே அதன் கருத்து. ஒரு தாய் வயிற்றில் உதித்த சகோதரிகள் பகைப்பது சர்வசாதாரணம் என்றாலும் மைத்துன முறை நம்பிக்கைக்கு ஏற்றதாகின்றது. அதுபற்றியே பராசக்தியை திருமாலுக்கு சகோதரியென்றும் சிவ பெருமானுக்கு மைத்துனரென்றும், மற்றுமுள்ள மகன்முறை தந்தை முறை இவைகளைப் புகுத்தியும் செப்பம் செய்துள்ளார்கள் என்றுணர்வதே அறிவுடைமையாகும். இவ்வாறு பாவனை செய்வார்களுக்குச் சைவத் துவேஷம் வைணவத் துவேஷம் முளைக்க இடமும் உண்டோ? ஆன்றோர்களின் அரிய கருத்துக்களை வெகு திறமையாக ஆலயவிழாக்களிலும் ஆன்றோர் அமைத்துப் போற்றியுள்ளார்களென்பது தடாதகைப் பிராட்டியாராகிய அங்கயற்கண்ணம்மையின் திருமணத்திற்கு கள்ளழகர் கோவிலில் உள்ள பெருமான் தாய்வீட்டு வரிசை கொண்டுவந்ததாக அன்றும் இன்றும் நடைபெறும் திருவிழாவைத் தெரிசித்தோர்க்கு நன்கு விளங்கும். ஆதலினால் பெருமாட்டியார் இளைஞர்களுக்குப் பக்தி மார்க்கம் அரும்பும்படி "திருமாலுக்கு அடிமை செய்" என்று பணித்தது பொன்னேபோற் போற்றத்தகுந்த தொன்றாகும்.

---

# வைத்தியப் பகுதி

(ஸ்ரீ. வீ. சங்கரையர்.)

முன்னுரை:—இதனடியில் என்னால் இந்திய மூலிகைகள், ஷர்பத்துப் பிர காரணம், ஸ்னான தைலங்கள் முதலிய பல தலையங்கங்களின் கீழ் எழுதப்பட் டிருக்கின்றவைகளெல்லாம் என் குருவினால் கையாளப்பட்டு வந்தனவும், புரா தனமான பல வைத்தியர்களால் கொடுக்கப்பட்டு அனுபவத்தில் மிக அனு கூலங்களாக இருக்கின்றவைகளுமான மருந்துகளேயாம். நான் சுசீந்திரத்தி லிருந்த காலத்தில் நானும் இவைகளை பலருக்கு என் குருவின் ஆக்ஞைப் பிரகாரம் செய்தும் கொடுத்திருக்கிறேன். அதனால் பலர் நன்மை அடைந் திருக்கிறார். ஸஹஸ்ரயோகம், அஷ்டாங்க ஹிருதயம் முதலிய பல கிரந்தங் களையே நாங்கள் உபயோகித்து வந்தோம். அவற்றிலுள்ள சில முக்கியமான மருந்துகளை லோகோபகாரத்தின் பொருட்டு ஆனந்தபோதினி மூலம் பிர சுரிக்கத் தீர்மானித்தேன். அன்பர்கள் ஆமோதிப்பார்களாக.

## 1. துளசி.

இந்துக்கள் துளசிச் செடியை வீடுகளில் மிக்க பக்தி விசுவாசத்துடன் வளர்த்துத் தினமும் காலை ஆசாரமுடன் பூஜை செய்கிறார்கள். துளசியை விஷ்ணு ஆலயங்களில் அர்ச்சனை செய்து பிரசாதமாகப் பக்தர்களுக்குத் தீர்த் தத்துடன் அர்ச்சகர்கள் கொடுக்கிறார்கள். பக்தர்களும் வாயில் போட்டு மென்று தின்பதும், துளசி தீர்த்தம் பருகுவதும் உண்டு.

நம்முன்னோர்களுக்கு இந்த துளசியின் மஹிமை நன்றாகத் தெரியும். ஆகையால் அவர்கள் ஜனங்களின் ஆரோக்கியத்தை உத்தேசித்தே இவ்வாறு ஏற்பாடு செய்திருக்கிறார்கள். இதனை யறியாத சிலர் நமது பூர்வீக ஆசாரங் களை இகழ்கின்றனர். மேல்நாட்டு வைத்தியர்களும் தங்கள் ஆராய்ச்சியின் முடிவாக துளசியே சகலவித விஷ ஜ்வரங்களையும் குணப்படுத்த வல்லமை யுடையது என்கிறார்கள்.

இத்துளசி நமது தேகத்தின் உள்ளிருக்கும் விஷநீரை வெளிப்படுத்து கிறது. விஷ ஜ்வரங்களின் விஷ குணத்தை மாற்றுகிறது. குழந்தைகளின் வயிறு, கல்லீரல், மண்ணீரல் கோளாறுகளைக் குணப்படுத்துகிறது. இருமல், நுரையீரல் சம்பந்தமான வியாதிகள் காதுநோய், ஜலதோஷம், தொண் டைப்புண், சகல சர்ம வியாதிகள், குன்மம், சீதபேதி இவைகளுக்கும் துளசி யிலை நல்ல மருந்தாகும்.

உபயோகிக்கும் விதம்:—1. துளசிக் கஷாயம்:—குழந்தைகளின் வயிறு, கல்லீரல், மண்ணீரல் கோளாறுகளைச் சொஸ்தப்படுத்தும்.

2. உலர்ந்த செடியை சமூலமாகப் போட்டுச் செய்த கஷாயம்:—ஜல தோஷம், தொண்டைப்புண், நுரையீரல் வியாதி, வயிற்றுப்போக்கு இவை களை வெகு சீக்கிரத்தில் சொஸ்தப்படுத்தும்.

3. மேற்படி கஷாயத்துடன் கொஞ்சம் ஏலப்பொடியும் 1 தோலா ஸாலாம்பிசினும் சேர்த்து சாப்பிட்டால் தாதுபுஷ்டியுண்டாகும்.

4. துளசியிலையின் சாறு:—காதுநோய்க்கு காதில் சில சொட்டுகள் விடவும். தினம் காலை ஒரு ரூபாயிடை சாப்பிட்டு வந்தால் சகலவிதமான சர்ம வியாதிகளும் தீரும்; சீதபேதி, குன்மம், வயிற்றுக் கோளாறுகளும் தீரும். வேளைக்கு 1 அவுன்ஸ் வீதம் உள்ளுக்குக் கொடுத்தால் ஜ்வரம், கபம், தொண்டைவலி, மார்ச்சளி இவைகள் தீரும்.

5. முறைக்காய்ச்சலுக்கு ஒரு தோலா துளசி ரசத்தில் கால்தோலா மிளகு பொடி சேர்த்துக் கொடுக்கவும்.

6. தேன், சுக்கு, வெங்காயரசம் இவைகளோடு துளசிச் சாற்றைச் சேர்த்து உட்கொண்டால் இருமல், நுரையீரல் வியாதிகள் தீரும்.

7. சில துளசி விதைகளை மூலைப்பாலில் அரைத்துக் கொடுத்தால் குழந்தைகளின் வயிற்று வியாதிகள் தீரும்.

8. துளசிச் சூரணம்:—தினம் இருவேளையும் $\frac{1}{4}$ தோலா வீதம் சாப்பிட்டு வந்தால் கபம், வயிறு உளைச்சல், அஸ்தி ஜ்வரம், விஷஜ்வரம், தாகம், அரோசகம், இருமல், கபக்கட்டு, மார்ச்சளி, கபவாத ஜ்வரம் தீரும்.

9. பாம்பு, தேள், எலி முதலியவைகள் கடித்தால் துளசி ரசத்தைக் கண்ணில் கலிக்கமிடவும். உள்ளுக்கும் கொடுக்கவும். கடித்த இடத்தில் பற்றுப் போடவும்.

10. துளசி, மிளகு, வெள்ளைப்பூடு இவைகளை அரைத்துத் தினம் காலை மாலை கழற்சிக்காய் அளவு உட்கொண்டால் சகல விஷஜ்வரம், அஸ்தி ஜ்வரம் முதலிய சகல ஜ்வரமும் சுகமாகும்.

11. துளசிவிதை ஜலத்தில் ஊறவைத்து அதில் பனங்கற்கண்டு சேர்த்துக் கொடுத்தால் சகல உஷ்ண ரோகங்களும், பிரமேகமும் தீரும்.

12. துளசிரசம், கரிசலாங்கண்ணிரசம், சமம் சேர்த்து அதில் 4 மிளகை அரைத்துச் சேர்த்து ஒவ்வொரு மூக்கிலும் இரண்டு துளிவீதம் விட்டால் தலைவலி, பீனிசம் முதலியவை தீரும்.

13. துளசி சர்பத்:—சர்பத் பிரகரணம் பார்க்க.

## 2. வில்வம்.

சிவாலயங்களில் வில்வ இலையை அர்ச்சனைக்குப் பிரதானமாக உபயோகிக்கிறார்கள். வில்வக்காய் ஜீரண சக்தியையும், வில்வப்பழம் சரீர புஷ்டியையும் கொடுக்கிறது. வில்வப் பழம் மலச்சிக்கலை நீக்கும். அரைவாசிப் பழத்தை உடைத்து வெயிலில் உலர்த்திப் பொடி செய்து சீசாவில் வைத்துக் கொள்ளவும். இதைக் குழந்தைகளின் வயிற்றுப்போக்கு, சீதபேதி இவைகளுக்குக் கொடுக்கவும். வில்வப் பழத்தை பாலுடன் கலந்து கொஞ்சம் வால் மிளகு பொடியும் சேர்த்து இரவில் போஜனத்தின் பிறகு சாப்பிட்டால் தாது புஷ்டியை உண்டாக்கும். நபும்ஸகத்தைத் தீர்க்கும்; சகல மூல வியாதிகளும் தீரும்; பட்டையின் சாறு இரண்டு தோலா எடுத்துப் பாலில் சேர்த்து சீரகப் பொடி சேர்த்து உட்கொண்டாலும் தாதுபுஷ்டி ஏற்படும். கல்லீரல் கோளாறுகளும் தீரும்.

இதன் பிஞ்சு ஜாடராக்னியை அதிகப்படுத்துகிறது. இலை கபம், வாதம், கிராணி, மேகம் முதலியவைகளைப் போக்கடிக்கும். புஷ்பம் அதிசாரம், வாந்தி, அரோசகம் இவைகளைச் சொஸ்தப்படுத்தும். வேர், பட்டை

இவை வாதம், உடல்வலி, கற்பசூலை இவைகளைத் தீர்க்கும். இலையின் ரசத்தைக் கண்ணில் விட்டால் சகலவித கண் நோய்களும் மாலைக்கண்ணும் குணப்படும். வில்வஇலைக் கஷாயம் தினம் காலை மாலை 1-16 படி வீதம் சாப்பிட்டு வந்தால் சுரம், கைகால் பிடிப்பு, மேகம், முதலியவை தீரும். வில்வப்பழத்தைத் தலைக்குத் தடவி ½ மணி நேரம் கழித்து இளவெந்நீரில் ஸ்நானம் செய்ய மூளைக்கொதிப்பு, கண் எரிச்சல் முதலியவை தீரும். வில்வ இலையை கோமூத்திரம் விட்டு இடித்து வடிகட்டி வேளை 1-க்கு 1/8 படி வீதம் 7 நாட்கள் சாப்பிட பாண்டு, சோகை, காமாலை முதலிய மண்ணீரல் கல்லீரல் வியாதிகள் தீரும். இதற்கு புளியும் கரிப்பான் பதார்த்தங்களையும் தள்ளவேண்டும்.

வில்வாதித் தைலம்:—வில்வ இலைச்சாறு, நல்லெண்ணெய், தேங்காய் எண்ணெய் ¼ படி வீதம் சேர்த்து வெள்ளைப்பூடு, மஞ்சள், வசம்பு வகைக்கு ½ பலம் வீதம் அரைத்துக் கலக்கித் தைல பாகத்தில் காய்ச்சி இறக்கவும். இதனால் சகல கர்ணரோகங்களும் சிரோ ரோகங்களும் தீரும். இதை வாரமிருமுறை தேய்த்துக் குளிக்கவும். அன்று புளி சேர்க்கக்கூடாது.

வில்வாதி லேகியம்:—வில்வவேர், இலை, பழம், பட்டை வகைக்கு 5 பலம், திராக்ஷைப்பழம் 10 பலம் இவைகளை இடித்து 4 படி ஜலத்தில் போட்டு ½ படியாக காய்ச்சி வடிகட்டி அதில் 30 பலம் சர்க்கரை சேர்த்துக் காய்ச்சி சந்தனம், சுக்கு, மிளகு, திப்பிலி, கடுக்காய், நெல்லிக்காய், தானிக்காய், சித்தரத்தை, சிறுதேக்கு, வெட்டிவேர், விளாமிச்சவேர், மல்லி, ஏலம், அதிமதுரம் வகைக்கு 1 பலம் இவைகளை இடித்து வஸ்திரகாயம் செய்த பொடியைத் தூவி ¼ படி நெய்யும் 1/8 படி தேனும் விட்டு லேகிய பாகத்தில் இறக்கவும். காலை மாலை கழற்சிக்காயளவு சாப்பிட தேக புஷ்டியுண்டாகும். சகலவித மேக வியாதிகளும் தீரும். க்ஷயம், கிரந்திப்புண், நீர்க்கடுப்பு, முதலிய பல பிணிகள் தீரும். இதுவே சேர் ரூபா 1 வீதம் விற்கப்படுகிறது. நாம் செய்தால் சேர் ரூபா 0-8-0 கூட ஆகாது.

குறிப்பு:—இவ்வளவு மஹிமை வாய்ந்த துளசியையும், வில்வத்தையும் நாம் புறக்கணிக்கக்கூடாது. இதன் மஹிமையே மஹிமை. ஆகையால்தான் நமது பூர்வீகர்கள் இதை ஒரு தெய்வீகத் தன்மையுடையதாகக் கருதினார்கள்.

### 3. புளிச்சக் கீரை.

இதைக் காசினிக்கீரை என்றும் கூறலாம். இது ஆமணக்கு இலையைப் போல ஐந்து அல்லது ஏழு பிரிவுகளாகப் பிரிந்து இருக்கும். இதன் ருசி புளிப்பானது. ஆகையால் புளி சேர்க்காமலே சமைக்கலாம். காம்பு நீக்கி நறுக்கி ஜலம் விட்டு வேகவைத்து உப்புப்போட்டு நன்றாக மத்தினால் மர்த்தித்து மிளகாய் வற்றலையும் தேங்காயையும், மல்லியையும் தனித்தனியே எண்ணெய்விட்டு வறுத்து அரைத்து கூடவிட்டு ஒரு கொதி வந்ததும் கடுகு, உழுத்தம்பருப்பு, வெந்தயம் இவைகளை எண்ணெய்விட்டு வறுத்துபோட்டு காயம்விட்டு இறக்கவும். சாப்பாட்டுக்கு இது நல்ல குழம்பாகும். அதிக ருசியாக இருக்கும்.

இளங்கீரையை மிளகாய் வற்றல், மல்லி, உப்பு இவைகளுடன் தொகையல் அரைத்து உபயோகிக்கலாம்.

வறுத்தமல்லி, வறுத்தமிளகாய் வற்றல், கொஞ்சம் புளி, உப்பு, காயம்

இவைகளோடு அதிக மூற்றினதாக இல்லாத இலைகளையும் சேர்த்து நன்றாக இடித்து எண்ணெய் விட்டு வறுத்த உழுத்தம்பருப்பு, கடுகு வெந்தயம், சீரகம் இவைகளையும் போட்டு இடித்து ஜாடியில் வைத்து உபயோகித்தால் ஒரு வருஷம் வரையிலும் கெட்டுப்போகாது. இதற்கு கோங்கூர தொக்கு என்று தெலுங்கில் கூறுவார்கள். இந்தத் தொக்கு வகையறுக்களை உபயோகித்து வருவதால் பலஹீனம், இரத்தக் குறைவு, பாண்டு, காமாலை, அன்னத்துவேஷம், அரோசகம், பித்தரோகம் அதிக தாகம், முதலிய பல வியாதிகள் தீரும். வாய்க்கும் ருசிகரமானது. இப்புளிச்சக்கீரை பாலகர்களின் கண்மாந்தம், கணை, கணச்சூடு, மஞ்சள் மூத்திரம், சீதபேதி, அடுத்தடுத்து போகும் பெரும் மலம், உஷ்ணஜ்வரம், வாய், குடல் முதலியவைகள் வேக்காடு முதலியவை தீரும். இது இரத்த சுத்திக்கு நல்ல மருந்தாகும். புளிச்சக்கீரையை புட்டவியலாக வேகவைத்து சாறு பிழிந்து கொடுத்தால் குழந்தைகளின் ஆசனக் கடுப்பு, மூக்கல், கைகால் வீக்கம், காமாலை முதலிய உஷ்ண வியாதிகள் சௌக்கியமாகும். வாயுப் பிடிப்புக்களால் உண்டாகும் வீக்கங்கள், மூலமுளைகள், கட்டிகள், பெரும் சிரங்குகள், அழிபுண்கள், ஆருத ரணங்கள், முதலியவைகளுக்கு இடித்த கட்டவோ, பத்துப் போடவோ செய்யவும். உள்ளுக்கும் புட்டவித்த சாறும் கொடுக்கவும். இது தாது புஷ்டிக்கும் நிகரற்ற மருந்தாகும்.

## 4. வல்லாரை.

இதனால் இரணம், குஷ்டம், கடுப்பு, கண்டமாலை, கிராணி, மேகப்படை, சர்மரோகம், புத்திமந்தம் இவைகள் குணமடையும். வல்லாரை இலையை அரைத்து இரணங்களுக்கு கட்ட அவைகள் ஆறும். வல்லாரையை உலர்த்தி இடித்து சர்க்கரையுடன் கலந்து தினம் திரிகடுப் பிரமாணம் கொடுக்க சகல சர்ம ரோகமும் தீரும்.

## 5. திருநீற்றுப் பத்திரி.

இதன் வேரை அரைத்துக் கொட்டைப்பாக்கு அளவு சாப்பிட்டு வந்தால் வீரிய விருத்தியுண்டாகும். ஸ்தம்பன சக்தியும் உண்டாகும். இதன் ரசம் 1 அவுன்ஸ் வீதம் சர்க்கரை சேர்த்து சாப்பிட்டால் சகல நீர் வியாதிகளும் தீரும். தேள் கடிக்கு இலையை அரைத்துப் பத்திட்டால் குணப்படும். இதன் இலையின் சாற்றை சில நாள் ஸ்திரீகள் காலை மாலை உட்கொண்டு வந்தால் கர்ப ரோகங்கள் தீர்ந்து கர்பவதியாவார்கள். புருஷனும் சாப்பிட்டு வரவேண்டும். ஜனனேந்திரிய சம்பந்தமான சகல வியாதிகளும் குணமாகும்.

## 6. அமுக்கிலாக் கிழங்கு,

இக்கிழங்குக்குச் சமம் சுக்கு சேர்த்து அரைத்துப் போட்டால் வீக்கங்கள் கரைந்து குணமடையும். இதன் இலையையும் திப்பிலியையும் சமம் சேர்த்து அரைத்து மிளகளவாக மாத்திரை செய்து தினம் காலை மாலை 1 மாத்திரை வீதம் சாப்பிட வயிற்றுவலி தீரும். அமுக்கிலா சூரணம், 8 பலத்தோடு சர்க்கரை 8 பலம் சுக்கு மிளகு திப்பிலி ஜாதிக்காய் பத்திரி, அதிமதுரம், கிராம்பு, லவுங்கப்பட்டை, கடுகுரோகிணி, கூகைக்கிழங்கு சிறு நாகப்பூ வகைக்கு ½ தோலா வீதம் இடித்துப் பொடிசெய்து வைத்துக்கொள்ளவும். பசுவின் பாலில் சாப்பிட்டுவந்தால் தேகம் போஷிக்கும். வெந்நீரில் கொடுத்தால் சகல விஷமும் தீரும்; வேளைக்கு ½ தோலா வீதம் சாப்பிடவும்.

# பாலிய விவாகங்களும் சாரதாச் சட்டமும்.

(பி. சாரங்க ராவ்.)

அனுவசியமான அவசரச் சட்டங்களும், மனதைக் கலக்கும் மசோதாக்களும், நவீன நாகரிகப் புதுமைகளும், தேயத்தைச் சூறையாடிவரும் இந்நாளில், பெண்களின் விவாக வயதைப் பற்றிய சாரதா சட்டம் நிறைவேற்றப்பட்டது போற்றத் தக்கதேயாயினும், சரிவர அச்சட்டமானது அநுஷ்டானத்தில் அமுலுக்கு வாராமை பற்றியும், மனப்பூர்வமான சர்வஜன ஆதரவு அதற்கின்மையைக் குறித்தும் நாம் வருந்த வேண்டியதாகவே இருக்கிறது. என்னதான் சட்டதிட்டங்கள் அமைக்கப் பெற்று அவைகள் அனுஷ்டானத்தில் நிறைவேற்றப்பட்டு வந்தபோதிலும், அதை யாவரும் உள்ளன்புடன் ஒரு மனப்பட்டு ஆதரித்தாலொழிய போதிய, கோரிய பலன் ஏற்பட நியாயமில்லை. உதாரணமாக, சென்னையில் குதிரைப் பந்தயங்களில் குதிரைகளின் பேரில் பணம் வாங்கிவந்த "பக்கெட் ஷாப்புகள்" சட்ட விரோதமானவையெனத் தீர்மானிக்கப்பட்டு, தீவிரமாய் அச்சட்டத்தை அமுல் செய்து வரும்போதும், இரகசியத்தில் அக்கொடிய பழக்க வழக்கங்கள் இன்னமும் அடியோடு நிறுத்தப்படாமலிருப்பது யாமனைவரும் அறிந்த விஷயமே. ஆகவே எச்சட்டம், எக்காலத்து, எதை உத்தேசித்து, யாருக்காக அவை நிர்மாணிக்கப் பெறுகின்றனவோ, அவர்களால் அவை உள்ளன்புடனும், ஊக்கத்துடனும், ஆதரிக்கத் தக்கனவாயிருக்க வேண்டும். எப்பழக்க வழக்கம், மக்களுக்குத் தீங்கை உண்டு பண்ணுவது என எண்ணப்படுகின்றனவோ, அப்பழக்க வழக்கத்தைக் குறித்தும், அதனுல் விளையக்கூடிய தீய பலன்களைக் குறித்தும், ஆகவே அவற்றை அறவே களைய வேண்டிய உறுதியைக் குறித்தும், பொதுஜனங்களிடையே, தீவிர பிரசாரத்தாலும் பிரசுரங்களாலும், இதர வகைகளினுலும், ஊக்கத்தையும் உற்சாகத்தையும் உண்டுபண்ணி, அவர்களேதாமே அதை அனுசரிக்க முன்வரும்படி செய்தல் பெரியோர் கடமையாகும். நவநாகரிகப் பேய்கள் பலவிதமாகத் தாண்டவமாடும் இந்நாளில், அவைகளில் ஈடுபட்டு அவைகளுக்கு அடிமையாய் மக்கள் வாழும் இக்காலத்தில், இத்தீய கொடிய பழைய நாகரிகத்தை மட்டில் நம்மவரில் சிலர் இன்னமும் ஏனோ கைவிடவில்லையோ என்பது மட்டில் விளங்கவில்லை. தர்ம சாஸ்திரங்களின் பேரில் பழியைப் போட்டும், சாஸ்திரத்தை மீறினும் சம்பிரதாயத்தை மீறலாகாதென்றும் நியாயம் கூறி இச்சாரதா சட்டத்தை நிராகரித்து வருபவர் பலர் இன்னம் இருக்கின்றனரன்றோ? புதிதாய் ஏற்பட்ட புகைவண்டியிலேறுமலும், புதிதாய் ஏற்பட்ட காகிதங்களில் வரையாலும், புதிதாய் ஏற்பட்ட அந்நியநாட்டு மெல்லாடைகளைத் தரியாமலும், புதிதா யேற்பட்ட அந்நியநாட்டுத் தட்டு முட்டுகளை

வாங்காமலும், புதிதா யேற்பட்ட பதனிட்ட பற்பல நாற்காற் பிராணிகளின் சர்மங்களினால் உள்ளும் புறமும் பொதிந்து மூடப்பட்டனவும், கையினால் செலுத்தத் தக்கனவும், காலினாலுதைக்கத் தக்கனவும் ஆகிய பற்பல வகைச் சகடங்களை ஊர்ந்து செல்லாமலும், புதியாய் ஏற்பட்ட பற்பல வகையான போலிக் கவசங்களை அணியாமலும், புதிதா யேற்பட்ட காலங் காட்டுங் கருவிகளைத் தமதில்லங்களில் வைக்காலும், புதிதா யேர்பட்ட பற்பலச் சிற்றுண்டிகளை விரும்பாமலும், புதிதா யேற்பட்ட விசித்திர ஆபரணங்களை யும் பட்டாடைகளையும் நமது மங்கையர்க்கு வாங்கி அணியாமலும், புதிதா யேற்பட்ட பகட்டுச் சாமான்களாகிய பௌடர் டப்பிகளையும், "Icilma cream"களையும், நம் பெண்களுக்கு வாங்கிக் கொடுக்காமலும், இதுபோன்ற இன்னம் சொல்லத் தொலையாத எண்ணிறந்த புதிய வழக்கங்களைக் கையாடா மலும் நிராகரிப்பார்களாகில், இவர்களுடைய பழைய கொள்கைகளை நாம் ஒப்புக்கொள்ள வேண்டியதே. அத்தகைய நெறியுடையோ ரெவரு மிக் காலத்திலில்லை யென்பதை யெவரு மறுக்கப்புகார்? ஆதலின், மற்றின்னோர் வீண்வாதம் தொடுப்பதெதற்கோ? அறிகிலம்.

இதுநிற்க. இனி அத்தகையார் கொள்கைப்படி பாலியவிவாகம் என்பது முன்னொருநாளில் நம் பெரியோரால் அனுஷ்டிக்கப் பட்டதாவது உண்மை கொலோ வென்பதையும் சற்று ஆராய்வாம். பெண்களின் விவாக முறைமை பழைய காலத்தில் அறிவு முதிர்ச்சியைப் பொறுத்ததாக விருக்கவில்லை யென் பது திருஷ்டாந்தம். நமது சரித்திரங்களில் மஹா உத்தமிகளாகக் கொண் டாடப்படும் சீதை, திரௌபதை, ருக்மணி, சத்தியபாமை, இந்துமதி, சந்திர மதி முதலிய ராஜபத்தினிகளுடையவும், லோபா முத்திரை, நளாயனி முதலிய ரிஷிபத்தினிகளுடையவும் விவாகங்களே இதற்கு முக்கிய சான்றாக விருக்கின்றன. க்ஷத்திரிய குலமாதர்களுக்குச் சுயமாகவே புருஷனை வரித்த லென்கிற பெரும் சுதந்திரம் கொடுபட்டிருப்பதைப்போல் பிராம்மண ஸ்திரீ களுக் கில்லையாயினும், அவர்களும் விவாகத்தின் தன்மை இப்படிப்பட்ட தென்பதையும், குடும்ப உத்திரவாதம், தாம்பத்ய தர்மம், இவைகளின் பொறுப்பு இன்னின்ன வென்பதையும் உணர்ந்து கொள்ளத்தக்க யுக்த வயது வந்தபிறகே விவாகம் செய்விக்கப்பட்டார்கள் என்பது நிராட்சேபம். உதாரணமாக, அக்காலத்தில் யுவதியான பெண்கட்கு விவாகமாகும் வழக்க மிருந்த காரணத்தினாலேயே ருதுசாந்திச் சடங்காகிய நாகவல்லியை இந்த ருதுவாகாத பெண்கள் விஷயத்திலும் மந்திர பூர்வமாய் பூர்த்தி செய்கின் றனர். ஒரு சிறு தீங்கு செய்யவும், சிறு பொய்பேசவும் நடுங்கும் உத்தமர் களாகிய நம்மவர்களே இப்படிப்பட்ட பெருங்குற்றத்தையும் பொய்ச் சடங் கையும் கூசாமல் உற்சாகத்துடனும் பந்துவர்க்கத்துடனும் சம்பிரதாய மென் னும் சர்ப்பத்திற் கஞ்சி செய்து வருகின்றதை நாஞ்தோறும் நாம் காண்கின் றோம். மாடு குதிரைகளைக்கூட அதனதன் நோக்க மறிந்தே செலுத்துதல் அவசியமாகிறது. பேரறிவுடைய மனிதவர்க்கத்தில் ஒரு வகுப்பினராகிய பெண்களுக்கு மட்டில் பின்பு எக்காலத்திலும் எவ்விதத்திலும் மாற்ற முடி யாததான பெரும் பந்தத்தினை அவர்கட்குப் பகுத்தறிவு இல்லாத காலத்தில் இதரர்கள் ஏற்படுத்துவது எவ்வளவு அயுக்தமாகும்?

ஆதிகாலத்தில் இருந்ததைக் கவனியாது இக்கொடிய விஷம் நம் மத்தி யில் பரவ நேர்ந்தது எவ்விதம்? எக்காலத்து? என்பதைச் சற்று கவனிப்

போம். அதன் காலத்தை விசாரிக்குமிடத்து சுதேச ராஜாக்கள் நசித்து முகலாயர் படையெடுத்து நம் தேசத்தை நெருக்கியாளத் தொடங்கிய காலமே பால விவாகப் பயிர் தோன்றிட்ட காலமெனத் தெரிகிறது. அவ்வேற்றரசர்களின் முரட்டுத் தனமான கொடுங்கோன்மையே இப்பயிர்க்கு விதை. நம்மிந்து மூதாதைகளின் அச்சமும், உபபல மின்மையுமே, அப்பயிர்க்கு அரும்புனல். இக்காலத்திய சில சாஸ்திர விற்பன்னர்கள் அப்புது மாறுதலுக் கிணங்கப் புனைந்து ஸ்மிருதி வசனங்களுக்கிடையில், நுழைத்து வைத்த இரண்டொரு போலி சுலோகங்களே மேற்படி பயிர்க்கு எருவுமாம். இப்பயிருக்குச் சாகுபடி செய்யத்தக்க செழிப்பான விளை நிலங்கள் பிராம்மணர்களின் கிரகங்களேயாம். பயிர்த் தொழிலை சரிவர நடத்தும் பண்ணையாட்கள் மேற்படி பாலிகைகளின் தாய் தந்தையர்களும், வேதவிர்த்தி உபாத்தியாயர்களும், சமீப பந்து வர்க்கத்தவருமே யாவர். வைசூரி, விஷபேதி, பெருவாரி முதலிய பற்பல அகலாமிருத்யுக்களே அதிவிருஷ்டி, அனாவிருஷ்டி முதலிய இடையூறுகளாம். தீபாவளிச் சீர், கார்த்திகைச் சீர், ஸங்கராந்தி சீர், திரட்சிச் சீர் முதலிய செலவுகளே செய்நேர்த்திச் செலவுகளாம். இவ்வநாகரிகம் ஆதி காலத்தில் இருக்கவில்லை யென்பதும், மத்திய காலத்தில் ஏற்பட்டு வளர்ந்து ஆதரிக்கப்பட்டு, சாஸ்திரமாக இக்காலத்தில் நிற்கத் தலைப்பட்டதென்பதும், அதற்குப் பலவிதமான காரணங்கள் இருந்தன வென்பதும் தெரிகின்றன.

இனி, இதனால் ஏற்படக்கூடிய லாப நஷ்டங்கள் என்ன வென்பதை ஆராய்வாம். தெய்வானுகூலத்தால் இப்பாலிய தம்பதிகள் பல ஆபத்துக் கட்கும் தப்பி சுகஜீவிகளாய் மனமொருமித்து வாழ்ந்து, நற்சந்தானங்களை யீன்று இம்மை மறுமை இருவகைப் பயன்களையும் எய்துபவர் ஒரு சிலர். பருவம் வந்த பின் பெண்ணின் ரூபமும், குணமும், சீரும், சிறப்பும் பிள்ளை மனத்தினுக் கொவ்வாமலோ, பிள்ளையின் ரூபமும், குணமும், கல்வியும், திறமையும், ஒழுக்கமும் பெண்ணின் மனதிற்கு விருப்பப் படாமலோ, அந்தரங்க நேசமின்றி, ஒரு நாழிகைக்கு ஒன்பது குணங்களுடன், உலகத்திற்கும் ஜாதிசமயக் கட்டுக்கு மஞ்சி, விதியையும் பெற்றோர்களையும் இடைவிடாது நொந்த, வெறுத்து, துற்குணம் நிறைந்த சந்தானங்களைப் பெற்றோ, பெறாமலோ போலி வாழ்க்கை வாழ்ந்து, இம்மை மறுமை இரண்டு மிழந்து, வாழ் நாள் கழிக்கின்றவர் பலர். இறங்கு துறையிலேயே நீற்றுயிற்றென்பதுபோல் மண மகனே பிணமகனாய், மணக்கோலமே பிணக்கோலமாய் பெண் பெரியவளாகு முன்பே வைதவிய பட்டத்திற்காளாகி, வாழ்விழந்து, தாழ்வுழந்து தவித்து நிற்பவர் இன்னம் சிலர். நேத்திரானந்தமாகவோ, செலவுச் சுருக்க வேண்டியோ, வேறு எக்காரணம் பற்றியோ, பெண்களுக்கு உலகியல் ஞானம் ஏற்படாத பருவத்தில் நாம் போடும் பெரும் விலங்கைத் தங்கள் தலை விதியெனச் சுமந்து, நம்முடைய கற்பனையின்மேல் பட்டதும் படாததுமாய் ஒப்பித்த விவாக மந்திரங்களாகிற பொய்ப் பிரமாணங்களுக் குட்பட்டு போக்கு வழியின்றி தத்தளிக்கும் புதுப்புனல் போற்றயங்கிக் கண்ணும் கண்ணீருமாய்த் தங்கள் வாழ்நாளைத் தொதுலைக்கின்றனர் இன்னம் வேறு சிலர். சீர், சீர் என்கிற பெயரால் பொருள் பறிக்கும் கொள்கையினால் நிராகரிக்கப் பட்ட பெண்கள் எத்தனை பேர் என்பதையும் யோசிக்கலாகும். ஆகவே இப் பாலிய விவாகத்தால் ஏற்படக்கூடிய தீமைகள் என்னவென்பது தோன்றாமற் போகா.

அந்நியோந்நியம், உண்மை யன்பு, இவை இல்லாத விடத்து என்னென்ன விபரீதச் செய்கைகளும், உள்ளூழல்களும் விளையுமென்பதும், ஆரூத்துயரும், அணையா நெருப்பும் மூண்டு வருமென்பதும், கள்ள ஒழுக்க சிசுஹத்தியும், பொய் புரட்டுகள் களவுமாகிய பல தீய ஒழுக்கங்கட்கும் காரணமாய் நிற்கின்றது இப்பால விவாஹம் என நாம் நன்கறியலாம். இதனாலேயன்றோ நம் பொன்விளையும் நாடு பொறிபறக்கின்றது? இதனாலன்றோ பஞ்சம் தஞ்சமாடுகின்றது? இதனாலன்றோ பெருவாரி முதலிய பெருநோய்கள் பேயாட்ட மாடுகின்றன? இதனாலன்றோ புதிதாக ஜனிக்கும் குழந்தைகளும், நடைப்பிணங்களாய், தைரியமற்று, ஆண்மையற்று, சக்தியற்று, சமயப் பற்றற்று, அரிய பெரிய நற்குணங்கள் அமையப் பெறாமல், நாடோடிகளாய் சோம்பேறிகளாய், துர்க்குணம் நிரம்பப் பெற்றவராய் ஏற்படுகின்றனர்?

தனது வாழ்நாளில் ஒரு சிறு பகுதியாகிய பதினான்கு ஆண்டுகள் தன் காதற்குரிய மனைவியோடும், அன்பிற் சிறந்த தம்பியுடனும் காட்டிற்குச் சென்ற, தயரத தனயனான ஸ்ரீராமபிரானை, செயற்கரும் செய்கைகள் செய்த சீலராக மதித்து அவர் பிதுர்வாக்ய பரிபாலனம் செய்த பெருமையைத் துதித்து அவரடைந்த துன்பங்கட்கு அநுதாபப்படும் நாம், நம் இளம்பாலிகைகளைத் தங்கள் வாழ்நாள் பூராவும் விடுதலையற்ற துயர்க்காட்டில் மூள்வித்தற்குரிய இப்பால விவாகக் கொடுமையினை ஆதரிப்பதும், அதற்காக வருந்தாமலிருப்பதும், அவ்வழக்கத்தை அறவே ஒழிக்கவேண்டிய ஏற்பாட்டைத் தேடாமலிருப்பதும் தகுதியாமா? தர்மமாகுமா? கடமையாகுமா? வயது வந்து வனம்புகுந்த அவ்விராமனை மெச்சும் நாம், வயது வராமலே இத்துயர்க் கடலில் மூழ்கும் இச்சிறுமிகளை ஏன் கவனியாது விடுகின்றேமோ என்பது தெரியவில்லை.

தாயாதிக் காய்ச்சலால் மாயச் சூதாடிய ஒரு துரியோதனனை ஓயாமல் யுகங்களாய் நிந்திக்கும் நாம், நம் அருமைக் கன்னிகளாகிய பாய்ச்சிகளை உருட்டி அவர்கள் நல்வாழ்வைப் பந்தயம் வைத்து நாள்தோறும் விளையாடிக் களிக்கும் தாய் தந்தையர்களாக நம்போன்ற பல துரியோதனர்களை ஏனோ நிந்திக்காம லிருக்கின்றோம்? பாண்டவர்க்காகப் பரிந்து துன்புறும் இளகிய நம்மனம் முதலற்று நிற்கதியாய் அச்சம் மெலிவு முதலியவைகளோடு அழியும் இப்பாலிகைகள் பொருட்டு ஏனோ உருகவில்லை?

பொய்பேசுதல் தகாதென்பதை உலகோர் அறியும் வண்ணம் மெய்ப்பித்துக் காட்டும் பொருட்டு வேண்டுமென்று நினைக்க வொண்ணாக் கஷ்டங்களையும் மேற்போட்டுக் கொண்ட ஓர் சந்திரமதியை நினைக்கும்போது நம் மனம் கசியவில்லையா? அனாவசியமாக, அகாரணமாக, நம்முடைய சூழ்ச்சியைக் கொண்டு நம் பெண்களை அனாதைகளாக்கி பரிதவிக்கச் செய்வது மட்டில் ஏனோ நமக்கு கஷ்டமாகத் தோன்றவில்லை?

கால வித்தியாசத்தால், உயிருடன் பிரிந்துபோன புருஷனுக்காகப் பரதவித்து கஷ்டத்தை யேற்றுக்கொண்ட தமயந்திக்காக நாம் கண்ணீர் பெருக்கவில்லையா? பிறர் கட்டுப்பாட்டுக் கடங்கி செய்ய நேரிட்ட காரியத்தால் புருஷர்களை அடியோடு இழக்க நேரிடும் நம் பெண்களைக் குறித்து நாம் ஏன் இரங்காம லிருக்கின்றோம்?

விவாகத்தை முன்பின் யோசிக்காமல் முடித்து அதைச் சுவையுடைய தாக்கும் பொருட்டு விருப்பத்தை விலைகொடுத்து வாங்குவதைவிட இயற்கை



# பிரோந்தையார்

———:(o):———

(இலஞ்சி D. சண்முகவேலு)

"மன்ற வாணன் மலர்திரு வருளால்
தென்றமிழ் மகிமை சிவ்ணிய செய்த
அடியவர் கூட்டமும் ஆதிச் சங்கமும்
படியின்மாப் பெருமை பரவுறு சோழனும்
சைவமா தவரும் தழைத்தினி திருந்த
மையறு சோழ வளநாட் டின்கண்".

திருச்சியைச் சார்ந்த உறையூர், தன் புகழ் பரப்பிய சோணுட்டிற்குத் தலைநகராய்த் திகழ்ந்தது. "ஊர் எனப்படுவது உறையூர்" என்று ஒரு புலவர் புகழ்ந்துள்ளார். உறந்தை, கோழி என்ற சிறப்புப் பெயர்களைக் கொண்டது. தஞ்சையைச் சார்ந்த கரந்தைக்கு எவ்வளவு மதிப்பு உண்டோ அதைக் காட்டிலும் திருச்சியைச் சார்ந்த உறந்தைக் குண்டு.

பன்னூற்றுண்டுகளுக்கு முன் உறையூரிலிருந்து சோழ நாட்டை பரிபாலித்து வந்தான் கோப் பெருஞ் சோழன். ஒரு மைந்தன் தன் குலத்திற் குள்ளான் என்று உள்ளாதவன் குலத்திற் றேன்றியவன். கல்வி, கேள்வி நிறைந்தவன். பாமாலை இயற்றுவதில் சமர்த்தன். மன்னுயிரைத் தன்னுயிராக மதிக்கும் மாண்பினன். அன்பு நிறைந்த அகத்தினன். கற்றவர்

---

யாக ஒருவர்க் கொருவரிடத் துண்டான விருப்பத்தைப் பூர்த்தி செய்யும் பொருட்டு விவாகத்தை முடித்தல் மேன்மையன்றோ?

நம்நாட்டில் செய்ய முயற்சிக்கும் எல்லாச் சீர்திருத்தங்கட்கும் பிரதான அஸ்திவாரம் இதுவே யென்றும், அதை ஆண் பெண் ஒவ்வொருவரும் அனுஷ்டித்துக் காட்டுதல் அவசிய மெனவும், கவர்ன்மெண்டாரும் இது விஷயமாக ஏற்கனவே செய்திருக்கும் சட்டத்தைச் சிறிதும் தயங்காமல் பூரண அமுலுக்குக் கொண்டுவந்து, இக்கொடிய சர்ப்பத்தின் தலையை அடியோடு கிள்ளியெறிந்து போடவேண்டிய ஏற்பாட்டில் சற்றும் தயங்கக் கூடாதெனவற்புறுத்துவது கடமையாகும்.

போற்றும் கொற்றவன். புலவர்களுடன் பழகுதலிலும் விருப்புடையோன். "புணர்ச்சி பழகுதல் வேண்டா" என்ற திருக்குறளுக்கு உரை வரைந்த பரிமேலழகரால் பாராட்டப் பெற்றவன். அன்னவன் சரிதையையும் ஆந்தையார் சரிதையையும் சிறிது ஆராய்வாம்.

கோப் பெருஞ் சோழன் உறையூரிலிருந்து அரசாண்டு வரும் காலத்தில் செந்தமிழும் சிவநெறியும் செழித்து வளரும் பாண்டிவள நாட்டில் பிசிர் என்ற ஊரிலே ஆந்தையார் என்னும் புலவர் பெருமான் வாழ்ந்து வந்தார். கவலைக் கடல் கடந்த கவிஞர் பெருமானை நரை திரை மூப்புப் பிணி ஒன்றும் அணுகிற்றிலது. தென்றற் காற்றும் கோப் பெருஞ் சோழனின் புகழும் ஒன்று சேர்ந்து வீசின. அருங்கலை] பயின்ற புலவர் நுகர்ந்தார். பொன்னி நாட்டிற்குப் புரவலனை கோப்பெருஞ் சோழனைக்கண்டு சென்னி வணங்க நினைத்தார். அன்னவனை அருங்கவிபாடித் துதித்தார். அரசன் புகழைப் பாடுவதிலே தன் காலத்தைக் கழித்து வந்தார்.

அரசனும் அருங்கலை தெரிந்த அன்பு நிறைந்த அகத்தினரான புலவர் பெருமானை பிசிராந்தையாரைக் காணவேண்டும் என்று கவலை கொண்டான். விள்ளா நட்புப் பூண்டான். ஒருவரை ஒருவர் கண்டறியாராயினும் ஒத்த அன்புடையவர்கள் ஆனார்கள். இவர்கள் கேண்மை பிறைமதி போல வளர்ந்து ஓங்குவதாயிற்று.

"புணர்ச்சி பழகுதல் வேண்டா வுணர்ச்சி தான்—நட்பாங் கிழமை தரும்" என்பது நாயனார் நவின்ற நன் மொழியன்றோ? உரைவரைந்த பரிமேலழகர் கூறுவதாவது:—"பழகுதல்=பலகாற் கண்டுஞ் சொல்லாடியும் மருவுதல்.. புணர்ச்சி—ஒரு தேயத்தராதல். இவ் விரண்டு மின்றி கோப் பெருஞ் சோழனுக்கும் பிசிராந்தையார்க்கும் போல உணர்ச்சி யொப்பின், அதுவே உடனுயிர் நீங்கும் நட்பினைப் பயப்பதாகும் என்பதாம்."

"ஒருங்கிய விரண்டுடற் குயிரொன்றாயினர்" எனக் கம்பர் அருளிய வாறு இரண்டு உடல்களுக்கு உயிர் ஒன்று ஆனார்கள். நாள் பல சென்றன. உறையூரில் கோப் பெருஞ் சோழனுக்கும் அவன் குமாரர்களுக்கும் பகையேற்பட்டது. அரச குமாரர்கள் வஞ்சி மிலைந்து போருக்குத் தயாராயினர். அரசனும் செருவிற்குத் தயாராயினன். இதனை யறிந்தார் அந் நாட்டுப் புலவரான எயிற்றியனார்.

அரசனை அண்மி, "வெண் குடை விளக்கும் விறல் கெழுவேந்தே! மலர் தலையுலகத்து உன்னுடன் போர் புரிந்தோர் ஒருவருமிலர். இப்பொழுது உன்னுடன் சண்டை செய்ய வந்தவர்கள் இரும்பனை வெண்டோடு மிலைந்தோன் அல்லன். கருஞ்சினை வேம்பின் தெரியலோன் அல்லன். நின் புதல்வர்களே உன் பகைஞர். நீ புத்தேள் உலகம் எய்தின் இப் புவி நின் புதல்வர்க் குரித்தன்றோ? நீ அவற்குத் தோற்பின் பகைவர் உன்னை இகழுவார்கள். பழியை உலகில் நிறுத்துவை. ஆதலான் ஒழிவதாக நின்னுடைய மறன். விண்ணோரது உலகத்தின்கண் அமைந்தவர் விரைந்த விருப்பத்தோடு விருந்தாக ஏற்றுக் கொள்ள நல்வினையை மயங்காமல் செய்தல் வேண்டும்" என்று இரங்கிக் கூறிய பாட்டு,

"வெண்குடை விளக்கும் விறல்கெழு வேந்தே!
பொங்கு நீர் உடுத்த இம் மலர்தலை உலகத்து
நின்றலை வந்த அருவரை நினைப்பில்
தொன்றுறை துப்பின்நின் பகைஞரு மல்லர்
.................................
உயர்ந்தோர் உலகம் எய்திப் பின்னும்
ஒழித்த தாயம் அவர்க்குரித் தன்றே
அதனால், அன்ன தாதலு மறிவோய் நன்று
.................................
எண்ணில் காட்சி இளையோர் தோற்பின்
நின் பெருஞ் செல்வம் யார்க்கெஞ் சுவையே.
.................................
அதனால், ஒழிகதி லத்தைநின் மறனே.
........................வானோர்
அரும் பெற லுலகத் தான்றவர்
விதுப்புறு விருப்பொடு விருந்தெதிர் கொளற்கே". (புறம்–213.)

அரசிளங்குமாரர்கள் சண்டைக்கு வந்த காரணம் நாட்டை தாங்கள் ஆள வேண்டு மென்ற நசைபற்றியே என்பது இப் பாட்டால் விளங்குகிறது. புலவர் பெருமானான புல்லாற்றூர் எயிற்றியனார் கூறியதைக் கேட்ட சோழனின் மனம் சோர்ந்தது. செல்லும் உலகத்துச் செல்வம் வேண்டிய நல்வினைகளைச் செய்ய அரசன் மனம் துணிந்து நின்றது.

"கச்சையங் கடகரிக் கழுத்தின் கண்ணுறப்
பிச்ச முங் கவிகையும் பெய்யும் இன்னிழல்
நிச்சயம் அன்று எனின் கெடிது நாளுண்ட
எச்சிலை நுகர்வது இன்ப மாகுமோ?"

என்ற ஆன்றோர் மொழியைக் கைக் கொண்டு அரசன் ஆற்றிடைக்குறையில் ஒரு மர நிழலில் உண்ணாவிரதம் பூண்டு உயிர் விடத் துணிந்து போய் வடக்கிருந்தான். அந் நாட்டுப் புலவர் பெருமக்களும் சான்றோர்களும் அரசனைச் சுற்றி யிருந்தார்கள்.

அவ்வாறு இருக்கும்போது அரசன் அவர்களை நோக்கி "என் உயிர்த் தோழரான பிசிராந்தையாரும் இன்னே வருகுவர். அவர் செல்வ முடைய காலத்து நிற்பினும் யாம் இன்னாமை யுறுங்காலத்து ஆண்டு இருக்க மாட்டார்" என்று கருத்துப் படும்படியாக,

"தென்னம் பொருப்பன் நன்னாட் டுள்ளும்
பிசிரோ னென்பவெ னுயிரோம் புநனே

செல்வக் காலை நிற்பினும்
அல்லற் காலை நில்லலன் மன்னே." (புறம்-215)

என்று கூறினன்.

அவர்கள் அரசனைப் பார்த்து "அரசே! உன்னை அவர் பெயர் கேட்டிருக்கும் அளவே அன்றி ஒரு பொழுதும் நேரில் கண்டறியாரே! பலகால் பழகிய நட்பாளர்களுக்கும் இங்ஙனம் வருதல் எளிதோ?" என்று கருத்துப் படும் படியாக,

"கேட்டன் மாத்திரையல்லது யாவதுங்
காண்டல் இல்லாது யாண்டு பலகழிய
வழுவின்று பழகிய கிழமையராயினும்
அரிதே தோன்றல் அதர்பட வொழுகல்"

என்று கூறினர்கள்.

அவர்களைப் பார்த்து அரசன்.

"ஐயங் கொள்ளன்மின்! ஆரறிவாளீர்!
இகழ்விலன்: இனியன்: யாத்த நண்பினன்
புகழ்கெட வரூஉம் பொய் வேண்டலனே
தன்பெயர் கிளக்குங் காலை என்பெயர்
பேதைச் சோழ னென்னுஞ் சிறந்த
காதற் கிழமையும் உடையன் அதன்தலை
இன்னதோர் காலை நில்லலன்
இன்னே வருகுவன் ஒழிக்க அவற்குஇடமே."

என்று கூறினன். இடம் ஒழித்துவைத்தனர்.

புல்வர் பெருமானை பிசிராந்தையாரும் மன்னு உலகத்து வாழும் மன்னவனுக்கு நேர்ந்தவற்றை மனமொத்த உணர்ச்சியால் அறிந்து அரசன் முன் வந்து நின்றனர். அரசர்பிரானும் ஆந்தையாரும் ஒருவரை ஒருவர் ஆலிங்கனஞ் செய்து கொண்டு வடக்கிருந்தனர். இதைக் கண்ட பொத்தியார் என்னும் புலவர் வியப்புற்று,

"நினைக்குங் காலை மருட்கை யுடைத்தே
எனைப் பெருஞ் சிறப்பினொடு ஈங்கிது துணிதல்
அதனினு மருட்கை யுடைத்தே பிறனாட்டுத்
தோற்றஞ் சான்ற சான்றோன் போற்றி
இசை மரபாக நட்புக் கந்தாக
இனைய தோர் காலை யீங்குவருதல்;
வருவன் என்ற கோனது பெருமையும்
அது பழுதின்றி வந்தவன் அறிவும்

வியத்தொறும் வியத்தொறும் வியப்பு இறந்தன்றே
அதனால், தன் கோல் இயங்காத்தேயத் துறையும்
சான்றோன் நெஞ்சு உறப் பெற்ற தொன்றிசை
அன்னோனை இழந்த இவ்வுலகம்,
என்னாவது கொல் அளியது தானே." (புறம் 217)

என்று கையறு நிலை பாடிக் கையாறு எய்தினார். இவ்வற்புதத்தைக் கண்ட கண்ணகனாரும், "பொன்னும் பவளமும் முத்தும் மணியும் இடப் பிறப்பால் தூரமாக இருந்தாலும் அணிகலன்களைச் செய்யும் காலத்து ஓரிடத்தே தோன்றினாற் போல, எந்நாளும் அமைந்தோர் அமைந்த பக்கத்தராவர். அமைதி இல்லார் அமைதி இல்லார் பக்கத்தராவர் என்று பொருள் படும்படி,

"பொன்னுந் துகிரு முத்து மன்னிய
மாமலை பயந்த காமரு மணியும்
இடைபடச் சேயவாயினும் தொடைபுணர்ந்து
அருவிலை நன்கலம் அமைக்குங்காலை
யொருவழித் தோன்றியாங்கு என்றும் சான்றோர்
சான்றோர் பாலராப
சாலார் சாலார் பாலரா குபவே."

எனப் பாடி கண்ணுடையார் ஆயினர்.

இருவரும் உண்ணா விரதம் பூண்டு இந்திரியங்களை ஒடுக்கி உயிர் நீத்தனர். இது அன்றோ உண்மை நட்பு? அக்கால வழக்கப்படி, விண் படர்ந்த வேந்தற்கும் கவிஞர்க்கும் கற்கண்டு—அன்னவர் பீடும் பெயரும் பொறித்து நன்னீர்ப்படுத்துத் தூய்மை செய்து கன்னட்டார்கள். நந்தண்டமிழ் நாட்டில் பண்டைச் சான்றோர்கள் இவ் விதம் நட்பாட்சிபுரிந்து பொன் போன்ற உயிரையுங் கொடுத்து, புலால் ஆக்கையையும் போக்கிப் புகழுடம்புடன் விளங்கினார்கள். "உணர்ச்சி தான் நட்பாங் கிழமை தரும்" என்று கூறிய தேவர் திருவாக்கை யொத்த ஒருவாக்கு ஒரு மொழியிலும் காணக் கிடையாது,

"சிநேகமே சிறந்த செல்வம்."



# உரிமை விரும்பிய கிள்ளைகள்

—:(0):—

(தே. ப. பெருமாள்.)

இதந்தரு மனையி னீங்கி
இடர்மிகு சிறைப்பட்டாலும்
பதந்திரு விரண்டு மாறிப்
பழிமிகுந் திழி வுற்றாலும்
விதந்தரு கோடி யின்னல்
விளைந்தெனை யழித்திட்டாலும்
சுதந்தரதேவி! நின்னைத்
தொழுதிடல் மறக்கிலேனே. —பாரதி.

உரிமையை விரும்பாத உயிரினம் இவ்வுலகிடைக் காண்டல் அரிது. மனிதன் முதல் புல்பூண்டு வரைஉள்ள உயிரினம் அனைத்தும் உரிமையை விரும்புகின்றன. மனிதன் பிறனுக்கு அடிமைப்படாது தன் மனம் சென்றவாறு உயரிய முறையில் வாழ்வு நடாத்த முயலுகின்றான். வலிமை சான்ற விலங்குகள் இருட்செறிந்த காடுகளில் தம்மனம் போன வாறு நடக்க அவாவுகின்றன. பனிபடு சோலை பயன் மரங்களில் பறவைகள் உரிமையுடன் பறந்து திரிந்து வாழ்வு நடாத்த விரும்புகின்றன. இங்ஙனமே ஒவ்வொரு உயிரினமும் தம் மனம்போனவாறு நடந்து திரிந்து வேண்டுவன செய்து வாழ்வு நடாத்த விழைகின்றன.

ஆனால் இத்தகைய விழைவுகொண்ட உயிரினங்களின் உரிமையைக் கடிதல் எத்தகைய அறியாமை! எத்துணைப் பாவம்! வெய்ய விலங்குகளையும் இனிய பறவைகளையும், பிற உயிர்த்தொகுதியினையும் பொறியிற் பிடித்து அவைகளைக் கூடுகளில் அடைபடுத்தின் அம்மம்ம! அவை படுந்துயர் என்ன! அவை பலமிழந்து நலிந்து நடக்கவும் வலுவின்றி சாவை எதிர்நோக்கித் துன்புறுகின்றன. அவை தாம் வருந்தித் தேடி உண்ணும் உணவினும் நாம் இனிய உணவை அவற்றிற்களிப்பினும் அவை அதைக் கண்கொண்டு நோக்கா. எனெனின் அவை உரிமை ஒன்றையே தம்முயிரினும் மேலென எண்ணி அவ்வுணவை அருந்த இசையாவாம். இஃதை ஒப்பவே ஒவ்வொரு உயிரினமும் உரிமையின் பொருட்டு உயிரைக் கொடுத்தற்கும் தயங்காதனவாய் விட்டு விடுதலையாகி நிற்க விரும்புகின்றன. இவ்வாறு உரிமையின் பொருட்டு உயிரைக்கொடுத்த இரு கிள்ளைகளைப்பற்றி ஈண்டு எடுத்துக் கூறுதும்.

ஒருநாள் பொழுது சாயும்வேளை; ஒரு பூந்தோட்டம்; அழகிய தோட்டம்; அங்கே பல நிற மலர்ச்செடிகள்; எழில் மிக்க பூங்கொடிகள்; இளமரங்கள் பல. அவை தளிர் பெய்துகின்றன. சிறிதும் பெரிதுமாய் மலர்ந்த மலர்கள் பல; அவைகளின் நிறம் மாந்தரை வசீகரப்படுத்தும்; எங்கும் இனிய வாடை; வண்டறையும் நல்லோதை; குளிர்ந்தென்றல் மகிழ்ந்து வீசுகின்றது; பறவைகளின் இன்பமிக்க தொனி; அவற்றில் குயில்களின் தீம்பாடல்.

அங்கே ஓர் மாதுளஞ்செடி. அதன் நீண்ட கிளை ஒன்று; தென்றலால் ஊஞ்சலென்ன ஊசலாடுகின்றது; அக்கிளையின் மத்தியில் இரு கிள்ளைகள்; பிள்ளைமொழி பிதற்றி உரையாடுகின்றன; அவற்றின் உரையிலிருந்து அஃதை அறிய இயலும். இன்றேல் அதன் சிவந்த அலகால் அறிய இயலும்; ஏனெனின் மரத்தின் நிறமும் கிள்ளையின் நிறமும் ஒத்திருந்ததினாலென்க. சுதந்திரமுடைய கிள்ளைகள். கவல் கண்டறியா காமர் பறவைகள். என்ன உரையாடியதோ எத்தகைய மகிழ்வு கொண்டதோ? யாம் அறியேம். அடுத்த கணம் அவைகள் ஒரு மனிதன் கையிற் சிக்கின. மருதன் என்னும் தோட்டக்காரன் அவன்; கிள்ளைகள் மிழற்றிய மொழிகள் அவன் காதிற்பட்டன. தொனிபடாது மரத்தின் அண்மையிற் சென்றான். கதுமென மேலுடையை அவற்றின் மிசை வீசினன், கிள்ளைகள் இரண்டும் அவனுடையில் அகப்பட்டன. மருதன் அவற்றுடன் இல்லம் ஏகினன்.

மறுநாட் காலை காய் கதிர்ச்செல்வன் பொன்னொளியைக் கக்குகின்றான். புள்ளினங்கள் வானில் ஆர்ப்புடன் பறக்கின்றன. மருதனது இல்லம். இரும்புக்கம்பிகள் கொண்டு பின்னிய கூடு. கிள்ளைகள் இரண்டும் அதனுள் அடைக்கப்பட்டுள்ளன. அவை வாடித் தூங்குகின்றன. அவை தம் விழிகளினின்றும் நீர் ஆறெனப் பொழிகின்றது. அது போழ்தத்து உணவு மருதப்பனால் அவற்றிற் களிக்கப்பட்டன. அது எத்தகைய உணவு? பொற்கிண்ணியில் ஆவின் தீஞ்சுவைப்பால். பொன்னிறம் பழுத்த நல்லியற் கனிகள்; கிள்ளைகள் அவற்றைக் கண்கொண்டு நோக்கிற்றிலது. காரணம் என்னை? அவை சுதந்திரம் ஒன்றே தம் உயிரெனக் கொண்டது. சுதந்திரமின்றேல் உயிரிழத்தல் நன்றெனக் கொண்டிருந்தது. 'அடிமை வாழ்வு' கொண்டு அமிழ்து அருந்துவதினும் மிடிமைகொண்டு இறத்தல் மாண்பு எனக்கொண்டன போலும் அக்கிளைகள்!

கிள்ளைகள் பொற்கிண்ணம் மீதிவர்ந்து பாலைக் கவிழ்த்தன. பொன்னிறக் கனிகளை கால்களால் வெளித்தள்ளின. சிறகடித்து ஒல்லும் வகையான் பறக்க முயன்றன. அவைகளால் பறக்க இயலுங்கொல்? சருகுகளால் பின்னப்பெற்ற தம் கூட்டை நினைந்தன, கூடமைவுற்ற அழகிய மரத்தினை நினைந்தன. மரங்களில் பழுத்து முதிர்ந்த கொத்துக்கனிகளை நினைந்தன. நீலவானை எண்ணிக் கருத்தழிந்தன. கூட்டில் தாமிட்ட முட்டையினை எண்ணிக் கவல் கொண்டன.

பறவையினது வாழ்வைக்கண்டு மகிழ்வோர் பலர்; அதன் இனிய குரலைக்கேட்டு இன்புறுவோர் பலர். அத்தகைய வாழ்வை விரும்பும் அறிஞர் பலர். புலவர் அவற்றின் வாழ்வினைத் தம் புனித மொழிகளால் புகழ்ந்து போற்றுவர். இத்தகைய பெருமைகொண்ட பறவையினை இது போழ்து யார் காணின் துன்புறார்?

மூன்று தினங்கள் கழிந்தன. கிள்ளைகள் தாம் கொண்ட உண்ணா நோன்பை விட்டில. கிடைக்கின் சுதந்தரம் கிடைக்க. இன்றேல் உயிரை மாய்த்தல் நலமென உறுதி கொண்டன. அதன் அடுத்தநாள் கூட்டில் இரண்டும் இறந்து கிடந்தன. மருதன் அவை இரண்டையும்—அவற்றின் வெற்றுடல் இரண்டையும் வெளிவீசினான். கிள்ளைகளின் வெற்றுடல் இரண்டும் மாய்ந்தன. அவற்றின் தூய—வீரமிக்க உயிர் சுதந்தரம் தேடி அடைந்தன. என்னே கிள்ளைகள் கொண்ட உரிமைவேட்கை!

# துண்டுத் துணுக்குகள்.



காபி குடித்தால் கனவுகள் வரும். உறக்கம் பிடிக்காது.

*    *    *    *

காலையில் வெறும் வயிற்றில் பழங்களைத் தின்றால் வலிமை வளரும்.

*    *    *    *

கோபமாயிருக்கும்போது உணவை உட்கொண்டால் கொஞ்சமேனும் ஜீரணமாகாது.

*    *    *    *

வெய்யிலில் சஞ்சரிக்காவிட்டாலும் பகலில் உறங்கினாலும் அஜீரணம் உண்டாகும்.

*    *    *    *

வாசனைத் திரவியங்களை உபயோகித்தால் ஜீரணக் கருவி நல்ல நிலையை அடைகிறது.

*    *    *    *

உணவு உட்கொண்ட பிறகு ஜலங் குடித்தால் வலிமை உண்டாகும்.

*    *    *    *

விடியற்காலம் தூங்கினால் ஆரோக்கியம் கெடும்.

*    *    *    *

வேகவைக்காத அரிசியிலும் ஈரவெங்காயத்திலும் நல்ல ஜீவசத்துக்கள் இருக்கின்றன.

*    *    *    *

வெற்றிலையின் காம்புகள் ஆரோக்கியத்தையும், காம்புகள் அறிவையும் கெடுத்துவிடுகின்றன.

*    *    *    *

ஒற்றை ஆடையுடன் உணவு உண்ணல்—ஆடையின்றி நீராடுதல் தவறு.

*    *    *    *

ஆரோக்கியத்திற்கு உடல் தூய்மையைவிட ஆன்மத் தூய்மையே சிறந்தது.

*    *    *    *

சாப்பிட்டவுடனே உட்கார்ந்தால் தொந்தி பெருகும்.

*    *    *    *

சாப்பிடும்போது மற்றவர்கள் நோக்கல் உசிதம் அன்று.

*    *    *    *

பூமியில் படுத்துறங்கினால் தாது விருத்தியும் உடல் உரமும் உண்டாகின்றன.

*    *    *    *

மட்பாண்டச் சமையலால் மலை மூலிகைகளின் அவசியம் நீங்கும்.

*    *    *    *

(ஆயுர்வேத பத்திரிகையிலிருந்து மொழி பெயர்க்கப்பட்டவை.)

# குழந்தைகளை வளர்த்தல்

(தென்னாப்பிரிகா, டர்பன் சரஸ்வதி சபைத்தலைவர்
திரு. ச. முனிஸ்வாமி பிள்ளை.)

ஒரு சமூக வாழ்வுக்கு குழந்தை வளர்த்தலைப்போல் முக்கியமான விஷயம் இல்லவே இல்லை. இன்று சிறுவர்களா யிருப்பவர்களே பிற்காலத்து, தேசத்துக்கு வலியளிக்கும் பௌரர் ஆகிறார்கள். ஆகவே தேச க்ஷேமத்தை நாடுவோர் பிள்ளை வளர்பபு விஷயத்தில் எத்துணைக் கருத்துடையோர்களாயிருக்கக் கடமைபட் டுள்ளார்கள் என்பது வெளிப்படை.

ஒரு ஆங்கிலப் புலவர் இளைஞரைக் களிமண்ணுக்கு ஒப்பிடுகிறார். களிமண்ணைக் குயவன் விரும்புகிறபடி உருப்படுத்தலாம். அழகிய பாவை யமைக்க விரும்பின் களிமண் அதற்கும் இடங்கொடுக்கும், ரூபமான உருவங்கள் அமைக்க விரும்பினும் களிமண் அதற்கு முதவும். களிமண் பெறும் உருவம் குயவன் மனப்போக்கைப் பொறுத்தது. இளைஞர் நிலையும் அத்தகையதே.

பிறவியிலேயே சில பிள்ளைகளுக்குச் சில குணங்கள் அமைந்து காண்பது பிரத்தியட்சமாயினும் வளர்ப்பு முறையால் எத்தகைய தீயகுணமுடைய குழந்தைகளையும் நல்வழிப்படுத்தலாம். பிள்ளைகளின் பிற்கால நிலை அநேகமாகச் சுற்றுச் சார்பையும் பராமரிப்பையும் பொறுத்ததே. உயர் குடிப் பிறந்த சிறுவர் சிறுமிகளைக் கீழ்குடிப் பிறந்தவர் வளர்க்க நேருமாயின் அச் சிறுவர் சிறுமியர் கீழ்க்குடிக் கடுத்த குணங்களையே தடையின்றிப் பெறுவர். மாறாக, கீழ்குடிப் பிறந்த குழந்தைகள் மேன்மக்களால் வளர்க்கப்படுபவராயின் மேற்குடிக்குணங்கள் பெறுதலும் நிச்சயமே. சேர்க்கை வாசனை பெரிதும் வலியுடையது.

நம்மவர்களோ "மரத்தை வைத்தவன் நீர் வார்ப்பான்" என்ற முதுமொழியை, பிள்ளைவளர்ப்பு விஷயத்தில் பின்பற்றி வருகிறார்கள். கீரைப் பயிர் செய்ய வேண்டுமென்றாலும் எவ்வளவோ சிரமம் அவசியம். பருவத்தே பாத்திவெட்டி, வேண்டியமட்டும் உரம்போட்டு விதைத்த விதையை எறும்பு முதலியன கொண்டுபோகாது பாதுகாத்துக் காலாகாலத்தில் நீர் வார்த்துக் களைபிடுங்கிக் கண்ணும் கருத்துமா யிருந்தால்மட்டுமே சிலநாட் பயிராகிய கீரையும் நற்பலன் தரும். ஆகவே பலநாட் பயிராகிய சிறுவர் விஷயத்தில் நாம் உபேட்சையா யிருந்தால் விளையும் பயன் என்னும்?

நமது தாய்மாரில் பெரும்பான்மையோரும் கல்வியறிவில்லாதவர்களே. குடும்ப வாழ்க்கையைச் செவ்வனே நடத்துவதற்கு அநுபவ முறையில் அறிவு தேடிக்கொண்ட தாய்மார் சிலர் ஆங்காங்கே இருத்தல்கூடும். அவர்கள் தொகை மிகச் சொற்பமே.

தந்தையரோ வயிற்றை நிரப்ப வகை தேடுவதும் பணஞ் சேர்ப்பதுமே புருஷர் கடன் எனக் கருதி வாழ்கின்றனர். ஆசிரியர் தொழிலில் எனக்

குப் பதினறு வருஷ அநுபவமுண்டு. இந் நீண்ட காலத்தில் அநேக குடும்பங்களின் ஸ்திதியை நான் வெகு நுட்பமாகக் கவனித்திருக்கிறேன். நம்மவர்களின் பிள்ளைவளர்ப்பு முறையை விளக்குதற் பொருட்டு ஒரு திருஷ்டாந்தத்தை மட்டும் ஈண்டு கூறுகிறேன்.

ஒருவருக்குக் குடும்பச் சொத்தாக ஐயாயிரம் பவுனுக்குமேல் ஆஸ்தியுண்டு. அவருக்குப் புத்திரர்கள் மூன்று. பெண்கள் இல்லை. அவர் வீட்டில் அவரும் அவர் மனைவியும் மூன்று புத்திரர்களும் தவிர வேறு யாரும் கிடையாது.

பதினைந்து வயதுடைய மூத்த பையன் காலப்போக்குக் சேற்றவாறு ஆங்கில கல்விச்சாலைக்குப் போய்க்கொண்டிருந்தான். பத்து வயதுள்ள இரண்டாவது மகன் தமிழ்ப் பள்ளிக்கூடத்திற்குப் போய்க்கொண்டிருந்தான். ஐந்து வயதுடைய மூன்றாவது மகன் பள்ளிக்குப் போகவில்லை. தந்தையார் காலை ஐந்துமணிக்குப் படுக்கைவிட்டெழுந்து காலைக் கடன்களை முடித்து, சாப்பிட்டுக் கணக்கெழுதத் தொடங்குவார். அதற்குள் லேவாதேவி வாடிக்கைக்காரரும் சிலர் வருவர். அவர்களோடு வம்பு வார்த்தையாடி வல்லடி வழக்குப் பேசி ஓயுமுன் மணியும் பன்னிரண்டு அடித்துவிடும். பின்னர் போஜனஞ் செய்து வெளிசென்று, மாலை நான்கு மணிக்கு வீட்டுக்கு வந்ததும் வீட்டுக்கு வேண்டிய சாமான்கள் வாங்க கடைத்தெருவுக்குச் செல்வார். கடைசியாக எட்டுமணிக்கு இராப்போஜனமுண்டு 10 மணிக்குப் படுக்கை புகுவார்.

ஆங்கிலக்கல்வி பயிலும் மூத்தமகன் என் மாணாக்கனாயிருந்தான். மாதத்துக் கொருமுறை ஆமணக்கெண்ணெய் சாப்பிடுவதுபோல் தினம் ஒருமணிக் கூறு தமிழ் கற்க என்னிடம் வருவான். பையன் நல்லவன்; புத்திகூர்மையுண்டு. மேற்பார்வை யில்லாததினால் கெட்ட பையன்களோடு சேர்ந்து ஆடிப்பாடி நடப்பான்; புஸ்தகத்தைமட்டும் தொடமாட்டான். இந்த உபேட்சை தமிழ்பாடத்தில் மட்டுமல்ல; எல்லாப்பாடங்களிலும் பையன்பாடு இப்படியே. பையனுடைய தகப்பனர் எனக்கு அறிமுகமுடையவராகையால் ஒருநாள் அவருடைய வீட்டுக்குச் சென்று மகனுடைய கல்வி விஷயத்தைப்பற்றிப் பேசினேன். எங்களது சம்பாஷணை பின்வருமாறு:—

நான்:—மூத்தப்பையன் பாடங்கள் சரியாய்ப் படிக்கிறனில்லை. தாங்கள் கவனிக்கக்கூடாதா?

தந்தை:—என் வயிற்றுப்பாடே மூன்றாள்பாரம் இருக்கிறது. பையன் பாடங்களையும் நான் பார்க்கவேண்டுமென்று சொல்லுகிறீரா?

நான்:—அப்படி நான் சொல்லவில்லை. அவன் படிக்கிறனு என்றாவது கவனிக்கக்கூடாதா? என்றேன். ஒரு வாரத்தில் ஒன்றிரண்டு நாள் அவனை அழைத்து பள்ளிக்கூட வரலாறுகளைக் கேட்டறிவதை ஒரு வழக்கமாக வைத்துக்கொண்டால் அவனுக்குப் பயமிருக்கும். பாடங்களைச் சரியாய் கற்பதற்கு அது ஒரு தூண்டுகோலாகும்.

தந்தை:—தல்லிப் பழுப்பது பழமா? தானே பழுப்பது பழமா? படிக்கும் பிள்ளை எப்படியாவது படிக்கும்.

நான்:—அது பொதுவிதி. தானே பழுக்காவிட்டால் தல்லியாவது பழுப்பிக்கலா மல்லவா?

தந்தை—இந்த இழவுக்கெல்லாம் என்க்கு நேரம் எங்கே இருக்கிறது? பிள்ளைகளை மேய்க்கத் தொடங்கினால் குடித்தனக் காரியம் கெடும். செட்டும் மெட்டுமா யிருந்ததினால் பத்துக்காசு தேட வழியாயிற்று. இந்தப் பணத்தை நான்கூட வா கொண்டுபோகப் போகிறேன்? இந்தப் பயல்களுக்குத்தானே தேடி வைக்கிறேன்.

நான்:—பிள்ளைகளை அவர்களிஷ்டப்படி வளர்த்துப் பணத்தைக் குவித்து வைத்ததினால் என்ன பிரயோஜனம். நீங்கள் கண்மூடினால் உங்கள் தோட்டத்தை எல்லாம் ஒரு வருஷத்துக்குள் தொலைத்துவிட்டு வயிறு வளர்க்க வகையறியாது திண்டாடுவார்களே. அதைவிட உள்ள பணத்தைக் கொண்டு திருப்தியடைந்து பையன்கள் படிப்பு விஷயத்தில் கவனம் செலுத்தினால் பையன்களும் யோக்கியராவார்கள். உள்ள முதலும் அழியாது?

தந்தை:-எல்லாம் விதிப்படி நடக்கும். அவனன்றி ஓரணுவும் அசையாது.

நான்:—அப்படியானால் பணந்தேடுவதில் வாழ்நாளெல்லாம் ஏன் செலவு செய்கிறீர்கள். விதித்தபடி நடக்குமென்று ஏன் சும்மா இருக்கலாகாது?

தந்தையாருக்குப் பேச்சு முட்டிவிட்டது. வளைய வளைய உளறத் தொடங்கினர்.

மகனுக்கு வீட்டில் பாடம் சொல்லிவைக்க ஒரு உபாத்தியாயரையாவது ஏற்படுத்தவேண்டுமென்று கெஞ்சிக் கெஞ்சிக் கேட்டுக்கொண்டேன். அவர் இணங்கினரில்லை.

இவ்வளவும் ஐந்து வருஷங்களுக்கு முன் நிகழ்ந்த சம்பவம். அந்தத் தந்தையாரும் இப்பொழுது ஜீவித்திருக்கிறார். மக்கள் மூவரும் ஆகாவழிகளாய்விட்டார்கள். தந்தை முதலில் பாதிக்குமேல் அழிந்துவிட்டனர். நான் தவறினாலும் தந்தைக்கும் மக்களுக்கும் சண்டைச் சச்சரவு தவறாது. மூத்த மகனும் தந்தையும் கோர்ட்டிலுங்கூட ஏறினார்கள். அவர்களது நிலை பிற்காலத்து என்னாகுமென்று வாசகர்களே! ஊகித்துக்கொள்ளுங்கள்,

சிசு உற்பாதனம் தெய்வத்தன்மைபொருந்தியது. அதன் மேம்பாட்டை-அதன் புனிதத்தன்மையை-அதன் தெய்வீக உயர்ச்சியை-உணரச் சக்தியில்லாதார் சண்டாளர்களேயாவர். தேசத்தின் தாழ்வுக்கும், வறுமைக்கும் மற்றும் தீமைக்கும் இச் சண்டாளர்களே முதற்காரணமாம். மக்கட்பேற்றை நமது திருவள்ளுவப் பெருமான் எவ்வளவு உயர்வாகப் பாராட்டி எழுதியுள்ளனர்.

தந்தை மகற்காற்றும் நன்றியைச் செவ்வனே செய்யாதார் மக்களிடமிருந்து நன்றியை எதிர்பார்ப்பது அறிவின்மையன்றோ?

சிலர் மக்களைக் கண்டவிடத்துப் பேய்போற் கொதித்து பாம்புபோல் சீறி விழுகின்றனர். வாயில் வந்தபடி வைகின்றனர். ஆடுமாடுகளை அடிப்பதுபோல் அடிக்கின்றனர்.

ஐயோ! இவர்களைப்பற்றி யெண்ணும்போது அங்கமெல்லாம் பற்றியெறிகின்றது. பிரபஞ்ச வித்துக்களாகிய இளைஞரை, பிரபஞ்சம் முன்னேறவேண்டுமானால் நாம் போற்றி வளர்க்கவேண்டும். நமது வாழ்வுக்கும் நமது குடும்பத்தின் வாழ்வுக்கும், நமது தாய்நாட்டின் வாழ்வுக்கும் மூலமாயிருப்பது நம் மக்களன்றோ? ஆகவே மக்களைச் சினக்கும் ஒருவன் தனக்கும் தன் குடும்பத்துக்கும் தன் தாய்நாட்டுக்கும் கேடு சூழ்பவன் ஆகின்றான்

தம் மக்கள் விஷயத்தில் பாராமுகமாய் இருக்கும் ஒருவன் தனக்கும் தன் குடும்பத்துக்கும் தன் தாய்நாட்டுக்கும் கேட்டுக்கு வித்தூன்றுகின்றான்.

தந்தைகாள்! நீங்கள் ஒவ்வொருவரும் இவ்விஷயத்தை ஞாபகத்தில் வையுங்கள்.

பெற்றோரே மக்களுக்குச் சிறந்த முன்மாதிரியாம். நூலைப்போல் சீலை; தாயைப்போல் பிள்ளை என்பது பழமொழி.

"தக்கார் தகவிலர் என்பது; அவரவர்
எச்சத்தால் காணப்படும்"

என்ற நாயனார் திருமொழியின் கருத்தை ஊன்றிப் பாருங்கள்.

ஒருவன் யோக்கியனா அயோக்கியனா என்பதற்கு அவன் கையிலுள்ள நற்சாக்ஷிப் பத்திரங்களையும், அவனுக்குக் கிடைத்துள்ள தங்கப்பதக்கங்களையும், கௌரவப் பட்டங்களையும் நோக்குதல் மகா மூடத்தனமாம். தன் கைப் பணத்தைச் செலவு செய்து பதக்கங்களை உண்டுபண்ணி, பொதுக் கூட்டத்திலே யாரேனும் ஒரு கூத்தாடியை அக்கிராசனாதிபதியாக்கி, அவரது திருக்கையினின்றும் பதக்கம் வாங்கியணிந்து, பரமபதம் பெற்றுவிட்டதாக எத்தனை மகிழ்ச்சியடைகின்றனர். கௌரவப் பட்டங்களின் கதை யாவருக்கும் தெரிந்ததுதானே! யோக்கியதையால் பட்டம் பெறுவோரும் அநேகர் உளர். ஆனால் அவர்களது கண் திருஷ்டி பரிகாரத்துக்காக பணம் கொடுத்துப் பட்டம் பெறுவோரும் பலர் இருக்கின்றனர்.

ஆகவே ஒருவனது தகுதியை அளவிட்டறிவதற்கு அவனது மக்களே தகுந்த சான்று என்கின்றனர். பொய்யா மொழித் திருவள்ளுவநாயனார், என்னை? அவரை போடத் துவரை முளையாதாகலின் யோக்கியர்களுக்கும் சிலகால் அயோக்கியப் பிள்ளைகளும் பிறப்பதுண்டு. அது புறநடை—பொது விதியன்று.

ஆகவே மக்களைக்கொண்டே உலகம் பெற்றோரை மதிக்கும். பெற்றோர்கள் மேம்பாட்டை அறிவதற்கு மக்களே சிறந்த அளவு கோலாம்.

தம் மக்கள் கண்ணில்படத் தகாதனவற்றைப் பெற்றோர் மனத்தால் எண்ணுதலும் வாக்கால் மொழிதலும் காயத்தால் செய்தலும் பாதகமாம்.

மக்களைப் பெற்றோர் எப்பொழுதும் தெய்வ சந்நிதியில் நடந்துகொள்வதுபோல் புனிதராய் ஒழுகல் வேண்டும். பெற்றோர் சிந்தனையின்-மொழியின்-செயலின் பயனெல்லாம் மக்களையே தடையின்றிப் படர்ந்து பிடிக்கும். மக்களைப் பெற்றோர் தான்றோன்றிகளாய் நடத்தல் உசிதமன்று; உரிமையுமன்று.

பெற்றோரின் வாழ்வே மக்களைப் பொறுத்ததாதலின், மக்களின் க்ஷேமத்திற்காகப் பெற்றோர் சகல நலங்களையும் வேண்டுமெனில், துறக்க வேண்டும். ஏனெனில் மக்கள் நலம் பேணுவோரே தன் நலமும் குல நலமும் தேச நலமும் பேணுவோராவர். மக்களைப் பேணி வளர்க்காதவர் கோடி தேடிக் கோடிக் கட்டினும் பயனில்லை. குடை நிழலிருந்து குஞ்சாமூரினும் சிறப்பில்லை.

# மானிடர் சிலரை வருத்தும் மமதை.

(தெல்லிப்பழை-கா. சின்னப்பா.)

ஆசிரியர் விருத்தம்

கல்வியொடு செல்வம் நல்கும் கண்ணியம் பெற்றி டாதோர்
நல்வரம் பெருத தாலே நாட்டிலே யுள்ளோர் தம்மை
வெல்வதற் கெண்ணி யென்றும் வீரங்கள் பலவும் பேசித்
தொல்லைகள் விளைக்கின் ருரே சொலற்கரும் மமதை யாலே. (1)

மமதைக்கு மருந்து யாரும் மானிலத் தறிய வேண்டின்
தமதுபுல் லறிவி ஞலே தமக்கு நேரிங்கு யாரும்
எமதுநா டதனி லில்லை யென்றவ ருரைக்கும் போது
உமதுநற் குணத்தின் தோற்றம் உதவாதிங் கென்பீர் தானே. (2)

அத்துடன் மமதை கொள்ளும் அறிவிலி களைநீர் பார்த்து
புத்திசற் றில்லா நீவிர் புன்மையை யொழிப்ப தற்காய்
இத்தரை தன்னில் வந்தே எழிலுடன் பிறந்தும் தீய
சித்தத்தை வளர்க்கின் றீரே சீரிதோ வென்பீர் தானே. (3)

பண்டிதப் பட்டந் தன்னைப் படிப்பின்றிச் சிலரிங் கேற்றுக்
கண்டவ ரெவர்க்கும் கல்விக் கடல்தாமிங் கெனவே செப்பி
எண்டிசை தனிலுங் கீர்த்தி ஈடின்றிப் பரவச் செய்த
பண்டிதர் தம்மை யிங்கு பரிகசிக் கின்ருர் பாரீர். (4)

பிறந்துநிந் நாட்க ளுள்ளே பேதமை யெல்லாம் போக்கிச்
சிறந்தநற் போதமெல்லாம் சிலரிங்கு தேர்ந்தார் போன்று
இறந்துபட் டொழிந்தா ரோடு இங்குள்ள புலவர் தம்மை
மறந்திடு வார்கள் தம்மை மானிடர் மறவா ரென்பர். (5)

உண்மையாய்க் கல்வி செல்வம் உலகினர் மதிப்பைப் பெற்ற
தன்மை யோர் தம்மைப் பற்றித் தலைதனிற் கிறுகி யாலே
பன்முறை தமது வீரம் பகர்ந்திட விரும்பு வாரோ
திண்மையிங் கிவர்தா னேற்ருல் சிலுசிலுப் பேனே சொல்வீர் (6)

எத்தனைநல் வாலிபர்கள் மமதையால் மறந்தே தம்மைச்
சித்தத்தைப் பெருமை தாக்கத் தீவினை பலவும் செய்து
முத்திக்கு வழிதே டாது மூடரின் உறவை நாடிப்
பத்திசற் றின்றி யென்றும் பாவத்தைச் செய்கின் றாரே. (7)

இவர்களைப் பார்த்தே யென்றும் இங்குள்ள பெரியோ ரெல்லாம்
தவவிளை வின்றி யிந்தத் தாரணி தன்னில் நீரும்
எவரும் பார்த் திழித்து ரைக்க என்பிறந் திருக்கிறீ ரென்
றவமதித் திடுதல் தன்னை அறியாதார் யாரு முண்டோ. (8)

மனதினை மமதை வந்து வாடிடச் செய்யு மாயின்
தனமது மிழந்து பின்பு தரையுளோர் வெறுத்தொ துக்க
கனபழிக் காளாய்க் கெட்ட காவாலிப் பட்டத் தோடு
வினைமிகப் பெருக்க வேண்டி மேவிடும் தன்மை யீதோ. (9)

சித்தத்தைப் பற்றும் நோயுள் தேர்ந்திடின் மமதை போன்ற
மெத்துபல் தீமை சேர்க்கும் வேறொரு குணத்தை நாமும்
இத்தரை தன்னிற் காணோம் இதற்குநற் சாட்சியாக
எத்தனை மமதை கொண்டோர் இந்நாட்டி லிருக்கின் றாரே. (10)

சிலநலம் பெற்று விட்டால் சீலம தின்றி யிங்கு
பலகுறை பொருந்தும் மாந்தர் பகரும் மமதை கொண்டு
தலைதனை நிமிர்த்திக் கொண்டு தமக்குநே ராகச் சாற்றக்
கலைபல வுணர்ந்தோர் தம்மைக் காட்டுவீர் என்பர் தானே. (11)

கற்றவர் மமதை கொள்ளும் கசடரைப் பார்த்தெந் நாளும்
பெற்றநும் போதத் தாலே பேசரும் தீமை யன்றி
உற்றிடும் நன்மை யேதும் உரைத்திடு மென்ப ரன்றி
வெற்றுரை பேசு மந்த வீணரை மெச்சு வாரோ. (12)



# "மணிமேகலை" ஆராய்ச்சி

ஸ்ரீ R. V. இராமஸ்வாமி B. A., B. L. வக்கீல், சேலம்.



---

## 3. சரித்திரக் குறிப்பு

### (சோழ மன்னரில் சிலர்)

சோழ நாட்டை யாண்டுவந்த மன்னர்கள் பலரில் மணிமேகலை யானது மனு, முசுகுந்தன், காந்தன், ககந்தன், தூங்கெயி லெர்தறி தொடித்தோட் செம்பியன், கரிகாலன், கிள்ளிவளவன் துணையிளங் கிள்ளியென்ற சிலரைக் குறிக்கின்றது. புறநானூறு, அகநானூறு முதலிய சங்க நூற்களிலும், கலிங்கத்துப்பரணி, விக்கிரம சோழனுலா, குலோத்துங்க சோழனுலா முதலிய பிற்காலத்திய நூற்களிலும் இம்மன்னர்களின் வரலாறு சிற்சில விளங்குகின்றன.

#### 1. மனுச்சோழன்

விஞ்சையனால் மாண்ட காமப்பித்துக்கொண்ட தனது மைந்தன் உதய குமரனைப் புறங்காட்டிவிடுமாறு அரசன் கிள்ளிவளவன் ஆணையிட்ட இடத்து,

"மகனை முறைசெய்த மன்னவன் வழியோர்
துயர் வினையாளன் றோன்றின னென்பது
வேந்தர் தஞ்செவி யுறுவதன் முன்னம்."

(22: 205-7), சுடுகாட்டிலிடுக வென்றனன். இவ்வடிகளில், சோழரின் முன் னவனாகிய மனுவென்ற மகிதலம் போற்றும் வேந்தனை ஆசிரியர் குறிப்பாராயி னர். மனு சோழ அரசர்களின் முந்தியவனென்பதும், பின்னவர் இவன் வழித் தோன்றியவர்களே என்பதும் கலிங்கத்துப் பரணியில், சோழ அரசர் களின் பாரம்பரியத்தைக் கூறுமிடத்தும், விக்கிரமசோழ னுலாவிலும் குறிக் கப்பட்டுள்ளன.

மனுச்சோழனது முழு வரலாறும், பெரிய புராணத்தில் திருவாரூர்ச் சிறப்பைக் கூறுமிடத்து வந்துள்ளது. இம்மனு திருவாரூரைத் தனது ஆட்சித் தலைநகரமாகக் கொண்டிருந்தனன். மண்ணில் வாழ்ந்திருந்த மன்னுயிர்களுக் கெல்லாம் இவன் கண்ணுமாவியும் போன்றவன். விண்ணுளார்கள் மகிழ்ந் திடுமாறு வேள்விகள் பலவுமியற்றியவன். பலராலும் நீதி மனு வெனப் புக ழப்பட்ட கீர்த்தியோன். ஒருகால் மாடவீதியில் தேர்மிசைச் சென்ற மனு வின் மைந்தன் வீதிவிடங்க னென்பான், துள்ளிவந்த புனிற்றிளங் கன்றைக் கொன்றுவிட்டான். காரா விம்மியழுது கண்ணீர்வடித்து மனம்பதைத்து நின்றது. அது கண்டு துயரமெய்திய அரசன், தன் குலத்திற்கு மகனொரு

வனேயுள்ளான் என்பதைப் பாராது, 'அறமுறை அதுவேயாம்' எனத் தனது மகனின் மருமத்திலே தேராழியை ஊர்ந்தனன். மனுவின் தரும எண்ணத்திற்கு மெச்சிக் கருணைத் தடங்கடலாகிய உமாபதியாரும், மன்னனுக்குத் தமது திருக்காட்சியை யளித்து, மாண்ட உயிர்களையு மெழுப்பித் தந்து மறைந்தனர். உலகம் மனுவைப் புகழ்ந்தது.

இச்செய்திகளைக் கணவனைக் கொன்று வீழ்த்திய நெடுஞ் செழியன் முன்னிலையில் கற்புக் கருங்கலமாகிய கண்ணகி,

"வாயிற் கடைமணி நடுநா நடுங்க
ஆவின் கடைமணி யுகுநீர் நெஞ்சு சுடத் தான்றன்
அரும் பெறற் புதல்வனை யாழியின் மடித்தோன்
பெரும் பெயர்ப்புகா ரென்பதே"

(சில 20; 53-6) எனக் கூறுமிடத்தும்;

"கறவை முறை செய்தோன்"

(சில. 23; 58); எனவும்,

"கறவை முறை செய்த காவலன்"

(சில. 29: அம்மானை வரி) எனவும் சிலப்பதிகாரத்தில் வருமிடத்தும் காண்க. விக்கிரமசோழ னுலாவில்,

"மையல்கூர், சிந்தனையாவிற்கு முற்றத்திருத்தேரில்
மைந்தனை யூர்ந்த மறவோனும்"

எனவும் (3: 4); கலிங்கத்துப் பரணியில்,

"அவ்வருக்கன் மகனுகுமனு மேதினி புரந்தரிய
காதலை யாவினது கன்று நிகரென்
றெவ்வருக்கமும் வியப்பமுறை செய்த கதையு"

மெனவும்; குலோத்துங்க சோழனுலாவில்,

"பார்மேல், மருளும் பசுவொன்றின் மம்மர் நோய்தீர
உருளுந் திருத்தேரூ ரூரவோன்"

எனவும் இம்மனுவைக் குறித்து வருவன நோக்குக. மனு, நீதிமுறை கருதி மகனைக் கொன்ற செய்தி யொன்றே மணிமேகலையில் கூறப்பட்டுள்ளது.

இம்மனுச் சோழனும், தரும சாஸ்திரங்களைத் தந்தருளிய மனுவும் வேறானவர்கள். இம்மன்னனது பெருமையை வியந்து,

"கறவைக் கன்று ஊர்ந்தானைத் தந்தையும் ஊர்ந்தான்
முறைமைக்கு மூப்பிளமை யில்"

என்ற பழமொழியும் நவிலுகின்றது. இது பற்றியே, இம்மனு, மனுச்சோழனென்றும், மனுமுறை கண்ட சோழனென்றும், மனுநீதிச் சோழனென்றும் நூற்களில் புகழப்படுகின்றனன்.

2. முசுகுந்தன்

முசுகுந்த னென்னும் சோழ மன்னனைக் குறித்து மணிமேகலையின் முதற் காதையில் குறிக்கப்பட்டுள்ளது. கலிங்கத்துப் பரணியில், சோழ அரசபாரம்பரியம் கூறுமிடத்தில் இம்மன்னனும் கூறப்பட்டுள்ளனன். இம்மன்னனைக் குறித்த செய்திகள் வெவ்வேறு விதங்களாகத் தமிழ் நூற்களில் காணப்படுகின்றன. மணிமேகலையில் முறைப்படி இந்திரவிழாச் செய்தலைக் குறித்து நகர மாந்தர் ஒருங்குடன் கூடி ஆலோசித்த இடத்து,

"வான்பதி தன்னுள்
கொடித் தேர்த்தானைக் கொற்றவன் துயரம்
விடுத்த பூதம் விழாக்கோள் மறப்பின்
மடித்தசெவ்வாய் வல்லெயி றிலங்க
இடிக்குரல் முழக்கத் திடும்பை செய்திடும்"

எனப் பயந்து விழாவை நடத்த வேண்டு மெனத் தீர்மானித்தனர்.

தமது வான்பதியகத்து விழா நிகழாதுபோயிடின், கொடித் தேர்த்தானைக் கொற்றவனாகிய முசுகுந்தனென்பானுக்குத் தீய அசுரர்களால் நேரிட்ட துயரங்களைக் களைந்திட்டதும், வெற்றி பொருந்திய வேலையுடைய மூசுகுந்தனென்னும் மன்னனுக்கு வரும் இடையூற்றை ஒழிப்பாயெனத் தேவர்கோன் ஏவுதலானே, அத் தேவருலகினின்றும் போந்து அக் காண் முதலாகப் பலி கொண்டு, மருவூர்ப் பாக்கமும் பட்டினப் பாக்கமு மென இரண்டு கூறுபட்ட வூர்க்கு நடுப்பட்ட பொது நிலமாகிய நாளங்காடியி லுள்ளதுமான, (சிலப். 5: 59-67 அடியா. உரை,) நாளங்காடிப் பூதம், மடித்த தனது செவ்வாயில் வல்லெயிறுகள்இலங்க இடிக்குரல் முழக்கத்தோடு, இடும்பைகள் பல செய்திடுமென, அம் மக்கள் தமது பதியில் வதிந்து ஆட்சி புரிந்திட்ட கொற்றவனொருவனைக் குறித்தும்; அவனுக்குற்ற துயரை மடித்த செவ்வாயும் வல்லெயிறுகளும், இடிக்குரல் முழக்கமுங் கொண்ட பூத மொன்று காத்த தென்ற செய்தியும் கூறப்பட்டுள்ளன. இங்குக் குறிக்கப்பட்ட மன்னன் முசுகுந்தனென்பதும், அவன் துயருற்ற சமயம் அசுரர்களை யெதிர்த்து அமரர்களைக் காத்த அமய மென்பதும், அடியார்க்கு நல்லாரின் தெளிவான பொருள் விளக்கத்தால் அறியப்படுகின்றன.

முசுகுந்தன், விசும்பகத்துப் பூதத்தின் உதவி பெற்ற விவரம், சிலப்பதிகாரம்—கடலாடு காதையிலும், அடியார்க்கு நல்லாரின் உரையிலும் தெளிவாக உள்ளன. கந்தபுராணத்தில் முசுகுந்தனது வரலாறு முற்றிலும் வேறு விதமாக உள்ளது. அந் நூலின், கந்த விரதப் படலத்திலும், தெய்வயானை யம்மையாரின் திருமணப் படலத்திலும் அதனைக் காண்க. பாகவத புராணத்தில், இக்குவாகுவின் கதை யுரைத்த அத்தியாயத்திலும், முசுகுந்தற் கருள்புரி அத்தியாயத்திலும், முசுகுந்தன், 'வையம் புரக்குந் தனிக் கவிகை மாந்தாதாவின் திருமைந்தன்" எனச் சுட்டப்பட்டுள்ளனன். இந்தும் அம் மன்னனது வரலாறு வேறாகவே உள்ளது கம்பரும் (பால-குலமு 6) மூசுகுந்தன் தேவலோகங் காத்த செய்தியைக் கூறுகின்றனர். கலிங்கத்துப் பரணி,

"பொரு துறைத்தலை புகுந்த முசுகுந்தனிமையோர்
புரமடங்கலும் அரண் செய்து பாந்தபுகழும்".

எனக் கூறுவதும், இரங்கேசவெண்பா,

"மும்மையுலகு முசுகுந்தனைத் துதிக்கும்
எம் மையாட் கொண்ட விரங்கேசர்—செம்மையாய்த்
தோன்றிற் புகழோடு தோன்றுக வஃதிலார்
தோன்றலிற் றோன் றாமை நன்று".

எனக் கூறுவதும் ஒப்பிட்டுக் காண்டற்குரியவை.

மேலுள்ள கதைகளில், முசுகுந்தனது வரலாறு மாறுபட்டுப் பல வகையாகக் கூறப் பட்டுள்ளன. ஆயின், அவன் மனு வழித் தோன்றிய சூரிய குலத்தவனென்பதும்; அவனிகாத்த அதிப னென்பதும்; அசுரரை அடவியில் அடுத்து அம்ரேசனின் அழகிய நாடுகாத்த ஆண்மையோ னென்பதும் எங்கணும் ஒன்றாகவே உள்ளன. மணிமேகலையும் பூதம் பூபாலனுக்குற்ற துயரைப் போக்கிய செய்தியே கூறுகின்றது. அதோடு அப் பூதம், காவிரிப் பூம் பட்டினத்தில் நாளங்காடியில் உள்ளதாகவும் மொழிந்திடுகின்றது. சிலப்பதிகாரமும் இச்செய்தியை இவ்வாறே கூறுவது நோக்குக.

### 3. காந்தனும் ககந்தனும்

மணிமேகலையின் பதிகத்தில்,

"செங்கதிர்ச் செல்வன் றிருக்குலம் விளக்கும்
கஞ்ச வேட்கையிற் காந்தமன் வேண்ட
அமர முனிவ னகத்தியன் றனாஅது
கரகங் கவிழ்த்த காவிரிப் பாவை".

(பதி. 9: 12.) எனச் செங்கதிர்ச் செல்வனது திருக்குலத்தை விளக்குதற்காக நீர் வேட்கை மிகுதியாகக் கொண்ட காந்தமன் என்னும் சோழ அரசன், அமர முனிவனும் அகத்தியனை வேண்ட, அதற்கிசைந்த முனியும் தமது கரகத்தைக கவிழ்த்தலும், காவிரியாகிய மங்கை வெளிப் போந்தன ளெனப்பட்டுள்ளது. நீரின் பெருக்கையும் நாட்டினது வளப்பத்தையும் கருதி இம் மன்னன் இது செய்திருத்தல் வேண்டும்.

"கன்னி யேவலிற் காந்த மன்னவன்".

"மன் மருங்கறுத்த மழுவா ணெடியோன்".

பரசுராமனுக்குப் பயந்து, கணிகை மகன் ககந்தனுக்கு நாடு கொடுத்துத் தான் கரந்து வசித்த வந்த வரலாறும் மணிமேகலையில் குறிக்கப்பட்டுள்ளது. (காதை. 22) பதிகத்தாலும், மேற் குறித்த காதையாலும் காந்தனென்போன் சோழ மன்ன னென்பதும், செங்கதிர்ச் செல்வனின் குலத்தவனென்பதும், இயலிசைத் தமிழ் முனிவரான அகத்தியனை வேண்டிக் காவிரி கொணர்ந்தன னென்பதும், பரசுராமனுக்குப் பயந்து பாரினைப் பரத்தையின் மகனுக்கீந்து வெளிப்புறத்தே தான் சென்றா னென்பதும் அறியக்கிடக்கின்றன.

இவன் சோணாடாண்ட சோழருளொருவ னென்பது கலிங்கத்துப் பரணி அரசபாரம்பரியத்தாலும் விளங்கும். இம் மன்னன் செங்கதிர்ச் செல்வனின் திருக்குலத்தவ னென்பது பதிக அடிகள் கூறுகின்றது. வடமொழியில் (பாரத அரிவமிசம்) சோழர்கள், சந்திர குலத்து யயாதியின் வழி வந்தவராகக் கூறப்பட்டுள்ள தென்பர். தமிழ் நூல்களாகிய கலிங்கத்துப் பரணி, விக்கிரம சோழனுலா, பெரிய புராணம், கம்பராமாயணம் முதலிய பலவும் ஒரு நிகராகச் சோழரைச் சூரிய வமிசத்தவராகவே மொழிதல் காண்க.

(காவிரியின் சிறப்பு)

கஞ்ச வேட்கையோடு காந்தன் வேண்ட, விந்த மால்வரையின் வீர மடக்கிய குட முனி கரகங் கவிழ்த்துக் காவிரி யளித்ததாக அப் புனித நதியின் பிறப்பு மணிமேகலையில் சொல்லப்பட்டுள்ளது. அங்ஙனமே, கலிங்கத்துப் பரணியிலும், 'காவிரிப் புனல் கொணர்ந்த வவனும்' என இம் மன்னன் குறிக்கப்பட்டுள்ளனன். முழங்கும் பனிக் கடலை முகந்துண்ட முனிக்கரசு காவிரியைத் தந்த செய்தி,

"ஆதி மாதவ முனியகத்தி யன்றரு
பூத நீர்க்க மண்டலம் பொழிந்த காவிரி".

எனப் பெரிய புராணத்திலும் (திருநா 2) வருதல் காண்க.

கந்த புராணத்தில் காவிரியாறு தென்னாடு வந்த கதை வேறாக உள்ளது. நிலத்தின் மட்டத்தைச் சீர்ப்படுத்தத் தென்புறத்தே அகத்தியர் வந்த காலத்தில், கைலையங்கிரியோன் காவிரி கொடுத்ததாகவும்; முனிவர் அதனைத் தமது கமண்டலத்தில் கொண்டிருந்த தாகவும்; தூர்வாச முனிவரது புதல்வர்களான வில்வல—வாதாபிகளை அழித்த பிரமகத்திநோய் நீங்குதற்காக அவர் கொங்குநாட்டிலிருந்து கமண்டல நீரைக் கொண்டு முக்கணனை ஊனப் பூசித்து வந்ததாகவும், காழிப்பதியில் மூங்கில் வடிவொடு நோற்றிருந்த இந்திரன், யாழிசைப்பிரியர் நாரதரது மொழிப்படி கும்ப முனியின் கரகங்கவிழ்த்துக் காவிரியை வெளிப்படுத்தித் தனது நறுமணங் கமழும் நந்தவனத்தைத் தழைக்கச்செய்ய எண்ணியதாகவும்; தந்தி முகனும் காக்கை யுருக்கொண்டு குறுமுனியின் கமண்டலத்தைக் கவிழ்த்துக் காவிரியைப் பெருக்கியதாகவும் அங்கு கூறப்பட்டுள்ளன இவ் வரலாற்றைச் சிவப்பிரகாச சுவாமிகளும் தமது பெரிய நாயகியமமை விருத்தத்தில் 'ஒடியோர் காகம் எறுபு கவிழ்த்த ஒருசிறு கரகநீர்தானும்'' என்று குறித்துள்ளார்.

கொங்குமண்டலத்தில் அகத்தியர் தவஞ் செய்தாரென்பது, அம்மண்டல சதகத்தாலும், அம்மண்டலத்தில் அவர் இருந்த நகரம் துடியலூரென்பது துடிசைப் புராணத்தாலும், அவிநாசிப் புராணத்தாலும் தெரியவருகின்றன.

தொல்காப்பியப் பாயிர உரையில் நச்சினார்க்கினியர் பொதியமலையை நோக்கி வடதிசையிலிருந்து வந்த அகத்தியர், "கங்கையாருழைச் சென்று அவர் தரக் காவிரியாரை வாங்கி'' வந்தனரெனக் கூறுவர். கவேரனென்னும் இராஜரிஷி பிரம்மதேவனைக் குறித்துத் தவஞ்செய்து முக்திவழி நாடி நிற்க, அவர் அருளில் விஷ்ணு மாயையைத் தமது அருமைப் புதல்வியாகப்

பெற்ற முக்தியை யடைந்தனரென்றும், பின்பு அக் கன்னி பிரம்மாவின் கட்டளைப்படி நதிவடிவாகிப் பெருகி வந்ததென்றும் ஆக்நேய புராணம் கூறுவதாக மொழிந்திடும் பெரியாரின் விவரங்களை நோக்குக. 'மணிமேகலை' கதை பொதிபாட்டில், விரைந்து வந்த காவிரி மங்கையை எதிர்கொண் டழைத்துச் சம்பாபதி,

"ஆனு'விசும்பி னாகாய கங்கை
வேணவாத் தீர்த்த விளக்கேவா."

எனக் கூறி யழைத்ததாக உள்ளது நோக்குக. கொங்குமண்டல சதகத்தும்,

"சீரார் வளவனிலம் புனனாடாச் செழிப்புறவும்
போரார் வாகதி பெய்துற பாவம் பிரிந்திறவும்
ஏராரும் பொன்னி புவியுள......................."

என உள்ளது. விக்கிரம சோழனுலாவில் குறித்திடும் "தள்ளும் திரைப் பொன்னிதந்தானும்" காந்தனாகவே இருக்கவேண்டும்.

மேற்கூறியவற்றில், ஒரே விடத்துச் சில மாறுபாடுகள் காணப்படுகின்றனவே யன்றிப் பொதுவாகக் காவிரிநதி அகத்தியராலேயே, இத் தென்னாட்டிற்குப் பெருகி வந்ததென்பது மணிமேகலையி லுள்ளவாறே பிறவெங்கு முள்ளது.

(காந்தனும் பரசுராமனும்)

காந்தன், சூரிய குலத்தினரை வேரறுத்திடுவதாகச் சபதங் கொண்டிருந்த மழுவாள் நெடியோன்—அந்தணத் தபசி பரசுராமன் தன்னாட்டை அழித்திட வருதலைத் துர்க்காதேவியால் அறிந்தான். (பரசுராமனின் வரலாறு, அகநா. 220 கூறுதல் காண்க.) தேவியின் கட்டளைப்படி போரையிச்சியாது, தன்னாட்டைவிட்டு வெளியேகத் துணிந்தான். நாடு காப்போரெவரென்பதை நன்கு ஆலோசித்து ஆராய்ந்தறிந்து, அதிவீரனாகிய ககந்தனென்னும் தனது காவற்கணிகையின் காதற் புதல்வனேயெனத் தேர்ந்தான். அரசியலை அவன்பால் ஒப்பிவித்து, "அரசாளுரிமை நின்பாலின்மையின், பரசுராமன் நின்பால் வந்தனுகான்" எனக் கூறி, நீண்ட தமிழால் உலகை யளந்த அமரமுனிவ னகத்தியன்பால் தான் சென்று, துயர் நீங்கு விவவி பெற்று வருமளவும் அவன் பெயரால் ஆண்டிடுமாறு தந்தான். வேற்றுருவோடு வெளியேகி, ஒருவரு மறியாவாறு கரந்துறைந்து காலங்கழிப்பானாயினன். இவன் அகத்தியரிடம் அதிபக்தி வாய்க்கப் பெற்றிருந்தவனென்பது விளங்கும்.

காவற்கணிகையின் மகன் காவலர் குலவுரிமைக்கு அருகனல்லனென்பது அக்காலத்தினர் கொண்டிருந்த கொள்கையாமென்பது, இதனால் தெரிய வருகின்றது மற்றும், காந்தமன்னனும், இவனது வேசிமகன் காந்தனும், அரசர்குலத்தை அடியோடு மொழித்திட வந்த பரசுராமனின் சமகாலத்தவர்களென்பதும் விளங்குகின்றது.

(ககந்தனது ஆட்சி)

ககந்தன் தந்தை தனக்குத் தந்த தாணியைத் தருமந் தவறாது ஆண்டுவந்தான். இவனுக்குப் புதல்வ ரிருவருண்டு, ஒருநாள், காவிரியில் நீராடித்

தன்னந்தனியளாகித் தனது இல்லத்தை நோக்கிக் கற்பரசியாகிய மருதி யென்ற அங்கரத்துமா தொருத்தி வந்து கொண்டிருந்தாள். அது கண்டு காம பரவசனாகி அவளை இச்சித்த தனது இளைய மைந்தனை முறை பிற ழாது அறவழி நின்று அவனிகாத்த ககந்தன், விரும்பிக் கொள்ளவேண்டிய பெருமையைக் கொன்று, நலிந்து கடியவேண்டிய சிறுமையைச் சிறக்கக் கொண்ட புல்லனென்று சினந்து கைவாளால் வெட்டி வீழ்த்தினன். பின்னர் இறக்குனவும் கன்னிமாடத்திருந்து நாட்களைக் கழித்த விசாகை யென்பாளைத் தனது மூத்தமைந்தன், சற்றுமேலாத முறையில் பழிக்குப் பாத்திரனாகிக் காதல்கொண்டன னென்பதறிந்து, கோதிலாக் குணமிகக் கொண்ட கோமான் அவனையும் வாளுக்கு இரையாக்கினன.

இங்ஙனமாகச் செங்கோல் வழுவாது அரசை இக் ககந்தன் நடத்திவந்ததால், இவனது தந்தை கூறிச் சென்றவாறே, காவிரிப்பூம்பட்டினமும், 'காகந்தி' என்ற மறுபெயருங் கொண்டது. கயிலாய நிகண்டாலும் இப் பெயருண்டென்பது தெரியுமென்பர். இவ் வரலாறுகள் மணிமேலையைச் சிறைசெய்த காதையில் காணலாம். பாவைமொழிப்படி பார்த்திபன் காந்தமன், பாரினர் புகழும் பரசுராமர்க்குப் பயந்து, கொள்ளெனக் கொடுத்துக் கொடுங்கானேகிட, தந்தைமொழியைத் தலையிற்றாங்கி கணிகைமகன் பேதையக் ககந்தன், நாட்டைப்பெற்று நலனொடு மாண்டுகண்டது, அறமெனக் கருதி அவனிபுகழ, மக்களைக்கொன்று மாண் பெய்தியதே யாம். இம் மன்னனைப்பற்றிய பிற செய்தியொன்றும் இந்நூலில் தெளிவாகக் காணப்படவில்லை.

---

# "கோபாலன்" கடிதங்கள்

---

V. C. அவர்கட்கு ................21—9—28.

அன்பின் வடிவே! ஆருயிர்த் தோழரே! ஏழைவணக்கம் ஏற்றருள்க. நலம் யாவும்.

தங்கள் பால் விடைபெற்றுப் பிரியாது பிரிந்து சென்ற ஆவணி 30-நாளிற்குப் பின்னர் அடியேன் சின்னாள் நுகர்ந்த இன்பம் என் வாழ்நாளில் என்றுமே மறவாது போற்றும் தன்மைத்து. ஆ! எச்சொற்களைக் கொண்டு என் உள்ளீட்டை,யறிவிப்பேன்? சென்ற ஆண்டு இதே ஆவணியிறுதி புரட்டாசித் தொடக்கத்து இரவும் பகலும் ஏழையர் நிலைமையை, நினைந்து நினைந்து நெஞ்சு நெக்குருகி, அன்னவர் துயரை யடியொடுமாய்க்கத், தன்னலம் விடுத்து அவர் நலம் பேணி, அருளறம் பூண்ட அரும்பெருந்தலைவன் பொறுமை வடிவைக்கண்டு இன்புற்றேன். என்னே! ஆண்டவன் அருட்பெருக்கு! இவ் வாண்டின் அதே ஆவணியிறுதிப் புரட்டாசித் தொடக்கத்து அப் பெருங்கருணைத் திருவள்ளலின் தமிழகத்துத் தலைமையன்பர் இருவரைக் கண்டு உளம்பூரித்தேன். ஒருவர் இந்தியத் தாயையும், அவள் இடையினில் வளரும் செந்தமிழ்ச் செல்வியையும் முன்னைய நிலைக்குக் கொணர முயலும் அன்பும் அமைதியும் அறிவும் ஓர் உருவாயமர்ந்த பெரியார் திரு-வி-க அவர்கள். மற்றவர் அன்பொழுகு நெஞ்சும், அருள் நிறைதரு கண்ணும், புன்முறுவல் பூத்த புனிதச் செவ்வாயுங் கொண்ட ஆர். என். எஸ். அவர்கள். எனது பழந்தமிழானர் பண்பினிற் சிரியர் பழனிக்குமராராம் விழுமிய மதியினரின் கைத் திருமுகங்களைக்கண்டு களித்து வந்த யான் மெய்த் திருமுகத்தைக் கண்டு களிக்கும் பேறு பெற்ற நாளும் அன்றுதான்! நம் தமிழகத்து வழக்கறிஞர் பலருளர். இருந்தும் என்ன? கரந்தைச் சங்கத்துச் சிறந்திடும் அவரை யாவரொப்பார்? காவியுடையரைக் கள்வ ரென்றிகழும் இக் காலத்தே "நேச அடிக"ளைக் கண்டதும் களிப்பும் வியப்பும் ஒருங்கே பெற்றேன். அந்தோ!

* * * *

நீர்வளம் பழுநிய நிலப்பரப்பினும் கார்தவழ் முல்லையும் விண்தொடு குறிஞ்சியுமே கண்ணும் மனமும் ஒருங்கே கவருந்தன்மைய. முத்தலைநகர் நீங்கித் தென்றிசைப் புக்கதும் எத்திசைநோக்கினும் அத்திசையெங்கும் பச்சிலைப் போர்வை மேற்கொண்டு, கார்முகில் தவழ விண்தொட உயர்ந்த மலைகள்! கள்ளியும் குத்துக்குத்தாகவுள்ள இண்டைச் செடிகளும், பருத்து வளர்ந்த மரங்களும், பசும்புல்லும் அவற்றிற்கு அழகு செய்கின்றன. அம்மலைச்சாரல்களிலே கோவலர் ஆனிடைகளை மேயவிடுத்துப் பெருமர நீழலிலே அமர்ந்து கதைபல பேசியும், ஓடியும் குதித்தும் பொழுதுபோக்குகின்றனர்.

மலயத்தோங்கி மதுரையின் வளர்ந்து, புலவர் நாவில் பொருந்திய தென்றல் நலமிகப் பயக்கும் சிலம்பாறகன்றலைப் பெற்றுளிர் மாலிருஞ்சோலை மலையொடு, வாழையும் கமுகும் தாழ்குலைத் தெங்கும், சூழடுத்தோங்கிய தென்னவன் சிறுமலை, அறுமுகச் செவ்வேள் உரையாவினன்குடி, வேனிற்கிழவனோடு வெங்கதிர் வேந்தன், தானலம்பூண்டு கானல் தீச்சொரியும், அன்றைய நாளிலும் அற்பமும் வெப்பம் இன்றி மக்கட்கு இன்பந்தரும் "கோடைக்கானல்" முதலிய கோடுகளில் தாக்குற்று, மெல்லென ஒலிப்ப, அப்பன் மலைச்சாரலிலே மயிலியற் சாயல் மடநடை மங்கையர் பூந்தினைப்புனத்தும்,

வானம் வாய்த்த வரகங்கொல்லேயிலும் கிளிகடிந்து கதிரோம்பி, மலர்ச்சுனே குடைந்தும், பூந்தழை பறித்துப் பொழிலாட்டயர்ந்தும், எதிரொலி கூவி இளேயரொடாடியும் நான் பல கழிப்பரென பண்டைத்தண்டமிழ்ப் பாவலர் பகராநிற்பர். அவ்வகனிலப்பரப்பு இஃதேயோ என இறும்பூதுற்றேன்! "அகப்பொருள்" என்னும் அம் மிகப்பெருவிலக்கணம் இவ்வகனிலப் பரப்பின் நிகழ்வினேக் கொண்டுதான் தோன்றியதோ என அந்நீணெறிச் செலவில் நினேந்துருகிச் சென்றேன். என்னே இயற்கையன்னேயின் எழில் வளர் தோற்றம்! அத்தோற்றம் யாவும் கடவுள் நினேவுதரும் கண்கொள்ளாக் காட்சியன்றே?

* * * *

எனது உளத்தைக் கவர்ந்த தோழர் கி. அ. பெ. வி அவர்களேக் கண்டும் அவர் சொற்பெருக்கைக் கேட்டும் மகிழ்ந்த நாள் அன்றுதான்! அவர் பேச்சு "வெற்றுரை" யென்னுங் கட்டுரை பற்றிதான். அவர் அது குறித்து யாது பேசி முடிப்பரோ என ஐயுற்றேன். கட்டுரை முடிந்தபின்னரன்றே அவரது மதித்திறனின் மாட்சி புலனுயிற்று. அவர் வாழ்க! அறிஞர் ம. ரா. கு அவர்களின் பேச்சு தேனேடு கலந்த தினேமா! "சுகபோகமும், சிவபோகமும்" என்ற தலேப்பே நமது நாவில் நீர் ஊறச் செய்யவில்லேயா? பிறபின்.

தங்கள் மாறு அன்பை நினேந்துருகும்
கோபாலன்.

## தமிழ்த்தாய் வாழ்க

அன்புருவாய அண்ணு!

ஒருகாலத்துத் தங்களது பேரன்பிற்கு உரியவனுக இருந்து பின்பு நீண்ட நாட்களாகத் தங்களால் மறக்கப்பட்டு, அகன்று பரந்த இத் தமிழ்நாட்டில் ஓர் சிற்றூரின் ஒதுக்கில் வாழும் எளியேன் இன்று தங்கட்கு 1921-ல் "எண்ணெய் இயந்திரம்" பழகுவதற்காகத் தாங்களும் வேறு பெரியாரும் இருத்தலால் உயர்வுபெற்ற "..."எனும் புனித இடத்தை யடைந்த "கோபாலன்" எனும் பெயரினன் என அடியனே அறிமுகம் செய்வித்துக் கொள்கின்றேன். சில திங்கட்கு முன்னர் தமிழ்த்தாய் பெற்ற தனிப்பெருமையை யெண்ணி மகிழ்ந்த யான் அக்களிப்பு வெள்ளத்தின் ஓர் திவலேயைத் தங்கட்குக் காட்ட முயலவே இச்சிறு முடங்கலே வரையத் துணிந்தேன்.

நீண்ட நாட்களுக்கு முன்பு நிகழ்ந்த பெருமகிழ்வுதரும் இன்பச் செய்தி சிலநாட்களுக்கு முன்னரே அறியலானேன். மெய்யோ பொய்யோ என ஐயுற்றேன். ஈராண்டுகட்கு முன்னர் சென்னே உயர்திரு..... அவர்கட்கு உரிமையாய் அப் பெண்மணி இதற்குள் எங்ஙனம் நான்முகப் பிரமனுக்கு உரிமையாதல் கூடும்? என்று வியப்பும் உற்றேன். இவ்வாறு ஐயுற்றமைக்கு அடியனே மன்னித்தருள்க. ஆருயிர்ச் சகோதரி, உயர்பெரும் பண்டிதை .........சென்னேச் சருவகலாசாலே "வித்துவான்" வகுப்பில் தேர்ச்சிபெற்ற நற்செய்தி சில நாட்களுக்கு முன்னரே அறிந் தின்புற்றேன். "அடுப்பூதும் பெண்கள்" என்னும் அவலக்கூற்றை மறுத்துப் படிப்போதும் பண்டிதைகளாக முன் வரும் எனது சகோதம் போன்றூர்க்கு எளியனின் வாழ்த்தும் வணக்கமும் உரியதாகுக! தமிழன்னேயின் தனிச் சீர்த்தி வளர்க!

இனி வேறொரு துறையிற் செல்ல முயல்கின்றேன். அஃது துன்ப

வெள்ளத்துறை! ஆம், உலகில் இன்பமும் துன்பதும் மாறி மாறி வந்துகொண்டே இருக்கின்றன அல்லவா? ஆண்டவன் நியதியை எளியோமால் எங்ஙனம் நீக்கி வாழ்தல் கூடும்? ஆருயிர்ப்பெரியார், அன்புகனிந்த வடிவினர், கலங்கமற்ற உள்ளத்தார் ஸ்ரீமான் அப்பாய் நாயுடுகாரவர்கள் சில நாட்களாக உடல் நலம் இழந்து வருந்துவதாக அறிகிறேன். இச் செய்தி ஏழை நெஞ்சை இன்னலுள் ஆழ்த்தியது. அவருடைய ஒப்பற்ற நட்பு எளியேற்கு வாய்த்தமையே ஒரு பெரிய பேறு எனக் கருதி வாழ்பவன் யான். நிலப்பரப்பால் நெடுந்தூரம் இருவேமும் பிரிந்து வாழினும் அன்பிற் தொடர்பால் மிக அண்மிய ராவோம். இக்கடிதம் தங்கள் கரம் சேர்வதன் முன்னரே அவர்கள் உடல் நலமும் இன்பவாழ்வும் பெற்றிருப்பார்கள் என்று கருதுகின்றேன். பதிற்கடிதம் வேண்டுமென வரையேன்; அஃது தங்கள் திருவுள்ளம்.

தங்கள் அன்பிற்குரிவனுயிருந்த
கோபாலன்.

தமிழ்த்தாய் வாழ்க

அரும்பெறல் மைத்துனரவர்களே!.................................................

நலம். நலமே மல்குக.

1930-ம் ஆண்டு............தங்கள் மெய்த்திருமுகம் கண்டு களிப்புறவும், அன்புரைகள் கேட்டு மகிழ்வுறவும் ஆனேன். பின்னர் சில திங்கள்வரை தங்கள் கைத்திருமுகம் பெற்று எளியனின் உளமும் விழியும் ஒருங்கே இன்புறலாயின. அதன் பின்னர் அவ்விருபேறும் இழந்தேன். இவ்வாறுதற்கு ஏது யாதோ அறியேன். அன்பு நிறைந்த உள்ள முடையார்க்குக் கைத்திருமுகமும் மெய்த்திருமுகமும் காணுவழியும் அவ்வன்பு குறையவோ மறையவோ இயலாதென்று தாங்கள் கருதலாம். "புணர்ச்சி பழகுதல் வேண்டா உணர்ச்சிதான், நட்பாங் கிழமை தரும்" என்ற அப்பெரு நாவலரின் திருவாய் மொழிக்கு இலக்கியமானோர் நம் நாட்டில் பலர் இருக்கலாம். ஆனால் தங்கள் கடிதம் பெறுமையின் எனதுள்ளம் புண்பட்டு நைகின்றது. பெரியார் பலரொடு ஊடாடிப் பழகும் பேறு பெறுதற்குரிய வகையின்றிச் சிற்றூரில் தனித்து வாழும் அடியேன் தங்களை என்றும் மறந்தவனல்லன்.

உண்மை குறைந்து பொய்மை தாண்டவமாடும் இந்நாளில், சில திங்களாக அடியேன் சமாசாரத் தாள்களை விரும்பிப் படிப்பதில்லை. அதனால் மகிழ்வளிக்கும் ஓர் செய்தி-தமிழ்த் தாயின் தவச்செய்தி-அது நிகழ்ந்து திங்கள் பலவாயினும் சில நாட்களுக்கு முன்னரே அறிந்தேன். உலகிலுள்ள நாட்டரசிகள் பலரிலும் நமது பாரத அன்னையே சீரிழந்து பொலிவிழந்து சிறுமையுற்று வருந்துகிறாள். அவள் பெற்ற மொழியரசிகள் பலரிலும் நமது தமிழரசி "தாயைப்போல பிள்ளை" என்னும் பழமொழிக்கு எடுத்துக் காட்டாக இருக்கின்றாள்! மேன் மக்கள் சிலர் உழைப்பால் இக்குறை சிறிது சிறிது தவிர்ந்துவரும் தமிழன்னையின் திருமுகமண்டிலம் இன்று முழுப்பொலிவுடன் விளங்குகின்றது! இப்பொலிவிற்கு ஏதுவாய அருமைச் சகோதரி........................இருபெருஞ் செல்வமும் எய்திவாழ இறைவன் திருவருளை வழுத்துகின்றேன். இத்துடன் வைத்துள்ள இச்சிறு கடிதத்தை எனது சகோதரிபால் சேர்ப்பித் தருள்க.

தங்கள் அன்பிற்குரிய
கோபாலன்.

# விசித்திர விநோதம்



நீதிபதி:—"உனக்கு வக்கீல் ஒருவரும் தேவை யில்லையா?"

கைதி:— "வக்கீல் தேவையில்லை. இரண்டு நல்ல சாட்சிகள் மாத்திரம் பார்த்துக் கொடுத்தீர்களானால் உங்களுக்குக் கோடி நமஸ்காரம்."

* * *

இன்ஸ்பெக்டர்:— உங்கள் மூன்றுபேரில் அவர் வீட்டில் கன்னம் வைத்தவர் யார் என்றார்.

திருடர்:—நாங்க மூன்று பேருமல்ல; பெருச்சாளிஜயா.

* * *

தகப்பன்:—"பிரயாசம் எடுத்துக்கொண்டால் மனிதனால் கூடாதகாரியம் ஒன்றுமில்லை."

பையன்:—"அப்பா! பற்பசை ட்யூப் இருக்குதோ இல்லியோ அதை நன்றாய் நசுக்கியெடுத்த பின் பசையை உள்ளே திரும்ப செலுத்திக் காட்டுங்களேன் பார்க்கலாம்."



* * *

ஒருவன் கடையில் காலணாவுக்கு தம்படி கொடுவென்றான்.

கடைக்காரன்:—ஒரு தம்படி கொடுத்தான்.

என்னய்யா காலணாவுக்கு ஒரு தம்படியா வென்றான்.

கடைக்கா:—நீ காலணாவுக்கு தம்படிதானே கேட்டாய்.

தகப்பன்:—டே, பூசனிக்காய் சாப்பிடாதே! உடம்புக்குச் சளி சுரம் வந்து விடும்.

பையன்:—எனப்பா நம் பக்கத்து வீட்டில் டாக்டர் இருக்கிறாரே.

சுப்பன்:—தாத்தா! இன்னிக்கி இன்னொரு கதே சொல்லு!

தாத்தா:—நேத்திக்கித்தான் மயில்ராவணன் கதை சொன்னேன். இன்றைக்கு ஒன்று வேண்டுமா? நேத்திக்கி சொன்ன கதை திரும்பவும் நீ சொல்லு பார்க்கலாம். உனக்கு ஞாபக சக்தியிருக்கா?

சுப்பன்:—இதோ கேளு! ஒரே ஒரு ஊருலே மயில்ராவணன் என்னு ஒத்தன் இருந்தான். அவன் அடிக்கடி குயில் ராவணனோடு சண்டே போட்டான். உடனே ரயில் ராவணன் அங்கே வந்து அவனே புகைவண்டியில் ஏத்திக்கொண்டு ஜெயில் ராவணங்கிட்டே கொண்டுவிட்டு சிறையில் அடைத்துவிட்டானாம்!

***



பெருத்த சரீரமுடையவர்:— இந்தப்பா! அப்படி கொஞ்சம் நில்லு. அதோ வரானே என் கடன்காரன் சவ்கார் அவன் போரவரையிலும் உன் பின்னாலே ஒளிஞ்சுக்கிறேன்!

***

வைத்தியர்:—"நீ மாத்திரம் முன் என் பேச்சைக் கேட்டிருந்தாயானால் இந்தக் கஷ்டம் உனக்கு வந்திருக்காது".

மற்றவன்:— "நீங்கள் சொல்வது உண்மைதான். உயிரோடிருக்கப் போய்த்தானே இந்தக் கஷ்டமெல்லாம்."



பாட்டி:— அடி லீலாவதி! அப்பொழுது பிடித்து நான் பார்த்துக் கொண்டிருக்கிறேன். பாடும் பாடும் என்று நினைத்தேன். நேற்று ருக்மணி வீட்டிற்குச் சென்றிருந்தேன். அவளும் இதைப்போல் எதையோ அமுக்கிக் கொண்டிருந்தாள். அது பாடினது, இது ஏன் பாடவில்லை. கெட்டு விட்டதா?

லீலாவதி:— பாட்டீ! அது ஹார்மோனியம். அதனால் பாடிற்று. இது டைப் மிஷின்; இது பாடாது. ஏதாவது எழுத வேண்டுமானால் இதில் அடித்தால் எழுதும். இதில் எழுத்து தான் இருக்கிறது. சங்கீத மில்லை.

பாட்டி:—ஆனால் என் தலையெழுத்து இதில் இருக்கிறதா சொல்லேன்.

***



ஒருவர் ஒரே கோழி கூடு ஒன்று கட்டிக் கொடுக்க ஒரு ரூபாய் கூலி பேசியிருந்தார். அவன் அந்த வேலைக்கு ஒரு ஆள் அமர்த்திவிட்டு மேல் பார்த்துக் கொண்டிருந்தான்.

வீட்டெஜமான்:— "நீ அந்த ஆளுக்கு என்ன கூலி பேசியிருக்கிறாய்?"

வேலையாள்:— "பதினைந்தணா.

வீட்டெஜமான்:— "பதினைந்தணாவா? நான் உனக்கு ஒரு ரூபாய் தானே கூலி கொடுப்பதாகச சொல்லி யிருக்கிறேன".

வேலையாள்:—"எஜமானே, எனக்கு இரண்டணா கிடைத்தால் போதும். இன்று முழுவதும் நான் அவனுக்கு எஜமானாயிருந்து வேலை வாங்கிக் கொண்டிருப்பேன். பாருங்கள்."

***

உபாத்தியாயர்:—மனிதனுக்கு கடவுள் ஆறறிவை ஏன் படைத்தார்.

மாணாக்கன்:—ஐந்தறிவு போக ஓரறிவு எந்தெந்த உயிர் காக்குக் கினிமையோ அதை வுண்ண.

***

பட்டிக்காட்டான்:—சாமி! உங்க கடையிலே முக்காருவா விளக்கு இருக்குதா?

கடைக்காரன்:—இருக்குடா! எத்தனை வேணும்.

பட்டிக்காட்டான்:—ஒன்று என்ன விலை?




ரப்பர் உடை:—பாரவே என்னுமிடத்தில் வசிக்கும் மக்களில் பலர் ரப்பர் உடைகளைத் தரித்து வருகிறார்களாம்.

***

நெல் விதைக்க ஆகாய விமானம்:—கலி போர்னியாவில் நெல் விதைக்க ஆகாய விமானங்களையே உபயோகிக்கின்றனராம்.

***

200 வருட க்ஷவரக் கத்தி:—ஜெர்மனியில் மிஸ்டர் போலண்டு என்பவரிடம் ஒரு க்ஷவரக் கத்தி யிருக்கிறது. அது 200 வருஷங்களாக உபயோகத்திலிருக்கிறதாம்.

***

சாவி கொடுக்காமலே ஓடுங் கடிகாரம்:—ஆஸ்திரியாவில் இருக்கும் ஒரு கடிகாரம் சாவி கொடுக்காமலிருந்தும் 60 வருடங்களுக்கு மேலாக ஓடுகின்றதாம்.

***

87 வயது கிழவிக்கு 129 பிள்ளை பேரன்மார்:—ஹூலாக் என்னுமிடத்தில் வசித்துவரும் 87 வயதுள்ள கிழவி யொருத்திக்கு 129 பிள்ளைகள், பேரன் பேத்திகள் இருக்கின்றனராம்.

***

மனிதர் வசிக்கக்கூடிய எறும்புப்புற்று:—தென்னாப்பிரிக்காவில் இருக்கும் ஒரு எறும்புப்புற்று மனிதர்கள் வசிக்கக்கூடிய அவ்வளவு பெரிதாக இருக்கிறதாம்.

***

மீன் பிடிக்க காட்டுச்சிலந்தி கூடு:—மத்திய ஆப்பிரிக்காவில் உள்ளவர்கள் காட்டுச் சிலந்தி கூடுகளையே மீன் பிடிக்கும் வலையாக உபயோகிக்கின்றனராம்.

***

மீன் வயிற்றில் பெட்ரோல் டின்:—ரோமாபுரிக் கருகில் பிடிக்கப்பட்ட ஒரு மீன் வயிற்றில் ஒரு பெட்ரோல்டின் காணப்பட்டதாம். அது கெட்டுப் போகாமல் அப்படியே இருக்கிறதாம்.

***

ராகாலாபனை செய்யும் 8 மாதக் குழந்தை:—கான்ஸாஸ் நகரில் பிறந்த பில்ஜோ என்னும் பெயருடைய குழந்தை, பிறந்த ஐந்தாவது மாதத்திலேயே சீட்டி அடித்ததாம். எட்டாவது மாதத்தில் ராகாலாபனை செய்கிறதாம்.

***

டெலிபோன் மூலம் மண ஒப்பந்தம்:—லண்டனிலுள்ள ஒருவர் அமெரிக்காவிலுள்ள ஒரு பெண்ணோடு டெலிபோன் வாயிலாக மண ஒப்பந்தப் பேச்சு நடத்தி விவாகஞ் செய்துகொள்ள முடிவு செய்திருக்கிறாராம். இவ் விவாகப் பேச்சுக்கு டெலிபோன் செலவு 60 பொன்னாயிற்றாம்.




உலக முழுதும் ஒருமணி நேரத்தில் 1,14,000 தந்திகள் கொடுக்கப் படுகின்றனவாம்.

* * * *

லிங் என்னும் ஒருவகை மீன் ஒரே தடவையில் 26,00,000 முட்டைகள் இடுவதாகக் கூறப்படுகிறது.

* * * *

ஆப்ரிக்கா வாசியான ஸ்ரீமதி டாட்லாக்கி லிண்டன் என்பார், குஸ்தி என்னும் சிலம்ப விளையாட்டுப் பந்தயத்தில் தன்னிகரற்று விளங்குகிறாராம்.

* * * *

உலகில் ஒருமணி நேரத்தில் 1200 தம்பதிகள் விவாகஞ் செய்து கொள்வதாக ஒருவாறு கணிக்கப் பட்டிருக்கிறது.

* * * *

பிரிட்டனில் உள்ள மனநோய் சிகிச்சை சாலைகள் எல்லா வற்றிலும், சினிமாபடக் காட்சி சாலைகள் ஏற்படுத்தப் பட்டிருக்கின்றன.

* * * *

சென்ற மகா யுத்தத்தில் ஜெர்மனியில் மட்டும் 19 லட்சம் பேர் காயமடைந்தனராம். அவர்களைச் சர்க்காரே இன்னமும் ஆதரித்து வருவதாகக் கூறப்படுகிறது.

* * * *

நமது நாட்டில் குதிரைப் பந்தயத்தில் ஏராளமான பொருளைச் செலவழிப்பதுபோல், சயாமில் மீன் சண்டையில் மிகுதியாகப் பணத்தைச் செலவு செய்கிறார்களாம்.

* * * *

உலகம், தற்சமயமுள்ள போக்கிலேயே போய்க்கொண் டிருக்குமானால், 2139-ம் வருடத்திற்குள் உலகிலுள்ள எல்லா மக்களுக்கும் பைத்தியம் பிடித்து விடுமாம்.

* * * *

நார்வே என்னுமிடத்தில் புதிதாகக் கண்டு பிடிக்கப்பட்டிருக்கும் ஒருவகையான காகிதங்களை அப்படியே ஒழுங்காகக் கிழித்தால், கயிறாகவும் உபயோகப் படுத்தலாமாம்.

* * * *

லண்டன்மா நகரில் 4979 பொதுஜன விடுதிகள் இருக்கின்றனவாம்.

* * * *

பிரான்ஸில் யாத்திரை போல யுத்த களங்களுக்குச் செல்லும் வழக்கம் இப்போது அதிகமாகிவிட்டது.

* * * *

ஜப்பான் டாக்டர் ஒருவர், பெரும்பாலும் மெலிந்த தேகமுடைய மக்களே குற்றஞ் செய்பவர்களாக இருக்கின்றனர் எனக் கூறுகிறார்.

# ஆசிரியர் குறிப்புக்கள்

## காங்கிரஸ் பொன்விழா

சென்றமாத இறுதியில் நாடெங்கும் காங்கிரஸ் பொன்விழா வெகு சிறப்பாக நடைபெற்றது. இந்திய மக்களின் தியாக வடிவாய்—உரிமை வேட்கையின் நிலைக்களமாய் விளங்கும் அகில இந்திய தேசிய காங்கிரஸ் மகாசபையின் பொன்விழாவைச் சாதி சமய வேற்றுமையின்றி எல்லாரும் போற்றிக் கொண்டாடியது குறிப்பிடத்தக்க நற்செய்தியாகும். காங்கிரஸ் பொன்விழாவைக் கொண்டாடிவிட்ட அளவில் நமது கடமை தீர்ந்துவிட்டதாக யாரும் எண்ணிவிடக் கூடாது. நமது சுதந்தர வேட்கை நிறைவேறும்வரையில் நாம் காங்கிரஸையே உயிர்நாடியாக மதித்து அதன் ஆணைவழி நிற்கவேண்டும். சென்ற மாதம் நடைபெற்ற காங்கிரஸ் பொன்விழாவில் நாட்டு மக்கள் காட்டிய உற்சாகத்தை அரசாங்கத்தார் கவனிக்கவேண்டும் என்று எடுத்துக் காட்ட விரும்புகின்றோம்.

---

## சங்கீதச் சீர்திருத்தம்

சென்னைச் சங்கீதக் கழகம் 1928-ம் ஆண்டில் நிறுவப்பட்டது. அது கருநாடகச் சங்கீதத்தை வளர்க்க அருந்தொண்டாற்றி வருவதை எல்லாரும் நன்கு அறிவர். அதன் ஆண்டு மகாநாடு கிறிஸ்மஸ் பண்டிகையின்போது ஆரம்பமாயிற்று. மகாகனம் ஸ்ரீநிவாஸசாஸ்திரியார் இம்மகாநாட்டைத் திறந்து வைத்தார். அப்போது அவர் சங்கீத வித்துவான்களுக்குச் செய்த உபதேசம் வெகு முக்கியமானது. தென்னிந்திய சங்கீத வித்துவான்கள் சாஸ்திரீய முறையின் பேரால் கணக்குகளில் கருத்தைச் செலுத்துகிறார்களேயொழியச் சாமானியர்களும் கேட்டு ரஸிக்கும் ரீதியில் பாட விரும்புகின்றார்கள் இல்லை என்பது பிரசித்தம். மகாகனம் சாஸ்திரியார் இம் முறையை விரும்பவில்லை. "சாமானியர்கட்கு உணர்ச்சி தோன்றும் வகையில் வித்துவான்கள் பாட வேண்டும். வித்துவான்கள் சாஸ்திர நுட்பங்களிலேயே கவனத்தைச் செலுத்துவதால் சங்கீதத்தைக் கேட்டு அநுபவிக்க வந்திருக்கும் சாமானியர்களை மறந்து விடுகின்றார்கள்" என்று உதாரணங்களுடன் அவர் எடுத்துக் காட்டியதைச் சங்கீத வித்துவான்கள் நன்கு கவனிக்க வேண்டும் என்று ஆசைப்படுகின்றோம். மேலும் கணக்கற்ற சங்கதிகளைப் போட்டுப் பாடுவதையும் சாஸ்திரியார் விரும்பவில்லை. 2 அல்லது 3 சங்கதிகளுக்கு மேல் போவது கேட்பவர்களை இம்சிப்பதாகும் என்பது மகாகனம் சாஸ்திரியார் அபிப்பிராயம். கேட்போர் ரஸிக்குமாறு பாவத்துடன் பாட வேண்டும் என்று அவர் கூறியதை நாம் மனப்பூர்வமாய் ஆதரிக்கின்றோம். சங்கீதம் கேட்கும் சாமானிய மக்கட்கு அவர் மூன்றாவது வகுப்பு ரயில் பிரயாணிகளை உவமையாகக் காட்டியது வெகு பொருத்தமாயிருந்தது. ரயில்வேகாரர்களுக்கு அதிக வருமானம் கொடுப்போர் மூன்றாம் வகுப்புப் பிரயாணிகளே. ஆனால் அங்கே அவர்கட்கு வேண்டிய சௌகரியங்கள் செய்யப் படுவதில்லை. இது போலவே சங்கீத வித்வான்களும் சாமானிய மக்களின் உணர்ச்சியை மதிப்பதில்லை என்று

கனம் சாஸ்திரியார் கூறிய புகார் புஷ்டி வாய்ந்ததாகும். இச் சமயத்தில் இன்னொரு முக்கிய விஷயத்தையும் சங்கீத வித்வான்களுக்கு நாம் எடுத்துக் காட்ட விரும்புகின்றோம். அவர்கள் சாஹித்திய விஷயத்தில் வடமொழிக்கு அளிக்கும் மதிப்புத் தமிழ் மொழிக்கு அளிப்பதில்லை. இது மிகவும் வருந்தத்தக்கது. தமிழ் மக்களின் இசைச் செல்வம் இருந்தவிடம் தெரியாமல் மறைந்து மண்ணுக்கும் முறையிலேயே பெரும்பாலான சங்கீத வித்வான்கள் நடந்து வருகிறார்கள். கனம் ஸ்ரீநிவாஸ சாஸ்திரியாரும் தமிழ்ப் பாட்டுக்களுக்கு முதன்மை கொடுக்க வேண்டியது அவசியம் என்று எடுத்துக் காட்டியிருப்பதைச் சங்கீத வித்வான்கள் கவனிக்க வேண்டும். பாவம் நிறைந்த வடநாட்டுச் சங்கீதம் ஆதிக்கம் பெற்று வரும் இக் காலத்தில் கருநாடகச் சங்கீத வித்வான்கள் கருநாடகப் போக்கிலேயே காலங்கழிப்பது அறிவுடைமை ஆகாது. எனவே சாமானியர்கட்குச் சுவை தோன்றுமாறு பாட முயல்வதோடு தமிழ்ப் பாட்டுக்களுக்கு முதன்மை கொடுக்க வேண்டும் என்று மீண்டுமொருமுறை வற்புறுத்துகின்றோம்.

---

## சமயத்தால் சகோதரத்துவம்

மக்களிடம் குடிகொண்டிருக்கும் விலங்கு நீர்மையைப் போக்கி உயர் குணங்களை வளர்க்கவே சமயங்கள் தோன்றின. பல்வேறு சமயங்களும் அன்பையும் தியாகத்தையும் அடிப்படையாகக் கொண்டு விளங்குவதே இதற்குத் தக்க சான்றாகும். ஆனால் சமயங்களின் செலவாக்கு நடைமுறை வாழ்க்கையில் வேறு மாதிரியில் மாறிக் கிடப்பது கண்கூடு. "எங்கள் சமயம் உயர்ந்தது; உங்கள் சமயம் தாழ்ந்தது" என்ற போராட்டம் எங்கும் நிலவி வருகிறது. சமயங்களின் பேரால் எத்தனை கொலைகள் நடந்திருக்கின்றன—இன்றும் நடந்து கொண்டிருக்கின்றன ! நமது நாட்டில் சமயங்களின் பேரால் உள்ள வேற்றுமைகள் எண்ணிலடங்கா. சமயங்களின் அடிப்படை நோக்கம் ஒன்றாயிருக்கையில் புறத்தோற்றங்களைக் காரணமாகக் கொண்டு சண்டை போட்டுக் கொள்ளுதல் அறிவுடைமை அன்று என்ற அபிப்பிராயம் நாளுக்கு நாள் வலிமை அடைந்து வருகின்றது. உலக சர்வ மத காங்கிரஸ் உலகிலுள்ள மதங்களின் யோக்கியதாம்சங்களைக் கண்டு மக்கள் வாழ்க்கையைச் செழுமை செய்யவே தோன்றியது. இந்தச் சர்வமத காங்கிரஸ் ஜூலை மீ லண்டனில் நடைபெறும். அடுத்த ஆண்டுக் கூட்டங்கள் முறையே இந்தியாவிலும் ஜப்பானிலும் நடைபெறும் என்று தெரிகிறது. உலக சர்வமத காங்கிரஸின் நிர்மாணக் காரியதரிசியான மிஸ்டர் ஆர்தர் ஜாக்மான் என்பவர் சென்னைக்கு வந்திருந்தார். அவரை ஒரு செய்தி நிருபர் பேட்டி கண்ட போது அறிவித்த விஷயங்கள் குறிப்பிடத்தக்கவை ஆகும். சர்வமத காங்கிரஸ் இதுகாறும் பல்வேறு மதங்களின் தாரதம்மியங்களை ஆராய்ந்து முடிவு கட்டுவதிலேயே காலங்கழித்து வந்தது என்றும், இனிமேல் உலகப் பிரச்சினைகளைத் தீர்ப்பதற்கு மதங்கள் எவ்வாறு பயன்படும் என்பதையே ஆராயும் என்றும் அவர் கூறினார். இஃது ஒரு நற்செய்தி ஆகும். லண்டனில் நடைபெறப் போகும் சர்வமத காங்கிரஸ் "சமயத்தின் மூலம் உலகில் சகோதரத்துவத்தை அடைவது" என்பதையே முக்கியமாக ஆராய்ந்து விவாதிக்கும் என்றும் அவர் கூறினார். ஆன்ம லாபத்

திற்கு இடங் கொடாத அச்சம், குரோதம் முதலியன உலக சகோதரத்துவத்திற்குத் தடையாக இருக்கின்றன. இவை யுத்தங்களை உண்டாக்குகின்றன. கல்வி பொருளாதார நிலைமை மேம்பாடு, நாடகக் கலை, சங்கீதக் கலை, பெரியார் உதாரணம், உலகில் உத்கிருஷ்ட மானவற்றைப் பற்றிய ஆழ்ந்த சிந்தனை, ஆன்ம அநுபவங்களை ஒருவருக்கொருவர் எடுத்து உரைத்துக் கொள்ளுதல், சத்தியம், அழகு, தெய்விகத் தன்மை முதலியவைகளைப் போற்றிப் பின்பற்றி நடத்தலே சகோதரத்துவ வளர்ச்சிக்கு வழியாகும் என்று மிஸ்டர் ஆர்தர் ஜாக்மான் எடுத்துக் காட்டினர். சர்வமத காங்கிரஸ் இம்முறையில் சகோதரத்துவத்தை வளர்க்க முயல்வதை நாம் பாராட்டுகின்றோம். உலக முழுவதிலும் ஒரே மதக் கொள்கையும் பொருளாதாரச் சமத்துவமும் நிலவுமாறு சர்வமத காங்கிரஸ் தொண்டாற்றவேண்டும் என்று நாம் விரும்புகின்றோம். ஒரே மதத்தை பரப்பச் சர்வமத காங்கிரஸும், பொருளாதாரச் சமத்துவத்தை நிலை நாட்டச் சர்வ தேச சங்கமும் முயல வேண்டும். இரண்டும் பரஸ்பரம் ஒத்துழைக்க வேண்டும் என்று ஆசைப்படுகின்றோம்.

---

## "நற்செய்தி மகாநாடு"

சென்ற மாதம் சென்னைச் சிந்தாதிரிபேட்டையில் "நற்செய்தி மகாநாடு" என்ற பெயரால் புதிய கூட்டம் ஒன்று நடைபெற்றது. ஸ்ரீமான்கள் திரு. வி. கலியாணசுந்தர முதலியாரவர்களும், கா. நமச்சிவாய முதலியாரவர்களும் நற்செய்தி பற்றிச் சொற்பொழிவு நிகழ்த்தினர்கள். ஸ்ரீமான் திரு. வி. க. அவர்கள் "அரசியலுலகத்திற்குத் தமிழன்னையின் நற்செய்தி" என்பதுபற்றிப் பேசியபோது தமிழரின் அரசியல் தத்துவங்களை வெகு தெளிவாக எடுத்துக் காட்டினர். அவர் அரசியலைக் குடியாட்சி, கோனாட்சி, குடிக்கோனாட்சி என்று மூன்று வகையாகப் பகுத்தார். இம் மூன்று அரசியல் முறையும் காலத்துக்குத் தக்கவாறு மாறும் என்றும் குறிப்பிட்டார். இம் மூவகையாட்சிகளில் எதுவாயிருந்தாலும் அற ஆட்சி ஆக இருக்கவேண்டும் என்பது தமிழன்னை அரசியலுலகத்திற்கு அனுப்பும் நற்செய்தியாக முடிவு கட்டினர். இல்லாண்மை, அபேதவாத முதலியன பற்றி ஸ்ரீமான் முதலியாரவர்கள் வெளியிட்ட கருத்துக்களும், மேற்கோள்களும் கற்றோர்க்கு நல் விருந்தாகும் என்பதில் சிறிதும் ஐயமில்லை. ஸ்ரீமான் கா. நமச்சிவாய முதலியாரவர்கள் தமிழன்னையின் சீர்கேட்டையும், தமிழரின் பிற்போக்கையும் எண்ணி மனம் வருந்தினர். "தமிழ் நூற்களைத் தமிழர் கற்றல் வேண்டும். அவற்றிலுள்ள நுட்பங்களை வெளிப்படுத்தவேண்டும். அப்பொழுதுதான் தமிழ்மொழி வளரும். கல்வி உலகத்திற்குத் தமிழ்த்தாய் அனுப்பும் நற்செய்தி இதுவே" என்று பெரியார் நமச்சிவாய முதலியார் கூறியதை எல்லாத் தமிழ் மக்களும் கடைப்பிடிக்க வேண்டும் என்று கேட்டுக் கொள்ளுகின்றோம்.

---



# லக்ஷ்மிபாய்

அல்லது

# ஆற்காட்டு முற்றுகை.

(எம். லக்ஷ்மண முதலியார்.)

(478-ம் பக்கத் தொடர்ச்சி.)

## இரண்டாம் அத்தியாயம்.

"ஹுசேன், இந்தப் பெண் யார்?" என்று அவன் மூர்ச்சை தெளிந்த பிறகு விசாரித்தார் ராபர்ட் கிளைவ் துரை. இந்தக் கேள்விக்குப் பதில் சொல்வதற்கு முன் ஹுசேன் லக்ஷ்மிபாயின் முகத்தை உற்று நோக்கினன். அவளது சுந்தர வதனம் பனியால் மறைக்கப்பட்டு மங்கலாய்ப் பிரகாசிக்கும் சந்திரனைப் போலிருந்தது.

"துரையே, உங்களுக்கு அதிக கஷ்டத்தை உண்டுபண்ணி யிருக்கின்றேன். மன்னிக்கவேண்டும்." என்றான் பிறகு துரையின் பக்கம் திரும்பியவாறு.

"ஆல்ரைட், ஹுசேன், டெல் மி வாட் ஹாப்பெண்ட் (Tell me what happened). ஜல்தி. ஸௌத் வெஸ்ட்டில் எனிமீஸ் பலமாய்த் தாக்குகிறார்கள்" என்று துரிதப்படுத்தினார் துரைவாள்.

"இந்தப் பெண்ணைப்பற்றி பிறகு தெரிவிக்கின்றேன். முதலில் நான் உளவு பார்க்கச் சென்ற விஷயத்தைச் சொல்லி விடுகிறேன்.

"ரைட்டோ."

"எதிரிகளுக்கு நாளைக்கு (அதாவது அக்டோபர்மாதம் 24-தேதி) புதுச்சேரியிலுள்ள பிரெஞ்சுக் காரர்களிடமிருந்து இரண்டு பெரிய பீரங்கிகளும் (18 pounders) ஏழு சிறிய பீரங்கிகளும் வரப்போவதாக எனக்கு எதிரியின் கூடாரங்களில் செய்தி கிடைத்தது. அது சம்பந்தமாக இன்னும் ஏதாவது உளவு கிடைக்குமாவெனப் பார்ப்பதற்காக நடுச் சாமத்தில் வழக்கம்போல் கயிற்றினால் மதிலைக் கடந்து பகைவரின் கூடாரம் சென்றேன். அங்கே ஒரு விசேஷம் கேள்விப்பட்டேன். அதுதான் இந்தப் பெண்ணைப் பற்றியது ..............................."

"கோ ஆன் (Go on)"

"சாத்தாரா என்ற மஹா ராஷ்டிர ராஜதானியிலிருந்து இந்த இளவரசி யும் அவள் தமயனை உத்தமஜீ என்ற இளவரசனுமாக தஞ்சாவூர்க் கோட்டைக்குப் போய்க்கொண்டிருந்தார்களாம். நவாபு சேனையில் உள்ள சில துஷ்டர்கள் இவர்களிருவரையும் வழிமறித்துப் பிடித்து வந்து தனித் தனியான இடங்களில் சிறை வைத்திருந்தார்கள். இந்த அடாத செய்தி யைக் கேட்டவுடன் என்மனம் கொதித்தது. உடனே இவர்களை விடுவிக்க வேண்டுமென்று உறுதி செய்துகொண்டேன். உத்தமஜீயை விலங்கிட்டு வைத்திருந்த இடம் முதலில் எனக்கு அகப்பட்டது. அங்கே காவலில் இருந்த முகம்மதியனை சண்டை செய்து கட்டிப் போட்டுவிட்டு உத்தம ஜீயை விடுவித்தேன். பிறகு இருவருமாய்ச் சென்று இந்தப் பெண்ணை விடு வித்தோம்..............." என்று நடந்தது முழுவதும் விவரமாய்ச் சொன்னான்.

இதற்குள் மூர்ச்சையாய்க் கிடந்த லக்ஷ்மிபாய் சுவாதீனம் அடைந்தாள்.

"அண்ணா, அண்ணா, உத்தமஜீ நீ எங்கே இருக்கின்றாய்? ஐயோ! நீ அந்த பாதகர் கையில் அகப்பட்டுக் கொண்டாயோ! ஐயோ! அண்ணா!" என்று அலறினாள்.

"அம்மா, பயப்படாதே. நாங்கள் இருக்கிறோம், நீ பயப்படாதே." என்று க்ளைவ் துரை இந்துஸ்தானியில் அவளுக்குப் பதில் சொன்னார். ஹுசேன் ஒன்றும் பேசவில்லை. அவன் ஆவி அவன் சரீரத்தில் இல்லை. லக்ஷ்மிபாயைக் காப்பாற்றும்படி உத்தமஜீ அவனிடம் கூறிய வார்த்தைகள் அதே தொனியில் இப்போதும் அவன் காதில் ஒலித்துக் கொண்டிருந்தன. அவன் கண்ணை மூடினான். ஆறு முரட்டு முகம்மதிய வீரர்களிடம் அழகிய உருவத்தையுடைய ஒரு மஹாராஷ்டிர இராஜகுமாரன் தனியாய் அகப்பட்டுக்கொண்டு கத்திகளால் வெட்டுண்டு வீழ்வதாக ஓர் கோரக் காட்சி அவனுடைய மனக் கண் முன் தோன்றியது.

"ஹா!" என்று ஒரு பெருமூச்சு விட்டான்.

லக்ஷ்மிபாயின் வீரக் கண்களில் கண்ணீர் முத்துகள்போல் தோன்றி கலகலவென்று உதிர்ந்தன. அப்பொழுது அவளது இருதயத்திலுள்ள துயரத்தை யார்தான் அறிவார்கள்?

"அம்மா, நீங்கள் இங்கேயே இருந்துவிடுங்கள். எங்கள் உயிரைக் கொடுத்தாகிலும் காப்பாற்றுகிறோம். நாளை இரவு மறுபடியும் ஹுசேன் நவாபு கூடாரங்களுக்கு வேவுகாரனாகப் போவார். அப்போது உங்கள் தமயனின் க்ஷேமத்தைப்பற்றி தெரிந்துகொண்டு வருவார். சண்டை முடிந்ததும் உங்களையும் உங்கள் தமையனையும் நாங்கள் ஜாக்கிரதையாக உங்கள் நாட்டிற்கு அனுப்பி வைக்கின்றோம். பயப்படாமல் இரு அம்மா" என்று க்ளைவ்துரை தேற்றினார். இதைக் கேட்டபடியே லக்ஷ்மிபாய் அயர்ந்து தூங்கி விட்டாள்.

மறுபடி அவள் கண்விழித்தபோது ஆற்காட்டுக் கோட்டைக்குள்ளிருக்கும் அரண்மனையிலுள்ள ஓர் அறையில் தான் இருப்பதாக அறிந்தாள். பக்கத்தில் ஹுசேன் மரியாதையான தூரத்தில் அமர்ந்திருந்தான். நவாபு சேனைகள் கோட்டையைச் சுற்றித் தாக்குவதும் கோட்டைக்குள்ளிருக்கும் ஆங்கிலப்

படை திருப்பி அவர்களைத் தாக்குவதுமாய் சண்டை அதிகக் கடினமாய் நடந்துகொண்டிருந்தபடியால் வானம் இடியினால் உறுமுவதுபோன்ற சத்தம் அவர்களின் கவனத்தைக் கவர்ந்தது.

லக்ஷ்மிபாய் மஹாராஷ்டிரப் பெண்ணானதால் யுத்தத்தின் உணர்ச்சி தோன்றியது.

"ஓ! யுத்தம் நடக்கின்றதே! அப்படியானால் இந்தக் கோட்டைக் குள்ளிருக்கும் படையின் பலம் என்ன?" என்று எடுத்ததும் வினவினாள்.

"ஆரம்பத்தில் உள்ளது ஆங்கில வீரர்கள் இருநூறு; இந்திய சிப்பாய் கள் முன்னூறு. பீரங்கிகள் நான்கு. இப்போது பீரங்கியில் ஒன்று எதிரிக ளால் உடைபட்டுவிட்டது; பாக்கி உள்ளவைக்கும் போதுமான வெடிமருந் தில்லை; ஆங்கில வீரர்களில் சரிபாதி மாண்டுவிட்டார்கள்; இந்திய சிப்பாய்க ளில் மிச்சம் என்னைச் சேர்த்து நூற்றி இருபது பேர்தான். லெப்டினன்ட் க்ளாஸ், லெப்டினன்ட் ரெவல் முதலிய அருமையான ஆங்கிலப்படை வீரர் கள் பலியாயினர்; இதோடுகூட உணவுப் பொருள்களுக்குக்கூடப் பஞ்சம் வரும்போல் தெரிகிறது. இன்று ஆங்கிலேயர்களுடைய கணக்குப்படி அக் டோபர் மாதம் 24-ம் தேதியல்லவா, இன்றோடு இந்த முற்றுகை ஆரம்பமாகி ஒரு மாதம் ஆகிறது" என்று முற்றுகையின் சரித்திரத்தைச் சுருக்கமாகச் சொன்னான் ஹுஸேன்.

"எதிரிகளைப்பற்றி நீங்கள் ஒன்றும் சொல்லவில்லையே" என்றாள் அப் பெண்.

"அதைப்பற்றிக் கேட்பானேன்! திருச்சியிலிருந்து சந்தா சாஹேபுவி னால் அனுப்பப்பட்டது நாலாயிரம்பேர்; புதுச்சேரியிலிருந்து இராஜா சாஹே புவின் தலைமையில் வந்து சேர்ந்துகொண்டது நூற்றைம்பது பிரெஞ்சுக்கா ரர்கள்; வேலூரிலிருந்து மோர்ட்டிஜாலி கொண்டு வந்தது இரண்டாயிரம் பேர்; இன்றுகூட அவர்களுக்கு புதுச்சேரியிலிருந்து புதிய பீரங்கிகள் வரும்; இந்தக் கோட்டையோ மிகப் பழைய கோட்டை; முன்னமேயே நாங்கள் கொஞ்சம் பழுது பார்த்தோம்; இருந்தபோதிலும் வலிவு இல்லை. இந்த நிலை மையில் அந்தக் கொழுத்த படையினிடம் நாம் எந்த மூலை? இதுவரைக்கும் நாங்கள் சமாளித்தது க்ளைவ் துரையின் தைரிய லக்ஷ்மிதான் காரணம்." என்றான்.

"இல்லவே யில்லை. ஹுசேனின் அதிசயமான முன்யோஜனைதான் அதற்குக் காரணம்" என்று சொல்லிக்கொண்டு க்ளைவ் துரை அங்கே வந் தார்.

"இந்தக் கோட்டையை நீங்கள் கைவிட்டால் பிறகு ஆங்கிலேயர்கள் இந் தியாவை விட்டு ஓடவேண்டியதுதான்" என்று சொல்லிக்கொண்டு க்ளைவ் துரையின் முகத்தைப் பார்த்தாள் அப்பெண்.

ராபர்ட் க்ளைவ் மூக்கின்மேல் விரல் வைத்தார்.

"ஓ! ஏன் அப்படிச் சொல்கிறாய்?" என்று கேட்டுக்கொண்டு புன் னகை கொண்டார். ஏனென்றால் இந்தச் சிறு பெண் அபாரமான இராஜீய விஷயத்தைப்பற்றி இவ்வளவு கூர்மையாய்ப் பேசினாளே என்று அவர் வியப் புற்றார். லக்ஷ்மிபாய் மஹாராஷ்டிரப் பெண் என்பதை அவர் மறந்துவிட் டார்போலும்!

"என்ன, இது ஒரு பிரமாதமான காரியமா? இப்போது தென்னிந்தியாவிலே தஞ்சாவூர் ஒன்றுதான் சுயேச்சையுள்ள ராஜ்யமாய் இருக்கிறது. திருச்சிக் கோட்டை மகம்மது ஆலியிடம் இருந்தாலும் உங்கள் எதிரியாகிய சந்தா சாஹேபும் பிரெஞ்சுக்காரர்களும் அதை முற்றுகை யிட்டிருக்கிறார்கள். சென்னை உங்கள் கையிலிருக்கிறது, அல்லவா."

"ஆம்"

"இதைத் தவிர மற்ற பாகமெல்லாம் உண்மையில் யாருடைய வசத்தில் இருப்பதாய் நினைக்கிறீர்கள்?"

"பிரெஞ்சுக்காரர்களிடத்தில்தான்." என்று ஒப்புக்கொண்டார் க்ளைவ்.

"நல்லது. இந்த நிலைமையில் இந்தக் கோட்டையை சந்தா சாகிபு விட்டால், உடனே அவரை பிரெஞ்சுக்காரர்கள் கர்நாடக தேசத்துக்கு நவாபு ஆக்கிவிடுவார்கள். அதன்பிறகு ஒரு நொடியில் திருச்சி அவர்களுடைய கைக்குள் வந்துவிடும். தஞ்சாவூர்க் கோட்டையை அடுத்தாப்போல் தாக்குவார்கள். அதன் பிறகு உங்களைச் சென்னையிலிருந்து ஒட்டி விடுவார்கள்." என்று பெரிய இராஜதந்திரிபோல் பேசினள் அவ்விளவரசி.

"இது இருக்கட்டும்; நீங்கள் தஞ்சாவூர் போவதாக ஹுசேன் சொன்னரே. இப்பொழுது என் அங்கே போகிறீர்கள்?" என்று கேட்டார் துரை.

"எங்கள் நாட்டில் மஹாயுத்தம் ஒன்று ஆரம்பமாகப் போகிறது. அதற்காக பெண்களையும் குழந்தைகளையும் பாதுகாப்பிற்காக அவரவர் பந்துக்களாகிய மன்னர்களிடம் அனுப்புவது வழக்கம். இப்போது எங்கள் பந்துவாகிய தஞ்சை மன்னர் பிரதாபசிங் மஹாராஜாவிடம் நான் போய்க் கொண்டிருக்கிறேன். எனக்குத் துணையாக என் தமையனை உத்தமஜீயும் சில வீரர்களும் வந்தார்கள் ......" என்று அவன் சொல்லிக் கொண்டிருக்கும் போது மட மடவென்று ஒரு பெருத்த சத்தம் கேட்டது. யாவரும் திடுக்கிட்டார்கள். சிறிது நேரததில் ஓர் சிப்பாய் ஓடிவந்தான்.

"துரையே, தென்மேற்குப் பக்கத்துக் கோட்டை மதில் எதிரிகளால் தகர்க்கப் பட்டுவிட்டது" என்றான் அவன்.

"ஆபத்து சீக்கிரம் நெருங்கட்டும்," என்றார் க்ளைவ். மறுக்ஷணம் அவர் அங்கில்லை. ஹுசேன் அவர் பின்னுல் ஓடினன்.

இனிமேல் வெகு சுலபமாய் எதிரிகள் கோட்டைக்குள் வந்து எல்லோரையும் சிறை செய்வார்கள் என்று லக்ஷ்மிபாய் எண்ணினள்.

* * * *

தனது தமயன் உத்தமஜீயைத் தேடி பகைவரின் கூடாரத்திற்கு மாறு வேஷத்தில் சென்ற ஹுசேன் இன்னும் வரவில்லையே என மன சஞ்சலத்துடன் வீற்றிருந்தாள் லக்ஷ்மிபாய். வேட்டை யாடிவிட்டு வந்த சிங்கத்தைப்போல் மிகக் களைப்புடன் ஹுசேன் திரும்பி வந்தான். அவன் முகம் சோர்வடைந்திருந்தது; கையில் ஓர் சிறிய மூட்டை யிருந்தது. அவன் மட்டும் தனியாகவும் மூக வாட்டத்துடனும் வருவதைக்கண்ட லக்ஷ்மிபாய் தன் தமயன் விஷயமாய்க் கவலைகொண்டாள். ஹுசேன் ஒன்றும் வாய் திறந்து பேசாமல் மூட்டையை அவளிடம் கொடுத்தான். அவள் அதைப் பிரித்துப் பார்த்தாள். "ஓ" என்று அலறிக்கொண்டு கீழே விழுந்து புரண்டாள்.

ஏனெனில் அதில் முழுவதும் இரத்தம் தோய்ந்த உத்தமஜீயின் வஸ்திரம் இருந்தது!

"ஏ, அண்ணா, எனது அருமை அண்ணா, உத்தமஜீ உங்களுக்கு இந்த மாதிரி மரணமா வரவேண்டும்? ஏ, அண்ணா நீங்கள் என்னாலேயா உயிர் துறக்கவேண்டும்? ஐயோ! இனி நான் என்ன செய்யப்போகிறேன்? ஊர் போய் நான் என்ன பதில் சொல்வேன்?" எனப் பலவாறாய்ப் புலம்பினான். ஹூசேன் கண்களிலும் நீர் தாரையாய் வடிந்தது.

அந்தச் சமயத்தில் க்ளைவ் அங்கே தோன்றினார். அவரது கையில் இரண்டு கடிதங்கள் இருந்தன, அவர் முகம் முன்னமேயே வாட்ட முற்றிருந்ததே யானாலும் உத்மஜீயின் அநியாயமான மரணத்தைக் கேள்வியுற்று அவர் மிகவும் வருந்தினார்.

'ஹூசேன்! இந்த விநோதமான நிருபத்தைப் பார்" என்று அவனிடம் ஓர் கடிதம் கொடுத்தார். அதில் பின்வருமாறு எழுதி யிருந்தது:—

"ராபர்ட் க்ளைவ் துரைக்கு இராஜா சாஹேபு விடுத்த நிருபம். சில தினங்களுக்கு முன்பு நமது கூடாரத்தில் நம்மால் சிறை வைக்கப்பட்ட ஒரு பெண்ணை அபகரித்துக்கொண்டுபோய் உமது பாதகாப்பில் வைத்திருப்பதாக அறிய வந்தோம். இந்த அறிக்கை பெற்றுக்கொண்ட இரண்டு நாழிகைக்குள் அந்தப் பெண்ணை நம்மிடம் கொண்டுவந்து ஒப்புவித்துவிட வேண்டியது, இரண்டாவதாக கோட்டையை இன்று பொழுதுக்குள் நம்மிடம் விட்டுவிட வேண்டியது. இதற்குப் பிரதி உபகாரமாக உங்கள் யாவருடைய உயிரையும் மன்னித்து விடுவதோடு உமக்கு அந்தரங்கமாய் இருபது லெக்ஷம் வராகன் இனும் அளிப்போம்; இல்லாவிட்டால் இன்று பொழுதுக்குள் இரக்கமின்றி உங்கள் யாவரையும் பிடித்துக் கத்திகளுக்கு இரையாக்குவோம்."

இதை வாசித்ததும் ஹூசேனுக்குக் கோபம் மூண்டது. அவனது கை அடிக்கடி கத்திப்பிடியைப் பற்றியது. அவன் கண் கோவைக் கனிபோல் பழுத்தன.

"என் உயிரையும் கொடுத்தாலும் கொடுப்பேன்! லக்ஷ்மிபாயின் கால் தூசியைக்கூடக் கொடுக்கமாட்டேன்." என்று கர்ஜித்தான்.

"ஹூசேன், உதவி வேண்டுமென்று நாம் சென்னைக்கு நிருபம் விடுத்திருந்தோம் அல்லவா?"

"ஆம், அவர்கள் வந்து விட்டார்களா?"

"இல்லை, இந்தப் பதிலைப் பார்" என்று சொல்லி மற்றொரு கடிதத்தை அவனிடம் கொடுத்தார் க்ளைவ்.

அதையும் வாங்கிப் பின்வருமாறு வாசித்தான் ஹூசேன்:—

"லெப்டினன்ட் இன்னிஸ் தலைமையில் சென்னை நூறு ஆங்கில வீரர்களும் இருநூறு இந்திய சிப்பாய்களும் இங்கிருந்து உமது உதவிக்காக அனுப்பப்பட்டது. ஆனால், திருவொற்றி யூருக்கும் முப்பதாவது மைலில் இராஜாசாஹேபுவின் ஆட்கள் இரண்டாயிரம் பேர் அவர்களை சூழ்ந்து கொண்டார்களாம். இருபது பேர் உயிர்ச் சேதத்தோடு லெப்டினெனட் இன்னீஸ் பூந்தமல்லிக்கு ஓடி அங்கேயுள்ள நமது கோட்டையில் பதுங்கிவிட்டார். இனி

இங்கிருந்து வேறு படை அனுப்ப வழியில்லை. உம்மிடம் உள்ளத்தைக் கொண்டு சமாளிக்கவேண்டும்."

இந்தக் கடிதங்கள் இரண்டையும் ஒரு வார்த்தைகூட விடாமல் கேட்டுக்கொண்டிருந்த லக்ஷ்மிபாய் விசனக் கடலில் ஆழ்ந்துவிட்டாள்.

மறுபடி மறுபடி வந்துகொண்டிருந்த மிரட்டல் கடிதங்களை ராபர்ட் க்ளைவ் துரையும் ஹூஸேனும் ஏகதேசத்தில் பார்த்துவிட்டு ஆயிரஞ் சுக்கலாய்க் கிழித்து எறிந்துகொண்டிருந்தார்கள். ஆனால் கடைசிக் கடிதமாக ஒர் கிருபர் வந்தது. அதை ஹூஸேனிடம் காண்பித்தார் க்ளைவ். கீழ்க்கண்டவாறு அதில் கண்டிருந்தது.

"...............இதுவே கடைசி கடிதம் என்பதை எச்சரிக்கின்றோம்! நாம் இதுவரையிலும் கேட்டுவந்த மற்ற நிபந்தனைகளை யெல்லாம் ரத்து செய்துவிட்டோம். இப்போது லக்ஷ்மிபாய் என்ற அந்த மஹாராஷ்டிரப் பெண்ணை மட்டும் நம்மிடம் ஒப்புவிக்கவேண்டியது. முன்னமேயே வாக்களித்தபடி இருபது லக்ஷம் வராகனும் கொடுப்பதோடு உம்மையும் உம்மைச் சேர்ந்தவர்களையும் உடனே உயிரோடு அனுப்பிவிடுவோம்—இல்லாவிட்டால் உங்கள் யாவரையும் பீரங்கி வாயில் வைத்துச் சுட்டுக் கொன்றுவிட்டு அப்பெண்ணைப் பிடித்துக்கொண்டு போவோம்."

இதைப் பார்த்ததும் ஹூஸேனின் கண்கள் பழுக்கச் காய்ச்சிய இரும்பு குண்டுகள் போல சிவந்துவிட்டன. க்ளைவ் துரைக்குக்கூட அவனைப் பார்த்ததும் அச்சம் தோன்றியது. ஆனால் அவன் ஒன்றும் பேசவில்லை. அக் கடிதத்தை எடுத்துக்கொண்டு விசனத்தால் வாடியிருந்த லக்ஷ்மிபாயிடம் கொண்டு போனான். க்ளைவ் துரையும் பின்தொடர்ந்தார். அந்தக் கடிதத்தை அவ்வீரப் பெண் வாங்கி கவனமாய் வாசித்துப் பார்த்தாள். அவள் கலகலவென்று நகைத்தாள். இணையற்ற இருவீரர்களும் அவளது வதனத்தையே நோக்கினர்.

"அன்பர்களே! என்னை இதுவரைக்கும் காப்பாற்றிய அன்பர்களே! தியாகமூர்த்தி என்று பெயர் வாங்குவது அருமையிலும் அருமையல்லவா" என்றாள் இவ்வரசி.

"ஆம், அதற்கென்ன ஆக்ஷேபனை?" என்று சொன்னார் க்ளைவ் துரை.

"அநேக உயிர்களைக் காப்பாற்றுவதற்காக ஓர் சிறிய உயிரைத் தத்தம் செய்வது ஓர் தியாகம் ஆகும் அல்லவா"

"ஆம்."

"அப்படியானால் என் மனமார ஓர் யுக்தி சொல்கிறேன். அதாவது என்னை இந்த மூகம்மதிய வேங்கைகளிடம் ஒப்புவித்து விட்டு நீங்கள் என் உயிர் தப்பக்கூடாது?"

"நை, நை" என்று கூறிக்கொண்டு எழுந்தான் இதுவரைக்கும் மெளனமாய் இருந்த ஹூஸேன்.

"நோ, நோ" என்று க்ளைவும் அவனுடன் சேர்ந்து கொண்டார்.

"நான் என் மனப்பூர்வமாய் சம்மதிக்கின்றேன்" என்றாள் லக்ஷ்மி.

# அவர்களது க்ஷேமம் உங்களுடைய பொறுப்பே.



உங்கள் மக்கள் க்ஷேமந்தானே உங்களது சந்தோஷம்? அவாகளுக்கு ஒரு வியாதியோ, கஷ்டமோ ஏற்பட்டால் நீங்கள்தானே அவர்களுக்கு ஆதரவு? உடனே அவர்கள் பக்கத்தில் நின்று அவர்களை பராமரிப்பதும் நீங்கள்தானே? அவர்கள் சாப்பிடும் ஆகாரத்திலும், அவர்கள் நல்ல காற்று வாங்கி நடமாடுவதிலும் நீங்கள் எவ்வளவு சிரத்தை காட்டுகிறீர்கள்.

இவ்வளவோடு நிற்காமல் புதிய இந்தியத் தேயிலையைப் போட்டு தயாரித்த சுகமான 'டீ' யையும் அவர்களைத் தினம் சாப்பிடச்செய்யுங்கள். இதற்குப் பொங்கின ஜலமே உபயோகமாவதால் ஜலத்திலுள்ள கிருமிகள் நசித்து விடுகின்றன. இப்பானம் கெடுதலற்றது என்பதுமட்டுமல்ல; தூய்மையானது, மிகுந்த நன்மையையும் சுகத்தையுந் தருவது.

இந்திய நாட்டில் அறிவிற்சிறந்த ஸ்திரீகள் டீ சாப்பிடும் வழக்கத்திற்கு ஆதரவளிக்கின்றனர். நீங்களோ ?

**டீ செய்யும் முறை.** நல்ல இந்தியத் தேயிலையை உபயோகியுங்கள். புதிய ஜலத்தைப் பொங்கவிட்டுச் சுத்தமாய் பாத்திரதை வெந்நீரால் அலம்பி, ஒருவருக்கு ஒரு டீ ஸ்பூன் வீதம் அதில் தேயிலையைப்போட்டு, பொங்குகிற ஜலத்தை விடுங்கள். ஐந்து நிமிஷம் கழித்து ருசிக்காக பாலையும் சர்க்கரையும் சேர்த்து அருந்தவேண்டும்.



**இதுவே குடும்பத்திற்கு ஈடற்ற பானம்- இந்தியத் தேத்தண்ணீர்.**

IK. 32

# “ஆனந்தபோதினி” பஞ்சாங்கம்.

யுவஞூ தைமீ—கலியுகாதி 5037, சாலிவாகனம் 1858,
பசலி 1345, கொல்லமாண்டு 1111, ஹிஜரி 1354,
இங்கிலீஷ் 1936ஞூ ஜனவரிமீ—பிப்ரவரிமீ

| தைமீ | ஜனவரிமீ | வாரம். | திதி. | நக்ஷத்திரம் | யோகம். | விசேஷங்கள். |
|---|---|---|---|---|---|---|
| 1 | 14 | செவ் | பஞ்0-48 | உத்51-50 | அ51-50சி | உத்ராயண புண்யகாலம், சங்கராந்தி பண்டிகை. பொங்கல்பண்டிகை |
| 2 | 15 | புத | சஷ்7-5 | அஸ்59-8 | மர59-8சி | மாட்டுப்பொங்கல், கரிநாள் |
| 3 | 16 | வியா | சப்13-0 | சித்60 | சித்60 | கரிநாள், திருதினஸ்பிருக் |
| 4 | 17 | வெள் | அஷ்19-0 | சித்6-5 | சித்60 | திஸ்ரோஷ்டகா |
| 5 | 18 | சனி | நவ23-30 | சுவா11-58 | அ11-58சி | தானியம் செலவிட |
| 6 | 19 | ஞா | தச26-33 | விசா16-33 | மர60 | சுபகாரியம் விலகக |
| 7 | 20 | திங் | ஏகா27-45 | அனு19-23 | சித்60 | சர்வ மத்வ ஏகாதசி |
| 8 | 21 | செவ் | து27-8 | கே20-30 | ம20-30அ | பிரதோஷம் |
| 9 | 22 | புதன் | திர24-40 | மூல19-48 | ம19-48அ | மாச சிவராத்திரி |
| 10 | 23 | வியா | ச● 20-38 | பூரா17-30 | சித்60 | தை அமாவாசை |
| 11 | 24 | வெள் | அமா15-20 | உத்13-53 | சி13-53ம | |
| 12 | 25 | சனி | பிர8-48 | திரு11-43 | சித்60 | |
| 13 | 26 | ஞா | துதி1-43 திரி54-18 | அவி4-18 சத58-18 | மர4-18சி | |
| 14 | 27 | திங் | சது46-58 | பூர52-48 | ம52-48சி | |
| 15 | 28 | செவ் | பஞ்40-5 | உத்47-43 | அ47-43சி | |
| 16 | 29 | புத | சஷ்33-55 | ரே43-28 | மர60 | |
| 17 | 30 | வியா | சப்28-35 | அஸ்40-0 | அ40-0சித் | |
| 18 | 31 | வெள் | அஷ்24-18 | பர37-38 | சித்60 | |
| 19 | 1936ஞூ பிப்ரவரிமீ 1 | சனி | நவ21-5 | கி✲36-23 | அமி60 | கிருத்திகை, கடன் நீக்க |
| 20 | 2 | ஞா | தச19-5 | ரோ36-15 | சித்60 | சர்வ முகூர்த்தம் |
| 21 | 3 | திங் | ஏகா18-40 | மிரு37-15 | அ37-15சி | சர்வ மத்வ ஏகாதசி |
| 22 | 4 | செவ் | து18-35 | திரு39-20 | ம39-20சி | பிரதோஷம், சோபபாதா |
| 23 | 5 | புதன் | திர19-53 | புன42-28 | சித்60 | விவாகம், மாடு வாங்க |
| 24 | 6 | வியா | சது22-15 | பூச46-28 | அ46-28சி | தைப்பூசம், யாத்திரை |
| 25 | 7 | வெள் | ○25-28 | ஆயி51-18 | மர60 | பௌர்ணமி, ஆயுதம் பழக்க |
| 26 | 8 | சனி | பிர29-48 | மக57-10 | அ57-10சி | மாகபகுளம், மாடுகொள்ள |
| 27 | 9 | ஞா | துதி34-53 | பூர60 | சித்60 | திருதினஸ்பிருக் |
| 28 | 10 | திங் | திரி40-40 | பூர3-45 | சித்60 | சுப முகூர்த்தம் செய்ய |
| 29 | 11 | செவ் | சது46-43 | உத்10-53 | அ10-53சி | அங்காரக சதுர்த்தி |
| 30 | 12 | புதன் | பஞ்53-35 | அஸ்18-13 | ம18-13சி | தும்பரவி நா-38-30, விஷ்ணுபதி புண்ணியகாலம் |

| | | | |
|---|---|---|---|
| | | | சே |
| சனி செவ் | 9-தனு-சுக் 30-மீன-செ | | — |
| சூரி புத | | | |
| ராகு | குரு சுக் | | |

PRINTED & PUBLISHED BY N. MUNISAWMI MUDALIAR,
AT THE "ANANDA BODHINI" PRESS.
NO. 6, LAWYER CHINNATHAMBI MUDALI STREET, MADRAS.

உ
ஓம்
பரப்பிரஹ்மணே நம:

# ஆனந்தபோதினி

"எப்பொரு ளெத்தன்மைத் தாயினு மப்பொருண்
மெய்ப்பொருள் காண்ப தறிவு"—திருவள்ளுவர்.


| | | |
|---|---|---|
| தொகுதி 21 | யுவஹூ மாசிமீ கஉ 1936ஹூ பிப்ரவரிமீ 13உ | பகுதி 8 |

## கடவுள் வணக்கம்.

வரும்போ மென்னு மிருநிலைமை
மன்னு தொருதன் மைத்தாகிக்
கரும்போ தேனோ முக்கனியோ
என்ன என்னுட் கலந்து நலம்
தரும்பே ரின்பப் பொருளே நின்
றன்னை நினைந்து செக்குருகேன்
இரும்போ கல்லோ மரமோவென்
இதயம் யாதென் றறியேனே. (1)

அறியுந் தரமோ நானுன்னை
அறிவுக் கறிவாய் நிற்கையினால்
பிறியுந் தரமோ நீ யென்னைப்
பெம்மானேபே ரின்ப மதாய்ச்
செறியும் பொருணீ நின்னை யன்றிச்
செறியாப் பொருணான் பெரும்பேற்றை
நெறிநின் றொழுக விசாரித்தால்
நினக்கோ இல்லை எனக்காமே. (2)

இனிய கருணை முகில் எம்பிரான் முக்கட்
கனியமிர்த வாரியின்பக் கட்டி—தனி முதல்வன்
நித்தன் பரமன் நிமலன் நிறைவாய் நிறைந்த
சுத்தனமக் கென்றாந் துணை. (3)

ஆயிரஞ் சொன்னாலும் அறியாத வஞ்சநெஞ்சப்
பேயரொடு கூடிற் பிழைகாண் பராபரமே. (4)

# அரும்பொருள் விளக்கம்

1. இதனால் இறைவனை நினைந்து நெக்குருகாத தமது கடின உள்ளத்தின் பொருட்டு இரங்குகின்றார்.

(இ-ள்.) வருவதும் போவதுமாகிற இருவகைப்பட்ட நிலைமையினைப் பொருந்தாமல், ஒரு வழிப்பட்ட நிலைமையினை அடைந்து, கரும்பின் சாறோ, தேனோ, முப்பழங்களோ என்று சொல்லும் வண்ணம் அடியேனிடத்துச் சேர்ந்து நன்மையினைத் தருகின்ற பேரானந்த சொரூபமாகிய வஸ்துவே! தேவரீரை எண்ணி நெகிழ்ந்து உருகிலேன். அடியேனுடைய இதயமானது இரும்புதானோ கல்தானோ, மரந்தானோ—இவற்றுள் யாதென்று அறிகிலேன் என்க.

வரும்போமென்னு நிலைமையாவது நினைப்பு மறைப்பென்னுந் தன்மை. அதிகச் சுவையுடன் கூடிய கரும்பு முதலிய பதார்த்தங்களைப் போல இறைவன் தன்னுடன் கலந்திருப்பதால் உண்டாகும் இன்பத்தினை அநுபவியாது வாளா நாளைக் கழிக்கின்றமையின் நெஞ்சானது கல் முதலிய கடின பதார்த்தங்கட்குச் சமானம் என்றனர்.

2. இதனால் தம்மால் இறைவனுக்கு எத்தகைய பயனும் இல்லை என்பதை விளக்குகிறார்.

(இ-ள்.) ஆன்மாவின் அறிவுக்கு உணர்வாகி நிற்கையால் அடியேன் உன்னைத் தெரிந்துகொள்ளுந் தன்மையுண்டோ? பெருமானே! பேரானந்தமாகி எவற்றினும் நிறைந்திருக்கும் வஸ்து நீ! ஆதலால் தேவரீர் அடியேனைப் பிரிந்திருக்கும் தன்மைத்தோ? தேவரீரையன்றி நீங்காத பொருள் நான். அடையும் பயனை நன்னெறி நின்று முற்றும் விசாரித்தால் தேவரீருக்கு இல்லை—அடியேனுக்கேயாம் என்க.

பரமான்மாவால் ஆன்மாவிற்குப் பயனே யன்றி, ஆன்மாவால் பரமான்மாவிற்குப் பயனில்லை என்பார் "பெறும் பேற்றை..................... எனக்காமே" என்றனர். "பொன்னாற் பிரயோசனம் பொன்படைத்தாற்குண்டு பொன்படைத்தோன், தன்னாற் பிரயோசனம் பொன்னுக் கங்கேதுண்டத் தன்மையைப்போல், உன்னாற் பிரயோசனம் வேணதெல்லா முண்டுனைப் பணியும், என்னாற் பிரயோசனம் ஏதுண்டு காளத்தி ஈச்சுரனே" என்ற பட்டினத்தடிகள் திருவாக்கும் இங்கே நினைக்கத்தகும்.

3. இதனால் இறைவனே என்றுந் துணை என்பதைக் கூறுகிறார்.

(இ-ள்.) இனிதான கருணை மழை பொழியும் மேகம், எமதுபிரான், மூன்று கண்களுடன் கூடிய பழம், அமுதசாகரம், இன்பத்தினை விளைவிக்கும் கருப்புக் கட்டி, ஒப்பற்ற முதல்வன், என்று முள்ளவன், மேலானவன், நின்மலன், எங்குமாய்ப் பரவிய பரிசுத்தன் ஆகிய இறைவன் நமக்கு எக்காலத்திலும் துணையாகும் என்க.

இம்மையிலும் மறுமையிலும் ஆன்மாக்கட்கு முதல்வன் தோன்றாத்துணையாக இருத்தலின் துணை என்றனர்.

4. (இ-ள்.) பராபரமே! ஆயிரம் விதமாக எடுத்துப் பேசும் ஆற்றலிருந்தாலும் விவேகமில்லாத வஞ்சக மனத்தையுடைய பேயருடன் சேர்தல் குற்றமேயாம் என்க.




# தமிழ்நாட்டுப் பெண்கள் மகாநாடு





பொதுவாக இந்தியப் பெண்ணுலகில் ஒருவித விழிப்பும் உணர்ச்சியும் மேலோங்கி வருவதை நாம் கண்கூடாகக் கண்டு வருகின்றோம். "அடுப்பூதும் பெண்கட்குப் படிப்பு எதற்கு" "பெண் ஜன்மமோ புண் ஜன்மமோ" "பேதைமை என்பது மாதர்க்கணிகலம்" என்பன போன்ற தொன்றுதொட்ட பெண்மைப் பழிமொழிகளாகிய பழமொழிகள் இக்காலத்தில் நகைப்பிற்கிடமாகி அடிபட்டுப் போய்விட்டன என்றே சொல்லவேண்டும். ஆங்காங்குப் பெண்களுக்குரிய ஆரம்பப்பள்ளிக் கூடங்களும், நடுத்தரப் பள்ளிக்கூடங்களும், உயர்தரக் கல்லூரிகளும் வளர்ந்து கொண்டு வருகின்றன. பெண்மணிகளில் சிலர் சர்வகலாசாலைப் பட்டங்கள் பெற்று, ஆசிரியர்களாகவும், டாக்டர்களாகவும், வக்கீல்களாகவும் விளங்குகின்றார்கள். சிறந்த சமூக ஊழியர்களாகவும், அரசியல் ஊழியர்களாகவும் திகழ்கின்றார்கள். கௌரவ மாஜிஸ்ட்ரேட்டுகள்-சட்டசபை அங்கத்தினர்கள்-முனிசிபல் கவுன்சிலர்கள்—ஜில்லாபோர்டு அங்கத்தினர்கள்—கல்விச்சபை உறுப்பினர்களாக இருந்து அநேக பெண்மணிகள் அற்புதத் தொண்டாற்றி வருவதை நாம் கண்டு வருகின்றோம். சென்ற சட்டமறுப்பு இயக்கத்தில் பெண்மணிகள் காட்டிக்கொண்ட உற்சாகத்தையும், ஊக்கத்தையும், துணிவையும், தியாகத்தையும் என்றும் மறப்பதற்கில்லை. பெண்கள் முன்னேற்றத்திற்கென ஆங்காங்குச் சங்கங்களும் நிறுவப்பட்டு வருகின்றனர்; மகாநாடுகளும் நடைபெறுகின்றன. அகில இந்தியப் பெண்கள் சங்கத்தார் ஆங்காங்குக் கிளைகளை நிறுவி நல்லமுறையில் பிரசாரம் செய்து வருகின்றனர். அகில இந்தியப்பெண்கள் சங்கத்தின் ஆதரவில் ஆண்டுதோறும் நடைபெறும் ஆண்டுவிழாக் கூட்டங்களில் இந்தியாவின் பல பாகங்களிலிருந்தும் பெண் பிரதிநிதிகள் சென்று கலந்து கொள்ளுகின்றனர். அந்தக் கூட்டங்களில் நிகழ்த்தப்படும் சொற்பொழிவுகளும், நிறைவேற்றப்படும் தீர்மானங்களும் நாட்டு

மக்களின் உள்ளங்களையும் அரசாங்கத்தாரின் கவனங்களையும் பெரிதும் கவர்ந்து வருகின்றன. பெண்களின் குறைகளையும் உரிமைகளையும் சரியான முறையில் எடுத்துரைப்பது அகில இந்தியப்பெண்கள் மகாநாடு என்பது மிகையாகாது. பெண்கல்வி, குழந்தை மணத்தடை, மாதர் மறுமணம், சொத்துரிமை, வாக்குரிமை, பிள்ளைப்பேறு, பிள்ளை வளர்ப்பு, குடும்ப நிர்வாகம் முதலிய துறைகளில் குறிப்பிடத்தக்க முன்னேற்றமும் சீர்திருத்த உணர்ச்சியும் ஏற்பட்டு வருகின்றன. இதற்கெல்லாம் கற்றறிந்த பெண்மணிகளின் கட்டுப்பாடான பிரசாரமே காரணம் எனலாம்.

சென்ற மாத இறுதியில் காரைக்குடியில் நடைபெற்ற தமிழ்நாட்டுப்பெண்கள் மகாநாடு தனவணிகப் பெண்மணிகளுக்கு ஒருவித விழிப்பூட்டி யிருக்கவேண்டும் என்று எண்ணுகிறோம். தனவணிக மக்கள் செல்வச்சீமான்களாக இருந்தும் அரசியல்—சமூகவியல் போன்ற பொதுநல விவகாரங்களில் விசேஷமாக ஈடுபட முன் வருகிறார்கள் இல்லை. அச் சமூகத்தில் பெண்களின் நிலைமையோ படுமோசம் அவர்கள் பழைய பொருளற்ற வழக்க ஒழுக்கங்களில் மூழ்கியவர்களாய் இருக்கிறார்கள். அவர்கள் இக்கால இயல்புணர்ந்து புத்துணர்ச்சி பெற்றுப் புதுவாழ்வு நடத்தவேண்டும் என்பது நமது கோரிக்கை.

தமிழ்நாட்டுப் பெண்கள் மகாநாட்டின் வரவேற்புக் கழகத் தலைவராக விளங்கிய ஸ்ரீமதி பி. என். எஸ். விசாலாக்ஷி அம்மாளும் தலைவர் ஸ்ரீமதி லக்ஷிமிஅம்மாளும் நிகழ்த்திய சொற்பொழிவுகளில் சமூக நிலையில் பெண்மக்களின் குறைகளையும் உரிமைகளையும் வற்புறுத்தியிருப்பதைவிட அரசியல் வாசனையே பெரிதும் வீசக் கண்டோம். இருவரும் காங்கிரஸின் பெருமையையும், சுதந்தரத்தின் மேன்மையையும் எடுத்துக்காட்டியது போற்றத்தக்கதே. ஆனால் பெண்களின் குறைகளையும் உரிமைகளையும் இன்னும் கொஞ்சம் விரிவாக எடுத்து அவர்கள் வற்புறுத்தி யிருக்கவேண்டும் என்பது நமது கருத்து. ஸ்ரீமதி விசாலாக்ஷி அம்மாள் "எந்தவித அந்தஸ்திலும் பெண்கள் தங்கள் சரியான ஸ்தானத்தைப் பெறவேண்டுமானால் அதற்கு அடிப்படையாயுள்ள முக்கிய சாதனம் கல்வி யறிவு பெறுதலே" என்று கூறியதுகண்டு மகிழ்கின்றோம். "செட்டிமார் நாட்டுப்பெண்களும் உயர்தரப்படிப்புக்குச் செல்லவேண்டும்" என்று அவர் கூறியதும் பாராட்டத்தக்க அறிவுரையாகும். வரவேற்புக் கழகத்தலைவியார் சமூகச் சீர்திருத்தம் அவசியம் என்றார். கண்ணைமூடிக்கொண்டு பழைய வழக்கங்களை மேற்கொள்ளக்கூடாது என்றார். பாலிய விவாகம், மாதர் மறுமணம், பொட்டுக்கட்டுதல், கலப்பு மணம், வரதக்ஷிணை, கர்ப்பத்தடை முதலிய விஷயங்களில் பெண்கள் உறுதியுடன் தங்கள் அபிப்பிராயங்களைத் தெரிவித்து விடவேண்டும் என்றார். ஸ்ரீமதி விசாலாக்ஷி அம்மாள் அபிப்பிராயம் ஷை சீர்திருத்தங்களுக்கு

அநுகூலமா யிருப்பதை அறிந்து, இவ்விதம் தயக்கமின்றித் துணிவாகப் பேசியதற்கு அவரைப் பாராட்டுகின்றோம். விவாகச் சீர்திருத்த விஷயத்தில் ஸ்ரீமதி விசாலாக்ஷி அம்மாள் அதிதீவிரமான கொள்கையை வெளிப்படுத்தியிருப்பது குறிப்பிடத்தக்கதாகும். "கருத்தொருமித்த காதலர்கள் கூடிக் கலப்பதே கலியாண மெனப்படும். கருத்தொருமித்து ஒருவரை யொருவர் நேசித்துத் தங்கள் வாழ்க்கையை நடத்த விரும்பும் மணமக்களுக்குச் சாதி சமய வேற்றுமைகள் நடுவிலிருந்து குறுக்கிட்டால் அது மிகப் பரிதபிக்கத்தக்க விஷயமாவதோடு உதறித் தள்ளவேண்டிய முக்கிய அம்சமுமாகும்" என்று ஸ்ரீமதி விசாலாக்ஷி அம்மாள் செய்துள்ள உபதேசத்தை ஒவ்வொரு தமிழ்மகனும் தமிழ்மகளும் அறிந்து கடைப்பிடிக்கவேண்டும் என்று விரும்புகின்றோம். இச் சமயத்தில் பண்டைத் தமிழ்மக்களின் காதல் மணமுறையையும் நினைவூட்ட விரும்புகின்றோம். சமய சாஸ்திரங்களின் பெயராலும் தெய்வங்களின் பெயராலும் ஒரு குறிப்பிட்ட சமூகப்பெண்கள் கோவில்களில் பொட்டுக் கட்டிக்கொண்டு கூடா வொழுக்கக் கேடுகளுக்கு நிலைக்களங்களா யிருப்பது நீசத்தனமாகும். இதை ஸ்ரீமதி விசாலாக்ஷி அம்மாள் சுட்டிக்காட்டிக் கண்டித்தது கண்டு நாம் அவரைப் பெரிதும் பாராட்டுகின்றோம்.

தமிழ்நாட்டுப் பெண்கள் மகாநாட்டில் தலைமை வகித்த ஸ்ரீமதி லக்ஷிமி அம்மாள் நிகழ்த்திய சொற்பொழிவு பெண் சமூகக் குறைகளையும் உரிமைகளையும் தொட்டும் தொடாமலே மேலோட்டமாக ஓடிவிட்டது. அந்த அம்மாள் எடுத்த எடுப்பிலேயே இது பெண்கள் அரசியல் மகாநாடு என்று பீடிகை போட்டுக் கொண்டதுபோல் அவர் பேசியதும் வீரம் செறிந்த அரசியல் மேடைச் சொற்பொழிவாகவே இருந்தது. பெண்கல்வி, உத்தியோகம், குடும்ப நிர்வாகம், குழந்தை வளர்ப்பு, சிக்கனம், சுகாதாரம் முதலியவைபற்றி ஸ்ரீமதி லக்ஷிமி அம்மாள் கூறிய செய்திகளில் புதுமை எதுவும் இல்லை. எல்லாரும் சர்வசாதாரணமாக நாள்தோறும் சொல்லிக்கொண்டு வரும் முறையிலேயே அவரும் கூறினர். ஒரு மாகாணப்பெண்கள் மகாநாட்டில் தலைமை வகிக்கும் பொறுப்பை ஏற்றுக்கொண்ட ஸ்ரீமதி லக்ஷிமி அம்மாள் அகில இந்தியப்பெண்கள் சங்கத்தைப்பற்றியும் அது ஆண்டுதோறும் நிறைவேற்றிவரும் தீர்மானங்களைப்பற்றியும் தமிழ்ப்பெண்களின் நிலைமையைப்பற்றியும் ஒன்றும் கூறாமல் சும்மா இருந்துவிட்டது ஆச்சரியமாயிருக்கிறது. காரைக்குடி மாதர் கூட்டத்தை ஒரு அரசியல் கூட்டம் என்று அவர் பீடிகை போட்டுக் கொண்டதானது சிறப்பாகக் குறிப்பிடப்பட வேண்டிய பெண்கள் சமூகச் சீர்திருத்தங்களைப்பற்றி ஒன்றும் கூறாமல் மௌனம் சாதித்தமைக்கு ஒரு சமாதானமாகும் போலும்! நிற்க,

தமிழ்நாட்டுப் பெண்கள் மகாநாடு நிறைவேற்றிய தீர்மானங்

களைப்பற்றிக் கவனிப்போம். "காந்தியடிகள் விரைவில் உடல் நலம் பெற்று மீண்டும் அரசியலில் கலந்து கொள்ளவேண்டும். ஸ்ரீமதி கமலாநேரு விரைவில் குணம் அடைந்து தாய்நாட்டுக்குத் திரும்பி வர வேண்டும். ஸ்ரீமான் சக்கரவர்த்தி ராஜகோபாலாச்சாரியார் பூரண சுக மடைந்து அரசியல் வாழ்க்கையில் ஈடுபடவேண்டும். காங்கிரஸ் திட்டங்களை நிறைவேற்றி வைப்பதில் பெண்கள் ஊக்கமும் சிரத்தையும் காட்டவேண்டும். ஸ்தல ஸ்தாபனங்களில் பெண்கள் தங்கள் பங்கைப் பெறத் தீவிரமாய் முயலவேண்டும். வாக்குரிமை உள்ள பெண்கள் வாக்காளர் ஜாப்தாவில் தங்கள் பெயர்கள் சேர்க்கப்பட்டிருக்கின்றனவா என்று கவனித்துக் கொள்ளவேண்டும். தீண்டாதார் முன்னேற்றத்திற்கு மாதர்கள் கடமை உணர்ச்சியுடன் உழைக்க முன் வரவேண்டும். சொத்துரிமை விவாகம் இவ்விஷயங்களில் ஆண் பெண் இருபாலாருக்கும் சமஉரிமை ஏற்படுமாறு ஹிந்து சட்டத்தை மாற்றி அமைக்கக் காங்கிரஸ்காரர்கள் முயற்சி செய்யவேண்டும். ஸ்தல ஸ்தாபனங்கள் ஆரம்ப ஆசிரியர் பதவிகட்குப் பெண்களையே அதிகமாக நியமிக்கவேண்டும். பெண்கள் சாதிவேற்றுமைகளைக் காட்டும் முறையில் புடவைகளை உடுத்தக்கூடாது. அநாவசியமான நகைகளை அணிந்து கொள்ளக்கூடாது. பெண்கள் காந்தியடிகள் கண்டுள்ள கிராம புனருத்தாரணத் திட்டத்திலும் முக்கியமாகக் கைக்குத்து அரிசி உபயோகத்திலும், கதர் சுதேசி வளர்ச்சியிலும் கருத்தைச் செலுத்த வேண்டும்"—இவைகளே ஷை மாதர் மகாநாட்டில் நிறைவேற்றப் பட்ட தீர்மானங்களின் சாரம். இவற்றுள் சொத்துரிமை, விவாகம் இவ் விஷயங்களில் ஆண் பெண் இருபாலாருக்கும் சமஉரிமை ஏற்படுமாறு சட்டம் செய்யவேண்டும் என்று காங்கிரஸ்காரர்களைக் கேட்டுக்கொண்ட தீர்மானம் வெகு முக்கியமானது. நம் நாட்டுப் பெண்கள் இக்காலத்தில் அநுபவித்துக் கொண்டிருக்கும் கஷ்ட நஷ்டங்கட்கெல்லாம் மூலகாரணமாயிருப்பது அவர்கட்குச் சொத்துரிமை இன்மையேயாகும். ஒரு தாய்வயிற்றில் பிறந்த குழந்தைகளில் ஆண் என்ற காரணத்தால் ஆணுக்குச் சொத்துரிமை அளிப்பதும் பெண் என்ற காரணத்தால் பெண்ணுக்குச் சொத்துரிமை மறுப்பதும் பெரிய அநீதியாகும். மேலும் விவாக விஷயத்திலும் பெண்கள் அநியாயக் கொடுமைகட்கு உட்படுத்தி வைக்கப்பட்டிருக்கின்றனர். ஆண் மகன் மனைவி இறந்த மறுகணமே வேறு கலியாணம் செய்து கொள்ளலாம். ஒருவன் பல பெண்களைக் கலியாணம் செய்து கொள்ளலாம். இதற்கெல்லாம் சாஸ்திரங்களும் சட்டங்களும் தாராளமாக அநுமதி அளிக்கின்றன. பெண்ணுக்கு இத்தகைய சௌகரியங்கள் இல்லை. பெண்ணின் பரிதாபத்தைக்கண்டு ஏதேனும் பரிகாரம் தேடலாம் என்றால் சாஸ்திரங்களும் சட்டங்களும் குறுக்கே விழுந்து வழிமறிக்கின்றன. எனவே ஷை விஷயங்களில் ஆண்-பெண் சமத்துவம் நிலைநாட்டச் சட்டம் செய்யவேண்டும் என்ற

தீர்மானத்தைக் கண்டு மகிழ்கின்றோம். அடுத்தபடியாக ஸ்தல ஸ்தாபனங்கள் ஆரம்பஆசிரியர் பதவிகட்குப் பெண்களையே நியமிக்கவேண்டும் என்ற தீர்மானமும் குறிப்பிடத்தக்கதாகும். பெண்கள் இயற்கையாகவே பொறுமைக் களஞ்சியங்களாகவும், குழந்தைகளின் அருமை பெருமைகளை அறிந்தவர்களாகவும் இருப்பதால் சிறுவர்களின் மனப்போக்கைக் கவனித்து அறிந்து நடத்தும் தகுதிவாய்ந்தவர்களாயிருக்கிறார்கள். மேனாடுகளில் ஆரம்பப் பள்ளிக்கூடங்களில் பெரும்பாலும் பெண்களே ஆரம்ப ஆசிரியர்களாயிருக்கும் உண்மையும் இங்கே சிந்திக்கத்தக்கது. எனவே இந்தத் தீர்மானமும் சிறப்பு வாய்ந்ததாகும். மேலும் பெண்கள் சாதிவேற்றுமைகளைக் காட்டும் முறையில் புடவைகளை உடுத்துவதும், அநாவசியமான நகைகளை அணிவதும் கூடாது என்று கேட்டுக்கொண்ட தீர்மானம் அர்த்த புஷ்டி யுடையதாகும். பெண்மணிகளின் உள்ளங்களில் தீவிரமான மாறுதல் ஏற்பட்டாலொழிய இந்தத் தீர்மானத்தின் கருத்து எளிதில் நடைமுறைக்கு வாராது என்பது உறுதி. முதலில் ஆடை ஆபரணங்கள் விஷயத்தில் பெண்மணிகள் வைத்துள்ள ஆடம்பர உணர்ச்சியைக் குறைக்க வழிதேடவேண்டும். பிறகு மேற்கண்ட சீர்திருத்தம் எளிதில் நிறைவேறும் என்பதில் ஐயமில்லை.

நமது நாட்டுப் பெண்களைப் பற்றிய சில முக்கியமான விஷயங்களில் காரைக்குடிப் பெண்கள் கூட்டம் கருத்தைச் செலுத்தாதது ஒரு பெருங்குறை என்றே சொல்லவேண்டும். வரவேற்புக் கழகத் தலைவரான ஸ்ரீமதி விசலாக்ஷி அம்மாள் பெண்களுக்குப் பொட்டுகட்டிவிடும் தீமையைச் சுட்டிக் காட்டினார். ஷை மகாநாடு அது பற்றி எத்தகைய தீர்மானமும் செய்யாத காரணம் என்ன என்று நம்மால் அறிந்துகொள்ள முடியவில்லை. கடவுளரின் பெயரால் வியபிசாரம் செய்வதற்கு ஆக்கம் அளிக்கும் முறையில் ஒரு பெண் சமூகத்தை இழிவுபடுத்தி யிருக்கும் கொடுமை நமது நாட்டைத் தவிர வேறு எங்கும் காணமுடியாது இம் முறையை ஒழிப்பதற்கு ஒரு சிலர் முயன்றும் பயன் படவில்லை. பெரிய விடங்களிலிருந்தே எதிர்ப்பு வந்தது. காரைக்குடிப் பெண்கள் கூட்டம் இவ் விஷயத்தை எடுத்துக் காட்டித் தீர்மான ரூபமாகக் கண்டித்திருக்க வேண்டும் என்பது நமது கருத்து. குடும்பப் பெண்கள் பரத நாட்டியம் கற்றுக் கொண்டு ஆடவேண்டும் என்று ஒரு சில தலைவர்கள்-அறிஞர்கள் என்பவர்கள் பிரசாரம் செய்யத் தலைப் பட்டிருக்கின்றனர். இவ் விஷயத்திலும் ஷை மகாநாடு ஒரு வழிகாட்டி யிருக்கவேண்டும்; போனது போகட்டும்; இனிமேலேனும் பெண்களின் பெயரால் நடைபெறும் கூட்டங்கள்—மகாநாடுகள் பெண்களுக்குச் சிறப்பாகவுள்ள பிரச்சினைகளைக் கவனிக்கவேண்டும் என்று விரும்புகின்றோம்.

ஓம் தத் ஸத்.




# பிரம சூத்திரம்.

(சித்தூர் பண்டித-பூ. ஸ்ரீநிவாசன்)

(253-ம் பக்கத் தொடர்ச்சி.)

## முதல் அத்தியாயம்-நான்காம் பாதம்

(சில சுருதிகளில், 'அவ்யக்தம்', 'அஜா' முதலிய பதங்கள் காணப்படுகின்றன. அப் பதங்களின் பொருள் இப் பாதத்தில் விசாரிக்கப்படுகின்றது. அன்றியும், அப்பதங்கள் சாங்கிய நூல்களில் காட்டப்பட்டுள்ள பிரதானத்தைக் குறிப்பனவல்ல வென்பதும் நிரூபிக்கப்படுகின்றது.)

### 1. ஆநுமாநிகாதி கரணம்.

1-வது சூத்திரம் அவதாரிகை:—

"இந்த்ரியேப்ய: பராஹ்யர்தா அர்தேப்யச்ச பரம்மந: !
மநஸச்ச பராபுத்திர் புத்தேராத்மா மஹாந்பர: !
மஹத: பரமவ்யக்த மவ்யக்தாத் புருஷ: பர: !
புருஷாந்ந பரம்கிஞ்சித் ஸாகாஷ்டா ஸா வராகதி: "

(இந்திரியங்களைவிட விஷயம் மேலானது; விஷயத்தைவிட மனம் மேலானது; மனத்தைவிட புத்தி மேலானது; புத்தியைவிட மகதாத்மா மேலானது; மகதாத்மாவைவிட அவ்யக்தம் மேலானது; அவ்யக்தத்தைவிட புருஷன் மேலானவன்; புருஷனைவிட மேலானவன் இல்லை; அவனே மேலானவன்; அவனே எல்லை.)

இந்த கடோபநிஷத் வாக்கியத்தில் உள்ள அவ்யக்தம் என்னும் பதம் எதைக் குறிக்கின்றது? சாங்கியர்களால் சொல்லப்படுகிறபடி பிரதானத்தைக் குறிக்கின்றதா? அல்லது இந்த வாக்கியத்திற்கு முன்புள்ள "ஆத்மாநம் ரதிநம் வித்தி சரீரம் ரதமேவச" (ஆத்மா ரதிகன்; சரீரம் ரதம்) என்னும் வாக்கியத்திலுள்ள சரீரத்தைக் குறிக்கின்றதா? என்பது சங்கை. (அவ்யக்தம் என்பது பிரதானமே என்று சாங்கியர்கள் வாதித்தலால் அவர்கள் வாதம் சரியன்று என்பதை நிரூபிப்பதற்காக இங்கு சங்கைக்குரிய விஷயமாக இஃது எடுத்துக்கொள்ளப்பட்டது.)

சூ. 1. "ஆநுமாநிகமப்யே கேஷாமிதி சேந்ந
சரீர ரூபக விந்யஸ்த க்ருஹீதேர் தர்சயதிச"

பதவுரை:—ஆநுமாநிகமபி=பிரதானமும், ஏகேஷாம்=சிலருடைய (காடகரின்) பிரிவுகளில், இதிசேத்=பிரதிபாதிக்கப்பட்டிருக்கின்றது என்பாயானல். ந—அது சரியன்று; ஏனெனில், சரீரரூபக விந்யஸ்த க்ருஹீதேஃ=(முந்திய வாக்கியத்தில்) ரத வடிவமாகக் கூறப்பட்ட சரீரத்தையே இங்கு அவ்யக்தம் என்னும் பதம் போதித்தலால்; தர்சயதிச=அவ்வாறே சுருதியும் பொருள் தருகின்றது.

கருத்து:—சாங்கிய நூல்களில் தத்துவங்கள் இருபத்தைந்து என்று சொல்லப்பட்டிருக்கின்றன. அவை;—1. புருஷன், 2. பிரதானம், 3. மகத் தத்துவம், 4. அகங்காரம், 5. சூக்ஷ்ம தன்மாத்திரைகள் ஐந்து, 6. ஸ்தூல தன்மாத்திரைகள் ஐந்து, 7. ஞானேந்திரியங்கள் ஐந்து, 8. கர்மேந்திரியங்கள் ஐந்து, 9. மனம் என்பனவாம்.

பிரதானம் ஜகத்காரணம் என்று வேதத்தில் கூறப்படாமையின் அது (பிரதானம்) அசப்தம் (வேதத்தில் கூறப்படாதது) என்று "ஈக்ஷதேர்நாசப்தம்" என்னும் சூத்திரத்தில் விளக்கப்பட்டது.

சாங்கியர்களின் வாதம் என்னவெனில், "மேற்கண்ட வாக்கியத்தில் சாங்கிய மதானுசாரமாகச் சில தத்துவங்கள் குறிப்பிடப்பட்டிருக்கின்றன. ஆனல், புருஷதத்துவத்திற்கும் மகத்தத்துவத்திற்கும் மத்தியில் பிரதான தத்துவம் இருக்கவேண்டிய இடத்தில் அவ்யக்தம் வைக்கப்பட்டிருக்கிறது. அந்த அவ்யக்தம் சாங்கியமத நூல்களில் பிரதான பரமாக வழங்கப்பட்டிருக்கின்றது. ஆகலின், பிரதானம் அசப்தம் என்பது சரியல்ல. தவிர, இங்கு அவ்யக்தம் என்பதற்குப் பொருள் பிரதானமேயாம்" என்பதாம்.

(இனி, சாங்கிய வாதம் சரியன்று; அவ்யக்தம் என்பது சரீரமேயாம் என்று நிரூபிக்கப்படுகின்றது.)

"அவ்யக்தம் பிரதானமன்று; சரீரமேயாம். எப்படியெனில், மேற்கண்ட விஷய வாக்கியத்திற்கு (ஆராய்ச்சிக்கு விஷயமாக எடுத்துக்கொள்ளும் வாக்கியத்திற்கு விஷயவாக்கியம் என்று பெயர். "இந்த்ரியேப்ய:" என்று தொடங்கும் வாக்கியம் இங்கு விஷய வாக்கியம் என்பதை இந்த அதிகரணத்தின் தொடக்கத்தில் காண்க). முந்திய வாக்கியத்தில் "ஆத்மா, சரீரம், புத்தி, மனம், இந்திரியங்கள், விஷயங்கள், போக்தா" என்னும் பதார்த்தங்கள் சொல்லப்பட்டிருக்கின்றன. அப்படியே இந்த விஷயவாக்கியத்திலும் 'இந்திரியங்கள், அர்த்தங்கள் எனவே விஷயங்கள், மனம், புத்தி, அவ்யக்தம், புருஷன்' என்னும் ஏழு பதார்த்தங்கள் சொல்லப்பட்டன. இந்த இரண்டு வாக்கியங்களிலும் இந்திரியங்கள் மனம் புத்தி இம் மூன்றும் சரியாக காட்டப்பட்டிருக்கின்றன. முதல் வாக்கியத்திலுள்ள ஆன்மா, விஷயங்கள், போக்தா என்னும் பதங்களுக்குப் பதிலாக இரண்டாம் வாக்கியத்தில் புருஷன், அர்த்தங்கள், மகாத்மா என்பவை குறிக்கப்பட்டுள்ளன. இனி முதல் வாக்கியத்தில் சரீரம் என்னும் பதமும் இரண்டாம் வாக்கியத்தில் அவ்யக்தம் என்னும் பதமும் மிகுந்திருக்கின்றன. முன்னும் பின்னும் உள்ள விஷயங்

களைக் கொண்டு அறியப்படுவதாகிய பாரிசேஷக நியாயத்தை யொட்டிப் பார்க்குமிடத்து சரீரமும் அவ்யக்தமும் ஒன்றே என்பது பெறப்படுகின்றதே. ஆகலின் முந்திய வாக்கியத்தில் ரத வடிவமாகக் கூறப்பட்டுள்ள சரீரமே இரண்டாம் வாக்கியத்தில் அவ்யக்தம் என்னும் பதத்தால் குறிக்கப்பட்டிருக்கின்றது என்பது தெளிவாகும். ஆகவே, சாங்கியர்களின் வாதம் சரியல்ல.

2-வது சூத்திரம் அவதாரிகை.—"அவ்யக்தம் என்னும் பதம்" 'ந+வ்யக்தம்" எனப் பிரிந்து வெளிப்படாதது அதாவது திருசியமாகாத பொருள் என்னும் அர்த்தமுடையதாகின்றதே. அதனைச் சரீரம் என்று எப்படிச் சொல்லலாம்" என்று மேலும் சாங்கியர் செய்யும் வாதத்திற்குச் சமாதானம் சாற்றப்படுகின்றது.

சூ. 2. "ஸூக்ஷ்மந்து ததர் ஹத்வாத்"

பதவுரை:—ஸூக்ஷ்மந்து=சூக்கும சரீரமாகிய காரண சரீரமே (அவ்யக்தம் என்று சொல்லப்படுவது); ஏனெனில், ததர் ஹத்வாத்=அதற்கு அவ்யக்தம் என்று சொல்லப்படத்தக்க யோக்கியதை இருத்தலால்.

கருத்து:—அவ்யக்தம் எனப்படுவது காரண சரீரமே என்று கொண்டால் மேற்காட்டிய சந்தேகம் சம்பவியாது.

3-வது சூத்திரம். அவதாரிகை:—அப்படியானால் காரண சரீர சமுதாயமே அவ்யக்தம் என்றல்லவா சித்தாந்திகள் சொல்லவேண்டிவரும். எல்லாருக்கும் சம்மதமானவிதமாக அந்த அவ்யக்தமே ஸ்தூல பிரபஞ்சத்திற்குக் காரணமாயுள்ள தென்றும், அதனையே சுதந்திரமாகிய ஜகத்காரணம் என்றும் கூறுவதில் குற்றமென்ன? என்று பூர்வபக்ஷிகள் செய்யும் வாதம் இச் சூத்திரத்தால் மறுக்கப்படுகின்றது.

சூ 3. "தததீநத்வா தர்தவத்"

பதவுரை:—தததீநத்வாத்=ஈசுவரனுடைய ஆதீனமாயிருத்தலால், அர்தவத்=அவ்யக்தம் பிரயோஜன முடையதாகின்றது.

கருத்து:—பிரகிருதி ஜடசொரூபமாயினும் ஈசுவராதீனமாயிருத்தலால், தொழிற்படுவதாகின்றது. அது சுதந்தர சக்தியுடையதாகுமானால் பலதீமைகளையும் செய்யலாம். முக்தர்களைப் பத்தர்களாக்கலாம். பிரவிருத்தியில் எவ்வித பிரயோஜனமும் யோசனையும் அதற்கு இல்லாமற்போதலால், அது பயனற்ற வியாபாரம் செய்கின்றது எனச் சொல்லவரும். இது யுக்தமாகாதல்லவா?

(இங்கு, "சிருஷ்டிக்கு முன்பு வெளிப்படாத நாம ரூபங்களையுடையதாய் பீஜாத்மகமான (விதைபோலுள்ள) அவ்யாக்ருதத்தை அவ்யக்தம் என்று சித்தாந்திகள் கூறுகின்றார்கள். தூல சூக்கும சரீரங்களும் காரண சரீர சம்பந்தத்தால் அவ்யக்தம் எனப்படத் தக்கவை யாகின்றன என்பது அவர்கள் கொள்கை. பிரதானமே காரணம் என்னும் வாதத்திலும் இப்படியே சொல்லப்படுதலால் அவ்யக்தம் ஏன் பிரதானமென்று சொல்லலாகாது". என்பது சாங்கியரின் வாதம்.

பரமேசுவரன் ஆதீனத்திலிருந்துகொண்டு அது சிருஷ்டி செய்கின்றது என்று சித்தாந்திகள் கூறுகிறார்கள். சுதந்தரமாகவே சிருஷ்டி செய்கின்ற தென்று பூர்வபக்ஷிகள் சொல்லுகிறார்கள். பரமேசுவரனை ஆசிரயித்துள்ள இந்த பீஜசக்தி அவித்யாத்தன்மையுடையதாக அவ்யக்தம் என்னும் பெயருக்குரியதாகின்றது. அது மாயா சொரூபம். மகா சுஷுப்தி என்னும் வேறு பெயருடையது. அதனிடத்து சொரூப ஞானமின்றி ஜீவர்கள் ஒடுங்கிக் கிடக்கின்றார்கள்.

இதற்கே அவ்யக்தம், அவ்யாக்ருதம், மகாமாயை, ப்ரக்ருதி, தமசு அவித்தை என்னும் பெயர்களை வேதங்கள் கூறுகின்றன. இந்த பீஜசக்தி ஞானத்தால் தகிக்கப்பட்டாலன்றி மோக்ஷப்ராப்தி யுண்டாகாது.)

4-வது சூத்திரம். அவதாரிகை:—அவ்யக்தம் பிரதானமன்று என்பதற்கு மற்றொரு காரணம் சொல்லப்படுகின்றது.

சூ. 4. "ஜ்ஞேயத்வா வசநாச்ச ||"

பதவுரை.—ஜ்ஞேயத்வா வசநாத்—ச=தெரிந்துகொள்ளத் தக்கதென்று சொல்லப்படாமையாலும்—(அவ்யக்தம் பிரதான மன்று.)

கருத்து:—இந்த வாக்கியத்தில் (விஷய வாக்கியத்தில்) அவ்யக்த பதார்த்தம் ஞேயம் (தெரிந்து கொள்ளத்தக்கது) என்று கூறப்படாமையாலும் அது (அவ்யக்தம்) சாங்கிய நூல்களிற் சொல்லப்படும் பிரதானம் என்று சொல்ல முடியாது.

சாங்கிய நூல்கள் "வ்யக்தாவ்யக்தஜ்ஞ விஜ்ஞாநாத்" என்று கூறுகின்றன. இதன்படி பிரபஞ்சம், பிரதானம்; புருஷன் இவைகளைத் தெரிந்து கொள்வதால் மோக்ஷம் சித்திக்கு மென்பது அவர்கள் கருத்து. ஆகவே இந்த (விஷய) வாக்கியத்தில் அவ்யக்தம் தெரிந்துகொள்ளத் தகுந்தது என்று சொல்லப்படவேண்டும். அவ்வாறு சொல்லப்படவில்லை. ஆதலால் அவ்யக்தம் பிரதானமன்று.

5-வது சூத்திரம். அவதாரிகை:—"அவ்யக்தம் ஞேயமென்று சொல்லப்படாமையின் அது பிரதானமன்று என சித்தாந்திகள் சொல்வது சரியல்ல; ஏனெனில் பின் வாக்கியத்தில் "அசப்த மஸ்பர்ச மரூபம்" என்று அதன் தன்மைகள் கூறப்பட்டு 'அதைத் தெரிந்து மிருத்யுவைக் கடக்கிறான்' என்றும் சொல்லப்பட்டிருக்கிறது" என்று சாங்கியர்கள் மேலும் கூறும் வாதம் கண்டிக்கப்படுகின்றது.

சூ. 5. "வததீதிசேந்ந, ப்ராஜ்ஞோஹி ப்ரகரணாத் ||"

பதவுரை:—வததி=அவ்யக்தம் ஞேயம் என்று சுருதி கூறுகின்றது, இதிசேத்=என்பாயானால், ந=அப்படி சுருதி கூறவில்லை; ப்ரகரணாத்=பிரகரண சந்தர்ப்பத்தால், ப்ராஜ்ஞோஹி=ப்ராக்ஞனே ஞேயம் என்று அது கூறுகின்றது.

கருத்து:—"அசப்தம் அஸ்பர்சம்" என்னும் வாக்கியத்தால் குறிக்கப்படுபவன் ப்ராக்ஞனேயன்றி அவ்யக்த மல்ல. "ஏஷஸர்வேஷு பூதேஷு கூடோத்மாந ப்ரகாசதே' (அவன் எல்லா பூதங்களிலும் மறைந்திருக்கிறான்.

ஆத்மா பிரகாசிப்பதில்லை) என்னும் வாக்கியத்தில், காணப்படாதவனும் மறைந்துள்ள ஆத்மாவைத் தெரிந்துகொள் என்று சுருதி போதிக்கின்றதேயன்றி அவ்யக்தத்தைத் தெரிந்து கொள்ளும்படி போதிக்கவில்லை.

தவிர, பிரகிருதி புருஷ விவேகமே மோக்ஷசாதனம் என்பது சாங்கிய நூல்களின் கருத்து. அங்ஙனமாக, கேவலம் பிரகிருதி ஞானமே மோக்ஷசாதனம் என்று அவர்கள் வாதிப்பது அவர்களின் அபிப்பிராயத்திற்கே விரோதமாகும்.

6-வது சூத்திரம்:—அவதாரிகை:—முன் வாக்கியத்தில் ஞேயம் என்று சொல்லப்பட்டிருக்கும் பொருள் பிரதானமல்லவென்று உறுதிப் படுத்தப்படுகிறது.

சூ. 6. த்ரயாணாமேவசைவ முபந்யாஸ: ப்ரச்நச்ச"

பதவுரை:—த்ரயாணாமேவ=மூன்று பதார்த்தங்களுக்கே, உபந்யாஸ:= விடையும் ஏவஞ்ச=அப்படியே, ப்ரச்நச்ச=கேள்வியும் இருத்தலால் சுருதியில் சொல்லப்பட்டது பிரதானமல்ல.)

கருத்து:—நசிகேதஸ் என்னும் முனிகுமாரன் யமலோகம் சென்றபோது, எமன் அவனை நோக்கி மூன்று கேள்விகளைக் கேள் என்று மூன்று வரங்கள் கொடுத்தான். அப்போது அவன்,

(1) என் தந்தை என்னைப் பிரியத்தோடு பார்ப்பாரா?

(2) சொர்க்க சாதனமான அக்கினி வித்தையின் சொரூபம் எப்படிப் பட்டது?

(3) மரணத்திற்குப் பிறகு சரீரத்தினும் வேறான வஸ்து ஒன்று இருக்கின்றதா? இருந்தால் அதன் சொரூபம் எத்தகையது?

என்று மூன்று கேள்விகளையே கேட்டான். அதற்கு விடைகளும் மூன்றே கொடுக்கப்பட்டன.

மூன்றாவது கேள்விக்கு "மூன்று சரீரங்களுக்கும் வேறாய், சர்வ வியாபியாய், நித்தியமாய், கர்த்ருத்வாதி சூன்யமாய், எல்லா வேதங்களாலும் கூறப்படுவதாய் இருக்கிற பிரம்மமே மிகுதியாயுள்ள பொருள்" என்று போதிக்கப்பட்டது. ஆகையால் இந்த உபாதியினின்றும் நீங்கின ஜீவன் பிரம்மத்தினும் அபின்னன் என்று சுருதி கூறவந்ததேயன்றி, பிரதானத்தைச் சொல்ல வரவில்லை என்பது விளங்குகின்றது.

7-வது சூத்திரம். அவதாரிகை:—அவ்யக்தம் பிரதானம் என்று சாங்கிய நூல்கள் சொலவதாக வாதிப்பது சரியல்ல வென்று மறுக்கப்படுகின்றது.

சூ. 7. "மஹத்வச்ச"

பதவுரை:—மஹத்வத்—ச=மஹத் என்னும் பதத்திற்கு சாங்கிய நூல்கள் கூறும் அர்த்தம் எப்படி சரியாகாதோ (அப்படியே அவ்யக்தம் என்னும் சொல்லிற்குக் கூறும் அர்த்தமும் சரியாகாது.)

கருத்து:—"மஹாந்தம் விபுமாத் மாநம்," "வேதாஹமேதம் புருஷம் மஹாந்தம்" என்னும் வாக்கியங்களிலுள்ள மஹத் என்பதற்கு மகத்தத்துவம்

என்று சாங்கியர்கள் அர்த்தம் சொல்லுகின்றார்கள். அது சரியன்று. மஹத் என்பதற்குப் பரமாத்மா என்பதே சரியான பொருள். அப்படியே அவ்யக்தம் என்பதற்கும் சரீரம் பொருளே யன்றி பிரதானம் அர்த்தமன்று.

## 2. சமஸாதிகரணம்.

8-வது சூத்திரம் அவதாரிகை:—"ச்வேதாச்வதர உபநிஷத்தில்" அஜாமேகாம் லோஹித சுக்ல க்ருஷ்ணாம் பஹ்வீ ப்ரஜாஸ்ஸ்ருஜ மாநாம் ஸரூபா: ॥ அஜோஹ்யேகோ ஜுஷமாணோநு சேதே, ஜஹாத்யேநாம் புக்தபோகா மஜோந்ய:"॥

என்று ஒரு வாக்கியம் இருக்கிறது. இதன் பொருள்: "சத்துவ ரஜஸ் தமோ குணங்களை யுடையதும ஒன்றானது மாகிய அஜா என்னும் பொருள் (பிரதானம்) மகதாதி தத்தவங்களைச் சிருஷ்டிக்கின்றது. பிறப்பில்லாத ஒரு புருஷன் அதை யனுபவித்துக் கொண்டிருக்கிறான். பிறப்பில்லாத மற்றொரு புருஷன் போகங்களை விடுகிறான்" என்பதாகும்.

இந்த வாக்கியத்தில் சாங்கிய நூல்களில் பிரசித்தியாகப் பேசப்படும் பிரதானமே பிரபஞ்ச காரண மென்று நன்றாகச் சொல்லப் பட்டிருக்கிறது. அங்ஙனமாக அதனை (பிரதானத்தை) அசப்தம் (வேதத்தில் பேசப் படாதது) என்று சொல்வது நியாய மற்ற வாதம்" என்று சாங்கியர்கள் கூறுகின்றனர். அதற்கு சமாதானம் சொல்லப்படுகின்றது.

### சூ. 8. "சமஸவ தவிசேஷாத்."

பதவுரை:—சமஸவத்=வேள்விக் குபயோகமாகும் பாத்திரங்களைக் குறிப்பதாகிய 'சமஸ' என்னும் பதத்தைப் போலவே, அவிசேஷாத்=குறிப்பிடப் படாமையால் (அஜ என்பது பிரதான பரமே என்று சொல்ல முடியாது.)

கருத்து:—சமஸ என்னப்படுவது யாகங்களில் உபயோகப்படுத்தும் ஒரு வித பாத்திரங்களைக் குறிப்பதே யன்றி தனித்த ஒரு பாத்திரத்தைக் குறிப்பதில்லை. அப்படியே அஜா என்னும் பதமும் பிறப்பில்லாத வஸ்துக்க ளெல்லாவற்றையும் குறிக்குமே யன்றி, இது என்று தனிப் பொரு ளொன்றைக் குறிக்காது. ஆகையால், மேலே காட்டிய வாக்கியத்திலுள்ள அஜா என்னும் பதத்திற்கு பிரதானமே அர்த்த மென்று சொல்ல முடியாது.

9-வது சூத்திரம். அவதாரிகை:—"அப்படியானால் அஜா என்பதன் பொருள் என்ன?" என்னும் சாங்கியர் கேள்விக்கு விடை.

### சூ. 9. "ஜ்யோதி ருபக்ரமாது ததாஹ்யதீயத ஏகே॥"

பதவுரை:—ஜ்யோதிருபக்ரமாது=ஜோதி வடிவமான பொருளே (பிரகிருதியே) அஜாசப்த வாச்யம். ததாஹி=அப்படியே யல்லவா, ஏகே=சாமவேதிகள். அதீயதே=கானம் செய்கின்றார்கள்.

கருத்து:—மேலே காட்டப்பட்ட வாக்கியத்திலுள்ள அஜா என்னும் பதத்திற்கு தேஜஸோடு கூடிய பிரகிருதி என்பது பொருள். அந்த வாக்கியத்தில் லோகித (செம்மை) சுக்ல (வெண்மை) கிருஷ்ண (கருமை) பதங்கள் அக்கினியின் நிறத்திற்குக் காரணமான பூதங்களைக் குறிக்குமேயன்றி, சத்துவ

ரஜஸ் தமோகுணங்களைக் குறித்தலில்லை. (அக்கினியில் உள்ள செந்நிறம் தேயுவின் சம்பந்தம்; வெண்ணிறம் ஜலசம்பந்தம், கருநிறம் பிருதிவியின் சம்பந்தம்.)

இதனால் மாயையே குறிக்கப்படுகின்றது. வாக்கிய சேஷத்தாலும் இந்த மாயை சுதந்தரமற்றது என்பது பெறப்படுகின்றது. ஆகையால், இந்த மாயையே அவ்யாக்ருத (வெளிப்படாத) நாம ரூபங்களையுடையதாய் ஜகத் காரணமாயிருப்பதாக இந்தப் பிரகரணத்தில் தெரிவிக்கப்பட்டது.

10-வது சூத்திரம் அவதாரிகை:—"அஜா என்னும் பதத்திற்கு இடுகுறிப் பொருள் (காரணமில்லாமல் இடப்பட்ட குறியாக ஒரு பொருளுக்கு வழங்கும் பெயர் இடுகுறிப் பெயர்; காரணத்தால் வழங்கும் பெயர் காரணப் பெயர். ஆடு என்பது காரணப் பெயரின்படி பார்த்தால் பிறப்பில்லாத பொருளுக்கு ஆகின்றது. (ஆட்டிற்கு அப் பெயர் இட்டதிற்குக் காரணம் என்ன? காரணமில்லை. காரணமில்லாமல் இடப்பட்ட பெயர் ஆகலின் அது இடுகுறிப் பெயராகும். பிறப்பற்றவன் என்னும் பொருளில் 'அ' என்பது இன்மைப் பொருளையும் 'ஜ' என்பது பிறப்பு என்னும் பொருளையும் தரும். ஆகலின் இங்கு காரணப் பெயராகின்றது இவ்விரண்டில் எந்த அர்த்தத்திலும் 'அஜா' என்னும் சொல் அக்கினியின் நிறங்களுக்காகாது. லோகித சுக்ல கிருஷ்ண வர்ணங்களுள்ளதாகக் கூறப்பட்ட அஜ (ஆடு) ஒரு ஜாதி யுடையது. ஒளி வடிவங்கள் வெவ்வேறு ஜாதி வஸ்துக்களா யிருக்கின்றன. ஒரு ஜாதியைக் குறிக்கும் ஒரு பதம் பின்ன ஜாதிகளுடைய மூன்று வஸ்துக்களை எப்படி காட்டும்? காட்டாது. ஆகலின் இடுகுறிப் பொருளும் பொருந்தாது. ஒளிப் பொருள்கள் தோற்றம் பிறப்பு உடையனவாகலின், பிறப்பில்லாதது எனப் பொருள்படும் காரணப்பொருளும் பொருந்தாது", என்னும் சாங்கியர்கள் வாதத்திற்குச் சமாதானம்.

சூ. 10 "கல்பனோப தேசாச்ச மத்வாதிவத விரோதः"

பதவுரை:—கல்பனோபதேசாத்=அவ்யக்தத்தை ஆடாகக் கூறுவதால்; மத்வாதிவத்=சூரியனை மதுவாகவும், வாக்கைப் பசுவடிவமாகவும், புருஷனை அக்கினி வடிவமாகவும் வேதம் வருணித்துக் கூறியது போலவே; அவிரோதः=விரோதமில்லை.

கருத்து:—இங்கு அஜா என்னும் பதத்திற்கு இடுகுறியர்த்தமுமில்லை, காரண அர்த்தமுமில்லை. ஆனால் கௌணார்த்தம் இருக்கிறது (கௌணம்=அமுக்கியம்.) எனவே, ஒளியோடு கூடியதாய், பிரபஞ்ச காரணமாய், ஈசுவராதீனமாய் இருக்கும் மாயை என்பது இதன் பொருளாம். உபதேச சுலபத்திற்காக அது செம்மை வெண்மை கருமை நிறங்களையுடைய ஆட்டிற்குச் சமானமாகச் சொல்லப்பட்டதேயன்றி உண்மையில் ஆடு என்பது கருத்தல்ல. இப்படி கௌணார்த்தம் கொடுக்கும் இடங்கள் சுருதியில் பலவுண்டு.

குறிப்பு:—மேலே காட்டப்பட்ட "அஜாமேகாம்," என்று தொடங்கும் வாக்கியத்திற்குச் சாங்கியர் கூறும் அர்த்தமே அங்கு காட்டப்பட்டது. வேதாந்திகள் அதற்கு "மாயை சகலவித ஜீவராசிகளைச் சிருஷ்டிக்கின்றது. பத்த ஜீவன் அவித்யாமோகிதனாய் சம்சாரத்தை அனுபவித்துக்கொண்டிருக்கிறான்; முக்தன் அவற்றை விடுகின்றான்" என்று பொருள் கொள்ளுகின்றனர்.

# குழந்தைகளின் உரிமை

(தென்னாப்பிரிகா, டர்பன் சரஸ்வதி சபைத்தலைவர்
திரு. ச. முனிஸ்வாமி பிள்ளை.)

---

போதிய அளவு சுத்தமான உணவு சுத்த ஆகாயம் சுத்தமான உடை.

போதிய அளவு நல்ல நித்திரை விளையாடுவதற்கு வசதி நிறைந்த ஆடற் கூடம்,

விளையாட்டுக் கருவிகள் அவற்றைக் கொண்டு விளையாடும் முறைகளைப் பற்றிய போதனை.

தமக்கு அபாயம் சிறிதுமிலா வழிகளில் தீரமாய் ஓடியாட உரிமை.

தம் கைகால்களையும், நாவையும் நல்வழியில் எக்காலத்தும், உபயோகிக்க வுரிமை.

கிரகத்திலும் கல்விசசாலைகளிலும், இயன்றவரை அழகிய இயற்கைப் பொருள்களாலும், தாம் சூழப்பட உரிமை.

மேற்படி பொருள்களை தத்தம் ஐம்பொறிகளால், செவ்வனே பரிசோதித்து அறிந்து கொள்ள உரிமை.

சங்கீதம், சித்திரம் முதலிய பலவித சாஸ்திரங்களை இயன்றவரை இளம் பிராயத்திலேயே அப்பியசிக்க உரிமை.

தாம் உண்மை யுள்ளோராயும், கண்ணிய முள்ளோராயும், இருக்குமாறு கற்பிக்கப்பட உரிமை.

தாம் தெய்வபக்தி, தேசபக்தி, குருபக்தி, சத்யம், சாந்தம், தயை, பரோபகார சிந்தை முதலிய குணங்கள் வாய்ந்திருக்குமாறு பழக்கப்பட உரிமை.

தமது ஔவைப் பாட்டையும், சிந்தனையும், பெற்றோர் முன்னும், ஆசிரியர் முன்னும், நிர்ப் பயமாய்த் தெரிவிக்க உண்மை.

தமது மனோ கர்மம் அன்னவர்களால் தன்குணம் பெற்றுத் தாம் அதனை அப்பியசிக்க முயலுங்கால், அன்னவரது குறைவிலா உதவியைப் பெற உரிமை.

அடிமைகள் போலும், மிருகங்கள் போலுமின்றி, சண்டையில், எதிரிகளை வதைப்பதற்குப் பழக்கப் பெறும் போர்வீரர்களைப் போலுமின்றி, மனிதரின் மாண்புமிக்க தெய்விக இயல்புவாய்ந்த இறைவனது திருவுருத்தாங்கிய ஜீவர்களைப்போல் பிரேமையுடனும், மரியாதை யுடனும், எக்காளிலும், நடத்தப்பட உரிமை.

இவையே குழந்தைகள் எப்போதும், மாசிலா ஆனந்தத்தோடு வாழ்வதற்குரிய உரிமைகள்.

# மணித் திரட்டு

ஜப்பானில் காட்டப்படும் வெளிநாட்டுச் சினிமாப் படங்களில் வரும் முத்தமிடுங் காட்சிகளைக் கத்தரித்து எடுத்துவிடுகின்றனராம்.

*　　*　　*　　*

ஹிட்லருக்கு ஒவ்வொரு நாளும் சுமார் 1000 கடிதங்கள் வருகின்றனவாம்.

*　　*　　*　　*

உலகில் உபயோகிக்கப்பட்டுவரும் விவசாய நிலங்களின் விஸ்தீரணம் 340,00,000 சதுர மைல்களெனக் கூறப்படுகிறது.

*　　*　　*　　*

டாக்டர் பண்டுயின் என்ற பிரஞ்சு நிபுணர், ஒரே கர்ப்பத்தில் ஒன்பது பிள்ளைகள் கூடப் பிறக்கக்கூடுமென்று கூறுகிறார்.

*　　*　　*　　*

முஸோலினிக்கு அவரது அதர்ம யுத்த முறையைக் கண்டித்து நாள் தோறும் 500 மொட்டைக் கடிதங்கள் வருகின்றனவாம்.

*　　*　　*　　*

சில ரசாயனப் பொருள்களைக் கலந்து அவற்றைத் தெளிப்பதன் வாயிலாக மழையைக் கொண்டுவரலாமென போலந்து தேச விவசாயி யொருவர் கூறுகிறார்.

*　　*　　*　　*

அபிசீனியாவில் இப்போது நடைபெற்று வரும் சண்டையில் இத்தாலியரிடம் கைப்பற்றிய ஏராளமான டாங்கிகளைக் கொண்டு எதியோபிய வீரர்கள் ஒரு டாங்கிப் படையைத் தயார் செய்திருக்கின்றனராம்.

*　　*　　*　　*

400 யுத்த டாங்கிகளுக்கும், 1000 மெஷின் பீரங்கிகளுக்கும் ஈரான் சர்க்கார் ரஷியா முதலிய தேசங்களுக்கு ஆர்டர் கொடுத்திருக்கின்றனராம்.

*　　*　　*　　*

லார்டுகள் மீது ஏதாவது குற்றஞ் சாட்டி வழக்குத் தொடர வேண்டுமானால், அவர்களை லார்டுசபை வாயிலாகவே விசாரிக்கவேண்டுமாம்.

*　　*　　*　　*

கிறிஸ்துமஸ் விழாவின்போது ஸ்வீடன் தேசத்தில், ஒவ்வொரு குடும்பத்திலுமுள்ள மூத்த பெண்கள் தலையில் மெழுகு வர்த்திகளைக் கொளுத்தி வைத்துக் கொண்டு மாதா கோவிலுக்குப் போவது வழக்கமாம்.

*　　*　　*　　*

1935-ம் வருஷத்தில் பிரிட்டனில் 16,678 புத்தகங்கள் வெளியிடப்பட்டிருக்கின்றன. மற்ற வருஷங்களைக் காட்டிலும், இவ் வருஷம் புத்தக வெளியீடுகள் அதிகமாம்.

# பழந்தமிழர் ஓவியக்கலை

—:(o):—

(தே. ப. பெருமாள்.)

பண்டைத் தமிழர் ஏனைய கலைகளை யொப்பவே ஓவியக் கலையிலும் தேர்வு பெற்றிருந்தனர். அவர் இயற்கையினை ஓவியமாகப் பொறித்து இறையென வழிபட்டு வந்தனர். இயற்கையைக் கடவுளெனக் கொண்ட அன்னார் ஓவியத்தினையும் தெய்வத்தன்மை பொருந்திய ஒன்றென நினைந்து அவற்றினை இல்லங்களிலும், அறிஞர் கூடும் மன்றங்களிலும், இளைஞர் பயிலும் கல்விக் கழகங்களிலும் பொறித்து, கண்ணாரக் கண்டு மகிழ்ந்து தொழுது வழிபட்டுத் தமது தெய்வத்தன்மையையும், ஓவியக் கலையையும் பெருக்கி வந்தனர். இற்றை நாளில் இடிந்து பாழ்பட்டுச் சிதறிக் கிடக்கும் பண்டை மண்டபங்களையும் ஆலயங்களையும் நோக்குங்கால் பண்டைத் தமிழரது ஓவியக்கலையின் சிறப்பையும் அவர் கொண்ட ஓவியத்தின் உயர்வையும் எளிதில் நன்கு அறிதல் இயலும். ஏனெனின் அவ் வாலயங்களிலும் மண்டபங்களிலும் செதுக்கப் பெற்றிருக்கும் ஓவியங்கள் நமது உள்ளத்தையும் உயிரையும் ஒருங்கே கவருந் தன்மையவாய் விளங்குகின்றன. அவைகளை நோக்குநர் பண்டைத் தமிழரது ஓவியக் கலையின் திறத்தினை புகழ்ந்து கூறாது செல்லார். இற்றைக் காலத்தும் அழியாது நிலை பெறறு நிற்கும் ஆலயங்களில் ஓவியமாகப் பொலியும் இயற்கைப் பொருட்களாம் மானும் மீனும் மயிலும் குயிலும், கரியும் பரியும், ஆவும் ஏறும் மனிதரும் பிறவுங் கண்ட மேலைநாட்டு மக்கள் வியப்பெய்தியவராய்ப் பண்டைத் தமிழரின் தனிப் பெரும் ஓவியக் கலையின் வன்மையை வாயாரப் புகழ்ந்தும் கையார எழுதியும் வருகின்றனர்.

ஓவியம் என்பது ஒன்றை உள்ளவாறு எழுதிக் காட்டுதலாம். அஃதாவது காட்டை ஓவியமாக எடுத்துக் காட்டுவோன் அக் காட்டகத்தே வளரும் மரங்களையும், செடிகளையும், கொடிகளையும், ஓடும் கான் யாற்றையும், அவண் நடமாடும் வன விலங்குகளையும், பிறவற்றையும் தமது ஓவியத்தின் கண்ணே எழுதிக் காட்டுதல் வேண்டும். புலவன் ஒருவன் எவ்வாறு தமது பாவின்கண் ஒன்றை ஐயமறக் கூறிக் காட்டுகின்றனனோ அது போன்றே ஓவியம் வரையும் புலவனும் தனது சித்திரத்தின்கண் அவற்றைச் சித்தரித்துக் காட்டுதல் வேண்டும். ஓவியத்தை நோக்கும் ஒருவன் அதைக் கடிதில் எதன் ஓவியம் என்று உரைத்தல் வேண்டும். அங்ஙனமாய் எழுதப்படுதலே அழகிய ஓவியமென்பது.

அங்ஙனம் எழுதிக் காட்டுதலில் சிறிதும் வேற்றுமை இருத்தல் கூடாது. வேற்றுமை இருக்குமாயின் அது அவ் வோவியத்தையே சிதைவு படுத்தும். எங்ஙனமெனின் ஒருவரின் உருவத்தை நாம் எழுதுங்கால்—அன்னார் உறுப்பில் யாதானு மொன்றில் சிறிது மாற்றங் காணின் அம் மாற்றத்

தால் அவ் வுருவமே மாறுபட்டுப் போதுவது போலேயாம். இஞ்ஞான்றை ஓவியப் புலவரிற் பெரும்பாலாரும் அங்ஙனமே தம் ஓவியத்தைச் சிதைவு படுத்துகின்றனர். வரையின் உருவை வரைந்து காட்டுவோன் தமது வரைப் படத்தின்கண் எயில்சூழ் கிணற்றையும் காட்டுகின்றனன். இதனால் அப் படமே வேற்று வடிவங் கொள்ளுகின்றது. ஏனெனின் மலையின் மிசை எயில் சூழ் கிணறேது? அதற்குப்பதிலாகச் சுனை ஊற்றையோ, அருவி நீரால் தேங்கிய குண்டினையோ அப் படத்தின்கண் வரைந்து காட்டுவானாயின் அப் படம் மாசற்று முன்னினும் பன்மடங்கு அழகியதாய், இயற்கைக்கு மாற்ற மில்லாததாய், அறிஞரும் போற்றுந் தன்மையதாய் விளங்கும்.

ஓவியம் கவலையையும் துன்பத்தையும் மாற்றுந் தன்மையது. துன்பத் தால் வாடிய ஒருவன் அழகு மிக்க ஓவியம் ஒன்றைக் காணுவானாயின் அவ னது துன்பத்தை மறந்து விடுவன். ஏனெனின் அவனது ஆழ்ந்த நோக்கம் அவ்வோவியத்தில் செல்லுகின்றது. ஓவியப் புலவன் நண்ணியதாய் வரைந்த ஓவியம் அவன்றன் அறிவைக் கவருகின்றது. ஓவியப் புலவனின் நுண்ணிய திறத்தினைத்கண்ட அவனது நெஞ்சம் மகிழ்வு கொள்ளுகிறது. ஆனால் அவ் வோவியத்தில் வரையப்பட்டிருக்கும் அவ்வுருவத்தை நேரில் காணினுங் கூட அவன் அத்தகைய மகிழ்வு கொள்ளான். அதனினும் பன்மடங்கு ஓவியத் தைக் கண்டு மகிழ்வு கொண்டு தன் கவலையையும் துன்பத்தையும் மறக்கின் றான். இதனாலேயே நம் முந்தையர் ஓவியங்களைத் தமது இல்லங்களின் முன் சுவர்களில் பொறித்து வைத்தனர். அவற்றைப் பாதையில் செல்லும் பொது மக்கள் கண்டு தமது துன்பத்தையும் கவலையையும் மறந்து சென்றனர். மணி மேகலையில் ஓவியம் கண்டு நிற்கு மக்களை அந் நூலாசிரியர்,

"வம்ப மாக்கள் கம்பலை மூதூர்ச்
சுடும ணோங்கிய நெடுநிலை மனைதொறு
மையறு படிவத்து வானவர் முதலா
வெவ்வகை யுயிர்களு முவமங் காட்டி
வெண்சுதை விளக்கத்து வித்தக ரியற்றிய
கண்கவ ரோவியம் கண்டு நிற்குநரும்"

என்ற அழகிய அடிகளால் விளக்கமாக எடுத்துக் காட்டுகின்றார்.

நாடகம் நடித்துக் காட்டுவோர்க்கு ஓவியம் மிகவும் இன்றியமையாத தாய் இருக்கின்றது. ஓவியமின்றேல் நாடகத்தை நலம்பெற நடித்துக் காட்டு தல் இயலாது. எத்துணை நடிப்புத்திறனைக் காட்டினும் அந் நாட கம் அழகு பயக்காது. நந்தனை அரங்கத்தின்கண் நடிப்போன், வயற்பாங் கரில் வேலை செய்தலையும், புற்றரையில் மாடு மேய்த்தலையும், அரங்கத்தில் எங் ஙனம் நடித்துக் காட்டுதல் இயலும்? வயலையும் புற்றரையையும் அரங்கத்தில் அமைத்தல் இயலுமோ? அங்ஙனம் அமைக்க இயலுமாயினும் அவை மிகுந்த துன்பத்தையும் நீண்ட நேரத்தையும் பெருத்த பொருட் செலவை யுமே கொடுக்கும். ஆதலின் அத்தகைய பெருந் துன்பத்திற்கு நாடகக்கா ரர் இடங்கொடார். அவர்கள் பெரும்பாலும் ஓவியத்தைக் கொண்டே அவைகளைச் சரிப்படுத்தி நாடகங்களை நடித்துக் காட்டுகின்றனர்.

இடைக்காலத்தில் தமிழ் நாட்டில் ஓவியக் கலையின் பெருமை சிறிது குறையலாயிற்று. ஓவியக்கலையில் மக்கள் அதிக வேட்கை காட்டிலர். தம் முன்னோரால் செதுக்கப்பெற்ற ஓவியத்தினைக் காப்பதிலும் அதிகக் கவலை கொண்டிலர். ஆனதால் முன்னோரால் செதுக்கப்பெற்ற உயரிய ஓவியங்களாம் கற்சிலைகள் பல மண்ணில் புதையுண்டன. பல நீரால் இழுக்கப்பெற்றன. ஆங்காங்கே கொண்டு செல்லப்பட்டு, உடைந்தும், பொடிந்தும் இன்னும் பலவாறு சிதைந்தும் அழிந்தன. இன்னும் பல வேற்று நாட்டு மன்னராலும் ஓவியங்கள் சிதைந்தும் ஓவியக்கலைகள் கைவிடப்பட்டும் போயின.

பத்தொன்பதாம் நூற்றாண்டில் ஓவியக்கலை புத்துயிர் பெற்றது. அதற்குப் புத்துயிரளித்த அறிஞர் பலராவர். அவருள் ஒருவர் இரவிவர்மா எனும் உயிர் ஓவியப்புலவர். இரவி வர்மாவின் ஓவியங்கள் கண்ணைக் கவருந் தன்மையனவாய் கவின் பெற்றிலங்குகின்றன. இவரே இந்து புராணக் கதைகளைப் படங்களாக விளக்கி எழுதிக் காட்டியதில் தலைமை சான்றவர். இவரால் தீட்டப்பெற்ற ஓவியமே சென்னை பொருட்காட்சி சாலையில் முதற் பரிசுக்கு உரியதாய் அமைந்தது. இவர் பெருமை சான்ற பலரின் குடும்பப் படங்களையும் வரைந்துள்ளார். முதற்கண் தமிழ் நாட்டில் எண்ணெய் பூசிய படம் இவராலேயே விளக்கமாக வரையப் பெற்றது. இது எளிதில் அழியுந் தன்மையதன்று. ஏனைய படங்களினும் எண்ணெய் பூசிய படமே நெடுங்காலம் கெடாதிருக்கும். இத்தகைய இவரால் வரையப் பெற்ற படங்கள் நம் நாட்டில் இன்று ஒவ்வொருவர் இல்லத்திலும் தொங்குதல் காணலாம். இவரத ஓவியக்கலையின் திறத்தினை இருபதாம் நூற்றாண்டைக் கவிஞர் பாரதியார் மிகவும் வியந்து பாடியுள்ளார். அவை அடியிற் காணுவன:—

"மலரினில் நீலவானில்
மாதரார் முகத்தில் எல்லாம்
இலகிய அழகை ஈசன்
இயற்றினன் சீர்த்தியிந்த
வுலகினிலெங்கும் வீசி
யோங்கிய இரவிவர்மன்
அலகிலா அறிவுக்கண்ணா
லனைத்தையு நுகருமாறே
மன்னர் மாளிகையிலேழை
மக்களின் குடிலிலெல்லாம்
உன்னருந் தேசுவீசி
உவத்தினைகளிக்கச் செய்வான்
நன்ன ரோவியங்கள் தீட்டி
நல்கிய பெருமான் இந் நாட்
பொன்னணி யுலகு சென்றான்
புவிப்புகழ் போதுமென்பான்.

அரம்பை யூர்வசி போலுள்ள
அமர மெல்லியலார் செவ்வி
திரம்படவகுத்த வெம்மான்!
செய் தொழி லொப்பு நோக்க
விரும்பியே கொல்லா மின்று
விண்ணுல கடைந்து விட்டாய்?
அரம்பையர் நின் கைச் செய்கைக்
கழிதலங் கறிவை திண்ணம்."

இந் நாளில் ஓவியக்கலை நன்கு ஓம்பப்பட்டு வருகின்றது. அரசாங்கத்தார் ஓவியக்கலையைப் பள்ளிப் பாடமாக வைத்துள்ளார்கள். ஆதலின் ஒவ்வொரு கலாசாலை மாணவனும் அவசியம் ஓவியக் கலையைக் கற்றே தீரவேண்டிய திருக்கின்றது. அங்ஙனம் கற்காணுயின் அவன் கழகத்தைவிட்டு வெளித் தள்ளப்படுவன். இங்ஙனம் கலாசாலையே யன்றி ஓவியக் கலைக்குத் தனிக்கழகங்களும் நாம் காணுதல் வேண்டும். எத்தகைய முறையிலெல்லாம் நமக்கு ஓவியக் கலையை வளர்க்க இயலுமோ அத்தகைய முறையிலெல்லாம் வளர்த்து நம் பழந்தமிழ் ஓவியக்கலையின் சிறப்பை உலகிற்குக் காட்டுதல் வேண்டும்.

---

# இரத்தலும் இரப்போரும்

(V. வேங்கடாசலம் B. A.)

சென்னையில் இரவிலும் பகலிலும் தினந்தோறும் பலபல அற்புத சம்பவங்கள் நிகழ்கின்றன. ஆனால் வெகு சாதாரணமாகத் தோற்றும் காட்சிகளில் அநேகம், பூததயையுடைய ஒருவனை ஆழ்ந்த சிந்தனைக்கு ஆளாக்குகின்றன. நாம் நடக்கும்பொழுதும், மோட்டார்களில் ஏறிச்செல்லும்பொழுதும், கடற்கரையில் உலாவும்பொழுதும் கண்களைத் திறந்து வைத்துக் கொண்டிருந்தால் போதும்—மிகவும் பரிதாபம்! வழியில் செல்லும்பொழுது நம்மை வந்து வளைந்துகொண்டு முன்னும் பின்னும் போகவிடாமல் நம் மனதை மிகவும் துன்புறுத்துகின்றனர்—இந்தப் பிச்சைக் காரர்கள். சென்னையிலுள்ள ஒவ்வொரு மனிதனும் ஸ்திரீயும் இந்த ஆனந்தத்தை அநேகமாய் அநுபவித்திருப்பார்கள். ஓரளவுக்குக் கல்வி நம்மிடையில் பரவியிருந்தாலும் நம் கண்முன் நிகழக்கூடிய தீமைகளை நாம் நீக்க முயலாதிருப்பது நம்மீது பெரும் குற்றமாகுமன்றோ? இனியேனும் ஏழைகள் துயர் நீக்கப்பாடுபடாவிட்டால் பிறகு துன்புறவோர்க்கு வேறு கதிதான் என்ன? நம்மிடையிலுள்ள குற்றங் குறைகளை நாம் நீக்கிக் கொள்ளாவிட்டால் வேறு யாரால் இந்த வேலை முடியும்? என் மற்ற தேசத்தார் நம்மைக் குறைகூறி ஏளனம் செய்யார்? அதினால் நாம் கோபமடைவதில் சிறிதும் பயன் உண்டாகுமோ?

நம் தாய்நாடான இந்தியாவில் இன்று இவ்வளவு பிச்சைக்காரர்களும் சன்யாசிகளும் பைராகிகளும் எங்கிருந்து வந்தனர்? அவர்கள் உற்பத்தி வெகு அற்புதமானது. உலகில் வேறு ஒரு நாட்டிலாவது இவ்வளவு பெருந்தொகையான 'பிச்சைக்காரர்கள்' இருப்பதாய் நாம் அறிகிலோம். மற்ற நாடுகள் இந்தியாவைப்போல் பிச்சை வளருவதற்குச் சிறிதும் இடம் கொடுப்பதும் இல்லை. ஆனால் இவ்விடத்திலோ நாளுக்கு நாள் அவர்கள் எண்ணிக்கை பெருகிக் கொண்டே இருக்கின்றது. மக்களும் பலவிதத்திலும் அக் கூட்டத்திற்கு ஊக்கமளித்து வருகின்றனர். என்ன கேவலமான நிலைமை!

ஹிந்துமத சாஸ்திரங்களே தற்பொழுது பிச்சைக்காரர்கள் லக்ஷக்கணக்கில் நம்மிடையிலிருப்பதற்குப் பெரும்பாலும் காரணமாகும். "அஹிம்ஸா பரமோதர்ம:" போன்ற பல மொழிகள் நம்மிடையில் அளவுக்கு மீறின செல்வாக்குப் பெற்றுள. இவைகளாலேயே நாம் கெட்டோம். அதிதி தர்மம், ஈதல், முதலியவைகளைப்பற்றி நாம் எண்ணிலாக் கதைகள் படித்திருக்கிறோம். இவைகள் எல்லாம் என்ன காட்டுகின்றன? இன்றுகூட அநேகம் வீடுகளில் பகல் வேளையில் யாராவது ஒரு அதிதி, விருந்து இல்லாமல்

வீட்டு யஜமான் உண்பதுகிடையாது. ஆனால் ஆயிரக்கணக்கான வருடங்களுக்கு முன்னால் எழுதப்பட்ட சாஸ்திரங்களின் ஆசிரியர்கள், இவ்வளவு தூரத்துக் கப்பால் ஏற்படப்போகும் கொடுமைகளை எங்ஙனம் ஊகித்திருக்க முடியும்? அதனால் குறை அவர்கள் பேரிலன்று, நம்மீதே. காலத்துக் கேற்ப சாஸ்திரங்களையும் நாம் ஏன் மாற்றிக் கொள்ளவில்லை?

மதமே பிச்சை செழித்தோங்குவதற்கு ஒரு முக்கிய காரணம் என்பதில் சிறிதும் சந்தேகம் கிடையாது. வேறு சில காரணங்களினாலும் பிச்சை உற்பத்தியானாலும் ஆடுகள், மாடுகள் மந்தைகளில் வந்தடைவதுபோல் சமூகத்தின் கழிசல்களைப் பொறுக்கி ஒன்று கூட்டிச் சேர்ப்பதற்கு நம்மதமும் முக்கிய காரணம். நாமும் "ஐயோ, ஏழை பிச்சை கேட்கிறான். கொடுக்காதிருந்தால் மகா பாவமன்றோ? பிறகு ரௌரவாதி நகரத்தில் கிடந்துழல நேருமன்றோ?" என்ற மனப்பான்மையுடன் பிச்சைக்காரர்களுக்கு உணவு, ஆடை, படுக்க இடம் முதலியவெல்லாம் கொடுத்து அவர்கள் தொழிலை அபிவிருத்தி செய்தோம். ஈவு, இரக்கம் என்பது நம்மிடையில் ஜாஸ்தியாகிவிடவே நாமும் செய்வதின்னதென் றறியாதிருந்தோம். அதன் பலனை இன்று தெருக்களின் நடுவே செல்லும் பொழுது அநுபவிக்கிறோமன்றோ? இதைவிடப் பெரிய, கொடிய நரகமும் வேறு இருக்குமா?

ஏதோ ஒரு சில சாஸ்திரங்கள்—ஆயிரக்கணக்கான வருடங்களுக்கு முன் பிறந்தவைகள்—நாம் இருக்கும் காலத்திற்கு ஏற்றதல்லாத முறைகள் சிலவற்றைக் கூறுகின்றன. நாமும் அவைகளைக் கண்மூடித் தனமாய்ப் பின்பற்றினால் பிறகு நம்முடைய முன்னேற்றந்தான் எப்படி? எப்பொழுதுதான் நடக்கும்? இன்றுள்ள உலகமோ வேறு. வியாபாரத்திலும், சாஸ்திரங்களிலும், கலைகளிலும், முக்கியமாக மனிதர் கொள்கைகளிலும் முன் காலங்களுக்குச் சிறிதேனும் சம்பந்த மற்ற காலமிது. இன்று வாழ்க்கைப் போட்டியில் ஆங்கில விஞ்ஞானி டார்வின் கூறியதுபோல் வலிமையுடையதே ஜீவித்திருக்க முடியும். பிரயோஜன மற்றவைகளின் காலமன்று இது. ஆதலால் நாம் நம்முடைய கொள்கைகளையும் வாழ்க்கையின் லக்ஷியங்களையும் தினந்தோறும் மாற்றிக் கொள்ளவேண்டி யிருக்கிறது. இக்காரணம் பற்றிப் பல முக்கியமான விஷயங்களில் சாஸ்திர விதிகள் எங்கெங்கு ஏற்றதாயிருப்பதில்லையோ அங்கெல்லாம் அவற்றை நீக்கிவிட்டு புதியவைகள் சேர்த்துக் கொள்ளவேண்டும். பழையன கழிதலும் புதியன புகுதலும் இயல்பன்றோ? ஆகவே மக்கள் யாவரும் மிகவும் கெடுதலை விளைவிக்கக்கூடிய பிச்சையை விலக்கவேண்டு மென்பது எமது முடிந்த கருத்து. நாமே பிச்சையை உண்டுபண்ணினோம். அதை நாமே வளர்த்தோம். அதன் கொடுமைகளை இப்பொழுது அநுபவிக்கிறோம். இத்துன்பத்தினின்றும் விடுவித்துக் கொள்ளுதல் நம் நலத்திற்கேயாம்.

ஆதலால் இக்காலத்திற்குப் பிரயோஜனமற்ற சாஸ்திரங்களை யெல்லாம் ஒதுக்கி ஒருபுறம் வைத்துவிட்டு இந்தப் பிரச்னைக்கு ஒரு வழி கண்டுபிடிக்க வேண்டும். சென்ஸஸ் ரிப்போர்ட்டுகளிலிருந்து இந்தியாவில் ஆண் பெண்கள் குழந்தைகள் உள்பட ஐம்பதுலக்ஷம் பிச்சைக்காரர்களுக்குமேல் இருப்பதாகத் தெரிகிறது. இவர்களால் சமூகத்திற்கு வரும் அவதூறுகளைக் கூறவும் வேண்டுமோ? முதலாவது இவ்வளவு பெருந்தொகை இருப்பதே

நமக்கும் நம் நாட்டிற்கும் பெருத்த மானக்கேடு. பிச்சை யெடுப்பதென்ப தென்ன மிக மேலான உத்தியோகமா? அன்று. ஆயினும் இவர்கள் யாவரும் பிச்சையையே பெருந்தொழிலாகக் கொண்டுள்ளனர். இரவச்சத்தில் பிச்சை யெடுத்தலைப்பற்றி வெகுண்டு கடிந்து கூறுங்கால் திருவள்ளுவ நாயனார்,

> ஆவிற்கு நீரென் றிரப்பினும் நாவிற்
> கிரவின் இளிவந்த தில்.

என்று கூறினார். அந்நாள்தொட்டே இரத்தலைப் பெரியார் கண்டித்து வந்திருக்கின்றனர் என்பது இதிலிருந்து வெளிப்படையன்றோ? இரண்டாவதாக இவ்விரப்போர்களால் வரும் தீமைகள் பலவேயாம். தெருக்களில் அழுக்கடைந்து நாறுகின்ற கந்தைகளுடன் தேகத்தின் முக்கிய பாகங்கள் அடைபெறாமல் அங்கு மிங்கும் திரிந்து காலத்தைக் கழிக்கின்றனரே! தாங்களும் பல விதமான கொடும் வியாதிகளால் பீடிக்கப்பட்டு மற்றோர்களுடைய வியாதிக்கும் காரணமாய் இருக்கின்றனர் இந்தப் பிச்சைக்காரர்கள். நம்மை யணுகுவதாலும், கூட்டங்களில் நம்மீது அவர்கள் ஆடை,உடம்பு முதலியன படுவதாலும் தொத்துவியாதிகள் பரவுவதற்கு மிகவும் அநுகூல முண்டாகிறது. இந்த உண்மைகளையெல்லாம் இன்னும் அரசாங்கத்தாரும் மற்றவர்களும் கண்டறியவில்லை போலும்! இவ்விஷயத்தில் இந்தியாவின் முக்கிய பட்டணங்கள் வெகு பின்னாலேயே கிடக்கின்றன. கல்கத்தா பம்பாய் முதலிய விடங்களில் இந்த உபத்திரவம் இன்னும் அதிகம். காசியிலோ கேட்க வேண்டியதில்லை. கங்காநதி—புண்யநதி ஓடினாலும், இந்து கலாசாலைகள் இருந்தாலும்-விச்வநாதர் கோயில் இருந்தாலும் அது பிச்சைக்காரர்கள் பட்டினமே. முன் காலங்களில் காசிக்குச் சென்றால் மோக்ஷம் என்று சொல்லுவார்கள். இப்பொழுதோ விபரீதம்! நரகம்தான். இக்காட்சிகளை யெல்லாம் கூர்மையான கண்களுடன் கண்டால் மிஸ் மேயோ, மிஸ் பட்றீசியா செந்தால் முதலிய குறைகூறுவோர் இந்தியாவைப்பற்றி ஏன் கேவலமாய் எழுத மாட்டார்கள்? இவர்கள் கேட்டிருக்கும் கேள்விகளுக்கு என்னவிதமான பதில் அளிக்க முடியும்?

மேற் கூறியவைகளன்றி இன்னும் ஒரு முக்கியமான தீமைகூட விருக்கிறது. லக்ஷோப லக்ஷம் ஜனங்கள் வேலை செய்யாமல் திரிவதால் நாட்டிற்கு எவ்வளவு வேலை நஷ்டம்? பொருள் நஷ்டம்? சராசரி இரண்டணா தினம் சம்பாதிக்கக்கூடிய இருபது லக்ஷம் பேர் சும்மாவிருந்தால் நாளொன்றுக்கு நாற்பது லக்ஷம் அணா நஷ்டமாகிறது! இந்தியன் தினசரி வருமானம் இரண்டரை யணாவிலிருந்து ஏன் உயரப்போகிறது? தேசத்தின் வரவு ஏன் குன்றாது? செழிப்பு ஏன் குறையாது? இந்த நஷ்டமே மிகவும் பெரிய நஷ்டம்.

இன்னும் சில வருடங்கள் இதுபோலவே இருந்தால் ஒரு உலகப் புரட்சி ஏற்படுமென்று எதிர்பார்க்கலாம். இப்பொழுது படித்தோரிடமிருக்கும் வேலையில்லாத் திண்டாட்டத்தையும்விடப் பெரிய கஷ்டம் நமக்கு வரலாகும். ஆதலால் முன் கருத்துடன் இருப்பது நல்லது. பலரும் இந்த விஷயத்தைப் பற்றிச் சிந்திக்கவேண்டும். கல்கத்தா போலீஸ் கமிஷனர் சில மாதங்களுக்கு முன் இந்த விஷயத்தைப்பற்றி பிரஸ்தாபம் செய்தார். வேறு சிலரும்

சொல்லியிருக்கின்றனர். ஆனால் இத்துடன் நிற்றல் போதாது. ஒவ்வொரு இந்தியனும் தீர ஆலோசித்து இரத்தலை நீக்குவதற்குள்ள வழி தேடவேண்டும்.

கூன் குருடு முதலிய அங்கவீனர்களையும் வேலை செய்ய வியலாத வயோதியர்களையும் காப்பாற்றவேண்டியது கடமையா யிருக்கலாம். ஆனால் புஜபல பராக்கிரமத்துடன் மற்போருக்குப் போகும் வல்லமை யுள்ளவர்களைக் கட்டாயப்படுத்தி வேலை வாங்கவேண்டும். சிறுசிறு குடிசைத்தொழில்களிலும், தொழிற்சாலைகளிலும் அவர்களைப் புகுத்தி வேலை வாங்கவேண்டும். கல் லுடைப்பது, ரோடுபோடுவது, காட்டை வெட்டிப் பயிர் நிலமாக்குவது முதலிய வேலைகளைக் கொடுத்து அவர்களுக்குக் கூலி கொடுக்கலாம். அங்கவீனர்களுக்கு வீடுகள் கட்டி அவர்களைக் கட்டாயப்படுத்தி அங்கே இருக்கும்படி செய்யவேண்டும். அவர்கள் வேலை செய்வதற்கு இணங்காமல் அலைவதற்கே இணங்குகிறார்கள். பல பிச்சைக்காரர்களிடம் நான் கேட்டபொழுது அவர்கள் வீடுகளுக்குச் செல்ல முற்றிலும் மறுத்துவிட்டனர்! தெருத்தெருவாய்த் திரிந்து வாழ்வதே அவர்கள் சுகம் போலும்! ஆனால் நாம் இதை எதிர்க்கவேண்டும். பிச்சைக்காரர்களையும் சன்யாசிகளையும் வெறுக்கவேண்டும். அவர்களுக்கு ஈயாமலிருப்பதே கடமையாய்ப் பார்த்துக்கொள்ள வேண்டும். எல்லா வல்லமையும் நம்மிடத்திலேயே யிருக்கிறது.

முனிசிபாலிடிகள் கார்ப்பரேஷன்கள் மிக எளிதில் இவ்வேலையைச் செய்யக்கூடும். ஒவ்வொரு பட்டணத்தையும் விட்டு இந்தக் கெடுதலை யகற்றவேண்டும். பத்திரிகாசிரியர்களும் நிருபர்களும் மிகுந்த உதவி புரியலாம். நவீன உலகில் பத்திரிகைகள் உதவியின்றி எந்த இயக்கமும் நடைபெற்று ஜயமடைய முடியாது. ஆசிரியர்கள் தங்கள் பத்திரிகைகள் மூலம் இரப்பதால் உண்டாகும் கொடுமைகளை யெடுத்துப் பொதுமக்களுக்குக் காண்பித்து அவர்களுக்கு அறிவைப் புகட்ட முடியும். முக்கியமாக கவர்ன்மெண்டாரும் வேண்டிய சட்டங்கள் கொண்டுவந்து இரத்தலை யடக்கிவிடலாம்.

இந்த வியாதி நம்மிடையில் அதிக நாள் இருத்தல் நலமன்று. இதனால் மற்ற நாடுகள் நம்மை ஏளனம் செய்கின்றன. நாமும் பலவாறு துன்புறுகிறோம். நாட்டிற்குள் சமாதானம் கிடையாது. முன்னேற்றம் இல்லை. ஆகையால் ஒவ்வொருவரும் தங்கள் கடமைகளை உணருவாராக. இரப்போருக்கு அளிப்பதில்லை யென்று மக்கள் தீர்மானித்துவிட்டால் சில நாளில் நம்மைவிட்டு இந்தப் பிணி அகலும். இரத்தல் ஒழிவதால் நாடு வெகு சீக்கிரத்தில் முன்னேற்ற மடைந்துவிடும் என்பதில் ஐயமில்லை. கோயில்கள் முதலிய கட்டுவதற்குப் பதிலாக ஏழையர்களுக்கு வீடுகள் கட்டி அவைகளில் இன்று இரப்போர்களை வேலை செய்யும்படி செய்தால் அவர்கள் மட்டுமன்றி நாடே மிகுந்த நலன் பெறும்.

# சற்புத்திரரின் தன்மை

(கா. சின்னப்பா, தெல்லிப்பழை.)

பெற்றோர்செய் நற்றவத்தால் பிறக்கும் புத்ரர்
பேசரிய நற்குணங்கள் பெட்போ டிங்கு
கற்றவர்கள் போற்றிடவே கண்யத் தோடு
காட்டிடுவர் சீவியத்தில் இந்த உண்மை
சுற்றத்தா ரன்றியதி துரத் துள்ளோர்
சொலற்கருமா இன்புடனே எவர்க்கும் சாற்றி
மற்றவரு மவ்வண்ணம் சீவித் தற்காய்
மண்மீது நல்லுதவி புரிவார் தானே. (1)

கெட்டவர்க்குச் சற்புத்ரர் கிடைப்ப தெங்கும்
கேட்டறியோ மாதலால் பெற்றோ ரானோர்
துட்டருடன் கூடிமிகத் தூய்மை யற்றச்
சுகுணநிறை மைந்தர்களைப் பெற்றி டாது
மட்டற்ற துக்கமென்றும் மனதை வாட்ட
வருந்தியே மானிடர்க்குள் பதர்க வென்று
எட்டுணையும் கூசாதே எவரும் செப்பும்
இயல்புநிறை புத்திரரைப் பெறுதல் ஏனோ. (2)

நல்லவர்க ளென்றிந்த ஞானி லத்தோர்
நாடோறும் செப்பிடுநன் மைந்த ரானோர்
சொல்லரிய அன்புடனே பெற்றோ ருற்றோர்
தூய்மைநி றை ஆசிரியர் சொல்வ தெல்லாம்
எல்லையிலா இன்புடனே என்றும் கேட்டு
இயன்றவரை ஒழுகிடுவர் இவரைக் காண்போர்
செல்வமெனச் சாற்றிடுதற் கிந்த மைந்தர்
சீரன்றோ தக்கதெனச் செப்பு வாரே. (3)

சித்தத்தே தீயகுணம் செறிந்தோர் தம்மைச்
சிவனருளால் புத்திரராய்ப் பெற்ற தாக
எத்தனையோ மானிடர்கள் எண்ணி யென்றும்
இன்புறுதல் தனைநாமு முற்று நோக்கின்
பத்தியினல் திருவருளைப் பெறாத தாலே
பந்தமதைப் பெருக்கிநிதம் பரித வித்து
உத்தமரின் உறவதனை விட்டே யிங்கு
உண்மையாய் மயங்கினரென் றெண்ண லாமே. (4)

பொய்களவு சூதுடனே தீமை யென்று
பூவுலகோர் சாற்றிடுவ தொன்றை யேனும்
செய்வதற்கு மனமதின்றித் தெரிந்தோர் செப்பும்
சீரியநற் சேவைகளில் ஈடு பட்டு
உய்வதற்கு வேண்டிடுநல் லூழி யங்கள்
உண்மைநிலை நின்றுபுரி புத்ர ரானோர்

எய்தரிய நன்னிலேயே எய்தி என்றும்
இவ்வுலகி லின்புடனே யிருப்பர் தானே. (5)

வயதுடனே அனுபவமும் மிக்கோர்க் கென்றும்
வணக்கமாய் மரியாதை செய்வர் பின்னும்
பயமில்லா தெஞ்ஞான்றும் சிவி யத்தைப்
பன்னரிய சீலமுடன் செய்திங் குய்வர்
இயல்பாக இவர்களிலே அமைந்து தோற்றும்
எழிலதனைக் கண்டவர்கள் இவரை வாழ்த்தி
ஜெயம்பெறுவீர் நீரென்று செப்புந் தன்மை
செகமதில் எவருக்கும் தெரியும் தானே. (6)

கெட்டவர்கள் கூட்டமதை விட்டெந் நாளும்
கேள்விகல்வி யாதியவால் திருத்த முற்று
விட்டுமே இழிதொழில்கள் எல்லா மென்றும்
விழைவுடனே ஈசனருள் வேண்டி நின்று
எட்டுணையும் எத்தீமை தனக்கு மாளாய்
இன்னலுற்று வாடிமனம் சோர்ந்தி டாது
இட்டமுடன் நற்குணத்தின் பயனு மென்றும்
இன்புடனே அனுகூலம் பெறுவர் தானே. (7)

முற்பிறவி தனிலேநாம் மொழிந்த செய்த
முழுவதுமிப் பிறவிக்கு வித்தா மென்று
கற்றோர்கள் கழறுவதைக் கசட ரானோர்
கவனிபா திருமாந்திங் கிருப்ப தாலே
அற்பரெனப் பெரியோர்கள் அவரைக் கூறி
அவனிதனிற் பழிபாவ மின்றி நீரும்
சற்சனராய் வாழுவதே நலம தாகும்
தவறுநீ ரெனப்புத்தி கூறு வாரே. (8)

பொறுமைதனைப் பூஷணமாய்ப் பூணு வோர்கள்
பொறாமையெனும் புன்மைதனை மனதால் நீக்கிச்
சிறுமைதனைச் சிறிதேனும் சிந்தை தன்னைச்
சேர்ந்திடவே தருணமதை ஈந்தி டாமல்
வறுமைவந்து வருத்திடினும் மனஞ்சோ ராது
மண்ணுலகோர் வகுத்திடுநற் குணங்கள் தாங்கி
உறுதுணையென் றுத்தமர்கள் உரைக்கு மீசன்
ஒருவரையே எண்ணிடுவர் உண்மை தானே. (9)

புத்திரர்க்குள் நல்லவரென் றுலகி லுள்ளோர்
புத்திநிறை அன்புடனே புகலு கின்ற
பத்திநிறைந் திடுமெவரும் பலரும் வாழ்த்தப்
பாருலகில் பலநன்மை புரிவ தோடு
வித்தைதனை விழைவுடனே என்றும் கற்று
வேதவிதி படியறங்கள் விரும்பிச் செய்து
எத்தினமும் இறைவனது தியானத் தோடு
இருங்கதியை யெய்திடுவா ரிதுமெய் யன்றே. (10)

# வைத்தியப் பகுதி

---

(வி. சங்கரையர்.)

## 2. ஷர்பத்துப் பிரகரணம்

1. நன்னாரி ஷர்பத்து:—50 ரூபாயெடை நன்னாரிவேரை இடித்து 1½ படி வெந்நீரில் 6 மணிநேரம் ஊறவைத்து வடிகட்டி ¾ படியாக வற்ற வைத்து வடிகட்டி 50 ரூபாயெடை சீனியைக் கரைத்துக் காய்ச்சி பிசின் பருவத்தில் இறக்கிச் சீசாவில் அடைத்து வைத்துக்கொள்ளவும். 2 ரூபாயெடை ஷர்பத்துடன் 4 ரூபாயெடை ஜலம் விட்டுச் சாப்பிடவும். இதனால் மேககாங்கை, பிரமேகம், நீர்ச்சுருக்கு, நீர்க்கட்டு, மேகநீர், கை கால் கண் எரிவு, நாவறட்சி தீர்ந்து தேகம் குளிர்ச்சி யடையும்.

2. சந்தன ஷர்பத்து:—முற்றின நல்ல மைசூர் சந்தனக்கட்டைத் தூளில் 2 பலத்தை 10 பலம் தண்ணீரில் 24 மணிநேரம் ஊறவைத்து மறுநாள் வடிகட்டி 4 பலம் நீர் வற்றினதும் வடிகட்டி 12 பலம் சீனியும் 2 பலம் பன்னீரும் சேர்த்துக் காய்ச்சிப் பிசின் பருவத்தில் இறக்கிச் சீசாவில் வைத்துக் கொள்ளவும். இந்த ஷர்பத்து மூலச்சூடு முதலிய உஷ்ணரோகங்களைச் சொஸ்தப்படுத்தும்.

3. ரோஜாப்பூ ஷர்பத்து:—18 ரூபாயெடை காய்ந்த ரோஜாப்பூவை ½ படி வெந்நீரில் 12 மணிநேரம் ஊறவைத்து வடிகட்டி ¼ படியாக வற்ற வைத்து ½ பலம் பன்னீரும் 180 ரூபாயெடை சீனியும் கலந்து காய்ச்சிப் பிசின் பருவத்தில் இறக்கிச் சீசாவில் அடைத்து வைத்துக்கொண்டு வேளை 1-க்கு 1 ரூபாயெடை ஷர்பத்துடன் 2 ரூபாயெடை தண்ணீர் கலந்து சாப்பிடவும்.

4. தாமரைப்பூ ஷர்பத்து, 5. வல்லாரை ஷர்பத்து, 6. வில்வ ஷர்பத்து:—ரோஜாப்பூ ஷர்பத்துப் போலவே செய்யவும்.

இந்த நான்கு வகை ஷர்பத்துகளை உபயோகிப்பதனால் நீர்க்கட்டு, நீர்ப்பிணைப்பு, மேகச்சூடு, மேககாங்கை முதலிய உஷ்ண ரோகங்கள் தீரும்.

7. திராக்ஷைப்பழ ஷர்பத்து:—திராக்ஷைப்பழத்தை இடித்து சாறு பிழிந்து வடிகட்டி சமம் சீனி சேர்த்து 2½ பலம் பன்னீரும் விட்டுக் காய்ச்சிப் பிசின் பாகத்தில் இறக்கிச் சீசாவில் வைத்துக்கொள்ளவும. 3 ரூபாயெடை வீதம் எடுத்து ஆறு ரூபாயெடை தண்ணீர் சேர்த்துச் சாப்பிட்டால் பித்தச்சூடும், கைகால் எரிவும தீரும்.

8. எலுமிச்சம்பழ ஷர்பத்து:—எலுமிச்சம்பழத்தின் சாற்றின் இருபங்கு சர்க்கரை சேர்த்து ஷர்பதது செய்யவும்.

9. நாரத்தம்பழ ஷர்பத்து, 10. மாதுளம் பழ ஷர்பத்து:—எலுமிச்சம்பழ ஷர்பத்துபோலவே செய்யவும். சகல பித்தநோய்களும் தீரும்.

11. இஞ்சி ஷர்பத்து:—6 ரூபாயெடை இஞ்சியைத் துண்டுகளாக நறுக்கி ½ படி வெந்நீரில் போட்டு 4 மணிநேரம் ஊறவைத்து வடிகட்டி 75 ரூபாயெடை சர்க்கரையைக் கரைத்து ஷர்பத்து செய்யவும்.

12. துளசி ஷர்பத்து:—20 பலம் துளசி ரசத்துடன் 20 பலம் சர்க்கரையைச் சேர்த்து பாகமாக ஷர்பத்து செய்து உபயோகிக்கவும். இதனால் மூளைக்கொதிப்பு, ஜ்வரம், இருமல், பலஹீனம் இவைகள் தீரும். ஞான விருத்தியு முண்டாகும்.

13. சுக்கு ஷர்பத்து:—சுக்கை மணலுக்குள் பொதிந்து 20 நாள் தினமும் ஈரம் வாங்காமல் ஜலம்விட்டு வந்து பிறகு எடுத்துச் சிறு துண்டுகளாக நறுக்கி, அதற்கு 3 பங்கு தேன் சேர்த்து 15 நாள் மூடி வைத்து அதன் பிறகு தினமும் காலை மாலை ஒரு தோலா வீதம் 2 தோலா ஜலத்தில் விட்டு சாப்பிட பலஹீனம், நீர்எரிச்சல், வெள்ளை, வாதம், ஜ்வரம், அஜீரணம், வயிற்றுவலி முதலியவை தீரும்.

## 3. ஸ்நான தைலங்கள்

1. வெட்டிவேர் தைலம்:—வெட்டிவேர் 10 பலத்தை 8 படி நீரில் போட்டு 1 படியாக வற்றவைத்து வடிகட்டி 1 படி நெல்லெண்ணெயுடன் கலந்து அதிமதுரம், கருஞ்சீரகம், தேவதாரு, கடுக்காய் வகைகட்கு ½ பலம் வீதம் அரைத்துக் கலக்கி காய்ச்சி வடிகட்டி வைத்து முழுகி வந்தால் குஷ்டம், கண்புகைச்சல், காதுமந்தம், தேகஎரிவு இவைகள் தீரும்.

2. வில்வாதி தைலம்:—வில்வவேர் 10 பலம் இடித்து 8 படி தண்ணீர்விட்டுக் காய்ச்சி 1 படியாக்கி வடிகட்டி நல்லெண்ணெய் 1 படி விட்டு சந்தனம் 1 பலம், கடுக்காய், கஸ்தூரிமஞ்சள், ஏலம், வகைக்கு ¼ பலம் வீதம் அரைத்துக் கலக்கிக் காய்ச்சி வடிகட்டி வைத்து முழுகி வரவும். இதனால் பித்தம், தேகக்காந்தல், மேகம், கண்புகைச்சல், உட்சுரம், வறட்சி இவை தீரும்.

3. சந்தனாதித் தைலம்:—நல்லெண்ணெய், பசுவின்பால் வகைக்கு 1 படியுடன் சந்தனத்தூள் 2 பலம் திருமஞ்சனத் திரவியம் ¼ பலம் இவைகளைப் பசுவின்பால் விட்டு அரைத்துக்கலக்கிக் காய்ச்சி வடிகட்டி வைத்து முழுகி வரவும். இதனால் உடல்எரிவு, வெட்டை, கண் கால் காந்தல் முதலியவைகள் நீங்கும்.

4. ஆமலகத் தைலம்:—நெல்லிக்காய், கரிப்பான் இவைகளின் சாறு வகைக்கு படி 1, கற்றாழைச்சாறு படி 1, செவ்விளநீர், பசுவின்பால் வகைக்கு படி 1, நல்லெண்ணெய் 2½ படி இவைகளை ஒன்று சேர்த்து அதில் அதிமதுரம், கோஷ்டம், ஏலம், குரோசாணி ஓமம், பூலாங்கிழங்கு கஸ்தூரிமஞ்சள், ஜடாமஞ்சி, சீரகம், ஜாதிப்பத்திரி, லவங்கப்பட்டை, திரிகடு, திரிபலை, வால்மிளகு, செண்பகமொட்டு; ரோஜாமொட்டு, விளாமிச்சம், வெட்டிவேர் வகைக்கு ½ தோலா வீதம் பசுவின்பாலில் அரைத்துக் கலக்கிக் காய்ச்சி வடிகட்டி முழுகி வரவும். மாலைக்கண், நேத்திரநோய், வெள்ளெழுத்து, பித்தவெட்டை, அஸ்திவெட்டை, உடம்பெரிவு, உஷ்ணநோய்கள் தீரும். மூக்குக்கண்ணாடி போட்டுக் கொள்ளவேண்டிய அவசியமே ஏற்படாது.

5. கரிப்பான் தைலம்:—கரிப்பான்சாறு, நல்லெண்ணெய் வகைக்கு 1 படி சேர்த்துக் கற்றாழைச்சாறு, நெல்லிக்காய்ச்சாறு ½ படி வீதம், ஜாதிக்காய் கஸ்தூரிமஞ்சள், வகைக்கு 1 பலம் வீதம் பசுவின்பாலில் அரைத்துக் கலக்கிக் காய்ச்சி வடிகட்டி முழுகிவரக் கண்ணோய்கள், தலைவலி, செவிநோய்கள் முதலிய தீரும்.

6. சகல நேத்திரரோகங்களுக்கும் தைலம்:-(a) நெல்லிக்காய், கையாந்தரை, இவைகளின் சாறு, பசுவின்பால் வகைக்கு ½ படி, நல்லெண்ணெய்படி 1 சேர்த்து அதில் அதிமதுரம், கோஷ்டம், ஏலம், லவங்கம், சண்பகப்பூ, சந்தனம், வெட்டிவேர், விளாமிச்சவேர், வகைக்கு 1 பலம் வீதம் இளநீரில் அரைத்துக் கலக்கிக் காய்ச்சி வடிகட்டி முழுகிவர சகல கண்வியாதிகளும் தீரும்.

(b) நெல்லிக்காய், கையாந்தரை, வகைக்குச் சாறு படி ½ நல்லெண்ணெய், பசுவின்பால் வகைக்கு படி ¼, கலந்து 1 பலம் அதிமதுரத்தையும் 1 பலம் சந்தனத்தூளையும் அரைத்துக்கலக்கிக் காய்ச்சி வடிகட்டி முழுகி வரவும்.

7. ஒருதலைவலி, கபாலவலி, மண்டைவலிக்குத் தைலம்:—(a) நல்லெண்ணெய், குப்பமேனிச்சாறு, மலைவேப்பிலைச்சாறு, தைவிளைச்சாறு சமம் சேர்த்துக் காய்ச்சி வடிகட்டி முழுகி வரவும்.

(b) நல்லெண்ணெய்படி 1, எருக்கம்பூச்சாறு ½ படி, சுக்கு, இந்துப்பு, அதிமதுரம், வசம்பு, திப்பிலி. திப்பிலிமூலம் (தேசாவரம்) வெள்ளுள்ளி, இவை வகைக்கு 1 பலம் வீதம் இடித்துப் போட்டுக் காய்ச்சி வடிகட்டி முழுகி வரவும்.

(c) நல்லெண்ணெய், பசுவின்நெய், வெற்றிலைச்சாறு வகைக்குப் படி 1, கருஞ்சீரகம், பலம் 1¼ பொடித்துப்போட்டுக் காய்ச்சி வடித்து ஒருநாள் விட்டு ஒருநாள் குளிக்கவும்.

8. செவிரோகத்துக்குத் தைலம்:—1 படி நல்லெண்ணெயில் 1 பலம் நிலப்பனைக்கிழங்கை யரைத்துப் போட்டுக்காய்ச்சி வடித்துத் தலை முழுகி வரவும்.

## 3. பல்வகை

A. ரத்த சுத்திக்கு:—(1) ½ பலம் வெந்தயத்தை உலரப்போட்டு அரைத்து 4 தேங்காய்ப்பாலில் கலக்கி அதில் கருப்புகட்டி 1 பலம், பசுவின் நெய் $\frac{1}{16}$ படி விட்டுக் காய்ச்சி நெய்யை வடித்து 3-நாள் இருவேளையும் சாதத்தில் விட்டுச் சாப்பிடவும்.

(2) ஆடாதோடையிலை, தூதுளையிலை இவைகளை இடித்துப் புட்டவித்து உழக்குச்சாறு பிழிந்து அதில் கோஷ்டம், திப்பிலி, பால்சாம்பிராணி இவைகளை வெதுப்பிப் பொடித்துப்போட்டு 3 நாள் சாப்பிடவும்.

(3) கருங்குங்கிலியத்தைக் கருப்புக்கட்டியுடன் சமம் பொடித்து அதில் கோழிமுட்டையின் வெள்ளைக்கருவும் நல்லெண்ணெயும் சமம்

சேர்த்து கம்பிப் பிசின்போல் வரும்வரை கல்வத்திலிட்டு அரைத்து காலைச் 6 மணிக்கு முன் போஜனம் செய்துவிட்டு 3 நாள் சாப்பிடவும்.

B. கர்ப்பபோஷண கிருதம்:-(1) பர்ப்படகப்புல், கரிப்பான் வகைக்கு ஒரு பெரிய எலுமிச்சம்பழ அளவு அரைத்து 1 படி பசுவின் நெய்யில் கலக்கி நன்ருக சிவக்க வெந்தபருவத்தில் இறக்கி வடிகட்டி 5 வது மாத முதல் தினம் இரவு ஒரு சிறுகரண்டி யளவு கொடுத்து வரவும். குழந்தை ஆயுசுடனும், அதிக சிரமமில்லாமலும் ஜனிக்கும்.

(2) தாமரைப்பூ, நெய்தற்கிழங்கு, நொச்சிவேர், ஆம்பற்பூ, விலாமிச்சம், முந்திரிப்பழம், அரசின்பட்டை, மருதின்பட்டை, இலுப்பைப்பூ, திப்பிலி இவைகளைச் சமம் சேர்த்து இடித்துப் பொடிசெய்து வைத்துக் கொள்ளவும். கர்ப்பஸ்திரீகளுக்கு உண்டாகும் வயிற்றுவலி, உளைச்சல், பசியில்லாமை, கர்ப்பக்குழாய் அழற்சி முதலிய லக்ஷணங்கள் கண்டால் ஷை பொடியைப் போட்டு கஷாயம் வைத்து வடிகட்டி சீனியும் பசுவின்பாலும் சேர்த்துக் கொடுக்கவும்.

(3) ஷை உஷ்ணத்துக்கு சீரகக்கஷாயத்தில் பசுவின் வெண்ணெய் போட்டுக் கொடுக்கவும்.

C. கர்ப்பவாயு புழு முதலியவைகளுக்கு:—(1) விளக்கெண்ணெய் படி 1 தும்பை, பொடுதலை, கற்ருழை இவைகளின் சாறு வகைக்கு ⅛ படி, திரிகடு, திரிபலை, கோஷ்டம், ஏலம், கிராம்பு, இவை வகைக்கு பலம் 1 ஷை சாறுவிட்டு நன்ருக அரைத்துக்கலக்கிக் காய்ச்சி வடிகட்டி ஒருநாள் விட்டு ஒருநாளாக தினம் படுக்கைக்கு முன் 1 முட்டைக்கரண்டி வீதம் 40 நாள் சாப்பிடவும்.

(2) பூண்டு பலம் 1, கல்லுப்பு, இந்துப்பு, வளையலுப்பு, வெடியுப்பு, நவாசாரம், வெண்காரம், பெருங்காயம் வகைக்கு விராகனெடை 2 சுத்தி செய்த சேர்வாளம் விராகனெடை 10 இவைகளை எல்லாம் பொடித்து மூன்று முற்றினதேங்காயின் பூவிற்குள் வைத்து புட்டவியலாக அவித்துப் பிறகு மருந்துகளை மாத்திரம் எடுத்து அரைத்து ஷை தேங்காய்ப்பாலிலேயே கலக்கிக் காய்ச்சி ஒரு காசெடை 15 நாட்களுக்கு ஒருமுறை கொடுத்து வரவும். அன்று நன்ருகப் பேதியாகும். பகலில் புழுங்கரிசிக்கஞ்சியும் இரவு மோரன்னமும் சாப்பிடலாம்.

(3) சிற்ருமணக்கெண்ணெய், கருநொச்சி, கையாந்தரை வகைக்கு ¼ படி சாறு, எலுமிச்சம்பழச்சாறு, நல்லெண்ணெய், பசுவின் நெய் வகைக்கு ¼ படி, மிளகு ⅛ படி காயம் நெரிஞ்சில் சமூலம் இடித்த பொடி வகைககு 1 பலம் ஷை சாறறில் அரைத்துக் கலக்கிக்காய்ச்சி வடிகட்டி குளித்த பிறகு 3 நாள் இரவு படுக்கும் முன் 1 முட்டைக் கரண்டிவீதம் சாப்பிடவும்.



# மலர்

(சே. கி. சுப்பிரமணியன்.)

தாவரத் தொகுதியில் 'மலர்' அல்லது 'புட்பம்' மிகவும் முக்கியமான பாகம். ஆதலால் அம்மலரைக் குறித்துச் சிறிது எனது சிற்றறிவிற்கு எட்டியவாறு வரையலானேன்.

பூக்களில் முதலாவது உண்டாவதை அரும்பு என்றும், முகிழ்த்த பூவை முகை என்றும், மலரும் பருவத்துப் புட்பத்தைப் போது என்றும், மலர்ந்த பூவை மலர் அல்லது அலர் என்றும், உதிரும் பருவத்து மலரை வீ என்றும் கற்றறிந்த கவிஞர்கள் நவிற்றுகிறார்கள். இது நோக்கியே மாதானுபங்கி, அரும்பு, மலர், போது என்னும் வேற்றுமைப்பாடுள்ள ஈரடி வெண்பாவை ஈண்டு,

"காலை யரும்பிப் பகலெல்லாம் போதாகி
மாலை மலரும்..........."

எனத் தமது அருமையான வாயுறை வாழ்த்தில் வாக்களித்துள்ளார்.

பூக்களில் கோட்டுப்பூ, கொடிப்பூ, நிலப்பூ, நீர்ப்பூ என நான்கு வகைப்படும். இம்முறைபற்றியே நிலங்களை நான்கு பாகங்களாகப் பகுத்துள்ளார் பண்டைக்காலத் தமிழ்ப் பாவேந்தர். எங்ஙனமெனின், மலையும் அதைச்சார்ந்த இடமும் குறிஞ்சிநில மெனப்படும். ஓர்வகைக் கோட்டுப்பூவாகிய குறிஞ்சி என்னு மலரை மலையில் மிகுதியாகக் காணலாம், ஆகவே, இப்புட்பத்தின் பெயரையே அதற்கிடமாகிய நிலத்திற்கு இட்டு வழங்கினர். இவ்வண்ணமே முல்லை யென்னும் கொடிப்பூ அதிகமாகக் காணக்கூடிய காடும், அதைச் சார்ந்த பூமியும் முல்லை நிலமெனப் பெயர் பெற்றது. மருதம் என்னும் நிலப்பூ ஏராளமாக மலரக்கூடிய வயலும், அவ்வயலை யணுகிய பிரதேசமும் மருத நிலமென்னும் நாமத்தை அடைந்தது. நெய்தல் எனப்படும் நீர்ப்பூ நிரம்பிக் காணும் கடலும், அக் கடலுக் கண்மையானபாகமும் நெய்தல் நிலமென்று விளங்கிற்று.

பண்டைத் தமிழ்ப் புலவர்கள், நதிகள், நாடுகள் முதலியவைகளைச் சிறப்பித்துக் கூறுமிடத்துப் புட்பங்களை அவைகளுடன் சேர்த்து வருணிக்கிறார்கள். இதற்குச் சான்றாக சிலப்பதிகாரத்தில், இந்திரவிழவுக்காக கடற்கரைக்குச் சென்ற கோவலனும், மாதவியும், அவர்கள் ஒருவர்க் கொருவர் மற்றொரு காதலியையும், காதலனையும் முறையே காதலிப்பதுபோல பல வரிப் பாட்டுகளைப் பாடினார்கள். அவைகளில் மாதவி பாடிய செய்யுளில் காவிரி நதியைக் குறித்து,

"பூவார்சோலை மயிலாடப் புரிந்து குயில்களிசைபாடக்
காமர் மாலை யருகசைய நடந்தாய் வாழி காவேரி
காமர் மாலை யருகசைய நடந்தவெல்லாம் நின் கணவன்
நாமவேலின் திறங்கண்டே அறிந்தேன் வாழி காவேரி."

எனப்பாடினன். இச் செய்யுளில் முதலிரண்டு அடியும் நதியின் சிறப்பாகும். தவிரவும், 'பூஞ்சோலை', 'அழகிய மாலை' என்னும் பொருள்களடங்கிய வார்த்தைகள் நமது செவிகளுக்கு எவ்வளவு இனிமையாயிருக்கின்றன. "குளத்துக்கணி யென்ப தாமரை' என்று நான்மணிக்கடிகையில் விளம்பி நாகனுர் விளம்பிய பிரகாரம் குளங்களுக்கு ஆபரணமாயிருப்பது கமல மலராகும் என்பது உண்மையே.

பூக்கள் நுகர்வதற்கு நறுமணமும், உற்று நோக்குமளவில் இனிய வனப்பும், கரத்தாற் பற்றும் போழ்து தண்ணிய மென்மையும் அளிக்கின்றன. அலரொன்றைக் காணும் கண்கள் அக்கணமே நமது கரத்திற்குத் தந்தி அடித்தாற்போல சாடைகாட்டி அவ்வலரைப் பறிக்கக் கட்டளையிடுகின்றன. பறித்ததும், மூக்கானது, நாம் நம் தொழிலைச் செய்யவேண்டுவது அவசியமல்லவா என்று நினைத்து அப் புட்பத்திலுள்ள நறுமணங்களைத் தன்னிடம் இழுத்து நமது மனத்திற்கு அனுப்புகிறது. அம் மனமும் ஆனந்த ஆழியில் ஆழ்ந்து பிரமிக்கின்றது. பின் சிறிது உணர்வெய்தியதும் அம் மலரின் மென்மையை நாக்கு மிகவும் சிறப்பாக எடுத்துரைக்கிறது. இன்னணம் ஒவ்வொரு உறுப்பும் மகிழ்வடைகின்றது. ஆகவே பொலிவும், மருவும் ஒருங்கே ஒன்றியுள்ள மலரானது ஒருவனது மனத்தைக் கவர்ந்து கொண்டால், வேறு அதிசயமான பொருள்களைக் கண்ணுற்றதும் அவனது மனம் எவ்வாறிருக்கும் என்பதை அவனே அறியமாட்டான். சில புட்பங்கள் மணம் பொருந்தி வனப்பற்றவையாயிருக்கும். சிலவகை மலர்கள் அழகு பொருந்தி, மருவில்லாதவையாயிருக்கும். இரண்டாவதாகக் கூறிய மலர்கள், நீர் சூழ்ந்த இக்குவலயத்தின்கண் இருந்தும் பயனில்லை. இக்கருத்தையே குருபாத தாசர் இயற்றிய குமரேசசதகத்தில், "ஈதின்றி யிது சிறவாதெனல்" என்னும் தலைப்புடைய செய்யுளில்,

"மருவிலா வண்ணமலர் பெரியோரிலாத சபை
வைபத்திருந்தென் பயன்.!

எனச் செப்பியுளது. இஃதன்றியும் மூத்தோர்கள் சில விடுகவிகள் கூறுவதும் கவனிக்கத்தக்கது. அவையாவன; "மணமுண்டு அழகில்லை எது? மருக்கொழுந்து. அழகுண்டு மணமில்லை. எது? வாடா மல்லிகை மலர்"

நம் நாட்டில் மனிதர்கள் சந்தோடங்கொள்ளும்போழ்து மலர் சூடுவதும், அதனாலாகிய தாமம் அணிவதும் மிகச் சிறப்பாக நிகழ்தல் யாவரும் அறிந்த விடயமே. இந்தப் பிரகாரம் பண்டைக்காலத்து மடவார்கள் சந்தோட காலத்துமட்டுமே புட்பங்களைச் சூடி வந்தார்களென்று பல நூல்களினின்றும் வெளியாகின்றன. சிலர் தங்களின் குழவிகள் அழுங்காலத்து வனப்புவாய்ந்ததும், நறுமண முள்ளது மான அலர்களைக் காட்டி, அவர்களு

டைய அழுகுரலை நீக்கியும், அம்மலரை அவர்களது கருங்குழலில் வைத்தும் ஆனந்திக்கிறார்கள். சிலர் தாங்கள் வருத்தமடையுங்காலத்து நன் மலர்களைக் கண்டதும் அவ்வருததத்தை நீக்க விருப்பங்கொள்ளுகிறார்கள்.

மனிதர்கள் மட்டுமேயன்றி தேவதைகளுங்கூட புட்பங்களின்மேல் பெரு விருப்பங்கொண்டிருக்கின்றன. படைத்தல் என்னும் தொழிலுக்குக் காரணனான பிரமன் செந்தாமரை மலரின்மேல் வீற்றிருப்பதால் "மலரோன்" என்று நவிலப்படுகிறான். காக்குந் தொழிலுடைய மாயோன் தனது உந்தியின்மேல் சீர்த்தி பெற்றுள்ள செங்கமல மலரைத் தாங்கிக்கொண்டிருக்கிறார். அழிக்குந் தொழிலுடைய கைலையாண்டவன் தனது முடி சடையாகவிருந்தாலும், அச் சடைமுடியின்மேலும் கொன்றை மலர்களையும், வெள்ளெருக்கம் பூக்களையும் மிலைந்துகொண்டு விளங்குகிறான். கேவலம் நீரிலும் நிலத்திலும் பிறக்கும் மலர்கள் தெய்வங்களையடைந்தது மிக விம்மிதமே யாகும். ஆகவே சிறுமையுடைய பொருள் யாதாயினும் அஃது பெருமை வாய்ந்த பொருளுடன் சேரும்போழ்து நற்கதியடைகின்றது. இதனையே ஓர் பெரியார்,

"சேற்றிற் பிறந்திடும் கமல மலர் கடவுளது
திருமுடியின் மேலிருக்கும்"

என்று நவிற்றியுள்ளார். பொருட் செல்வத்தையுடைய அலைமகள் செந்தாமரை மலர்மேலும், கல்விச் செல்வத்தையுடைய கலைமகள் வெண்தாமரை மலரின்மேலும் வீற்றிருக்கின்றனர். இரண்டாவதாகக் கூறிய வெண்தாமரைச் செல்வியின் ஆசனத்தைக் குறித்துக் காளமேகப் புலவர்,

"வெள்ளைக் கலையுடுத்து வெள்ளைப் பணி பூண்டு
வெள்ளைக் கமலத்தில் வீற்றிருப்பாள்"

என்று தெரிவித்துள்ளார்.

சில பாவேந்தர்கள் கமல மலரை, கண்களுடனும், இதயத்துடனும், கரங்களுடனும், பாதங்களுடனும் ஒப்பிட்டு வருணித்துள்ளார்கள். "புண்டரீகக்கண்", "இதயகமலம்', "தாமரைக்கை", "பதாம்புயம்' என்றசொல் வழக்குகளின் சீரிய தத்துவங்களை ஆய்ந்து பார்க்குமளவில் அம்மலர்கள் மிகப் பெருமை வாய்ந்தன என்று சொல்லுதற்குத் தடைதான் ஏதேனும் உளதோ?

தெய்வங்கள் மட்டுமேயன்றி தும்பிகளும் மலர்களை விரும்புகின்றன. மதுகரங்கள் எங்கே யிருந்தாலும் சரி. மலர்கள் எங்கே யிருந்தாலும் சரி. இக் களிவண்டுகள் புட்பங்களின் மணத்தை நுகர்ந்து, அப் பூக்களிருக்குமிடத்தை நாடிச் செல்கின்றன. பின் அந்த அலர்களின்மேல் உட்கார்ந்து சிங்காரத்துடன் ரீங்காரம் செய்து அவைகளிலுள்ள முருகுகளை அருந்தி ஆர்வத்துடன் தத்தமிருப்பிடம் அடைகின்றன. அந்த ரீங்காரமானது நம்முடைய மனதை மகிழச் செய்கின்றது. அத் தேனானது நமக்கு மிகவும் உபயோகப்படுகின்றது. ஆகவே சிலர் தேனுக்காக தேனீக்களை வளர்ப்பதுமுண்டு. அதை ஓர் உபவிவசாயமாகவும் கைக்கொள்ளுகிறார்கள்.

பண்டைக்காலத்தில் காலத்தை அறிவதற்கு மலர்களை ஒரு கருவியாகக் கொண்டு இருந்தார்கள். அதுபற்றியே பூவைப், போது என்றும் கூறுவார்கள்.

ஒவ்வொரு வேளையில் ஒவ்வொரு வகைப்புட்பங்கள் நெகிழ்கின்றன. தாமரை மலர் அலர்ந்ததும், கதிரவன் தன் செங்கதிர்களை வீசிக்கொண்டு குணதிசையில் எழுகிறான். ஆம்பல் மலர்ந்ததும், அச்சூரியனும் தன் கிரணங்களை ஒடுக்கிக்கொண்டு குடகடலில் மூழ்கி மதியை எழுப்புகிறான். ஆகவே, ஆதவனைக் கண்டதும் அரவிந்தம் அலரும், சந்திரனைக் கண்டதும் ஆம்பல் நெகிழும் என்றும், பங்கயம் விரிந்த வேளையை பகலெனவும், ஆம்பல் மலர்ந்த வேளையை இரவு எனவும் அறிகிறோம். இதுபற்றியே பகலவனைக் கமலத்தின் நாயகனெனவும், மதியை ஆம்பல் நாயகன் அல்லது குமுத நண்பன் எனவும் கவிஞர்கள் சாற்றுகிறார்கள்.

மலர்களைச் சிறந்த மரியாதைப் பொருளாக மானிடர் மதித்து வழங்குகின்றனர். எவ்வாறெனில்;

"தெய்வம், குரவன், அரசன்திரு முன்னர்ச் செல்வோர்
மெய்வந்த அன்னார் அருள்வேண்டி விரும்பெதேனும்
கைவந்த பெற்றுச் செலீஇக் காண்குவர்"

என்ற வரிப்பாடலின் பிரகாரம் "பொன்னை வைக்குமிடத்துப் பூவை வை" என்றற் போல், தனக்கு எளிதாகக் கிட்டும் புட்பத்தை, மேற்கூறியவர்களைக் காணப் போகும்போழ்து மரியாதையுடன் காட்சிப் பொருளாக எடுத்துச் செல்வது மக்களுள் சாதாரண வழக்கமாய் இருக்கின்றது.

முற்கால வேந்தர்கள் போருக்கு அடையாளங்களாகப் பலவகை மலர்களைச் சூடிச் சென்றனர். என்னவெனின்; எதிரிகளின் பெருஞ் சேனையை முதுகு காட்டி ஓடச் செய்யுங்காலத்து வெட்சிப் பூவை அணிந்திருந்தனர். பகைவர்களிடமிருந்து தன் நிரையை மீட்டற்குக் கரந்தை மலரை மிலைந்தனர். படையெடுத்துச் செல்லுங்காலத்து வஞ்சிப் பூவை வனைந்தனர். கோட்டைகளை முற்றுகையிடுங்கால் உழிஞைப் பூவைப் புனைந்தனர். போர் புரியுங்கால் தும்பை மலரைச் சூடினர். தற்காலத்திலோ இப் புட்பங்களுக்குப் பதிலாகப் பலவிதமான கொடிகளின் உதவியால் யுத்தகாலத்துள்ள அடையாளங்களைக் கண்டுகொள்கிறார்கள்.

"படையும் கொடியும் குடையும் முரசும்
நடைநவில் புரவியும் களிறும் தேரும்
தாரும் முடியும் நேர்வன பிறவும்
தெரிவுகொள் செங்கோல் அரசர்க்குரிய."

என்ற வண்ணம் முற்காலத்தில் அரசர்க்குரிய அடையாளங்களில் புட்பங்களாலாகிய மாலையும் ஒன்றாம். இதற்குச் சான்றாகப் பாண்டியன் வேப்பந்தாரினையும், செம்பியன் ஆத்தி மாலையையும், மலையமான் பனம்பூவாலாகிய தாமத்தையும் தங்களது சின்னங்களாகக்கொண்டு இருந்தார்கள். நம்நாட்டு வேந்தர்கள் மட்டுமேயன்றி மேல்நாட்டு மன்னர்களும் லாரல், லில்லி, ரோஜா முதலிய புட்பங்களைச் சின்னங்களாகக் கொண்டிருந்தார்கள்.

ஆகவே புட்பத்தின் பெருமையை என்னென்று எடுத்துரைப்பேன்! நாம் புட்பங்களை அடைய விருப்பமுடையவாகளானல் நமது மனைகளிலும்

வாவிக்கரைகளிலும், கோயில்களின் அண்மைகளிலும் பூந்தண்டலைகளை யமைத்துப் பாதுகாத்து வருவோமாயின் ஓர் நல்ல ஊதியத்தைப் பெறலாம். அச்சோலைகளினின்றும் பூக்களைக் கொய்து மாலையாகத் தொடுத்து விற்பனை செய்யலாம். தையல்கள் தங்கள் அருங்கூந்தலிற் றடவிக்கொள்ளும்படியான விரைப்பொருள்களடங்கிய தைலங்களைப் பல மலர்களினின்றும் எடுத்து விற்பனை செய்யலாம். மலர்களினின்றும் கிட்டும் தேனையும் விற்றுப்பொருளீட்டலாம். இவ்வுண்மைகளினின்றும் புட்பங்களை வளர்த்தல் ஓர் உபவிவசாயமாகும் என்பது 'அங்கை நெல்லிக்கனிபோல' விளங்குகின்றது.

ஆகலின் இத்தன்மையான பெருமை வாய்ந்த மலர்களைக் கொய்து அனுதினமும் எங்கும் நிறைந்திராநின்ற கடவுளைப் பூசித்து வருவோமாக!

"நாடீர் நாடோறும் வாடா மலர்கொண்டு
பாடீர் அவன் நாமம் வீடே பெறலாமே."

நம்மாழ்வார்.

பொங்கும் மங்களம் எங்கும் மலர்க!



# பாரதி சித்திரம்

## "கண்ணன்—என் காதலி"

(ஆரியூர்-வ. பதுமநாப பிள்ளை.)

I

செவ்வானத்திலே, பலவகைப்பட்ட இந்திரஜாலக் காட்சிகள் காணப்படும் அந்தி வேளை. நீலக் கடலின் கரையில் அமைந்துள்ள அழகிய பூஞ்சோலை. மரகதக் கம்பளம் பரப்பப்பட்டது போன்ற பசும்புல் தரையிலே, சுமார் பதினெட்டு வயது மதிப்புடைய அழகிற் சிறந்த மங்கை ஒருத்தி அமர்ந்துகொண்டு, இயற்கைக் காட்சிகளின் இணையற்ற அற்புதப் பேரழகில் கருத்தைச் செலுத்திக் களித்துக்கொண்டிருக்கிருள். அவளருகில் அவளது அழகாகிய இனனமிர்தத்தை இரு விழிகளாலும் பருகி மகிழ்ந்தவண்ணம் அமர்ந்துகொண்டிருக்கும் இளைஞனொருவன், செந்தேனருந்திச் சிந்தை மயங்கிக் கிடக்கும் பொன்வண்டையொத்து தன்னையும் தன்னைச் சுற்றிலுமுள்ள மற்றவற்றையும் மறந்தவனைப்போல் காணப்படுகிருன். அவ்விளைஞனின் மனத்தில் பொங்கிக்கொண்டிருந்த காதல், திறந்த மடையின் வழியாக வேகமாகப் பெருகியோடும் வெள்ளத்தைப்போல் பெருகிக்கொண்டிருக்கிறது. தனது நெஞ்சக் காவலை மீறிப் மீறிப் பெருகும் காதல் வெள்ளத்தைத் தடுக்க முடியாத அவன், பெரிதும் தவித்துக்கொண்டிருக்கிருன். ஆனல், அதே சமயத்தில்,



அவனது தீவிரமான காதல் உணர்ச்சிகளைச் சிறிதும் பொருட்படுத்தாமல் மிகுந்த அலட்சியத்துடனிருப்பவளைப் போலிருக்கும் அந்தச் சுந்தரி, நீல வானில் நிகழ்ந்துகொண்டிருக்கும் இந்திரஜாலக் காட்சிகளையே கவனித்தவாறிருக்கிருள். தனது கண்ணுக்கினிய—கருத்துக்கினிய—கட்டழகியுடன் உரையாடி மகிழ, அவ்விளைஞனது மனம் எவ்வளவோ ஆர்வம் கொண்டு தவிக்கிறது; எனினும், அச்சுந்தரியோ தன் திருவாயைச் சிறிதும் திறக்கவே

வில்லை. அந்நிலையில், அவ்விளைஞன் அவளை நோக்கிப் பின்வருமாறு புகழ்ந்து பேசத் தொடங்குகிறான்:—

"கண்ணம்மா! பேதையேன் உனது கண்ணழகை என்னென்று வருணிப்பேன்? உனது விழிகளிலிருந்து எழுந்து எனது நெஞ்சை எரிக்கும் வெஞ்சுடரை, செஞ்சுடர்க் கதிரவனின் வெஞ்சுடரென்று விளம்புவேனா? அல்லது, அதே சமயத்தில், எனது மனக் கடலில் இன்ப எண்ண அலைகளைப் பொங்கச் செய்வித்துக் குளிர்விக்கும் அவ் விழிச்சுடரை, வெண்மதியின் தண் சுடரென்று விளம்புவேனா? ஒரே சமயத்தில், உனது விழிச்சுடர் வெங்கதிரின் வெஞ்சுடரைப்போலும் வெண்மதியின் தண் சுடரைப்போலும் விளங்குவது என்ன விந்தையடி! உனது நீல விழிகள், நீல வானின நிறத்தைப் பெற்று விளங்குவது அற்புதமாக இருக்கிறது! நீ உடுத்தியுள்ள நீலச் சேலையும், அச்சேலையின் அழகைப் பன்மடங்கு பெருக்குவனவாய் ஒளி வீசி நிற்கும் நீ அணிந்துள்ள வயிர நகைகளும், உன் பொன்மேனியின் சம்பந்தம் பெற்று எவ்வளவு சிறந்து விளங்குகின்றன! இணையற்ற இயற்கையழகில் சிறந்து விளங்கும் உன் பொன்மேனியைச் சேர்ந்த பின்பே, அவற்றிற்கு இத்தகைய அற்புத அழகு ஏற்பட்டிருக்கவேண்டும்! உனது மேனியில் ஒளி வீசும வயிர நகைகள், நள்ளிரவில் நீலவானில் பளிச் பளிச்சென்று மின்னும் நட்சத்திரங்களைப்போல் விளங்குகின்றனவே! எனினும், உனது முகமாகிய முழு மதி வீசும் குளிரொளியின் முன்பு, சின்னஞ்சிறு நட்சத்திரங்களைப்போல மின்னும் வயிர நகைகளின் ஒளி எவ்வளவு அற்பமாகத் தோன்றுகிறது!"

அவனது அம்மொழிகள், அம்மங்கையின் மலர்முகத்தில் அவளையு மறியாவாறு அழகிய புன்முறுவலைத் தோற்றுவித்துவிடுகின்றது, அந்தச் சுந்தரப் புன்னகையைக் கண்டு, அவன் பெரிதும் பரவசமடைகிறான். அவ்வேளையிலே, அச்சோலையிலே, மெல்லிதழ் விரித்து நறுமணம் பரப்பி நிற்கும் மல்லிகைக் கொடியிலுள்ள வெண்மலர்கள், அவனது கண்களுக்குக் காட்சியளிக்கின்றன. அரும்புகளினிடையே மலர்ந்து விரிந்து நிற்கும் அம்மெல்லிய மல்லிகை மலர்களின் மோகனச் சிரிப்பு, அரும்புகளைப் போன்ற வெண்பற்களின் அழகு பெரிதும் சிறந்து விளங்க அவளது முகமலரில் தோன்றிய சுந்தரப் புன்னகைக்குச் சிறந்த உவமையாக விளங்குகிறது. அக்காட்சியைக் கண்டு இன்ப வெறிகொண்ட அவன், அவளது மலர்முகத்தை நோக்கியவண்ணம் குதூகலம் ததும்பும் குரலில், "சோலை மலர் ஒளியோ?—உனது சுந்தரப் புன்னகை தான்!"—என்று வினவுகிறான். இவ்வளவு பேசிய பின்னும், அவள் தனது திருவாயைத் திறந்தபாடில்லை. என்வே, அவளது நெஞ்சில் பலவகைப்பட்ட சிந்தனை அலைகள் பொங்கி எழுந்து அவளது மன அமைதியைக் குலைத்துக்கொண்டிருக்கக்கூடு மென்று அவன் கருதுகிறான். அப்பொழுது, எதிரிலுள்ள நீலக் கடலிலே, ஒன்றின்பின்னொன்றாக எழுந்து விழுந்து மீண்டும் எழுந்து புரண்டு புரண்டு கரையை நோக்கி ஓடிவந்து மீண்டும் திரும்பிச் சென்றுவிடும் அலைகள், அவனது கருத்தைக் கவர்கின்றன. அக்கடலலைகளையும் தனது காதலியின் மனக்கடலில் பொங்கிக்கொண்டிருப்பதாகத் தான் கருதும் அவளது சிந்தனை அலைகளையும் ஒப்பிட்டுச் சிந்தித்துப் பார்க்கத் தொடங்கிய அவன், முடிவில்—"நீலக் கடல் அலையோ-உனது நெஞ்சில் அலைகளடி!—என்று தீர்மானிக்கிறான்.

"ஏன் இத்தகைய மௌனம்? உனது கருத்தைக் கவர்ந்துள்ள காதலன், வேறு யாவரேனும் உண்டோ? உள்ளத்திலுள்ளதை வெளியிட்டுச் சொல்லாமல், கள்ளப் புன்னகை செய்துகொண்டிருப்பதால் என்ன பயன்? நீ வாய் விட்டுச் சொல்லாமல், உனது மன நிலையை உள்ளபடி உணர்ந்துகொள்ள நான் ஒரு தேவனா என்ன?"—என்று அவன் அவளை நோக்கி வினவுகிறான். அவனது கேள்வியைக் கேட்டுப் பெரிதும் திடுக்கிட்ட அவள் அவனைக் காதல் ததும்பும் கண்களுடன் நோக்கிய வண்ணமே, "இல்லை; இல்லை! எனது நெஞ்சில்—இன்று வரையில்—வேறு எந்த ஆடவனும் இடம் பெற்றதில்லை. என்றென்றும் எனது நெஞ்சில் குடிகொண்டிருப்பவரும், இப்பொழுது என் எதிரிலிருப்பவரும் ஒருவரேதான். என்றும் என் சிந்தைக்கினியவர் தாங்கள் ஒருவரேதான். ஆனால்,........." என்று மேலே பேச முடியாமல் தலையைக் குனிந்துகொண்டு மௌனம் சாதிக்கிறாள்.

அவளது வாய்மொழிகளைக் கேட்டுப் பெரிதும் பரவசமடைந்த அவன், "ஆனால்......என்ன? எவ்வளவோ சிரமப்பட்டதன் பயனாக உனது திரு வாயைத் திறந்து அமிர்த மொழிகளைச் சொரியத் தொடங்கிய நீ, மீண்டும் திடீரென்று நிறுத்திவிட்டாயே! அதோ, அம்மாமரத்தில் அமர்ந்து உல்லாஸமாகப் பாடிக்கொண்டிருக்கும் அந்த கருங்குயிலின் குரலைப்போன்ற உனது குரலின் இனிமையை, இன்னும் கொஞ்சம் நான் அனுபவிக்கக்கூடாதா? அத்தகைய அரிய பாக்கியத்தை அனுபவிக்க, நான் தகுதியற்றவனா? பாழும் 'ஆனால்' வந்து குறுக்கிட்டு, உனது செங்கனி வாயை மீண்டும் மூடிவிட்டதே! நீ சொல்லவந்ததை ஒளிக்காமல் சொல்லி முடிக்காவிட்டால், என் மனம் சிறிதும் அமைதி அடையாது. ஆதலின், தயை செய்து அதைத் தயங்காமல் சொல்லு"—என்று கூறுகிறான்.

"ஒன்றுமில்லை; இன்னும் நான் ஒரு கன்னியல்லவா?"—என்று குனிந்த தலை நிமிராமலே கடைக் கண்களால் அவனை நோக்கி வினவுகிறாள் அந்தச் சுந்தரி. அதைக் கேட்டுக் கலகலவென்று சிரித்த அவன், "அடடா! இதற்காகவா இவ்வளவு வெட்கம்? இதற்காகவா இத்தகைய மௌனம்? தெருவில் மண் வீடு கட்டிச் சிறுமிகளுடன் சிறு சோறு சமைத்து விளையாடும் பருவத்திலுள்ள சின்னஞ்சிறு கன்னியாகவா இன்னும் நீ இருக்கிறாய்? இப்பொழுது நீ ஒரு இளைஞனது மனத்தில் காதல் தீயை மூட்டி அவனது நெஞ்சை எளிதில் அடிமைகொண்டு விடக்கூடியவாறு நல் வளர்ச்சியடைந்து, ஒரு 'வாலைக் குமரி'யாக விளங்குகிறாயல்லவா? அதனால்தான், நான் இப்பொழுது உன்னிடம் இத்தகைய காதல் மிகுந்து நெஞ்சு உருகித் தவித்துக்கொண் டிருக்கிறேன்"—என்று கூறி முடிக்கிறான்.

"ஏனோ, தங்களுக்கு இவ்வளவு ஆத்திரம்? என்று எனது நெஞ்சில் தாங்கள் குடிபுகுந்தீர்களோ, அன்று முதலே எனது உடலும் உயிரும் எல்லா உடைமைகளும் உங்களுக்கே உரிமைப்பட்டுவிட்டனவன்றோ! எனினும், எதற்கும் ஒரு காலம் உண்டல்லவா? பெற்றோர் அறிய—உற்றார் உணர—வேதவிதிப்படி நமக்குத் திருமணம் நடைபெறும் வரையில், தங்கள் மனத்தில் புகைந்துகொண்டிருக்கும் காதல் தீயை, 'பொறுமை' என்னும் தண்ணீரால் தாங்கள் அடக்கி வைத்துக்கொண்டிருக்கவேண்டியது அத்தியாவசியம். எல்லாம் உணர்ந்தவரான தங்களுக்கு, அபலையாகிய நானோ அறிவு புகட்டு

வது? பெற்றோர் மகிழ—சுற்றத்தினர் சூழ்ந்திருக்க—ஊரார் ஆசிகூற—வேத விதிப்படி அக்கினி சாட்சியாக நாம் சதி—பதிகளாகும் நாள் வரும் வரையில் தாங்கள் காத்திருக்காவிட்டால், மற்றவர்களின் பழிப்புரைகளுக்கு ஆளாக நேருமல்லவா? உங்களின் காதல் உண்மையாகவும் உறுதியாகவும் இருந்தால், எனது பெற்றோரின் சம்மதத்தைப் பெற்று நமது திருமணத்திற்கு உரிய ஏற்பாடுகளை விரைவில் செய்ய முயலுங்கள்"—என்று கூறுகிறாள் அந்த மங்கை.

"அடடா, என்ன பிரசங்கம்! என்ன உபதேசம்!! உனக்குத் தெரிந்த இந்த சாத்திரஞானம், எனக்குத் தெரியாதென்று எண்ணிக் கொண்டுவிட்டாயோ? இந்த சாத்திர ஞானப் பிரசங்கத்தால், இப்பொழுது என்ன பயன்? காதல் பித்து நிறைந்து ஆத்திரம் மிகுந்து நிற்பவர்களுக்குச் சாத்திரமும் உண்டோ? எனது ஆத்திரத்தை அடக்கியாளக்கூடிய ஆற்றல் எனக்கில்லாதபோது, திருமணம் நடைபெறும் வரையில் இவ்வுடலில் உயிர் தங்கியிருக்கக்கூடியதோ? காதல் இருவர் கருத்து ஒருமித்துவிட்டால், பின்னர் வெறும் சடங்குகளுக்காகக் காத்து நிற்பானேன்? கருத்தொருமித்த உண்மைக் காதலர்கள், வெறும் சடங்குகளுக்காகக் காத்திராமல், தாம் விரும்பிய போதே 'காந்தர்வ முறை'யில் மணந்துகொள்வது, இந்நாட்டில் தொன்று தொட்டு நிகழ்ந்துவந்திருக்கும் பழைய திருமண முறைகளுள் ஒன்றேயென்னும் உண்மையை நீ அறியாயோ? உறவினரையும் ஊராரையும் திருப்திப்படுத்துவதற்காகத்தானே, பகிரங்கமான முறையில் பலர் அறியத் திருமணம் செய்துகொள்வது! உனது தாய் தந்தையரின் அனுமதியையும் எனது தாய் தந்தையரின் அனுமதியையும் பெற்றுக்கொண்டு பகிரங்கத் திருமணம் செய்துகொள்ளத் தகுந்த சுபநாள் நேரும்போது, உன் மனம்போல் செய்து கொள்வோம். ஆனால், நீ இன்னும் எனது மனநிலையைச் சோதிப்பாயானால் பகிரங்கத் திருமணம் செய்துகொள்ளும் வரையில் எனது ஆத்திரத்தை அடக்கிக்கொண்டு காத்திருக்கக்கூடிய சக்தி எனக்கில்லை. ஆதலின், இதோ பார்! எனது ஹிருதயத்தை உனக்கு உரிமைப்படுத்தியதற்கு அடையாளமாக, உனது செந்தாமரை மலர்போன்ற சிவந்த கன்னத்தில் ஒரு முத்த—முத்திரை வைத்துவிடுகிறேன்!"

* * * *

## II

மாலை வேளை. நீலக் கடலின் கரையிலே அமைக்கப்பட்டுள்ள தொரு அழகிய மேடையின்மேல், ஒரு வாலிபன் அமர்ந்துகொண்டு, நிறத்திலும் பரப்பிலும் ஒன்றையொன்று ஒத்து நிற்கும் வானமும் கடலும் முத்தமிட்டுத் தழுவிக்கொண்டிருப்பதுபோல் தோன்றும் மோகனக் காட்சியின் அற்புதப் பேரழகில் தனது மனத்தைச் செலுத்தி மகிழ்ந்துகொண்டிருக்கிறான். நேரம் விரைந்து கழிந்துகொண்டிருப்பதில் சிறிதும் நினைப்பின்றி ஒரு சிலையைப் போல் அமர்ந்துகொண்டிருக்கும் அவனைப் பார்க்கும்போது, அவனது மனம் தன்னை மறந்த பகற் கனவுலகில் சஞ்சரித்துக்கொண்டிருக்கிற தென்பது நன்கு விளங்குகிறது.

அதோ, யௌவன சௌந்தரியத்தில் சிறந்து விளங்கும் ஒரு மங்கை, சிறிதும் சந்தடி செய்யாமல் மெள்ள மெள்ள அவனது பின்புறமாக நடந்துவரு

கிறான். அதோ, அவள் அவனை நெருங்கிவிட்டாள்! அவள் அவனது பின்புறத்தில் வந்து நின்ற பின்புகூட, கனவுலகில் சஞ்சரித்துக்கொண்டிருக்கும் அவன், அவளது வருகையை அறியவில்லை! எனவே, அந்தச் சுந்தரி அவனது பின்புறத்தில் நின்றுகொண்டே அவனது கண்களைத் தனது மலர்க்கரங்களால் மறைக்கிறாள். அம்மெல்லிய மலர்க் கரங்கள் தீண்டிய பின்பே, அவனது மனம் கனவுலகத்தினின்றும் இந்நிலவுலகத்தை அடைகிறது. தன் பின்வந்து தனது கண்களை மறைக்கக்கூடிய துணிவு கொண்டவள், தனது சிந்தைக்கினிய செல்வக் காதலியாகவே இருக்கவேண்டு மென்பதை அவன் எளிதில் உணர்ந்துகொண்டுவிட்டான். தனது கண்களை மறைத்த அவளது கரங்களில் விளங்கும் தங்க வளைகளை அவன் தனது கரங்களால் தடவிப் பார்க்கிறான். அவ்வளைகளும் அம்மலர்க் கரங்களும் அவன் நன்கு பழகியறிந்தவையே யென்பது, அவனுக்கு எளிதில் தெரிந்துவிடுகிறது. மேலும், அவளது நீலச் சேலையினின்றும் வீசும் நறுமணம், அவள் யாரென்பதை அவனுக்கு நன்கு உணர்த்திவிடுகின்றன. அம்மணிக்கரங்கள் அவனது கண்களில் பட்டவுடனே அவனது உடல் முழுவதும் பரவிய இன்ப உணர்ச்சி, அவள் யாரென்பதை அவனுக்குச் சிறிதும் ஐயத்திற்கிடமின்றித் தெளிவாக விளக்கிவிடுகிறது. இப்பரந்த உலகிலே, அவனது நெஞ்சுக்கு அத்தகைய மகிழ்ச்சியை அளிக்கக் கூடியவள் ஒருத்தியே என்பதை அவன் நன்கு உணர்வான். அவளது மணிக்கரங்கள் தன்னைத் தொட்டாலன்றி, வேறு எது தன் மீது பட்டாலும் தனக்கு அத்தகைய ஒப்பற்ற இன்ப உணர்ச்சி உண்டாகாதென்பதை அவனது உள்ளம் நன்கு உணரும். எனவே, அவன் தனது கண்களை மறைத்த மலர்க் கரங்களைத் தனது கரங்களால் பேரன்போடு பற்றிக்கொண்டே, "எடீ, கண்ணம்மா! உன்னை நான் அறியேனோ? யாரிடத்தில் இந்த மாய விளையாட்டு? எடு, உன் மணிக்கைகளை!"—என்று கூறுகிறான். அதைக் கேட்ட அந்தச் சுந்தரி, தனது கைகளை எடுத்துக்கொண்டு கலகலவென்று சிரித்து நிற்கிறாள். அவளது வடிவழகைக் கண்குளிரக் கண்டு களித்த அவன், அப்படியே அவளைத் தழுவிக்கொண்டுவிடுகிறான். அவ்விருவரும் அம்மேடையில் அமர்ந்து கொண்டபின்னர், அவன் அவளை நோக்கி, "என்ன செய்தி சொல்ல என்னை நாடி நீ இங்கு வந்தாய்?"—என்று வினவுகிறான்.



"அந்த நீலக்கடலிலே ஒன்றின்பின்னொன்றாக எழுந்து விளையாடிக்கொண்டிருக்கும் அந்த அலைகளிலே, தாங்கள் என்ன கண்டு விட்டீர்கள்? எல்லையின்றிப் பரந்து கவிந்திருக்கும் நீல வானத்திலே, தாங்கள் எந்த அதிசயத்தைக் கண்டுபிடித்துவிட்டீர்கள்? அந்த அலைகளின் மேல் மிதந்துவரும்

வெள்ளை வெளேலென்ற நுரைகளிலே தாங்கள் எதைக் கண்டுகொண்டு விட்டீர்கள்? அந்த அலைகளில் தோன்றி மறையும் சின்னஞ்சிறு குமிழிகளிலே தாங்கள் என்ன அதிசயத்தைக் கண்டறிந்துவிட்டீர்கள்? தினந்தோறும் இவ்விடத்திற்கு வந்து தன்னந்தனியே இருந்து இவற்றைப் பார்த்துப் பார்த்துப் பரவசமடையும்படி, இவற்றில் தாங்கள் கண்டுகொண்டுவிட்ட அதிசயங்கள் தாம் என்னென்ன வென்பதை எனக்குச் சொல்லலாகாதா?"—என்று காதல் ததும்பும் கண்களுடன் தனது அன்பனை நோக்கியவண்ணம் வினவுகிறாள் அந்தச் சுந்தரி.

அதைக் கேட்டு அக்காதலன் கூறும் பதில் என்னவென்பதைக் கவனிப்போம்:—

"நெரித்த திரைக்கடலில் நின்முகம் கண்டேன்;
நீல விசும்பினிடை நின் முகம் கண்டேன்;
திரித்த நுரையினிடை நின் முகம் கண்டேன்;
சின்னக் குமிழிகளில் நின் முகம் கண்டேன்.
பிரித்துப் பிரித்து நிதம் மேகம் அளந்தே
பெற்ற(து) உன் முகமன்றிப் பிறி(து) ஒன்றில்லை!
சிரித்த ஒலியினில் உன் கை விலக்கியே,
திருமித் தழுவியதில் நின்முகம் கண்டேன்!"



"அதோ, பார்! அந்த நீலக் கடலிலே குதூகலத்துடன் கிளம்பிப் புரண்டு மீண்டும் எழுந்து ஆரவாரித்துக்கொண்டு கரையை நாடி வேகமாக ஓடிவரும் அந்த அலைகளிலே, நான் கண்டதென்ன தெரியுமோ? இவ்வுலகில் மலிந்திருக்கும் வஞ்சகர்களை எண்ணி நெஞ்சில் கவலை கொண்டுவிடாமல் என்றென்றும் மகிழ்ச்சியுடனேயே இருக்கும் உனது மலர்ந்த முகத்தையே அவ்வலைகளில் கண்டேன்! காண்போர் கண்களையும் நெஞ்சையும் ஒருங்கே பெரிதும் குளிர்விப்பதாகிய நீல நெடுவானத்தை நான் உற்று நோக்கும் போதும், அங்கே எனக்குக் காட்சியளித்து நிற்பது என்ன தெரியுமோ? அது, அப்பொழுதலர்ந்த செந்தாமரை மலரைப்போல் இதழ்களை விரித்துச் சிரித்துக்கொண்டிருக்கும் உனது அழகிய மலர்முகமே! அந்த அலைகளின் மேல் மிதந்து வரும் அந்த நுரைகளின் மீது நான் கண்டு களிப்பதும், உனது களங்கமற்ற கமல முகமே! அவற்றின்மேல் தோன்றித் தோன்றி மறையும்

அந்தச் சின்னஞ்சிறு குமிழிகளிலேகூட, நான் உனது மலர் முகத்தையே கண்டு மகிழ்கிறேன். நான் இங்கிருந்து இவற்றையெல்லாம் பிரித்துப் பிரித்து நினைத்துப் பார்ப்பதன் பயனாக, எங்கு நோக்கினும் எனது கண்களுக்குக் காட்சி யளிப்பது உனது மலர்முகம் ஒன்றேயன்றி, வேறு எதுவும் இல்லை. உனது மலர் முகத்திலுள்ள மாயமோகன மந்திர சக்திதான் எத்தகையதோ நான் அறியேன். எங்கு நோக்கினும்—எதை நோக்கினும்—அம்மலர் முகம் ஒன்றே எனது கண்களுக்குக் காட்சியளித்துக் கொண்டிருக்கிறது! உனது கலகலவென்ற சிரிப்பொலியைக் கேட்டுப் பரவசமடைந்து உன்னைத் தழுவிக்கொண்டபோதும், என்னை ஆனந்தக் கடலில் ஆழ்த்தியது உனது ஒப்புயர்வற்ற ஜகன்மோகன சிங்காரப் புன்னகை தவழும் மலர்முகமே! உனது மலர்முகத்தின் மாயமோகன மந்திர சக்தியை, எத்தகைய வார்த்தைகளைக் கொண்டு—என்னவென்று—என்னால் வருணித்துச் சொல்லமுடியும்?"

---

# ஆரியக் கோட்பாடுகளும் கட்டளைகளும்

திவான்பகதூர் ஆர். இரகுநாத ராவ் அவர்கள் ஆரியமதக் கோட்பாடுகளையும் கட்டளைகளையும் சுருங்கச் சொல்லி விளங்கவைத்த விவரம்:—

கோட்பாடுகளாவன:—(1) கடவுள் ஒருவரே, (2) அவரிடத்திலிருந்து நாமெல்லோரும் உண்டானோம்; ஆகையால், அவர் நம்மெல்லோருக்கும் பிதா, (3) அவர் எங்கும் நிறைந்தவர், (4) எல்லாவற்றையும் பார்ப்பவர், (5) அவர் சக்திக்கு அளவு இல்லை (6) அவர் ஸர்வஞ்ஞர், (7) அவர் நம்மெல்லோருக்கும் ரக்ஷகர், (8) அவர் நம் தாய் தந்தையரைவிட நம்மிடத்து அதிக பக்ஷமுள்ளவராயிருக்கிறார், (9) நம் சரீரத்தையும், புத்தியையும், இன்னும் நம்மைச் சுற்றியுள்ள ஒவ்வொன்றையும் அவர் நாம் சந்தோஷமா யிருக்கும்படி நமக்கு அளித்தருளியிருக்கிறார்.

கட்டளைகளாவன:—(1) மானுட ஜீவர்களாகிய உன் சகோதரர்களிடம் பக்ஷமாயிரு, (2) அவர்கள் சந்தோஷிக்கக் கண்டு நீயும் சந்தோஷி; அவர் துக்கப்படக் கண்டால் நீயும் வருத்தப்படு, (3) கடவுள் சிருஷ்டிகள் ஒன்றுக்கும் குரூரம் செய்யாதிரு, (4) சத்தியம் தவறாதே, (5) வறியார்க்கு தர்மம் கொடு (6) எல்லாப் பிராணிகளிடத்தும் இரக்கம் வை. (7) எப்போதும் நிதானமாயிரு, (8) எல்லோர்க்கும் உபசரணை செய் (9) ஒருவர் பொருளையும் அபகரிக்காதே (10) ஒருவருக்கும் தீங்கிழைக்காதே, (11) மூத்தோர், தேவதைகள், மகாத்மாக்கள், குருக்கள் இவர்களை வணங்கு, (12) கற்றோரைப் பேண், (13) பிறர் குற்றம் பாராட்டி அகங்காரம் கொள்ளாதே (14) கர்வங் கொள்ளாதே, (15) பிறரை இழிவாக எண்ணாதே, (16) தாயாரையும், சகோதரிகளையும் கனம் பண்ணி அவர்களிடத்துப் பக்ஷமாயிரு, (17) பொதுவாய் ஸ்திரீகளிடத்து மதிப்புவைத் தொழுகு, (18) மதபோதகரை மதித்தொழுகு (19) உன் கடமைகளை நிறைவேற்றுவதில் ஒழுங்காயிரு, (20) எப்போதும் சுத்தம் பாராட்டுபவனா யிரு; (21) ஆகாராதி நித்திரைகளைக் கொள்வதில் ஒழுங்காயிரு, (22) உனது பாடங்களைச் செவ்வையாகப் படி (23) சன்மார்க்க வழியில் நடந்து கடவுளை நேசி.

கூ-மி.




# ஔவையார்



(ஸ்ரீமதி. பண்டிதை-அசலாம்பிகை அம்மையார்.)

இனி தீவினையகற்று என்னும் நீதித் தொடர். இது பாவச் செயல்களை நீ செய்யாமல் நீக்கு என்று கூறியதாகும். எவ்வுயிர்களுக்கும் துன்பத்தை யுண்டாக்குவதே பாவச் செய்கைகள் என்பது தெளிவு—அவற்றைச் செய்வது குற்றமென்பது தெரிந்திருந்தும் சுயநல விருப்பத்தால் தூண்டப்பட்டே பாவம் செய்கின்றனர் பலர். உண்மையில் ஆழ்ந்து நோக்குங்கால் இவர் செயல் பிறரைக் கெடுப்பதற்கு அதிகமாக இவ்வாறு செய்பவர்களையே கெடுப்பது தெரியும். மனிதர் அளவுக் கதிமான ஆசையே அவர் செம்மையுள்ளத்தை அமைதியற்றதாக்கி இருதய ஓட்டத்தைத் துரிதப்படுத்தி மூளைக் கொதிப்பை உண்டு பண்ணி வாழ்நாளையும் சுருக்கவல்ல தாகின்றது. இவ் வாசை நல்லாசை, தீய ஆசை என இரு பெருங் கூறுகளாகும். பயன் இருவிதமாயின் முடிவு ஒன்று தான். ஆனால் ஔவையார் ஈண்டு நற்செயல்களில் தீவிரம் ஏற்படுவதைத் தடுக்க வில்லை யென்பதை விளக்கவே "தீவினை" என முழுப் பெயரைக் கூறினர்.

அதிக ஊக்கம் உழைப்பு இவைகளின் காரணமே ஆதிசங்கரரையும், ஸ்ரீ விவேகானந்தர் முதலிய இன்னும் பற்பல பெரியார்களையும் நாம் நீண்ட நாள் காண முடியாதவர்களானோம் என்பது சிந்திக்கத்தக்கது. அவர்கள் பற்பல ஆண்டுகள் உயிர்த்திருப்போரும் செய்ய முடியாத அரும் பெரும் காரியங்களை உலகிற்காற்றி வைத்தார்கள். அத்தகையார் புகழ் அழியாதது. ஆதலின் தோன்றிற் புகழொடு தோன்றுக என்றார் பெரியார்.

ஆதலினால் இத்தகையார்களைச் சுட்டாமல் தீவினை செய்வோர்களை மட்டில் நாம உதாரணமாகக் கொள்ளுதல் வேண்டும். நல்வினைகளும் தீவினைகளும் கலந்தே நிற்கும் இவ் வுலகில் தீவினையை நீக்கி நன்மையைக் கடைப்பிடிக்க வேண்டும். இளைஞர்கள் நன்மை தீமைகளை இவையிவை யெனப் பிரித்துணரக் கல்வியே தக்க சாதனம் என்று சான்றோர் பலர் வற்புறுத்தியுள்ளார்.

"இருவிழிகள் வாண்முகத்தி லிருந்தாலும்
வானிரவி எழுந்தாலன்றிக்
கருது மிலப்புல் பொருளும் காண்டல்
அரிதாம் உலகிற் கண்போல் யார்க்கும்

பெருகிய செல்வமும் அறிவும் பெற்றாலும்
நூலுணர்ச்சி பெறாரே யாகிற்
றிருவளர் புண்ணிய பாவம் இம்மை
மறுமையும் வீடும் தெரியாதன்றே"

என்ற செய்யுளால், இயற்கையறிவு பெற்றிருந்தாலும் கல்வியாகிய செயற்கையறிவு பெறாரேயாகில், திருவளர் புண்ணியம், பாவம், இம்மை, மறுமை இவைகளை நன்கு உணர முடியாதென்பது தெளிவாகின்றது. அறநெறியை உணர்த்தும் முதல் நூல் ஔவையார் அருளிச் செய்துள்ள இவ்வாத்திசூடியாதியவைகளும் திருக்குறள் நாலடியார் முதலிய பின்னும் பல நூல்களின் தொகுதிகளாகும். இளைஞர்கள் ஆரம்பக் கல்விப் பயிற்சியினால் பண்டைக்கால போதனா சாலைகளில் நெட்டுருச் செய்விக்கும் ஓர் சிறந்த முறை கட்டாயமாக ஆசிரியர்களால் கைக்கொள்ளப் பட்டிருந்தது. நவீன நாகரிக மென்னும் நம் நாட்டில் குடியேறியுள்ள தற்காலத்தில் அத்தகைய நூல்களின் பெயர் கூட ஆசிரியர்களில் பலர் அறிய சந்தர்ப்பம் இல்லை. வாக்குண்டாம், நல்வழி, மூதுரை, இன்னா நாற்பது, இனியவை நாற்பது, வெற்றி வேற்கை, திரிகடுகம் முதலிய மூதுநூல்களில் பலகாரக் கடைகளில் பவுடரை உபயோகித்து அப் பண்டங்களை அலங்கரிப்பது போல அங்கொன்றும் இங்கொன்றுமாகப் பொறுக்கி யெடுத்துப் பாட புத்தகங்களின் இறுதியில் சேர்த்துப் பதிப்பிக்கின்றனர். அவைகளில் கழிக்கக் கூடிய செய்யுள்கள் ஒன்றும் இல்லை யென்பது தமிழறிஞர்கள் துணிபு. தற்காலம் வகுப்புக்காகப் பாட புத்தகங்கள் புதிய முறையில் வரையும் பேரறிவாளர்களுக்கு அவை முழுதும் அவசியமென்பது படுவதில்லை. பயிலும் இளைஞர் அறிவு வளர்ச்சியும் இதற்கேற்பவே யிருப்பதில் வியப்புண்டோ.

நூலுணர்ச்சி பெறாதவர்களுக்கு இம்மை மறுமை, பாவ புண்ணியங்களின் பாகு பாடுகள் தெரியாதென்றார் திரிகூட இராஜப்ப கவிராயர். நூல் உணர்ச்சியென்றால் தற்காலத்தில் வெளிவரும் நூல்களின் உணர்ச்சியாகுமா? கோழிக்கு இரண்டு கால் குதிரைக்கு நான்கு கால் என்னும் படிப்பு பாவ புண்ணிய விளக்கத்தை எவ்வாறுண்டு பண்ணும்.

உதாரணமாக நம் நாட்டில் தீபாவளி பண்டிகைக் களியாட்டத்தில் இளைஞர் சிலர் சீனு வெடியாகிய படாசுக் கட்டை நாயின் வாலில் கட்டி நெருப்பை வைத்து அவை வெடிக்கக் கேட்டு அவ் வாயில்லாத ஜெந்து பயத்தால் குரைத்து ஓடிக்கொண்டே அல்லற்படுவதைக் கண்டு கை கொட்டிச் சிரித்துப் பரமசந்தோஷப் படுவதுண்டு. இது போலவே கோழிச் சண்டை மாட்டுச் சண்டைகளும் நடைபெற்று வருகின்றன. இச் செயல்கள் பாவ புண்ணியம் உணர்ந்தவர்களின் செய்கைகளாகுமா? உதாரணமாக தட்டாரப் பூச்சிகளைப் பிடித்து அவற்றின் சிறகுகளில் நூலைக் கட்டிப் பறக்கவிடும் சிறுவர் பலரைக் காண்கின்றோம். சீதா பிராட்டியாரின் ஒப்பில்லாவுயர் குணச் சிறப்புகளை நோக்குங்கால் அத் தெய்வக் கற்பின் திருந் திழைக்குச் சிறைவாசம் வரலாமா? வந்த காரணம் என்ன? அரக்கர் வதத்திற்காக வென்பது ஒரு வித வெளிப்படையான காரணமிருப்பினும் அதற்காக இப் பெண் தெய்வம் பயங்கரமாக அரக்கியர்களால் பயமுறுத்தவும் இழிவாகப் பேசவும் உள்ளாக்

கலங்கி உரைதடுமாறி உணர் விழந்து வருந்த வேண்டுமா? உண்மையாக இதற்கு வேறு காரணம் இல்லையா? என்று இராவண வதத்திற்குப் பிறகு இராமபிரான் பூமி பரி பாலனம் செய்கையில் தனது குலதருவாகிய வசிட்டரைப் பணிந்து வினவினாராம். மூக்கால முணர்ந்த முனிவர் பெருமான் அது கேட்டு உன் கேள்வி நீதியேயாகும். ஜாநகி கன்னியா மாடத்தில் இருந்த போது ஒரு பசுங் கிளியைப் பிடித்துக் கூண்டில் அடைத்து தனதாசைப் பெருக்கால் விட மனம் வராமல் இருந்தாள். தன்னினத்தைப் பிரிந்து வந்ததால் மனமுடைந்து வாட்ட முற்றிருந்த கிளியின் ஏக்கத்தைப் பொருட்படுத்தவில்லை. அதன் பயனாகவே அக்கிளி கூண்டில் அடைபட்டிருந்த ஒன்பது மாதங்கள் தானும் அசோகவனத்தில் அரக்கியர் காவலில் இருந்து வருந்த நேர்ந்த தென்றருளிச் செய்தாராம்.

இதனால் செய்யும் செய்கையின் பயன் உணரமுடியாத இளமையில் செய்யும் தீவினையும் செய்தோரைத் தொடர்ந்து வந்து பயனை ஊட்டிவைக்கும் என்பது விளங்குகின்றது என்றால் தீவினை யென்று தெரிந்து செய்யும் செயல்கள் எவ்வண்ணம் இவர்களைத் தொடர்ந்து வருத்தா தொழியும்? தனது நன்மையை நாடாதவர் உலகில் இரார். தனது நன்மையை நாடுவது திண்ணமாயின் பிறர்க்குத் தீங்கு செய்ய மனதாலும் எண்ணாதிருக்கக் கடவர். இத் தீவினை யகற்று என்னுந் தொடர், பிறருக்குத் தீங்கிழையாதே என்பதாக அறிவூட்டியதாகக் கொள்ளுவதுடன் தனக்கு வரக்கூடிய தீமையை வரவிடாமல் எச்சரிக்கையாக இரு என்று வற்புறுத்தியதாகவும் பொருள் கோடல் பொருத்தமுடைத்தாகும்.

"துன்பத்திற் கிடங்கொடேல்" என்பது அடுத்த தொடர். இதற்குமுயற்சியினால் ஏற்படும் சரீர பிரயாசத்திற்குப் பயந்து நீ மனம் சளைக்காதே என்று அறிஞர் பிறர் பொருள் கொண்டிருக்கின்றனர். தொடக்கத்தில் ஏற்படும் உழைப்பு எவர்க்கும் துன்பத்தையேகாட்டும். உதாரணமாக பயிர்த்.தொழிலை எடுத்துக் கொள்வோம். மெய் வருத்தம் பாராது பலகாலும் உழுதுழுது விதை விதைப்பவர்கட்கே விளைவின் பயன் கைகூடும். அவ்வண்ணம் தொழிற்படாது மேலெழுந்தவாரியாக ஒரு சோம்பல் உடையோன் செய்யும் விவசாயம் விழலுக்கிறைத்த வேலையாகவே முடியும். இதுபற்றியே 'வித்தும் ஏரும் உளவாயிருப்ப எய்த்தங் கிருக்கும் ஏழையும் பதரே' என்ற பழமொழியும் நிலவியுள்ளது தவிர இளமையில் உடலுழைப்புக்குப் பின் வாங்கி உண்பதும் துயில்வதும் உடுப்பதுமாக நேரங்கழிக்கும் இளைஞர் நோய்வாய்ப்பட்டுச் சிகிச்சாவிடுதிகளை நிரப்புகின்றனர். இளமை யுழைப்பு முதுமையில் உடல் உறம் உறச் செய்து காத்தலை கிராமங்களிலுள்ள பல தொழிலாளர்களைக் காணுங்கால் நன்கு உணரலாம்.

சரீர உழைப்பினால் உடல் உரம் பெறுவதுபோல மூளை யுழைப்பு நலந் தராது. இதற்கு மாறாக உடல் நலத்தை யழித்து மூளைக் கொதிப்பையுங்கூட உண்டுபண்ணு மென்பது மிகையாகாது. தற்காலம உடல் உழைப்பு பெரும்பாலும் புறக்கணிக்கப்படுவது கண்கூடு. எருதுகள்கூட இளமையில் உழுது பழகியிருந்தால் சலியாமல் முதுமையிலும் பெரும் பாரங்களையும் இழுக்கும்; அவ்வாறு பழக்கப் படாமல் கண்ணுக்கழகாக நாளொரு மேனியும் பொழுதொரு வண்ணமுமாக வளர்க்கும் காளைகள் வண்டியில் பூட்டும்போதே மிக

மிக இடர் செய்யும். ஆதலின் ஆரம்பத்தில் துன்பமாகக் காணப்படும் எம் முயற்சியும் முடிவில் பெரிய இன்பம் தருவது நிச்சயம். "துன்புள தெனினன்றோ சுகமுளது" என இராமன் குகனிடம் புகன்றதாகக் கம்பர் கூறியுள்ளார். மற்றும் அதே கம்பநாடர், அகஸ்திய முனிவரின் ஆசிரமத்தை இராம லட்சுமணர்கள் வைதேகியுடன் கால் நடையாக அடைந்தபோது இவர்கள் வருத்தம் கண்டு வருந்திய மாதவர்களை நோக்கி கோசல நாட்டின் கோமகன்,

"வேந்தன் வீயவும் யாய்வர மேவவும்
ஏந்தல் எம்பி வருந்தவும் என்னகர்
மாந்தர் வன்றுயர் கூரவும் யான்வனம்
போந்த தென்னுடைப் புண்ணியத்தால் என்றான்."

எனத் தனக்கு நேர்ந்த முனிபுங்கவர்களின் தரிசன பலத்தைப் போற்றி எய்திய எல்லாத் துன்பங்களும் சிறிதெனப் பொருள்படக் கூறியிருக்கின்றார். அக்கால் திருமுடியிழந்து அரசபோகத்தைத் துறந்த புன்னகை தவழ்ந்த இன்னெழில் முகத்தனும் துணிந்து துறந்துபோக மாட்டாதவராக இருப்பின் அத்தியாக மூர்த்தியைப் போற்றுவார்களும் உளராவரோ? துன்பத்தைக் கண்டு அஞ்சாது ஆண்மையொடும் ஏற்று அநுபவித்துக் கடப்பவர்க்கே இன்பப் பெருக்கெழக் கூடியதாகும். துன்ப உணர்ச்சியும் இன்பவுணர்ச்சியும் மனிதனுடைய எண்ணத்தையே சார்ந்து நிற்பதாதலின் அத் துன்பத்திற்கு முதன்மை யளித்து மனம் உடையாதே என்றருளினர்.

இனி "தூக்கிவினை செய்" என்பதாகும். இது எடுத்த காரியம் முடியும் உபாயத்தை முன்னதாகச் சிந்தித்து நீ பின்பு அதனைத் தொடங்கு என்பதை அறிவூட்டுகிறது. இதற்கு முன்கூறிய துன்பத்திற் கிடங்கொடேல் என்பதில் துன்பத்தைக் கண்டு மனச் சோர்வு படேல் என்றமையால் எதுவரினும் வரட்டும் என்று கவலையின்றி எக்காரியமும் செய்துவிடக் கூடாது என்பதை நினைப்பூட்டவே தூக்கிவினை செய் என்று அடுத்த நீதியில் விரைந்து கூறினர் மூதாட்டியார். என்னை? துன்பங்களெல்லாம் இறுதியில் இன்பமாக முடியுமென்பதில்லை. நற்செயல்களே இறுதியில் இன்பமளிக்கும். தீயவைகள் அவ்வாறின்றித் தீமையே பயக்குமாதலின் வினை செய்யும்போது அவை எத் தன்மையவைகள் என்பதை ஆராய்ந்து செய்தல்வேண்டும் என்பது இந்நீதியின் குறிப்பு. நளன் சூதாடப் புஷ்கரனோடு மந்திரிகள் தடுத்தும் உடன்பட்டான் அதன் பயன் என்ன? தருமன் விதுரர் தடுத்தும் சகுனியோடு சொக்கட்டான் ஆடினான்? அது தூக்கிவினை செய்ததாகுமா? தசரதன் சந்தோஷத்தினால் இரண்டு வரம் கொடுப்பதாய் வாக்களித்தார். இது தூக்கிவினை செய்ததாகுமா? அரிச்சந்திரன் விசுவாமித்திரருக்கு அளித்ததாக வழங்கும் சரித்திரம் தூக்கிவினை செய்ததாகுமா? மகாபலி அசுரனே யானாலும தானம் கேட்பவர் இன்னார் என்று உணர்ந்தே செய்ததால் பெரும் புகழ் எய்தினான். நித்தியமான அழியாப் பதவியைப் பெற்றானே யல்லது அதனால் அவன் எய்திய இழிவொன்றுமில்லை. ஒரு காரியத்யைத் தொடங்கு முன் இது முடியுமா முடியாதா என்பதை நினையாமலே செயலில் துணிந்து புகுவோர் பலர் உண்டு. இதுபற்றியே,

எண்ணித் துணிக கருமம் துணிந்தபின்
எண்ணுவம் என்ப திழுக்கு

என்றருளினர் தெய்வத் திருக்குறளாசிரியரும். திருவாலவாயில் முன்பு குமாரக் கடவுள் உக்கிர குமார பாண்டியனாக தடாதகைபபிராட்டியாரின் செல்வ துரை மகனாய் அவதரித்து அரசாட்சிபுரிந்து வந்தார்.

அக்கால் மழைவளஞ் சுருங்கி மக்கள் பசிப்பிணியால் வாட்டமுற்றனர். சேர சோழர்களுடன் உக்கிர குமார பாண்டியனும் விண்ணுலகெய்தி இந்திரனைக் கண்டு மழை பொழிவிக்க வேண்டித் திரும்பினர். சேர சோழர்கள் வணக்கமாய் நடந்துகொண்டமையால் அவர்கள் நாட்டில் மழை பொழிந்து வளம் பெருகுமாறு இந்திரன் அருள் புரிந்தான். வெற்றி வேற்காளையென்று அறிந்தும் மண்ணுட்டரசனென்று அலட்சியம் செய்த தேவேந்திரன் பிறகு தன் முடியிழந்து தோல்வியடைந்து அவமானப்பட்டான்.

தடாதகைப்பிராட்டியாரைச் சிவபரஞ்சுடர் மன்றல் புரிந்ததை இந்திரன் உணராதவனல்ல. அவர்கட்கு மைந்தனாக உதயம் செய்தவர் தேவர் குறை முடித்த செம்மல் என்பதையும் மறக்க இடமில்லை.

அவ்வாறிருந்தும் செல்வத்தாற் செருக்கி யிறுமாந்து மழை மறுத்து வருணனை ஏவி நகரை அழிக்கச் செய்ததும், நள்ளிருளில் போர் செய்ய முற்பட்டதும் ஆகிய செயல்கள் தூக்கி வினை செய்ததாகுமா? இவ்விந்திரனே முன்னொரு காலம் வியாழ பகவானை எதிர்கொண்டு உபசரியாமல் அரம்பையர் களியாட்டத்தில் மூழ்கி மதத்திருந்தமையால் இந்திர போகத்திற்குரிய எல்லாப் பொருள்களையு மிழந்து எண்ணவு முடியாத இன்னல்களை யடைந்து பின்பு சிவபரஞ் சுடரைப் போற்றி அக்குல குருவையே சரணடைந்து அவர் தம்மருளால் துயர்நீங்கி மீண்டும் இந்திர போகத்தை யடைந்தான். தூக்கி வினை செய்யாத குற்றத்தினால் விளைந்ததன்றோ இக் கொடுமைகள். மகரிஷியாகிய விசுவாமித்திரர் அரிச்சந்திரனின் மனவுறுதியை யுணர முடியாமல் தேவசபையில் அவமானம் அடைந்தது தூக்கி வினை செய்ததாகுமா? எனவே தூக்கி வினை செய்யாமல் துன்புழந்தவர் முற்றத் துறந்த முனிவர் கூட்டத்திலும் உண்டு. மூவுலகாளு முடிமன்னனாகிய இந்திரனையும் விட்டதாகத் தெரியவில்லை. எனவே சாதாரண இளைஞர்களுக்கு ஆலோசியாமல் செயலில் இறங்கும் அவசர புத்தி உண்டாவது இயல்பேயாகும். முன்னோர் ஓதிய நீதி நூல்களை ஓதியோதி அப்பொருளை யுட்கொண்டு செய்கையில் கொண்டுவரப் பயிலல்வேண்டும்.

இதுபற்றியே

நன்னிலைக்கட் டன்னை நிறுப்பானுந் தன்னை
நிலை கலக்கிக் கீழிடுவானு—நிலையினு
மேன் மேலுயர்த்து நிறுப்பானுந் தன்னைத்
தலையாகச் செய்வானுந் தான்.

என்றருளினர் நாலடியாரும். பெருமையும் சிறுமையும் தான்தர வருமே என்று ஔவையாரே பிறிதோரிடத்திற் கூறி வைத்துள்ளார். தூக்கி வினை செய்

யாமையால் இலௌகிக விஷயங்களில் ஏற்படும் விபரீதக் கெடுதிகளைவிட மணிமந்திர ஔஷத முறைகளில் ஈடுபடுவோர்க்கும், வாதங்களில் பயில்வோர் கட்கும், யோக மார்க்கம் சித்தர் மார்க்கங்களில் அரிய உழைப்பு மேற்கொள் வோர்களுக்கும் விளையும் அபாயங்கள் மனதினாலும் நினைக்க முடியாது.

> செய்தக்க வல்ல செயக்கெடும் செய்தக்க
> செய்யாமை யானுங் கெடும்''

என்றருளியதால் செய்யத்தகாத செய்கை ஆராயாமல் தொடங்கினால் அது கெடும். ஆராய்ந்து காலம் கடவாது செய்யவேண்டியவைகளைச் செய்யாது விடுவதாலும் கெடும் என்றறிதல் வேண்டும்.

ஒருவினை செய்வதிலேயே இவ்வளவு கெடுதிகள் விளைவதினால் எல்லா அறங்களுக்கும் இருப்பிடமாகிய இல்லறத்தி லீடுபடவேண்டிய வதூவரர்களை இணைக்கும் கடமையில் எத்தனை கவனம் செலுத்த வேண்டுமென்பதை முற்காலத்தினர் உணர்ந்திருந்தனர். அதற்குத் தக்க வழிகளும் துணியப் பட்டன. பொய் மலிய மலிய ஆராய்ந்து நூல் கற்போர் அரிதாயினர். சோதி டக்கலை பொய்யென்போரும், அது மனிதன் திறமைக்கு மேற்பட்டதென்பா ரும் பெருகிவிட்டனர். முயற்சியுடையார்க்கு கற்க முடியாத கலைகள் உல கில் இல்லையென்பதுறுதி. இக் கருத்தை ஒப்புக்கொள்ளாத நவீன நாகரிகர்க ளான ஆடவனும் ஆடவியும் எவ்வித சோதனைகளையும் யோசியாமல் யவ்வன வஸ்தையினால் பசிக்குப் பனம்பழம் தின்பதுபோல மனம்போனபடி (கணவ னும் மனைவியு மாகாமல்) காதலனும் காதலியுமாகி சின்னாட் போகத்தில் சமூக அந்தஸ்தையும் அறத்தைப் பேணும் பொறுப்பையும் இழக்கின்றனர். மக்கள் நலத்தைப் பெற்றோர்களை விடத் தூக்கிச் செயல் செய்ய எவருக்கும் இயலாது. யுவர்கள் கண்கெட்ட காமப் பேய்க்கு இரையாவதால் தம் பிற் கால நலத்தை முற்கூட்டி சிந்திக்க ஒருபோது முடியாது. அறிவுபோதாக் குறையாலும் பணத்தாசையாலும் தவறிழைக்கும் பாவிகளான தாய் தந்தை யர்களும் இல்லாமலில்லை. பெரும்பான்மை யென்பதே மனதிற் கொள்ளல் வேண்டும். சகுந்தலை வாழ்க்கை யொன்றே காதல் மணத்தினால் எய்தும் அல்லலுக்குத் தக்க உதாரணமாகும். எனவே ஔவையார் கூறிய தூக்கி வினை செய் என்ற நீதி விவாக தர்மத்திலும் கொள்ளல் வேண்டுமென்பதே இதன் கருத்து.



# "கோபாலன்" கடிதங்கள்

சீதாபதி துணை.

.............

என்பொடு கலந்த அன்புடை யண்ணு!

தங்கள் பேரன்பிற்கு வணக்கம். தங்கள் கடிதத்தால் உவப்பும் வியப்பும் அடைந்தேன். "பெண்டாட்டி காற்கட்டு, பிள்ளை வாய்க்கட்டு" என்பது உலகியலுணர்ந்தோர் கூற்று. காலைக்கட்டிய ஆண்டவன் இன்னும் எனது வாயைக் கட்டாதிருப்பது குறித்து மகிழ்வுறுகிறேனன்றி அகத்துறுபடேன் என்றும். ஆதலின் மலட்டுத்தன்மை ஆண்மைக்கா பெண்மைக்கா என்னும் ஆராய்ச்சி எளியனைப் பொறுத்தமட்டில் இன்றியமையாததன்று. "இலங்கை மேவும் கூலிகளை அவண் ஏகாதுசெய்யும் வகையறியாது வீணே அவர்களைச் சபிப்பதாக" அடியனைக் குறை கூறுகின்றீர்கள். அவர்கள் இலங்கையில் பெறும் ஊதியமளவு இங்கு அளிக்க முன்வந்தாலன்றி அவர்கள் அவாவும் அடங்காது; இங்கு இருக்கவும் ஒவ்வார். "ஏழைகளுடைய ஊதியத்தைக் குறைத்து நீமட்டும் அதிகவூதியம்பெற முயலல் தவறல்லவா?" என்று நீங்கள் வினவலாம்! நானும் என்னைப் போன்றவர்களும் அதிகவூதியம் பெற முயலி னும் அம்முயற்சி சித்திபெற வில்லை. இங்கு மற்றொன்று நினைவிற்கு வருகி றது. நமதுநாட்டின் ஒப்பற்ற பெரியார் லஜபதிராய் அவர்கள் ஆடவர்களைப் போலவே தங்களுக்கும் சமவுரிமைவேண்டு மென முயலும் பெண்களைப் பார்த்து, "சகோதரிகளே, அடிமைகளாக வாழும் நமது நாட்டு ஆடவர்களி டத்து என்னவுரிமை கண்டீர்கள்?' என்ற வுண்மையுரை இங்கு மிகப் பொ ருத்தமானது. வறுமையால் வருந்தும் நமதுநாட்டின் துயரைப் பரிகரிக்க நாமனைவரும் ஒருங்கே நமது சொந்தநாட்டில் தொண்டுபுரிய விருப்பமின்றி, தந்நலங்கருதி அன்னியரைக் கொழுக்கவைக்கப் பிறநாடு செல்பவரை எனது மனம் சபிக்கவே முந்துகின்றது! "குடியரசி"ன் போதனையால் உனது மனம் பேதப்பட்டு விட்டதோ!" என்று வியப்புறுகின்றீர்கள். இலங்கையின் மாட மாளிகைகளும், மதிற்சுவர்களும் பொன்னாலானவையென இதிகாசங்கள் கூறு கின்றன. இதைத் தாங்களும் ஒப்புக் கொள்வீர்கள். அதனால் இலங்கை வாசி கள் இவணிருந்து செல்லும் கூலிகட்கு அவர்கள் வேண்டுமளவு பொற்கட்டி களைத் தரலாம்! நாம் எங்கே போவது? ஆனால் இங்கிருந்து அழைத்துச் சென்ற ஏழ்மையை,-பாவம்,-அவர்கள் வருங்காலும் உடன் அழைத்தே வருகின்றனர்!

வாயுபகவான் யான்பெற்ற பொருள் போல்வதைப் பறிமுதல் செய்யும் பான்மை பெற்றிலனாயினும், மற்றியானே உழவன் என்னும் தோழன்துணை கொண்டு செல்வமகளின் கூட்டுறவை விரும்பிக் கல்வியென்னும் அக்காரிகை யை மறதியென்னும் கொடுங்காற்றிசையே செல்ல விடுத்தேன! இச் செயலை நினைக்க நினைக்க எளியனின் ஊனும் உளமும் ஒருங்கே நைந்துருகு கின்றது. கல்வி மகளின் சல்லாபமே வாழ்க்கையின் இன்பமாக அடியேன் நினைந்தொ ழுகி வந்திருப்பின் இச்செல்வமகளின் கடைக்கண் பார்வைக்கு இப்பொழுது

யான் இத்துணைப்பாடு படவேண்டியிராது. பட்டும் என்? பெற்ற பயனோ சிறிதும் இல்லை. பாவம்! உழவன் என்னும் தோழனை நம்பி ஏமாந்தேன்.

அடியேன் தங்கட்குக் கடிதம் வரைந்தகாலை..............கல்லூரி ஓய்வு பெற்றிருக்கலா மென்றும், அதனாலவர் யாண்டேனும் சிற்றூர்களுக் குச் சென்றிருக்கலாமோ எனவும் கருதியே "பண்டிதர் யாண்டுளர்?" வினவினேனல்லது வேறு எவ்வகை ஐயத்தையும் மனத்துட் கொண்டு அங்ஙனம் வினவவில்லை.

இரும்பிற்கு (Oil Engine) என்னை அடிமைப்படுத்த முயன்று மிக எளிதில் வெற்றி பெற்றீர்கள். அவ்வகையில் யானும் ஒருவரைப் பண்படுத்த முயல்கின்றேன்! அதற்குத் தங்கள் உதவியும் வேண்டும்.

இங்ஙனம்
தம்பி-கோபாலன்

* * * *

.................

பேரன்புடைய பெரியீர்!

"சந்திரோதயம்" கண்டேன்; தங்கள் கைத்திருமுகங்கள் கண்டேன். மெய்த்திருமுகங் கண்டுமகிழ இறைவன் திருவருளை யெதிர்பார்த்திருக்கிறேன். சர்க்கரைக்கட்டியில் எந்தப்பக்கம் உண்டாலும் சுவையில் மாறுபடுமா? "சந்திரோதய"த்தில் வெளிவரும் செய்திகளும் அத்தகையனவே. பேரறிஞர்களால் வரையப்படும் செய்திகட்கு மதிப்புரைகூற நானா தகுதியுடையவன்? எனது புனைகதை சென்ற இதழில் வெளிவராததுகுறித்துப் பெருமகிழ்வே. அடியேன் பயிரிடும் ஓர் சிறுகுடியென முன்பே ஓர் முறை குறிப்பிட்டிருந்தேன். தமிழ்ப் பயிற்சி ஓர் தினையளவே உடையேன். ஆகவே அச்சிறுகதையை எத்துணை திங்கள்வரை ஒத்திப்போட்டு வரினும் மகிழ்வுறுதற்குரியேனன்றோ? அதன் பிற்பகுதி வரைந்து வருகிறேன். முடிந்ததும் அனுப்புவேன்.

வித்துவான், சிதம்பர புன்னைவனநாத முதலியாரவர்கட்கு எனது வணக்கத்தைக் கூறுங்கள். அவர்கள் வழியாக எனது இளமைவாழ்வை நினைவுறுத்தி விட்டீர்கள்! ஆ! அந்தக்காலத்தை—கள்ளங் கபடற்ற ஆனந்தமாகக் கழித்த அந்த நாட்களை நினைவுறுத்தி விட்டீர்கள்! மதுரைத் தமிழ்ச் சங்கக் கலாசாலையில் 1912-ம் ஆண்டின் இறுதியிற் சேர்ந்து கல்வி பயின்று 1917-ம் ஆண்டின் இடையில் விலகிப் பயிர்த்தொழிலில் ஈடுபட்டுள்ளேன். அதுகாலை முதலியாரவர்கள் மதுரை "சௌராஷ்ட்ரா உயர்தரக் கலாசாலை"யில் தலைமைப்பண்டிதராக இருந்ததோடு "பாண்டிய நேசன்" என்ற பத்திரிகைக்கு ஆசிரியராகவும் இருந்தனர். அடியேன் பெயரும், யான்வரைந்த கட்டுரையும் முதன் முதல் அச்செழுத்துக்களில் வெளி வந்ததைக்கண்டு அடியேன் பேருவகையடைய நேர்ந்ததற்கு ஏது "பாண்டிய நேசன்" என்ற அவ்வரிய இதழும், அதன் ஆசிரியரவர்களுமே யாவர். முதன் முதல் வரைந்தனுப்பிய "தமிழ்க் கல்வி" என்ற சிறு கட்டுரையை அன்புடன் வெளியிட்டதோடு, எளியேன்பால் நேரே "இன்னும் சிறிது விரிவாக எழுதலாமே" என்றுகூறி எளியனை ஊக்கியதை நினைக்குந்தோறும் உள்ளம் பரவசமடை-

கின்றது. பின்னர் "வித்யா போதினி" திங்கள் வெளியீட்டிற்கு ஆசிரியராக இருந்ததை யறிவேன். அதன் பின்னர் அவர்கள் வாழ்க்கை நலம் ஒன்றும் அறியேன்.

"உயர்ந்த உருவம்—சிவந்த உடலம்" என்று அவர்கள் குறிப்பிட்டது பெரும்பாலும் என்னைப் பற்றியதாயிராது. எனது ஊருக்கு 5 கல் தூரத்துள்ள சிற்றூரில் வதிபவரும், "கோபாலன்" என என்பெயரே தன் பெயராக வுடையவரும், என்னோடு வகுப்புத்தோழராக மதுரைக் கலாசாலையில் கல்வி பயின்றவரும், இதுபொழுது............ "போர்டு உயர்தரக்கலாசாலை"யில் தலைமைப் பண்டிதராக இருக்கும் அவரைக் குறித்ததாகலாம். அவர்தான் உயர்ந்த உருவம்-மிகச் சிவந்த உடலம் உடையவர். கலாசாலைத் தோழர்கள் அவரைப் "பெரிய கோபாலன்" என்றும், அடியனை "சின்ன கோபாலன்" என்றும் அழைப்பர். அதற்கேற்ப அவர்கள் இப்பொழுது தமிழாசிரியராகவும் மனைவிமக்களோடும் வதிகின்றார்! யானோ உழுதொழிலாளனாக, மகவின்றி மனைவியோடு வாழ்கிறேன்! இப்பொழுது என்னை நீங்கள் நன்கு அறிந்து கொண்டீர்கள். தங்கள் வாழ்க்கை நலத்தை யான் அறியவேண்டாவோ?

"சந்திரோதயத்"தட் பொதிந்து பொலியும் செய்திகளைப்பற்றி அடியேன்கூற அருகனல்லனாயினும், அவ்விதழின் முகப்பிற்பொலியும் ஓவிய வனப்பைப்பற்றி ஒன்று° கூற விழைகின்றேன்.—அவ்விதனை யான் பார்ப்பதற்குமுன்பு, மங்குல் தவழும் மலையடுக்குகள் ஓர்பாலும், அம்மலைத் தொகுதிகளிலிருந்து இழிதரும் அருவிகள் பலவும் ஒன்று சேர்ந்து ஓங்கி வளர்ந்த மரச் செறிவுகளின் இடையே ஓடும் சிற்றாறு அதன் அருகேயும், வெண்ணித்திலங்களை அள்ளிக் கொழிக்கும் கருங்கடல் மற்றொரு புறமும், இவற்றிற்கெல்லாம் மேலே நீலவானத்தில் பூர்ணசந்திரனின் பொலிவும் உடையதாயிருக்கும் எனக்கருதினேன். ஆனால், அதற்குமாறாக பசியசோலையின் இடையே ஓடும் ஒரு சிறு நதியின் கரையருகே ஓர் அழகிய மாதரசி வீற்றிருக்கக் கண்டேன்! ஆம், அப்பெண்ணரசியிடத்து என்ன இல்லை? முகிலுண்டு, குயிலும் மயிலும் உண்டு, மான் உண்டு மலையும் அருவியும் உண்டு; அழகிய—மாசற்ற முழுக்கலாமதியும் உண்டன்றோ!

அன்பன்—கோபாலன்.

* * * *

சீதாபதி துணை.

..................

8–10–30

என்பொடு கலந்த அன்புடை யண்ணா!

திசை நோக்கி வணக்கம். தங்கள் "திருமுகம்" கண்டேன். உடனே மறுமொழி யெழுத முயன்றும் எனதூரினீங்கிச் சிலவிடங்களுக்குச் செல்ல நேர்ந்தமையின் இயலாது போயிற்று. காலந்தாழ்த்தாது மறுமொழி யெழுதலே அன்பின்குறி யென்றும், தாழ்த்தி வரைதல் அஃதின்மைக்குறியென்றும் தாங்கள் கருதுவீர்களாயின், அதுபொருட்டுத் தங்களிடம் மன்னிப்புக் கேட்டுக்கொண்டு இனி தங்கள் விருப்பிற்கியைய நடந்து கொள்வேன்.

எனது நிலைமையைப் பற்றி வினவியிருந்தீர்கள். "அன்று கண்ட மேனிக்கு அழிவில்லை" யென்று கூறவும் அசக்தனுயுள்ளேன். பொருளாதார நிலைமையின் சீரழிவால் உலகமே நலிவுறும்பொழுது எளியேன் நிலைமையை இயம்பவும் வேண்டுமோ? பாலுக்குச் சர்க்கரையில்லை யென்பார்க்கும், குற்றித் தைத்த காலுக்குத் தோற்செருப்பு இல்லை யென்பார்க்கும் விசனம் ஒன்றே யெனினும் கூழுக்கு உப்பில்லாதவனோடு ஒப்பிடல் நேர்மையன்று. பூமகளருளால் பெருவாழ்வு பெறலாம் என்னும் நினைவோடு யான் அப்பெருமாட்டியிடத்துத் தொண்டு பூண்டு செய்துவந்த பணியனைத்தும் பயனிலவாயின. ஒருபடியேற முயலின் இரண்டுபடி சருக்கிவிழ நேரிடுகின்றது. என்செய்வல்? எனினும் ஒன்றைப்பற்றிய அளவில் பெருமகிழ்வே. "நிஷ்காமிய கர்மமே" சிறந்தது என்பது கீதாசாரியன் கருத்தல்லவா? பயனை யெதிர்பார்த்து அடியேன் இதுவரை பணியாற்றி வந்தும், அப்பணியால் பலனொன்றும் கிட்டவேயில்லை. ஆகையால் பலனில்லாமல் இயற்றி வரும் பணியை "நிஷ்காமிய கர்மத்"தோடு சேர்த்தல் தகுதியுடையதென்றே எண்ணுகிறேன்.

"முயற்சி திருவினை யாக்கும்" "விதியை மதியால் வெல்லலாம்" என்பன போன்ற மொழிகளையே உறுதி மொழிகளென நம்பிவந்த அடியேற்கு இன்று அம்மொழிகளில் ஐயம் ஏற்பட்டுளது. "பண்ணியுள்ளநற் பயிர்களில் அவரவர் பரித்த—புண்ணியம் தெரிவுறப் பயன் விளைப்பவள் புவித்தாய்" என்னும் வழக்குதான் இதுபொழுது அடியேற்கு ஏற்பட்டுள்ள தளராத நம்பிக்கை. "அதிர்ஷ்டம்" என்பதே ஒன்றில்லையெனத் துணிவுகொண்டு அம்மொழியையும் வெறுத்துவந்த யான் இன்று "உழப்பின் வாரா வுறுதிகள் உளவோ?" என்னும் தொடர்மொழியில் அவநம்பிக்கை கொள்ளும்நிலைமையில் உள்ளேன். புவிமகளுக்குத் தொண்டு பூண்டு, அச்செல்வியைச் சிறிது பொழுதும் மறவாது ஒழுகி வந்தும், அந்நிலமகள் அடியேற்குக் கடைக்கண் காட்டாது முகங்கோட்டியே நிற்கின்றுள். ஆனல் கருணைத் தடங்கடல்—கல்லையும் பெண்ணுருவாக்கிக் காட்சியளித்த ஐயன், ஏழையேன் அப்பெருமானைச் சிறிது நேரமாவது சிந்தித்து வந்தியாதிருந்தும், அக்கருணாநிதி அடியேனைக் கடைக்கண்பாலித்து ஆண்டுவரும் அருமையை என்னென்றெழுதுவேன்? கால்முடமான எளியேன் வாயுரிமையாவது பெற்றிருப்பது அப் பரமதயாநிதியின் திருவருட் பெருக்கேயன்றோ?

இனி, தங்கள் நலத்தையறிய விழைகின்றேன். இதுபொழுது தாங்கள் எழுதும் கடிதங்கள் கோவை "அஞ்சல் நிலய" முத்திரை பதித்து வருகின்றன. "..........." அச்சுக்கூடக் கடிதங்களாகவுள்ளன. "..........." தபால்முத்திரை காண்பதற்கில்லை. ஏது யாதோ? அருமைச் செல்வி அரங்கநாயகி, பெறலரும் மைத்துனர் வி. ரா., தம்பி தாமோதரன், தாயார் முதலியவர்களின் நலம் அறிவிப்பதோடு எனது ஆசியையும் வணக்கத்தையும் அறிவியுங்கள். நிலமகளிடத்து நீங்காக் காதல்பூண்டு, அவளே தம் தெய்வம், அவளே தம் செல்வம், அவளே தம் கல்விநிறை ஆஸ்தியாகக் கொண்டு, அல்லும் எல்லும் அவள் நினைவே பூண்ட அன்புருவாய அண்ணல் அப்பாய் நாயுகோரவர்கட்கு எனது தாழ்ந்த வணக்கத்தைக் கூறுங்கள். அவர்கள் புரியும் பயிர்த்தொழிற் செவ்வியின் பண்பினை யறியப் பேரவா.

தம்பி
கோபாலன்.

காந்தியடிகள் துணை.

..................
22-9-28

அன்பு நிறைந்த பெரியீர்!

வணக்கம் பல. இவண்நலம். அவண் அஃதே பல்குக. தங்கள் பால் விடைபெற்றுப் பிரிந்த மறுநாள் அறிஞர் டி. வி. கே. சிவம் முதலியவர்கள் பின்னல் பழனியம்பதி சென்று குமரவேளைத் தரிசித்துப் பிறவிப்பயன் பெற்றேன். மறுநாள் திண்டுக்கல் "சத்திய சன்மார்க்க சங்க" ஆண்டு விழாவில் "சமய வாழ்வு" என்பது குறித்து அறிஞர் முதலியாரவர்கள் சொற்பெருக்கிட்டனர். அதன் அருமையை இச்சிறு முடங்கலில் எழுத இடமில்லை. பின்னர் வேறுசிலவூர்சென்று, நேற்றுதான் (21-9-28) எனது ஊரையடைந்தேன். பக்கத்துக் கிராமவாசிகள் தக்க கல்விபெறாது துரும்பு போன்ற அற்பவிஷயங்களைத் தூண்போலப் பெரிதாக்கி, வீண்மனத்துயரை வளர்தது, நீதி மன்றத்திலும் பிறவற்றிலுமாகப் பொருளையிறைத்து, அந்தோ! தம்வாணுள் முழுவதையும் வீணுக்குகின்றனர்! உங்கள் பக்கம் எவ்வாறே அறியேனுயினும் கல்வி கூடியவரை மேம்பட்டே விளங்குகிறீர்கள். தாங்கள் எம். ஏ. பட்டம் பெற்றிருந்தும் உத்தியோக பருவத்தை விரும்பாது உழவுத்துறையில் ஈடுபட்ட தங்கள் குணப் பெருமையை உள்ளுந்தோறும் உள்ளம் பரவசமுறுகின்றது. பலர் ஒரு சிறிது கல்வியில் தேர்ச்சிபெற்றதும் உத்தியோகத்தை நாடி அதுவும் பெறாது, வேறுதொழில் செய்யவும் வலிமையின்றிச் சோம்பித்திரியும் இந்நாளில் அன்னவர்க்குத் தாங்கள் ஓர் வழிகாட்டியாக விளங்குகிறீர்கள். கல்வியில் மிக்கோர் உடல் உழைப்பால் ஊதியந் தேடல் கேவலம் என்று கருதும் இக்காலத்துத் தாங்கள் கல்வியிற் பெரியவராயிருந்தும் பயிர்த்தொழிலை மேற்கொண்டு தமிழ் நாட்டின் பழம்பெருமையை நினைவுறுத்துகின்றீர்கள்! புலமைசான்ற சாத்தனுர், நக்கீரர், தாமோதரனுர், நாகனுர் முதலிய ஆன்றோர்கள் வாணிபம், கைத்தொழில், மருத்துவம், பயிர்த்தொழில் முதலிய மேற்கொண்டு வாழ்க்கை நடத்தியவர்களன்றே? உலகம் போற்றும் ஒப்புயர்வற்ற வள்ளுவப் பெருந்தகையார் "இழைநக்கி நூல் நெருடும் ஏழை" என்று தம்மை விளம்பரப்படுத்திக் கொண்ட வரலாற்றைத் தாங்கள் அறிவீர்கள். இருந்த விடத்திலிருந்தே எல்லாவற்றையும் இயக்குவிக்கும் இறைவன் மானுடவேடம் பூண்டு தொழில்பல புரிந்தனனென்றால் தொழிற் பிரபாவம் சொல்லுந் தரத்ததோ? தொழிலின் அருமையையறிந்த மேனுட்டார் இன்று நமக்கு எஜமானர்களாயும், நாம் அடிமைகளாயும் இருப்பதன் இரகசியம் இதுதான். நம்மவர் இதனை யறிந்திருந்தும் தொழில்செய்வதை இழிவென்று கருதுகின்றனர்! இம்மடமை நீங்கும்நாளே நம் வறுமை நீங்கும் நாளாகும். கல்விப்பயிற்சி பெறாத அனைவர்க்கும் கல்வியளித்து அவர்களை நன்னெறியிற் செலுத்தல் தங்கள் போன்றார் கடமை. ஆண்டவன் திருவருள் கூட்டுமேல் இன்னொருமுறை விரைவில் தங்களைத்தரிசிப்பேன். தம்பி சங்கரநாராயணன், மைத்துனர் சடையப்பர் முதலியோரின் நலம் அறிய அவா. தங்கள்புகழ் தங்கள் திருப்பெயரான "கஸ்தூரி'யைப் போல எங்கும் மணம் வீசிப் பரவுக!

அன்பன்
கோபாலன்.

# "மணிமேகலை" ஆராய்ச்சி

ஸ்ரீ R. V. இராமஸ்வாமி B. A., B. L. வக்கீல், சேலம்.



## 3. சரித்திரக் குறிப்பு

### (சோழ மன்னரில் சிலர்)

### 4. தொடித்தோட் செம்பியன்

'மணிமேகலை'யின்படி, இந்திரவிழா ஆதியில் சோழரின் குலத்தவனாகிய தூங்கெயிலெறிந்த தொடித்தோட் செம்பியனென்பானால் தொடங்கப்பட்டது. சோழமன்னர்களைச் செம்பியரென் றழைத்தலுண்டு.

தூங்கெயிலெறிந்த தொடித்தோட் செம்பியன், பழம் பதியாகிய காவிரிப்பூம்பட்டினத்தைப் பண்புறச் செய்வித்தற்கு நினைத்தான். ஓங்குயர் மலையத்து அருந்தவராகிய அகத்தியரின் உரைப்படி, மண்ணவரின் க்ஷேமலாபங்களை விரும்பி விண்ணவர் தலைவனாகிய இந்திரனை வணங்கி, அவனது சம்மதம் பெற்று இருபத்தெட்டு நாட்கள் அவ்வான்பதியில் விழாவை நடத்தி வந்தனன். அச்சோழன் காலத்தில் நிகழ்ந்தவாறே பிற்காலங்களிலும் அவன் பரம்பரையோர் காலத்திலும் ஆண்டுதோறு மிவ்விழா செம்மையாக நடந்து வந்ததென்பது பதிற்றுப்பத்தென்னும் நூலாலும் விளங்குகின்றது.

### (மதில்களை அழித்தல்)

விண்ணில் அசைந்து நிற்கும் இமையோரின் பகைவரது மதில்களைத் தனது இணையற்ற வலிமையால் அறித்து வீழ்த்திய வெற்றி வளையல்களை யணிந்த தோள்வலியுடைய சோழனென்பது இவனது பெயருக்குற்ற பொருளாகும் இவனழித்த மதில்கள் மூன்றெனத் தெரிய வருகின்றது. (சிலப். வாழ்த்து செய்யுள். 29; 27: 164-5) அம் மதில்கள் ஆகாயத்தில் அசைந்து கொண்டே சென்றனவென்பது பழமொழிச் செய்யுளொன்றால் விளங்குகின்றது. (செ. 49.) அசுரரது அம் மூன்று அரணும் உலகத்தை வருத்தி வந்தனவென்பதும்; அம் மதில்களையும் அவற்றிலிருந்த தீயோர்களையும் இச் செம்பியன் தனது ஒப்பற்றவலி தோன்ற அழித்தனனென்பதும், பதிற்றுப் பத்து, மூவருலா முதலிய நூற்களில் காணப்படுகின்றன.

இம்மன்னனது தோள்வலியும், பகைவரை இவன் வாட்டிய பெருமையும், வானத்து மதிலைத் தாழ்த்திய செய்தியும் (புறம். 39; சிறுபாண் 79-32; இராசராச. சோ. உலா. 13; குலோத்து. சோ. உலா; விக்கி. சோ. உலா; கலிங். பரணி) தமிழ்நூற்கள் பலவற்றுள்ளும் கூறப்பட்டுள்ளன. தொல்காப்

பியம், களவியல் பதினொன்றாம் சூத்திர உரையில், நச்சினார்க்கினியர் காட்டிய மேற்கோள் செய்யுளில்,

"திறல் விளங் கவுணர் தூங்கெயி லெறிந்த
விறன் மிகு முரசின் வெல்போர்ச் சோழன்."

என வருவது காண்க.

மேற்குறித்த ஆதாரங்களைக்கொண்டு நோக்குமிடத்து, மணிமேகலையில் குறித்துள்ளபடியே, இவ்வரசன் சோழநாட்டை யாண்டவன்; தேசத்தின் நலன்களைப் பெரிதும் கருதியவன்; சிராசச் செங்கோல் நடாத்தியவன்; ஒப்பற்ற வீரன்; கொடியோரை அழித்து அடக்கி நல்லோரைக் காத்திடு மியல்பினன்; விண்ணில் அசைந்து நிற்கும் அரணை வலியழித்திட்ட தெய்விக சக்தி தங்கப்பெற்றவன்; தெய்வபக்தி கொண்டவன்; விழாக்களை வழுவாது செய்து மன்னவரின் க்ஷேமத்தை நாடுபவன்; தேவருக் குகந்த நேசன்; பெரியோரிடத்துப் பணிவுடையோ னென்பன பலவும் விளங்குகின்றன.

## 5. கரிகாலன்

மணிமேகலையில், சோழன் கரிகாலன் தனது நாட்டைவிட்டு வடநாடுகளுக்குச் சென்ற வமயத்து அவனது நாடு கவினழிந்து கிடந்ததென்பது கூறப்பட்டுள்ளது. (1: 39: 40); மீட்டும், மதுமலர்க்கூந்தல் சுதமதி உவவனத்தில்,

"இளமைநாணி முதுமை யெய்தி
உரைமுடிவு காட்டிய வுரவோன்."

கரிகாலவனின் வழித்தோன்றலாகிய நெடுங்கிள்ளியின் மகன் உதயகுமரனுக்கு, அரச தருமங்களையும், நல்லறிவையும், செறிவளை மகளிர் செப்புதல் சற்று மேலாதென (4: 107-10) இடித்துக் கூடியதாகக் கூறுமிடத்துச், சாத்தனர் கரிகால்வளவனைக் குறித்துள்ளார். இக் கரிகாலனைக் குறித்து இவ்விரு விஷயங்களே இந்நூலில் காணப்படுகின்றன. எனினும் இவற்றால் முறையே பூம்புகாரைக் கரிகாலனென்ற வளவனாண்டதும்; அவன் வடநாடு சென்றதும்; சென்ற வமயத்து நாடு அவனது பிரிவாற்றாமையால் எழிலற்றுக் கிடந்ததும்; அவன் வெகு இளையபருவத்திலேயே அரச பதவிக்கு வந்ததும்; ஐயமுற்ற முதியோரின் வழக்கை இளம்பருவத்தில் நரைமுடி தரித்துத் தீர்த்திட்டவிதமும் தெரியவருகின்றன.

இக் கரிகாலன் காலத்தில், கோவலனின் கதை நிகழ்ந்ததாகச் சிலப்பதிகாரம் கூறுகின்றது; இவனைப்பற்றிய செய்திகள் பல, அகநானூறு (செ. 125, 249); புறநானூறு (6: 7: 65: 68: 224); பட்டினப்பாலை; பொருநராற்றுப்படை; பழமொழி (21: 62; 205); சிலப்பதிகாரம் முதலிய நூற்களிலுள்ளன. இவனை, "வெல்வேல், உருவப்பஃறேர் இளையோன் சிறுவன்" எனச் சங்கநூற்களி லொன்றாகிய பொருநராற்றுப் படை கூறும். (129: 30) சிலர் இவனை, உறையூரிலிருந்த பராந்தகச் சோழனுடைய மகனென்பர். கரிகாலனது வரலாறும்; அவன் கரிகாலனென்று பெயர் பெற்றதற்குற்ற காரணமும்; அம்மானின் உதவிபெற்று அவன் நாடாளப்புகுந்த விதமும்; அவனது இல்ல

தத்தின் தூய்மையும், தமிழபிமானமும்; தமிழ்நூற்களில் விரிவாகக் கூறப்படு வன ஆங்காங்கு கண்டுகொள்க.

(முதியோரின் வழக்குத் தீர்த்தல்)

இளம் பருவத்தினனாய்க் கரிகாலன் அரசாண்ட காலத்தில், வயதில் முதிர்ந்த இருவர் அவன்பா லெய்தித் தம்முள்ளிருந்த வழக்கைக்கூறி, 'இளையன் அவன் எங்கள் வழக்கைத் தீர்த்திடுவானோ'' என்று ஐயங் கொண்டனர். முதியோரின் கருத்தை உணர்ந்த காவலன் கரிகாலன், நரைமுடி நரித்து வந்து அவரது வழக்கினைக் கண்டோரும் கேட்டோரும் அதிசயிக்குமாறு தீர்த்திட்டான். இச் செய்தி பழமொழிச் செய்யுளொன்றிலும் (செய். 21); அச் செய்யுளின் பழம் உரையிலும்; பொருநராற்றுப் படையிலும் (187-8) அதன் பழைய உரையிலும், குறிக்கப்பட்டுள்ளது.

(பிரிவால் வருத்தம்)

கரிகாலன் தமிழ்ப்புலவர்களை ஆதரித்து வந்தான். பழுத்த மரத்தை விரும்பிச் செல்லும் பறவைகளைப் போன்று, அவனது தண்ணளிக் கருணையை நினைந்து புலவர்கள் பலர் அவனது அகன்ற அரண்மனையை அடைந்து பரிசில் வேண்டிநிற்பர். அவனும் ஆடையும் அணியும், அடிசிலும் நச்சி வந்த நாவலர்க் குதவி அவரது வறுமைநோய் நலிந்தோடுமாறு செய்திடுவான். தன் கோல்நோக்கி வாழ்ந்தோரது குறைநோக்கி அரசாண்டான். உறையூரை விடுத்துப் புகாரைத் தனது தலைநகர மாக்கிக்கொண்டான். காடு கொன்று நாடாக்கினன். குளம்வெட்டி வளம் பெருக்கினன். தனது நகரத்தின் எழிலைப் பெருக்கச் சீர்திருத்தம் பலவும் செய்தான். விழாக்களை வழுவாது செய்தான். காவிரிநதிக்கரை யொன்றுகட்டி, 'பொன்னிக்கரைகண்ட பூபதி' யென்று புகழப்பட்டான். பகைவரை அழித்து நாட்டின் பெருமையை உயர்த்தினன். இங்ஙனமாகப் பல துறையிலும் குடிகளின் பொதுநலனைக் கருதி அவன் நாடாண்டுவந்த காரணம் பற்றியே, கரிகாலன் வடநாடு சென்ற காலத்தில் அவனது கோல்நோக்கி வாழ்ந்த குடிகள் வருந்தினர் போலும்!

கரிகாலனது வடநாட்டுப் போரெழுச்சியும், ஆங்கு இமயத்தில் அவன் சோழரது அடையாளச் சின்னமாகிய புலிப்பொறி குறித்ததுவும், அடியார்க்கு நல்லார் எடுத்துக் காட்டாக வைத்துள்ள, "செண்டு கொண்டு" எனத் தொடங்கும் கலிங்கத்துப்பரணி அடிகளும்; விக்கிரம சோழனுலாவும்; பெரிய புராணமும் கூறுகின்றன. போர்கருதிக் கரிகாலன் வடநாடு சென்றதாக அடியார்க்கு நல்லார், சிலப்பதிகாரத்தில் தமது உரையில் குறித்துள்ளார். வடநாட்டுப் போரெழுச்சியே மணிமேகலையிலும் கூறப்பட்டுள்ளது.

சிலப்பதிகாரத்தில், கரிகாலனைப்பற்றி வந்துள்ளனவற்றை நோக்குமிடத்து, இவன் சிலப்பதிகாரம், மணிமேகலை முதலிய நூற்களின் கதை நிகழ்ந்த காலத்திற்கு முற்பட்டவனாக இருத்தல் வேண்டுமென்பது பெறப்படுகின்றது. இக் கரிகாலனும், பாண்டியன் நெடுஞ்செழியனும், சேரன் செங்குட்டுவனின் தந்தை இமய வரம்பன் நெடுஞ்சேரலாதனும் சம காலத்தவராதல் வேண்டும்!

## 6. கிள்ளி வளவன்

'மணிமேகலை'யின் கதை நிகழ்ந்த காலத்தில் புகார் சோழநாட்டின் தலைநகரமாக இருந்ததெனவும், அது நெடு முடிக்கிள்ளி யென்ற சோழமன்னனால் ஆளப்பட்டு வந்ததெனவும் தெரிய வருகிறது. இந்நெடுங் கிள்ளியை, மாவண் கிள்ளி, கிள்ளிவளவன், வடிவேற்கிள்ளி, வெல்வேற்கிள்ளி, கல்லார்கிள்ளி, என்ற பிற நாமங்களிலும் இந்நூலில் அழைக்கப்பட்டுள்ளன. இப் பெயர்கள் ஒரு அரசனைக் குறித்திடும் பல பெயர்களா? அன்றிப் பலரைக் குறித்திடும் பெயர்களாவென்பது நன்கு புலப்படவில்லை. கரிகாலனுக்குப் பிறகு அரசபதவிக்கு வந்ததாகக் கூறப்படும் இக்கிள்ளி வளவனை, அக்கரிகாலனின் மகனென்று சிலரும், மைந்தனது மகனென்று பிறரும் கூறுகின்றனர்.

### (ஆட்சி முறை)

கிள்ளி வளவனின் காலத்தில் இந்திரவிழா வெகு சிறப்பாக நடந்ததென்பது 'மணிமேகலை' முதலிரண்டு காதையால் அறியலாம். இவனது மனைவி சீர்த்தி யென்பதும் அவள், "மாவலி மருமான் சீர்கெழு திருமகள்" (19: 51. 6) என்பதும் தெரிய வருகின்றன. இவளை இராசமாதேவி யென்றும் இங்குக் கூறப்பட்டுள்ளது. இவ்விருவரின் புதல்வனே, தவமகளிடத்தில் தவறாகக் காதல்கொண்டு விதிவசத்தால் வித்தியாதரது வாளில் இறந்திட்ட உதயகுமரன். இக் கிள்ளி வளவனை "அறஞ் செய்வேலோன்" (பதி. 71); "மறைகழல் வேந்தன்" (பதி. 79; "மன்னர் பெருந்தகை" (18: 128); 'வீயா விழுச்சீர் வேந்தன்" (20: 10) எனவும், இவைபோன்ற வேறு பல அடைமொழிகள் கொடுத்தும் அழைக்கப்படுவதால், இவ்வேந்தன் நீதிமுறை தவறாது அரசாட்சி செய்துவந்தவ னென்பதும் குடிகள் இவனிடத்தில் மிகுந்த பற்றுடையார யிருந்தனரென்பதும் அறிய முடிகின்றது.

(தொடரும்.)






# 37. வால் போலின் சமாதான முறை நிர்வாகம்

(T. S. ராஜகோபாலன், B. A., L. T.)

1702-ம் வருஷத்திய தீர்மானச் சட்டப்படி இங்கிலந்து சிம்மாசனத்தை ஹானோவர் பெற்றதும், அவர் விக்கட்சியினரிடம் பூரண நம்பிக்கை வைத்து விட்டதும், அதனால் விக் கட்சியினர் எதிர்க்கக்ஷி டோரிகளைத் தலை கிளப்பாமல் செய்து, தங்கள் செல்வாக்கை ஸ்தாபித்துக் கொண்டதும், அதன் மூலமாக வால்போல் என்ற செல்வநிலை நிபுணன் பிரதம நிர்வாகியும் 'காக்கை ஏறிப் பனம் பழம் விழுந்ததுபோல," அரசன் மந்திரி சபை ஆலோசனைக் கூட்டத்திலிருந்து விலகியிருக்க விரும்பவும், பிரதம மந்திரியும் ஆனதும் முந்தின கட்டுரைகளில் விளக்கப்பட்டன. அந்தப்படி வால்போல் முன்னணிக்கு முகாந்திரமா யிருந்தது "தென் கடல் குமிழி" என்ற சம்பவம் எனவும் குறிப்பிடப்பட்டது. அந்தத் தென் கடல் குமிழியின் விஷயம் குறித்துவிட்ட பின் கட்டுரையின் தலையங்க விஷயம் எழுதுவோம்.

17-வது நூற்றாண்டில் ஆங்கிலேயரும் இதர ஐரோப்பியர்களும் வியாபாரக் குடியேற்றநாட்டு விஷயங்களில் அபிவிருத்தியடைந்த விவரம் நேயர்கள் அறிந்ததே. அது சம்பந்தமும், ஸ்பெயின் வார்ஸ் யுத்தம் யுட்ரெக்ட் சமாதானத்தின் மூலம் 1913-ல், டோரிக் கட்சியினரின் அவசர புத்தியினால் முடிந்ததாக விக் கட்சியினர் கூக்குரலிட்டதும் முந்திய விவரம் ஆகும். அந்த யுட்ரெக்ட் சமாதான ஷரத்துகளில் ஒன்றின் மூலம் தென் அமெரிக்காவைச் சேர்ந்த தென்கடல் பிரதேசங்களுக்கு வருஷத்தில் ஒரு கப்பல் அனுப்பி வியாபாரம் செய்யும் உரிமையை ஆங்கிலேயர் பெற்றனர். அந்த மாதிரியிலேயே ஏராளமான லாபம் வரக்கூடிய தந்திரங்களை ஆங்கிலேயர் கையாடிய விவரம் இங்கு குறிப்பிடுவது உசிதமல்ல. அவர்களுடைய பொதுப் போக்கின்படி நடந்தது என்பதோடு நிறுத்தி, அந்த ஏராளமான லாபத்தையடைய விரும்பிய நோக்கத்துடன், கூட்டுறவு முறையில் 100 பங்குகளைக் கொண்டு ஏராளமான மூலதனத்துடன் "தென்கடல் கம்பெனி" என்பதை ஸ்தாபித்து நல்ல லாபம் அடைந்தனர். அதனால் அந்தக் கம்பெனியின் பங்குகளின் விலைகள் சுமார் ஒன்றுக்கு பத்து என்ற முறையில் ஏறிவிட்டன. ஏனெனில் லாபத்தையடைய விரும்பிய ஜனங்கள் பங்குகளை வாங்கக் கடும் போட்டி யிட்டதில் கிராக்கியும் விலை யதிகமும் ஏற்பட்டன. இதைக் கண்ட வேறு பலர் இதைப்போன்ற கூட்டுறவு முறையில் புதிய கம்பெனிகளை பங்குகளின் மூலம் ஏற்படுத்தினர். அறியாத ஜனங்கள் அளவு கடந்த ஆசையினால் அந்தக் கம்பெனிகளிலும் பங்குகளை ஆவலுடன் வாங்கினர். கம்பெனியின் நோக்கத்தைக்கூட வெளியிடாமல் சில தூர்ச்சனர், பாமர ஜனங்களை ஏய்த்தனராம்!

கண்ட முறைகளில் காணப்பட்ட கம்பெனிகள் காலக்ரமத்தில் கஷ்ட தசையை யடைந்தன. ஏனெனில் நிர்வாகிகளின் துராசையும் நேர்மையற்ற போக்கும் என்பது சரித்திரங்களில் பரக்கக் காணலாம். இம்மாதிரியாகப் பல போலி கம்பெனிகள் படீர் படீரெனப் படுத்தழிந்ததைக் கண்ட பாமர ஜனங்கள் பயந்து, பீதியுடன், பக்காவாய் பராமரிக்கப் பட்டுவந்த ஆரம்பத் தென்கடல் கம்பெனியிடமும் பதட்டங் கொண்டு பங்குகளை விற்கத் தொடங்கினர். முன்பு இருந்த கிராகிக்கு நேர்விரோதமாக பங்குகளைக் கேட்பாரே யில்லாமல் பங்குகளின் மதிப்பு படுத்துப் பாழடைந்தன வென்பதைச் சொல்லத் தேவையில்லை. பெரும்பாலான பங்குதார்கள் விலைகள் உயர்ந்த சந்தர்ப்பத்தில் வாங்கினவர்கள், வயிறெரிந்து குறைந்த விலைக்கு விற்க நேர்ந்ததுடன் ஏககாலத்தில் பங்குத் தொகைகளைத் திருப்பிக் கொடுக்கும்படி பறந்தனர்! பங்குத் தொகைகளோ சாமான்களாக வெளிநாட்டில் இருந்தன. கூடிய வரையில் சமாளித்தனர் நிர்வாகிகள். கடைசியில் கையை விரித்தனர். இந்தப் பெரிய கஷ்டத்தைத்தான் சரித்திரங்கள் "தென்கடல் குமிழி" என்று பொருள்படும் "The south sea bubble" என்று குறிப்பிடும். இதனால் தேசமக்கள் பட்டபாடு கொஞ்சமல்ல! அடைந்த அல்லல்கள் அளவிடப் படாதவை! இந்தத் துரோக நிர்வாகப் புழுதி மாயங்களில் மந்திரிமார்களில் பலரும் பங்கிட்டுக்கொண்டு பாமர ஜனங்களை ஏமாற்றினராம்! ஆக ஜனங்களின் ஆத்திரம் அதிகரித்துவிட்டது. இந்த அமளியைத் தன் சாமர்த்தியத்தினால் சீர்படுத்துவதாகச் சொல்லித்தான் மேல் குறிப்பிட்ட வால்போல் நிர்வாகத்திற்கு 1721-ல் வந்தது!

வால்போல் விக் கட்சியைச் சேர்ந்தவர்! ஆரம்ப பிராயத்திலேயே ஆன் ராணி காலத்தில் மாரள்ப்ரோ பிரபுவின் நிர்வாகத்தில் அரசாங்க உத்தியோகம் பார்த்தவர்! பொருளாதார நிபுணர். நிதான புத்தியுள்ளவர். ஆனாலும் கூடியவரையில் தன்னலத்தை எட்டிய வரையில் உயர்த்திக் கொள்பவர். அந்த விஷயத்தில் கௌரவம் அகௌரவம், சத்தியம் அசத்தியம், ஒழுங்கு ஒழுங்கீனம் இவைகளைக் கணமும் கவனியாதவர். "சொக்கனுக்குச் சட்டியளவு" என்ற பாமரச் சொல்படி, யார் தாழ்ந்தாலும், யார் வாழ்ந்தாலும், எது வந்தாலும், எது போனாலும் பணம்தான் குறி. பதவிதான் குறி. அவைகளுக்காக எதுவும் செய்யத் தயார் என்ற இவ்வளவும் விரிவான இங்கிலந்து சரித்திரங்களில் தெளிவாய் எழுதப் பட்டிருக்கின்றன!

நிர்வாகத்திற்கு வந்த வால்போல் முதலாவதாக நாட்டின் நிர்வாகப் போக்கிலிருந்த பல அனாவசிய செலவுகளைக் குறைத்தார். அந்நிய நாடுகளுடன் அனாவசியமான யுத்தங்கள் நடத்தக் கூடாதென தீர்மானித்து அந்த வகையில் ஏற்படக் கூடிய அதிகச் செலவுகளை அகற்றினார். அதேசமயத்தில் அதிர்ஷ்டவசமாக பிரான்ஸ் தேசமந்திரியும் பாலியஅரசன் என்ற முறையில் இங்கிலந்து தேசத்துடன் சமாதானத்துடனிருக்க முயன்றதில், அதைப் பெரிதும் உபயோகப் படுத்திக்கொண்டு வால்போல் நிர்தாக்ஷிண்யமான சமாதான முறையைக் கையாடினார். "அவசியம் வந்தால் சண்டை செய்தாவது இங்கிலந்தின் கௌரவத்தை அயல் நாடு சம்பந்தங்களில் நிலை நிறுத்த வேண்டும்" என்பது விக் கட்சியினரின் பொதுப் போக்கு என்ற விவரம் ஒரு புறமிருக்க விக் கட்சி திலகம் வாலபோல் நடந்து கொண்டது வினோதமே யாகும் அன்றோ? தான் கைக்கொண்ட கொள்கைக்கு சாதகமாக, "Let sleeping dogs lie." என்

பாராம்! அதன் பொருள் "தூங்குகின்ற நாய்களைக் கிளப்பி விட்டால் அவைகள் 'வெள்' 'வெள்' என்று குரைத்துப் பிடுங்க வரும். ஆதலினால் அவைகளைக் கிளப்பாலாகாது" என்பதாகும். அதாவது பிறநாடுகளுடன் எவ்விதத்திலாவது சண்டை ஏற்பட்டால் எதிர்பாராத கஷ்டங்கள் கிளைத் தெழும். அப்படிக் கஷ்டங்களில் இங்கிலாந்து அகப்பட்டு அல்லல்பட தான் விரும்பவில்லை என்பதாம். அந்தநிலையை ஒட்டி, அந்தக்காலத்தில் நடந்துவந்த போலண்ட் தேச வார்ஸ் யுத்தத்தில் இவர் கலந்து கொள்ளாமல் இருந்த பெருமையை, "Several thousands of men died in the Polish Succession war! But not one of them was an English man!" (போலண்ட் வார்ஸ் யுத்தத்தில் மடிந்த அநேகாயிர ஜனங்களில் ஒருவராவது ஆங்கிலேயர் இல்லை என்பது எவ்வளவு பெருமை?) என்று பேசிக் களிப்பாராம்!

மறுபடியும் ஹாலந்து, இங்கிலாந்து, ஆஸ்ட்ரியா, ஸ்பெயின் இவைகளுக்குள் யுத்தம் நேரிடும்போல் இருந்த சமயத்தில் வால்போல் ஏதோ சமாதானப் பேச்சுகள் பேசி, யுத்தம் வந்தால் விடுவதில்லை என்றதுபோல் அரட்டி யுத்தமில்லாமல் சமாதானம் கொண்டு வந்ததை "I bought peace with honour without shedding a drop of blood" (ஒரு துளி ரத்தம் கூடச் சிந்தாமல் கௌரவத்துடன் கூடிய ஒரு சமாதானம் செய்து முடித்தேன் என்று வீறாப்புடன் தெரிவித்தாராம். ஆகத் திரும்பத் திரும்பச் சொல்லுமிடத்து பணச் செலவைத் தொலைக்க எண்ணி, யுத்தம் என்பதே தோன்றாதபடியும் தோன்றின காலத்திலும், கலந்து கொள்ளாமல் கைகழுவ விட்டும் வந்தார் என்பது சுருக்கம். இது சரித்திர ப்ரசித்தமானதும் ஆகும்! இந்த சில விபரங்களுடன், இனி சொல்லப்படும் உதாரணம் வால்போலின் அந்நிய நாட்டு சம்பந்தப் போக்கை தெளிவாகவும் தீர்மானமாகவும் காட்டும். அது தான் சரித்திரங்களில் வேடிக்கையாகக் குறிப்பிடப்படும் "ஜென்கின் காது யுத்தம்" (Jenkin's ear war) என்பதாகும்.

இக் கட்டுரையின் ஆரம்பத்தில் குறிப்பிடப்பட்ட தென் கடல் பிரதேச வியாபார உரிமையை ஆங்கிலேயரில் சிலர் உபயோகித்த விதமும் இதில் தெரியவரும். தென் அமெரிக்கா, மத்திய அமெரிக்கா தேசங்களில் வியாபாரம் செய்யும் ஏக தேச உரிமையை ஸ்பெயின்காரர்கள் இன்னும் தளர்த்தி விடவே யில்லை. அந்த நிலைமையில் ஆங்கிலேயர்களில் ஒருவனான ஜென்கின் என்பவன் தன் முறையில் வியாபாரம் நடத்தி வந்தான். அவனுக்கு சட்டப்படி உரிமை கிடையாத இடங்களில் சென்று திருட்டுத்தனமாகவும் வியாபாரம் செய்ய நேர்ந்தது. அப்பொழுது நியாயமான முறைகளில் அங்குள்ள ஸ்பானியர்களும் போர்ச்சுகீசியரும் தடுத்து வந்தனர். அவர்களையும் மீறி, மத்திய அமெரிக்கா, தென் அமெரிக்காவின் வடபாகம், வட அமெரிக்காவின் தென்பாகம் முதலிய பிரதேசங்களில் காரியங்கள் நடத்தி வந்ததுடன் இல்லாமல் சில துர்க்காரியங்களையும் செய்து வந்தானாம்! அது கண்ட ஸ்பானியர்கள் ஆத்திரங் கொண்டு இவனுடைய காதுகளை அறுத்து விட்டனர்!! "அந்தக் காதுகளை ஒரு சீசாவில் போட்டுப் பத்திரப்படுத்தி எடுத்துக் கொண்டு இங்கிலந்து சேர்ந்து பார்லிமெண்ட் சபை நடவடிக்கை மத்தியில் வைத்து அநியாயமாகத் தன்னை ஸ்பானியர்கள் அவமதித்து விட்டதாகவும் இங்கிலாந்தின் தேசிய கௌரவத்திற்கே மகத்தான அகௌரவம் வந்து விட்டதாகவும் பிரலாபித்துக் கூக்குரலிட்டானாம்!!" தேசிய உணர்ச்சி வீறிட்டுக்-

னெம்பும் ஆங்கிலேயரில் சிலருக்கு இரத்தம் கொதித்ததாம். உடனே இந்த ஸ்பெயின்காரர்களைச் சின்னபின்னமாக்கி யுத்தம் செய்து இங்கிலந்தின் கௌரவத்தை நாட்ட வேண்டும் என்று ஆத்திரத்துடன் தோன்றியதாம்.

அவ்வளவுதான். மழுங்கிச் சவங்கி, சமாதானத்தையே ஆணிவேராகக் கொண்ட வால்போலும் கூடினவரையில் மழுபபிவிடவே நினைத்துப் பலமாக முயன்றும், முடியாமல், முடிவில் அரைமனதுடன் 1788.ல் யுத்தம் ஆரம் பிக்க நேர்ந்துவிட்டதாம். அந்தச் சமயத்தில் இரகசியமாக பிரான்ஸ் அரசாங்க கமும் "குடும்ப ஒப்பந்தம்" என்ற பொருளுள்ள (Family Compact) என்ற சமாதானம் செய்துகொண்டு ஒருவருக்கொருவர் பரஸ்பரம் விட்டுக்கொடுக்கா மல் அவசியம் வந்தபோது இங்கிலந்தை எதிர்த்து ஒழித்துச்சாய்த்துவிட உத் தேசித்திருந்தனவென்பது சரித்திரங்களில் காணப்படுகிறது. இங்கு பிரஞ்சு லூயிXIVன் பேரன் பிலிப்தான் ஸ்பெயின் அரசன் என்பதை வாசகர் கள் மனதில் வைக்கவேண்டும்.

யுத்தமும் ஆரம்பித்தது. அரைகுறையான ஏற்பாடுகளே செய்யப்பட் டன. எதிர்பார்த்தபடி இங்கிலந்துக்கு வெற்றி ஏற்படவில்லை. ஏனெனில், "சிறுவர்கள் அனுபவமில்லாமல் விளையாட்டுப் போக்கில் யுத்தம் விரும்புகி றார்கள்! முடிவில் திகைத்து, விழித்து, கையைப் பிசையப் போகிறார்கள்!" என்று வால்போல் பஹிரங்கமாகச் சொல்லியே தொடங்கினாராம்! ஆகவே, அவருடைய சூழ்ச்சிகளிலும், அர்பச் செய்கைகளிலும், தன்மையற்ற கம்பீரப் பேச்சுகளிலும் எதிரிகளை மதியாமலும் அலக்ஷியமாகவும் நடத்தி வந்ததிலும் அதிருப்தி கொண்ட "பாலிய தேசாபிமானிகளின் கக்ஷி" (The young patriots) என்று விக்கக்ஷிக் குள்ளேயே ஏற்பட்டு வால்போலுக்கு எதிர்கக்ஷி வலுத்ததாம். இதற்குள் இவருக்கு வலது கைபோன்றிருந்த ஜார்ஜ் IIன் மனைவி கரோலின் ராணியும் இறந்துவிட்டாளாம்! அது முதல் ஜார்ஜ் IIம் வால்போலிடம் உள்ள வாஞ்சையை மறந்தாராம். இதற்குள் டோரிக் கக்ஷி யின் தலைவர் பாலிங் ப்ரோக் பிரபு என்பவர், ஆரம்பத்தில் 1715-ல் தேசப் பிரஷ்டம் செய்யப்பட்டு, பிறகு மன்னிக்கப் பட்டு திரும்பிவந்து எதிர் பிரசாரம் தன்னளவில் செய்திருந்தாராம்! ஆக எல்லாமாய்ச் சேர்ந்து, பல துளி பெருவெள்ளமாய் புரண்டு 1740-ம் வருஷத் தேர்தலில் வால்போலை வெற்றியுறாமல் வீழ்த்தினராம்! வால்போலும் ராஜீனமாச் செய்து அரசியலை விட்டு விலகி சற்று ஓய்வெடுத்து, பிரபு வாக்கப்பட்டு, 1742-ல் இறந்தா ராம்!

சிக்கனத்தை யுத்தேசித்து ஆரம்பித்த நிர்வாகம் ஓரளவில் சரிப்பட்டா லும், பிறகு அவர் கொண்டுவந்த 'சுங்கவரித் திட்டம்' (The excise scheme) "அரைப்பென்னி நாணய அச்சுரிமைத் திட்டம் (Woods Half penny Act) முதலியன நிறைவேறாதபடி ஆகிவிட்டனவாம். ஆகிலும், பல ஆபாசங் களுக் கிடையே, ஒருவாறு கொந்தளிப்பை அடக்கிய தற்கால நன்மையும், காபினெட் சபைமுறைக்கு தற்கால உருவைத் தேடிய சாசுவத நன்மையும் இங்கிலந்து அரசியலுக்கு ஏற்பட்டதை யாவரும் ஒத்துக் கொள்ளவேண்டி யவைகளே யாகும். அரசியல் ஒழுக்க முறைகள் மட்டும் சீர் கெட்டு, பொறா மையும், கட்சிப்பிளவும், அனாவசிய ஆபாசங்களும் ஏற்பட்டு விட்டதும் வருந் தத் தக்கதே. அடுத்து ஏற்பட்டிருந்த ஆஸ்ட்ரிய வார்சு யுத்தத்தை நிர்வகிக் கக் கூடாதவர் என்பதும் அவர் அடைந்த தோல்விக்கு ஒரு காரணமாகும்.



# பாரதநாட்டின் பண்புடைப் பார்த்திபன்

(சமூகத் தொண்டன்)

தக்காணத்திலுள்ள சமஸ்தானங்களில் அவுந்தும் ஒன்று. அதன் ஆளுகையில் உள்ள நிலப்பரப்பு ஒரே எல்லைக்குள் அடங்கியிராமல் சத்தாரா, பீஜப்பூர், தார்வார் ஆகிய ஜில்லாக்களில் அங்கங்கே பரந்திருக்கிறது. இச்சமஸ்தானத்தின் அதிபராய் இப்போது ஆட்சி புரிபவர் பாலா சாஹெப் பண்ட் பிரதிநிதி என்னும் மன்னர். இம் மன்னர் அரசுரிமை ஏற்றுக் கொண்ட சென்ற கால் நூற்றாண்டாக அவுந்து சமஸ்தானம் மிக முன்னேற்ற மடைந்துள்ளது.

## அவுந்து சமஸ்தானத்தின் தோற்றம்

மன்னர் மன்னனாய் மணிமுடிதாங்கி, மாவீரனாய் வெற்றிக்கொடியோங்க விடுதலையளித்த மகாராஷ்டிர மன்னன் சிவாஜி என்பது உலகம் அறிந்ததொன்று. அவருடைய தனிப் பேரரசில் இருந்து தான் அவுந்து சமஸ்தானத்தின் மூலம் ஆரம்பிக்கிறது. பகைவர் குருதி யென்னும் பாலையே தமது படைக்கல மென்னும் வீரக்குழந்தைகளுக்கு ஊட்டி வளர்த்த சிவாஜி மன்னரின் காரியாலோசனைச் சபையில் "அஷ்டப் பிரதிநிதிகள்" என்னும் எண்மர் உறுப்பினராய் அமர்ந்து அரசருக்கு ஆவனவற்றை ஆலோசனை கூறிவந்தனர். அவர்களில் முதல் பிரதிநிதி, சமயத்தைக் காத்துநின்ற தனியரசராம் சிவாஜிக்கு மிகவும் நம்பிக்கையாய்ப் பணியாற்றுபவராய் விளங்கினர். அக்காலந் தொட்டுத்தான் "அஷ்டப் பிரதிநிதிகளின்" காரியாலோசனைச் சபையில் அவுந்து மன்னர்கள் பெருமதிப்புப் பெற்று வரலாயினர்.

## ஆட்சிபுரியும் அரசர் மாட்சி

பதினெட்டாம் நூற்றாண்டின் இடைக்காலத்தோடு சத்தாராவில் ஒளிர்ந்தோங்கிய மகாராஷ்டிர அரியணை மறையத் தொடங்கியதால் அவுந்து சமஸ்தான அரசியலும், குடிமயக்கில் கிடந்துழலும் மக்கள் போன்று சுறுசுறுப்பும், உற்சாகமும் இழந்து வீணே வாழ்ந்து வந்தது; ஆனால் இறந்துபடவில்லை. இந்நிலையிலேயே பலதலைமுறைகள் கழிந்துகொண்டு போயினவானாலும்; பகலிரவு மாறி மாறி வருவது போன்றும், வாழ்க்கையில் உயர்வுதாழ்வு ஒருவர் மாட்டின்றிப் பலர் பாலும் அணுகித் திருப்தி செய்வது போன்றும், அவுந்து சமஸ்தானத்திற்கு நல்வாழ்வு தோன்றும் காலம் நெருங்கிற்று. ஆகவே தற்

போத மன்னராயுள்ள பாலா சாஹேப் பண்ட் பிரதிநிதி அவர்கள் அவுந்து அரியணையில் அமர்ந்து ஆட்சிபுரியுமாறு வேண்டிக் கொள்ளப் பட்டார். இம் மன்னர் சமஸ்தான அரியணையில் அமர்ந்து அரசியற்றும் உரிமை யிழந்தவராய் இருந்தும் வேண்டுதலுக்கு அன்பு கூர்ந்து இணங்கினர். இவர் 1909-ம் ஆண்டு அரசு இயற்றும் பொறுப்பு ஏற்றுக் கொண்டார். இவர் பல்கலைக் கழகத்தில் பட்டம் பெற்றவர். இது மாத்திரமன்று, சிற்பக் கலை வல்லுநர். ஓவியம் தீட்டலில் ஒப்பற்ற கையினர். உடற்பயிற்சி உடம்பை வளர்க்கும் தாய் என்னும் கொள்கையைத் தாமே செயலில் காட்டி வளர்த்து வருபவர். இலக்கிய வளர்ச்சிக்குக் குன்றாது உழைப்பவர். வரப்போகும் மகாராஷ்டிர இலக்கிய மகாநாட்டிற்கு இம் மன்னரைத் தலைவராகத் தேர்ந்துள்ளதிலிருந்தே மகாராஷ்டிரர் மக்கள் அவர் பால் கொண்டுள்ள அளப்பரும் மதிப்புத் தெரியக்கிடக்கின்றது. இம் மன்னர் ஆடம்பரமற்ற எளிய வாழ்க்கையை விரும்புவர். தமது சிற்றூர் மக்களிடையில் அவர்களுடைய அரிய நண்பர் போன்றும், சிறந்த சமயாசிரியர் போன்றும், ஓர் வழிகாட்டி போன்றும் நடந்து கொள்வதில் மிக மிக இன்புறுகின்றார். இவ்வளவு பெருங்குணங்களுக்கும் "தன்னுயிர்போல் மன்னுயிர்கருது"ம் தகைமையன்றோ மூலம் ?

## இரும்பு—கண்ணாடித் தொழிற்சாலைகள்

அவுந்து மன்னர் தமது சமஸ்தானத்தில் இரு பெரும் தொழிற்சாலைகளை வளர்த்து வருகிறார். அவ் வகைத் தொழிற்சாலைகள் இந்தியாவில் வேறெங்குமே இல்லை யென்று துணிவுடன் சொல்லக் கூடும். அவைகளில் ஒன்று கெர்லோஸ்கர் இரும்புத் தொழிற்சாலையும், மற்றொன்று ஒகல் கண்ணாடித் தொழிற்சாலையமாம். கெர்லோஸ்கர் இரும்புத் தொழிற்சாலையில் செய்யப்படும் விவசாயத்திற்குரிய இரும்புக் கலப்பைகள், நீர் இறைக்கும் ஆலைகள், கரும்பு ஆலைகள், மணிலாக் கொட்டை உடைக்கும் ஆலைகள் ஆகியவை முக்கியமானவை. மேற்கூறிய கண்ணாடித் தொழிற்சாலையில் பற்பல விதமான கண்ணாடிப் பாத்திரங்களும் கண்ணாடி புகைப்போக்கி (சிம்னிகள்)களும் செய்யப்படுகின்றன. இவைகளுக்கு நமது நாடு முழுதும் நல்ல பேரும், புகழும் உண்டு. இந்தியராகிய நாம் நமது நாட்டில் செய்யப்படும் சாமான்களையே வாங்கி உபயோகித்து, நாட்டுத் தொழிலை வளர்த்து, நமது நாட்டுச் செல்வத்தையும், நமது உடன் பிறந்த ஏழைத் தொழிலாளர்களையும் ஆதரிக்கும் கடமையுடையோம் என்னும் கொள்கையில் அவுந்து மன்னர் ஆழ்ந்த பற்றுடையவர்.

## சிற்பியும் ஓவியக்காரரும்

பூனாநகரம் செல்லுவோர் அங்கு வைக்கப்பட்டுள்ள வேல்ஸ் இளவரசரின் உருவச்சிலையை காணாது திரும்பார். அதைப் பார்ப்போருக்கு அது உயர்திருவாளர் அவுந்து மன்னர் பாலா சாஹேப் அவர்களால் அளிக்கப்பட்டது என்பது புலனாகும். அச் சிலை அவுந்து மன்னரின் கட்டளைப் படியும், அவர் காட்டிய படியுமே செய்யப்பட்டதாகும். ஆனால் அதைச் செய்தவர் சித்திரக்கலை யென்றால் எத்தனை கண்கள் அதற்கு என்று வினவக் கூடிய எது மறியாப் பேர்வழி யென்பதை அறிந்து கொள்ள வேண்டும். ஆனாலும் அவுந்து

சமஸ்தானத்தைச் சேர்ந்தவர். மன்னர் மாத்திரம் முன்னின்று காட்டியிரா விடின் அவ்வுருவச்சிலை இன்று பூனா நகரத்தை அழகு செய்து காட்டச் சந்தர்ப்பமில்லாமல் இருந்திருக்கும். இன்று நீங்கள் அவுந்து சென்று அரண்மனையைக் காண்பீரேல் ஓ ஹோ! என்ன ரமணீயமான காட்சி உங்கள் கட்புலனாகும்! ஓவியக்கலையின் உயர் மணிக் கூடமோ! சிற்பக்கலை திகழ்மணி மன்றமோ! என்று ஐயுறுவீர்கள். வரிசை வரிசையாய்ப் பொம்மைகளும், அழகுச்சிலைகளும், ஓவியத்தின் உயர்வும் அமைக்கப்பட்டிருக்கும் காட்சி கண் கவர் வனப்புடையன. அன்று நிகழ்ந்த பாரத இராமாயணக் கதைகள் இன்றே நிகழ்வது போன்று செய்த பெருமை மன்னருடையதே. இரு பெரு கதைகளையும் சிறிதும் விடாது தமது கையால் ஓவியமாகத் தீட்டி, அரண்மனையை அழகு செய்திருக்கின்றார். என்னே அவருக்குக் கலையிலுள்ள ஆர்வம்!

## பழைய உடற்பயிற்சிமுறையில் பற்று

நமது மூதாதையர்களால் உடல் வளம் செய்யவேண்டி நிறுவப்பட்டுள்ள கொள்கைகளாகிய சூரிய நமஸ்காரம், பிராணயாமம் போன்றவற்றில் மன்னர் மிகமிக ஆழ்ந்த நம்பிக்கையும், பற்றுமுடையவர். அவர் செல்லுமிடங்கள் தோறும் உடல் வளத்தின் அவசியத்தையும், அதைப் பேணு முறையின் ஓர் பிரிவாயுள்ள சூரிய நமஸ்காரம், பிராணயாமம் ஆகியவற்றின் முக்கியத்தையும் எடுத்துக்கூறுவதும், தாமே பயிற்சி முறைகளைச் செய்து காட்டி மற்றோரையும் பயிலும்படி வற்புறுத்துவதும் அவரது முக்கிய காரியங்களில் ஒரு பகுதி. இதற்குச் சான்றாக யான் கேள்விப்பட்டதை வாசகர்கட்கு அறிவிப்பது உவப்பை அளிப்பதாகும். சில்லாண்டுகட்கு முன்னர் அவுந்து மன்னரின் அருமைப் புதல்வரும், இளவரசருமான ராஜா சாஹெப் நோய்வாய்ப்பட்டு இறந்து போனார். அதுகாலை குடிகள் அடைந்த துக்கத்தை அரசருக்கு அறிவிக்கவேண்டியும், அரசரின் துக்கத்தை மாற்றவேண்டி ஆறுதல் கூறிக் கொள்ளவும் நகர மண்டபத்தில் ஓர் கூட்டம் கூட்டினர். மன்னரும் தமக்கென அமைத்திருந்த இருக்கையில் அமர்ந்திருந்தார். குடிகளின் சார்பில் ஒருவர் எழுந்து 'அன்புடையீர்! அரண்மனை மணியாய்த் திகழ்ந்த இளவரசர் பிரிவு நமது மன்னர் பெருமானுக்கு ஆற்றொணாத்துக்கத்தை யளித்திருப்பது போன்று சமஸ்தானக் குடிகளாகிய நமக்கும் பெருந்துக்கத்தையுண்டாக்கியது. அன்றியும் சமஸ்தான முன்னேற்றத்தையும் அது தடுத்து, மகத்தான நஷ்டத்தை விளைத்துவிட்டது" என்று கூறி அமர்ந்தார். அப்போது மன்னர் எழுந்து கூட்டத்தினர்க்கு வந்தனங் கூறுகையில் "எனது அன்புடையீர்! நமது சமஸ்தான மக்களாகிய நீங்களனைவரும் ராஜாசாஹெப்பின் பிரிவைக் குறித்து என்னுடன் கலந்து துக்கிப்பதற்காக யான் நன்றியறிதலுள்ளவனாயிருத்தல்வேண்டும். அவனது மரணம் இயற்கையானதன்று. உடல் நலம் பேணுமுகத்தான் யான் கொண்டுள்ள கொள்கையில் அவன் ஆழ்ந்த பற்றுக் கொண்டானில்லை. அவனது மரணத்திற்குக் காரணமாயிருந்தவற்றுள் இதுவும் ஒன்று என்பதை நீங்கள் அறிந்துகொள்ளுதல் இன்றியமையாத பலனையளிக்கும். ஆகவே நீங்கள் இனி இளவரசர் பிரிவிற்குக் கவலாது உடற்பயிற்சியில் எனது கொள்கையைப் பின்பற்றுவீரேல், ஒரு ராஜா சாஹெப் அன்று, இன்னும் பல ராஜா சாஹெப்புகளை நமது அவுந்து சமஸ்தானம் உண்டுபண்

ணக்கூடும்'' என்று வீரக்குரலில் நம்பிக்கை யொளிரக் கூறி அமர்ந்தார் வாசகர்காள்! நோக்குமின் மனத் தளர்வறியா மன்னர் உபதேசத்தை! அவரது கொள்கை உடற்பயிற்சியில் எவ்வளவு இடம் பெற்றிருக்கிறதென்பதைப் பசுமரத்திற் பாய்ந்த ஆணிபோல் நாம் உளம் பதித்தல் வேண்டும்.

## அரசியல் திருத்தம்

அவுந்து அரசருக்கு மற்றுமொரு பெருமையும் உண்டு. அவர் தமது அரசியலிலும், நாகரிக சீர்திருத்தத்திலும் பலகாலும் செய்த ஆராய்ச்சியின் பலனாய் தற்காலம் இந்தியாவில் திகழும் ஆங்கில அரசின் கீழ் பிரிட்டிஷ் இந்திய மக்கள் அடைந்து வரும் உரிமைபோன்று, சுதேச மன்னர்கள் அரசிலும் சமஸ்தானக் குடிகள் எல்லா வுரிமைகளும் அடையத் தகுதியுடையவர் கள் என்பதும், அங்ஙனம் உரிமை பெறுவதே தகுதியும், நியாயமும் ஆகும் என்பதும், குடிகள் தங்கள் விவகாரங்களைத் தாங்களே செய்துகொள்ள விரும்புவார்களாயின் அது மன்னர்பாலுள்ள அரச பக்தியைக் குறைத்துவிடுவதாகாது என்பதும் அவர் கண்ட சீரிய கொள்கைகளாகும். ஆகவே மாண்ட் போர்டு சீர்திருத்தம் இந்தியாவிற்கு வழங்கிய பின்னர் உயர் திருவாளர் மன்னர் பாலாசாஹேப் அவர்கள், தமது சமஸ்தானத்தில் ஒரு பிரதிநிதிசபையை அமைத்து, அச்சபை அரசாங்கத்துடன் ஒத்துழைப்பதைக் காணவும் தமது கருத்து மிகமிகச் சரியானதென்னும் முடிவுக்கு வந்தார். ஆகவேதான் அச் சபையின் தேர்ந்தெடுத்த பிரதிநிதியொருவரைப் பிறகு தமது நிர்வாக (Executive Council) சபையில் உறுப்பினராகச் சேர்த்துக்கொண்டார். இவ்விதமாகக் குடியரசுக்கும், தனியரசுக்கு மிடையில் சிறந்த ஒருமைப்பாடும் கனிந்த பலனும் கண்டதற்கு ஒரு அரசன் பெருமைப்பட்டுக்கொள்வல் முழுதும் நியாயமாகும்.

## தீண்டாமை ஒழித்தல்

மேலே அரசியலில் திருத்தம் செய்ததுபோன்றே நாகரிக சீர்திருத்தத்திலும் அவுந்து அரசர் முனைந்து நிற்கிறார். இந்து சமயம் என்னும் வெண்மதியிலுள்ள தீண்டாமை என்னும் களங்கத்தை மாற்றி இந்த ஒப்புயர்வில்லாச் சமயத்தை உலகெலாம் ஒளிரச் செய்தல்வேண்டும் என்பது அவரது புனிதக் கனவு. கனவன்று நினைவே! நினைவிலும் அவர் தீண்டாமை தொலைய ஓயாது உழைக்கின்றார். ஜாதி இந்துக்களென்றும், ஹரிஜனங்களென்றும் பேதங்காணும் பாதகச் செயல் அவுந்து அரசியலில் மருந்திற்கும் கிடையாது. அரண்மனையினுள்ளும் ஹரிஜனங்கள் அச்சமின்றித் தாராளமாய்ச் செல்ல பூரண அனுமதியுண்டு. தைப்பொங்கல் நாள்தோறும் அவுந்து அரசியார் தமது கையாலேயே ஹரிஜன மங்கையர்க்கு அரண்மனை குங்குமம் பிரசாதம் வழங்கி சமத்துவம் காட்டி வருகின்றார். இப் புனித ஒழுக்கமன்றோ காந்தியடிகளைப் புகழுரை கூறுமாறு தூண்டிவிட்டது. அடிகள் தமது "ஹரிஜன்" பத்திரிகையில் "அவுந்து சமஸ்தானம் தாராளப் பெருமனமுடைய மன்னரைப் பெற்றுளது. அவுந்து சமஸ்தானத்தினின்றும் தீண்டாமையை வெருட்டி யடிக்க அரசியாரும் மன்னரும் செய்து வரும் தூய முயற்சிக்காக எனது மகிழ்ச்சிகரமான பாராட்டைப் பெற அவர்கள் உரிமையுடையவர்கள்"

## நிலவரிக்குப் பதில் கதர்நூல் தண்டல்

இந்தியாவின் முதுகெலும்பு போன்றுள்ள விவசாயிகளையும் அவுந்து மன்னர் ஒருபோதும் கவனிக்கத் தவறினாரல்லர். அவர்களுடைய நல்வாழ்வில் இடைவிடாக் கண்ணோட்டமாய் இருந்து வருகிறார். கீழே காணும் சுருக்கவுரை சென்றவாண்டு அவுந்தில் நிகழ்ந்த அவுந்து மன்னர் வெள்ளிவிழாவில் அவர் செய்த சொற்பொழிவினின்றும் திரட்டியது. அவரது வாயுரை நாட்டு வளர்ச்சியை நாடி நிற்கும் ஒவ்வொரு மகனின் உள்ளத்திலும் மின்சாரம்போல் தாக்கவல்ல தகைமைவாய்ந்ததாகும். அது வருமாறு:—"நிலவரிக்குப் பதில் நூல்தண்டும் முறைகொண்டு வந்திருப்பதின் நோக்கம் விவசாயிகள், குறைந்தபட்சம் ஒருவர்க்கொருவர் உதவிக்கொள்வதற்காகவும், முதலாவது விவசாயத்தை வளம்பெறச் செய்தற்கும், இரண்டாவது விவசாயிகள் இராட்டையில் நூல் நூற்றுத் தங்கள் வருவாயைப் பெருக்கிக் கொள்ளற்குமாகவே நான் எனது அரசாங்கத்திற்குச் சேரவேண்டிய வரியை நூலாகப் பெற்றுக்கொள்வதாய்ச் சொன்னேன். இது உங்களுக்கோர் உதவி வார்த்தையாகும். விவசாயிகளாகிய உங்களை கடன் தொல்லையினின்று மீட்க வேண்டி மற்றொரு திட்டமும் வகுக்கப்பட்டுள்ளது. அது துரிதமாய் அமுலுக்குக் கொண்டுவரப்படும்"—அன்புடைய வாசகர்களே! இங்ஙனமாக ஓர் மன்னர் நமது இந்திய நாட்டின் கண் இருந்து அரசியற்றுதல் நாட்டுக்கே ஓர் பெருமை அன்றோ!

## எளிய வாழ்வில் உயர்ந்த எண்ணங்கள்

அவுந்து மன்னர் இப்போது தமது தளர்பருவத்தை யெய்திவிட்டார். ஆனால் அவர் உள்ளத்தின் உரமும், உற்சாகமும் என்றும் இளமை ஒழுகக் காணப்படுகின்றன. அவர் வாழ்க்கை ஆடம்பரமற்றது. உள்ளம் நிராசையுற்றது. எளிய வாழ்க்கையில் உயர்ந்த எண்ணங்கள் மிளிர அவர் அரியணையில் வாழ்ந்து வருகிறார். அவர் தமது செல்வர்களையும், பேரன் பேத்திமார்களையும் பழையகாலத்து முறையிலேயே வளர்த்து வந்திருக்கிறார். அவர்களில் ஏறக்குறைய எல்லோருமே மன்னரைப்போன்று ஓவியக் கலையில் உயர்ந்த பயிர்சி பெற்றுள்ளார்கள் என்றாலும், பேத்தியார் திருவளர் செல்வி சுக்கா சாஹிபா அவர்கள் எதிர்கால ஓவியக் கலையில் சிறந்து விளங்குவாரென்று நம்பப்படுகிறது.

அன்னைநாட்டு மன்னரெலாம் அவுந்துமன்னர் தமைச்சார்ந்து
பின்னையென்றும் ஒழுகுவரேல் பிறிதோர்நாளும் மிடியுண்டோ?
அன்னை வாழ்வாள் அவள் மக்கள் அனைத்தும் வாழும் அதன்பின்னர்
தன்னைக் கெடுக்கும் தாழ்குணர்க்கும் தளராதீந்து தாங்கிநிற்பாள்.

---

# தமிழ்மொழியும் பிறமொழியும்

(வீரசைவர்) கே. வி. சிவசுப்ரமணியன், பி. ஏ.

மலர்தலை யுலகிற் குலவுபலவள நலமெலாமிலகும் தலமென நிலவிய பொலிவுடைப் புனித பூமியாகிய பரத கண்டத்தில் வழங்கும் மொழிகளுள் ஆதிகாலந் தொட்டுள்ளன ஆரியமும் தமிழுமாம். அவற்றுள் செவிக்கினிமை பயத்தலான் மதுரம் என்னும் பொருட் பேறுடைத்தாகித் தமிழென வழங்கும் தென் மொழியானது, பஃறுளியாற்றுடன் பன்மலை யடுக்கத்துக் குமரிக்கோடும் கொடுங்கடல் கொள்ளு முன்னரே வடவேங்கட முதல் தென் குமரி வரை வழங்கப்பெற்றது எனப் பனம்பாரனார் உரையானும் இளம்பூரணருரையானும் அறியக்கிடக்கின்றது. அக்காலத்தே தமிழ் மொழி சிறந்து விளங்கிய தென்றற்கு, உலக ஆன்ம இயற்கைகளை இலக்கண முறையில் வகுத்துரைக்கும் தொல்காப்பிய மொன்றே சாலச் சிறந்த சான்றும். தொல்காப்பியனாரை யொத்த மாபெரும் புலவரையாயினும் தொல்காப்பியம் போன்ற பிறிதொரு நூலையாயினும் இற்றைக்கு 4000 ஆண்டுகட்கு முன் நாக ரிகம் எய்திய எத்தேயத்திலாயினும் காண்டல் மிக்க அருமையாம். கற்றார்பால் மட்டும் வழங்காது சிறுமகாரும் இளமடவாரும் உள்ளிட்ட யாவரானும் பேசப் படும் மொழியே சீரிய மொழியெனக் கோடல் நேரிது. அங்ஙனமே இத் தமிழ் நாட்டில் பல்லாயிரமாண்டுகளாய்த் தன் சீர்த்தி குன்றாது, கல்லாதாரா லும், கற்றாராலும் பேசப்பட்டு வரும் பெற்றிவாய்ந்தது நம் தமிழ்மொழி. செந்தமிழ் மொழி தன்னிடத்துப் போதிய சொற்களையும் இலக்கணங்களை யும் பெற்றிருக்கும் பெற்றியால் பண்டை நாட்டொடங்கி இற்றை நாள்வரை ஒரே தன்மைத்தாய் உயர்தனிச் செம்மொழியாய் இலங்குகின்றது. கன்னட மும் களி தெலுங்கும் கவின் மலையாளமும் துளுவும் தம்முன்னையின் உத ரத்தே உதித்தெழுந்து ஒன்று பல ஆயினும் ஆரியம்போல் உலக வழக்கில் குறைந்து சிதையவில்லை. அங்ஙனம் "சிதையாத் தமிழின் சீரிளமைத் திறம் வியந்து செயல் மறந்து வாழ்த்தாதார்" யார்?

இனி, தமிழ் மொழி வளர்ச்சியையும் அதில் பிறமொழிக் கலப்பினையும் குறித்துச் சிறிது ஆராய்வாம். இம்மொழி அகத்தியரால் வளர்க்கப்பட்ட தென்டர் அறிவுடையோர். அகத்தியருக்கு முன் ஒலி வடிவு மாத்திரமாய் நிகழ்ந்த காலம் பூமகள் கருவுற்று தமிழ்க் குழவியைப் பெற்றெடுத்த காலமாம். பின் வந்த அகத்தியர் காலம் சிறிதேயாயினும் அச்சிறுமி மழலை பயின்று சிற் றில் கோலி விளையாடிய பருவமாகலின் பெற்றார்க்குப் பேருவகைதந்த கால மாயிற்று. பின் இலக்கணகாலமாகிய தொல்காப்பியர் காலம், சிற்றில் கோலிபாடிய அம்மகவு பூப்பெய்திய காலமாகலின் இதவுந் தமிழ ணங்கிற்கோர் சிறந்த பருவமாம். அப்பாற் சங்க காலத்தில் அம்மகவு தருணி நிலைபெற்று விளங்கினள். அப்போது அவளது சீருஞ் சிறப்பும் இத்துணைய தென அளவிடற்பாற்றன்று. அக்காலத்தில்தான் அவள் ஆரியம் (சமஸ்கிரு தம்) எனும் நாயகனை மணந்தது. மணந்துமென்! மாமியார் வீட்டு மரு கள்போல, இன்றியமையாத வேட்கைக்குரிய போதன்றி மற்றப்படி ஒருசார்

ஒதுங்கி இருந்தமையால் தமிழ் தன் சிறப்பிற் சிறிதும் குன்றாதாயிற்று. பின்னரெய்திய புத்தர் காலத்தும் அவள் அந்நிலையிலேயே நின்றனள். அப் பாற் சமண காலந் தொடங்கியது. சங்ககாலத்தின் பிற்பகுதியில் சமணர் ஆதிக்கம் பெற்றமை, தாயிழந்த பெண்ணுக்கோர் நற்குணம் நிறைந்த சிற் றன்னை வாய்த்ததுபோலும். இக்காலத்தில் பல வடசொற்கள் தமிழில் வந்து விரவினவாயினும், வண்டு கைக்கொண்ட ஒருமிபோலும், வேரின் வாய்ப்பட்ட எருப்போலும் சமஸ்கிருத நிறமும் மணமுமின்றி 'பகுதி' 'விகுதி' யனைய சுத்தத் தமிழுருவமாகவே திரிந்துவந்தன. இதனை யடுத்துவந்த இதிகாச காலத்தில் பெருகிய வடமொழி வெள்ளத்தினைக் கண்டு பொறுக்கலாற்றாது மூழ்கித் தயங்கினள் நம்மன்னை. அம்மட்டோ! போகர் முதலிய ஆயுணூலாரும், ஒரு சில கணித வல்லுநரும் "செந்தமி ழணங்கின் திருமேனியெலாம் வெந்தழல் கொழுந்தி வெதுப்பிய பாவெனக் கொடுந்தமிழ் மலிந்து கொப்புளித் தெழுந்து" புண்படச் செய்தது மிக் காலமே. எனினும் புகழேந்தி, கம்பர் 'சேக்கிழார்' கச்சியப்பரனைய தமிழ்வல் லார் தலைப்பட்டாராகலின், மொழி வேலையுள் மூழ்கியிருந்த தமிழன்னை இடையிடையே தலை தூக்கி செட்டுயிர்ப்பெறிவாளாயினள். மற்றும் ஆரி யம் வலலார்க்கு ஆதரவு மிகவே தமிழ்த்தாயின் கொப்புளித்த திருமேனியிற் கொடு முள்ளும் எறியதெனத் திசைச் சொற்கள்வந்து மரீஇபின. அவற்றோடு அட்டமத்துச் சனியும் அடைந்ததுபோல், துருக்க சேனைவந்து விழுந்து தேசத்தைச் சூறைபாடி, ஆங்காங் கிறவாதெஞ்சிய புத்தகங்களையும் அழித் தகன்றன. அப்பால் நிகழுங் காலமாய். இக்கால வெல்லையில் வடமொழி வெள்ளத்திடைத் திளைத்த தமிழ் நங்கை ஒரு சிலரால் ஆதரிக்கப்பட்டுக் கரையேற உன்னுகின்றனள். எனினும் அவர்க்குறு துணையின்மையால் அவ ரும் வருந்துகின்றனர். இங்ஙனம் நம் தமிழன்னையின் பிறப்பும், வளர்ச்சி யும், பிணியும் சின்னேரம் உய்த்துணர்வார்க்கு வெள்ளிடை விலங்கலெனத் தெள்ளிதிற் புலனும். இற்றைநாளரசியலார் தமிழ் வளர்ச்சிக்கு ஒரு சிறு தடை செய்கின்றனர். செய்வ தெவ்வாற்றாலோவெனின், மெட்ரிகுலே ஷன், இன்டர்மீடியேட், பீ. ஏ. முதலிய வகுப்புகளிற் பயில்வார்க்கு ஒரு நூலுனொரு அகப்பையும், மற்றொரு நூலில் பின்னொரு அகப்பையும், அள்ளி வைத்து அவர்களை இலக்கியத்தின் முழுச் சுவையினை அறியச் செய்யாது படிப்பிக்கு மாற்றாலென்க. நிற்க,

பண்டங்கள் விற்றற்கும், குடிபுகுதற்கும் ஒரு நாட்டார் தம் நாடு நீத்துப் பிறிதொரு நாட்டிற்குப் புகுந்து, அந்நாட்டினரை யொன்றிப் பிழைக்குங்கால் அவரது மொழி அந்நாட்டு மக்கள்பாற் கலக்கும். வாணிகத்தின் பொருட்டு குடிபேறி நம் மொழியில் தம் மொழியைக் கலந்ததற்கு ஆங்கிலேயரும் போர்ச் சுக்கீசியரும் பிரஞ்சுக்காரரும் சிறந்த சான்றாயமைவர். மகம்மதியரும் ஆரி யரும் குடிபுகுந்து நம்மொழியிற் றம்மொழியைக் கலந்தவராவர். இனி, நாம் கட்டுரைகள், நூல்கள் முதலியன எழுதும்போது பிறமொழிச் சொற்கள் தமிழில் விரவாவாறே எழுதுதல் பெரும்பாலும் கூடும். நமது கருத்துக் களை வெளியிடற்குப் போதிய சொற்களைத் தமிழிற் பெறேமே யெனின், அவற்றிற்குப் புணைச் சொற்களைச் சிந்தித்து அமைத்துக்கொள்ளவேண்டும். பிறமொழிக் கலப்பால் தமிழன்னைக்குறும் சழக்கென்னையோ வெனின், அவள் நாளடைவில் பிணி வாய்ப்பட்டு உறுதி குன்றி இயங்க இயலாதவளாய்

போகுழி போகவியலாது இருந்தழி இருந்து துஞ்சுவன் என்னும் பெற்றியா லென்க. நம்தமிழோ, மற்றைய சில மொழிபோலன்றி பண்டை நாட் டொடங்கி பிறமொழிச் சொற்களின் உதவியை ஒரு சிறிதும் நாடாது தனித்து நின்று பாங்குபெற ஒங்கி நடைபெறுவது தமிழ்மொழியின் மேலீட்டினைத் தெரிந்து கொள்ளப் பேரவாவுறும் நண்பர்கள், மொழி நூலாராய்ச்சியாசிரியர் கால்டுவெல் துரைமகனூர் ஆங்கிலத்தில் எழு திப்போந்த "திராவிட மொழிகளின் ஒப்புமை இலக்கணம்" (Comparative grammar of Dravidian Languages) என்னும் நூலில் பார்க்கக் கண்டுகொள்க. தமிழறிஞரிற் சிலர் தமிழ்மொழி வளர்ச்சியடைய வேண் டின் அளவற்ற ஆரியச் சொற்களை அமைத்து வழங்க வேண்டுமென்று கூறுவாருமுளர். நமதருமைச் செந்தமிழில் ஆரியம்போல பலபொருள் குறித்த ஒருசொல்லும், ஒருபொருள் குறித்த பல சொல்லும் மிகுதியாய்க் கெழுமி யுள்ளனவென்பதை நாம், காப்பியம், பிங்கலந்தை, திவாகரம் முத லிய நூல்களினின்று தெற்றெனவறிந்தும், பிறமொழிச் சொற்களைத் தேடிக் கொணர்ந்து தமிழில் புகுத்தி வழங்குதல் "காய்த்த பலாவின் கனியுண்ண மாட்டாமல் ஈச்சம்பழத்திற் கிடருற்ற வாறே!" அஃதன்றியும், தமிழ்ச் சொற் களிருக்க அவற்றை விடுத்துப் பிறமொழிச்சொற்களை எடுத்து வழங்கிவரு வோமாயின் தமிழ்ச் சொற்கள் நாடைவில் வழக்கிலிருந்தே ஒழியுமன்றோ! இங்ஙனம் "மேசை" முதலிய போர்த்துகீசிய சொற்களும் "சாகிகி" யனைய இந்திச் சொற்களும், கணக்கிலா வடசொற்களும் "தயார்" "உஷார்" முத லிய இந்துஸ்தானிச் சொற்களும் தமிழில் புகுத்தப்பட்டமை யானன்றோ, அளப்பரும அருமருந்தன்ன தமிழ்ச் சொற்கள் முன்னரே இறந்தொழிந்தன: அவற்றைச் சங்கநூல்களிற் பெற்றிலேமே யெனின், அவை நாம் காணக் கூடக் கிடைத்தலருமையாம். இனியும் நாம் அங்ஙனம் அயல் மொழிச் சொற் களை தமிழில் புகுத்தி எழுதிவருவோமாயின், அது தனதினிய சொற்களை இழந்து தன்னுண்மை நிலைமாறிக் கன்னடம் முதலிய மொழிகளிலும் சீர் கேடான நிலையை எய்தி, யானையுண்ட விளாங்கனி போலாகி விடுமென்பது திண்ணம். வடவாரியர் தென்னாட்டு மக்களுடன் வந்து கலந்து ஒன்றுவதற்கு முன் எழுதப்பெற்ற தொல்காப்பியம் 'கலித்தொகை' பத்துப்பாட்டு, புற நானூறு, அகநானூறு முதலிய நூல்களில் வடசொற்கள் ஆயிரத்திற் கிரண் டொன்றாக ஒரோவிடத்து அருகிக்கலந்தன. பிற்காலத்திலவர்கள் வேரூன்றிப் பலவாண்டுகள் நெருங்கிப் பழகியதால் அவரது சொற்கள் மிகக்கலந்தன. தமி ழுக்குப் புறம்பான வடசொற்களைத் தமிழிற் கலந்தெழுதுவது பண்டைக்கால வழக்கல்ல வென்பதூஉம், பிற்றைக் காலத்திலுண்டாயதே யென்பதூஉம் பத் துப்பாட்டு முதலிய சங்க இலக்கியங்களையும் இராமாயணம் போன்ற பிற்கால நூல்களையும் ஒப்பிட்டு நோக்குவார்க்குத் தெற்றெனப் புலனாகும். சில வாண்டு களுக்குமுன் தமிழ்ப் புலவர்கள் வட சொற்களைக் கலத்தலாகிய "மணிப்பிர வாளநடை"யே சிறந்ததெனக் கொண்டிருந்தனர். அக்கொள்கை இப்போது சிறிது சிறிதாக மாறிவருகிறது. அன்றியும் ஆங்கிலச் சொற்களைத் தமிழில் இற்றைநாளிற் சேர்த்து வழங்குவதைத் தடுக்காவிடின், இனிவரவர அவை யும் தமிழில் வேரூன்றி நிலைபெற்றுவிடும். கிரீக, லத்தீன், க்ரீக் முதலிய மொழிகள் கலந்ததால்தான் ஆங்கிலம் உயர்நிலை யெய்தியது என்னும் கருத்து கொண்டு அங்ஙனமே தமிழிற்கும் வடமொழிக் கலப்பின்றியமையாது தென் பார் கூற்றை ஒரு சிறிது ஆராய்வோம். தமிழ் எண்ணிலாச் சொற்களைத்

தன்னிடத்தே யுடையதாய் தனித்தியங்க வல்லது. அன்னணமாயின் தமிழுக்கு வடமொழிக் கலப்பு இன்றியமையாதது யாங்ஙனம்? தமிழேதேனுங் குறைபாடுடைய மொழியா? அன்று. "புவியினுக்கணியாய் ஆன்ற பொருள் தந்து ஐந்திணை நெறியளாவிச் சவியுறத் தெளிந்து" கிடக்கும் கவிகள் மல்கிய நம தமிழ் நூல்கள் வடமொழிக் கலப்பினாலுறும்பயன் ஒரு சிறிதுமின்றாமாகலின் அவரது கூற்று மறுக்கற்பாலது. பெரும்பாலார் முன்னரே சிறிது பழுது பட்டிருக்கும் தமிழன்னையின் கண்ணை மீண்டும் தமிழ்ச்சொற்களாகிய மருந்தைப் பெய்து பாதுகாவாவிடினும் விடுக. அக்கண்ணை மென்மேலும் பிறமொழிக் கலப்பாகிய கோல்கொண்டு குத்தி (கல்லூரி மாணவர்கள் பேசுவதும் கட்டுரை வரைவதும் ஈண்டுக் குறிப்பிடத்தக்கது) முழுதும் பாழ்படுத்தும் கொள்கையுடையார் செயலை என்னென்போம்! "புத்தம் புதிய கலைகள் மெத்த வளருது மேற்கே. அந்த மேன்மைக் கலைகள் தமிழினி யில்லை. அவை சொலுந்திறமை தமிழ் மொழிக்கில்லை; தமிழினிச் சாகும்; அந்த மேற்கு மொழிகளினிப் புவிமிசை யோங்கும்." என்பான் ஒருவனது கூற்றைக் கேட்ட நந்தமிழன்னை இடியேறுண்ட நாகம் போன்று, "ஆ! இந்த வசை எனக் கெய்திடலாமா? கலைச் செல்வங்கள் யாவும் கொணர்ந்திங்கு சேர்ப்பீர்" எனத் தன் மகாரிடம் முறையிடுவதை ஒருவரும் கேட்கிலீரோ? கேட்பின் அக்கலைகளைத் தமிழுற் கொணர முயலுமின்! தாய்மொழி என்பதென்னை? "தாய்மார்கள் இயல்பாகவே பேசும் மொழியே தாய் மொழியாம்" என மாண்புமிக்க காந்தியடிகளும் ஓரிடத்துக் கூறிப் போந்தார். அத்தகைய தாய் மொழியை வளர்க்க ஒவ்வொருவரும் அரும்பாடுபடுகின்றனர். ஆனால் நாமோவெனில் 'அனைத்துலகும் புகழ் மணக்க இருந்த பெருந் தமிழணங்கை' இகழ்ந்து நம்மை விட்டு நீங்கச் செய்கிறோம்.

மேற் கூறியனவற்றை ஆராய்ந்தறிந்து இபன்றவரையில் கட்டுரைகளிலும் நூல்களிலும் பைந்தமிழ்ச் சொற்களையே உபயோகிப்பது தமிழர் கடமையாம். அதுவே நாம் தமிழன்னைக்கு ஆற்றுவதோர் சிறந்த தொண்டாம். அங்ஙனம் புரியின் அவள் புத்துயிர் பெறுவள். அருந்தமிழாளப் பெருந்தகையீர்! இற்றைநாளில் நாள் வழியேடு (Daily news,) திங்கள் வழியேடு (Monthly) புதினத்தாள் இவைகளை யாக்குவோரெல்லாம் இன்னும் ஆங்கில வடசொற்களின் கலப்பைப் பெருக்கி வருகின்றனர். இவற்றை ஆக்குவோரும் கட்டுரை எழுதவோரும் தமிழ்மொழியிடத்து மெய்யன்புடையாராயின், இனிமேல் தமிழ்ச் சொற்களையே அமைத்து எழுதத் தொடங்கவேண்டும். சில்லாண்டுகளில் தமிழ்க் கடலின் அடியிடங்களில் பரந்து கிடக்கும் மணிகளைத் தமிழன்பர்கள் எடுத்து யாவருக்கும் உதவுவார்களென நம்புகின்றனன். அங்ஙனம் செய்வது தமிழுலகிற்கும் ஏனைய மக்களுக்கும் இன்னலம் பயப்பதொன்றே. தெள்ளிதின் ஆராய்ந்தமைவுடைய கற்கும் பெருந்தகையீர்! பன்னெடுநாள் முன்னர் உலகமெல்லாம் தன் திப்பிய ஒளிகிழற்றி விளங்கிய பண்டைத் தமிழன்னை மாரிக்கால மதியம்போலப் பரிபவ மெய்தினள். அவள் நும் அரும் பெறலன்னை! நீவிர் அவள் தம் அருமைப்புதல்வர். ஆதலின் அவளது துன்பு துடைத்துத் துயரகற்றுவ துங்கள் கடன். நீவிர் தொல்குடி வந்தீர்! துகளில் மரபினீர்! நும்மரபின் சீருங்கிலக் காகுமின். அன்னைக்குதவ முந்துமின். அவள் தொண்டுதரு சீரினைச் சூடுமின்! புகழ்மின்! பாடுமின்!! பரவுமின்!!!




85 மாடிகளுள்ள கட்டிடம்:—நியூயார்க்கிலுள்ள மிகவும் உயரமான கட்டிடமொன்றில் 85 மாடிகள் இருக்கின்றனவாம்.

***

நீரில் நடக்க காற்று உடுப்பு:—ஜர்மனியில் ஒரு வகையான காற்று உடுப்புகள் தயார் செய்யப்பட்டு வருகின்றனவாம். அவைகளை யணிந்து கொண்டால் தண்ணீரில் நடக்க முடிகிறதாம்.

***

2 தலை, 3 காதுகளுடன் பிறந்த வெள்ளாடு:—மோகிஹரி என்னுமிடத்தில் ஒரு வெள்ளாடு இரண்டு தலைகளும், மூன்று காதுகளும் உடைய ஒரு குட்டியை ஈன்றதாம். ஆனால் அவ் வெள்ளாட்டுக்குட்டி பிறந்த சிறிது நேரத்துக்கெல்லாம் இறந்துவிட்டதாம்.

***

உணவு வகைக் குறிப்பில் போர்ச் செய்திகள்:—இத்தாலிய ஓட்டல்களில் உணவு வகைகளைக் குறிப்பிடும் தினசரித் துண்டுப் பிரசுரங்களில் (ஆங்கிலத்தில் அதற்கு 'Menu' என்று பெயர்.) எல்லாம், எதியோபியாவில் இத்தாலியர் எவ்வளவு தூரம் முன்னேறியிருக்கின்றனர் என்பது குறிக்கப்பட்டிருக்கிறதாம்.

***

சூரியகாந்திப் பூவிலிருந்து ரப்பர்:—சூரியகாந்திப் பூக்களிலிருந்து ரப்பர் உற்பத்தி செய்யக் கூடுமெனக் கூறப்படுகிறது.

***

ஆகாய விமானத்தில் பறந்த 2 நாள் குழந்தை:—பிரிட்டனில் கிரேவ்ஸ் எண்ட் என்னுமிடத்திலுள்ள ஒருவர், விமானத்தில் இதுவரை யாருஞ் செய்யாத அரிய காரியத்தைச் செய்து காட்டவேண்டுமென்ற நோக்கத்தோடு பிறந்து இரண்டே நாட்களான தனது பச்சிளங் குழந்தையை ஆகாய விமானத்தில் ஏற்றி வைத்துக்கொண்டு பறந்து சென்றாராம்.

***

இரவும் பகலும் விளக்கு!:—ஜாஸ்லோ என்னும் நகரத்திலுள்ள முனிஸிபாலிடியார் இரவும் பகலும் விடாமல் நகரில் விளக்குகள் எரிய வைக்கவேண்டுமெனத் தீர்மானித்திருக்கிறார்களாம்.

***

மரத்தில் படுக்கையறை:—கிழக்காபிரிக்காவிலுள்ள கென்யா பகுதியில் ஒரு மரத்தின் நுனியில் நூதனமான படுக்கையறையொன்று அமைக்கப்பட்டிருக்கிறது. அதில் படுத்தபடியே காட்டு மிருகங்களைப் பயமின்றிக் காணலாம். இவ் விநோத படுக்கைக்கு ஒரு இரவுக்கு 100 பவுன் வாடகையாக வாங்கப்படுகிறதாம். உலகிலேயே இது மிக அழகுவாய்ந்ததெனக் கூறப்படுகிறது.

# ஆசிரியர் குறிப்புக்கள்

## காரைக்குடி மகாநாடு

சென்ற மாதம் 25,26-ம்தேதிகளில் தனவணிகர் நாட்டின் திலகம் போல் விளங்கும் காரைக்குடியில் 37வது தமிழ் மாகாண அரசியல் மகாநாடு சிறப்பாக நடைபெற்று முடிந்தது. ஷை மகாநாட்டில் ஸ்ரீமதி ருக்குமணி லக்ஷ்மீபதி எம். எல். ஸி. தலைமை வகித்தார். வரவேற்புக் கழகத் தலைவராக விளங்கியவர் ஸ்ரீமான் எம். ஆர். எம். எம். மெய்யப்ப செட்டியாரவர்களாவர். ஓய்வு பெற்று விலகியிருந்த ஸ்ரீமான் ச. ராஜகோபாலாச்சாரியாரும் இம் மகாநாட்டின் நடவடிக்கைகளில் முக்கிய பங்கெடுத்துக்கொண்டது குறிப்பிடத்தக்க செய்தியாகும். வரவேற்புக் கழகத்தலைவர் சொற்பொழிவிலும், மகாநாட்டுத் தலைவர் சொற்பொழிவிலும் பல அரிய கருத்துக்கள் மிளிர்கின்றன.

* * * *

## வரவேற்புக் கழகத் தலைவர் பேச்சு

வரவேற்புக் கழகத்தலைவர் முதலில் செல்வம் படைத்துள்ள தனவணிகப் பெருங் குடிமக்கள் அரசியலில் கலந்து கொள்ளவேண்டிய அவசியத்தை நன்கு வற்புறுத்தினர். "மனிதன் உலகத்தில் முதலாவதாக அடையவேண்டியது சுதந்தரம். மற்றைய யாவும் பின்னரே. ஆதலால் தனவணிகப் பெருமக்கள் அனைவரும் அரசியலில் பெரும் பங்கு எடுத்துக்கொண்டு உழைக்க முன் வரவேண்டும் என்று நான் அழைக்கிறேன்" என ஸ்ரீமான் மெய்யப்ப செட்டியார் ஆவலுடன் விடுத்திருக்கும் அழைப்பை தனவணிக வாலிப நண்பர்கள் பெரிதும் கவனிக்கவேண்டும் என்று நாம் எடுத்துக்காட்ட விரும்புகின்றோம். பர்மாப் பிரிவினையால் தனவணிக மக்களுக்கு ஏற்படும் துன்பங்களைப் போக்கக் காங்கிரஸ் தீவிரமான முயற்சியைச் செய்ய வேண்டும் என்று அவர் கேட்டுக்கொண்டதும், நேர்முகமாகச் சென்னை—ரங்கூன் தபால் போக்கு வரவு நீண்ட காலமாக நடைபெற்று வந்ததை அரசாங்கத்தார் நிறுத்திவிடத் தீர்மானித்ததை அவர் கண்டித்ததும் முற்றிலும் நியாயமே ஆகும். ஸ்ரீமான் மெய்யப்ப செட்டியார் அவர்கள் கதர் சம்பந்தமாக வெளியிட்டுக்கொண்ட குறைகளையும் முறைகளையும் அகில இந்திய சர்க்கா சங்கத்தார் கவனித்து ஆவன செய்வார்கள் என்றே எதிர்பார்க்கிறோம். காரைக்குடி மகாநாட்டை ஒட்டி நடைபெற்ற கதர்—சுதேசிப் பொருட்காட்சியில் சர்க்கா சங்கத்தார் பங்கெடுத்துக் கொள்ளாதது பெரிதும் வருந்தத்தக்கது. இதற்கு அவர்கள் என்ன சமாதானம் கூறுவார்களோ என்பதைத் தமிழ் மக்கள் ஆவலுடன் எதிர்பார்த்துக்கொண்டிருக்கின்றனர். காங்கிரஸ்காரரும், சமூகச் சீர்திருத்தக்காரரும், அரசாங்கத்தாரும் இவ்வளவு காலம் முயன்றும் இன்னும் தீண்டாமைப் பேய் எங்கும் தலைவிரித்தாடிக் கொண்டிருப்பதைக் கண்கூடாகக் காண்கிறோம். எனவே வரவேற்புக் கழகத்தலைவர் "தீண்டாமை ஒழிப்பு விஷயத்தில் காங்கிரஸ் தலைவர்கள் அனைவ-

ரும் மனப்பூர்வமாக—அதி தீவிரமாக உழைத்து ஒவ்வொருவரும் செய்கையில் அநுஷ்டித்துக் காட்டவேண்டும்" என்று கேட்டுக்கொண்டது பொருள் செறிந்த பொன் மொழியாகும். ஏன்? ஒரு சில காங்கிரஸ்காரரே தீண்டாமை ஒழிப்பதை மனப்பூர்வமாய் ஒப்புக்கொள்ளுவதில்லை என்பது எல்லாரும் அறிந்த உண்மை. இதற்குத் திருச்சி ஜில்லாவில் அரசியல் மகாநாடு எசனையில் நடைபெற்றபோது சாப்பாட்டு விஷயத்தில் ஸ்ரீமான் சன்னுசி அவமதிக்கப்பட்டதே போதிய சான்றாகும். எனவே காங்கிரஸ் தலைவர்கள் எல்லோரும் தீண்டாமை விலக்கு விஷயத்தில் உண்மை உணர்ச்சியுடன் உழைக்கவேண்டும் என்று வரவேற்புக்கழகத் தலைவர் வற்புறுத்தியது கண்டு மகிழ்ச்சி அடைகின்றோம். ஷை மகாநாட்டுத் தலைவராகத் தாங்கள் ஸ்ரீமான் அவிநாசிலிங்கம் செட்டியாரைத் தேர்ந்தெடுத்தது, பிறகு ஸ்ரீமதி ருக்குமணி லக்ஷ்மீபதி அம்மாள் தலைவராக வர நேர்ந்தது, குறிப்பிட்ட தேதியில் மகாநாடு நடைபெற முடியாமல் தலைவர் தடை செய்துவிட்டது முதலிய விஷயங்களைச் சுட்டிக்காட்டி வரவேற்புக் கழகத் தலைவர் வருத்தந் தெரிவித்தார். அவையெல்லாம் கடந்துபோன விஷயங்கள். இனிமேலாகிலும் இத்தகைய அசம்பாவிதங்கள் நேராமலிருக்க அவை தலைவர்கட்கு விழிப்பூட்டியிருக்கும் என்றே எண்ணுகின்றோம்.

* * * *

## தலைவர் பேருரை

காரைக்குடி மகாநாட்டுத் தலைவரான ஸ்ரீமதி ருக்குமணி லக்ஷ்மீபதி அம்மையார் நாவன்மையும், வீரமும், தியாகமும் செறிந்த பெண்மணியாவர். இந்த அம்மையார் முதலில் காங்கிரஸின் பெருமையையும், தமிழ் நாட்டில் அது அடைந்துள்ள வெற்றிகளையும் விரிவாக எடுத்துரைத்தார். காங்கிரஸில் எல்லாரும் வந்து சேரலாம் என அழைத்தார். ஆனால் மிதவாதிகள் காங்கிரஸில் சேர விதிக்கும் நிபந்தனைகளை அம்மையார் ஒப்புக் கொள்ளவில்லை. மேலும், காங்கிரஸ் திட்டத்தில் ஜீவாம்சங்களாக இருக்கக்கூடிய கதர், தீண்டாமை விலக்கு, வகுப்புவாதக் கலப்பற்ற—தேசீயம் இவைகளை மனப்பூர்வமாய் ஒப்புக் கொள்ளாமல் வேண்டாவெறுப்புடன் வருபவர்களை வெறும் எண்ணிக்கையைப் பெருக்குவதற்காகக் காங்கிரஸில் சேர்ப்பதையும் அவர் ஒப்புக் கொள்ளவில்லை. "காங்கிரஸில் சேருபவர்கள் முற்றிலும் காங்கிரஸ் கட்டுப்பாட்டை ஒப்புக்கொண்டு நடக்கவேண்டும்" என்று தலைவர் அம்மையார் கூறியதை நாம் மனப்பூர்வமாய் ஆதரிக்கின்றோம். தேர்தல்களில் காங்கிரஸின் பேரால் அபேக்ஷகர்களாக நிற்க விரும்பும் அநேகர் காங்கிரஸ் விதிகளை முற்றிலும் புறக்கணிக்கக் கூடியவர்களாயிருக்கிறார்கள். இத்தகையோர் பால் தாக்ஷிணியங் காட்டினால் காங்கிரஸின் பெருமை குன்றும் என்று நாமும் அஞ்சுகிறோம். ஆகையால் காங்கிரஸ் சிவிக் போர்டார் இவ்விஷயத்தில் கண்ணும் கருத்துமாய்க் கண்டிப்பான முறைகளை அமல் செலுத்தவேண்டும் என்று எடுத்துக்காட்ட விரும்புகின்றோம். ஸ்தல ஸ்தாபனங்களில் வெற்றி பெற்றுள்ள காங்கிரஸ் அபேக்ஷகர்கட்கு ஸ்ரீமதி ருக்மணி லக்ஷ்மீபதி அம்மையார் செய்துள்ள உபதேசம் வெகு முக்கியமானது. "ஸ்தல ஸ்தாபனங்களில் இதுவரை அதிகாரம் வகித்த கக்ஷியார் செய்த தவறுகளையே நாமும் செய்யாமல் பார்த்துக் கொள்ளவேண்டும். இது முக்கியம். ஸ்தல ஸ்தாபனங்

கள் ஸ்தல நன்மையும், நாட்டு நன்மையும் வளர்க்கக்கூடிய ஸ்தாபனங்களாக நடத்தப்படல் வேண்டும். கராச்சி காங்கிரஸ் செய்துள்ள தீர்மானத் திட்டங்களைச் சாத்தியமானவரை நடத்தவேண்டும்" என்று அம்மையார் கூறிய அறிவுரையைச் சம்பந்தப்பட்டவர்கள் கருத்தில் வைக்கவேண்டும். இன்றேல் நிலைமை தலைகீழாகிவிடும் என்பதை நாம் விரிக்கவும்வேண்டுமோ? ஸ்ரீமதி ருக்குமணி லக்ஷிமீபதி அம்மையார் காங்கிரஸ்காரர்கள் பதவி வகிப்பதை ஒப்புக்கொண்டது நியாயமே. ஆனல் ஒவ்வொரு மாகாணமும் சமய சந்தர்ப்பத்திற்கேற்ப நடந்துகொள்ள லக்ஷ்மணபுரி காங்கிரஸ் தீர்மானிக்கவேண்டும் என்று அவர் எதிர்பார்ப்பது பொருத்தமாகத் தோன்றவில்லை என்பது நமது தாழ்மையான கருத்து. இதனல் உத்தியோகம் ஏற்கும் மாகாணத்தின் பாடு வெகு திண்டாட்டமாகிவிடும் என்றே பயப்படுகின்றோம். தீண்டாமை விலக்கு விஷயத்தில் அம்மையார் உயர் வகுப்பினருக்கு நல்ல அறிவுச் சுடர் கொளுத்தியிருக்கவேண்டும் என்று நாம் கருதுகின்றோம் இதைவிட்டு "ஹரிஜனங்கள் பொறுமை இழக்கக் கூடாது. இன்னும் கொஞ்சம் பொறுமைகாட்ட வேண்டும்" என்று கூறுவதால் என்ன பயன்விளையும்? அவர்கள் ஆயிரக்கணக்கான ஆண்டுகளாகப் பொறுமைக் களஞ்சியங்களாகவே விளங்கி வருகிறார்களே! இவ்வுண்மை அம்மையாருக்குத் தெரியாதா என்று கேட்கின்றோம். மற்றும், விவசாயிகளின் முன்னேற்றம், மந்திரி சபைக் கண்டனம், குற்றபரம்பரைச் சட்டம் முதலியவைகளைப்பற்றி அம்மையார் கூறியவைகளை நாம் மனப்பூர்வமாய் ஆதரிக்கின்றோம்.

* * * *

## தீர்மானங்கள்

தமிழ் மாகாண அரசியல் மகாநாட்டில் சாதாரணமாகக் காங்கிரஸ் அரசியல் மகாநாடுகளில் சம்பிரதாயமாக நிறைவேற்றப்படும் தீர்மானங்களுடன் சில பெரிதும் புதிய தீர்மானங்களும் நிறைவேற்றப்பட்டிருக்கின்றன. ஆனல் முக்கியமான தீர்மானம் ஒன்று கைவிடப்பட்டது வருந்தத்தக்கது சுதந்தரப் போராட்டத்தை நிறுத்தாது நடத்தி வருதல், காங்கிரஸ் ஆணைவழி நிற்றல், காந்தியடிகளின் உடல் நலம் பற்றிய பிரார்த்தனை, ராஜேந்திரருக்கு நன்றியறிதல், சமீபத் தேர்தல்களில் வெற்றிக்கு ஆதாரவாயிருந்த மகா ஜனங்களுக்கு நன்றியறிதல், ஹரிஜனப் பிரச்சினை, மந்திரி—மந்திரி சபைக் கண்டனம், வாலிபர் கடமை, நிலவரி முறைக் கண்டனம், கிராமப் பிரசாரம், டோல்கேட் யோசனைக் கண்டனம், ரயில்வே மூன்றாம் வகுப்புப் பிரயாணிகள் சௌகரியம், தொழிலாளருக்கு ஆதாரவு, குடியேற்ற நாட்டு இந்தியர்பால் அநுதாபம், இந்திய சட்டசபைக் காங்கிரஸ அங்கத்தினருக்குப் பாராட்டு, புகையிலை வரி மசோதாக் கண்டனம் முதலிய அம்சங்களைப் பற்றிய தீர்மானங்கள் முக்கியமானவை என்பதில் ஐயம் இல்லை. 'கௌரப் பட்டதாரிகள் பட்டங்களை விட்டுவிடவேண்டும். ஒருவர் ஆறுமாதமாவது காங்கிரஸ் அங்கத்தினரா யிருக்கவேண்டும். இத்தகையவர்களே சட்டசபைக்குக் காங்கிரஸ் அபேக்ஷகராக நிற்கத் தகுதிவாய்ந்தவர்களாவார்கள்" என்று ஒரு தீர்மானம் நிறைவேற்றப்பட்டிருக்கிறது. ஸ்ரீமான் சக்கரவர்த்தி ராஜகோபாலாச்சாரியாரும் காரியக் கமிட்டி அங்கத்தினரும் இத்தீர்மானத்தை

எதிர்த்தும் இது நிறைவேறியிருப்பது நாட்டு மக்களின் தீவிர மனப்பான்மையை வெளிப்படுத்தி நிற்கிறது. அரிய பெரிய தியாகங்களைச் செய்யுமாறு இப்பொழுது யாரும் விரும்பவில்லை. அர்த்தமற்ற—போலிக் கௌரவத்தின் சின்னமாக இருக்கும் பட்டங்களையாது கைவிடாதவர்கள் தியாக வடிவாய் விளங்கும் காங்கிரஸின் பெயரைச் சொல்லிக்கொண்டு பதவிகட்கு ஆசைப்படுவது மானக் கேடாகும். ஒரு சிலர் காலமெல்லாம் மதிற்பூனையாகவே இருந்துவிட்டுக் கடைசி நிமிஷத்தில் காங்கிரஸ் போர்வையைப் போர்த்துக்கொண்டு சுயநலம் சாதிக்க விரும்புவது நகைப்பிற்கிடம். எனவே ஒரு ஆறுமாதகாலமாவது ஒரே மனதுடன் காங்கிரஸில் அங்கம் வகிப்பவர்களே சட்டசபை காங்கிரஸ் அபேக்ஷகர்களாக நிற்கவேண்டும் என்ற விதி வெகு நியாயமானதே ஆகும். "தலைவர்கள் உட்படக் காங்கிரஸ் பிரசாரத்திற்காகப் போகும் எல்லாக் காங்கிரஸ் வாதிகளும் 3-வது வகுப்பில் போகவேண்டும்" என்ற தீர்மானம் இனிமேல் காங்கிரஸ்காரர்களின்மீது சுமத்தப்படும் வீண் புகார்களையும் அபவாதங்களையும் நீக்கிவிடும் என்றே எதிர்பார்க்கின்றோம். காங்கிரஸ்காரர்கள் மந்திரி பதவிகளை வகிக்கலாமா கூடாதா என்று எங்கும் பிரமாதமாகப் பேசப்பட்டு வருகிறது. இந்தப் பேச்சை ஆதியில் கிளப்பிவிட்ட பெருமை தமிழ்நாட்டுத் தலைவர்கட்கு உரியதாகும். முன்னர் நடைபெற்ற ஒவ்வொரு கூட்டத்திலும், ஜில்லா—தாலூகா மகாநாடுகளிலும் மந்திரி பதவிகளை ஒப்புக்கொள்ளவேண்டும் என்ற தீர்மானம் நிறைவேற்றி வைக்கும்படி செய்த பெருமையும் இவர்கட்கே உரியதாகும். உண்மை இவ்வாறாக, இவ் விஷயத்தை முக்கியமாகக் கவனிக்கக் கடமை பூண்ட தமிழ் மாகாண அரசியல் மகாநாட்டில் இப்பிரச்சினையே தலை காட்டாதபடி செய்துவிட்ட மர்மம் என்ன என்று எமக்கு விளங்கவில்லை. நாடு முழுதும் காங்கிரஸ் உத்தியோகம் ஏற்பது என்பதை அருவருத்துக் கொண்டிருந்த சமயத்தில் உத்தியோகம் ஏறகவேண்டும் என்று வானத்தையும் பூமியையும் உருட்டியதும் தமிழ்நாட்டுத் தலைவர்கள். இப்பொழுது நாடு கைகொட்டி நகைக்கும்படி உத்தியோகம் வேண்டும் அல்லது வேண்டாம் என்று முக்கியமான சந்தர்ப்பத்தில் தெளிவாக்காமல் மதிற் பூனைகளாய் மர்மம் சாதிப்பதும் தமிழ்நாட்டுத் தலைவர்கள். தமிழ் நாட்டுக்கு இத்தகைய அவலக்ஷணப் பெயர் ஏற்பட்டமைக்கு நாம் மிகவும் வருந்துகின்றோம். உத்தியோகம் ஏற்பதுபற்றித் தமிழ்நாட்டின் அபிப்பிராயம் தெரிந்ததுதான் என்று பிடிகொடாமல் சமாதானம் கூறுவதும் ஒரு சமாதானமா?





# லக்ஷ்மிபாய்

அல்லது

# ஆற்காட்டு முற்றுகை.

(எம். லக்ஷ்மண முதலியார்.)

(558-ம் பக்கத் தொடர்ச்சி.)

## இரண்டாம் அத்தியாயம்.

"அம்மா, நான் கோழையல்ல—ஆங்கிலேயர்கள் கோழைகள் அல்லர்! அன்று செயின்ட் ஜார்ஜ் கோட்டையில் என் உயிரை என் தாய்நாட்டுக்கு (இங்கிலாந்து) தத்தம் செய்துவிட்டுத்தான் பேனாப் பிடித்து எழுதிய கையில் துப்பாக்கியை எடுத்தேன்! இதோ! இந்த உயிர் பகைவரின் உதிரத்தைக் குடிக்கப் பசியெடுத்து நிற்கின்றது; என் எலும்பில் ஒட்டிய மாமிஸம் நீங்குகிற வரையில் இந்த உயிர் நின்று யுத்தம் செய்யும்! இராஜகுமாரி! வீராங்காய்! உந்தனது உயரிய நோக்கத்தைக்கண்டு யார்தான் வியப்படையாமல் இருக்கமுடியும்? உனக்கு அநேக சலாம். இந்த அன்னியன் (தன் மார்பில் கையை வைத்துக்கொண்டு) உயிர் உள்ளவரைக்கும் உன் மேல் ஓர் ஈ உட்கார முடியாது என்று நினைத்துக்கொள்" என்று களைவ் பேசினர்.

ஹுசேன் தன் கோபத்தில் ஒரேபாய்ச்சலாய் மதிலைத்தாண்டிக் குதித்து அந்த அடாத நிருபம் எழுதிய முகமதியனைப் பிடித்து மார்பைப் பிளந்து அவனது உதிரத்தைக் குடித்து விடுவான்போல் தோன்றினன்.

"இராஜகுமாரி, பேஷ்! எங்கள் இருநூறு உயிரையும் காப்பாற்றுவதற்கு உன்னுடைய ஓர் உயிரை அர்ப்பணம் செய்வதாய்ச் சொல்லினை யல்லவா? ஓ! ஓர் பெண்மணியின் உறிரம்! அதிலும் மன்னர் குலத்துதித்த ஓர் இளங் கோதையின் உதிரம்! இணையற்ற நற்குணமும் மாசற்ற பேரழகும் வாய்ந்த மாணிக்க மணியின் உதிரம்! சிந்தித்தானா நாங்கள் வாழ வேண்டும்? — என் உயிர் அல்ல, இந்த களைவ் துரையின் உயிர் அல்ல, இந்த இருநூறு சிப்பாய்களின் உயிர் அல்ல, இவ்வளவு உயிரும் எதிரிகளுடைய கத்திகளுக்குப் பலியாகி உன் உயிரையும் உன் கற்பையும் காப்பாற்றுவோம். இப்போது எது பெரிய தியாகம்? சொல் பார்ப்போம்!" என்றான் ஹுசேன்.

"நான் ஒருத்தி உங்களோடு இருப்பதினாலேதானே உங்கள் எல்லோரையும் படுகொலை செய்வதாக அப்பாதகர்கள் பயமுறுத்துகிறார்கள்?"

"ஓஹோ! இவர்கள் மிரட்டலுக்கு பயந்தவர்கள் நாங்களல்ல. அதைப் பற்றி நீ கிஞ்சிற்றேனும் அஞ்ச வேண்டாம். உன் சகோதரனுக்கு வாக்களித்தபடி நான் கடமையைச் செய்தே தீருவேன். எனக்குப் பெரிது சொன்ன வாக்கு தவறாமல் இருப்பதே. அன்னிய சீமையிலிருந்து இங்கே வியாபாரிகளாய்ப் பிழைக்க வந்த இந்த ஆங்கிலேயருடன் சேர்ந்துகொண்டு நமது நாட்டில் பிறந்துவளர்ந்த சகோதர வீரர்களை எதிர்த்து யுத்தம் செய்கிறேனே! ஏன் தெரியுமா? க்ளைவ் துரைக்கு நான் கொடுத்த வாக்குறுதியை நிறைவேற்றும் பொருட்டே" என்று சொல்லிக் கொண்டு தனது உடையால் மறைத்து வைத்திருந்த ஒரு கடிதத்தை எடுத்து அவளிடம் கொடுத்தான் ஹுசேன். அதில் பின்வருமாறு உருது பாஷையில் வரைந்திருந்தது.

"தேசமெங்கும் வீரப்புகழ் வாய்ந்த ஹுசேன் கானுக்கு மேன்மை தங்கிய நவாபு சந்தா சாஹேபுவின் சேனாபதி கட்டளைப்படி விடுத்த நிருபம். இந்த கும்பேனியர்கள் ஆயிரங்காத வழிக்கு அப்பால் இருக்கும் தங்கள் தாய் நாட்டிற்காகவும் தங்கள் நாட்டு மன்னருக்காகவும் எவ்வளவு ஊக்கமாய் யுத்தம் செய்கிறார்கள் பார்த்தீரா? அப்படியிருக்க, நமது இனத்தவர் பரம்பரையாக ஆண்டுவந்த இந்த நாட்டைக் காட்டிக்கொடுத்த அவர்களுடன் சேர்ந்துகொண்டு நீர் உமது சகோதர முஸ்லீம்களின் இரத்தத்தைச் சிந்துவது நியாயமாகுமா? நீர் உடனே வந்து நமது சேனையில் ஓர் உத்தியோகத்தை ஏற்றுக்கொண்டு தாய் நாட்டுக்கு தொண்டு செய்ய வேண்டும்."

"அவர்கள் மட்டும் ப்ரெஞ்சுக் காரர்களோடு சேர்ந்து கொண்டு நம் நாட்டைப் பாழ்படுத்தி வருகிறார்களே." என்று உடனே கேட்டாள் லக்ஷ்மிபாய்.

"ஆம். அவ்வாறே நான் பதில் எழுதிவிட்டேன். ஆகையால் முதலில் என் தலைக்குத்தான் குறி வைத்திருப்பார்கள்."

அன்று முதல் ராஜாசாஹேபுவின் படை அதிகக் கடுமையாகவே யுத்தம் செய்ய ஆரம்பித்தது. முற்றுகைக்குள் சிக்கியவர்களுக்கு ஆபத்து அதிகரித்துக் கொண்டு வந்ததுமல்லாமல் முடிவுகாலமும் நெருங்கிக் கொண்டே வந்தது என்று சொல்லலாம். ஏனெனில், க்ளைவின் படையிலிருந்த இந்திய சிப்பாய்கள் சாதத்தை யெல்லாம் ஆங்கிலேயர்களிடம் கொடுத்து விட்டு கஞ்சியை மட்டும் அருந்தினார்கள்; அவர்களுக்கு சரீரத்தில் பலம் எங்கிருந்து வரும்? க்ளைவ் துரையின் உற்சாக வார்த்தைகளால் இவர்கள் தங்கள் உயிரை வெறுத்து ஆச்சரியகரமான தைரியத்துடனேயே யுத்தம் செய்தார்கள். ஆனால் ஒவ்வொரு நாளும் ஒன்றிரண்டு சிப்பாய்களும் ஒன்றிரண்டு ஆங்கிலேயர்களும் முகம்மதிய வீரர்களுடைய துப்பாக்கிகளுக்கு இரையாகிக் கொண்டிருந்தனர்.

நவம்பர் மாதம் 24-ம் தேதி வந்தது. நவாபு சேனையின் படைக்கு அடங்காத ஆத்திரம் வந்து விட்டது. ஏன்? இருபதுலக்ஷம் வராகன் லஞ்சம் தருவதாகச் சொன்னார்கள்! ஆற்காட்டுக் கோட்டையையும் விட்டுக் கொடுப்பதாகச் சொன்னார்கள்! எல்லோருடைய உயிரையும் மன்னித்து விடுவதாகச் சொன்னார்கள்! அப்படியும் இந்த க்ளைவ் ஓர் பெண்ணைத் தங்களிடம் ஒப்பு விப்பதற்கு மறுத்து விட்டார் அல்லவா? அதுதான் காரணம்.

"இன்று கோட்டை வாசலை உடைத்துக் கொண்டு உள்ளே புகுந்து எல்லோரையும் பிடித்து கத்திக்கு இரையிட வேண்டியது" என்று தீர்மானிக்கப்பட்டது! கோட்டை மதிலைச் சுற்றி ஏணிகள் வைக்கப் பட்டன. யானைகளின் முகத்தில் இரும்புத்தகடுகள் கேடயமாகக் கட்டப் பட்டன. இந்த யானைகள் நாலாபக்கத்து கோட்டை வாசல்களையும் தாக்கின. அவைகளின் பின்னால் படைவீரர்கள் சென்றனர். களேவின் ஆட்கள் வெகு தைரியமாய்த் துப்பாக்கிப் பிரயோகம் செய்தனர். பீரங்கிகளும் உபயோகப் படுத்தப் பட்டன. குண்டுகள் சரமாரியாய்ப் பொழிந்ததும யானைகள் மிரண்டு திரும்பி ஓடின. ஓடும்போது தங்களுடைய சைனியங்களையே மிதித்துத் துவைத்தன. இதனால் நவாபு சேனையில் பெருத்த சேதமும் குழப்பமும் உண்டாயின. ஆனபோதிலும் அவர்கள் பின்வாங்க வில்லை. தெப்பங்களைக் கட்டி அதன் மூலம் அகழியைக் கடந்த கோட்டை மதிலையுந்தாண்டி உள்ளே செல்ல முயன்றார்கள். இதற்குள் கோட்டையைக் காப்பாற்றி வந்த க்ளேவினிடம் இருந்த எண்பது ஆங்கிலேயர்களில் நாற்பத்தைந்து பேரும், நூற்றி இருபது இந்திய சிப்பாய்களில் முப்பதுபேரும் வீரசொர்க்கம் சேர்ந்தார்கள். இவர்களால் பன்னீராயிரம் தோட்டாக்கள் பிரயோகிக்கப் பட்டிருந்தன.

இந்தச் சமயத்தில் நமது வீரக் கதாநாயகியாகிய லக்ஷ்மிபாய் என்ன செய்து கொண்டிருந்தாள் என்று கவனிப்போம். பகைவரின் துப்பாக்கிரவைகளும் பீரங்கிக் குண்டுகளும் எட்ட முடியாத ஓரிடத்தில் அவள் வைக்கப் பட்டிருந்த போதிலும் அவளது மனம் நிம்மதியாய் இல்லை. ஏனென்றால் மஹாராஷ்டிர ராஜ்பத்திலிருந்து உதவிவருகிறதா வென்று பார்க்க எதிர்கொண்டு சென்ற ஹூசேன் இன்னும் திரும்பி வரவில்லை. ஒவ்வொரு நிமிஷமும் அவனை எதிர்பார்த்த வண்ணமாய் கவலை கொண்டிருந்தாள். ஒருவேளை பகைவரின் கையில் சிக்கி வேவுகாரனென்று கொலைசெய்யப் பட்டானோ என்று ஏங்கினாள். அப்போது அவ்வறையின் கதவு பலமான கையால் திறக்கப்பட்டது. எதிரிகள் மீறிவந்து விட்டார்களோ வென்று நினைத்ததும் அவள் உடல் நடுநடுங்கியது. ஆனால் ஹூசேன் உதிரம் தோய்ந்த ஆடையுடன் அவளண்டையில் சாய்ந்தான். துக்கம் ஒரு பக்கம் சந்தோஷம் மற்றொரு பக்கமாய் அவளைப் பற்றின. உடனே அலறி எழுந்து ஹூசேனைத் தூக்கித் தன் மடியின் பேரில் போட்டுக் கொண்டு உபசாரம் செய்து களை அகற்றினாள்.

"இனிப் பயமில்லை, இனிப் பயமில்லை." என்று மெதுவாய்ச் சொன்னான் ஹூசேன்.

"உதவி வருகின்றதா?" என்று வினவினாள் லக்ஷ்மிபாய்.

"ஆம், ஆம். அவர்கள் ஆறாயிரம் குதிரை வீரர்களை அனுப்பி இருக்கிறார்கள். அந்தப்படை இங்கிருந்து முப்பது மைல் தூரத்திலுள்ள மலையடிவாரத்தில் கூடாரம் அடித்திருக்கின்றார்கள். இனி நவாப்பு சேனை பஞ்சாய்ப் பறந்து விடும்." இவ்வாறு சொல்லிக் கொண்டிருக்கும் போது களேவ் வெகு அவசரமாய் வந்தார்.

(தொடரும்.)

# "ஆனந்தபோதினி" பஞ்சாங்கம்.

யுவ௵ மாசி௴—கலியுகாதி 5037, சாலிவாகனம் 1858,
பசலி 1345, கொல்லமாண்டு 1111, ஹிஜரி 1354,
இங்கிலீஷ் 1936௵ பிப்ரவரி௴—மார்ச்சு௴

| மாசி௴ | பிப்ரவரி௴ | வாரம். | திதி. | நக்ஷத்திரம் | யோகம். | விசேஷங்கள். |
|---|---|---|---|---|---|---|
| 1 | 13 | வியா | சஷ்59-15 | சித்24-58 | சித்60 | |
| 2 | 14 | வெள் | சப்60 | சுவா32-25 | சித்60 | |
| 3 | 15 | சனி | சப்4- 5 | விசா38-15 | சித்60 | |
| 4 | 16 | ஞா | அஷ்8-20 | அனு42-35 | மர50 | |
| 5 | 17 | திங் | நவ10-33 | கே5-10 | சித்60 | |
| 6 | 18 | செவ் | தச10-45 | மூல45-45 | அ45-45சி | |
| 7 | 19 | புதன் | ஏகா8-53 | பூரா44-15 | அமி60 | |
| 8 | 20 | வியா | து5-5<br>த்ர59-30 | உத்41-0 | சித்60 | |
| 9 | 21 | வெள் | சது52-18 | திரு36-3 | மர36-3சி | மஹா சிவராத்திரி |
| 10 | 22 | சனி | அ● 44-8 | அவி30-0 | சித்30-0அ | சர்வத்திர அமாவாசை |
| 11 | 23 | ஞா | பிர35-15 | சத23-13 | சித்60 | பால்குண சுத்தம் |
| 12 | 24 | திங் | துதி26-15 | பூர16-8 | மர16-8சி | சந்திர தரிசனம் |
| 13 | 25 | செவ் | திரி17-33 | உத்9-13 | அ9-13சித் | மாச சதுர்த்தி விரதம் |
| 14 | 26 | புத | சது9-25 | ரே2-50<br>அஸ்57-28 | மர60 | சாந்த சதுர்த்தி |
| 15 | 27 | வியா | பஞ்2-23<br>சஷ்56-38 | பர53-33 | சி53-33மர | சஷ்டி, கரிநாள், அவமாகம்,<br>அடுப்புவைக்க |
| 16 | 28 | வெள் | சப்52-43 | கி✻51-13 | சி51-13ம | கிருத்திகை, கரிநாள் [க்க |
| 17 | 29 | சனி | அஷ்50-18 | ரோ50-25 | அ50-25சி | கரிநாள், வியாதியஸ்தர்குளி |
| 18 | 1 | ஞா | நவ49-38 | மிரு51-18 | சித்60 | வாகனமேற, மருந்துண்ண |
| 19 | 2 | திங் | தச50-28 | திரு53-40 | சி53-40அ | காது குத்த, கதிரறுக்க |
| 20 | 3 | செவ் | ஏகா52-38 | புன57-20 | சித்60 | சர்வ, மத்வ ஏகாதசி |
| 21 | 4 | புதன் | த56-3 | பூச60 | சித்60 | நரசிம்ம துவாதசி |
| 22 | 5 | வியா | திர60 | பூச2-8 | அமி2-8சித் | பிரதோஷம், கதிரறுக்க |
| 23 | 6 | வெள் | திர0-18 | ஆயி7-50 | மர60 | நவக்கிரகசாந்தி செய்ய |
| 24 | 7 | சனி | ச○5-15 | மக14-10 | அ14-10சி | ○ மாசி மகம் [எழுத |
| 25 | 8 | ஞா | பவு10-48 | பூர20-55 | சி20-55அ | வசந்தோற்சவ, சித்திரம் |
| 26 | 9 | திங் | பிர16-45 | உத்28-3 | சித்60 | பால்குணபகுளம், புஷ்கரம்<br>பிரவேசம், மருந்துண் |
| 27 | 10 | செவ் | துதி22-53 | அஸ்35-25 | சித்60 | சாதுர்மாஸ்ய துவிதியா [ண |
| 28 | 11 | புதன் | திரி29-8 | சித்42-48 | சித்60 | கோடியுடுக்க, ஆபரணம் பூ |
| 29 | 12 | வியா | சது33-10 | சுவா49-58 | அ49-58சி | சங்காஷ்ட சதுர்த்தி |

1936௵ மார்ச்சு௴

| | | | |
|---|---|---|---|
| செவ் | | | சே |
| சூரி<br>சனி | 4-மகர-சுக்<br>25-கும்-புதன்<br>26-தனு-குரு<br>28-கும்ப-சுக் | | |
| புத | | | |
| சுக்<br>ராகு | குரு | | |

Printed & Published by N. Munisawmi Mudaliar,
At the "Ananda Bodhini" Press,
No. 6, Lawyer Chinnathambi Mudali Street, Madras.

உ
ஓம்
பரப்பிரஹ்மணே நம:

# ஆனந்தபோதினி

"எப்பொரு ளெத்தன்மைத் தாயினு மப்பொருண்
மெய்ப்பொருள் காண்ப தறிவு"—திருவள்ளுவர்.


தொகுதி 21 | யுவஹூ பங்குனிமீ கஉ | 1936ஹு மார்ச்சுமீ 13உ | பகுதி 9

## கடவுள் வணக்கம்.

எனதென் பதும்பொய் யானெனல்பொய்
 எல்லாம் இறந்த விடங்காட்டும்
நினதென் பதும்பொய் நீயெனல்பொய்
 நிற்கு நிலைக்கே நேசித்தேன்
மனதென் பதுமோ என்வசமாய்
 வாரா தைய நின்னருளோ
தனதென் பதுக்கும் இடங்காணேன்
 தமியேன் எவ்வா றுய்வேனே. (2)

உய்யும் படிக்குன் திருக்கருணை
 ஒன்றைக் கொடுத்தால் உடையாய்பாழ்ம்
பொய்யும் அவாவும் அழுக்காறும்
 புடைபட் டோடு நன்னெறியாம்
மெய்யும் அறிவு பெறும்பேறும்
 விளங்கும் எனகுன் அடியார்பால்
செய்யும் பணியும் கைகூடும்
 சிந்தைத் துயரம் தீர்ந்திடுமே. (2)

பாரனைத்தும் பொய்யெனவே பட்டினத்துப் பிள்ளையைப்போல்
ஆரும் துறக்கை அரிதரிது—நேரே
மனத்துறவும் அப்படியே மாணு இவற்றில்
உனக்கிசைந்த வாறென்றே ஓர். (3)

பாசான நெஞ்சனிவன் வஞ்சனென்றே வாய்திறந்து
பேசா மவுனம் பெருமான் படைத்ததுவே. (4)

# அரும்பொருள் விளக்கம்

1. இதனால் உய்யும் வழி அறியாதிருத்தலை வெளியிடுகின்றார்.

(இ-ள்) ஐய்னே! என்னுடையது என்று எந்தப் பொருளை விவகரித்தலும் பொய்யாகும். யான் என விவகரித்தலும் பொய்யாம். எல்லா விவகாரங்களும் அற்ற இடத்தினைக் காட்டுகின்ற நின்னது என்று விவகரித்தலும் பொய்யாம் நீ என்று விவகரித்தலும் பொய்யாம். ஆகையால் நிலை பெற்றிருக்கும் தன்மைக்கே விரும்பினேன். மனம் என்று சொல்லப்படும் பொருளோ என் வழியில் வருவதில்லை. தேவரீருடைய திருவருளோ தன்னுடையது என்று சொல்லுவதற்கும் இடங் கண்டிலேன். அடியேன் எவ்விதம் பிழைப்பேன் என்க.

எனது என்பது புறப்பற்று. தனக்கன்னியமாயுள்ள புறப்பொருளனைத்தும் மாயாகாரியமாகலின் "எனது என்பதும் பொய்யாம்" என்றனர். யான் என்பது துக்கத்திற்கு ஏதுவாகிய அபிமானமாதலினால் "யானெனல் பொய்" என்றனர். அனைத்தும் முதல்வன் முன் சூனியமாகலின் "நினது என்பதும் பொய்" என்றனர். முதல்வனைத் தவிர அன்னியமாக வேறொன்றில்லை என்பார் "நீ எனல் பொய்" என்றனர். ஆகலின் இவை யனைத்தும் நீங்கப்பெற்று ஏகமாகி நின்று அநுபவிக்கும் நித்தியானந்த நிலையினையே விரும்பினேன் என்பார் "நிற்கு நிலைக்கே நேசித்தேன்" என்றனர்.

2. இதனால் உய்யும் பொருட்டு இறைவன் திருக்கருணை அளிக்கவேண்டும் என்று விரும்புகின்றார்.

(இ-ள்.) எல்லாம் உடைய இறைவனே! கதி அடையும் பொருட்டுத் தேவரீருடைய திருவருளொன்றினைக் கொடுத்தால் பாழாகிய பொய்யும் ஆசையும் பொறாமையும் புடைபெயர்ந்து ஒழியும். நன்மார்க்கத்திற் கேதுவாகிய சத்தியமும், அறிவினாற்பெறும் பயனும் பிரகாசிக்கும். அடியேனுக்குத் தேவரீருடைய அடியவரிடத்துச் செய்யவேண்டிய தொண்டும் கைவசப்படும். மனவருத்தம் நீங்கிப்போகும் என்க.

முதல்வன் திருவருள் ஒன்றினை மட்டும் அடையப் பெறுவரேல் மருள் பற்றிய பொய் முதலிய ஒழியப்பெற்று அருள் பற்றிய மெய் முதலிய அடைந்து பெரும்பேறு அடைவர் என்பதாம்.

3. இதனால் அகத்துறவு அல்லது புறத்துறவு ஆகிய இரண்டனுள் ஒன்றைப் பற்றுக என்கிறார்.

(இ-ள்) உலகம் அனைத்துய் நிலையில்லை என்றே பட்டினத்தடிகளைப் போல் எத்தகையரும் துறவடைதல் மிக அருமையாகும். நேராக அகத்துறவும் அங்ஙனமே ஆகும். இவ்விரண்டில் உனக்குப் பொருத்தமாகிய வழி ஒன்றினையே ஆராய்ந்து கொள்வாயாக என்க.

4. (இ-ள்) எம்பெருமானே! இவன் குற்றமுறும் மனதையுடையவன்; வஞ்சகன் என்றுதானோ நீ பேசாமையாகிய மவுனநிலையினை அடைந்தது? என்க.




# ஸ்ரீ ராமகிருஷ்ணர்





ஸ்ரீ ராம கிருஷ்ண பரமஹம்சருடைய நூற்றாண்டு விழா இந்தியாவிலும் பிற நாடுகளிலும் சிறப்பாகக் கொண்டாடப்பட்டு வரும் செய்திகளை நேயர்கள் கவனித்திருக்கலாம். நலந் தேய்ந்து கொடுமை பெருகும் காலங்களில் பெரியோர்கள் தோன்றுகின்றனர். ஸ்ரீ கிருஷ்ண பகவான் "எப்பொழுது தருமங் குன்றி அதருமம் அபிவிருத்தியாகின்றதோ அப்பொழுது தருமத்தை நிலை நிறுத்துவதற்காகவும், அதருமத்தை அழிப்பதற்காகவும் நான் அவதரிக்கின்றேன்" என்று கீதையில் கூறியதாகவுள்ள நுட்பத்தை எல்லாரும் ஆழ்ந்து சிந்திக்க வேண்டும். இந்திய நாட்டில் எத்தனையோ மகான்கள் அவதரித்திருக்கின்றனர். இந்தியா ஞானிகளின் அடிச்சுவடுகள் நிறையப்பெற்றது. மேனாட்டு ஜட நாகரிகம் மேலோங்கி ஆன்மார்த்த நாகரிகம் நசிக்கத் தொடங்கிய காலத்தில் அவதரித்தவர் ஸ்ரீராம கிருஷ்ணர். நாஸ்திகம் மேலோங்கி ஆஸ்திகம் கீழ் நிலையில் இருக்கும் இக்காலத்தில் அவதரித்து நம்மிடையே ஞான ஒளி வீசி இலங்குபவர் மகாத்மா காந்தியடிகள் என்பது நமது கருத்து. ஸ்ரீராம கிருஷ்ணருடைய திருநாமத்தை உலகம் அறியச் செய்தவர் ஸ்ரீ விவேகானந்த ஸ்வாமிகள். ஸ்ரீராம கிருஷ்ணர் செய்துள்ள உபதேச மொழிகள் உலகமெங்கும் பொன்னேபோல் போற்றப்படுகின்றன. இவர் அத்துவைத தத்துவத்தைக் கடைப்பிடித்தவர். சகல வஸ்துக்களையும் கடவுள் மயமாகக் கண்டவர். விரிந்த மனப்பான்மை படைத்திருந்தவர். சாதி சமயவேற்றுமை கடந்த சமரச மெய்ஞ்ஞானி. எல்லாச் சமயங்களிலும் உண்மை உண்டு என்ற நம்பிக்கை கொண்டவர். "மனிதன் இரக்கச் சித்தத்தில் கிறிஸ்தவனாக

வும், வெளிபாவனைகளைக் கண்டிப்பாக அநுசரிப்பதில் முஸ்லிமாகவும், எல்லா உயிர்களிடத்திலும் அன்பு பூண்டொழுகுவதில் ஹிந்துவாக வும் இருக்கவேண்டும்" என்று ஸ்ரீராமகிருஷ்ணர் உபதேசம் செய்ததி லிருந்து அவருடைய சர்வசமய சமரச மனப்பான்மையை இனி துணர்ந்து கொள்ளலாம். சாஸ்திரங்கள் எல்லாம் காலதேச வர்த்த மானங்களை யொட்டி எழுந்தவை. எல்லாச் சாஸ்திரங்களும் எல்லாக்



பகவான் ஸ்ரீ ராமகிருஷ்ண பரமஹம்சர்.

காலங்கட்கும் சரிப்படமாட்டா. "பழையன கழிதலும் புதியன புகு தலும் வழுவல" என்ற இலக்கணத்தைச் சாஸ்திரவிதிகட்கும் மாட்டுதல் பொருத்தவதாகும். இக்காலத்தில் உள்ள ஒரு சில வைதி கர்கள் இவ்வுண்மையை ஓராமல் "பழயவை எல்லாம் நல்லவை, புதிய வை எல்லாம் தீயவை" என்ற பல்லவியைப் பாடிக்கொண்டிருக்கின்

றனர். இவ்விஷயத்தில் ஸ்ரீ ராமகிருஷ்ணருடைய திருவுள்ளப் பாங்கை நேயர்கள் ஊன்றிக் கவனிக்கவேண்டும். "மீன் சாப்பிடுகிறவர்கள் அந்த மீனுடைய உபயோகமற்ற தலையையும் வாலையும் விரும்புகிறதில்லை. ஆனால் அதன் சரீரத்தின் நடுவிலுள்ள மிருதுவான பாகத்தையே இச்சிக்கிறார்கள். இப்படியே, இக்காலத்திற்குதவாத விதிகளும் கொள்கைகளும் நம்முடைய சாஸ்திரங்களிலிருந்தால், நாம் அவற்றைக் களைந்து இக்காலத்திற்கேற்றவாறு செய்து கொள்ள வேண்டும்" என்று கூறியிருக்கிறார் மகான் ஸ்ரீ ராமகிருஷ்ணர். இதிலிருந்து அவருடைய விரிந்த மனப்பான்மையை நன்கு தெரிந்து கொள்ளலாம். எனவே இத்தகைய மகாத்மாவின் நூற்றாண்டு விழாவை உலகமெங்கும் கொண்டாட அவருடைய சிஷ்ய கோடிகள் ஏற்பாடு செய்தது மிகவும் போற்றத்தக்கதே ஆகும். இச்சமயத்தில் அவரது திவ்ய வரலாற்றைச் சுருக்கமாக நேயர்கட்கு நினைவூட்ட வேண்டும் என்று விரும்புகின்றோம்.

காமார்புகுர் என்பது வங்காளத்தில் ஹூக்ளி ஜில்லாவைச்சேர்ந்த ஒரு சிறிய கிராமம். இக்கிராமத்தில் ஒரே ஒரு பிராமணர் வீடு. இதில் க்ஷுதிராம சட்டோபாத்தியாயர் என்னும் அந்தணச் சிரேஷ்டர் தம்முடைய தரும பத்தினியான சந்திரமணி தேவியாருடன் இல்லறம் வழுவாது நடத்திவந்தார். க்ஷுதிராம சட்டோபாத்தியாயர் வறுமைத்துன்பத்தை அநுபவித்தாலும் ஆசார அநுஷ்டானங்களிலும் தெய்வ பக்தியிலும் சிறந்து விளங்கினர். இந்தப் பிராமணத்தம்பதிகள் அடிக்கடி க்ஷேத்திர யாத்திரை புரிவதுண்டு. ஒரு சமயம் இவர்கள் கயா என்ற நகருக்குச் சென்று அங்கு எழுந்தருளியிருக்கும் கதாதர மூர்த்தியைப் பிரார்த்தனை செய்துகொண்டு அங்குத் தங்கினர்கள். அப்போது சாக்ஷாத் பகவான் க்ஷுதிராம சட்டோபாத்தியாயர் கனவிலே தோன்றி "நான் உனக்குப்புத்திரனாக ஜனிக்கிறேன்" என்று கூறி மறைந்தருளினர். கனவு நனவாயிற்று. சந்திரமணி தேவியார் கருப்பம் தரித்தார். 1834-ம் ஆண்டு பிப்ரவரிமாதம் 20-ம் தேதி புதன்கிழமை நன்னாளில் ஒரு ஆண்மகவைப் பெற்றெடுத்தார். கதாதரன் என்ற திருநாமமே சூட்டப்பட்டது. குழந்தை மிக அருமையாக வளர்ந்தது. அதனிடம் பல திவ்யகுணங்கள் மிளிர்ந்தன. பெற்றோர் உரிய பருவத்தில் பிள்ளையைத் திண்ணைப் பள்ளிக்கு அனுப்பினர். கதாதரனுக்குத் தனது பள்ளிப் பாடங்களில் கருத்துப் பதியவில்லை. இராமாயணம்—பாரதம் முதலிய இதிகாசக் கதைகளைக் கேட்பதில்

விருப்பம் வளர்ந்தது. கதாதான் பக்திரசப் பாட்டுகளைப் பாடுவான். ஆடுவான். களிப்பான்.

கதாதான் சிறுவயதாயிருக்கும்போதே தந்தை இறந்தார். இவனுடைய மூத்த சகோதரர் ஏதேனும் ஒரு வேலை தேடிப்பார்க்கும் எண்ணத்துடன் கல்கத்தாவுக்கு வந்தார். அப்போது கதாதரனையும் கூடவே அழைத்து வந்தார். கல்கத்தாவுக்கு வடக்கே ஏழுமைல் தூரத்தில் தக்ஷிணேசுவரம் என்ற ஊர் இருக்கிறது. அங்கே ராணி ரஸமணி தேவியால் நிருமாணிக்கப்பட்ட பராசக்தி ஸ்ரீ காளி தேவாலயம் ஒன்று உண்டு. கதாதான் மூத்த சகோதாருக்கு அங்கே அர்ச்சகர் வேலை கிடைத்தது. கதாதானுக்கு கோவிலின் சாந்த வாழ்வு வருணனைக்கு அடங்காத ஒரு புத்துணர்வைக் கிளப்பியது. பக்தி சிரத்தையை வளர்த்தது. ஆன்மார்த்த வேட்கை மேலோங்கியது. இறுதியில் சகோதரர் வேலையைத் தானும் பார்க்க நேர்ந்தது. அன்னை மகாசக்தி ஸ்ரீ காளி தேவியிடம் கதாதர் மனம் லயித்து ஈடுபட்டது. இச்சமயத்தில்தான் கதாதர் ஸ்ரீ ராமகிருஷ்ணர் என்ற திருநாமம் பெற்றது.

ராமகிருஷ்ணருக்கு தெய்விக லஹரி மிதமிஞ்சிவிட்டது. நடந்தாலும், நின்றாலும், கிடந்தாலும் அவரிடம் அன்னை பராசக்தியின் நினைவே குடிகொண்டிருந்தது. பன்னிரண்டு ஆண்டுகளுக்குப் பிறகு அவர் உண்மையைக் கண்டார். ராமகிருஷ்ணரின் உற்றார் உறவினர் கோவிலதிகாரிகள் முதலியோர் அவரது ஞான வெறியை மாற்ற முயன்றனர். லௌகிகத்திற்குத் திருப்பவேண்டும் என்று முனைந்தனர். இதற்குக் கலியாணம் பண்ணிவிடுவதே தக்க உபாயம் என்ற முடிவுக்கு வந்தனர். கலியாணமும் நடந்தது. ஆனால், அதனால் அவரது மனம் சற்றும் மாறவில்லை. அது ஆன்மார்த்தத்திலேயே மூழ்கிக் கிடந்தது.

இருபத்தேழு ஆண்டுகட்குப் பிறகு, அதாவது 1863-ஆண்டில் கல்கத்தாவில் செல்வக்குடும்பத்தில் மற்றொரு குழந்தை பிறந்தது. இதற்கு நரேந்திரநாத தத்தன் என்ற பெயரிட்டது. நரேந்திரநாதர் ஆங்கிலக்கல்வி பயின்று நல்ல அறிவாற்றலுடன் விளங்கினார். சாதாரண ஆங்கிலக்கல்வி நரேந்திரரை வசியப்படுத்தவில்லை அவரது மனம் தத்துவ ஆராய்ச்சியை விரும்பியது எனவே தத்துவசாஸ்திரங்களைப் படிக்கத் தொடங்கினார். பலரிடம் தர்க்கித்தார். சந்தேகம் வந்துவிட்டது. "கடவுள் என்று ஒரு பொருள் உண்டா? இருக்கு

மானல் என்னால் அது அறியப்படுமா? எப்படி அறிவது?" என்பன போன்ற கேள்விகள் நரேந்திரரை வருத்தி வந்தன.

அக்காலத்தில் தக்ஷிணேசுவரத்திலுள்ள ஸ்ரீராமகிருஷ்ணருக்கு ஒரு ஆவல் தோன்றிக் கொண்டிருந்தது. அதாவது தமக்கு மிகவும் வேண்டியவர்களின் மூலம் உலகத்திற்கே ஞானச்சுடரைக் கொளுத்த வேண்டும் என்று ஆவல் கொண்டார். அதற்குத்தக்க சந்தர்ப்பம் கிடைக்கவில்லையே என்று தவித்தார். புலம்பினர். கடைசியில் அதாவது 1880-ம் ஆண்டில் உண்மைப் பக்தர்களான வாலிபரும் வயோதிகரும் அவருடைய திருவடி நிழலில் தங்கி திவ்யஞானம் பெற முயன்று கொண்டிருந்தனர். தக்ஷிணேசுவர முனிவரைப்பற்றி ஏற்கனவே நரேந்திரநாதர் ஏராளமான செய்திகளைக் கேள்விப்பட்டிருந்தார். ஒரு நாள் தக்ஷிணேசுவரம் சென்றார். மகான் ஸ்ரீராமகிருஷ்ணரைத் தரிசித்தார். அந்த முதல் சந்திப்பே மிகவும் விசேஷமானது. உடனே இருவரும் முன்பே பழகியவர் போல் கட்டித் தழுவிக்கொண்டனர். இந்த மனிதரைத்தான் ஸ்ரீராமகிருஷ்ணர் எதிர்பார்த்துக் கொண்டிருந்தது. இம் மனிதரே தமது திவ்ய சந்தேசத்தை உலகிற் பாப்பச் சிறந்த கருவியாக இருக்கக்கூடியவர். நரேந்திரநாதர் மாத்திரம் இல்லை—இன்னும் எத்தனையோ அறிஞர்கள்—பக்திமான்கள் ஸ்ரீராமகிருஷ்ணரிடம் வந்து கொண்டே இருந்தார்கள். அக்காலத்தில் வங்காளத்தில் மிகவும் பிரபலஸ்தர்களாய் விளங்கிய மஹரிஷி தேவேந்திரநாத தாகூர், கேசவ சந்திரசேனர், ஈசுவர சந்திரவித்தியாசாகரர், சிவநாத சாஸ்திரி, பிரதாப சந்திரமஜும்தார், பங்கிம் சந்திரசாட்டர்ஜி போன்றவர்கள் ஸ்ரீராமகிருஷ்ணரைத் தரிசித்துத் தங்கள் பக்தி சிரத்தைகட்கு ஆக்கம் தேடிக்கொண்டார்கள். அச்சமயம் தக்ஷிணேசுவரம் ஒரு சிறந்த யாத்திரை ஸ்தலமாகிவிட்டது. சமய உபதேசங்கட்கும்பக்திரசப் பாடல்களுக்கும் அது நிலைக்களமாய் விளங்கியது.

ஸ்ரீ ராம கிருஷ்ணர் உபதேசங்கள் எவை? அவை மிகவும் எளிதில் விளங்கக் கூடியவை. சாமானிய மக்களும் நன்கு உணர்ந்து கொள்ளுவார்கள். அவர் படிக்காதவரானாலும் உபதேசங்கள் எல்லாம் உண்மையானவை. ஆழ்ந்த பொருள் பொதிந்தவை என்பதில் ஐயம் இல்லை. "நம்புங்கள்; கடவுள் இருக்கிறார். அவரை உணர்ந்து அறியலாம். எல்லோரிடமும் குழந்தை மனம்போல் களங்கமற்ற உண்மை

மனங்கள் மிளிர வேண்டும். பெண்ணாசையும் பொன்னாசையும் ஒழிக்க வேண்டும். சத்தியம் ஒன்றே. எல்லாச் சமயங்களும் ஒன்றே. ஓரிடத்திற்குச் செல்லும் பலவேறு வழிகளாகும் இவை"

1886-ம் ஆண்டில் ஸ்ரீ ராமகிருஷ்ணர் பரிபூரணரானார். அவருக்குப் பிறகு அவருடைய சீடர்கள்—தங்கலந்துறந்த தியாக சீலர்கள் அவரது அரிய உபதேசங்களை உலகில் வெளிப்படுத்திக் கொண்டிருக்கிறார்கள். நரேந்திர நாததத்தர் அவருடைய சீடர்களில் தலை சிறந்து விளங்கினார். அவர் சந்நியாசியானவுடன் ஸ்வாமி விவேகானந்தர் என்ற புதுப் பெயர்—ஆச்சிரமப் பெயர் பெற்றார்.

1893-ம் ஆண்டில் அமெரிக்கா ஐக்கியமாகாணத்தைச் சேர்ந்த சிகாகோ நகரில் சர்வ சமய மகாநாடு கூடியது. ஸ்வாமி விவேகானந்தர் அங்கே சென்று உண்மை நாகரிக இந்தியாவின் தத்துவஞானச் சிறப்பை ஜடநாகரீக மேனாட்டினருக்கு எடுத்துரைத்தார். இவருடைய ஞான கர்ஜனைகள் மேனாட்டு அறிஞரைத் திடுக்கிடும்படிச் செய்தன எனல் மிகையாகாது. அந்தக்காலம் முதற்கொண்டுதான் மேனாட்டினர் கீழ்த்திசையிலிருந்து ஆன்மார்த்த உண்மைகளை அறிந்துகொள்ள முயன்றனர். ஸ்ரீராமகிருஷ்ணரைப்பற்றியும் அவருடைய உபதேசங்களைப் பற்றியும் மேல் நாட்டாருக்கு அறிவித்தவர் ஸ்ரீவிவேகானந்தரே. ஸ்ரீராமகிருஷ்ண மடங் கண்டவரும் அவரே. இவர் 1902-ம் ஆண்டில் முக்தி அடைந்தார். இவரால் நிறுவப்பட்ட ஸ்ரீராமகிருஷ்ண மடம் இந்தியாவிலும் பிறநாடுகளிலும் அற்புதத்தொண்டாற்றி வருகிற உண்மையை எல்லாரும் நன்கு அறிவார்கள். சமய அறிவு, சமூக முன்னேற்றம், கஷ்ட நிவாரணம் முதலிய துறைகளில் ஸ்ரீராமகிருஷ்ண மடத்தார் விசேஷமாகக் கருத்தைச் செலுத்திவருகிறார்கள்.

ஸ்ரீராமகிருஷ்ணர் நூற்றாண்டு விழா புதிய இந்திய சரித்திரத்தில் ஒரு முக்கியமான சம்பவமாகும். இந்த விழா இந்தியா, அமெரிக்கா, ஐரோப்பா நாடுகளில் சிறப்பாக நடைபெற்றுக் கொண்டிருக்கின்றன. ஸ்ரீராமகிருஷ்ணரும் ஸ்ரீவேகானந்தரும் காட்டியுள்ள வழியை எல்லாரும் உண்மை உணர்ச்சியுடன் கடைப்பிடிக்க வேண்டும் என்று நாம் வற்புறுத்த விரும்புகின்றோம்.

ஓம் தத் ஸத்.

---

## திரு. குப்புசாமியின் மறைவு

"ஆனந்தபோதினி" உரிமையாளர் ஸ்ரீமான் நாகவேடு. முனிசாமி முதலியாரவர்களின் மூத்த திருமகனார் செல்வர் என். எம். குப்புசாமி என அழைக்கப்படும் செல்வாங்கன் என்னும் வாலிபத் தோன்றல் தமது 21-வது வயதில் இவ்வுலக வாழ்வை நீத்தார் என்ற துயரச் செய்தியை மிகவும் வருத்தத்துடன் தெரிவித்துக்கொள்ளுகின்றோம். 10-12-15ம் ஆண்டில் பிறந்தார். 29-2 36ம் ஆண்டில் மறைந்தார். இவரைப் பீடித்த டைபாய்டு சுரம் இவரது ஆருயிரைக் கொள்ளை கொள்ளுமென்று யாரும் எதிர்பார்க்கவே இல்லை. செல்வர் குப்புசாமி நற்குண நற்செய்கைகள் வாய்ந்தவர். இண்டர்மீடியட் வரை பயின்றவர். எல்லாரிடமும் மேதை மரியாதையுடன் விநயமாய் நடந்து கொள்ளும் இயல்புடையவர். ஸ்ரீமான் முதலியாரவர்கள் எல்லாப் பொறுப்பையும் மகனிடம் ஒப்படைத்து ஓய்வு பெற்று இன்புறலாம் என்று எண்ணி மகிழ்ந்து கொண்டிருந்த நிலையில் அவரது எதிர்பாராப் பிரிவு பெரிய ஏமாற்றத்தை உண்டாக்கி விட்டது. இயற்கையை யாரே வெல்லவல்லார்? இவரது ஆன்மா சாந்தி அடைவதாக.



திரு. என். எம். குப்புசாமி.

## அநுதாபிகளுக்கு நன்றியறிதல்

எனது அருமை மூத்தமகன் திருவாளன் என். எம். குப்புசாமி தனது 21-வது வயதில் இவ்வுலக வாழ்வை நீத்த துன்பச் செய்தியை அறிந்து எனக்குப் பல ஆறுதல் மொழிகளும், அநுதாபங்களும் தெரிவித்த நண்பர்கட்கு மனமார்ந்த நன்றியறிதலைத் தெரிவித்துக்கொள்ளுகின்றேன். ஏராளமான வெளியூர் நண்பர்கள் தங்கள் தங்கள் அநுதாபங்களைத் தெரிவித்துக்கொண்டு வருகின்றனர். இவர்கள் எல்லாருக்கும் தனித் தனியே நன்றியறிதல் கடிதம் எழுத இந்நிலையில் அசக்தனாயிருக்கிறபடியால் "ஆனந்தன்" மூலம் நன்றியைத் தெரிவித்துக் கொள்ளுகிறேன்.

நா. முனிசாமி முதலியார்.




# பிரம சூத்திரம்.

(சித்தூர் பண்டித-பூ. ஸ்ரீநிவாசன்)

(574-ம் பக்கத் தொடர்ச்சி.)

## 3-வது. ஸங்க்யோப யங்க்ரகாதி கரணம்

11-வது. சூத்திரம். அவதாரிகை:—சாங்கிய நூல்கள் கூறும் இருபத்தைந்து தத்துவங்களும் வேதசம்மதமானவையே என்று சாங்கியர்கள் வாதிக்கின்றனர். அந்த இருபத்தைந்து தத்துவங்களும் வேதசம்பந்தமானவையல்ல என்பது வேதாந்திகளின் வாதம். தாங்கள் சொல்வது சரி என்பதற்கு ஆதாரமாகச் சாங்கியர்கள் பின்வரும் சுருதி வாக்கியத்தைக் காட்டுகின்றார்கள். அதாவது,

"யஸ்மிந் பஞ்ச பஞ்சஜநா ஆகாசச்ச ப்ரதிஷ்டித꞉ | தமேவ
மந்ய ஆத்மாநம் வித்வாந் ப்ரஹ்மாம்ருதோ ம்ருதம்."

என்பதாம். இவ்வாக்கியத்திற்கு அவர்கள் கூறும் அர்த்தம்: "எந்தப் பிரதானத்தினிடத்தில் ஒளிவடிவினனான புருஷன்கூடி 25-தத்துவங்கள் ஆதாரமாகக் கொண்டிருக்கின்றனவோ, அவற்றினிடத்து வியாபகனாயுள்ள புருஷனை எவன் தெரிந்து கொள்ளுகின்றானோ அவன் அமிர்தனாகி மோக்ஷத்தையடைகின்றான்" என்பதாம்.

அவர்களின் இந்த வாதம் கண்டிக்கப்படுகின்றது.

சூ. 11. "நசங்க்யோ பஸங்க்ராஹாதபி நாநா பாவாததிரேகாச்ச"

பதவுரை:—ஸங்க்யோபஸங்க்ர ஹாதபி = இருபத்தைந்து என்னும் தொகையைக் குறிப்பிடுவதாகச் சுருதியில் காணப்பட்டாலும், ந=சாங்கிய மதம் வைதிகமல்ல. ஏனெனில், நாநாபாவாத்=ஐந்து ஐந்துகளாக இல்லாமல் விடுபட்டிருத்தலாலும், அதிரேகாத்=அவற்றினும் வேறாக இரண்டு பதார்த்தங்கள் இருப்பதாக அந்தச் சுருதிவாக்கியம் கூறுவதாலும்.

கருத்து:—மேலே காட்டிய சுருதி வாக்கியத்திலுள்ள 'பஞ்ச பஞ்ச' என்பதற்கு ஐந்து ஐந்துகள் 5+5) என்பது சாங்கியர்களின் அபிப்பிராயம். அது சரியல்ல. இந்த அர்த்தத்தை அங்கீகரித்தாலும் நான்கு ஐந்துகள் சரியாயிருக்கின்றன. மற்றவை தனித் தனியாக இருக்கின்றன. அதாவது: சாங்கிய நூல்களில் கூறப்பட்டுள்ள

| | | |
|---|---|---|
| (1) | பிரதானம் | ... 1 |
| (2) | மகத்தத்துவம் | ... 1 |

(அந்தக்கரணம்)

| | | |
|---|---|---|
| (3) | அகங்காரம் | ... 1 |
| (4) | சூக்ஷ்ம தன்மாத்திரைகள் | ... 5 |
| (5) | ஸ்தூல தன்மாத்திரைகள் | ... 5 |
| (6) | ஞானேந்திரியங்கள் | ... 5 |
| (7) | கர்மேந்திரியங்கள் | ... 5 |
| (8) | மனம் | ... 1 |
| (9) | புருஷன் | ... 1 |
| | | 25 |

இருபத்தைந்து தத்துவங்களில் ஐந்து கொண்ட தொகையாக வருபவை நான்கு ஐந்தக்களே. மற்ற ஐந்தும் தனித்தனி வெவ்வேறாகக் கூறப்படுபவை. ஆகையால் சுருதி வாக்கியத்தில் குறிக்கப்பட்டவை சாங்கிய மத தத்துவங்கள் அல்ல. அன்றியும், இந்த வாக்கியம் 'அஸ்மிந்,' 'ஆகாசः' என்னும் பதங்களால் ஆத்மாவையும் ஆகாசத்தையும் குறிக்கின்றதே. இவ்விரண்டையும் சேர்த்தால் 27 தத்துவங்கள் ஆகின்றனவே. சாங்கியர்களின் தத்துவங்கள் 25 தானே. மேல் இரண்டு தத்துவங்களுக்கு அவர்கள் என்ன வழி சொல்வார்கள் ? ஆகையால் இந்த வாக்கியத்தைக் காட்டுவது சாங்கியர்களுக்கு ஒரு நன்மையும் உண்டாக்காது. ஆகையால் சாங்கியமதம் வைதிகமானதல்ல.

மேற்கண்ட வாக்கியத்திற்குச் சாங்கியர்கள் கொள்ளும் அர்த்தம் சரியன்று. ஆயின் அதன் அர்த்தம் என்னவெனில் "எந்தப் பரமாத்மாவினிடத்தில் பஞ்சஜன என்று அழைக்கப்படும் ஐந்து பதார்த்தங்களும் ஆகாசமும் பொருந்தியிருக்கின்றனவோ அந்த அமிர்தமயமாகிய பிரம்மத்தை ஆத்ம சொருபமாக நான் அறிந்துகொண்டு ஜீவன் முக்தனானேன்" என்பதே அவ்வாக்கியத்தின் அர்த்தமாம்.

12-வது. சூத்திரம். அவதாரிகை:—"பஞ்ச பஞ்ச" என்பதற்கு ஐந்து ஐந்துகள் என்னும் அர்த்தம் சரியல்லவென்றால் அதன் அர்த்தந்தான் என்ன ? என்னும் வினாவிற்கு விடை கொடுக்கப்படுகிறது.

சூ. 12. "ப்ராணாதயோ வாக்ய சேஷாத்"

பதவுரை:—வாக்ய சேஷாத்=இந்த வாக்கியத்திற்குப் பின்னால் உள்ள வாக்கியத்தினால், பிராணாதயः=பிராணாதி பஞ்சகம் (பஞ்சஜன என்னும் பதத்தால் குறிக்கப்படுகிறது.)

கருத்து:—பஞ்சஜன என்னும் பதத்திற்கு இங்கு பிராணாதி பஞ்சகம் என்பதே பொருள். பிராணாதி பஞ்சகம் எவையெனின்: பிராணம் 1. சக்ஷுஸ் 2. சுரோத்திரம் 3. அன்னம் 4. மனம் 5. என்பனவாம்.

"ப்ராணஸ்ய ப்ராணமுத சக்ஷுஷச்சக்ஷு:—உத ச்ரோத்ரஸ்ய
ச்ரோத்ர மந்நஸ்யாந்நம் மநஸோயே மநோவிது:"

என்னும் சுருதி வாக்கியமே இதற்குப் பிரமாணமாம்.

13-வது சூத்திரம். அவதாரிகை:—இந்த அர்த்த விஷயமாக சாங்கியர் ஓர் ஆக்ஷேபம் செய்கின்றனர். அதாவது:—"காண்வர் என்னும் ஒரு வகுப்பார் கொண்டிருக்கிறபடி பார்த்தால் இந்த வாக்கியத்தில் 'அந்நஸ்யாந்நம்' என்னும் பதங்கள் இந்தச் சுருதி வாக்கியத்தில் காணப்படவில்லையே! நான்கு பதார்த்தங்களே கூறப்பட்டிருக்கின்றன. அங்ஙனமாக 'பஞ்சஜன' என்பதற்கு பிராணாதி பஞ்சகம் எனப் பொருள் கூறுவது எவ்வாறு பொருந்தும்?" என்பதாம். இந்த ஆக்ஷேபத்திற்குச் சமாதானம் சொல்லப்படுகிறது.

சூ. 13. ஜ்யோதிஷைகேஷாமஸத்யந்நே.

பதவுரை:—ஏகேஷாம்=காண்வ பகுப்பினர்க்கு, அந்நே=அன்னம், அஸதி=இல்லாமற் போனாலும், ஜ்யோதிஷா=ஜோதிப் பொருளோடு, (பூர்யதே=ஐந்தாவது பொருள் சேர்த்து எண்ணப்படுகிறது.)

கருத்து=காண்வர் கொள்ளுகிறபடி அன்னமொழிய மற்றைய நான்கு பதார்த்தங்களே கூறப்படினும் இந்த வாக்கியத்திற்கு முந்திய வாக்கியத்தில் குறிக்கப்பட்டுள்ள 'ஜ்யோதிஷா' என்னும் பதத்தால் சூரியன் என்னும் பொருள் கொள்ளப்படுவதால் ஐந்து பொருள்களே கொள்ளப்படும் என்றறிக.

## 4-வது காரணத்வாதி கரணம்

14-வது. சூத்திரம். அவதாரிகை:—சிருஷ்டி சம்பந்தமாக வேதவாக்கியங்களில் ஒன்றற்கொன்று ஒற்றுமையில்லை. வேறுபட்ட அபிப்பிராயங்கள் காணப்படுகின்றன. பிரம்ம விஷயத்திலும் அப்படியே வேதாந்த வாக்கியங்களில் ஒன்றுபட்ட அபிப்பிராயமில்லை. அவற்றைக் கீழே காட்டுவோம்.

வாக்கியங்கள்.

(1) "ஆத்மந ஆகாசஸ்ஸம்பூதః=ஆத்மாவினின்று ஆகாச முதலிய பிரபஞ்ச மெல்லாம் உற்பத்தியாயின.

(2) "ஸதேவஸோம்யேத மக்ர ஆஸீத்-ஏகமேவாத் விதீயம்—ததைக்ஷத பஹுஸ்ஸ்யாம் ப்ரஜாயேயேதி-தத்தேஜோஸ்ருஜத"=சஜாதீய விஜாதீய சுவகதபேத மற்ற சத்பதார்த்தமே தேஜஸ்முதலாகிய பூதங்களைச் சிருஷ்டித்தது.

(3) "ஸப்ராண மஸ்ருஜத—ப்ராணாச்ச்ரத்தாம்"=அந்த பரமாத்மா பிராணனைச் சிருஷ்டித்தது, பிராணத்தினின்று சிரத்தை யுண்டாக்கிற்று. (இங்கு ஆகாசம் முதலிய பூதங்களின் சிருஷ்டி கூறப்படவில்லை.)

(4) "ஆத்மாவா இதமேக ஏவாக்ர ஆஸீத்-நாந்யத்கிஞ்சந மிஷத்—ஸ இமாந்லோகா நஸ்ருஜத"=ஆத்மாவே முதலில் இருந்தது. அதுவே இவ்வுலகங்களைச் சிருஷ்டித்தது. (இதனால் ஒரு முறையே உலகங்கள் தோன்றினதாகத் தெரிகின்றது.)

(5) "அஸத்வா இதமக்ர ஆஸீத்-ததோவைஸத ஜாயத"=முதலில் அசத்தே இருந்தது. அதினின்று சத்து தோன்றிற்று. (இங்கு அசத்பூர்வகமான சிருஷ்டி சொல்லப்பட்டது. இதில் 'அசத்' என்பதற்கு இந்திரியங்களுக் கெட்டாத அவ்யாக்ருதம் என்பது பொருள்.)

(6) "அஸதே வேதமக்ர ஆஸீத்—தத்ஸதாஸீத்—தத்ஸத்ய மப வத்"= அசத்தே முதலில் இருந்தது. அது சத்தாக (ஸ்தூல பிரபஞ்சமாக) ஆயிற்று. அந்த ஸ்தூல பிரபஞ்சம் 'சத்' சப்தார்த்தமான பிருதிவி அப்பு தேஜஸ் வடிவமாகவும் 'த்யம்' சப்தார்த்தமான வாயு ஆகாச வடிவமாகவும் விளங்கிற்று. (இங்கும் அசத்பூர்வகமான சிருஷ்டியே கூறப்பட்டது.)

(7) "கதமட்தஸ் ஸஞ்ஞாயேத—ஸதேவஸோம்யேத மக்ர ஆஸீத்"= இந்தப் பிரம்மம் முதலில் சத்தாகவே யிருந்தது. அசத்தினின்று சத்து எப்படி யுண்டாகும்? (இதில் அசத்வாதம் நிராகரிக்கப்பட்டு சத்பூர்வகமாகிய முறை போதிக்கப்பட்டது.)

(8) "தத்தேசம் தர்ஹ்ய வ்யாக்ருத மாஸீத்—தந்நாம ரூபாப்யாம் வ்யாக்ரியதே"=இந்த ஸ்தூல பிரபஞ்சம் சிருஷ்டிக்கு முன்பு அவ்யாக்ருத மென்னும் நாமரூபங்களை யுடையதாக இருந்த தல்லவா? (இதில் தற்செயலாகிய (தனக்குத்தானே உண்டானதாக) சிருஷ்டி கூறப்பட்டது.)

இவ்வாறு ஓரிடத்தில் ஆகாச சிருஷ்டியும், ஓரிடத்தில் பிராண சிருஷ்டியும், மற்றோரிடத்தில் சமஸ்த உலகங்களின் சிருஷ்டியும் கூறப்பட்டிருக்கின்றன. மேலும் சிருஷ்டி அசத் பூர்வகமென்று ஓரிடத்திலும், சத்பூர்வகமென்று ஓரிடத்திலும், தனக்குத்தானே உண்டாயிற்றென்று மற்றோரிடத்திலும் கூறப்பட்டிருக்கிறது. இங்ஙனமாக, பிரதானம் ஜகத்காரணமல்ல என்றும், பிரம்மமே ஜகத்காரணமென்று எல்லா சுருதிகளும் ஒரேவிதமாகக் கூறுகின்றன என்றும் வேதாந்திகள் கூறுவது எவ்வாறு பொருந்தும்?" என்பது சாங்கியர்களின் வாதம். இந்த வாதம் இங்கு கண்டிக்கப்படுகின்றது.

சூ. 14. "காரணத்வேந சாகாசாதிஷு யதாவ்ய பதிஷ்டோக்தே".

பதவுரை:—ஆகாசாதிஷு=ஆகாசம் முதலிய பூதங்களின் சிருஷ்டியில், காரணத்வேந=காரணமா யிருப்பதாக, யதா=எந்த லக்ஷணமுடைய வஸ்து சொல்லப்பட்டதோ, ததா=அந்த லக்ஷணங்களையுடைய வஸ்துவே, வ்யபதிஷ்டோக்தே:=பிராணம் முதலியவற்றின் சிருஷ்டியிலும் காரணமாகச் சொல்லப்படுதலால் (சாங்கியர்களின் வாதம் சரியன்று.)

கருத்து:—சர்வஞ்ஞத்தும், சர்வேசுவரத்துவம், சர்வாத்மகத்துவம், அத்விதியத்துவம் முதலிய லக்ஷணங்களையுடைய எந்த வஸ்து ஆகாசம் முதலிய பூதங்களின் சிருஷடிக்குக் காரணமென்று தைத்திரீயோப நிஷத்து கூறுகின்றதோ அந்த லக்ஷணங்களையுடைய வஸ்துவே தேஜஸ்பிராணன் முதலியவற்றின் சிருஷ்டிக்குக் காரணம் என்று மற்ற சுருதிகளும் சொல்லுகின்றன. ஆதலால் சுருதிகளுக்கு ஒற்றுமையில்லை என்று சொல்வதற்கு இடமில்லை.

காரியமாகவுள்ள வஸ்துக்கள் விஷயமாக பேதம் இருப்பதாகக் காணப்பட்டாலும், அவற்றிற்குக் காரணமாகவுள்ள வஸ்துவின் விஷயமாக அவ்வித பேதம் இல்லை. எல்லா சுருதிகளும் பிரம்மசொரூபத்தை நிரூபணம் செய்வதற்காகப் பிரவர்த்தித்தனவே யல்லாமல் சிருஷ்டி நிரூபணத்திற்காக வல்ல. ஆகையால், சிருஷ்டியைக் கூறும் வாக்கியங்களில் ஒவ்வோரிடத்தில் பேத மிருந்தாலும், அது பிரம்மமே காரண மென்பதற்குச் சந்தேகத்தை யுண்டாக்காது. சிருஷ்டியைக் கூறுவதன் பயன் அதன் பரம காரணத்

தைப் போதிப்பதே யாகும். பிரம்மஞானத்திற்கு சுருதிகள் சொல்லுதலே யன்றி சிருஷ்டி ஞானத்திற்கு அவை பலன் சொல்லவில்லை.

ஆகவே, இதனால் சிருஷ்டிகளெல்லாம் சேதனத்தின் காரியமே யென்றும், இந்த விஷயத்தில் வேதாந்த வாக்கியங்கள் எல்லாம் ஒரே விதமாகக் கூறுகின்றதென்றும் விளங்குகின்ற தல்லவா?

15-வது சூத்திரம். அவதாரிகை:—சிருஷ்டிக்குச் சில விடங்களில் சத்து காரணமெனவும், வேறு சில விடங்களில் அசத்து காரணம் எனவும் ஒன்றற்கொன்று பேதமாக என் சுருதிகள் சொல்லுகின்றன என்பதற்குச் சமாதானம் சொல்லப்படுகின்றது.

### சூ. 15. "ஸமாகர்ஷாத்"

பதவுரை:—ஸமாகர்ஷாத்=சுருதிகளில் காணப்படும் 'அசத்' என்னும் பதம் இங்கு அவிகார பிரம்மத்தைக் காட்டுவதால் (அது சூன்யபரமோ அல்லது பிரதான பரமோ அல்ல. ஆதலின், காரணவேற்றுமை இல்லை.)

கருத்து:—"அஸத்வா இதமக்ர ஆஸீத்" என்னும் தைத்திரீய உபநிஷத் வாக்கியத்தில் உள்ள 'அஸத்' என்னும் பதம் மூந்தய வாக்கியத்தை யொட்டிப் பார்க்குமிடத்து அவிகார பிரம்மத்தைக் குறிக்கின்றதென்பது விளங்கும். ஆகலின், இங்கு அசத் என்னும் பதம் சூனியத்தைக் குறிப்பதல்ல வென்று அறிக. "அஸந்நேவஸபவதி | அஸத் ப்ரஹ்மேதி வேதசேத்—அஸ்தி ப்ரஹ்மேதி சேத்வேத | ஸந்தமே நந்ததோவிது:" (பிரம்மம் சூனியம் என்று எவன் தெரிந்து கொள்ளுகின்றானோ அவன் சூனியனே யாகின்றான்; பிரம்மம் இருக்கிறது என்று தெரிந்து கொண்டவனை நித்தியனென்று அறிகிறார்கள். இதனால் சூனியவாதம் நிராகரிக்கப்படுகிறது. "ஸோகாமயத........தத்ஸத்ய மித்யாசக்ஷதே" (அவன் சங்கற்பித்தான்......அவனைச் சத்யமாகக் கூறுகின்றார்கள்) என்னும் மற்றொரு வாக்கியம் பிரதான பரவாதத்தை நிராகரிக்கின்றது. ஆகையால், காரணத்தில் பேத மிருக்கிறது என்னும் தோஷம் சுருதிகளுக்கு சம்பவிக்கவில்லை. பரமாத்மாவே பரம காரணமென்று எல்லா சுருதிகளிலும் சொல்லப்படுகின்றது.



# மஹாத்மா மணிமொழி

(S. கணேசன்.)

ஜனஊழியன் எச்சிறப்பையும் ஏற்றுக்கொள்ளலாகாது. அவன் தனக்குள்ள எல்லாவற்றையும் மக்களிடம் ஒப்புவித்தவன். சேவையைச் சமத்தொண்டாகக் கொண்டோன், பிறர் பூசனையைக் காமுறான். காமுறுவனேல் அவன் அன்றே ஒழிந்தான்.

* * * *

பிழை செய்வதே அவமானம்; அதற்குச் சிறை செல்வது அவமானமன்று.

* * * *

உண்மையைக் கொன்று பெறும் சுய ராஜ்யத்தால் பயனில்லை. உண்மையைக் கோறல் நாட்டின் அழிவிற்குக் கால் கொள்வதாகும்.

* * * *

உண்மையும் அஹிம்சையுமே என்னால் விரும்பப்படுவன. தெய்விகத்தை நான் விரும்பவில்லை.

* * * *

ஏழை உயிர்களைக் காக்கவும், கோயில்களைச் தூய்மைப்படுத்தவும், தெய்வத் திருவருள் கொழிக்கும் ஆற்றல் வாய்ந்த ஆண்மகனோ பெண்களோ இவ்வுலகில் தோன்றவேண்டுமென்று நான் தவங்கிடக்கிறேன்.

* * * *

அஹிம்சை நம்மைக் கோழைகளாக்கவில்லை என்பதும், அவ்வறத்தை விடுத்ததே நமது கோழைமைக்குக் காரணம் என்பதும் எனது கொள்கை.

* * * *

நான் தாக்கிவருவது ஆட்சி முறையையே. ஆங்கில மக்களுடன் எனக்குச் சண்டையில்லை.

* * * *

அஹிம்சைக்கு ஆண்மை தேவை. அதுவே வீரத்திற் சிறந்த வீரரின் அறம்.

* * * *

இறக்க அஞ்சுகிறவன் மகாவீரரையோ, புத்தரையோ, வேதங்களையோ பின்பற்றுபவனல்லன். மகாவீரரும் புத்தரும் போர் வீரர்கள். டால்ஸ்டாயும் அவ்வினத்தவரே.

* * * *

தீமையை மூர்க்க சக்தியில் வெல்ல நமக்கு உரிமையில்லை. தீமையினின்றும் நாம் விலகித் தீமையை எதிர்க்கவேண்டும். ஒருவன் தனது கொடுமையுணர்ந்து கழி விரக்கங் கொள்வானாயின் அவனை அன்பால் ஏற்றுக்கொள்ள வேண்டும். பிறரைத் தாக்குந்தாக்கிலும் அன்பிருத்தல் வேண்டும்.

ஆங்கிலேயர்க்கும் இந்தியர்க்கும் இடையில் மனக்கசப்புறத்தாத அமைதியும் தூய்மையுங்கொண்ட முறையில் நியாயம் பெறவேண்டும்.

* * * *

ஹிம்சையிலும் அஹிம்சையே விழுமியது. தண்டித்தலினும் மன்னித்தல் ஆண்டகைமை. மன்னிப்பு வீரனை அணிசெய்கிறது. தண்டிக்கும் அதிகாரம் உள்ளபோது மன்னிப்பதே மன்னிப்பதாகும்.

* * * *

நான் கனவு காண்பவ னல்லன். அஹிம்சா தர்மம், ரிஷிகளுக்கும் மகாத்மாக்களுக்கும் மட்டும் உரியதன்று. அஃது எல்லாச் சாதாரண மக்களுக்கும் உரியது.

* * * *

காலங்காலமாக இந்தியா பலாத்காரத்துக்கு மாறுபட்ட பயிற்சியே பெற்றிருக்கிறது. ஹிம்சையைப் பார்க்கிலும் அஹிம்சையே இயற்கைக்குணமாகப் பெரும்பான்மையோர் கொண்டொழுகுமாறு இந்தியாவில் மக்கள் நிலை ஓங்கி நிற்கிறது.

* * * *

அஹிம்சை என்பது எல்லா உயிர்களிடத்தும் இரக்கங்கொள்வது எளிமைக்கும், விலைக்குறைவிற்கும், சுகாதாரத்திற்கும் உரியகாட்டு உடையை விலக்குவது சிறந்த தேசியப்பாவம்.

* * * *

உடலுக்குப் பழைய மலம் எத்தன்மைத்தோ அத்தன்மைத்து இந்தியாவிற்கு அன்னியத்துணி.

* * * *

ஹிந்து முஸ்லீம் ஒற்றுமை, கதர், தீண்டாமை விலக்கு இம் மூன்றும் என்னுடைய சுயராஜ்ஜியத்தின் கடைக்கால்கள்.

* * * *

நமது தேசத்தாருள் இழிந்தவரெனப்படுவோரும் உரிமை பெறுவதே யான் சுயராஜ்யம் என்பதற்குக் கொண்டபொருள்.

* * * *

அஹிம்சை என்பது, முற்றும் மாசின்மியிருத்தல். பூரண அஹிம்சை என்பது, உலகிலுள்ள எல்லாரிடத்தும் - விஷமுள்ள பூச்சி, விலங்குகளிடத்தும் பகைமை கொள்ளாமை.

* * * *

சத்தியாக்கிரகம் தன்னலத்துக்காகக் கொள்ளல் கூடாது. அதைப் பிறர் நலத்துக்கே கொள்ளல் வேண்டும். சத்தியாக்கிரஹி, துன்பம் பொறுத்தலுக்கும் பொருள் நட்டத்துக்கும் எப்பொழுதுஞ் சித்தமாயிருத்தல் வேண்டும்.

* * * *

தீய அரசாட்சியில் வெளியே இருத்தல், அவ்வாட்சிக்கு உடன்பட்டு, வாழ்வதாகும்.

* * * *

சத்தியத்தினுஞ் சிறந்த சமயம் ஒன்றில்லை என்பது என் பிறழாத உறுதி.




# ஔவையார்



(ஸ்ரீமதி. பண்டிதை-அசலாம்பிகை அம்மையார்.)

"தெய்வமிகழேல்" என்பது அடுத்த நீதி. இது எல்லா நீதிகளுக்கும் தலையாயது. குரு உபதேசம் என்றும் கூறலாம். இளைஞர்கட்கு இதனைக் கூறியதாகக் கொள்ளமுடியாது. கள்ளமற்ற உள்ளமுடைய பாலர்களுக்குத் தெய்வத்தை இகழும் மனோநிலை எவ்வாறு தோன்றும்? உலகியலறிவு வந்தவர்கள் என்று மதிக்கத்தக்கவர்களிடத்திலும், கல்வி கற்றோமென்ற மனப்பான்மை உடையவர்களிடத்திலும் தெய்வ பக்தியுடையவர்களெனத் தோற்றும் அறிகுறிகள் உடையவர்களிடத்திலும்தான் இட்ட பயிரை அழிக்க இடாதெழும் களை போல மேலே எடுத்துக் காட்டிய தெய்வம் இகழும் குணம் இயல்பாயெழுகின்றது. பெரும்பாலும் அறிவு நூல்களைக் கல்லாமல் உலக நூல்களைக் கற்றவர்களிடமே இச் சிறுமைக் குணம் கால் கொள்ளுகின்றதென்பது கண்கூடு. குளிக்கப்போய்ச் சேற்றைப் பூசிக் கொள்வோர் போல ஆஸ்திகத்தை வளர்க்கப் பல கடவுள் இருப்பதாகக் கொண்டு தாம்போற்றாத ஒருசமயத்தை இகழ்ந்து தமது பக்தியையே தம்மையு மறியாமல் அழித்துக் கொள்ளுகின்றனர்; இம்மை மறுமை இரண்டையும் கெடுத்துக் கொள்ளுவோர் இக்குழுவினரே யாவர்.

"பொன்னொன்று பணி பல" என்பதை அழகாக எடுத்துப் பலருக்கும் போதிக்கும் நாவன்மை யுடையவர்களே அந்தரங்கத்தில் தெய்வம் ஒருவனே யென்கிற திடம் இல்லாதவர்களாயிருப்பதைக் காண்கின்றோம். இது பழவினைப் பயன் என்று கொள்ளல் வேண்டும் அன்றிப் பிறிதென்புகல்வது? இதற்குதாரணமாக ஸ்ரீ பகவான் இராமகிருஷ்ண பரமஹம்சர் அருளிய கதை யொன்றுண்டு. அது வருமாறு:—

ஒருகாலத்தில் ஒருவன் மூடப்பிடிவாதத்தால் சிவனை மாத்திரம் உபாசித்து இதர தெய்வங்களெல்லாவற்றையும் வெறுத்துக்கொண்டிருந்தான். அப்படி யிருக்கும்போது ஒருநாள் சிவபெருமான் அவன் முன்தோன்றி "நீ இதர தேவதைகளை வெறுத்துக்கொண்டிருக்கிறவரையில் உன்மீது எனக்கு ஒருபொழுதும் திருப்தியுண்டாகாது" என்று கூறினர். அதன் பிறகும் அவன் தனது மூடக் கொள்கையை விடவில்லை. சில தினங்கள் சென்ற பின்னர் சிவபெருமான் எல்லாத் தெய்வங்களும் ஒன்றே யென்பதை அவனுக்குத் தெரிவிப்பதற்காக ஒருபாதி சிவனாகவும் ஒரு பாதி விஷ்ணுவாகவும் தோற்றும் ஹரிஹர வடிவங் கொண்டு மறுபடியும் அவனெதிரில் தோன்றினர். அப்போது அம்மனிதன் சிவ வடிவத்தில் சந்தோஷமும் விஷ்ணு வடிவத்தில்

அதிருப்தியும் கொண்டு சிவவடிவத்திற்கு முன்னே நைவேத்தியங்களை வைத்துப் பூஜை புரிந்தான். சிவபெருமான் அதைக் கண்டு அவனை நோக்கி "நீ இந்த மூடப்பிடிவாதத்தால் துன்பப்படுவாய்! எல்லாத் தேவர்களும் தேவிகளும் ஒரே வஸ்துவின் பலவிதத் தன்மைகளாம் என்பதை உனக்குணர்த்தும் பொருட்டே நான் இந்தத் துவைதத்தன்மையை அடைந்து உன்னெதிரில் தோன்றினேன். அவ்வாறு செய்தும் நீ உண்மையை உணர்ந்துகொள்ளவில்லை. இனி உன்னுடைய மூடத்தனத்தால் உனக்கு வருவதை நீ தெரிந்துகொள்வாய்" என்று கூறி மறைந்தார்.

அதன்மேலும் அவன் விஷ்ணு துவேஷத்தை விடாமல் அவருடைய பெயரையும் காதினால் கேட்கக் கூடாதென்கிற பிடிவாதம் கொண்டு ஒரு கிராமத்தில் வசித்துவந்தான். அப்படித் தங்கியிருக்கும் காலத்தில் யாரேனும் ஒருவர் அவனுடைய காதிற் கேட்கும்படி நாராயணன் என்று சொல்லிவிட்டால் அவன் அவர்களைத் திட்டி அடித்துத் துரத்தும் வழக்கத்தை மேற்கொண்டான். ஒரு விஷயத்தில் அதிகமாகப் புத்தியைச் செலுத்தி சதா சர்வகாலமும் அதே ஞாபகமாய் பிதற்றிக்கொண்டு திரிபவனை ஜனங்கள் பயித்தியக்காரனென்று நினைத்துப் பரிகசிப்பது உலக சுபாவமாதலால் அந்த மனிதன் அவ்வழக்கத்தை மேற்கொண்ட வுடனே அவ்வூரிலுள்ள குழந்தைகளெல்லாம் கூடி அவனைப் பயித்தியக்காரனென்று நினைத்து வேடிக்கை செய்து விளையாட ஆரம்பித்து அவனுடைய செவிகளுக்குக் கேட்கும்படி விஷ்ணு நாமத்தை அடிக்கடி யுரைக்கத் தலைப்பட்டனர். அப்படி அவர்கள் சொல்லும்போதெல்லாம் அவன் அப்பிள்ளைகளைக் கோபித்துத் துரத்திக் கொண்டே வந்தான். அவன் அவ்வாறு செய்யச் செய்ய குழந்தைகள் உற்சாகத்தை யடைந்து விஷ்ணு நாமம் உச்சாரணம் அதிகப்பட்டுக் கொண்டே வந்தது. அதனால் இப்பிடிவாதக்காரனுக்குக் குழந்தைகளைத் துரத்தும் வேலை ஓயாமலிருந்தது. அதனால் அவன் மிகவும் சங்கடப்பட்டு அந்தத் தொந்திரவை நீக்கிக்கொள்ளும் பொருட்டும், விஷ்ணு நாமம் காதிற்படாமல் இருக்கும் பொருட்டும், தனது இரண்டு காதுகளிலும் இரண்டு மணிகளைக் கட்டித் தொங்கவிட்டுக் கொண்டு சிறுவர்கள் விஷ்ணு விஷ்ணு வென்று கூச்சலிடும்போதெல்லாம் அந்த மணிகளை ஆட்டிக்கொண்டே யிருப்பான். அது முதல் அவனுக்குக் கண்டாகர்ணன் (மணிக்காதன்) என்ற பெயர் வழங்கலாயிற்று. இவன் இந்த வீண் பிடிவாதத்தில் புத்தியைச் செலுத்திக் கொண்டு தெய்வத்தன்மையின் அபேதவுண்மையை மறந்து திரிந்தலைந்து முடிவில் நீக்கதிக்காளாயினன். இக்கதையினால் மூடப்பிடிவாதமாகத் தெய்வம் இகழும் அறிவிலிக்குத் துன்பமே கதி யென்பது தெரிகிறது. இத்தகையார்களையே மக்களிற் பதர் என்றும், தீவாய் நரகம் இவர்கள் வருகையை ஆவலோடு எதிர்நோக்கிக் கொண்டிருக்கின்ற தென்றும் பரமஹம்ஸர் சொல்லியிருக்கிறார். இது சைவ வைணவக் கொள்கைகளைப் பற்றியது. மதுரைத் தமிழ்ச் சங்கப் புலவர் திலகராயிருந்த நக்கீரர் சிவபெருமானிடம் அலக்ஷியமாய் நடந்ததன் பயனாக பெரும் பீழையுற்றதாக ஒரு வரலாறு வழங்குகின்றது. அதாவது தருமி யென்னும் அந்தணச் சிறுவன் வறுமையைப் போக்க ஆலவாய் அழல் நிறக் கடவுள் கொங்குதேர் வாழ்க்கை என்னும் முற்குறிப்புள்ள பாசுரம் எழுதியளித்தனர். அதைக் கொண்டு மாதர் கூந்தலிலுள்ள மணம் இயற்கையா, செயற்கையா என்பதைப் பற்றிப் பாண்டியன் மனதிலுதித்த ஐயத்

தைப் போக்கி அதற்கென்று தூக்கப்பெற்றிருந்த பொற்கிழி (பணத் திரள்)யைப் பெறப்போகும் தருணத்தில் நக்கீரர் செய்யுள் குற்றம் என்று தடுத்தார். எவ்வித குற்றம் என்று கேட்கத் தெரியாத அத்தருமி மனம் வருந்தி அதனைப் பாடியருளிய சோமசுந்தரக் கடவுளிடம் சென்று முறையிட அடியார்க் கெளியனாகிய அண்ணல் தாமொரு தமிழ்ப புலவர் கோலம் கொண்டு நல்லிசைப் புலவர் அமர்ந்திருந்த சங்க நிலயத்தை அடுத்து அப்பாடலில் குற்றம் யாதென வினவினர். நக்கீரர் வித்தியா கர்வத்தால் பொருட் குற்றம் அதாவது உத்தம ஸ்திரிகளுடைய கூந்தல்களுக்கு இயற்கை வாசனை கிடையாதென்றார். அங்கயற்கண்ணி அளகத்திற்கோ என்று வினவினர் புலவர் வேடங்கொண்ட புனிதர். அதுவும் அத்தகையதே யென்றார் கீரனர். நீர் வழிபடும் திருக்காளத்தியில் மேவும் ஞானப் பூங்கோதை குழலோ வென்றார். அதுவு மத்தன்மைத்தே என்றார் முற்றப் படித்த மூதற் பேரறிஞர். அப்பொழுது இரக்கத்தால் நெற்றிக் கண்ணைச் சிறிதே காட்டினர். அவர் ஈசனேயென்று தெளிந்தும் நெற்றிக் கண்ணனு னும் குற்றம் குற்றந்தான் என்று மறுத்துரைத்தார். வந்தவர் மறைந்தார். அனற் கண் பார்வை பட்டதால் இவர் மேனி வெந்து தொழு நோயாக மாறியது. பிறகு இரங்கினர்; அழுதார்; தொழுதார். வித்தியா கர்வத்தை வெறுத்தார். கருணைக்கடல் இரக்க முற்றுக் கயிலைகாணில் இவ்வெம்மை தீரும் என்றருளி மறைந்தார்.

உடனே கயிலைகாணும் கடப்பாடுடையவராய் செல்லும் வழியில் குறிஞ்சி நிலமொன்றின் இடைப்பட்டு ஓர் குளம் கண்டு தளர்வு நீங்க நீராடிச் சிவபூசை செய்யத் தொடங்கினர். அக்குளக்கரையில் தழைந்த ஆலமரம் ஒன்றிருந்தது. அதில் விழும் இலைகள் தண்ணீரில் விழுந்தால் மச்சங்களாகவும் கரையில் வீழ்ந்தால் பட்சிகளாகவும் மாறும் புதுமை யொன்றிருந்தது. அதை யிவர் அறியார். இவர் சிவபூசைக்கிடையில் ஓர் பழுப்பு நீரிற் பாதியும் கரையிற் பாதியுமாக வீழ்ந்தது. உடனே தண்ணீரபட்ட பாதி பாகம் மச்சமாகவும் கரையில்பட்ட மறுபாதி பட்சியாகவும் உருப்பெற்று ஒன்றையொன்று ஈர்த்தன. இதனை நக்கீரர் கண்டு வியப்புற்றுத் தாம் செய்யும் சிவ பூஜையில் கவனம் நழுவினர். சிவபூஜையில் வழுவுவோர்களையே தனக் குணவாகக்கொள்ளும் நியமம்பூண்ட ஒரு பிர்மராக்ஷஸு எதிர் தோன்றி இவரைக் கொண்டு ஓர் மலைக்குகைக்குள் தள்ளிப் பாறையாற் பொதிந்து இவருக்குமுன் அங்கே சிறை வைக்கப்பட்டிருந்த ஆயிரவரையும் புசிக்கக் கருதி நீராடச் சென்றது. இதே காரணம்பற்றி சிறையில் அடைந்து கிடக்கும் அன்பர்களைக் கண்டு அவர்களால் இச்சூழ்ச்சி அவ்வரக்கனல் ஏற்பட்டமை உணர்ந்து இக்குற்றம்தான் இதகாறும் குமாரக் கடவுளைப் பாடாத காரணத்தால் விளைந்ததென வுட்கொண்டு திருமுருகாற்றுப்படை யென்னும் நூலைப் பாடி முடித்தார். அதன்பயனக வெற்றிவேற்காளை அக்கற் பொதும்பிற் றோன்றி அரக்கனை மாய்த்து கீரனுதியரை விடுவித்து காளத்தி தென்கயிலையாதலால் நக்கீரர் அதனை இலேசாய்க் காணும்படி குளத்தில் மூழ்கப் பணித்து பொன்முகரி ஆற்றில் எழச்செய்து சாபமும் தீர்த்து இன்புறச் செய்தார் என்பது வரலாறு. இதனல் அம்பாளை மேன்மையாகவும் அறுமுகக் கடவுளை சற்று குறைவாகவும் எண்ணிய குற்றமே இவ்வளவு துன்பங்களை விளைவித்ததென்றால தெய்வம் இகழ்வது எத்தகைய பாவம் என்பதை உன்னிப் பார்ப்பது ஒவ்வொருவருக்கும் தலைக்கடமையாகும்.

தாய்க்கும் சேய்க்கும் பேதங்கண்ட நக்கீரரைவிட ஒருபடி மேற்போன வர் பிருங்கி. அவர் சிவத்திற்கும் சக்திக்கும் பேதம் பாராட்டியதாக ஒரு கதை யுண்டு. குணம் குணியை வேறுபடுத்த முடியாதென்பதை அருந்தவ முனி வரே உணராமல் அர்த்தநாரி வடிவமாகக் காட்சியளித்த சிவபெருமானை வண்டுருவம் கொண்டு துளைத்து வலப் பாதியை மட்டில் வணங்கியதாகவும் இரத்தமாம்ஸங்கள் சக்தியம்சமாதலால் அவைகளை விடும்படி அம்பிகைகூற தேகத்திலிருந்த என்புகள் நீங்கலாக இரத்த மாம்ஸ மச்சையாதிகள் யாவும் கழுவின. மூர்க்கப்பிடிவாதமுள்ள முனிவர் நிற்கமுடியாமல் நிலத்திற் சாய மூன்றாவது கால் ஒன்றையும் ஈசன் அளித்தனர். அங்கே மூன்றாவது கால் உத விய கருணை அம்பிகைக் குரியது என்பதைப் பிறகு உணர்ந்தார். பிருங்கி பெண் வடிவத்தையே துறவிகள் எக்காரணம் பற்றியும் பார்க்கக் கூடாதென் னும் வைராக்யம் கொண்டவராதலின் அருட்சக்தியையும் பெண்ணாக உட் கொண்டு அதன் பயனாக இடர்ப்பட்டார். தெய்வ துவேஷத்தால் வெறுத் தவரல்லர். ஆதலினால், அருட்சக்தி இவர் அறியாமைக்கிரங்கி அருள் செய்தார் என்பதே உட்கருத்து. மூவாசையுந் துறந்த முனிவர்களுக்கும் தெய்வம் ஒன்றே யென்னும் திடம் ஏற்படவில்லை யென்றால் அப்பெரும் பண்பு ஏனை யோர்க்கு எங்ஙனம் உதயமாகும். அரை நூற்றாண்டுக்கு முன்பு இது விஷயத்தில் நம் நாட்டில் இருந்த துவேஷம் தற்போதில்லை யென்பதை முதி யர்கள் அறிவர். நூல் பல கற்றுப் பலர் மதிக்கப் பேசவும் வரையவும் திறமை சாலிகளாக இருந்த பண்டிதர்களில் சிலரும் இதில் தலையிட்டு துவேஷக் கயிற்றிற்கு முறுக்கேற்றினர் என்று சொல்வதும் மிகையாகாது. இத்தகை யார் வாய்ச்சொற்களை வேதமாக நம்பும் பாமர மக்கள் ஏமாறுதென் செய்வர்? ஏற்றப்பாட்டில் "பிள்ளையாரே வாரீர்" என்ற முதலடியைச் சொல்லியது கேட்டு அப்பெயரைச் சொல்லி இறைத்த தண்ணீரும் பாகவதனுடைய எனது நிலத்திற் பாயக்கூடாதென வெட்டி நீரை வடித்த எம்பெருமானின் அடியா ரையும் நேரிற்காண நேரிட்டதுண்டு. புறத்திண்ணையில் வழிப்போக்குச் சிர மத்திற்காக இளைப்பாறவந்த சைவர் சிவா மகாதேவா என்று தன் வழக்கப் படி சொல்லக் கேட்ட வைணவக் கொள்கையாளர் ஒருவர் அவரை எழச் செய்து சாணம் கரைத்துச் சுத்தி செய்து சமாதானம் அடைந்த உதாரண மும் உண்டு. அண்ணாமலைக்கு அரோகரா என்று கூறிப் பிச்சை கேட்ட பரதேசியை உள்ளே அழைத்துக் கன்னத்தில் அறைவதாகக் கையை நீட்டி அதட்டி இனி அந்தச் சொல்லை மறுமுறை சொல்லாதே என்று எச்சரித்து வெளியில் துரத்தினர் ஒரு பரம பாகவதர். பிச்சைக்கு வந்த பரதேசி யும் கொஞ்சம் அறிவாளியாதலால் இவர் செயல் மனம் பொறாது நடுவீதியில் வந்து நின்றுகொண்டு போவார் வருவாரிடையில்,

"முத்திநெறி யறியாத மூர்க்கரொடு முயல்வேனைப்
பத்திநெறி யறிவித்து"

என்ற திருவாசகப் பாடலைப் பாடிக்கொண்டே சென்றார். அதை நேரிற் காண நேர்ந்தபோது,

"கற்கை நன்றே கற்கை நன்றே
பிச்சை புகினும் கற்கை நன்றே"

என்ற பொன்மொழியை யெண்ணி யெண்ணி வியந்ததுண்டு. இவ்வளவு

விபரீத பேதமும் துவேஷமும் பரம்பரையாக சைவ வைணவ மரபில் வந்தவர்களிடம் தோற்றியதைக் கண்டதில்லை. இடையில் இருவிதக் கொள்கையையும் பேணிக்கொண்ட பிரிவினர்களிடமே கால்கொள்ளுவதென்பது குறிப்பிடத்தக்கதாகும். பாரத நாட்டிற்கே ஒரு ஒப்பற்ற பெருமையை, ஏற்றத்தை, (இதர மேல்நாடுகளில் எல்லாம் சென்று) உண்டுபண்ணி வெற்றிக் கொடி காட்டி வீர முழக்கம் செய்த ஞானசூரியனாகிய சுவாமி விவேகாநந்தரின் தெய்வீக உழைப்பே மேலே இதுவரையில் உதாரணமாகக் காட்டிய துவேஷ உணர்ச்சியாகிய பனிப்படலத்தைப் போக்கிய தென்பது ஆராய்ச்சியாளர்க்கு நன்கு விளங்கும். சிகாகோ (அமெரிக்கா நாட்டின் தலைநகர்)வில் அவர் செய்த முதற் பிரசங்கத்தில் விலக்கு என்னும் கருத்துக்கு சரியான ஒருபதம் வடமொழியாகிய எங்கள் ஸமஸ்கிருத பாஷையிலேயே கிடையாதென்றும், ஆதலினால் அந்த பாஷையில் யாக்கப்பட்டுள்ள மத கிரந்தங்களை ஆதாரமாகவுடைய இந்தியராகிய எங்களுக்கு விலக்கக்கூடிய கொள்கைகளே கிடையா. பல்வேறுபட்ட நிறமுள்ள மணிகளும் ஒரே நூலில் கோக்கப்பட்டிருப்பதுபோல பல்வேறு சமூகங்களும், கொள்கைகளும், வெளிப் பார்வைக்கு பேதமாகப்பட்டாலும் கடவுளையடையும் வழியில் ஒற்றுமைப்பட்டவைகளே" என்பதை வெகு அழகாகவும், கம்பீரமாகவும், துணிவுடனும் கர்ஜித்தார். அக்கருத் தொன்றே அங்குக் கூடியிருந்த சர்வ உலக சமயவாதிகளையெல்லாம் திடுக்கிடச் செய்தது. அமெரிக்க மாதர்களும் ஆங்கிலேய மாதர்களும் இந்த இந்திய சந்நியாசியின் காஷாய உடையைப் பரிசிக்க விரும்பி நெருங்கிவந்த காட்சி வருணிக்கமுடியாது. அதன் சக்தி மேல்நாடுகளில் இன்றும் அவர் திருநாமத்துடனும் அவர் பரம குருவாகிய ஸ்ரீராமகிருஷ்ண பரமஹம்ஸரின் திருநாமத்துடனும் அபேதவுணர்ச்சியுடன் கூடிய ஜனோபகாரத் தொண்டாற்றி வருவது எவரும் அறிந்ததே. அளவிடற்கரிய இத்தனைப் பெருமையைத் தரவல்லது தெய்வம் இகழாத செந்நெறியாகும். எனவே, போற்றிப் போற்றி அவ்வுபதேசத்தை ஒவ்வொருவரும் மனங்கொளல் கடனும். சொற் கட்டிட மூலமாக நம் பெரியார்கள் அறிவுறுத்திச் சென்றதுமட்டில் அமையாமல் கற்கட்டிட மூலமாகவும் சிற்பங்கள் மூலமாகவும் அரிஹர மூர்த்தியென்றும் அர்த்தநாரீசுர மூர்த்தமாகவும் மூவராய மூர்த்தியாகவும் அமைத்துக் காட்டியுள்ளார்கள். அறிவு பிரதானமே தவிர உருவம் பிரதானம் அன்றென்பதை உணர்த்த யானைமுகக்கடவுளையும் பூதவடிவக் கணங்களையும், இடபவடிவுள்ள அதிகார நந்தியையும் பாம்புக்காலுள்ள பதஞ்சலியையும், புலிக்காலுடைய வியாக்கிரபாதரையும், விஷ்ணுவின் மச்ச, கூர்ம வராக, நரசிங்க, வாமனாதி வடிவங்களையும் வெகு தந்திரமாக வழிபடும்படி அதற்கிசையப் புராண இதிகாச வரலாறுகளையும் வரைந்து மக்கள் சமநிலை கண்டு கண்மூடித்தனமாக வேற்றுமைக் குழிகளில் வீழாமல் உய்யும்படி பெருங் கருணையால் வகைசெய்தனர். அப்பெரியார்க்கு நாம் செய்யும் கைம்மாறு அவர்கள் குறிப்பறிந்து ஒழுகுவதைத் தவிர வேறுண்டோ? தெய்வம் உண்டென ஒப்புக்கொள்ளும் ஆஸ்திகர்களிலேயே இவ்வளவு இடர்ப்பாடுகள் உண்டானால் இல்லையென்பார்கள் விஷயத்தில் நாம் இறங்கவேண்டுவதில்லை. மூதாட்டியாரும் தெய்வம் உளதென ஏற்கும் நல்லோர்கட்கே நீதி வகுத்தருளினரென்பது தெளிவு.

---

# சுதந்தர தேவியின் தரிசனம்

(தே. ப. பெருமாள்.)

நடுப்பகல். ஆதித்தன் வானின் நடுவில் இயங்குகிறான். யாண்டும் அவனது ஒளி. எங்கணும் அவனது வெம்மை. அவனது வெம்மைக் காற்றாது பசிய கொடிகளும் இளமரங்களும் குற்றுச் செடிகளும் வாடி வதங்கின. பறவைகள் வானம் விட்டகன்று இலைகளடர்ந்த கிளைகளிற் புக்கன. ஞமலிகள் நாவை வெளித்தள்ளிய வண்ணம் நீர்ச்சுனை தேடி ஓடின. ஆனிரைகள் வீங்கிருட்பிழம்பு தேடி கிடக்கைகொண்டு அருந்திய அறுகை அசைவிட்டுக் கொண்டிருந்தன. யானும் பாதையில் நடந்த களைப்பால் மெய்சோர்ந்து அப்பாதையின் அருகே வளம்பெற வளர்ந்திருந்த ஆலமரத்தண்மையிற் படுக்கை கொண்டேன். அம்மரத்தண்மையில் நுண்ணிய மணற்பொடிகள் குவிந்து கிடந்தமையால் அது எனக்குச் சிறந்த பாயலாக அமைந்தது. தென்றல் மெல்ல வீசியது. பறவைகள் இனியபாடலைக் கிளப்பின. அருவியின் சலசலத்த ஒலி மிகுந்திருந்தது. இத்தகைய அழகிய இயற்கை இன்பம் நுகர்ந்த யான் என்னையும் அறியாது துயில்கொண்டேன்.

எனது இல்லம். எனது வாசிப்பு அறையில் யான் தனிமையாக, கட்டுரை வரைந்து கொண்டிருக்கின்றேன். என்னைத் தவிர எனது இல்லத்தில் வேறு ஒருவரும் காணப்படவில்லை. அதுபோழ்து என்னை ஒருவர் அழைக்கும் குரல் கேட்டது. இனிமையான அக்குரல் பெண்குரலாக இருந்தது. அக்குரலிலே பண் பெருகி இருந்தது. இனிமை ததும்பியிருந்தது. அக்குரல் ஆழ்ந்த நோக்குக்கொண்டு கட்டுரைவரையுந் தொழிலிலிருந்த என்னைக் கலைத்தது. திரும்பி நோக்கினேன்.

ஆ! அங்கு நான் கண்ட காட்சியை எங்ஙனங் கட்டுரைப்பேன். கவின் மிக்க ஒரு உருவம்; பெண்ணுருவம். மக்கள் குலத்தே யான் இத்தகைய ஒரு பெண்ணை இதுகாறுங் கண்டிலேன். இப்பெண்ணின் மேனி எங்கும் எழில் மிகு மலர் நிறையப்பெற்றிருந்தது. உயரிய முத்துக்களால் நிறையப்பெற்ற தெரியல் பல அவள் மிடற்றில் தொங்கின. முதற்கண் அவ்வுருவத்தை—அப் பெண்ணை மனிதர்க்குலப் பெண்ணென்றே யான் நினைத்தேன். ஆனால் அப்பெண்ணின் பாதங்கள் தரையில் தோயப்பெற்றில. மணமலிந்த அவள் தன் அளகமலரிலே வண்டிமிர்ந்தில. இக் காரணங்கொண்டும் அவள் கண்ணிமையா ஒன்று கொண்டும் அவளைத்தேவப் பெண்ணென யான் அறுதியிட்டு எண்ணினேன். அப்பெண்ணின் பின்பாகப் பல இனிய குரல் பறவைகள் பறந்து வந்தன. அவற்றில் மிக்கன கிள்ளையும் குயிலும் நாகணவாய்ப்புள்ளுமேயாம். இன்னும் ஒரு பாங்கர் இப் பெண்ணைத் தொடர்ந்து அடவி விலங்குகள் பல நின்று கொண்டிருந்தன. அவை களிப்பால் உறுமிக்கொண்டும், உயர்ந்த குரல் எழுப்பிக்கொண்டும் உவகை

மூகமோ டிருந்தன. மக்கள் இவைகளைப் பொறியிற் பிடித்து அடைத்திருந்த கூடுகள் ஓர்பால் உடைந்து பொடிந்து கிடந்தன.

இதைக் கண்ட யான் மிக வியப்பெய்தினேன். இப்பெண் யாராக இருக்கலாம்? இவள் பின்பால் இப்பறவைகளும் இவ்விலங்குகளும் தொடரக் காரணம் என்னை? என்பன போன்ற வினாக்கள் எனது உள்ளத்தே எழுந்தன. யான் இவற்றை அறிதற்கு விடாய் மிகக் கொண்டவனாய் அம் மங்கையை நோக்கி "அம்மையே! நீ யார்? இவண் போதற்குக் காரணம் என்னை?" என மிகத் தாழ்ந்த குரலில் வினவினேன்.

எனது வினாவைச் செவியகங்கொண்ட அம் மங்கை குறுநகைகொண்டவளாய் "அன்பனே! என்னை அறிதற்கா விரும்புகின்றாய்? அதை நீ அறிவதால் நினக்கு வரும் பயன் என்னை? யான் வேண்டுமாயிற் கூறுகின்றேன். யான் பன்னாட்கட்கு முன் இந்நாட்டின் கண்ணே வதிந்து வந்தேன். அற்றை நாள் உன் மூதாதையர் நெருங்கி என்னுடன் உறவு கொண்டிருந்தனர். யானும் அவருடன் இசைந்த கிழமைபூண்டு இன்பமுடன் வாழ்வு நடாத்தி வந்தேன். வாழ்விலும் தாழ்விலும் அவர் என்னைப் பிரிந்திலர். யானும் அவரைப் பிரிந்தறியேன். அவரின் பின் தோன்றியோர் நின்னைப் போன்ற இழிகுண முடையோர். ஆதலின் அன்றே அவரை விட்டு விலகினேன். இன்று யான் வாழ்வது பிற இடத்தேயாம். ஆனால் இன்று நின்னை வந்து கண்டது எற்றுக்கெனின் நின் நற்குண மூதாதையரின் பின் தோன்றிய யாவரினும் நீ நல்லன இயற்றும் நன்மனப்பாங்கு உடையவனாதலின் நின்னிடம் ஒரு காரியத்தின் பொருட்டு நின்னை வந்து கண்டேன்" எனக் கூறி முடித்தாள்.

இது கேட்ட யான் அவளை நோக்கி, 'தாயே! நீ என் மூதாதையரிடம் உறவு கொண்டமைக்கு யான் மிக உவகை கொள்ளுகின்றேன். ஆனால் யான் கடாவிய கடாவிற்கு நீ பதிலுரைத்திலை. நின் பெயரையும் நின் வரவின் ஏதுவையுமே அறிய யான் விரும்புகின்றேன். அதை அன்புடன் உரைப்பாய்' என உரையிட்டேன்.

அவள் முல்லைமுறுவல் வெளித்தோன்ற நகை செய்து 'அன்பா! அப்படியா? என் பெயரையா தெரிய நீ விரும்புகின்றாய்? கூறுகின்றேன். என்னைச் சுதந்தரதேவி என்பார்கள். யான் வந்த வரவின் ஏதுவை முன்னரே நின்பால் சொன்னேன. அதுபற்றி விளங்க இயம்ப வேண்டுமாயின் இயம்புகின்றேன். இன்பமுடன் கேட்பாய்! நின்மாட்டிருந்தும் சில வாக்குறுதி பெற்றுச் செல்லுதற்கே யான் நின்பால் வந்தேன். வேறு நின்பால் பொன்னை விரும்பியோ, பொருளை விரும்பியோ, பூமியை விரும்பியோ வரவில்லை. அறிந்தாயா?—என்னையும் யான் வந்த வரவையும்' எனக் கூறினாள்.

'அம்மா! அஃதிருக்கட்டும். இப் பறவைகளும் இவ்விலங்குகளும் நின்னைத் தொடர்தல் என்ன கருதியோ?' என வினவினேன் மறுபடியும் நான்.

அதற்கு மாற்றம் உரைக்கத் தொடங்கியவளாய் 'இவை உன் சகோதரர்களால் அடிமைப்படுத்தப்பட்டனவாகும். இவை அனைத்தும் நன்

மனங்கொண்டு எக்காலும் என்னை நினைத்து எனது வரவுக்கு வேண்டுந் தொழில் செய்து நோன்புநோற்றுக் கொண்டிருந்தமையால் யான் அருள் கொண்டு அவற்றைக் கூட்டினின்றும் வேறுபடுத்தி விட்டேன். அடிமைக் கூட்டையும், உரிமை வாழ்வுகொண்ட இவைகளையும் நின்பால் காட்டு தற்கே இவைகளை நின்னிடம் அழைத்து வந்தேன்' எனக் கூறினன்.

இவற்றைக்கேட்ட யான் 'அம்மையே! இஃதெல்லாம் ஓர்பால் கிடக்க. சற்று போழ்திற்கு முன்னர் என் மூதாதையர் நற்குணமுடையவ ரென்றும், அவருடைய பின் தோன்றல்களில் என்னையும் உட்படுத்தி அனைவரும் இழி குணமுடையோரென்றும்,மூதாதையர் வாழ்ந்த ஞான்றில் நீ இவண்நெருங்கி உறவு கொண்டாய் என்றும், பிற்றை ஞான்றில் இவண் விட்டேகினய் என் றுங் கூறினையே. அதனுட் பொருளென்னை? எங்கள்மாட்டு நீ கண்ட இழி குணம் என்னை? அவற்றால் விளைந்தகேடு உனக்கு யாது? இவைகளை நீ எனக்கு விளங்க உரைத்தல் வேண்டும்' என நவின்றேன்.

இஃது கேட்ட அம்மங்கை ஆழ்ந்த யோசனையில் சிறிதுநேரம் மூழ்கிப் பின்னர் என் முகத்தை நோக்கி 'அன்பனே! உன் மூதாதையரின் நற்குணங் களைப்பற்றி முதற்கண் உரைக்கின்றேன், நம் மூதாதையர் தம்மைப்போற் பிறரைக் கருதினர், அவர்களது உள்ளத்தில் பிறமக்களைத் தம்மினும் தாழ்ந் தவராய் நினைக்கும் கெட்ட எண்ணம் தலைகாட்டிலது. யாவரையும் தம் முடன் பிறந்தோர் என எண்ணியவராய் அவர்களுடன் குழுமி தந்நாட்டிற்கு உயரியபணி ஆற்றி வந்தனர். தாம் பிறந்த நாடே தந்நாடு என்ற எண்ண முடையராய் வாழ்வு நடாத்தி வந்தனர். தந்நாட்டைத் தாயினும் மாண்பு மிக்க ஒரு பொருளென நினைந்து அந்நாட்டிற்கு வேண்டுங்கால் தம்முயிரை யும் ஈதற்கு ஒருப்பட்டிருந்தனர். மேலும் நாட்டின் முன்னேற்றத்திற்குரிய அவரின் காதல் வாழ்வும் செம்மை பெற்றிருந்தது. அவர் தாம் காதல் கொண்ட காரிகைகளையே கடிமணம் புரிந்து வந்தனர். ஆதலின் பெண்ணும் ஆணும் ஒருமைப்பட்டு ஒத்த அன்பாலும் ஒத்த குணத்தாலும் ஒத்த அழ காலும் காதல் வாழ்வைக் கனிவுடன் நடத்தினர். நின் மூதாதையர் ஞான் றில் ஆணும் பெண்ணும் பிணக்குற்றிருக்கவில்லை. ஆண் பெண்ணின் உரிமை யினைக் கவர்ந்ததில்லை. அப்பெண் நல்லாள் அடிமையாக வாழ்ந்ததில்லை. பெண்டிர்க்கு எத்துறையிலும் உரிமை உண்டு. பண்டைப்பெண்டிர் வீரராயும் கவிஞராயும் இன்னம் முன்னேற்றம் பலவுடையராயும் வாழ்ந்தமை உங்கள் பழம் நூல்களானே உங்கட்கு அறிய இயலும். பின்னும் அந்நாளில் அவர் தமக்கு வேண்டும் பொருளைத் தாமே செய்துகொண்ட அளவில் நின்றாரல் லர். தாமே பிறநாட்டுக்குக் கைத்தொழிலால் ஆய பொருட்களை அனுப்பி வந் தனர். ஆதலின் அந்தோ அஞ்ஞான்று உங்கள் நாட்டில் கைத்தொழில் பெருகி யிருந்தது. உங்கள் நாட்டுச்செல்வம் உங்கள் நாட்டகத்தேயே இருக்க இடம் பெற்றிருந்தது. பிறநாட்டுச்செல்வம் உங்கள் நாட்டுக்கு வருதலேயன்றி உங் கள் நாட்டுச்செல்வம் பிறநாடு சென்றிலது. அற்றை நாள் உன் மூதாதையரும் செல்வத்திற் சிறந்து காதலின்பம் துய்த்தலிற் றலைமைசான்று—அவா, வெகுளி, காழ்ப்பு முதலிய குற்றங்கள் அகற்றி அன்பு, அருள், பொறை, முத லிய நற்குணங்கள் கொண்டு, தம்மைப்போற் பிறரையும் நேசித்து, வறுமை யாளர்க்கும் பிறர்க்கும் வேண்டுவன ஈந்து உயரிய வாழ்வு நடாத்தி வந்தனர்.

அஞ்ஞான்று அவர்கள் கொண்ட இத்தகைய நற்குணங்கள் எனக்கு அவர் மேற் றலைமை அன்பு கொள்ளுதற்கும் அந்நாள் யானிவண் வதிதற்கும் அரண் செய்தன.

ஆனால் பிற்றைநாளில் நாட்டில்எங்கணும் சாதிப்பிணக்கும் சமயப்பிணக்கும் தோன்றி இழிந்தகுலம், விழுமியகுலம் என ஓர்குலம் இருவகைத்தாகி, ஒரு சாரார் நாட்டின் ஏழரைக்கோடி மக்களை விலங்கினும் இழிதகையராய் எண்ணி ஒதுக்கி வைத்து வருத்தி வருகின்றனர். ஆனால் பிணக்கு மூண்டு மக்களின் ஒற்றுமைக் குறைவால் நாட்டுப்பணி ஒழிந்தது. உங்கள் நாட்டைப் பிற நாட்டுமக்கள் கைக்கொண்டனர். இதனால் உங்கள் உரிமை உங்களைவிட்டு அப்பால் ஏகியது. பெண்டிர்க்குப் போதிய உரிமை கொடாது கற்றறி நங்கைக்கு கல்லாக் கய மகனையும், கற்றறி புலவனுக்குக் கல்லாக்கயமகளையும் வதுவை ஆற்றுகின்றீர். உங்களது வதுவை இற்றைக்காலை செழுமைசான்ற செல்வத்தால் அமையப் பெறுகின்றது. குலத்தாலோ, நலத்தாலோ, குணத்தாலோ அமையப் பெறுவதன்று. இந் நாள் கைத்தொழிலும் செய்வதில்லை நீங்கள். சோம்பல் கொண்டு உங்கள் கைத்தொழிலை கைநழுவவிட்டு, பிறநாட்டினின்றும் ஆண்டுதோறும் அளவிடற்கரிய பணத்திற்குப் பொருட்களை வரவழைத்துக் கொள்ளுகின்றீர். இதனால் உங்கள் நாட்டு மலையனைய செல்வம் பிறநாடு சென்றது. உங்கள் நாட்டில் இதுபோழ்து ஒரே நேர உணவிற்குப் வழியிலராய் வாடித் தவிக்கும் மக்கள் அளவிடற் பால ரல்லர். அவர் தம் முகங்களில் இளமையின்றி மூப்புத் தலை எடுத்து விளங்குதல் காணலாம். அவர் தம் ஆகத்தில் எழுந்து கூத்தாடும் என்புகள் இத் துணையென எண்ணற்கு இயைந்தனவாய் வெளித்தோன்றி விளங்கும். அவர் தம் ஆவியும் இன்ன போழ்திற் பிரிகின்றதெனக் கூறுதற்கு இயலாதனவாய் 'மேதலம்' நோக்கி ஆடிக் கொண்டிருக்கின்றன. இன்னம் உரைத்தற்கு எனது நா அஞ்சுகின்றது. அம்மம்ம! இத்தகைய வறுமையால் வருந்தி அவமே தன்னுயிர் மாய்த்த மானமுடைய மக்கள் மதிக்கற்பாலரல்லரே. இத்தகைய வறுமை மிக்க நாட்டிலேயே யான் வாழ்தற்கு வெறுப்புக் கொண்டேன். இதனாலேயே யான் இவண்விட்டுப் பிற மண் சேர்ந்து அங்கு எனது மனம் மகிழ்வுற வாழ்கின்றேன்' என ஆதியுடன் அந்தம் வரை எல்லாம் கூறி முடித்தாள்.

இஃதனைத்தும் கேட்ட எமக்கு ஒரு புத்துணர்ச்சி உண்டாயது. முதற்கண் அம் மங்கையை தேவப்பெண் என எண்ணிய யான், பின்னரே அவள் நமது நாட்டில் முன்னர் இருந்த 'சுதந்தரதேவி' என அறிந்தேன். முதலில் சுதந்தரதேவி என்று அவள் கூறிய பெயரின் பொருள் விளங்காமைக்கு எனது மடமையை எண்ணி மனம் மாழ்கினேன். எனது மெய் சிலிர்த்தது. உள்ளம் பெருங்களிப்பால் தத்தளித்தது. கண் கனிவுடன் பனிநீர் மல்க "அன்னையே" என்று விளித்தேன். அவள் என்னைக் கூரிய பார்வையுடன் தலையை ஓர்பால் சாய்த்து அன்புடன் நோக்கினள் 'அன்னையே! சுதந்தரத் தெய்வமே! 'உன்னை எனது நாட்டின்கண் நிலைநிறுத்துதற்கே யான் இது போழ்து அல்லும் பகலும் அரும்பாடுபட்டு வருகின்றேன். அஃதால் யான் அடையும் இன்னல் செப்புந் தரமன்று. பன்முறை வெஞ்சிறை ஏகியுள்ளேன். ஆனால் அவ்வெஞ்சிறை எம் பொன்னாட்டிடை அமையப்பெற்றதால்

அது எமக்கு மிகுந்த இன்பத்தை அளித்தது. தேவி! யான் மட்டுமன்று. என்னைப்போன்று பல மாசற்ற மனமுடை நண்பர்களும் உன்னை இவண் நிலைநாட்டுதற்கு முயன்று இடுக்கண் எய்தப்பெற்றே வருகின்றனர். ஆனால்,

'தேவி! நின்னருள்தேடி யுளந்தவித்
தாவியும் தமதன்பு மளிப்பவர்
மேவி நிற்பது வெஞ்சிறையாயினும்
தாவில் வானுல கென்னத்தகுவதே'

என்பது உண்மை. நின் பொருட்டு நின்னை இவண் நிலைநாட்டும் பொருட்டு அன்னார் அடையும் அருஞ்சிறை அவர்க்கு வானுலகேயாம். அவர்கள் கலங்கா உள்ளம் கொண்டு அவ்வருஞ்சிறையில் குடிகொள்வர். நின்னை

'மேற்றிசைப் பலநாட்டினர் வீரத்தாற்
போற்றி நின்னைப் புதுநிலை யெய்தினர்;
கூற்றினுக் குயிர்கோடி கொடுத்தும் நின்
பேற்றினைப் பெறுவே மெனல் பேணினர்.'

என்பதையும் யான் அறிவேன். ஆனால் அவரின் முயற்சி வீண் போக வில்லை. கோடிக்கணக்காய் உயிரைக் கூற்றினுக்குப் பல கொடுத்தாயினும் உன்னை அவண் நிலைபெறச் செய்தது. அன்னையே! ஆனால் எமது நாட்ட கத்தேயோ எம்மைபோல் சிலரைத் தவிர மிகுந்த பெருங்கூட்ட ம[illegible]ும்

'அம்மையுன்ற னருமை யறிகிலார்
செம்மை யென்றிழி தொண்டினைச் சிந்திப்பார்.'

நின் செவ்வி அறியாது நின்னைப் பலவாறு தூற்றியும் நின் இருக்கைக்கு அரண் செய்யாது முரண் செய்கின்றனர். நின்னையின்றித் தாமியற்றிய இளந் தொழில்களைப் பெரிதென வானுயரப் புகழ்ந்து கூறுகின்றனர். இன்னும் நின் வரவினைத் தகைக்கும் தொழிலினைப் பெரும்பணியென எண்ணிப் புரி கின்றனர். என்னே இவர் தம் மடமை இருந்தவாறு! ஆனால் எத்தகைய பெருமை மிக்க நாடாயினும்,

'தேவி! நின்னொளி பெறாத
தேயமோர் தேயமாமோ?
ஆவியங் குண்டோ? செம்மை
அறிவுண்டோ? ஆக்கமுண்டோ?
காவியநூல்கள் ஞானக்
கலைகள் வேதங்க ளுண்டோ?
பாவியரன்றோ நின்றன்
பாலனம் படைத்திலாதார்?'

என்பது உண்மை. அந்நாடு நலனுறாது. அந்நாட்டின்கண் செல்வம், கல்வி, நேர்மை முதலியன பெருகியிருத்தல் அரிது. அந்நாடு எஞ்ஞான்றும்

வறுமையாலும், அறியாமையாலும், மூரண் செய்கையாலும் அல்லல் உறும். அந்நாட்டு மக்களின் நிலையோ, அம்மையே!

'நின்னருள் பெற்றிலாதார்
நிகரிலாச் செல்வரேனும்
பின்னரும் எண்ணிலாத
பெருமையிற் சிறந்தாரேனும்
அன்னவர் வாழ்க்கை பாழாம்
அணிகள்வேய் பிணத்தோ டொப்பார்.'

என்றபடி அவர்கள் அணிகலன் பூண்ட பிணத்திற்கே ஒப்பாவார். அன்னவர் கல்வியாலும், செல்வத்தாலும், கவின் மிக்க உருவத்தாலும், பெருமை மிக வாழ்ந்த பயனென்னை? அன்னவர் தம் வாழ்வு ஐயறிவுடை விலங்கின் வாழ்விற்கும் இழி தகைமை உடையதே யாகும்.

தேவீ! ஆதலின் நீ என்னாட்டிடை வாழ்வு தொடங்கல் வேண்டும். நாங்களும் மனிதர் என்ற பதத்திற்கு உரிமை யுடையராய் வாழ்க்கை நடாத்துதல் வேண்டும். அன்னை! எங்கள் மிசை கருணை பொழிவாய். எங்கள் நாட்டிடை உன் அன்பைச் செலுத்துவாய்." என்று யான் இரங்கக் கூறினேன்.

"அன்பா! இனவலே! எனது வேட்கையும் அதுவே. யான் உன்னாட்டிடை வாழ்வு செலுத்த விருப்பங்கொண்டே இதுபோழ்து இவண் நின்னைக் கண்டு செல்ல வந்தேன். இதுபோழ்து நீ மூன்று தலையாய பணி செய்தல் வேண்டும். அப்பணியை நீ செய்யின் மட்டுமே யான் உன்னாட்டிடை வாழ்வு நடத்த இயலும். இதையே முன்னர் யான் நின்னிடம், சில வாக்குறுதி பெற்றுச் செல்லவந்தேன் எனக் கூறினேன்" என்று கூறினள்.

யான் அதற்கு "அம்மையே! என் உயிரை ஈந்தாயினும் அப்பணியைத் தவறாது செய்வேன்" என்றேன்.

அவ்வம்மயம் என் முன் ஒரு பெருத்த ஒளிதோன்றியது. அஃதுடன் துன்ப இசையொன்று பிறந்தது. அடுத்த போழ்து என் அன்னை—பொன்னணிபூண்ட பாரதத்தாய் என் முன் தோன்றினள். அவளது அடிகள் இரண்டிலும் மூன்று பெருந்தளைகள் பிணைக்கபெற்றிருந்தன. அவற்றுள் ஒருதளை தீண்டாமை, மற்றொன்று பெண்ணடிமை, பிறிதொன்று வறுமை. இம் மூன்று பெருந்தளைகளும், இன்னும் பல சிறுதளைகளும் அவ்வடிகளில் பிணைக்கப்பெற்றிருந்தன. ஆனல் அச்சிறுதளைகள் விழிகட்கு நன்கு புலனாகவில்லை. அவளது மேனியில் இதுபோழ்து பொன்னணியினைக் காணவில்லை. பொங்கும் அழகினைக் காணவில்லை. புன்னகை கொண்ட முகத்தினைக் காணவில்லை. அவளது முகம் துன்பத்தால் நிறைப்பப் பெற்றிருந்தது, வாடியமேனியும், வதங்கிய உள்ளமும், ஆடியசாயலும், அவிழ்ந்த கூர்தலுமுடைய என் அன்னையை அஞ்சலி செய்தேன். அவள் என்னிடம் ஒன்றும் உரையாடவில்லை. அவள் நிலை கண்ட எனது உள்ளம் குழப்பம் அடைந்தது. அழுகையும் என்னை அறியாது தொடர மெய்ம்மறந்து கலுழ்ந்தேன். காத்

தமோற, நாணம் மேன்மிக, அழுகையுடன் என்பணியைச் செய்து முடிப்ப தாக அன்னை சுதந்தராவுக்கு ஆணையிட்டுக் கொடுத்தேன். அவள் என்னை நோக்கி "அன்னை பாரதியின் அடியைப் பிணைத்துள்ள பெருந்தளைகளான பெண்ணடிமை, தீண்டாமை, வறுமை இம்மூன்றையும் அறுத்தெறிய வேண்டியதே உன் தலையாய பணி" என்று கூறினள். யானும் தலையசைத்தேன்.

கதுமென ஒளி மாறியது. ஒளி அகல, என் அன்னையாரும் மறைந்தார்.

அடுத்த போழ்து, ஒருவர் என்னை எழுப்பும் ஞாபகம் வந்தது. விழித்து நோக்கினேன், எனது நண்பன் சின்னத்தம்பி எனது அண்மையில் நின்றான். அவன்—நகை முகமுடன் 'நண்பா! நித்திரையில் என்ன விம்மி விம்மிக் கலுழ்கின்றாய்,' எனக் கடாவினன். விழியினைக் கையால் தடவினேன். கை நீரால் நனைந்திருந்தது. அடுத்த போழ்து 'அப்பனே! ஒன்றும் இல்லை. அயர்ந்த தூக்கம். நெஞ்சை உருக்குந் தன்மையதாகிய ஒரு பெருங்கனவு' எனக் கூறி அவ்விடம் விட்டு எழுந்தேன். மேற்றிசை நோக்கினேன். கதிரவன் சாயும் வேளையாக இருந்தது. அதிக நேரம் தூங்கியதாக அறிந்தேன். அடுத்த போழ்து என் நணபனுடன் இல்லம் நோக்கி விரைந்து நடந்தேன்.

---

# நமது தற்காலக் கல்வி முறை

(வி. சங்கரையர்.)

[இது 1935வது டிசெம்பர் மாதத்திய "The Educational Review" என்ற சென்னை ஆங்கில மாதப் பத்திரிகையில் என்னால் 'Modern Education' என்ற தலைப்பின் கீழ் ஆங்கிலத்தில் எழுதப்பட்டதின் ஸாராம்சமாகும்.]

இந்தியர்களான நம்மைத் தற்காலத்தில் அதிகமாகப் பாதிக்கின்ற பல விஷயங்களில் ஒன்று நமது தேசத்தில் தற்சமயம் கற்பிக்கப்படும் கல்வியின் தன்மையேயாகும். நமது தேசத்தில் பல ஆரம்பப் பாடசாலைகளும் ஆங்கிலப் பாடசாலைகளும் இருக்கின்றன. ஆனாலும் தற்காலக் கல்வி முறை அவ்வளவு சரியானதென்று கூறுவதற்கு இடமில்லாமல் இருக்கிறது. நமது நிலைமையே நிலைமை!

ஒவ்வொரு பிதாவும் தமது மக்கள் நன்றாகக் கல்விகற்று மேதாவிகளாகி, யாதேனும் ஒரு உத்தியோகம் பெற்று அதனால் தங்கள் காலக்ஷேபத்தைச் செய்ய வேண்டுமென்று விரும்புகிறார். இது நியாயமானதே. அவர் இந்த உத்தேசத்தோடு கூடத் தம் மக்களைப் படிக்க வைத்துத் தம் பூர்வீகச் சொத்துக்களையும் இழக்கிறார். நாம் அவரை நோக்கி, "ஐயா! பாடசாலைகளெல்லாம் அறிவைப் புகட்டுவதற்காகவே ஏற்பட்டிருக்கின்றனவே தவிர உத்தியோகத்துக்குத் தயாரிப்பதற்காக வன்று" என்று கூறினால், அது செவிடன் காதில் ஊதப்பட்ட சங்கின் கதியை அடைகிறது. பாடசாலைகளில் கற்று பீ. ஏ., முதலிய பெரிய பட்டங்களைப் பெற்றுப் பெரிய உத்தியோகங்களில் தங்கள் குமாரர்கள் அமர வேண்டும் என்ற எண்ணத்தோடேதான் பெற்றோர்கள் தங்கள் குமாரர்களைப் பாடசாலைக்குப் படிக்க அனுப்புகிறார்கள். என்ன நினைவு? இது நியாயமே!

ஆனால் சர்வகலாசாலைகளில் படித்து மேற் கூறப்பட்ட பெரிய பட்டங்களைப் பெற்று வெளியே வந்த பலர் தங்களுடைய காலக்ஷேபத்துக்கும் கூடச் சம்பாதிக்க முடியாமல் பரதவிக்கின்றனர். தற்சமயம் சர்க்கார் உத்தியோகம் கிடைப்பதோ மிகவும் அரிது. பாடுபட்டுச் சம்பாதிக்கவோ இவர்களுக்குச் சக்தி கிடையாது. ஏனென்றால், எவ்வளவுக் கெவ்வளவு ஞான அபிவிருத்தியான கல்வியை மட்டும் ஒருவன் கற்கிறானோ அவ்வளவுக் கவ்வளவு கிருஹபரணத்துக்கு வேண்டிய வேலைகளைச் செய்ய அவன் அசக்தனாகவே யிருப்பது சகஜம்தான். தவிர, சாப்பாட்டிற்கு இல்லாவிட்டாலும் பெரிய பட்டதாரிகளாகையால் சௌரவத்தைக் காப்பாற்றுவதற்காகச் சில காரியங்களைச் செய்தாக வேண்டியிருக்கிறது. ஆகையால் கடையிலிருந்து

ஒரு அணுவுக்குக்கு வாங்கப்பட்ட கத்தரிக்காயை வீட்டிற்குத் தூக்கிக்கொண்டுவரக் கால் அணு கூலி கொடுத்துக் கூலியாளைத் தேட வேண்டிய நிலைமையை யடைகிறான். வெளியே செல்லும் பொழுது குடைத்துணி முதலிய அங்கிகளோடு கூடப் போக வேண்டி யிருக்கிறது. இவைகளுக் கெல்லாம் கையிலோ காசு கிடையாது. கௌரவத்தையும் காப்பாற்ற வேண்டும். என்ன செய்வான் பாவம்?

பரீக்ஷாதிகாரிகளோ வருஷா வருஷம் பரீக்ஷைகள் தேறுவதற்குள்ள விதிகளைச் சுலபப்படுத்திக் கொண்டே வருகிறார்கள். ஆகையால் தற்கால மாணவர்கள் பரீக்ஷைகளைத் தேற, புராதன கால மாணவர்களைப் போல அதிகக் கஷ்டப்பட்டுப் படிக்க வேண்டிய அவசியமே யில்லை. பரீக்ஷையில் தேறினதும் உத்தியோகப் பிராந்தி இவர்களை அணுகுகிறது. அரசாங்கத்தாரால் பரீக்ஷைகளில் தேறின எல்லா மாணவர்களுககும் வேலை கொடுப்பது என்பது அசாத்தியம். பயிரிடுவோனும், கைத்தொழில்கள் செய்வோனும் கூடத் தங்கள் தொழில்களை விட்டுப் பரீக்ஷைகளில் தேறி உத்தியோகப் பைத்தியம் பிடித்து அலைவது தான் தற்கால நிலைமை. தேகப் பிரயாசைபடவோ இவர்களுக்குச் சக்தி கிடையாது. தங்கள் பூர்விகத் தொழில்களைச் செய்யவும் இவர்களுக்குத் தெரியாது என்ன கஷ்டம்!

பரீக்ஷைகளை வெகு சுலபமாகத் தேற முடியும் என்றிருப்பதால் தற்கால மாணுக்கர்கள், பேசும் படக்காட்சிகளைப் பார்க்கச் செல்லும் ஜனங்கள் பணம் கொடுத்து அனுமதிச் சீட்டு (Ticket)ப் பெறுவது போல் சம்பளம் (School fees) கொடுத்து வகுப்பில் வந்து அங்குள்ள மேஜை (Desk)களில் ஆனந்தமாக அமர்ந்து ஏதே காதினால் கேட்கிறார்கள்; கண்ணால் பார்க்கிறார்கள். இன்னும் ஏதோ செய்கிறார்கள். பிறகு வீட்டுக்குச் செல்லுகிறார்கள். வீட்டிற்குப் போனதும் பாடசாலையில் கற்றவைகளைக் குறித்துள்ள சிந்தனையே அவர்களுக்குக் கிடையாது. இதென்ன காலம்!

இப்படியெல்லாம் இவர்கள் படிக்காமலே காலம் கடத்தக் காரணமென்ன? இதைக் குறித்து சிறிது ஆராய்வோம். அனேக ஆங்கிலப் பாடசாலைகளில், ஒழுங்காகப் படித்துத் தேறி வராத பல மாணுக்கர்களை அப் பாடசாலைகளிலிருக்கும் அத்யாபகர்கள் பரீக்ஷை செய்ததாகவுள்ள ஒரு வியாஜத்தால் நான்காவது பாரம் (Fourth form) வரையிலும் நேராகவே சேர்த்து விடுகிறார்கள். வித்தியார்த்திகளைப் பரீக்ஷை செய்து வகுப்புகளில் புதிதாகச் சேர்ப்பதும்,மேல் வகுப்புக்கு மாற்றுவதும், அந்தந்தப் பாடசாலை உபாத்தியாயர்களே செய்வதனால் அனேக தகுதியற்ற மாணுக்கர்கள் பல வகுப்புகளிலும் படிக்க நேரிடுகிறது. இதனால் உபாத்தியாயர்கள், பெற்றோர்களுக்குத் தங்கள் மக்கள் அந்தந்த வகுப்புக்குத் தகுதியானவர்கள் தான் என்ற ஒரு வித தப்பான அபிப்பிராயத்தை (False impression)க் கொடுத்து, மாணுக்கர்களைக் கெடுத்து விடுவதைத் தவிர வேறில்லை. இவ்வாறு மாணுக்கர்கள் S. S. L. C. வகுப்பு வரையிலும் உபாத்தியாயர்கள் தயவினாலேயே ஊர்ந்து வந்து விடுகிறார்கள். அவ் வகுப்பில் அதாவது ஆறுவது பாரத்தில் (Sixth form) சென்ற பிறகு தான் பல மாணுக்கர்கள் அவ் வகுப்பிற்குத் தாங்கள் தகுதியற்றவர்கள் என்று தெரிந்து கொள்கிறார்கள். என்ன செய்வது! கலி விசேஷமே!

கிறக, பாடங்களைக் கற்பிக்க வேண்டியதும், பரீக்ஷைகளுக்குக் கேள்விகளைத் தயாரிப்பதும், விடைகளைச் சரி பார்த்து மார்க்கு கொடுப்பதும் அந்தந்தப் பாடசாலையிலுள்ள உபாத்தியாயர்கள் பொறுப்பிலேதான் இருக்கின்றன. ஆகையால் தாங்கள் நடத்த வேண்டிய பாடங்களைப் பூராவும் நடத்தாமல் ஏதோ கொஞ்சம் பாகத்தை மாத்திரம் நடத்திக் கொண்டு காலத்தைத் தள்ளி விடுகிறார்கள். அந்த உபாத்தியாயர்களே வினுக்களைக் குறிப்பது என்ற ஏற்பாடும் இருப்பதாலும், பரீக்ஷை காலத்துக்கு முன் அக் கேள்விகளை அவ் வகுப்புகளில் படிக்கும் மாணுக்கர்களுக்கு விளக்க முடியுமானதாலும், பாடங்களை நடத்தின மட்டும் போதும் என்ற தைரியம் அவ் வத்தியாபகர்களுடைய மனதை அடைகிறது. இவ்வாறு பல விதத்தில் கல்வி நாளுக்கு நாள் க்ஷீணதசையை அடையவும் பாடசாலைகளெல்லாம் தகுதியற்ற மாணுக்கர்களை உண்டு பண்ணவும் காரணமாகிறது. இவ்வாறெல்லாம் கல்வி க்ஷீணிக்காமலிருந்த காலம் ஒன்று 1910-வது வருஷத்துக்கு முன்னிருந்தது. அம்முறை இப்பொழுது இல்லை. இந்தக் கொடுமையை யார் நிவர்த்திக்கப் போகிறார்களோ அறியேன்!

இப்படிப்பட்ட தகுதியற்ற மாணுக்கர்கள் S. S. L. C. பரீக்ஷைக்கு உட்கார்ந்து எழுதும்படி நேரிடுவதால், பரீக்ஷாதிகாரிகள், பரீக்ஷை தேறுவதற்குள்ள சட்டங்களை வருஷா வருஷம் இலகுப் படுத்திக் கொண்டே வந்து இப்பொழுது 25% வாங்கினவர்களும் கூட பரீக்ஷையில் தேற முடியும் என்று ஏற்படுத்தி யிருக்கிறார்கள். இனிமேல்—0—% வாங்கினவர்களும் கூட தேறி விடலாம் என்ற நிலையும் விரைவில் எதிர்பார்க்கலாம். இதிலென்ன ஆச்சரியம்!

இந்த நிலைமையைச் சீர்திருத்த ஒரே ஒரு வழிதானுண்டு. அதாவது நடுவே அங்கங்கே வடிகட்ட வேண்டும். ஐந்தாவது வகுப்பிலும், மூன்றாவது பாரத்திலும் அவசியம் இவ் வடிகட்டல்கள் இருக்கவேண்டும். இவைகள் அரசாங்கத்தாராலேயே நடத்தப்பட வேண்டும். அதாவது பிரைமெரி (Primary) லோயர் செக்கண்டரி (Lower Secondary) என்னும் இரண்டு பரீக்ஷைகளுக்கும் புத்துயிர் கொடுக்க வேண்டும். பிரைமரி பரீக்ஷையில் தேறி யோக்யதாபத்திரம் (Certificate) பெற்றவர்கள் தான் முதல் பாரத்து (First Form)க்கு அருகர் என்றும், லோயர் செக்கண்டரி பரீக்ஷையில் தேறினவர்களே நான்காவது பாரத்து (Fourth forom)க்கும், எலிமெண்டரி ஹயர் கிரேட் டிரெயினிங் (Elementary Higher Grade Training)க்கு தகுதியுள்ளவர்கள் என்றும் கண்டிப்பான சட்டமிருக்கவேண்டும். அதுவரையிலும் மாணவர்களும் சரியாகப் படிக்க மாட்டார்கள்—கட்டுப்பாடில்லாததனுல் உபாத்தியாயர்களும் சரியாக கற்பிக்க வேண்டிய அளவு நன்ருகக் கற்பிக்கவே மாட்டார்கள். இது விஷயமாக நான் "ஆனந்த போதினி" வால்யம் 20-பக்கங்கள் 286 முதல் 288 வரையிலும் எழுதியிருப்பதையும் அன்பர்கள் கண்ணுறுவார்களாக. மேதாவிகளில் பலர் இவ் விஷயத்தை இப்பொழுது தான் ஒப்புக்கொள்ளுகிறார்கள் ஆகையால் கல்வியதிகாரிகளும் சர்க்காரும் கூடிய சீக்கிரம் இவ் விஷயத்தைக் குறித்து நன்கு ஆராய்ச்சி செய்து வேண்டியது செய்வார்கள் என்று நம்பப்படுகிறது. தற்கால மாணவர்கள் சரியாகத் தேர்ச்சியற்றவர்கள் என்பதில் சந்தேகமேயில்லை. என்று தான் கல்வி முறை திருத்தப்படுமோ!

இப்பொழுது I, II, III பாரங்களுக்குப் பாடத் திட்டத்தைப் புதுப்பித்திருக்கிருர்கள். 1930ஞுத்தில் புதுப்பிக்கப் பட்ட கணித பாடத் திட்டமும் (Syllabus), 1934-ல் மாற்றி யமைக்கப்பட்ட பௌதிக சாஸ்திர பாடத் திட்டமும், 1935-ல் புதுப்பிக்கப்பட்ட பூமி சாஸ்திர பாடத் திட்டமும் மிகவும் நன்ருயிருக்கின்றன. தாய் பாஷை, ஆங்கிலம் இவைகளில் இலக்கண அறிவை அதிகப்படுத்துவதற்கு வேண்டிய சௌகரியங்களும் செய்யப்பட்டிருக்கின்றன. இலக்கண அறிவு இல்லாவிட்டால் ஒரு பாஷையைச் சரியாகக் கற்கவும் எழுதவும் முடியாது என்பது யாவரும் நன்கு உணர்ந்த விஷயமே. சரித்திரக் கதைகளில் பல, பாட புத்தகங்களிலேயே சேர்க்கப்பட்டு விடுவதாலும், அவைகளை மாணுக்கர்கள் இலகுவாக மற்றக் கதைகளைப் போல் உபாத்தியாயர் உதவி யில்லாமலே லைப்ரரி (Library) நேரங்களில் தாமாகவே தெரிந்து கொள்ள முடியுமாகையாலும் மூன்ருவது பாரம் வரையிலும் சரித்திரப்பாடம் கற்பிக்க வேண்டாம் என்பது எனது அபிப்பிராயம். ஆகையால் பாடத் திட்ட சம்பந்தமாக லோயர் செக்கண்டரி பரீக்ஷை ஏற்படுத்த ஒரு சிரமமும் இல்லை—இவ்வளவு தூரம் பாடத்திட்டங்களை யெல்லாம் புதுப்பித்து விட்டார்கள்—இவைகளை யெல்லாம் எந்தப் பாடசாலைகளில் சரியாக நடத்தி வருகிருர்கள் என்பதை யார் கவனிப்பது? இதைச் சரியாக கவனிக்கவே நான் கூறிய லோயர் செக்கண்டரி பரீக்ஷை ஒன்று சர்க்காரால் ஏற்படுத்த வேண்டும். இல்லா விட்டால் 1929-வது வருஷம் வரையிலும் ஹைஸ்கூல் வகுப்புகளில் இருந்த 'B' Group பாடங்களுடைய கதியே இப் பாடத் திட்டங்களும் அடையும் என்பதில் ஐயமுண்டோ!

கொச்சி அரசாங்கத்திலுள்ள வித்தியா இலாகா உபதேச சங்கத்தார் "பாடசாலைகளில் வைக்க வேண்டிய எல்லாப் பாட புத்தகங்களையும் தயாரித்து விற்பனை செய்யும் பொறுப்பை அரசாங்கத்தாரே எடுத்துக் கொள்ள வேண்டும்' என்று அரசாங்கத்தாருக்குச் சிபார்சு செய்திருக்கிருர்கள்—அதை அவர்களும் ஒப்புக் கொண்டிருக்கிருர்கள். ஐந்து வருஷங்களுக்குள் பாட புத்தகங்களை மாற்றக் கூடாது என்றும் ஒரே தொடர் புத்தகங்களையே தேர்ந்தெடுக்கப்பட வேண்டுமென்றும் அரசாங்கத்தாரால் சமீபத்தில் அனுப்பப் பட்டிருக்கும் உத்தரவுகள் மிகவும் அனுகூலமானவைகளே. பாடசாலைகளின் மானேஜர்கள் அடிக்கடி தான்தோன்றித்தனமாகப் புஸ்தகங்களைமாற்றிப் பெற்ருேர்களுக்கு வீண் நஷ்டங்களைக் கொடுத்து வந்ததை இந்த உத்தரவு தடுக்கிறது. எக் காரணத்தை உத்தேசித்தும் பாட புத்தகங்களை ஐந்து வருஷங்களுக்குள் மாற்றக் கூடாது என்பது நியாயமே—நமது சென்னை அரசாங்கத்தாரும் கொச்சி அரசாங்கத்தார் செய்த முறையைக் கைப்பற்றினுல் அனேக பெற்ருேர்களுக்கும் மாணுக்கர்களுக்கும் மிகவும் அனுகூலமாக இருக்கும் என்பது வாஸ்தவமே. ஆகையால் ஆங்கிலத்துக்கும் தாய் பாஷைக்கும் உரிய பாடப் புத்தகங்களை அரசாங்கத்தாரே ஐந்து வருஷங்களுக்கு ஒரு முறை கெஜட்டில் பிரசுரம் செய்ய வேண்டும். கணக்கு, பௌதிக சாஸ்திரம், பூமி சாஸ்திரம் முதலியவைகளுக்குரிய பாடப் புத்தகங்களை அந்தந்தப் பாட திட்டங்களைத் தயார் செய்தவர்களைக் கொண்டே ஆங்கிலத்தில் எழுதச் செய்து அவைகளைப் பல பாஷைகளிலும் அரசாங்கத்தாரே அச்சிட்டு

விற்றால் மிகவும் நன்மையை அளிக்கும். இது பெற்றோர்களுக்கு மிகவும் லாபகாமானதன்றோ?

ஒவ்வொரு பாடசாலையிலும், ஒவ்வொரு வகுப்புக்கும் ஒரு தினசரிக் குறிப்பு (Class diary) இருக்க வேண்டும் என்று சென்னை கல்விச் சட்டப் புஸ்தகத்தி (Madras Educational Rules)ல் ஒரு சட்டம் அதிகப்படியாகச் சேர்க்கப்பட வேண்டும். அந்த தினசரி குறிப்பில் ஒவ்வொரு பாடசாலையி லும், ஒவ்வொரு வகுப்பிலும், ஒவ்வொரு பீரியடிலும் நடந்த பாடத்தின் சங் கிரகமும் நடத்தின உபாத்தியாயரின் கையெழுத்தும் இருக்க வேண்டும். தினசரிக்குறிப்பு (Class-diary)ம், உபாதியாயர்களின் பாடக் குறிப்பும் (Teaching notes) ஒன்றோடொன்று ஒத்திருக்கின்றனவா? ஒரு வகுப்பில் நடத்தித் தீர வேண்டிய பாடங்களின் எவ்வளவு பாகம் அது வரையிலும் நடந்திருக்கிறது? முந்தின வருஷம் பரிக்ஷையானது முதல் இவைகள் சரி யாக வைக்கப் பட்டிருக்கின்றனவா? என்ற விஷயங்களை பரிக்ஷாதிகாரிகள் ஒவ்வொரு பாடசாலையிலும் நன்கு பரிசோதிக்க வேண்டும். இவ்வாறன்ன அதிகாரிகளின் கண்டிப்பும், லோயர் செக்கண்டரி பரிக்ஷையின் புனருத்தார ணமும் ஆங்கிலப் பாடசாலைகளுக்கு வந்து விட்டால்தான் தற்காலக் கல்வி முறையை ஒரு விதமாகச் சீர்திருத்த முடியும். அக்காலத்தை எதிர்பார்ப்பது என்றோ!

பாடசாலை நேரத்தைப்பாட நேரம் (Secular session) என்றும், தேர்ச்சி நேரம் (Practical session) என்றும் இரண்டாகப் பிரிக்க வேண்டும். காலைப் பாடமுள்ள வகுப்புகளுக்கு மாலைத் தேர்ச்சியும், காலைத் தேர்ச்சியுள்ள வகுப்பு களுக்கு மாலைப் பாடமும் கற்பிக்க வேண்டும். பாடசாலையின் காலம் காலை $2\frac{1}{2}$ மணியும் மாலை $2\frac{1}{2}$ மணி நேரமும் ஆக இருக்க வேண்டும்—பாட நேரத்தில் ஆங்கிலம், தாய்பாஷை, கணிதம், பௌதிக சாஸ்திரம் பூமி சாஸ்திரம் இவை களைக் கற்பிக்க வேண்டும். தேர்ச்சி நேரத்தின் ஒரு பகுதியில் லைப்ரேரியில் மாணுக்கர்கள் தாமாகவே லைப்ரேரியன் (Librarian) உதவியால் புஸ்தகங்க ளைப் பெற்றுக் கொண்டு வாசிக்க வேண்டும். மறு பகுதியில் சித்திர வேலை, மரவேலை, தறி வேலை, தையல் வேலை, பயிர்த்தொழில் முதலியவைகளைக் கற் பிக்க வேண்டும். மாலை பாடசாலை விட்டதும், எல்லா மாணுக்கர்களுக்கும் அந்தந்த வகுப்பு உபாத்தியாயர்களின் மேல் பார்வையில், தினமும் குறைந்த பக்ஷம் அரை மணி நேரம், தேகப்பயிற்சி கட்டாயப் பாடமாக இருக்க வேண்டும். தலைமை உபாத்தியாயர் உள்பட எல்லா உபாத்தியாயர்களும் ஐந்து வருஷங்கட்கு ஒரு முறை கட்டாய தேகப் பயிற்சி முறை (Refresher course) கற்பிக்கப்பட வேண்டும். அப்பொழுது மாணுக்கர்களுக்கு தேக சக்தி யுண்டாகும்.—தேக சக்தி பெற்றால் தான் மனோதிடமும் ஆத்மசக்தி யும் உண்டாகும். ஆகையால் ஆசிரியர்களுக்குத் தெரிய வேண்டியது அவ சியமே. ஆகையால் ஒவ்வொரு உபாத்தியாயரும் கட்டாயம் இந்த தேகப் பயிற்சி முறையை ஐந்து வருஷங்கட்கு ஒரு முறை கற்றுக்கொள்ள வேண் டியது அவசியமாகும்.

ஆரம்பப் பாடசாலைகளிலுள்ள 6,7,8-வது வகுப்புகளையோ, அல்லது ஆங்கிலப் பாடசாலைகளிலுள்ள I, II, III, பாரங்களையோ எடுத்து விட வேண்டியது அவசியமாகும்—இது விஷயத்தைப் பற்றிப், பல ஜில்லாக்களில்



# கடவுளை யறிதல்

(ஆசிரியர்-தே. வீரராகவ ஐயங்கார்.)

மானிடப் பிறவி பெற்ற மக்கள் கல்விப்பேறும் செல்வப்பேறு முடையவராய் விளங்கினும் கடவுளறிவு பெற்று அதனால் விளையும் பேரின்பம் பெற்றிலரேல் அவர், தம் பிறப்பின் செம்பயன் அடைந்தவராகாரென்பது நம் பெரியோர் கருத்து. கல்வியினும் செல்வத்தினும் கடவுணெறி சிறப்புடையது. மக்கள் யாவரும் கடவுள் ஒருவர் உண்டென்றும், அவர் அங்கிங்கெனாதபடி எங்குமிருக்கின்றாரென்றும், இறப்போடு பிறப்பிலாரென்றும், தோன்றாத் துணையாயிருந்து நம் யாவரையும் ஒவ்வொரு வினாடியும் புரந்து வருகின்றாரென்றும், உடம்பெடுத்த பயனாவதெல்லாம் அவ்வுத்தமனை யடைதற்கே யென்று மறிவார்கள். ஆயினும் பொய்ந்நின்ற ஞானமும் பொல்லா ஒழுக்கமும் அழுக்குடம்பும் பொலிந்து துக்கமயமா யிருக்கும் தீராத சுழல் காற்றுற்ற செத்தைபோல் சுற்றிச் சுற்றிப் பேராத பிறவிச் சுழற்குழியில் சுழலும் இப்பிறப்பிலிருந்து அவரை எப்படி அடைவதென்பது தான் நமது ஆராய்ச்சியாகும்.

கடவுளை ஒருவன் அறிய விரும்பின் முதன் முதலாக அவன் மாட்டுக் கடவுள் ஒருவர் உளர் என்ற நம்பிக்கைவேண்டும். கடவுணெறியில் ஏறுவதற்குரிய சோபானங்களில் (படிக்கட்டுகளில்) இது முதலாவதாகும். உலகிலுள்ள சகல மதங்களும் நம்பிக்கையென்ற அஸ்திவாரத்தினின்றமே எழுந்தவையாகும். நம்பிக்கை யின்றேல் உலகமுமில்லை; கடவுளுமில்லை; மதமுமில்லை. அக்காரணத்தைக் கொண்டுதான் ஓர் ஆங்கிலப் பெரியாரும் "கடவுளை எப்படியறிவது" என்று ஒருவர் கடாவிய காலத்து "நம்பிக்கை! நம்பிக்கை!! நம்பிக்கை!!!" என்று மும்முறை கூறினாராம்.

---

னும் கல்வியதிகாரியாக இருந்த காலத்தில் அநுபவத்தில் நன்கு உணர்ந்த நமது கல்வி இலாகா டைரக்டர் அவர்கள் சமீபத்தில் எல்லா ஹைஸ்கூல் ஹெட்மாஸ்டர்களுக்கும் ஒரு சுற்றறிக்கை அனுப்பியிருக்கிறார். டி அறிக்கையின் முடிவு இவ்விரண்டில் ஏதாவது ஒன்றை எடுத்துவிட வேண்டியதாகவே யிருக்கும் என்று நம்பப்படுகிறது இவைகளை யெல்லாம் நன்கு ஆராய்ந்து அவசியமான சீர்திருத்தங்களைக் கூடிய சீக்கிரம் செய்து பாடசாலை மாணவர்களுக்கும், அவர்கள் பெற்றோர்களுக்கும் நன்மையளிக்கும்படி, கடவுள், அதிகாரிகளின் மனதில் அருள் புரிவாராக!'

"ஆண்டவன் ஒருவன் உளன், நாம் அவனடிமை" என்ற திடமான நம்பிக்கை நம்மி லுதித்ததும் அதன் பிறகு உண்டாகவேண்டியது ஆண்டவனை யறிய வேண்டிய ஆர்வம்.

அவ்வார்வம் சாமானியமா யிருந்தாற் போதாது. தண்ணீரினுள் மூழ்கி யிருக்கும் ஒருவனை வெளிக் கிளம்ப வொட்டாமற் சிறிது நேரம் தண்ணீரி லேயே அழுத்தி வைத்திருப்பின், அவன் தண்ணீரினின்றும் வெளிவர எவ்வளவு ஆர்வங் கொள்வானோ அவ்வளவு ஆர்வம் கடவுளைக் காணவு மிருக்க வேண்டும்.

ஸ்ரீ ராமகிருஷ்ண பரமஹம்சர் அன்னையைக் காணவேண்டுமென்ற ஆர்வத்தால் அநேக நாட்கள் அன்னமின்றித் தியானத்தில் ஆழ்ந்து கிடப்பார். அன்னை அருள் பாலிக்கவில்லையே யென்று இரவு முழுதும் அழுவார். காலையிற் பார்த்தால் அவரது ஆடைகள் அழுத கண்ணீரால் நனைந்து கிடைக்கும். அரும்பொன்னே, மணியே, என் அன்பே, என் அன்பான அறிவே, ஆனந்த வெள்ளமே என்று ஆடிப்பாடி அகங்குழைந்து கண்ணீர் சொரிவார். இத்தகைய ஆர்வம் நம்மில் ஏற்பட்டு முற்றினல் எம்பெருமான் பிரிவு தாங்க முடியாததாகும். அவனைப் பிரிந்திருக்கும் ஒவ்வொரு நிமிடமும் நரக வேதனைக் கொப்பாம். இப்பிரிவுத் துன்பமே ஞானத்தைக் கொடுத்து ஆண்டவனைக் காணச்செய்து அவனை நேசித்து பக்திபண்ணச் செய்யும். பக்தியே முக்திக்கு யுக்தி. பக்தி பண்ணிக் கொண்டிருந்தால் முக்தி பெறுவது நிச்சயம். உண்மையறிவும் பக்தியும் சச்சிதானந்தத்தி லுய்க்கும். அதுதான் முக்தி அல்லது வீடு என்பது. இதைத்தான் கடவுளை அறிந்தவர்கள் சொல்லிச் சென்றார்கள்.

ஒருவனிடம் கடவுளிருப்பில் நம்பிக்கை யில்லையானல் அவனிடம் கடவுளைக் காணும் ஆர்வம் எழாது. கடவுளைக் காணும் ஆர்வம் இன்றேல் கடவுளைப் பிரிந்திருப்பதினு லுண்டாகும் துன்ப மிருக்காது. பிறகு கடவுளைப் பற்றிய அறிவு உண்டாவதற்கு அங்கு எங்கு இடனிருக்கிறது? ஞானம் எங்கிருந்து பிறக்கும்? ஞானமின்றேல் கடவுளிடம் அன்புசெய்து அவரை வந்தனை செய்ய எவ்வாறியலும்? பகவான் கீதையில் "என்னை அறிவதற்கு ஞானம் அவசியம். ஞானியே என்னுடன் நித்திய சம்பந்தமுள்ளவன். ஞானிக்கு எல்லாவற்றைப் பார்க்கிலும் நானே பிரியன். அவன் என் ஆத்மாவென்று என் அபிப்பிராயம். ஏனெனில் ஞானியானவன் மனதை என்னிடத்தில் நிறுத்தி என்னையே சர்வோத்தமப் பிராப்யமாய் நிச்சயித்தவனுவான்" என்கிறார். ஞானமில்லாதவனுக்கு நித்தியானந்தமென்பது முயற்கொம்பாகும். பிறகு உலகத்திற்கெல்லாம் தாயும் சர்வஜீவ தயாபரனுமாகிய கடவுளது லீலா விபூதிகளில் பிரியம் உண்டாகாது.

நாம் ஒருவரைப் பார்த்து "நீர் கடவுளைக் காண விரும்புகின்றீரா?" என்று வினவின், "ஆம்" என்பார்.

ஆனல் அவரது ஹிருதயத்தை ஆராய்ந்து பார்ப்பின் கடவுளைக் காண்பதற்கு வேண்டிய அன்பும ஆசாரமு மிருக்காது. அன்பிருக்குமாயின் அதை அவர் வழிபடும் கடவுளின் பிரிவுத் துன்பத்தாற் காணலாம். மக்கள் மனதில் இருவிதத் துன்பம் உண்டாகலாம். ஒன்று, உலக ஞானமற்றுக் கடவுளறிவு மேம்பட்டு அவரைப் பிரிந்திருப்பதனல் உண்டாகுந் துன்பம். மற்

ரென்று மண், பெண், பொன் முதலிய வேட்டைகளிற் போதிய பலன் கிடைக்கவில்லையே யென்ற துன்பம். முன்னையது கடவுளிடம் செலுத்துவது. பின்னையது கடவுளை நம்மினின்றும் அப்புறப்படுத்தி உலகத்திலாழ்த்துவது. ஆராய்ந்து பார்க்குங்கால் தற்காலத்தில் மக்கள் காலக்கொடுமையினாலோ, நாகரிக மிகுதியினாலோ வென்றியே வேண்டி வீழ் பொருட்கிரங்கி, மெய்யெல்லாம் போகவிட்டு விரிகுழலார் மயக்கிற் பட்டுப் பொய்யெல்லாம் பொதிந்துகொண்டு, ஞானம் சிறிதும் தம்மிடம் அண்டுவதற்கு இடனளிக்காது காலத்தை வாளாக் கடத்துகின்றனர். இவர்கள் இவ்வாறு எதற்காகப் பாடுபடுகின்றார்களோ? அவைகளும் இவர்களும் அழியாதிருந்தால் இவர்கள் படும் கஷ்டத்திற்குப் பலனுண்டாம். அந்தோ! இவ்வுலகத் துன்பமும் இன்பமும் வானிற் றோன்றும் மின்னலொத்தவை மேலும் இப்பொழுது உயிருடனிருப்பாரை அடுத்த நிமிஷத்திலுயிருடனிருப்பார் என்று சொல்வதற்குத் திடனில்லையே.

"முற்றியபின் கனியுதிரும் பழுப்புற்றுத்
தழையுதிரும் முழுதுமே செய்
வற்றியபின் விளக்கவியும் என்னவோர்
திடமுண்டு மக்கள் காயம்
பற்றிய அக்கருப்பத்தோ பிறக்கும் போதோ
பாலப் பருவத்தோ மூப்பு
உற்றபின்போ வீழ்வதென நிலையின்றேல்
இதன் பெருமை உரைப்பதென்னே."

'நேற்றிருந்தான் இன்றில்லை' யென்ற மாபெரும் பெருமையல்லவா இவ்வுலகம் பெற்றிருக்கிறது? வீடு துறந்து காடடைந்து புலன்களை வென்று, கண்மூடி மௌனியாகிக் கந்த மூலங்களைப் புசிப்போர்க்கே நித்தியானந்தம் கிடைப்பதரிதாயிருப்பின் இவர்க ளடையப் போகும் மோக்ஷத்தைப் பற்றி பேசுவானேன்!

முத்தியடைந்த புண்ணிய புருடர்களது சரித்திரங்களையும் அவர்களது அவதார அற்புதச் செயல்களையும் எடுத்தோதின காலத்தும் இவர்கள் தங்களது கேவலமான நிலையினின்றும் மேற்செல்ல விரும்பார்கள். இவையெல்லாம் கட்டுக்கதை என்பார்கள். பக்தர்களையும் பித்தர்கள் என்பார்கள். ஆம், அவர்கள் ஓர் விதத்திற் பித்தர்களே. வங்காளத்திற் றோன்றிய ஸ்ரீ கிருஷ்ண சைதன்யர் "பேயரே எனக்கு யாவரும்! யானும் ஓர் பேயனே இது பேசியென்? யான் பேயனு யெழுந்தேன் எம்பிரானுக்கே" என்றார். கடவுளைக்காணும் தொழிலில் அவர் கொண்ட ஆர்வத்தை யாரே பகரவல்லார்? தம்மை மறந்தார், தம் குடும்பத்தை மறந்தார். உலகத்தை மறந்தார். சராசரங்களிடத்திற் சிறிதும் வித்தியாசமின்றி அவர்களிடம் சென்று, "கண்ணனை என்று காண்பேன்? ஈசன் நான்முகன் வாசவன் தலைவன் எனக்குப் புலப்படுவானோ? நான் அவனை எங்குக் காண்பேன்? அவனைக் காணாவிடில் உயிர் உடலில் தங்காதே?" என்று அரற்றினர். ஹரி நாமத்தை யாராவது உச்சரிக்கக் கேட்டால் அப்படியே அந்நாமத்திலாழ்ந்து தம்மை

மறந்துவிடுவோர். "எவன் பகவானது பெயரைக் கேட்ட மாத்திரத்தில் அதிலாழ்ந்து தன்னை மறந்து விடுவானோ அவனே உண்மை வைஷ்ணவன்" என்றார் மகாத்மா கார்த்தியடிகள். உண்மையாகத் தம்மை பிரம்மஸ்வரூபத்தில் லயித்துக்கொண்டார். சரீரம், ஆன்மா எல்லாவற்றையும் அப்படியே கடவுளன்பில் நனைத்துவிட்டார். கடவுளைக் காண்பார்கள் அடையும் இன்பத்திற்கு இவரது வரலாறு ஓர் உதாரணமாகும். இவர் கடவுளைக் காணச் செய்த முயற்சியானது வீணாகப் போயிற்று என்று யாரால் சொல்லமுடியும்?

மஹா பக்த சிரோன்மணிகளான மீரா, ஆண்டாள் இன்னுமிவர் போன்றவர்களது சரித்திரங்களை வாசிப்பின் இவர்கள் கடவுளின் பிரிவுத் துன்பத்தை எவ்வாறு அனுபவித்தார்களென்பது புலனாகும். இவர்களது பிரிவு அவஸ்தையை விளக்குவான் புகுந்த பெரியார்,

"பட்டுடுக்கும் அயர்த்திரங்கும்
பாவை பேணாள்
பனி நெடுங்கண் ணீர்ததும்பப்
பள்ளி கொள்ளாள்
எட்டுணைப்போ தென்குடங்கா
லிருக்க கில்லாள்"...என்றும்,

"நெஞ்சுருகிக் கண்பனிப்ப நிற்கும் சோரும்
நெடிதுயிர்க்கு முண்டறியா ளுறக்கம் பேணாள்"

என்றும் இன்னும் பல வேறு விதமாகப் பாடுகிறார். இப்பக்த சிரோன்மணிகள் தமது உலக இன்பகரமான வாழ்க்கையைத் தள்ளினார்கள்; சுற்றத்தைத் துறந்தார்கள்; யௌவனத்தை மறந்தார்கள்; எம்பெருமானின் திருவடிக்கே தம்மை ஆளாக்கிக் கொண்டார்கள். கடவுளைக் காண வேண்டுமென்ற ஆர்வத்தினால் ஓடுவார், விழுவார், உகந்தாலிப்பார், நாடுவார், நம்பிரான் எங்குற்றானென்பார், பாடுவார், நின்றாடுவார், பண்ணினைப்பாடிக் கண்ணனைக் கூவி யழைப்பார். ஆடிப்பாடி அகங்கரைந்து கண்ணீர் மல்கி நாடி நாடி நாரணாவென்று வாடுவார். இவர்கள் இவ்வாறு வறிதே துன்புற்றார்கள் என்று யாராவது சொல்ல முடியுமா?

ஆகையால் சின்னாட் பல் பிணியுடைய உலகத்தீரே! கடவுளையறிய ஆவலுடையீரானால் முதன் முதலாக யாவரையும் வஞ்சித்து உளன் ஒருவன் என்று நம்புங்கள். பிறகு அவரைக் காண ஆசைப்படுங்கள். கடவுளைக் காண வேண்டியதற்குரிய ஆசையை ஓர் விசாரமாக்கிக் கொள்ளுங்கள். கடவுளைப் பற்றி நமக்கெழும் விசாரத்திற்கேற்பவே நமது ஞானமும் உண்டாகும். கடவுளைப்பற்றிய ஞானம் உண்டாகத் தலைப்பட்டதும் அது நாளடைவில் முற்றி ஆண்டவன் மாட்டு அன்பையும் பக்தியையு முண்டுபண்ணும். இதுதான் சென்று மீளா உலகமாகிய முக்தி உலகிற் சேர்த்து எம்பெருமானின் வைபவங்களை அனுபவிக்கும் படியாகச் செய்யும் சத்திய மார்க்கம். இந்நெறியே நித்தியானந்தத்தை யளிக்கும். கடவுள் 'பத்துடையடியவர்க் கெளியவன், பிறர்களுக்கரிய வித்தகன்.' அவன் பக்திவலையிற் படுவான். அவன் தொண்டருள் அடக்கம்.

பற்றிக் கூறிய காலம் மிகுந்த சுபிட்சமான காலமாயிருந்திருக்கவேண்டும். அக் காலத்தில் தற்போது நமது நாட்டில் ஏற்பட்டிருக்கும் பாழான ஒரு நிலைமை இல்லாதிருந்ததென்றே அறியக்கிடக்கிறது. அப்புராதன காலத்தில் அவ்வுயர்ந்த சாஸ்திரங்கள் பலவற்றுள் முதிர்ந்த ஞானமும், அநுபவமும், போதனு சக்தியும்பெற்ற ஆசிரியர்களும் ஆசிரியைகளும் இருந்திருக்கிறார்கள் என்பதையும், அவைகளைக் கற்க வசதிகளும் அவகாசங்களும் பெற்ற மாணவிகளும் இருந்திருக்கிறார்கள் என்பதையும் நினைக்கும்போது, முன்கால க்ஷேம நிலையின் அளவும் நம்முன் தோன்ற நமக்குள் பெரிய வியப்பு உண்டாகிறது. வாசகர்கள் அவ்விவரங்களை ஊன்றிப்படித்து அவை தற்காலத்திற்கு எவ்வளவு தூரம் நன்மைசெய்யக் கூடுமென்பதைப் பற்றிச் சிந்திப்பார்களாக. அக் கலைகளின் விவரம் வருமாறு:—

1. கீதம்—வாய்ப் பாட்டு.

2. வாத்தியம்—சங்கீதக் கருவிகளை உபயோகித்தல்.

3. நிர்த்தம்—நடனம்.

4. வீண தாமருக்கா வத்யனி—வீணை வாசித்தலும் தாமருக்கா என்ற மேளம் வாசித்தலும்.

5. புஸ்தக வசனம்—ராமாயணம், மகாபாரதம், முதலிய நூல்களை சங்கீதப் பாங்கில் படித்தல்.

6. நாடக கியாயிகா தரிசனம்—நாடகங்களிலும் கதைகளிலும் அறிவுடைத்திருத்தல்.

7. பிரகிலிகா—விடுகதைகள் போடுவதும் அவைகளை விடுவிப்பதும்.

8. பிரதிமாலா—வேடிக்கையான ஒரு முறையில் சுலோகங்களை ஒப்புவித்தல்.

9. துர்வாச யோகம்—உச்சரிக்கக் கஷ்டமாயிருக்கும் சுலோகங்களையும் பிறரோடு சேர்ந்து ஒப்புவித்தல்.

10. காவிய சமாசிய புராணம்—ஒரு கவிக்கு முதலடியை ஒருவர் கொடுக்க மீதியைப் பாடிக் கவியை முடித்தல்.

11. பட்டிகாவேத்ர வன விகல்பம்—பிரம்புகளினாலும் ஓலைகளினாலும் பலவிதமான தட்டு முட்டுச் சாமான்கள் செய்தல்.

12. தக்ஷனம்.—தச்சுவேலை.

13. வஸ்துவித்யா—மனை சாஸ்திர விதிப்படி வீடுகள் கட்டுதல் முதலியன.

14. ரூப்ய ரத்ன பரீக்ஷை—நவரத்தினங்களைப் பரீக்ஷித்து மதிப்பிடுதல்.

15. தத்துவாதம்—மட்டமான உலோகங்களிலிருந்து உயர்ந்த உலோகங்களை உண்டாக்கத்தெரிதல்.

16. மணிராக கரா ஞானம்—கற்களுக்குச் சாயம் ஏற்றுதலும் சுரங்க வேலையும்.

17. விருக்ஷாயுர்வேதம்—விவசாயத்தொழில். செடி கொடிகளின் நோய்களைக் கண்டுபிடித்து, அவைகளுக்கு மருந்து பிரயோகித்தல்.

18. மேஷ, குக்குட, லவகா, யுத்தனி—ஆடுகள், சேவல்கள், கௌதாரிகள் ஆகியவைகளை ச் சண்டைக்குப் பழக்குதல்.

19. சுக சரீர பிரலாபனம்—கிளிகளுக்கு மனுஷ பாஷையை பேசக் கற்பித்து அவைகளின் மூலமாகப் பிறருக்குச் சங்கதிகள் அனுப்புதல்.

20. காவியக் கிரியா—கவிகள் செய்தல்.

21. மானஸி—கவிகளில் அல்லது வசனங்களில் காலியாக விட்டுவைக்கப்பட்டிருக்கும் இடங்களில் பொருத்தமான பதங்களைப் போட்டு முடித்தல்.

22. மிலேச்சித விகல்பம்—ரகஸிய பாஷை உபயோகித்தல்.

23. தேச பாஷாவி ஞானம்—பற்பல தேச பாஷைகளை அறிதல்.

24. நிமித்த ஞானம்—சகுன சாஸ்திர அறிவு.

25. புஷ்ப சகட்டிகம்—பூக்களினால் வண்டிகள், பல்லக்குகள், யானைகள் முதலியன செய்தல்.

26. யந்திர மாத்ரிகா—இயந்திரங்கள் செய்யும்ஞானம்.

27. தாரண மத்ரிகம்—அவதானம்.

28. சபாத்யம்—முறை சொல்லுதல்.

29. அக்ஷர முஷ்டிக சாதனம்—சுருக்கெழுத்து அர்த்தங்களை அறிந்துகொள்ளுதல்— பரிபாஷை.

30. த்யூத விசேஷம்—சூதாட்டங்கள்.

31. அகாசக்ரீடை—சொக்கட்டான் ஆடுதல்.

32. பாலகிரிதா நகனி—குழந்தைகளின் பந்து, பொம்மை விளையாட்டு.

33. வித்தியா—ஞானம்-ஒழுக்க நூல் ஞானம்.

34. எதிரியை வென்று ஜெயம்பெற வழிகளைக் கற்பிக்கும் ஞானம்.

35. தேகப்பயிற்சி ஞானம்.

36. அகராதிசந்த ஞானம்.

37. காவியம், அலங்காரம், கவிகள் செய்தல்.

38. விகடப் பிரசங்கம்—சப்தங்களையும் உருவங்களையும் மறைத்து வேறாய்க் காட்டல்.

39. அதிக நீளமான சேலைகளைச் சிறிதாகத் தோன்றும்படி உடுத்தல்—கந்தல் சேலைகளைக் கந்தல்தெரியாமல் உடுத்தல்.

40. சித்திரம்.

41. நெற்றியில் திலகம்போல வைப்பதற்கு ஏற்றபடி பலவித உருவங்களை இலைகளில் வெட்டுதல்.

42. பூஜாகாலங்களில் வர்ணம் ஏற்றிய அரிசி முதலிய தானியங்களையும் பல வர்ணப் பூக்களையும் அழகுபெறப் பலவிதமாக அலங்கரித்தல்.

43. வீட்டுத் தளங்களைப் புஷ்பங்களால் அலங்கரித்தல்.

44. பற்களுக்கும், துணிகளுக்கும் தேகத்திற்கும் வர்ணம் ஏற்றுதல்.

45. வீட்டின் சில பாகங்களில் வர்ணக்கற்களை அழகுபெறப் பரப்பி, அமைத்து அலங்கரித்தல்.

46. மனிதர்களின் இயல்புக்கேற்றவாறு படுக்கை அமைத்தல்.

47. விநோத ஜலக்கிரீடை.

48. குழாய்கள் மூலமாகப் பிறர்மேல் ஜலத்தை விநோதமாகப் பீச்சுதல்.

49. பில்லி, சூனிய வித்தை.

50. பூக்கட்டுதல்.

51. தலைக்குச் சூடும் கிண்டாரம் போன்ற கட்டுகளைப் பூக்களால் செய்தல்.

52. பலவிதமாய் உடுக்கவும், ஆபரணங்கள் அணியவும், பூச்சூடவும் தெரிந்து கொள்ளுதல்.

53. தந்தம், சங்கு முதலியவைகளால் அணிகள் செய்தல்.

54. வாசனைச் சாமான்கள் செய்தல்.

55. புது ஆபரணங்களைச் செய்தலும், பழைய ஆபரணங்களைப் புது மாதிரி செய்தலும், அவைகளை உரியபடி அணிந்துகொள்ளுதலும்.

56. ஜாலவித்தை அறிந்திருத்தல்.

57. மூலிகைகளின் உதவியினால் தேகபலத்தையும் வீரியத்தையும் அதிகரிக்கச் செய்தல்.

58. காரியங்களைச் சுலபமாயும் சீக்கிரமாயும் செய்துமுடிக்கத் தக்கவாறு மெல்லிய கைகளை உடைத்தாயிருத்தல்.

59. சுயம்பாகம் (சமையல் சாஸ்திரம்.)

60. பலவிதமான பானங்கள் செய்யத் தெரிந்திருத்தல்.

61. தையல் வேலை.

62. கயிறுகளால் பொம்மைகளை ஆட்டுதல்.

63. மரம், வெள்ளி, இரும்பு, தங்கம் முதலியவைகளால் பலவித குறிகள் செய்தல்.

64. உடம்பு பிடித்துவிடவும் தலைமயிரை அலங்கரிக்கவும் தெரிதல்.

மேலே சொல்லப்பட்ட 64 கலைகளும் ஆடவர்களுக்கும் பெண்டிருக்கும் பொதுவாக இருக்கத்தகுந்தவை அநேகமிருந்தால், அப்புராதன காலங்களில் பெண்கள் ஆண்களுக்குச் சமத்துவமாகவே கருதப்பட்டு கல்வியளிக்கப்பட்டு வந்திருக்கிறார்கள் என்பது குறிப்பிடத்தக்கதா யிருக்கிறது.—"நகர தூதன்"



# "மணிமேகலை" ஆராய்ச்சி

ஸ்ரீ R. V. இராமஸ்வாமி B. A., B. L. வக்கீல், சேலம்.


## 4. சரித்திரக் குறிப்பு

### 7. கிள்ளி வளவன் (ஆட்சி முறை)

மணிமேகலையில் "அருள்புரி நெஞ்சமொ டரசன் கூறலின்" என வந்துள்ளதாலும் (19: 140); வான்சிறைக் கோட்டத்தை இவ் வரசன் விஞ்சை மகளின் வேண்டுகோட் கிரங்கி, அவள் கேட்டவண்ணமே அறஞ்செய் கோட்டமாக ஆக்கியதாலும், கிள்ளிவளவன் காரண காரியங்களை ஆழ்ந்து அறிந்து அதன்படி எல்லாவற்றையும் செய்து வந்தனனென்பதையும் ஊகித்துணரலாம்.

இவ்வரசன் தனது மகன் இறந்த செய்தியை மாதவர் தம்முன்னோர் மாதவனுரைக்கக் கேட்டு, சோழிக ஏனாதியை நோக்கி "இளங்கோன் றனக்கு யான் செயற்பாலதாகிய தண்டனையை விஞ்சையன் முன்னரே செய்து விட்டான். ஆகலின் அவ்விஞ்சையன் தவறொன்றுஞ் செய்திலன். மாதவர் நோன்பும் மடவார் கற்பும் கேடுற்று அழிவுறாதிருக்கக் காத்தலே காவலன் காத்த வுரிமையைப் பெற்றதின் கடமையாகும். அதுவே அரச தருமமுமாம். மகனை முறை செய்த மன்னவன் வழித் தோன்றினோரில் இத்தகைய தீய வினையாளன் ஒருவன் தோன்றினனென்ற கொடுஞ் செய்தி பிறவேந்தர்களின் செவியுறுவதன் முன்னம், தீயோன் இவனை ஈமத்தேற்றிக் கணிகை மகளையும் காவல் செய்மின்" என்று (22: 205-15) பணித்தனன். இதனால் இவ்வுத்தம மன்னனின் குன்றாத வீரமும், குணவிசேடமும், நடுநிலைமையும், நீதிமுறையும் ஆட்சியின் மாட்சியும் நன்கு விளங்கும். பலரும் புகழ்ந்திடும் சீரிய குணங்களைக் கொண்டிருந்தமையின், இம் மன்னனது நாட்டையும், இவனது நட்பையும் நாடிப் பிறநாட்டு மக்கள் விருப்பத்தோடு வந்தனரென்பது,

> "கிள்ளி வளவனொடு கெழுதகை வேண்டிக்
> கள்ளவிழ் தாரோய் கலதொடும் போகிக்
> காவிரிப் படப்பை நன்னகர்ப்புக்கேன்." (25: 12—6)

என வந்துள்ளதால் விளங்கும்.

#### தலைநகரின் அழிவு

'மணிமேகலை'யின் இறுதியில் காவிரிப்பூம்பட்டினத்தைக் கடல் கொண்டதாக, ஆபுத்திரனோடு மணிபல்லவ மடைந்த மணிமேகலைக்குத் தீவதிலகை கூறியதாகக் கூறப்பட்டிருக்கிறது. (25-176) பீலி வளைக்குப் பிறந்து காணாமற்போன பிள்ளையே கடல் நகரைக் கொண்டதின் காரணமாயினன்.

கடலைச் சார்ந்த மணற்கரையருகிலுள்ள புன்னையம்பூநாறுஞ் சோலையில், இளவேனிற் பருவத்தில், உலவுதற்குச் சென்ற கிளர்மணி நெடுமுடிக் கிள்ளி, அழகிய மாதொருத்தியைக்கண்டு மயங்கி, மாதமொன்று அவளோடு மங்கிருந்தனன். ஒருதினம், அரசனோடு யாதுங்கூறாது அவ்விளங் கொடி வெளியே போயினள். அரசன் அச்சோலையெங்கும் அவளைத் தேடியும் காணாகி அயர்வுற்றனன். ஆகாயவழியே அவ்வமயத்துச் சென்ற சாரணரொருவரங்கு வர அவரடி வணங்கி, எங்குங்காணாத நங்கையைக் குறித்த செய்தியைக் கேட்டனன். சாரணரும் நாகநாட்டை நடுநிலை தவறாது நல்லாட்சி புரியும் வளைவணனது மனைவி வாசமயிலையென்பாளின் வயிற்றிற் றோன்றிய பீலிவளையென்னுமவள், சோதிடர் அவள் பிறந்த பொழுதே கணித்த முறைப்படி, சூரியகுலத் தரசனோடுங்கூடிக் கருவுற்று, மீண்டும் தன்னாடேகினளென்றும், இனி அவள்பெற்ற மகனே அரசன் காண வருவானென்றும் கூறிச் சென்றனர். சிறைப்பட்ட மணிமேகலையை வெளிப்படுத்தவந்த சித்திராபதி இராசதேவியிடம் இவ்வரலாற்றை மொழிதல் நோக்குக. (காதை. 24.)

நாகநாட்டு மன்னனின் மகள் பீலிவளை, புத்த பீடிகையின் தரிசனத்திற்காக,

'பனிப்பகை வானவன் வழியிற் றோன்றிய
புனிற்றிளங் குழவியொடு பூங்கொடி"

மணிபல்லவத்தை யடைந்தனள். அங்கிருந்து காவிரிப்பூம்பட்டினத்தை நோக்கிக் கப்பலேறிச் சென்ற கம்பளச்செட்டி யென்ற கடல் வர்த்தகனிடம் தனது குழந்தையைக் கொடுத்து, அவனது தந்தை சோழஅரசனிடம் ஈயுமாறு கூறினள். கரையினருகில் வருகையில் காலாற் கலங்கிக் கப்பலுடைந்து கவிழ்ந்துவிட, கலத்தோடு இளையனும் கடலில் வீழ்ந்தனன். தப்பிப் பிழைத்துக் கரையேறிச் சென்றோரிற் சிலர், சோழனை அடைந்து கலத்தின் கதியையும் அவன் மகனுக்குற்ற விதியையும் தெரிவித்தனர். அரசன் அது கேட்டுப் பெரிதும் வருந்தி மைந்தனைத்தேடும் நோக்கத்தையே கொண்டு, கானலுங் கடலுங் கரையுமாகிய எங்கும் அலைந்து திரிவானாயினன். அதனால் நகரின் வழக்கப்படி இந்திரவிழா நடைபெறாது தடைப்பட்டது. அக்காரணத்தால் சீற்றங்கொண்டு மணிமேகலாதெய்வம், இந்திரசாபப்படி நகரைக்கடல் வயிற்றிற் படுமாறு சபித்தனள். சாபகாரணத்தால் நகரும் கடலால் மூடப்பட்டது. இவையனைத்தும் இக் நூலகத்துக் குறிக்கப்பட்டுள்ளன. (காதை. 25, 28) கடலின் செயலைக்கண்ட அரசனும் அவ்வூரைவிட்டு வெளியேறி வேற்றிடஞ் சென்றனனெனக் கூறப்படுவதால், அது கிள்ளி வளவனின் ஆட்சிக்கால இறுதியாகவே இருத்தல் வேண்டுமென்று அனுமானிக்க இட முள்ளது. சோழநாட்டின் தலைநகரம் கடல் வாயுட்பட்டு அழிந்த செய்தி தெளிவாக வேறு எங்கும் காணப்படவில்லை.

### சங்க நூற்கள் கூறுவன

சங்க நூற்களில் கிள்ளி வள்வன் என்று காணப்படும் பெயரோடு, மணிமேகலையில் வரும் உதயகுமாரனின் தந்தையாகிய சோழமன்னனின், பல பெயர்களில் ஒன்றாகிய கிள்ளி வளவனென்பது ஒத்திருத்தலால் இருவரும் ஒருவராக இருந்திடலாமாமென்று கருதப்படுகின்றது. சங்க நூற்களில்

கிள்ளிவளவன், சோழன் குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளி வளவனென்ற பெயருடனே காணப்படுகின்றனன். ஆயின் அந்நூற்களில், மணிமேகலையில் இம்மன்னனைக் குறித்துக் கூறப்பட்டுள்ள செய்திகளெவையும் கூறப்படவில்லை. இவன் சோணாட்டிலுள்ள குளமுற்ற மென்னுமிடத்தில் நடந்த சேரசோழ யுத்தத்தில் உயிரிழந்தமைபற்றி இப்பெயரொடு வழங்கப்படுகின்றனன். அக் காரணம்பற்றியே சில விடங்களில் சேரன் குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளி வளவனெனக் காணப்படுகின்றனன்.

சங்க நூற்களில் கிள்ளிவளவனது அரசாட்சியின் தலைநகரம் உறையூரென்றே காணப்படுகின்றது. (புறம். 39) காவிரிப்பூம்பட்டினத்தைப் பற்றிய செய்திகள் காணப்படவில்லை. அந்நகரம் கடல் கொண்டதன் பின்னர் இவன் உறையூருக்கு வந்திருக்கலாம்! அன்றிச் சோழர் உறையூர், புகாரென்ற இரு நகரங்களையும் தமது ஆட்சித் தலைநகரங்களாகக் கொண்டிருக்கலாம்!! அன்றிச் சோழநாட்டின் துறைமுகப்பட்டினமாகப் புகாரைக் கொண்டும் இருக்கலாம். இவ்விஷயம் விரிந்த ஆராய்ச்சி செய்தபின்னரே துணிபுடன் கூறவேண்டி யுள்ளது.

சங்க நூற்களில் காணப்படும் கிள்ளி வளவனது தலைநகரம் உறையூரென்றிருக்க, மணிமேகலையில் காணப்படும், அப் பெயருடைய மன்னனது தலைநகரம் புகாரென உள்ளதைத் தெளிவுபெற அறிந்திடலாம். இப்பேதத்திற்குக் காரணம் நன்கு விளங்கவில்லை. மணிமேகலை சங்கநூற்களாகிய புறநானூறு, அகநானூறு முதலியவற்றிற்குப் பிற்பட்ட நூலாகக் கருதப்படுகின்றது. ஆகலின், பின்னூலில் கூறப்பட்டுள்ள கடலெழுச்சியின் காரணத்தால் நகரம் அழிவுற, முன்னூலில் கூறப்பட்டுள்ள தலைநகரத்திற்கு இந்நிகழ்ச்சிக்குப் பின்னர் அரசன் சென்றதாகக் கூறிச் சோழரது ஆட்சிக்குத் தலைநகரம், உறையூரோ புகாரோ ஒன்றே இருந்ததெனக் கொள்ளுவது, காலவரையறையில் முன் பின் முரணுவதாக உள்ளது. ஒரேகாலத்தில் சோழ ஆட்சிக்கு இருதலை நகரங்களுமிருந்தனவென்று கொள்ளுதலே சிறப்புடைத்தாகுமெனத் தோற்றும். ஒன்றில் சோழமன்னனும், மற்றொன்றில் அம்மன்னனது பிரதிநிதியும் இருந்து ஆட்சிசெய்து வந்திருத்தல் வேண்டும்!

## புலவரிடத்து அபிமானம்

கிள்ளிவளவனைப் புகழ்ந்து அவனது வீரமும், பெருமையும் தோன்றக் கல்வி கேள்விப்பயிற்சி முதிர்ந்த தமிழ்ப்புலவர்கள் பலர் பாடியுள்ளனர். இம்மன்னன் புலவர்களை ஆதரித்து வந்தனனென்பதும், தமிழிடத்துப் பேரன்பு கொண்டிருந்ததோடு தானுமொரு புலவனாக விளங்கினனென்பதும், இவனைப் புறத்தில் பாடியுள்ள புலவர்களின் வாக்காலும், இவன் புறத்தில் பாடியுள்ள செய்யுளின் போக்காலும் (புறம். 173) விளங்குகின்றன. அகநானூற்றில் கிள்ளிவளவனை, நக்கீரர் (செ 346), புகழ்ந்து பாடியுள்ளார். புறத்தில், ஆடுதுறை மாசாத்தனார் (227), ஆவூர் மூலங்கிழார் (39), ஆலத்தூர் கிழார், இடைக்காடனார், எருக்காட்டூர்த்தாயங் கண்ணனார், ஐயூர்முடவனார், கோவூர் கிழார் (41), நல்லிறையனார், மாறோகத்து நப்பசலையார், வெள்ளைக்குடிநாகனார் முதலிய புலவர் திலகங்கள் பாடியுள்ளனர். இவன் இறந்தபின்னர் பிரிவாற்றாது பாடிய புலவர்கள், மாறோகத்து நப்பசலையார், ஐயூர் முடவனார், ஆடுதுறை மாசாத்தனார் முதலியோராவர். இப்புலவர்களது பாடலின் சிறப்பைப் புறநாற்றில் கண்டுகொள்க.

## கிள்ளிவளவனது குணங்குறைகள்

சாமானியமாக உலகில் நற்பொருள்களிடத்தும் ஏதாகிலும் மாசொன்று அமைந்திருத்தலைப் போன்று, நல்லவழியில் நாடாண்டு நற்பெயரெய்திய இம் மன்னனிடமும் சில குற்றங்குறைகள் காணப்படுகின்றன. மகனை முறை செய்த மன்னவன் வழித்தோன்றிய தனது பெருமை தங்கிய குலத்தில் தீவினையாளனொருவன் உளனென்ற செய்தி பிறநாட்டுமன்னர் கேட்டிடுதற்குமுன் பிழை செய்த தன் மகனைப் புறங்காட்டி விடுமாறு செங்கோல்முறை கருதிக் கூறிய நன்னுவில், நிரபராதியாகிய கணிகைமகள் மணிமேகலையையும் காவலிற்படுத்துமாறு கூறியதற்குக் காரணம் தெளிவாக விளங்கவில்லை. அம்மாது சிறைபபடாது வெளியிலிருப்பாளாகில் நாட்டில், நலங்கெட்டு அவள் பின் சென்று இறந்திட்ட தனது மகனைத் "தூயமாதின் பின்னேகிய பாவி" யென்று யாவரும் தூற்றுவாரென்று கருதியோ; நகரமெங்தும் அவனால் ஏற்படும் குழப்பத்தைப் போக்க நினைத்தோ; மகனிறத்தற்குக் காரணமாயிருந்த மாதவளையும் வாட்டி வருத்தவேண்டுமென்ற பழி வாங்கு மெண்ணங் கொண்டோ; அன்றிக் கொடிய எண்ணத்தோடு உடன்வந்த உதய குமரனுக்குப் பயந்து ஒளிந்திருந்து தீங்கொன்று மிழைத்திடாத கற்பெண்ணாகிய அம்மாது புத்திரசோகத்தால் வருந்தும் இராசமாதேவிக்கு நல்ல நீதிகளை யுபதேசிக்க அவளை யணுகி யிருத்தல் வேண்டுமென்று ஆசிரியர் கருதியதாலோ; யாது பற்றியோ; இங்ஙனமாகப் புனைந்து கூறப்பட்டுள்ளது.

கணிகையின் மகனுபினும் காகந்தன், தன்னைப்பெற்றவனது குலப்பெருமை விளங்குமாறு காமப்பித்துடன் பாவையர் பின் போகிய பாலரிருவரையும் நெஞ்சங் கூசாது கை வாளால் துண்டித்த பெருமை வாய்ந்திட்டான். அவன் வழியில் வந்த அரசனாகிய இக் கிள்ளிகடற் கரைச் சோலையில் காம பரவசனாகிக் கன்னி யொருத்தியோடு மிருந்து கரந்து காலங் கழித்தும், அவன் பெற்றனுப்பிய பிள்ளையைக் காணாது கவலையோடு அவளைத்தேடியும் தனது நாட்டின் அழிவிற்கே காரணனாயினன். இவற்றோடன்றி இக்கிள்ளி, திருக்கோவலூரின் சிற்றரசனும், உறையூர்ச்சோழன் நெடுங்கிள்ளியின் சேனாபதியும், கடையெழு வள்ளல்களுள் ஒருவனும், பெருவீரனும், சிறந்த கீர்த்தியோனுமாகிய மலையமான் திருமுடிக்காரியின், இளஞ்சிறுவர்களை மதயானைகளால் பயமுறுத்துமாறு செயவிப்பித்த கடுநெஞ்சமுடையோனா யிருந்தனன். பின்னர், கோவூர் கிழாரென்ற தமிழ்ப்புலவரின் மொழிகேட்டு அவர்களைக் கொல்லாது விடுத்தனன். புறம். 46) இளஞ்சிறுவர்பால் இவ்வரசனுக்கு இவ்வாறான பெருங்கோபம் வந்துள்ளதற்குக் காரணம் விளங்கவில்லை. அப்புலவர் இவ்வரசனை நோக்கி, "நீ, புறா முதலாயினவற்றின் இடுக்கண் பலவும் தீர்த்த உயிர்க்கொடை பூண்ட சோழனது வழித்தோன்றியவன். இவர்களோ, அறிவால் உழுதுண்ணும் கற்றோரது வறுமைப்பிணியை அஞ்சித் தம் பொருளைப் பகுத்துண்ணும் தண்ணிழல் வாழ்வார் வழி வந்தோர். அழுதகின்ற இவர் களிற்றைக்கண்டு தமது இளமையால் அழுகையை மறந்திட்ட புல்லிய தலையையுடைய சிறுவர்கள். முன்பு அறியாத புதியதொரு வருத்தமுடையோர். இது கேட்டாயாயின் நீ விரும்பியதைச் செய்வாயாக" என அருளுக்கு இலக்காக வேண்டிய சிறுவரை முனிந்திடுதல் சற்றும் தகாதென்று இடித்துக்கூறி மலையமான் மக்களை யானைக் கொடுமையத்திக் காத்து உய்வித்தனர். (தொடரும்.)

# 20-கல்வெட்டுக்கள் (சாஸனங்கள்)

(S. முத்து, ஸ்ரீரங்கம்.)

இராஜராஜக் கிணறுமுதல் வாலக்காமயர் சாஸனம் வரை இருபது கல் வெட்டுக்களிவை யென்பதும், அவை இன்னவின்ன இடங்களிலுள்ளன வென்பதும், அச்சாஸன காலத்தரசர்க ளிவரென்பதும் தோன்றச் சாஸனங்களின் முதற்குறிப்புக்களும் பிறவும் சுருக்கமாகத் தெரிந்து கொள்ளலாம்.

(ஆசிரிய விருத்தம்) (20. கல்வெட்டுக்கள்)

இராஜராஜக்கிணறு திருப்பதிகம் மேலுமோர்
ராஜேந்திர சோழதேவர்
நன்மை மிகுகணபதி யமண்பாக்கம் பாக்கரும்
நாடுமிரு மணிமங்கலம்
ஆசிலாச் சிறுபழுவும் வில்லவன் அருளாளன்
ஆகுந்தீக்காலி வல்லம்
அரிதினுணர்மாவலியு மாதவக்கிரம வித்தன்
அணிவாண மாதேவியார்
பாசமிகு மதவோடு கன்னிபகவதியோடு
பாரவரி கேசரியுடன்
பராக்கிரம பாண்டியன் வாலக்காமயருடன்
பாடுமிருபது சாஸனம்
வாசமிகு கற்பூர கத்தூரியோ டிதம்
வளர்செந்தி மாநகரிலே
வள்ளி தெய்வானையுடன் மருவுசுக போகனே
மணிகொண்ட வடிவேலனே. (1)

குறிப்புக்கள்:—சிலவற்றை முதற்குறிப்பாற் காணவேண்டும். அவை அருளாளப்பெருமான் கோவில் சாஸனம், மாவலிவாணராயர் சாஸனம், மத வோடு தோட்ட சாஸனம், அரிகேசரிதேவர் சாஸனம், பராக்கிரம பாண்டிய தேவர் சாஸனம் ஆகும். இராஜ ராஜக்கிணறு; திருப்பதிகம் இவ்விரண்டு மொழித்து மேற்கூறியவு மொழித்து மற்றவற்றின் இறுதியில் சாஸனம் என் பதைக்கூட்டி வாசிக்கவும். இருமணி மங்கலம்=மணிமங்கல சாஸனம். மணிமங்கல சபையோர் சாஸனம்.

(அவை இருக்கு மிடங்கள்)

கிணறு செங்கற்பட்டு ஜில்லாவின் உக்கலில்
    கிரிவிஷ்ணு மேலைச்சுவர்
கேள்தஞ்சை கோவிலின் வடபால் திருப்பதிகம்
    கேடில் தென்பாலிக்திரன்
கணபதிச் சாஸனம் பசுபதீச்சுரன் கோயில்
    கருவூரில் தென்புறத்தே
கருது செங்கற்பட்டு மணிமங்கலத்த மண்
    கருவூரிற்கண்ட பாக்கூர்
மணிமங்கலம் ராஜகோபால சாமியில்
    வடமேற் புறச்சுவரிலே
மண்டபம் மேற்புறச் சுவரிலேகண்டது
    மணிமங்கலச் சபையோர்
குணமேவு திரிச்சி கீழைப்பழுவில் மலையீசர்
    கோவிற் பிரகாரமிரண்டு
கொண்ட மேற்புறச் சுவரிற்கண்ட சிறுபழுவூரும்
    குமாரகுருபர நாதனே. (2)

குறிப்பு:—உக்கல் கிராமத்தில் விஷ்ணுகோவில் மேற்குச்சுவர். தஞ்சை இராஜேஸ்வரர்கோவில் வடபாற்சுவர் வெளிபபுறத்தில். இக்திரன்=இரா ஜேந்திரசோழதேவர் சாஸனம். கருவூரில் இரண்டு சாஸனங்கள். பசுபதீச் சுரன்கோயில் தென்புறச் சுவரில். அமண்=அமண்பாக்கம் சாஸனம். இல்= கோயில். மணிமங்கலம் கிராமத்தில் இராஜகோபாலசாமி கோயிலில் இவ் விரு சாஸனங்களும். கீழைப்பழுவூர்—ஊர். மலையீசர்=வடமலையீசர். இரண்டாம் பிரகாரம் மேற்புறச்சுவரென மாற்றுக.

(இதுவுமது)

திருவானைக்காவி ரண்டாஞ் சுற்று கீழ்ப்புறம்
    திகழும் வில்லவராயனும்
சிறிய காஞ்சிபுரத் தருளாளர் குன்றின்மேல்
    தேடரிய வச்சாஸனம்
தீக்காவி வல்லமக் கிராமத்து வில்வநா
    தீசரில் வடசுவரிலே
தெண்ணீர் நிவாநதிக் கரையருகு பாறைமேல்
    சேர்மகாவலி சாஸனம்
மருவினிய வில்வநா தேஸ்வரர் கோவிலின்
    மண்டபம் வடபுறத்தே

மாதவக் கிரமவித்தன் சாஸனம் மேற்புறம்
வாணமா தேவியாரும்
வாக்கினிய அதனோடு சாஸனம் திருவாங்கூர்
வாழ்வுதனுநாதர் கோவில்
வளர்முதற் குன்றினிற் கண்டதாம் கன்னியும்
வண்கோவில் கீழ்ப்புறத்தே
திருநெலில் தென்காசி விஸ்வநாதக் கிருகம்
தென்மேற்கி லரிகேசரி
திருவாங்கூர் செங்கோட்டை சிவன்கோயில் கிரகத்தில்
தென்சுவர் பராக்கிரமனும்
தேக்கு புகழ் வாலக்காமயர் சாஸனந்தானும்
திருவானைக் காவிலுள்ள
சீரிரண்டாஞ் சுற்று வடபாலிலே யெனச்
செப்பினர் கொண்ட புகழோர்.

(இது முதல் சாஸன காலத்தரசர்)

அரிவரிய முதலிரண்டும் ராஜராஜனே
அவன்மகன் பேர்ச்சாஸனம்
ஆதிகணபதிநலூர் விஜய ராஜேந்திரன்
அமண்பாக்க மவனதாகும்
ஆக்குபுகழ் பாக்கூரும் வீரராஜேந்திரன்
அணிகொண்ட மணிமங்கலம்
அரசர்பணி ராஜாதி ராஜனே யென்பர்கள்
ஆதியிற் கண்டிட்டதே.

குறிப்பு:—சுற்று = பிரகாரம். குன்றின்மேல் = குன்றென்னும் கல் மேடையின் மேற்புறச் சுவரில். வில்வாதேசுவரர் கோவில் = பாலாற்றின் கிளை நதியான நிவா நதியின்மேல் கரையிலுள்ளது. திருவாங்கூர் சமஸ்தானம் சுசீந்திரம் ஸ்தாணுநாத ஸ்வாமி கோவில் முதல் பிரகாரம் இயற்கைக் குன்றின்மீது வெட்டப்பட்டுள்ளது. கன்னி பகவதியார் சாஸனம்=கன்னிபா குமரி குமரிக் கோவில் முதற்பிரகாரம் கீழ்ப்புறச் சுவரிற் கண்டது. திருநெலில்=திருநெல்வேலி ஜில்லாவில். கிருகம்=கற்பக் கிருகம். அவன் மகன்=மூன்றாவது இராஜேந்திர சோழ தேவர் சாஸனம்.

(இதுவும் சாஸன காலத்து அரசர்)

மணிமங்கலச் சபை சிறுபழுவு வில்லவன்
மன்னன் குலோத்துங்கனும்
வளருள் விக்ரமன் நீக்காலி விஜயேந்திரன்
மாவலிவிஜய நந்தி

வணமேவு மாதவக்கிரம வித்தன் சாஸனம
மகாவலி வாணராயன்
வாணமா தேவியார் சாஸனம் மிக்கதேர்
வாணவித்யா தரன்றன்
கனமேவு மதவோடு வீரபாண்டிய தேவர்
கன்னியும் பராந்தகத்தே
கருதி யுணர் அரிகேசரிப் பராக்கிரமனும்
காணுமிதிற் பாண்டியன்றன்
குணமான வாலக்காமயர்ச் சாஸனப் பெயர்
கொண்ட வக்கலராஜனே
கோவிந்த வைகுந்த நாதனின் மருகனே
குமர குருபர நாதனே.

குறிப்பு:—அருள்=அருளாளப் பெருமாள் கோவில் சாஸனம். விஜய நந்தி=விஜயநந்தி விக்ரமவர்மர். வணம்=வண்ணம். தொகுத்தல் விகாரம். தே=தேவர். அரி கேசரி தேவர் சாஸனம் இரண்டாம் பராக்கிரம பாண்டியன். வாலக்காமயர் என்னும் அக்கல அரசன்.

(சாஸனங்களின் முதற் குறிப்பு) (மெய்க் கீர்த்திகள்)

"திருமகள் போல" வென்பது ராஜராஜனே
"திருமன்னி"-ராஜேந்திரன்
"திருமகள் மருவிய"தும் "திருமாது புவியெனும்"
தேவிஜய ராஜேந்திரன்
பொருவு "திருவளர் திரள்" வீரராஜேந்திரன்
புரிதிங்கள் ராஜாதியும்
"புகழ்மாது," புகழ்சூழ்ந்த புவியிலே" யென்பதும்
புரைதீர் குலோத்துங்கனே
சாதமிகு "பூமாது புணர" விக்ரமசோழன்
சார்ந்த 'பூமடந்தை" வீரன்
தக்க "திருவளர ஜெயம் வளர"ப் பராந்தகன்
சாற்று பூமிசை வனிதையும்
பரவிடும் "புவனேக வீரசந்திர குலமும்"
பராக்கிரம பாண்டி தேவர்
பக்குவ மிகுத்த பழனிப் பதியுதித்த குரு
பரசுப்ர தீப மணியே.

குறிப்பு:—விஜய ராஜேந்திர தேவனென மாற்றுக. திங்கள்=திங்களேர் தருதல் என்னும் முதற் குறிப்பு. வீரன்=வீரபாண்டிய தேவர். சிலவற்றிற்கு மெய்க் கீர்த்திகளில்லை. அவை விடப்பட்டன.

# பாரதி சித்திரம்

## "கண்ணம்மா—என் காதலி"

(ஆரீயூர்-வ. பதுமநாப பிள்ளை.)

செங்கரும்பு வில்லைக் கையில் ஏந்தி, ஐந்து மலர்க்கணைகள் விளங்கும் அம்புப் புட்டிலை முதுகில் தாங்கி, தென்றல் தேரில் ஏறி மாரவேள் உல்லாசமாகப் பவனி வரும் மாலை வேளை. கண்களுக்கும் கருத்துக்கும் ஒருங்கே பெருங் களிப்பூட்டும் பலவகைப்பட்ட மலர்கள் நிறைந்துள்ள அழகிய பூஞ்சோலை. சுமார் பதினெட்டு வயதுடைய அழகிற் சிறந்த மங்கை யொருத்தி, மெல்லிய துணியால் மறைக்கப்பெற்ற தனது மலர் முகத்தைக் குனிந்துகொண்டு நாணிக் கோணி நிற்கிறாள். அவளுக்குப் பின்னால் வந்து நிற்கும் அழகிய இளைஞனொருவன், அவளை நோக்கிப் பின்வருமாறு கூறுகிறான்:—



"ஏடி, கண்ணம்மா! என்ன இது? பாழும் நாணம் இன்னுமா உன்னை

விட்டு அகன்றபாடில்லை? உண்டோ இல்லையோ என்று ஐயுறக் கூடியவாறு பூங்கொடிபோல் மிகமிக மெல்லியதாக விளங்கும் இடையையும் பூரித்து முன்னிற்கும் மார்பகத்தையும் சேலையால் நீ மூடிக்கொண்டிருப்பது சரியே; அது சாத்திரவிதிகளுக்குப் பொருந்தியதே. அவற்றைச் சேலை மறைத்துக் கொண்டிருப்பதால், அவற்றின் அழகு சிறிதும் குறைந்து விடவில்லை. மன்மதக்கலை, கேவலம் சொல்லிக் காட்டுவதால் தெரிந்து கொள்ளக் கூடிய தொன்றன்று; ஆனால், பூரண சந்திரனைப் பழிக்கும் உனது சோதி முகத்தைக்கூட நீ மறைத்துக்கொண்டு விடவேண்டுமா என்ன? காதலின் கனியாகிய உனது செம்பவள வாயையும் எனது உள்ளத்தைக் கொள்ளை கொள்ளும் நீலக் கயல் விழிகளையும் நீ முகத் திரையால் மறைத்துக் கொண்டுவிட்டால், நமது காதல் மலர்ந்து மணம் பரப்பி நம்மை இன்பூட்டுவது எவ்வாறு சாத்தியமாகும்? நீல முகிலால் மறைக்கப்பெற்றுள்ள பூரண சந்திரனைக் கண்டு நீலக் கடலில் பொங்கி யெழுந்து ஆரவாரிக்கும் அலைகளைப்போல், மெல்லிய நீலத் துணியால் மறைக்கப்பெற்றுள்ள உனது முக மதியைக் கண்டு எனது மனக்கடலில் பொங்கி யெழும் இன்ப எண்ண அலைகள் எத்தகையவை யென்பதை நீ உணர்வாயோ? அருட் பெருங் கடலாகிய ஆண்டவனால் அளிக்கப் பெற்ற அழகுச் செல்வத்தை பேணி வளர்க்கும் பேறு பெற்றவர்களாகிய பெண்மணிகள், தங்களது பொன்னிற மேனியைப் பன்னிறப் பட்டுடைகளால் அலங்கரித்துக்கொள்வது இயல்பே யெனினும், திருமகள் நடமிடும் பொலிவிற் சிறந்து விளங்கும் தங்களது மலர் முகத்தைக்கூட மறைத்துக் கொண்டு விடுவது இயல்பல்லவே! பெண்மணிகள் தங்களது முகமலரைத் திரையால் மூடி மறைத்துக்கொள்ளும் வழக்கம் இப் பாரதநாட்டில் தோன்றியது, தில்லித் துருக்கர்களினு லல்லவோ?

அடி, பேதாய்! உயிரினுமினிய உயரிய அணிகலனாகக் கருதி நாணயத்தைப் போற்றி மேற்கொள்ளும் நாரீமணிகள், தமது முகமலரைத் திரையிட்டு மறைத்துக்கொண்டு விடுவது பழங்காலத்து ஆரிய மாந்தரின் சீரிய நெறி யென்று கூறுகிறாய்! அடி, பைத்தியமே! மூஸ்லிம்கள் வந்து குடியேறுவதற்கு முன்பு, இப் பாரத நாட்டிலிருந்த பெண்மணிகளுள் எவளேனும் தனது முகமலரைத் திரையிட்டு மறைத்து வைத்துக் கொண்டிருந்தா ளென்பதற்கு பாரதநாட்டுக் காவியங்களுள் எதிலிருந்தேனும் ஒரு சான்று எடுத்துக்காட்ட உன்னால் முடியுமா? உனது முகமலரை ஒரு மெல்லிய திரையால் நீ மறைத்துக்கொண்டு விட்டாலும், அத் திரையை மீறிப் பீறிக்கொண்டு கிளம்பும் உனது முகமலரின் குளிரொளியையும் உன்னால் மறைத்துக்கொண்டு விட முடியுமா?

எனது உள்ளத்தைக் கொள்ளை கொண்ட செல்வக் கள்வியே! நாமிருவரும் இங்கு சந்தித்துப் பழகுவது, இது முதல் முறையல்லவே! ஏற்கெனவே இரண்டு மூன்று முறைகளில் நாம் இதே இடத்தில் சந்தித்துப் பழகியிருந்தும், உன்னைப்பிடித்த நாணம் இன்னுமா ஒழியவில்லை? உணர்ந்தேன், உணர்ந்தேன்! இப்பொழுது நீ காட்டும் நாணம், வெறும் ஒப்புக்குக் காட்டுவதேயன்றி வேறில்லை. எனது நெஞ்சம் என்னிடம் சிறிதும் இரக்கமின்றி—என்னைத் துறந்துவிட்டு-உன்னிடமே வந்து சேர்ந்து கொண்டு விட்டது! எனது நெஞ்சத்தை உனக்குள் ஒத்திவைத்துக் கொண்டிருக்கும் நீ, இன்னும் ஏன் என்னிடம் நாணம் கொண்டு நிற்க வேண்டும்? நெஞ்சோடு நெஞ்சு கலந்து

கொண்டு விட்ட நமக்குள், இனி நாணத்திற்கு வேலை என்ன? உனது அழகிய அவயவங்களுள் நீ எதை மறைத்துக்கொண்டு விட்டாலும் நான் சகித்துக் கொண்டு விடுவேன்; ஆனால், முதன் முதலில் எனது நெஞ்சத்தை உனக்கு அடிமைப் படுத்திக்கொண்டு விட்ட உனது நீலக் கயல் விழிகளையும் செய்ய கனிவாயையுங்கூட நீ மறைத்துக் கொண்டிருப்பதைப் பார்த்துக் கொண்டு என்னால் சும்மா இருக்க முடியாது. இதோ, பார்! உனது முகமலரை மறைத்துக் கொண்டிருக்கும் துணியை வலித்து எடுத்து எறிந்து விடுகிறேன். அவ்வாறு செய்யாதவாறு, இப்பொழுது என்னை தடுக்கக் கூடியவர்கள் வேறு யாரேனும் இங்கு உண்டோ? உள்ளத்தோடு உள்ளம் கலந்து கொண்டு விட்ட பின்பு, இத்தகைய வீண் பசப்பினால் என்ன பயனடி? உண்ண உண்ணத் திகட்டாத இனிய சுவை நிறைந்து கனித்த செங்கனியைப்போல் நிற்கும் நான், நீயாக உனது நாணத்தைக் கைவிடும் வரையில் காத்திருப்பேனோ? கண்ணுக்கினிய செழுங் கனியைக் கண்டு அதைச் சுவைத்து மகிழ ஆர்வம் மிகுந்து நிற்கும் ஒருவன், பிறர் அதைத் தோலுரித்துத் தரும் வரையில் காத்திருப்பானோ?"

## IV

### "நாணிக் கண் புதைத்தல்"

மறுநாள் மாலை வேளை. அதே பூஞ்சோலையிலே, ஒரு மேடைமீதிலே கண்ணம்மா அமர்ந்துகொண்டு அந்தி வானத்தில் தோன்றும் இந்திரஜாலக்காட்சிகளைக் கண்டு மகிழ்ந்து கொண்டிருக்கிறாள். இப்பொழுது, அவள் தனது மலர் முகத்தைத் திரையிட்டு மறைத்துக் கொள்ளவில்லை, அவளது கண்கள் இயற்கையழகில் ஈடுபட்டுப் பெரிதும் இன்புறுகின்றன. அவ்வாறு அவள் இயற்கைக் காட்சி யின்பத்தை அனுபவித்துக் கொண்டிருக்கும் போது, அவ்விளைஞன் அவளெதிரில் வந்து நிற்கிறான். அவனைக் கண்டவுடனே, அச் சுந்தரி தனது மலர்க் கண்களை மணிக்கையால் புதைத்துத் தலையைக் குனித்து கொண்டு விடுகிறாள். அதைக் கண்டு அவ்விளைஞன் அவளை நோக்கிப் பின்வருமாறு கூறுகின்றான்:—

"மன்னர் குலத்தினிடைப் பிறந்தவளை—இவன்
மருவ நிகழ்ந்த தென்று நாணமுற்றதோ?
சின்னஞ்சிறு குழந்தை என்ற கருத்தோ?—இங்குச்
செய்யத் தகாத செய்கை செய்தவருண்டோ?
"வன்ன முகத்திரையைக் களைந்திடு" என்றே—நின்றன்
மதங்கண்டு துகிலினை வலி(து) உரிந்தேன்.
என்ன கருத்திலடி கண் புதைக்கிறாய்?—எனக்(கு)
எண்ணப் படுவதில்லை ஏடி, கண்ணம்மா!"

"உனது நாணம் இன்னுமா உன்னை விட்டு நீங்கவில்லை? அன்றி, நேற்று நான் செய்த செய்கையினால், என்மேல் நீ சினங்கொண்டு விட்டாயா என்ன? நீ என்னைக் கண்டவுடன் வெறுக்கக் கூடியவாறு, செய்யத் தகாத ஈனச்செய்கை எதையேனும் நான் செய்து விட்டேனா என்ன? மன்னர் குலத்

திற் பிறந்த செல்வியாகிய உன்னை, ஏழையாகிய நான் தழுவ நேர்ந்ததே யென்ற கவலையினால் என்னை வெறுத்து என்னை எறிட்டு நோக்க மனமின்றி தலை குனிந்து கொண்டு விட்டாயோ? உனது செல்வத்தில் இச்சை



கொண்டு காதலிப்பதுபோல் நான் நடிப்பதாக எண்ணிக்கொண்டு விட்டாயா என்ன? உன்னை நான் உனக்காகவே—உனது உயரிய குண நலங்களுக்காக வே—மனப்பூர்வமாகக் காதலிக்கின்றேனே யன்றி, உன்னிட மிருந்து சிரிய மெய்க் காதல் ஒன்றையன்றி வேறு எதையும் எதிர்பார்க்கவில்லை யென்பதை ஆண்டவன் மீது ஆணையாகக் கூறுகிறேன். காதற்கனியைச் சுவைக்கத் தகுந்த பக்குவ நிலையை இன்னும் நாம் அடைய வில்லையென்று எண்ணிக் கொண்டிருக்கிறாயா என்ன? அந்தகைய பக்குவ நிலையை நீ அடைந்திரா விட்டால், எனது கண்களையும் நெஞ்சையும் உனது வடிவழகு கவர்ந்து கொண்டிருக்க முடியுமா? காதல் மயக்கத்தினால் அறிவிழந்து பிறர் பழிக்கக் கூடிய—நீதி வரம்பு மாறிய—தீச்செயல் எதையேனும் நான் செய்துவிட்டேனா என்ன?

பாரத நாட்டுப் பெண்களுக்குப் பொருந்தாத முகமூடியினால் நீ உனது மதி முகத்தை மறைத்துக்கொண்டிருந்தது கண்டு, அதை எடுத்து விடுமாறு உன்னை எவ்வளவோ வேண்டிக் கொண்டேன். நெடு நேரம் வேண்டி நின்ற பின்னரும், நீ எனது வேண்டுகோளுக்கு இணங்கினாயில்லை. எனது உள்ளத்தைக் கொள்ளை கொண்ட உனது செந்தாமரைக் கண்களை

யும் செங்கனிவாயையும் மறைத்துக் கொண்டிருந்த துணியின்மேல், எனக்கு எவ்வளவு ஆத்திரம் பிறந்தது தெரியுமோ? எனது மனநிலையைச் சோதிக்கத் தானோ—அல்லது அளவு மீறிய நாணத்தின் பயனாகவோ—எனது வேண்டுகோளை நீ சிறிதும் மதித்தாயில்லை. எனவே, வேறு வழியின்றி—அத்துணியை நான் வலிந்து களைந்தெறிய வேண்டி நேர்ந்தது. இதில், என்மேல் என்ன பிழை? உண்மை இங்ஙனமிருக்க, என்னைக் கண்டவுடன் நீ என் இங்ஙனம் உனது கண்களைப் புதைத்துக் கொண்டு விட்டாய்? உனது மனக் கருத்து தான் என்ன? எவ்வளவோ சிந்தித்துப் பார்த்தும், அம்மர்மம் எனக்குச் சிறிதும் விளங்கவில்லையே!

தெருவில் மணல்வீடுகட்டிச் சிறுசோறு சமைத்துச் சிறுமியர்களுடன் நீ விளையாடிக்கொண்டிருந்த காலத்திலேயே, நான் அடிக்கடி உன்னைக் கண்டு களித்ததில்லையா? அச் சின்னஞ்சிறு பருவத்திலேயே, நானும்நீயும், மாப்பிள்ளை-பெண்விளையாட்டு விளையாடியதில்லையா? அக்காலத்திலேயே உனது கண்ணாடிபோன்ற கன்னங்கள் இரண்டும் சிவந்துபோகுமாறு நான் உன்னைப் பன்முறை முத்தமிட்டுப் பரவசமடைந்ததில்லையா? எனது முத்தங்களனைத்தையும் நீ பெருமகிழ்வுடன் ஏற்றுக் கொண்டதில்லையா? அக்காலத்திலேயே, "நானும் நீயும் ஒன்றே; நமக்குள் எவ்வித பேதமுமில்லை; நம்மிருவர் உயிரும் ஒன்றே"—என்று உன்னிடம் நான் கூறும்போதெல்லாம் நீ அதைக்கேட்டு ஆனந்த பரவசமடைந்து நின்றதை இப்பொழுது மறந்துவிட்டாயா என்ன?

பழங்காலத்துக் கதைகளையெல்லாம் இப்பொழுது கிளறிக்கொண்டிருப்பதால் என்ன பலன்? பன்னிப் பன்னிப் பேசிக்கொண்டிருப்பதால் என்ன லாபம்? முகத்திரையை வலிந்து களைந்து எறியத்துணிந்த ஒருவன், வளைகள் அணிந்த மணிக்கையை வலிந்து பற்றப் பயந்து நிற்பானோ? இன்னும் என் என்னிடம் ஐயங்கொண்டிருக்கிறாய்? உனது சீரிய மெய்க்காதலைப்பெறத்தகுதியற்றவனாக—உனது அன்புக்குப் புறம்பானவனாக—என்னை நீ எண்ணலாமோ? ஒரு முகத்திலுள்ள இருகண்களுள், ஒன்று மற்றொன்றை அன்னியமாக எண்ணி ஒன்றிடம் மற்றொன்று வெட்கங் கொள்வதுண்டோ? ஒருயிரே ஈருடல் பெற்றதுபோல் உள்ளம் ஒன்றுபட்டுநிற்கும் நமக்குள்ளே, நாணத்திற்கு என்னவேலை? நாணம் பாராட்டிநிற்கவேண்டிய நிலையை நாமிருவரும் இப்பொழுது கடந்து நிற்கிறோமன்றோ!

நாட்டிலே, பாட்டிக்கதை கேட்டுக்கேட்டுப் பயிற்சிபெற்ற ஆடவர்கள், பெண்களின் அன்பைப் பெறுவதற்காக சுவைநைந்துபோன பழங்காலத்துக் கதைகளைச் சொல்லுவதுபோல், ஆண்மையையும் வீரத்தையுமே பெரிதென மதிக்கும் நான்—பழம் பெருமையை பாராட்டி வீண்கதைபேசி வீரமற்ற கோழையாக வாழாமல், வீரத்தையும் ஆண்மையையுமே வாழ்க்கையின் குறிக்கோளாகக்கொண்டு நிற்கும் நான்—வேறு சொல்லளவில் நில்லாமல், சொன்னவற்றைச் செயலிலும்காட்ட என்னால் இயன்றவரையில் முயன்று கொண்டிருக்கும் நான்—சுவைநைந்த பழங்கதைகள்சொல்லிப் பொழுதுபோக்கும் சோம்பேறிகளுள் ஒருவனாக இருக்கவேண்டுமென்று விரும்புகிறாயா என்ன? கதைகளில் வர்ணிக்கப்படும் தெய்விகத்தன்மை பொருந்திய சீரிய மெய்க்காதலை, அனுபவ வாயிலாகச் சுவைத்தறிய உனக்கு ஆர்வமில்லையா என்ன? உள்ளத்தினின்றும் பொங்கியெழும் மகிழ்ச்சிப்பெருக்கால் தோன்றும் பாட்

டும்—அப் பாட்டுக்கு உயிரூட்டி ஒப்பற்ற இனிய ஒலியினல் அதன் சிறப்பைப் பன்மடங்கு பெருக்கிப் பலரையும் பரவசப்படுத்தும் பண்பினதாகிய பண்ணும் ஒன்ருகக் கலந்திடும்போது, தம்முள் ஒப்புக்கு ஒன்ருேடொன்று பன்னிப்பன்னி உபசாரணை பேசிக்கொண்டிருப்ப துண்டோ? நீலவான வீதியிலேதோன்றும் குளிர்மதி, தான் தோன்றியவுடன் வானத்தைப் பார்த்து, "வானமே! வானமே!! நீலமேனி கொண்டு பரந்துவிளங்கும் நீ, எவ்வளவு அற்புத அழகுபெற்று விளங்குகிருய்! நீ இன்றேல், விண்ணுலகமேது? மண்ணுலகமேது? உனது தயவைப் பெற்றன்ருே கருமுகில்கள் எங்கும் தடையின்றித் திரிந்து உலகம் செழித்தோங்கக் குளிர்மழை பொழிகின்றன! பகற்பொழுதில் கதிரவனின் கொடுமையினல் உனக்கு ஏற்பட்ட வெப்பமெல்லாம் தீருமாறு, நான் உன்னைத் தழுவிநின்று உனக்கு எவ்வளவு இன்பூட்டுகிறேன் பார்!"—என்று ஒரு புலவனைப்போல் பலவாறு புகழ்ந்து பேசிய பின்புதான் அவ்வானத்தைத் தழுவுமோ? விறகில் மறைந்திருக்கும் செந்தீ, தான் வெளிப்படும்போது "நான் வெளிப்படுகிறேன்; நான் வெளிப்படுகிறேன்"—என்று விளம்பரப் படுத்திக்கொண்டுதான் வெளிக்கிளம்புமோ? உள்ளத்தோடு உள்ளம் கலந்துகொண்டுவிட்ட உண்மைக்காதலர்கள், பரஸ்பர வர்ணனையிலும் வெறும் உபசாரமொழிகளிலும் புகழ்மொழிகளிலும் இச்சை கொள்வதுண்டோ? உன்னைக் கண்டவுடன், "சிங்காரி-ஒய்யாரி-மனேஹரி"—என்று நான் உனது அவயவங்களின் அழகைப் பலவாறு வர்ணித்துப் பேசவில்லையே என்றதால், உன்னிடம் நான் கொண்ட காதல் மனப்பூர்வமான உண்மைக் காதலல்லவென்று எண்ணிக் கொண்டுவிட்டாயா என்ன? உன்னிடம் நான் கொண்டுள்ள காதல் எத்தகையதென்பதை, கேவலம் வாய்ப்பேச்சால் உனக்கு விளக்கிக்காட்டக்கூடிய சக்தி எனக்கு உண்டோ!

இன்று காலையிலே, சோதிட சாத்திரத்திலே பெரிதும் தேர்ந்தவரான ஒரு பெரியவரைக் கண்டேன். எனக்கும் உனக்கும் இசைந்த பொருத்தம் எத்தகை பொருத்தமா யிருக்கக்கூடுமென்பதை குறித்து அச் சோதிடகலாநிபுணரை ஒரு ஆரூடம் கேட்டுப் பார்த்தேன். அப்பெரியவர் என்ன சொன்னர் தெரியுமோ? அவர் கூறியவற்றை உன்னிடம் கூறுகிறேன். கவனமாகக் கேள்:—

நமக்குள் ஏற்பட்டுள்ள உறவு, நேற்று முன்னுள் தோன்றிய நூதன உறவல்லவாம்; அவ்வளவு நமக்குள் மிகமிகப் பழங்காலத்திலிருந்தே தொடர்ந்து வந்திருக்கிறதாம். முதன் முதலிலே, திரேதாயுகத்திலே, அயோத்திமா நகரிலே, மெய்யன்பர்களெல்லோரும் போற்றிப் புகழுமாறு நீ தசரதச் சக்கரவர்த்தியின் திருக்குமாரனுக அவதரித்து 'இராமன்' என்னும் திருநாமத்தைப் பெற்றுச் சிறந்து விளங்கினுயாம். அக்காலத்திலே, நான் மிதிலைமன்னனின் செல்வப் புதல்வியாகிய 'சீதை'யாகத் தோன்றி, உன்னைப் பதியாகப்பெற்று ஒப்பற்ற இன்பத்தை அனுபவித்தோம். பின்னர், துவாபரயுகத்திலே, ஆயர் குலத்தின் அணிவிளக்காகத் தோன்றிய நீ, ஆனிரையும் ஆயர்களும் ஆய்ச்சியரும் ஆனந்திக்குமாறு வளர்ந்து, கல்லும்புல்லும் காட்டுமரங்களும் வனவிலங்குகளும் உருகிநிற்குமாறு வேய்ங்குழலூதிநின்ற ஜகன்மோகன 'கோபால'னுகச் சிறந்து விளங்கினுயாம். அப்போது, நான் உனது மாயா-லீலைக்கு ஒரு கருவியாக இருந்து—உன்னல் மெய்யறிவூட்டப்பெற்று—உனது துணையின் தனிப் பெருஞ்சிறப்பினுலேயே வியக்கத்தக்க பெருவெற்றியைப் பெற்றுநின்ற வீர

'விஜய'னாக விளங்கினேனாம். பின்னர், கலியுகத்திலே, நான் மன்னன் மகனாய்ப் பிறந்து—உலக இயல்பை அறிந்து—ஆசைகளனைத்தையும் துறந்து—உண்மைத் தத்துவங்களை உணர்ந்து—எங்கும் சன்மார்க்கப் பிரசாரம் செய்து—பல்லாயிரமக்களைத் திருத்திப் பண்படுத்திய 'புத்த'னாக விளங்கினேனாம். அப்பொழுது, பெண்மைப் பேரொளி சிறந்து விளங்கிய 'அசோதரை'யாகத் தோன்றி நீ என்னை மகிழ்வித்தாயாம்.

என் சிந்தைக்கினிய செல்வியே! இவையனைத்தும் வெறும் கட்டுக்கதைகளன்று; இவ்வாறு சோதிடம் கூறிய பெரியவர், சோதிட சாத்திரத்தில் பெரிதும் தேர்ந்தவராவர்; ஆதலின், அப் பெரியவர் சொன்ன அச் சோதிடத்திலே எத்தகைய பழுது மிருக்கக் காரணமில்லை. அதைக் குறித்து ஐயுறுவதற்குச் சிறிதும் இடமில்லை. அப் பெரியவர் அது மட்டுமா சொன்னார்!! நம்மிருவருக்கும் இடையில் உள்ள சம்பந்தம் எப்பொழுதும் அறுத்து விடாமல்—கடைசிவரையில்—நம்மைத் தொடர்ந்துகொண்டே யிருக்குமென்றும் அவர் சொன்னாரடி! உண்மை இங்ஙனமிருக்க, இன்னும் நீ ஏன் என்னிடம் நாணம் கொண்டு கண்புதைக்கவேண்டும்? இனியேனும் எழுந்திருந்து என்னைத் தழுவிநின்று எனது செவ்விதழ்களில் உனது செங்கனி வாயினால் ஒரே ஒரு 'முத்த—முத்திரை' வை பார்க்கலாம்!

---




# 38. பதினெட்டாம் நூற்றுண்டின் ஆரம்பத்தில் நடந்த பிரஞ்சு யுத்தங்கள்

(T. S. ராஜகோபாலன், B. A., L. T.)

சென்ற கட்டுரையில் கண்ட பிரகாரம், 18-ம் நூற்றுண்டில், ஆரம்பத்தில், இங்கிலாந்து புரட்சியின் வெற்றியின் நிர்மான விஷயமான ஹானேவர் வம்சஸ்தாபனமும், அதன் பலனுன விக் கக்ஷியின் நீடித்த கால செல்வாக்கு ஆரம்பமும் ஆயின. ஆரம்ப காலத்தில் விக் கக்ஷியினரால் டோரிக் கட்சியினர்—பலவித துன்பங்களை சிறைவாசத்தின் மூலமும், தேசப்ரஷ்ட உத்திரவின் மூலமும் அனுபவிக்கலாயினர். புதிய வம்சம் ஸ்தாபிக்கப் படும்போது எப்போதும் ஏர்படுவது போன்ற ஒரு கலகக் கிளர்ச்சியும் ஏற்பட்டது. இந்தக் கலகம் ஸ்காட்லந்திலேயே ஆரம்பம். விலக்கப்பட்ட ஸ்டுவர்ட் அரசர்கள் ஆதியில் ஸ்காட்லந்துகாரர்கள். அதிலும் மலைநாட்டு வாசிகளுக்கு பிராசின முறையில் பழைய அரசர்களிடம் விசுவாசம் அதிகம். அல்லாமலும் இங்கிலாந்தும் சில ஜேம்ஸ் கக்ஷியினர்ச் சேர்ந்தவர்களை உடையதாயிருந்தது. அவர்களுக்கு ஜாகோபைட்சள் (The Jacobites) என்று பெயர். Jacobus என்பது ஜேம்ஸ்க்கு லாடின் பிரதிப் பெயராம். ஆக ஜேம்ஸை ஆதரிப்பவர்களுக்கு அப் பெயர் ஏற்பட்டது. இவர்களுக்கு வழக்கம் போல லூயிXIVன் ஆதரவும் இருந்தது! ஆயினும் என்ன? கலகங்களுக்கு மூலபுருஷனை ஜேம்ஸ்க்கு 'போலி அல்லது ஏமாற்று' Pretender என்ற பட்டத்தையும் பெருவாரியான ஆங்கில மக்கள் சூட்டி விட்டனர். ஜேம்ஸ் அவ்வளவு சுரு சுருப்பும் பர பரப்பும் உள்ளவனும் அல்ல. ஒரு மாதிரியான மந்தகதி யுள்ளவனும் ஆனன். ஆக கலகம் வலுக்க வில்லை! சுலபத்தில் அடக்கப்பட்டு விட்டது. துரதிர்ஷ்டவசமாய் லூயிXIVம் இறந்தான். ஊக்கமும் தூக்கமாகியது. மூத்த போலி யென்ற ஜேம்ஸ் "ஆடி கழித்த ஐந்தாம் நாள் கோழி யடித்துக் கும்பிட்ட" கதையாக, கலகங்கள் அடங்கிய பிறகு வந்து பார்த்துவிட்டு பிரான்ஸுக்கே திரும்பிவிட்டான்! அவனுக்காகக் கலகம் செய்தவர்கள் விக் கக்ஷியினரின் கோபத்திற்குள்பட்டு தண்டனை யடைந்தனர்! இதுவே சரித்திரத்தில் 15 கலகம் எனச் சொல்லப்படும். இதன் பலனுகவே, 1715-ல், 1696-ம் வருஷத்திய 3 வருஷச் சட்டத்தை மாற்றி 7 வருஷச் சட்டமாகத் தங்கள் செல்வாக்கின் மூலமாகச் செய்து கொண்டனர். அதன்படி பார்லிமெண்டின் ஆயுள் காலம் 3 வருஷத்திலிருந்து 7 வருஷமாக நீடிக்கப்பட்டது முன்பு குறிப்பிடப்பட்டது. ஏனெனில் அதற்குள் தேர்தல் ஏற்பட்டால் எங்கு தங்களுடைய செல்வாக்குக்கும் பெரும்பான்மை பலத்திற்கும் பங்கம் வந்து விடுமோ என்ற பயமே அவ்

வித நடவடிக்கைக்குக் காரணமாகும்! அதுவும் ஒருவித ராஜ தந்திரமாகும் போலும்!!

இவைகளுக்கெல்லாம் பிறகுதான் தென்கடல் குமிழி சம்பவம் ஏற்பட்டது. வால் போல் நிர்வாகியாகி பிரதம மந்திரியும் ஆனர். சமாதானக் கொள்கையைக் கையாண்டு செல்வ நிலைக் கொந்தளிப்பை யடக்கினர். ஆயினும் கௌரவாகௌரவம் பாராட்டாமல் கேவலம் பணச்செலவொன்றையே கருதிய சமாதானப் போக்கை வெறுத்த சில வாலிப தேசாபிமானிகளின் கட்சி யொன்று ஏற்பட்டது. அக் கட்சிக்குத் தலைவராக வில்லியம் பிட் என்றவர் ஏற்பட்டார். அவர், செல்வாக்கை நீடித்துக் கொள்ள வால் போல் செய்த கேவலமான தந்திரங்களை அறவே வெறுத்தவர். அதனால் "பொறுப்பில்லாத இளம் பிள்ளைகள்" என்ற இழி பெயரையும் வால்போலால் சூட்டப்பட்டவர். அதைத் தாங்காது, வால் போலுக்கு "சுடச்சுட மானம் போகும்படி திரும்பிச் சவுக்கடி போன்ற வார்த்தைகளைப் பிரயோகித்து", தலை குனியும் நிலைமையை யளித்தவர்.

ஆக முந்தின தொடர்ச்சியில் குறிப்பிட்டபடி ஆஸ்ட்ரிய வார்ஸ் யுத்தம் ஏற்பட்டு விடும் போலிருந்த நிலையில், ஜெங்கின் காது யுத்தத்தை சரியாக நிர்வாகிக்காத காரணத்தால் தேர்தலில் தோற்று விலகும்படி வால் போலுக்கு ஆகி விட்டது. ஆனாலும் அந்த வால் போலுடைய சிஷ்ய வர்க்கத்தினரின் செல்வாக்குத்தான் ஏற்பட்டது. காரணம் வெட்ட வெளிச்சமே. இதற்குள் ஜார்ஜ் I 1727-ல் இறந்து ஜார்ஜ் II பட்டம் பெற்று 13 வருஷங்களும் ஆகி விட்டன என்பதை வாசகர்கள் மனதிற் குறித்துக் கொள்ளுதல் அவசியம்.

நிற்க, ஆஸ்ட்ரியாவை யாண்டுவந்த சார்ல்ஸ் மன்னருக்கு மேரியா தெரிஸா என்ற ஒரு பெண்தான் உண்டு. இந்த சார்ல்ஸ் மன்னர்தான் வில்லியம் III க்கும் லூயி XIV க்கும் நடந்த பாகப் பிரிவினை உடன்படிக்கைகளில் பிரான்ஸ் இவைகளுக்கு எதிர் உரிமை யுள்ளவர் என்பதும் குறித்துக் கொள்ள வேண்டிய விஷயமாகும். ஸ்பெயின் வார்ஸ் யுத்தத்தில் இங்கிலாந்து கக்ஷியில் இருந்து, பிரஞ்சு ஸ்பெயின்காரர்களுக்கு விரோதமாகச் சண்டையும் செய்தவர். ஆக அந்த சார்ல்ஸ் தனக்கு மரணம் ஏற்பட இருப்பதை உணர்ந்து, ஐரோப்பிய வல்லரசுகளிடத்தில் "தன் மகள் மேரியா தெரிஸா யாதொரு சிரமமும் இல்லாதபடி ஆட்சி செய்ய வேண்டும்" என்றதொரு அதிகார அனுமதிப் பத்திரத்தை வாங்கினர். (The pregmatic sanction என்பது அதன் பெயர்.) அப்படியே அந்த அரசர்களும், அவரிடத்தில், அவருடைய மகளை ஆதரிப்பதாகவும் வாக்களித்தார்களாம்.

ஆனல் சார்ல்ஸ் இறந்ததும் அந்த அதிகார அனுமதி காற்று வாக்கில் விடப்பட்டது. பக்கத்திய ப்ரஷ்ஷியா தேசத்தரசன் பிரடரிக் என்பவன் (Frederick of Prussia) அவனுடைய ராஜ்ய ஓரத்தில் துண்டாக இருந்த ஸைலீஷியா என்ற பாகத்தைப் பிடித்துக் கொண்டு விட்டான். அதே சமயத்தில் ஆஸ்ட்ரியாவுக்குள்ளடங்கிய பவேரியா சிற்றரசன் கலகம் செய்து கிளம்பி ஆஸ்ட்ரிய சிம்மாசனமே தன்னுடையதென்றான். இந்த இருவருக்கும் பிரான்ஸ் ராஜ்யமும், ஸ்பெயின் ராஜ்யமும் உதவி செய்தன. ஏனெனில் ஆஸ்ட்ரியாவிற்குச் சொந்தமாயிருந்த அதிக விஸ்தீரண முள்ள சாம்ராஜ்யத்தில் வேண்டிய அளவு பிரித்து எடுத்துக் கொள்ளலாம் என்பது அந்த இரு தேச அரசர்களின் ஆவல்.

அதனால் ஆதரவற்று அனாதையாக, அரசர்களால் அல்லல்படுத்தப்பட்ட அந்த அபலையான அரசகுமாரி மேரியா தெரிஸாவுக்கு ஆங்கிலேயர் ஆதரவு செய்து அநீதியைத் தடுக்க முற்பட்டது சகஜமே. ஆனால் சரித்திரக்காரர்களுக்கு இங்கிலந்தை அப்போது ஆண்ட அரசர்கள் ஹானோவர் சிற்றசர் என்பதும், ஆகவே அந்த ஹானோவருக்கு ஆபத்து வருவதைத் தடுக்க ஆங்கிலேயர் ஆஸ்ட்ரிய ராணிக்கு ஆபத்தில் உதவினர் என்ற காரணமும் தோன்றுவது இயற்கையாகும். மேலும் முன்பு எழுதிய வியாபார குடியேற்ற நாடுகள் சம்பந்தமாக உலகத்தின் பல பாகங்களில் பிரஞ்சுக்காரரின் சச்சரவு போட்டி, சண்டை முதலியவற்றால் இயற்கையான ஆங்கில பிரஞ்சு விரோதத்தை யொட்டி பிரஞ்சுக்காரர் சேர்ந்த கக்ஷிக்கு எதிர்க் கக்ஷியில் ஆங்கிலேயர் சேர்ந்து விட்டனர் என்றும் தோன்றுவதுண்டு. இந்த விரோத பாவம் லூயி XIV காலம் முதல் தோன்றியதும் நேயர்கள் அறிந்த விஷயமாகும். இன்னும் சுமார் 1850 வரையில் பின்னுக்கும் அந்த விரோதம் இருந்ததென்பதையும் உணரலாம். ஆக முன்பு ஏற்பட்ட நூற்றாண்டுப் போரைப் போல, இக் காலத்தில் ஒரு 140 ஆண்டுப் போராக நினைக்கலாம் என்பது சரித்திர மேதாவிகளின் அபிப்பிராயம்.

இவ்வளவு காரணங்களுடன் ஏற்பட்ட யுத்தம் 1742-ல் துவக்கியது. இங்கிலாந்து சரித்திரத்தின் பொதுப் போக்கை மட்டும் உணர்ந்து வர முயலும் போக்கில் இங்கிலந்து சம்பந்தப்பட்ட வரையில் சம்பவங்களை மட்டும் தெரிந்து கொள்வது போதுமானது. முதல் இரண்டு வருஷங்களுக்கு விசேஷ சம்பவம் கிடையாது என்று சொல்லலாம். 1743-ல் நடந்த டெடிஞ்ஜன் (Dettingen) என்ற இடத்து சண்டையில் ஆங்கில மன்னர் ஜார்ஜ் II தானே நேரில் படைத்தலைமை வகித்து நடத்தி போர் புரிந்து வெற்றி பெற்றாராம். இம்மாதிரி அரசர்களே சேனை நடத்தி யுத்தம் நிர்வகித்தது இதுவே கடைசி முறையாம். அந்தவளவில் அந்த டெடிஞ்ஜன் ஞாபகத்தில் வைத்தற்குரியதாகும். அடுத்து (Fontenoy) பாண்டினாய் என்ற விடத்தில் 1745-ல் ஒரு சண்டை ஏற்பட்டது. அந்தச் சண்டையில் சேனைத் தலைமை வகித்தது அரசனுடைய இரண்டாவது குமாரன் கம்பர்லந்து கோமகன் ஆகும். ஆனால் அவன் தோற்றுத் திரும்ப வேண்டியதாயிற்றாம். இதற்குள் ஹானோவரின் க்ஷேமலாபத்தைக் கருதி இந்த யுத்தம் நடத்தப்பட்ட தான எண்ணம் எதிர்க் கட்சியினர்க்குள் உண்டாகி வில்லியம் பிட் முதலியோர் அப்பொழுதைய பிரதம மந்திரியும் நிர்வாகியும் ஆன ஹென்ரி பெல்ஹாமையும் அவர் சகோதரர் நியூகாஸில் பிரபுவையும் எதிர்த்துத் தாக்கினராம்! அதில்கொஞ்சம் அரசாங்க அருவருப்புக் குள்ளானர் அந்த பிட். விவரம் பின்னொரு சந்தர்ப்பத்தில் எழுதப்படும்.

இந்த நிலையில் பிரான்ஸுடன் சண்டை சமயத்தைக் கைவிடாமல் ஸ்காட்லந்து வாசிகள் கலகம் செய்து வழக்கம் போல இடைக்குத்து குத்தக் கிளம்பி விட்டனர். 1745-ல் என்பது சரித்திர விஷயம். அதற்கு 45 கலகம் என்று பெயர். ஏனெனில் ஒரு ஐம்பது வருஷங்களுக்குள், அதிலும் ஐக்கியம் என்று 1707-ல் ஏற்பட்ட பிறகு, இரண்டு கலகங்கள் ஏற்பட்டதனால் அவைகளுக்கு முறையே 15 கலகம் என்றும் 45 கலகம் என்றும் குறிப்பிடப்பட்டு, "பதினைந்து" "நாற்பத்தைந்து" என்று சொல்லப்படும். ஆக இந்த

முறை கலகம் முன்பு மாதிரி சுலபமாகப் போய் விடவில்லை. ஏனெனில் மூத்த போலியின் மகன் இளைய போலி என்று சொல்லப்பட்ட சார்ல்ஸ் எட்வர்ட் (Charles Edward)என்பவனை யுத்தேசித்துச்செய்யப்பட்டதில், இந்த இளைய போலி மிகச் சுருசுருப்புள்ளவன். சாமர்த்திய முள்ளவன். வசீகரமும் உள்ளவன். ஆகவே அவன் ஸ்காட்லந்தின் வடமேற்குப் பாகத்தில் வந்திறங்கியவுடன் மலை நாட்டார்கள் இயற்கையான ராஜ விசுவாசத்துடனும் பிரியத்துடனும் ஆர்வத்துடனும் புறப்பட்டனர். தீரமாக நடத்தி ஸ்காட்லந்தில் பல விடங்களில் வெற்றி பெற்று எடின்ப்ரோ (Edinbrough) என்ற தலைநகரைப் பிடித்துக் கொண்டு தன்னையும் அரசனாகச் செய்து கொண்டு, காட்டு வெள்ளம் போல் இங்கிலாந்திற்குள்ளும் நுழைந்து (Derby) டெர்பி என்ற பட்டணம் வரையில் வந்து விட்டான். வரும்போது இங்கிலாந்திலுள்ள ஜாகோபைட்கள் தங்களுக்கு உதவி செய்வார்கள் என்று தன் வீரர்களுக்குச் சொல்லி யழைத்துவந்தான். ஆனால் இங்கிலாந்தில் ஒருவரும் இவர்களை விசேஷமாகப் பொருள்படுத்தினார்கள் இல்லை. அதைக் கண்ட மலை நாட்டார்கள் சற்று வெருட்சி யடையலானார்கள். ஆகவே தங்கள் தலைவனைத் திருப்பி விடும்படி எச்சரித்து விட்டார்கள் என்றே சொல்லலாம். என்ன செய்வ ன் பாவம் சார்ல்ஸ் எட்வர்ட்? வந்த வழியே திரும்ப வேண்டியதாகி திரும்பி ஸ்காட்லந்துக்குப் போய் விட்டான். போகும் வழியில் சிறந்த வெற்றியும் கிடைத்தது. ஆனால் பாவம்! ஐரோப்பாவில் சண்டையில் தோற்றுத் திரும்பிய கம்பர்லந்து கோமகன் தன் படைகளுடன் இவர்களை விரட்ட ஆரம்பித்த போது வெருண்டு ஓடலாயினர். ஓடினவர்களைக் கலடன்மூர் (Cullodenmoor) என்ற விடத்தில் மறித்துக் கொலை செய்து விரட்டியதும் ஓடினவர்களைச் சின்னாபின்னமாக அடித்ததுமாகச் சேர்ந்து அவனுக்கு "கசாப்புக் கடைக்காரன்" என்ற அர்த்தமுள்ள Cumberland the Butcher என்று பெயர் ஏற்படுத்தின. ஆகவே கலகம் பலியாமல் ஆங்கிலேயர் வெற்றி பெற்றதன் பலன், தூக்கு தண்டனைகளும், ஆயுத பரிஹாரணமும், தேசிய உடைகளைத் தரிப்பதற்கும் தடையும் ஏற்பட்டனவாம்! மலை நாட்டார்கள் தங்கள் ஆயுதங்கள் பிடுங்கப்பட்ட போது கண்ணீர் விட்ட ழுதனராம்! அதே போன்று சீக்க யுத்தம் முடிந்த காலத்தில் சீக்கியர்களுக்கும் ஒரு சந்தர்ப்பம் ஏற்பட்டதாக சரித்திரங்களில் காணப்படும். ஆனால் ஒரே மாதிரியாக இரு வகை ஜனங்களும் ஆங்கில அரசாங்கப் படை வீரர்களாகச் சேர்த்துக் கொள்ளப்பட்டு இப்போது ஆங்கிலப் படைகளின் திலகங்களாய் விளங்குவதும் உண்மையே.

ஆக ஆஸ்ட்ரிய வார்சு யுத்தத்தின் கிளையாக ஏற்பட்ட இந்தக் கலகத்துடன் ஆங்கிலேயர் ஊக்கமும் உறங்கி விட்டதெனலாம். திடீரென 1748ல் ஏகன் என்ற (Airlachappelle) விடத்தில் பிரஞ்சுக்காரரும் ஆங்கிலேயரும் சமாதானம் செய்து கொள்ள உடன் பட்டு சமாதானமும் நடந்து விட்டது. ஸைலீஷியாவை பிரஷ்ஷிய பிரடரிக்கே வைத்துக் கொள்ளுவது என்ற தீர்மானமும் ஆகி, அபலையான மேரியா தெரிஸா கைவிடப்பட்டாள் என்பது சரித்திர பூர்வமானது. இந்திய சரித்திரம் உணர்ந்தவர்கள் அச்சமயத்தில்தான் முதல் கர்நாடக யுத்தம் தென்னிந்தியாவில் நடந்த தென்பதையும், சென்னைப்பட்டணம் ஆங்கிலேயருக்கு பிரஞ்சுக்காரால் திருப்பிக் கொடுக்கப்பட்டது என்பதையும் ஞாபகப்படுத் கொள்ள வேண்டியதாகும்.

இந்த அரைகுறையான சமாதான முடிவுதான் அடுத்த யுத்தத்திற்குக் காரணமாக ஆகி விட்டது. வழக்கம் போல ஆங்கிலேயருக்கும் பிரஞ்சுக்காரருக்கும் இருந்த தீராத விரோத பாவமும், வியாபார குடியேற்ற நாடுகள் சச்சரவும் காரணங்களாயினவாம். முதலாவதாக தன்னைக் கைவிட்ட ஆங்கிலேயரிடம் மேரியா தெரிஸாவுக்கு தீராத துவேஷம் ஏற்பட்டது சகஜமேயாகும். அவர்களுடைய தலைமுறை தத்துவ விரோதிகளுடன் அவள் உடனே சேர்ந்து கொண்டு ஸைலீஷியாவை மீட்டுக் கொள்ள முயன்றாள். இப்பொழுது பிரஞ்சுக்காரரும் பிரடரிக்கின் செல்வாக்கும் பலமும் அதிகரிப்பதைக் கண்டு பொறாமைகொண்டு அவனை அழுத்தப் பார்த்தனர்! அவர்களுடன் குடும்ப ஒப்பந்தத்தின்படி ஸ்பெயின்காரர்களும் சேர்ந்தனர்! ஆக மேரியா தெரிஸா முன்னிருந்த அந்தரநிலையில் பிரடரிக்கின் நிலைமை மாறிவிட்டது! "அனுதைரக்ஷகர்"களான ஆங்கிலேயரும் மேலே சொன்ன விவரங்களின்படி பிரடரிக்குக்கு உதவிசெய்ய முன்வந்தனர்! இதைத்தவிர உண்மையாகவே வியாபார குடியேற்றநாடு விஷயங்களிலும் சச்சரவு நேர்ந்து விட்டன.

மேலேயே இந்தியா விஷயம் குறிப்பிடப்பட்டது. அப்போதுதான் பிரஞ்சுக்காரரும் ஆங்கிலேயரும் உள் நாட்டு அதிகாரிகளான நவாப்களிடம் சலுகை பெறத் தொடங்கித், திண்டாடி, மண்டைகலங்கிப் பொறாமைகளில் உழன்று கர்நாடக பிரதேசங்களில் சண்டை நடந்தால் கர்நாடக யுத்தங்கள் நடந்தகாலம் என்பதை மீண்டும் ஞாபக மூட்டுகிறோம். அதே சமயத்தில் வட அமெரிக்காவில் ஆங்கிலேயர்களும் பிரஞ்சுக்காரர்களும் குடியேறின காலத்தில், ஆங்கிலேயர்கள் சமுத்திரக் கரை யோரமாகவே குடியேறினார்கள். தென் பாகத்தில் மெக்ஸிகோ குடாக்கரை யோரமாகவும், வடக்கே ஹட்ஸன் குடாக்கரை யோரமாகவும், பிரஞ்சுக்காரர் குடியேறினார்கள். ஆங்கிலேயருக்கும் உள் நாட்டிற்கும் இடையில் அலிகனி மலைகள் வரிசையாக தொடர்ச்சியாக தெற்கு வடக்கில் இருந்தன.

அந்த முறையில் பிரஞ்சுக்காரர் ஹட்ஸன் குடாவிலிருந்து தெற்கேயும், மெக்ஸிகோ குடாவிலிருந்து வடக்கிலும் மலையோரமாக பிரஞ்சு மலைக் கோட்டைகளைக் கட்ட ஆரம்பித்து விட்டனர். அந்த முறையில் க்ரௌன் பாயிண்ட், டிகண்டரோகா, டக்விஸினி முதலிய கோட்டைகளைக் கட்டி விட்டார்கள்! இதைக் கண்ட ஆங்கில குடியேற்ற நாட்டு வாசிகள், தங்களைப் பிரஞ்சுக்காரர்கள் உள் நாட்டில் பரவ வொட்டாதபடி தடுத்தார்கள் என்று எண்ணி விட்டனர். ஆகவே வந்தது வருத்தம். இரண்டு தாய் தேசங்களும் எது சமயம் என்று காத்துக் கொண்டிருந்தவர்கள் உடனே இதர பல காரணங்களைக் கொண்டு யுத்தம் தொடங்கினார்கள். இந்த யுத்தம் ஏழாண்டுகள் நடந்ததால் அதற்கு ஏழாண்டுப் போர் என்று சரித்திரங்களில் சொல்லப்படும். இயற்கையாகவே சில விஷயங்கள் சொல்ல வேண்டி நேர்ந்ததால் விஷயம் விரிந்து விட்டது. மேலும் தொடர்ச்சி எழுத வேண்டியிருக்கும் விவரத்திற்கு மன்னிப்புக் கோரி, அடுத்த யுத்தத்தைப் பற்றிய விவரமும் அதை நடத்திய பிட் என்பவரைப் பற்றிய விபரங்களும், இந்தக் கட்டுரையின் தொடர்ச்சியாக எழுதப்படும் (தொடரும்.)

(இதில் சிரத்தை வைத்துப் படிக்கும் அன்பர்கள் தேசபடம் வைத்துக் கொண்டால் சற்று விவரமாக இருக்கும் என்பது குறிப்பிடத்தக்கது.)

# மாமரச் சிறப்பு

(தென்னாப்பிரிகா, டர்பன் சரஸ்வதி சபைத்தலைவர்
திரு. ச. முனிஸ்வாமி பிள்ளை.)

து மலாய்த் தீவிலிருந்து இந்தியாவுக்குச் சென்றதாக அநேக சாஸ்திரிகள் அபிப்பிராயப் பட்டபோதிலும், இந்நாட்டின் வேதங்களும் புராணங்களும் இது லங்கையிலிருந்து அனுமாரால் கொண்டு வரப்பட்டதென்று தெரிவிக்கின்றன.

சீதாதேவியை இலங்கையிலிருந்து மீட்டுக்கொண்டு வருவதற்குப் போன அனுமாரானவர் அங்கே ஒரு மாந்தோப்பைக் கண்டு அதன் பழங்கள் விதம் விதமான ருசியாயிருப்பதைத் தன் இனக்கூட்டத்தாருடன் பறித்துக் கடித்துத்தின்று சில விதைகளைச் சமுத்திரத்தில்விட, அவை அலைகளால் இந்தியாவில் சேர்க்கப்பட்டனவென்று ராமாயணத்தால்ல் தெரிகிறது.

வேதங்களில் மாவிலையைப் பல விஷயங்களுக்கு உபயோகப்படுத்தின தாகவும் இருக்கிறது. பின்னும் விக்கிரமார்க்கர் காலத்தில் வாழ்ந்திருந்த குமார சம்பவம், சாகுந்தலம் ஆகிய இச்சரித்திரங்களை உன்னத காவியத்தில் வரைந்திருக்கும் காளிதாசர், மன்மத பாணங்களில் மாமலரை ஒன்றாக வர்ணித்திருக்கிறார்.

கௌதமர் மாமரத்தின் கீழிருந்து தவம் புரிந்ததாகவும் தெரிகிறது.

மகம்மதிய கவீசுரர்களில் அநேகர் இந்தியாவின்கண்ணுள்ள பழங்களில் மாம்பழத்தைப்போல் வேறொன்றுமில்லையென்றும், மற்றப் பழங்கள் கனிந்தால் மாத்திரம் உபயோகப்படுகிறதென்றும், மாங்காய் எந்தப் பக்குவத்திலும் உபயோகப்படுகிறதென்றும் இதுபழங்களுக்கு அரசனைப்போ லொத்ததென்றும் தெரிவித்திருக்கிறார்கள்.

ஆங்கிலேய அரசாட்சி இந்தியாவில் நிலைப்பதற்கு ஆதாரவாகிய 1757-ம் வருஷத்தில் மூர்ஷிடாபாத்தில் நடந்த சண்டையில் லார்ட் கிளைவ் என்பவர் 800 கஜம் நீளம், 300 கெஜம் அகலம் அதாவது 49½ ஏக்கர் விஸ்தாரமுள்ள தோப்பில் தமது படையுடன் இறங்கியிருந்தாரென்றும் தெரிகிறது.

மாம்பழம் தற்காலத்தில் சாதாரணமாய் உலகத்தில் உஷ்ணபாகமெல்லாம் இருக்கிறது. இது சில வருஷங்களுககுள்ளே அமெரிக்காவிலுள்ள பிளாரிடா மாகாணத்துக்கும், ஆஸ்திரேலியாவிலுள்ள கியூன்ஸ்லாண்டு தேசத்திற்கும், ஆப்பிரிக்காவிலுள்ள நெட்டால் நாட்டுக்கும், கனேரி லங்கைகளுக்கும் கொண்டுபோய் வளர்க்கப்பட்டது.

மாமரம் மூந்திரி மரச்சாதியில் சேர்ந்தது. இதன் பாலில் கற்பூரத்தைல (Turpentine) குணமிருந்து தேகத்தில் படுமிடத்தில் புண்ணாகிறது. நன்றாய் வளர்ந்த மரம் 50-70 அடி உயரமும் அவ்வளவு தூரம் பரந்தும் கிளைகளுடன் கூடாரம் போலிருக்கிறது. மரம் சாம்பல் வர்ணமாயும் கறுப்பாயுமிருக்கும். இலைகள் ஈட்டிபோல் ஒருஅடிவரையில் நீண்டும், 2-3 அங்குலம் வரையில் அகன்றும் இருக்கும் இதற்கு 1-2 அங்குலம் உருண்டை காம்புண்டு. மறு பக்கம் ஊசிபோலிருக்கும். நடு நரம்பு மத்தியில் ஓடும், இலை பளபளப்பா யிருக்கும். இளமையில் சிவப்பு பசுமையாகவுமிருந்து, முற்றமுற்றப் பசுமை யேறும். இளம் இலையில் துவர்ப்புமுண்டு. முற்றினாலோ அது மாறிவிடும்.

புஷ்பம் கொத்துக் கொத்தாகக் கிளையின் நுனியில் உண்டாகும். புஷ்பம் சிறியதாயிருக்கும். அழுக்கடைந்த மஞ்சளாகவும் அடியில் சிகப்புக் கீற்றுள்ள தாயு மிருக்கும். மனங் களிக்கும் வாசனையுள்ளது. புஷ்பத்தில் ஆண், பெண் அங்கம் இரண்டுமுண்டு. இளமரம் நிறைய ரசமிருக்கும். பழம் முட்டை வடிவாகவும், உருட்சியாகவும் நீண்டும் அகன்றும் வெவ்வேறு ரூபமாயும், வாசனையாயுமிருக்கும். பழம் 2-3 அங்குலம் மந்தமாயும் 4-6 ராத்தல் எடை யுள்ளதாயும், சிலவற்றில் நார்நிறைந்தும் வேறு சிலவற்றில் நார் அற்ற சதை நிறைந்தும், பலவித ருசியுள்ளதாயும், வெவ்வேறு நாமமடைந்து மிருக்கும். காயாய் இருக்கும்போது ஊறுகாய்க்கும், கறியாகச் சமையல் செய்வ தற்கும் சிலவகைகளில் விதையில்லாமலே சப்பையாயும் இருப்பதுண்டு, கொட்டையில் பெரிய பருப்பு இரண்டு பிரிவாக இருக்கும். முற்றிய பருப்பில் துவர்ப்பு இல்லாமல் மாவுநிறைந்து சில இடங்களில் உணவுக்கு உதவுகிறது.

மரம் பலகைக்கு உதவுகிறது. கறையான் இதைத் தின்னபோதிலும் கதவு சன்னல் முதலிய வேலைகளுக்கு உபயோகம்.





# சாங்கிய தரிசனம்

(திரு. எஸ். ஏ. திருமலைக் கொழுந்துப் பிள்ளை, பி.ஏ.)

(411-ம் பக்கத் தொடர்ச்சி.)

## 21-வது காரிகை

புருஷஸ்ய தர்ஸனார்த்தம் கைவல்யார்த்தம் ததாபிரதானஸ்ய—பங்கந்தவதுபயோ ரபிசம்யோகஸ் தத்கிருதஸ்ஸர்க:

[இலிங்கமும் புமானும் என் ஒன்று கூடினர் எனின்?]

புமான் (சிற்றறிவன்) அவ் இலிங்கத்தோடு கூடியதன் காரணமாவது:—முதற்கண் பிரதானத்தைத் தரிசித்தற்கும், பின்னர் அதனை விட்டுத் தண்டாய் நின்று கைவல்யம் பெறுதற்குமாம்.

இக்கூட்டம் எதுபோன்றதெனின்? சப்பாணியும் குருடனும் இரட்டையராக இருப்பதுபோலாம். இக் கூட்டம் சிருஷ்டி கிருத்தியத்திற்கும் காரணமாயிற்று.

உரை:—புமான் சச்சிதானந்தன்:—அதாவது உள்ளவன், அறிவன், மறதியாகிய இன்பன். இவன் ஒரு காலத்தும் அழிவதில்லை, மறதியாகிய இன்பத்தோடு எதனையும் பார்க்கவல்லவன். இவன் நினைக்கவும், மறக்கவும், நினைப்பும் மறப்பும் இல்லாது நிற்கவும் வல்லான். தன்னிலையில் நின்ற இவன் இலிங்கத்தோடு (குறிபுடைய பொருளோடு) தோய்ந்ததன் காரணம் சென்ற கற்பத்தில் கண்டறிந்து நீக்கித் துறந்திருந்த மாயையை (பிரதானத்தை) மற்றும் ஓர்தரம் தரிசித்து விளையாடிப் பின்னர் அதனைத் துறந்து ஆனந்தத்தில் இலயித்தற் பொருட்டேயாம். தம்மையறியா மாந்தராவார் மாயையுடன் விளையாட ஆரம்பித்து அதனிடம் மாட்டிக்கொண்டு உய்யும் நெறியறியாது தவிப்பர். பெரியரோ மாயையோடு அதிகாரத்துடன் விளையாடுவதற்கும் பின்னர் அதனைவிட்டு விலகி நிற்றற்கும் திறமை வாய்ந்த சுதந்தர புருஷராவர்.

புமான் அறிவு சொரூபி:—எதனையும் பார்த்தற்குத் திறம் வாய்ந்தவனேயன்றி இயங்கி யிடம் விட்டுப் பெயர்தற்கு ஆற்றான். ஆதலின் புமானை முடவனாக வருணித்தனர். குருடனோ காணுதற்கு இயலாதவனாயினும் நகருதற்குத் திறமையுடையவன். இலிங்கத்தைக் குருட்டு வாகனமாக வருணித்தனர். புமான் நினைத்த விடத்திற்குக் கொண்டு சேர்த்தற்கு இலிங்கத்தை

வாகனமாகக் கொண்டார். அறிவு (புருஷன்) நுணுகி ஓர் புள்ளியின் கண்ணும் விரிந்து அண்டங்களை யெல்லாம் தன்னுட்கொண்டு எல்லாமாயும் நிற்பது வாகிய ஒன்றாகும்.

ஆகவே புமான் அணிமாவும், மகிமாவுமாய் நிற்கவல்லவன். தானெனக் கருதித் தன்னைச் சிறுக்கும் அணுவாகிய அகங்காரத்தைக் கண்டு அழித்து விடுவானாயின் தனக்கென இருக்கும் அருகிய நிலைகெட்டு எங்கணும் சர்வ வியாபியாய்த் தன்னுள் எல்லாம் இருக்கவும் தான் அவற்றுள் எதனையும் பற்றுக் கோடாய்க் கொள்ளாமையால், தான் பிறவாது எவரும் தன்னுட்பிறந்து வளர்ந்து இறந்து அலமருவதையும் காண்பன். இவ்வாறு தாக்கியும் தாக்காது நிற்கும் நிலையே நிராதார நிலையமான பரயோகமாம்.

நிராதாரமாய்ப் பற்றியும் பற்றாது நிற்கும் நிலையைக் கந்தழியென்று கூறுப.

"உற்ற ஆக்கையின் உறுபொருள் நறுமலர் எழுதரு நாற்றம்போல்
பற்றல் ஆவதோர் நிலையிலாப் பரம்பொருள் அப்பொருள் பாராதே
பெற்றவா பெற்ற பயனது நுகர்ந்திடும் பேதை சொல் தெளியாமே
அத்தன் ஆண்டு தன்னடியரிற் கூட்டிய அதிசயங் கண்டாமே"

என்று முத்திக் கரைகண்ட மணிவாசகப் பெரியார் கூறிய திருவாசகச் செய்யுளைக் கடைப் பிடித்துத் தெளிக.

புருஷனும் பிரகிருதியும் (புமானும் இலிங்கமும்) சையோகமானதால், மூன்று விஷயங்கள் சேர்கின்றன:—மாயாதரிசனம், மாயா சிருஷ்டி, மாயையைத் துறத்தல்.

சகத்திலே இலயித்திருக்கும் ஒருவன் அதன் இயல்பை நன்றாகத் துய்த்தற்குச் சிறிது காலம் கஷ்டத்தைக் காணவேண்டும்.

ஆதலின் துன்பத்திலிருந்து விடுதலையாகிக்கொண்டு போதலே பரம சுகம். முழுமையும் துன்பம் ஒழிந்தபொழுது இன்பம் போதத்திற்கு (அறிவுக்கு) எட்டாது சும்மாவிருக்கும். கொடிய வெயிலடிக்கும்போழ்து மர நிழல் மிக நன்றாயிருக்கும். இவ் வெயிலே மரங் கொடுக்கும் இன்பத்திற்குக் காரணம்.

"முத்திதனில் மூன்று முதலும் மொழியக்கேள்
சுத்தவனுபோகத்தைத் துய்த்தல் அணு—மெத்தவே
இன்பங் கொடுத்தல் இறை இத்தை விளைவித்தல் மலமாம்
அன்புடனே கண்டுகொள் அப்பா"

## 22-வது காரிகை

பிரகிருதேர் மஹாம்ஸ்ததோ அகங்காரஸ் தஸ்மாத் கணச்ச ஷோடசக:—தஸ்மாதபி ஷோடசகாத் பஞ்சப்ய: பஞ்ச பூதானி.

[புமான் பிரகிருதியோடு சம்பந்த முற்றதால் விளைந்த சிருஷ்டி.]

பிரகிருதியினின்று மகத் (புத்தி) தோன்றியது; மகத்திலிருந்து அகங்காரம் பிறந்தது. இவ் அகங்காரத்திலிருந்து பதினாறன் கூட்டம் பிறந்தது. இப் பதினாறனுள் ஐந்திலிருந்து பஞ்சமகா பூதங்கள் தோன்றின.

உரை:—இருள் மயமாய் பிரிதொன்றும் தரிசனத்திற்கு எட்டாதிருந்த அவ் இயக்கத்தில் ஓர் ஜோதி தோன்றியது; இதுவே மகத்தாகிய புத்தியாம்.

"திணிந்ததோர் இருளில் தெளிந்த தூவெளியே."
என்று மணிவாசக அடிகள் திருவாசகத்துட் கூறியதைக் காண்க.

கிறித்துவேதத்துள்ளும் "அளவிறந்த வெளியில் அந்தகாரம் நிறைந்திருந்தது! பரம் அதனிடம் இயங்கிக்கொண்டிருந்தது. பராபரம் (பரமன்) ஒளி தோன்றுக வென்றனர்: உடனே ஒளிதோன்றியது" என்று கூறப்பட்டுளது.

## பிரபஞ்ச உற்பத்தி

புருஷன்
(சந்நிதானம்)
↕
பிரகிருதி
↓
மகத்
↓
அகங்காரம்

இருள் அகங்காரம் ↓

| சப்தம் | பரிசம் | ரூபம் | ரசம் | கந்தம் |
|---|---|---|---|---|
| ↓ | ↓ | ↓ | ↓ | ↓ |
| ஆகாயம் | வாயு | தீ | நீர் | மண் |

ஒளியகங்காரம் ↓

| செவி | தோல் | கண் | நா | மூக்கு |
|---|---|---|---|---|
| ↓ | ↓ | ↓ | ↓ | ↓ |
| வாக்கு | பாதம் | பாணி | உபத்தம் | பாயுரு. |

மனம்.

மற்றும் ஓர் விதமாகக் கொண்டு தமோ அகங்காரத்திருந்து தன்மாத்திரைகளும், சத்துவ் அகங்காரத்திருந்து மனமும், இராஜோ அகங்காரத்திருந்து ஞானேந்திரியம், கன்மேந்திரியங்களும் பிறந்தன வென்பர்.

பிரகிருதியினுடைய பரியாய நாமங்கள்:—பிரதானம், பிரமம், அவ்வியக்தம், பகுதானகம், மாயை.

மகத்தினுடைய பரியாய நாமங்கள்:—புத்தி, ஆசுரி, மதி, கியாதி' ஞானம், பிரக்ஞை.

அகங்காரத்தினது:—பூதாதி, தைஜசன், வைகிருதன், அபிமானம்.

# பண்டைத் தமிழர் போர்த்திறம்

(R. ஷண்முகம் பிள்ளை.)

வடக்கே திருவேங்கட மலையையும், கிழக்கே குண கடலையும், தெற்கே கன்னியா குமரியையும், மேற்கே குடகு மலையையும் எல்லையாகவுடையது நம் தமிழ்நாடு. பண்டைக்காலத்தில் இந்நாடு முடியுடை மூவேந்தராலும் மற்றும் பல குறுநில மன்னர்களாலும் செவ்வனே ஆட்சி செய்யப்பெற்று வந்தது பிரசித்தமான விஷயம். அக்காலத்துத் தமிழ்மக்கள் தாய்மொழியிற் றலைசிறந்து விளங்கித் தம்மறிவை வளம் படுத்தியதோடு வீரம், புயவன்மை, போர்வன்மை முதலியவற்றிலும் மேம்பட்டு விளங்கினர்.

முற்காலத்தில் பல மன்னர்கள் உயரிய மலைகளின்மீது கற்கோட்டைகளை அமைத்துக்கொண்டு, பகைவர் கைப்படாவண்ணம் வசித்து வந்தனர். இத்தகைய மலைக்கோட்டைகளைத் தஞ்சை, செஞ்சி, வேலூர் முதலியவிடங்களிற் கண்கூடாகக் காணலாம். சில அரசர்கள் மலை, காடு, நீர் முதலியன ஒருங்கே அமையப்பெறாத உள் நாட்டில், பகைவர் உட்புகுதற்கரியதாய் அடர்ந்து வளர்ந்த பரந்த காவற்காட்டினுள்ளே ஆழ்ந்த அகழியும் உயர்ந்த மதில்களும் சூழப்பெற்ற அரண்களை அமைத்துக்கொண்டு வசித்துவந்தனர். அகழிகளில் முதலைகளும் சுறாக்களும் மிகுந்திருக்கும். மதில்கள் மேற்புறத்தில் பல பொறிகள், பதணம், மெய்ப்புழை, ஞாயில் முதலியன அமைக்கப்பட்டு, எழுவும் சீப்புமுடைய வாயிற் கோபுரங்களையும், பல எந்திரங்களையும், மேலிருந்து அம்பு எய்யும் பதுக்கிடங்களையும் தன்னகத்தே கொண்டு பகைவர்களை நாசப்படுத்த வல்லதா யமைந்திருக்கும்.

வேந்தர்கள் ஒருவர் மற்றொருவரோடு பொருதுவது கருதியவழி அவ்வப்போர்களுக்குரிய பூக்களைச் சூடியே போர்புரிதல் பெருவழக்காயிருந்தது. போர் குறித்த வேந்தன் எதிரியின் நாட்டிலுள்ள அந்தணர் ஆனிரை முதலியவற்றை அப்புறம் அகற்றியபின்னரே போர்புரிதல் அறநெறியாகக் கருதப்பட்டது. மறைவல்லோர் மதியுடையாராதலின் போர் நிகழ்ச்சியை யறிந்தவுடன் தாமே வேறிடம் அகன்றிடுவர். ஆனிரையோ அங்ஙனம் செல்வதன்றாதலின் போர் விரும்பிய புரவலன், தன் பகைவன் நிலத்துப் பசுநிரைகளைத் தானே களவிற் கொண்டுசென்று காப்பாற்றுவான்.

பசுக்கவரும் வழக்கம், தண்டத் தலைவர், முனைபுலங் காப்போர், குறுநில மன்னர் முதலியோர் செய்கையாயிருந்தது. அவர்கள் வேந்தனால் ஏவப்பட்டும், ஏவப்படாமலும் தமது படைகளைக் கூட்டி மாலையில் நற்சகுன

மொழிகேட்டு மாற்ருன் புலத்திற்கு ஒற்றர்களை அனுப்புவர். அவர்கள் வாயிலாகப் பகைவர் நிலத்தின் பான்மையை யறிந்துசென்று நிரை நிற்கும் புலங்களுக்கருகே மறைந்திருப்பர். சமயம் வாய்த்ததும் ஒய்யெனக் கிளம்பி நிரை காத்தோரைக் கொன்றுவீழ்த்திப் பசுக்களைக் கைப்பற்றிச் சுரத்திடையும், அரிய காட்டிடையும் அவைகள் தன்புரு வண்ணம் மெத்தனவாய் உடன் கொண்டு தம் நாடடைவர். வழியில் தம்மை யெதிர்த்தவரோடு பொருது வெற்றி பெறுவர். பின்னர் நிரைகளைத் தம்மூர்ப் புறத்தே கொண்டு நிறுத்தி, இரவலர்க்கும், வேற்றுப் புலத்து நிலைமையை அறிந்தார்க்கும், நிமித்தம் புகன்றவர்க்கும் பகுத்துக்கொடுத்துத் தமது வெற்றியின் அறிகுறியாக மதுவுண்டு களித்து வெறியாட்டயர்வர். நிரையைப் பறிகொடுத்தோரும் இவ்வாறே மாற்ருன்புலத்து நண்ணிப் போர்புரிந்து நிரையை மீட்டுப் போதலுமுண்டு.

நிமித்தகன் குறித்த நன்னாளில் வேந்தன், தனது குடையையும் வாளையும் முன்னே புறப்படச்செய்வான். தினைமா, பொறி, துவரை, நிணம், உதிரம் முதலியவைகளைத் துர்க்கா தேவிக்குக் காணிக்கையாக முன் எடுத்துச் செல்ல மாற்ருன்மீது படையெடுப்பான். அப்பொழுது வீரமுரசு முழங்கும். மலை நிகர்த்த யானைக்கூட்டங்கள் பிளிறும். சேனைகள் ஆரவாரம்செய்யும். வேந்தன் தனது சேனைகளுக்கு வேண்டிய ஆயுதங்களை நல்கி அவைகளுக்குத் தலைவனாக ஒருவனை நியமிப்பான். ஏனைய போர்வீரர் அச் சேனுபதியின் சொற்கேட்டு நடக்குமாறு பணிப்பான்.

இவ்வாறு வென்ற அரசன் மாற்றன் நிரை கொடுக்கத் திரும்பி விடுதலும் உண்டு. நிரைகொடுக்க மறுக்கும் பகைவர் நாட்டூர்களை, அந்தணர் இல்லம், அறவோர் பள்ளி, தேவாலயங்கள் நீங்கலாகத் தீயிட்டுப் பாழ்படுத்தலுமுண்டு. பயந்து புறக்கிடும் வீரர்களைக் கொல்லாது விட்டுவிடுவர். புண்பட்ட தனது வீரர்களை வேந்தன் பெரிதும் புகழ்ந்துரைப்பான்.

போர் முடிவிற் சிறந்த வீரர்களுக்கு ஏனுதி, காவிதி முதலிய பட்டங்களைச் சூட்டி முத்தாரமுதலியன பரிசிலாகக் கொடுப்பான். மருதநில ஊர்களையும் அவர்களுக்கு வழங்குவதுண்டு. பின்னும் அவ் வீரர்களோடு அமர்ந்து உண்டு களிப்பான்.

அல்லாமலும், காவல்செய்யப்பட்ட அரண்களைப் பிடித்தற்கும் செல்வதுண்டு. அங்ஙனம் செல்வோன் தனது கொடிகளை முன்னே புறப்படச் செய்து, பின்னல் தனது சேனையோடு புறப்பட்டுப் பகைவன் கோட்டைக்கு வருவான். கோட்டைமேலிருக்கும் அரண் காவலர்கள் பகைவர் வருதலை யறிந்து அவர்கள்மீது அம்புமாரியைப் பொழிவார்கள். இதைக் கிடுதுப்படையாரும் கேடகப் படையாரும் தடுத்தும் தாக்கிச் சென்றும் கோட்டையினருகடைந்து முற்றுகைசெய்வர். ஆங்குக்கிடங்கின் இருகரையினும் நின்றுகொண்டு பெரும்போரியற்றுவர். அகழியில் மரப்பலகைகளை மிதக்கவிட்டு அவைகளின்மீது ஏணிகளைச்சார்த்திக் கோட்டைமீதேறிப்பொருதலுமுண்டு. இவ்வாறு மதில்களைக்கடந்து உட்புகுந்த பகைவர் அரண் காவலரைக் கோட்டைக்குள் துரத்துவார்கள். உள்மதில் மாற்ருன் கைப்படப் போர் வீரின் கண்ணிகழும். புரிசைகளின்மீதும் கோவில்களின்மீதும் வீடுகளின்மீதும் ஏறி நின்று பெரும்போர் புரிவார்கள். பயந்து ஓடினவர்களை விட்டுவிடுவர்.

வேற்ராசன் வெற்றி பெறுவானேல் தன்பெயரால் முடிசூட்டித் தன் வாளுக்கு நீராட்டுச் சடங்குசெய்து வீரர்களுக்குத் தக்கவாறு பரிசில்கள் கொடுப்பான். பின்னர் அவ்வரணை இடித்துக் கழுதையேரிட்டுழுது உண்ணு வாரகும் வேலும் விதைத்துத் திரும்புவான். திரைவாங்கிக்கொண்டு திரும்பு வதுமுண்டு. அன்றியும் பன்னுள் அவ்விடத்தே தங்கியிருந்து தன்னரசியலை நிலைநிறுத்தி நாட்டைச் சீர்படுத்தித் திரும்பிப்போதலு முண்டு.

சமவெளி ஒன்றில் இடங்குறித்து இருதிறத்தாரும் போர்புரிதலுமுண்டு. யானை, குதிரை, தேர், காலாள் முதலிய நால்வகைச் சேனைகளும் அணி வகுத்து நின்று சண்டைசெய்யும். இருபுறமும் மற்போரும் வாட்போரும் கணக்கற்று நிகழும். மாற்ருன் அம்புகள் தம் மார்பகத்தே தைத்ததையும் பொருட்படுத்தாது அவைகளைத் தம் கையால் பிடுங்கி எறிந்துவிட்டுப் பகை வரைத் தாக்குவர்.

"கைவேல் களிற்ருெடு போக்கி வருபவன்
மெய்வேல் பறியா நகும்"

என்னும் திருவள்ளுவனர் குறள் இதனை நன்கு வலியுறுத்தும். இதில் சேனுதி பதியர்கள் காட்டும் வீரத்தன்மை மிகவும் வியக்கத்தக்கது. சேனை கலங்கிப்பின் வாங்கி ஓடுவதாக இருந்தால் தானே முன்சென்று சமர்செய்து வீரர்களை உற் சாகப்படுத்திச் சண்டைக்குத் தூண்டுவான். புறமுதுகிட்டு ஓடும் வீரர்களைக் கொல்லாது விடுதல் சிறந்த நெறியாகக்கருதுவர். வேந்தனும் வீரரோடு நின்று போர்புரிவான். வேந்தர்கள் போரில் மடிவரேல் அவரது மனைவியர்கள் தீப்பாய்ந்து உயிர்விடுவர்.

இவ்வாறு போர் நிகழுங்காலத்தி னடுவில் கூதிர்காலம் வந்திடின், வேந் தர்கள் போரை நிறுத்திப் பாசறையிற்றங்கித் தமது போர்வீரர்களைப் புகழ்ந்து ரைத்தும் உடன் உண்டும் களித்திருப்பர்.

கலங்காது போர்புரிந்து வெற்றியடைந்த வீரர்களைக் கண்ணுற்ற அவ னது மனைவியும் தாயும் மகிழ்ந்து போற்றுவர். பயந்து புறமுதுகிட்டுத் திரும்பிவந்த வீரர்களைக்காண நாணமுற்று உயிர் விடுவர்.

போரில் மடிந்த வீரர்களை ஞாபகப்படுத்துமாறு சில ஏற்பாடுகள் அக் காலத்தில் நடந்துவந்தன. பெரிய கற்றூண்களை நாட்டி அதில் இறந்துபட்ட போர்வீரன் பெயரையும் அவனியற்றிய வீரச் செயலையும் எழுதி அக் கல் லுக்குப் பூஜை, நைவேத்தியம் முதலியன செய்து தெய்வமாக வணங்குவர். சிலர் அக் கல்லுக்குக் கோவிலமைத்தும் வழிபடுவர்.

இத்தகையவீரம் செறிந்திருந்த நந்தமிழ்நாடு இக்காலத்தில் சீர் குலைந்து வலி யிழந்திருப்பது வெளிப்படை. மீண்டும் இந்நாடு பண்டைய நிலை யிற் சிறந்துவிளங்க இறைவன் அருள்செய்வானுக.



# ஆசிரியர் குறிப்புக்கள்

## உழவு வளர்ச்சிக்குப் பத்தாண்டுத் திட்டம்

நமது நாட்டு உழவுத் தொழில், வளர்ச்சி குன்றி இழிநிலை அடைந்து வருவது கண்கூடு. விவசாயிகளின் பாடு வெகு திண்டாட்டம். கிராமங்களில் கடனில்லாத விவசாயியைக் காண்பதரிது. சரியான விளைவில்லை. அரை குறையாக விளைந்தாலும் விளைபொருளுக்குத் தக்க விலை இல்லை. வரிப் பளுவைப் பற்றி விரிக்க வேண்டியதே இல்லை. இந் நிலையை இன்னும் எவ் வளவு காலந்தான் பொறுத்துக் கொண்டிருப்பது? சென்ற மாதத்தில் சென்னை ஒய். எம். சி. ஏ. மண்டபத்தில் விவசாய இலாகா டைக்டர் ராவ் பகதூர் ஆனந்தராவின் தலைமையின் கீழ் அறிஞர் பி. வி. நாராயணசாமி நாயுடு விவசாய வளர்ச்சியைப் பற்றி ஒரு சொற்பொழிவு நிகழ்த்தினர். ஸ்ரீமான் நாராயணசாமி நாயுடு சிதம்பரம் அண்ணாமலைப் பல்கலைக் கழகத் தைச் சேர்ந்தவர். சிறந்த பொருள் நூல் நிபுணர். நம்முடைய கிராமங் களை முன்னேற்ற வேண்டும் என்ற ஆர்வம் படைத்தவர். எனவே இவர் நமது நாட்டு உழவுத் தொழில் வளர்ச்சி பற்றி வெளியிடும் கருத்துக் கூர்ந்து கவனிக்கத் தக்கதாகும். உழவுத் தொழில் வளர்ச்சிக்கு ஒரு பத்தாண்டுத் திட்டத்தை வகுத்து மேற்கொள்ள வேண்டும் என்பது அறிஞர் நாராயண சாமி நாயுடு அபிப்பிராயம். "உழவுக்குரிய நிலங்களைப் பெருக்க வேண்டும். வெவ்வேறு விதமான பயிர்களை உண்டாக்க வேண்டும். கால் நடைகளை நன்கு காப்பாற்ற வேண்டும். விவசாயிகட்குக் கல்வியறிவு அளிக்க வேண் டும். அவர்கட்குக் கடன் அளிக்க வசதி செய்ய வேண்டும்" என்பன போன்ற சில யோசனைகளை அவர் வெளியிட்டார். சென்னை மாகாணத்தில் 131 லக்ஷம் ஏக்கர் நிலங்கள் பயிராக்கப்படாமல் தரிசாகக் கிடக்கின்றன. இவைகளை விவசாயத் தொழிலாளருக்குத் தர்க்காஸ்து அளிக்க அரசாங்கத் தார் ஏன் முயற்சி செய்யக் கூடாது என்று கேட்கின்றோம். ஸ்ரீமான் நாரா யணசாமி நாயுடு கூறியது போல் இந் நிலங்களில் ஒரு பகுதியில் பயிரிட்டா லும் இங்கே இறக்குமதியாகும் $2\frac{1}{2}$ லக்ஷம் டன் அந்நிய அரிசியை நுழைய விடாமல் தடுத்து விடலாமே. நான்கு அல்லது ஐந்தாண்டுகள் வரை ஷை தர்க்காஸ்து நிலங்களுக்கு வரி வாங்காமலிருப்பதோடு கூட்டுறவுச் சங்கங்க ளின் மூலம் விவசாய உபகரணங்களும் உதவினால் நாடு செழிக்கும், பிறகு அரசாங்க வருவாயும் அதிகப்படும். மேட்டூர்த் தேக்கம் போன்ற பெரிய தொரு திட்டம் ஏற்படுத்தி விட்டால் மாத்திரம் போதாது. வீணாகும் மழை நீரைத் தேக்கப் பெரிய குளங்கள் முதலியனவும் வெட்டப்பட வேண்டும். குடிசைத் தொழில்களுக்கு ஆதரவு தரவேண்டும். விவசாயக் கடன் நீக்கம் பயன்படும் முறையிலிருக்க வேண்டும் என்று அறிஞர் நாராயணசாமி நாயுடு எடுத்துக் காட்டிய அரிய யோசனையை அரசாங்கத்தார் சிரத்தையுடன் கவ னித்து ஆவன செய்ய வேண்டுமென்று விரும்புகின்றோம். அரசாங்கத்தார் பணம் இல்லை என்ற பல்லவி பாட முன் வந்தால் அது புளித்துப்போன சமா தானமாகும் என்பதை நாம் விரிக்கவும் வேண்டுமோ?

---

## பட்டப்படிப்புக்குத் தடை

1933-34-ம் ஆண்டின் கல்வி அறிக்கையை இந்திய அரசாங்கத்தார் வெளியிட்டிருக்கின்றனர். அவ்வறிக்கையில் மாகாண வாரியாகச் கல்விச் செலவு விவரம் கொடுக்கப்பட்டிருக்கிறது. கலாசாலைகள் வளர்ச்சி முதலிய விவரங்களும் வெளியிடப்பட்டிருக்கின்றன. "பற்பல சர்வகலாசாலைகளிலும் தேர்ச்சி அடையும் மாணவ மாணவிகள் விகிதத்தைக் கவனிக்கும்போது ஆண்களைவிடப் பெண்களே அதிக நன்றாய்த் தேர்ச்சி அடைவது புலனாகிறது" என்று அறிக்கை கூறுவது பெண்மணிகட்கும் பெண் கல்வியில் ஆர்வங்கொண்டவர்கட்கும் பெருமகிழ்வை ஊட்டும் என்று நம்புகின்றோம். இக்காலச் சர்வகலாசாலைகள் மேற்கொண்டுள்ள பட்டக்கல்விமுறை பயனற்றது—வேலையில்லாத் திண்டாட்டத்தை அதிகப்படுத்துவது என்று அநேக அறிஞர்கள் முறையிட்டுக்கொண்டு வருகின்றனர். நாமும் அடிக்கடி இதைப்பற்றி எழுதிக்கொண்டு வருவதை நேயர்கள் அறிவார்கள். இவ்வுண்மை அதிகார வர்க்கத்தின் கவனத்தையும் ஈர்த்திருப்பது ஒரு பெரிய விசேஷமாகும்; பயனற்ற பட்டக்கல்வியைக் கட்டுப்படுத்துவதுபற்றி உயர்தரக்கல்வி நிர்வாகிகள் எல்லாரும் தீவிரமாக யோசனை செய்து வருகின்றனராம். பயனுள்ள கல்வியைத் திறமையாகப் போதிப்பது—படித்த வேலையில்லாதார் எண்ணிக்கையைக் குறைப்பது ஆகிய இரண்டு காரியங்களும் முக்கியமாகக் கவனிக்கப்படும் என்பதை அறிந்து மகிழ்கின்றோம்.

---

## தொல்காப்பியப் பொருளதிகார ஆராய்ச்சி

"வித்துவான் மு. ராகவையங்கார் எழுதி வெளியிட்டுள்ள தொல்காப்பியப் பொருளதிகார ஆராய்ச்சி என்னும் நூலில் தமிழரை இழிவு படுத்தும் கூறுகள் இருக்கின்றன-அவைகளை நீக்காமல் அப்புத்தகத்தை மாணவர்கட்குப் பாடமாக வைக்கக்கூடாது" என்று ஸ்ரீமான் எஸ். சோமசுந்தர பாரதியார் சென்னையில் நிகழ்த்திய சொற்பொழிவு ஒன்றில் விரிவாக எடுத்துக்காட்டினர். அதன் பயனாகத் தொல்காப்பியப் பொருளதிகார ஆராய்ச்சி நூற் கண்டனம் தமிழகத்தில் காட்டுத்தீப்போல் பரவி வருவது குறிப்பிடத்தக்கதாகும். கண்டனத்திற்குரிய கூறுவருமாறு: "ஒழுங்கற்ற மணமுறைகளை விலக்கி ஒத்த அன்பு பற்றிய காந்தருவத்தையும், அதன் பின்னர்க் கற்பியலையும் ஆரிய மேலோர் தமிழ் நாட்டாருக்கு நன்கு விதித்துப் போந்தனர் எனவும் உணர்ந்து கொள்க"—தொல்—பொருளதிகார ஆராய்ச்சி, இந்த வாக்கியங்கள் உண்மைக்கு மாறானவை என்பது நமது கருத்து. இங்ஙனமே இன்னும் சில முரண்பட்ட பகுதிகளும் இருக்கின்றன. தமிழ்மக்கள் களவின் வழி வந்த கற்புமுறையை உயிராகப் போற்றிவந்த உண்மையை ஸ்ரீமான் ஐயங்கார் முதலில் ஒப்புக்கொண்டு பிறகு ஆரியமேலோர் தமிழர்க்குக் கற்பைப் போதித்தனர் என்று தமது ஆராய்ச்சியில் கூறுகிறார். இது முன்னுக்குப்பின் முரண்பட்ட கூற்றாகும். பண்டைத்தமிழ் நூலாராய்ச்சி செய்த தமிழர் யாரும் தமிழருக்கு மணமுறையில்லை—கற்பில்லை என்று கூறத் துணியார். ஸ்ரீமான் ஐயங்கார் கூற்றுப் பண்டைத் தமிழர் நாகரிகத்தையே அவமானப்படுத்துவதாயிருக்கிறது. எனவே இப் பகுதியை உடனே நீக்க ஏற்பாடு செய்ய வேண்டும் என்று ஸ்ரீமான் ராகவையங்காரைக் கேட்டுக் கொள்ளுகிறோம்;

இன்றேல், வீணுகத் தமிழ்மக்கள் உணர்ச்சியைப் புண்படுத்திய பழி அவரைச் சேரும். இச்சமயம் இந்த விவகாரத்தை அதிகமாக விரிக்க நாம் விரும்பவில்லை.

---

## வீரப் பெண்மணியின் பிரிவு

இந்தியப் பெண்ணுலகத்திற்கு ஒரு ஒப்பற்ற ஆதர்சமாய் விளங்கிய ஸ்ரீமதி கமலா நேருவின் பிரிவை அறிந்து இந்தியா துன்பக்கடலில் மூழ்கியது. ஸ்ரீமதி கமலாநேரு செல்வக் குடும்பத்தில் பிறந்து செல்வக் குடும்பத்தில் புகுந்தார். இந்திரபோகம் அநுபவிக்கும் சௌகரியம் இருந்தும் அவர் தமது கணவர் வழிநின்று தாய் நாட்டின் திருப்பணிக்கே தம்மை அர்ப்பணம் செய்திருந்தார். மிகவும் எளியவாழ்வை மேற்கொண்டு அன்னைபணி செய்து சிறைத்தண்டனைகளையும் ஏற்றுக் கொண்டார். உயிர்க்கணவர் பண்டித ஜவஹர்லால் நேருவின் தியாகங்கட்கு ஸ்ரீமதி கமலாநேரு ஊக்கமும் உற்சாகமும் அளித்துக் கொண்டிருந்தார். இத்தகைய வீரப் பெண்மணியின் பிரிவு இந்தியாவுக்கே நஷ்டம். இவருடைய பிரிவால் இந்தியமாதா ஒரு அரும்பெறல் மகளை இழந்தாள். பண்டித ஜவஹர்லால் வாழ்க்கைத் துணைவியை இழந்தார். அருமை மகள் இந்திரா அன்னையை இழந்தாள். இயற்கையை வெல்ல யாரே வல்லார்? அம்மையாரின் ஆன்மா சாந்தி அடைவதாக.

---

## இன்னுமா அநியாயம்?

தூத்துக்குடியை அடுத்த ஒட்டப்பிடாரம் என்னும் ஊரில் ஒரு ஹிந்துப் பள்ளிக்கூடம் அரசாங்க மானியம் பெற்று நடக்கிறது. சாதி சமய வேற்றுமையின்றி எல்லா மாணவர்களையும் சேர்த்துக் கொள்ளவேண்டும் என்பது விதி. இவ்விதியை அநுசரிக்காவிட்டால் சர்க்கார் மானியம் பெற உரிமை இல்லை. இதற்கு ஷை பள்ளிக்கூட நிர்வாகிகள் கட்டுப்பட்டே மானியம் பெற்று வருகிறார்கள் என்று நம்புகின்றோம். இந்நிலையில் தாழ்த்தப்பட்ட வகுப்பைச் சேர்ந்த பிள்ளைகளைப் பள்ளிக்கூடத்தில் சேர்ப்பதில்லை என்று ஷை பள்ளிக்கூட நிர்வாகிகள் சொல்லுவதாகத் தெரிகிறது. தீண்டாமையை விலக்கவேண்டும் என்று தீவிரமான கிளர்ச்சி நடைபெற்றுக் கொண்டிருக்கும் இக் காலத்திலுமா இத்தகைய அநியாயங்கள் நிகழ்ந்து கொண்டிருக்கவேண்டும்? ஒட்டப்பிடாரப் பள்ளிக்கூட நிர்வாகிகளைப் போலவே வேறுசில ஊர்களில் உள்ளவர்களும் தாழ்த்தப்பட்ட வகுப்புப் பிள்ளைகளைப் பள்ளிகளில் சேர்க்க மறுக்கிறார்கள் என்பதை நாம் அறிவோம். இவ் விஷயத்தில் ஆங்காங்குள்ள பொதுநல ஊழியர்கள் சற்றே கருத்தைச் செலுத்தினால் தக்கபயன் விளையும் என்றே எண்ணுகின்றோம். "சாதி சமய வேற்றுமை கருதாமல் எல்லாரையும் சேர்த்துக் கொள்ளவேண்டும்-இன்றேல் மானியத்தை இழக்கவேண்டும்" என்ற மாதிரியில் ஒரு நெருக்கடியை உண்டாக்கினால் பலன் இல்லாமற் போகாது என்றே நம்புகின்றோம்.

---




# லக்ஷ்மிபாய்

அல்லது

# ஆற்காட்டு முற்றுகை.

(எம். லக்ஷ்மண முதலியார்.)

(638-ம் பக்கத் தொடர்ச்சி.)

"ஹஸேன்! தியாங்க் காட்! (Thank God) தி ஆனர் ஆப் தி இங்கிலீஷ் இஸ் ஸேவ்டு! (The honour of the English is saved) ஆராயிரம் மஹாராஷ்டிர வீரர்கள் நமக்கு உதவியாக வந்திருக்கிறார்களாம். இந்த விஷயத்தை ஒற்றர் மூலம் தெரிந்து கொண்டு பகைவர்கள் பீரங்கிகளைப் போட்டு விட்டு கூடாரங்களை பிடுங்கிக் கொண்டு ஓட்டம் பிடிக்கிறார்கள்" என்றார்.

"ஓ! மகாராஷ்டிர வீரர்கள் தாங்களாகவே நம் உதவிக்கு ஏன் வந்தார்கள் தெரியுமா! இந்த இளவரசி இங்கே இருந்ததின் பலனே அதுவாகும்" என்று உண்மையைச் சொன்னான் ஹஸேன்.

இந்த இரகசியத்தை இதுவரைக்கும் அறியாத க்ளைவ் ஆச்சரியமடைந்து ஹஸேனுக்கும் லக்ஷ்மிபாய்க்கும் தனது நன்றியைத் தெரிவித்துக் கொண்டார்.

"நான் ஒன்றும் சாதித்து விடவில்லை" என்றாள் லக்ஷ்மி. ஹஸேன் அவளது சுந்தரவதனத்தையே உற்று நோக்கினான். அவனது விலாவில் பகைவரிடம் செய்த சண்டையில் ஏற்பட்ட படுகாயத்தின் வேதனைகூட அப்பொழுது அவனுக்குத் தோன்றவில்லை!

## மூன்றும் அத்தியாயம்.

அருணன் அஸ்தமனமாகி ஐந்து நாழிகை யிருக்கும். தஞ்சைமாநகரத்தில் பிரதாபசிங் மஹாராஜாவின் கொலுவில் மந்திரி பிரதானிகளுடன் அவர் ஏகதேசத்தில் சில முக்கியமான ராஜீய திட்டங்களைப் பற்றி ஆலோசனை செய்துகொண்டிருந்தார். அப்பொழுது ஒரு சேவகன் வந்து அன்னியநாட்டிலிருந்து வந்த இருவர் அரசனுடைய பேட்டி உடனே காணவேண்டுமென்று விரும்புவதாகத் தெரிவித்தான். எப்போதும் தர்பாரில் இந்த வேளையில்தான் வெளிநாட்டாருக்கு பேட்டி அளிப்பது வழக்க

மாதலால், அவர்களை உள்ளே அனுமதிக்கும்படி மஹாராஜாவின் கட்டளை பிறந்தது.

சிறிது நேரத்தில் இரண்டு வாலிபர்களை அழைத்துக்கொண்டு சேவகன் தர்பார் மஹாலுக்கு வந்தான். அவர்களிருவரும் மிகக் களைப்புற்றிருந்தனர். ஒருவன் சற்று உயர்ந்து வளர்ந்தவனும் மற்றவன் அதிக சுந்தரமான வதனமும், பிரகாசமான பார்வையும், அதிக பால்ய தோற்றமும் உடையவனுகவும் இருந்தார்கள்.

"மஹாராஜாவோடு தன்னந்தனியே நாங்கள் பேசவேண்டும்" என்று விண்ணப்பித்துக்கொண்டான் சற்று உயரமாயிருந்த வாலிபன்.

சிறிது நேரத்தில் அந்த அன்னிய வாலிபர்கள் ஆச்சரியப்படும்படி அவர்களையும் மஹாராஜாவையும் ஏகாந்தத்தில் விட்டுவிட்டு மற்றவர்கள் கலைந்து போய்விட்டனர்.

"நீங்களிருவரும் யார்? எங்கிருந்து வருகிறீர்கள்?"

"என் சொந்த ஊர் டில்லிமா நகரம். தற்சமயம் நான் ஆற்காட்டிலிருந்து வந்துகொண்டிருக்கிறேன்" என்றான் முதலில் பேசியவன்.

"நம்மிடத்தில் என்ன காரியமாய் வந்தாய்?"

"தங்களிடம் ஒப்புவித்துவிட்டுப் போவதற்காக விலை மதிக்கமுடியாத ஓர் மாணிக்கம் கொண்டுவந்திருக்கிறேன்" என்று சொல்லிக்கொண்டு தன்னோடு வந்த தோழனைத் திரும்பிப் பார்த்தான். உடனே தனது அடிவயிற்றை இரு கைகளாலும் பிடித்துக் கொண்டு மூர்ச்சையாகிக் கீழே சாய்ந்துவிட்டான்.

"ஐயோ! அவர் வயிற்றில் படுகாயம்! உதவிவேண்டும்!" என்று கூவினன் மற்ற வாலிபன். அவன் முகம் துக்ககரமாயிருந்தது. அவனது குரலைக் கேட்ட மன்னன் திடுக்கிட்டார்; சிம்மாசனத்தைவிட்டு எழுந்து கீழே சாய்ந்துகிடக்கும் வாலிபனைக்கூட கவனியாமல் மற்றவனையணுகினர். அவன் தலைகுனிந்தான். ஏனெனில் அவன் ஆண் பிள்ளை அல்ல; ஆண் உடையில் வந்த லக்ஷ்மிபாய்!

"அம்மா! நீ யார்? நீ ஏன் இப்படி ஆண் உடையில் வந்திருக்கின்றாய்?" என்று வினவினர் மஹாராஜா.

"அண்ணா, நான்தான் லக்ஷ்மிபாய்!" என்றாள். அதன் பிறகு பேச அவளது நாவெழவில்லை.

"ஓஹோ! சாத்தாராவிலிருந்து உன்னை உத்தமஜீயுடன் இங்கு அனுப்பியிருப்பதாக முன்னமேயே நிருபம் கிடைத்துவிட்டதே! நீங்கள் இங்கு இன்னும் வாராததால் எங்கும் ஒற்றர்களை அனுப்பித் தேடச் சொல்லியிருக்கிறேன். வழியில் உங்களுக்கு என்ன ஆபத்து நேர்ந்தது? யார் அவ்வளவு துணிகரமாய் உங்களுக்கு தீங்கிழைத்தது?"

அவர் இப்படிப் பேசிக்கொண்டேயிருக்கையில் முன்னமேயே அவர் செய்த சைகை யறிந்து அவருடைய சிம்மாசனத்தின் பின்புறமிருந்து ஓர் கள்ள வாசல் வழியாய் இரண்டு யௌவன சேடிப் பெண்கள் வந்தனர். அவர்கள் கையில் பொன் பாத்திரங்கள் தாங்கியிருந்தனர். சிறிது நேரத்திற்குள்

இவர்கள் மூர்ச்சையாகிக் கிடந்த ஹுசேனின் களைப்பை அகற்றிவிட்டனர். பிறகு அதுவரைக்கும் நடந்த விருத்தாந்தங்களையும் ஹுசேன் தன் உயிரையும் கற்பையும் காப்பாற்றிய விஷயங்களைப் பற்றியும் உத்தமஜீ உயிர் துறந்த விஷயத்தைப் பற்றியும் விபரமாய் மஹாராஜாவிடம் சொன்னாள் லக்ஷ்மி பாய்.

ஹுசேன் பேரில் மஹாராஜா அதிகப் பிரியம் காண்பித்தார். அவனது வீரப் பிரதாபங்களைப் பற்றி முன்னமேயே கேள்விப்பட்டிருந்தார். ஆகையால் இப்போது அவன் தமது சமஸ்தானத்திற்கு வந்ததைப் பற்றி அதிகத் திருப்தியடைந்தார்.

"ஹுசேன், பிராணாவஸ்தையைக் கொடுக்கக்கூடிய உனது படுகாயத்தோடுகூட உனது உயிரையும் லக்ஷ்யம் செய்யாது, நீ நம்மைச் சேர்ந்த ஓர் இராஜ குமாரியை இங்கு கொண்டுவந்து சேர்த்தாய் அல்லவா? உனது பேருபகாரத்திற்கும் தைரியத்திற்கும் நாம் என்னவேண்டுமானாலும் செய்யத் தயாராய் இருக்கின்றோம். நீ முகம்மதிய மதஸ்தனாய் இருப்பதற்காக சங்கோஜப்படவேண்டாம். நமது சமஸ்தானத்தில் அந்த வேற்றுமையே கிடையாது. நாகூர் தர்க்கா என்ற பெரிய பள்ளிவாசல் நமது சமஸ்தானத்தின் செலவில்தான் கட்டப்பட்டது. ஆயிரம் வேலி நிலம்கூட அதற்கு சர்வமானியம்விடப்பட்டிருக்கிறது. நமது அரண்மனையை உன் சொந்த மாளிகையாகக் கருதி இங்கேயே இரு" என்று மஹாராஜா புகன்றார்.

பிறகு லக்ஷ்மிபாய் அந்தபுரத்திற்கு அனுப்பப்பட்டாள்.

இனி, ஹுசேன் எப்படி சிகிச்சைப் பெற்றுவந்தான் என்பதைக் கவனிப்போம்.

மாடமாளிகை கூட கோபுரங்கள் நிறைந்த அரண்மனைகளில் தஞ்சாவூர் அரண்மனையும் ஒன்று. இந்த அரண்மனையிலுள்ள வானளாவிய உப்பரிகை ஒன்றில் அநாதையான ஓர் முகம்மதியச் சிறுவன் பட்டுப் பீதாம்பரப் பஞ்சணையின் மீது படுக்கவைக்கப்பட்டிருந்தான். அரண்மனை வைத்தியர்கள் அவனுக்குச் சிகிச்சை செய்து வந்தார்கள். சேடிமாரும் தோழிமாரும் பணிவிடை செய்துவந்தார்கள். இரணத்தின் கொடுமையால் முதலில் சில தினங்கள் வரையில் ஹுசேனுக்கு பிரக்ஞை தவறிப்போய் இருந்தாலும் நாள் செல்லச் செல்ல இரணம் குணப்பட்டு வந்தது.

ஓர் நாள் இரவு பதினைந்து நாழிகையிருக்கும். இரணம் நன்றாய்க் குணப்பட்டுப் போய்விட்டபடியால் வேறு எந்தக் காரணத்தினாலோ தூங்காமல் விழித்துக்கொண்டிருந்தான். சேடி செல்லமும் எப்போதும் கண் விழித்துக்கொண்டேயிருந்து பழக்கமாகிப் போய்விட்டபடியால் தூங்கவில்லை. ஹுசேனிடத்தில் அந்த சேடிப் பெண்ணுக்கு அதிகப் பிரியம் என்று அவனுக்கு அவள் செய்யும் உபசாரத்திலேயே தெரியவரும்.

"ஐயா, உங்களுக்கு இப்போது உடம்பு நல்லபடியாய்ப் போயிட்டுதிலே?" என்று அச்சத்துடன் வினவினாள் செல்லம்.

"ஆம், செல்லம். ஏன் கேட்கிறாய்?"

"இனிமேல் நீங்கள் அரண்மனையை விட்டுப் போய்விடுவீர்களோ?"

"ஏன்? நான் போய்விட்டால் என்ன?

"உங்கள் பின்னாலே ராஜாத்தி அம்மா வந்தாங்களே அவுங்களே விட்டுட்டாப் போயிடுவிங்கோ?"

சிறிது நேரம் பதிலில்லை. ஆனால் மிக முக்கியமான ஓர் விஷயத்தைப் பற்றி அவன் சிந்தனை செய்வதாகத் தெரிந்தது.

"அந்த அம்மாளைக் கொண்டுவந்து விடுவதற்காகத்தானே நான் வந்தேன். அந்தக் காரியம் முடிந்துவிட்டது. இனி நான் போய்விடவேண்டியதுதானே?"

"ராஜா சம்மதப்பட்டால்தானே நீங்கள் போகலாம்?"

"அவருக்கு என்ன ஆக்ஷேபனை இருக்கிறது?"

"ராஜா சம்மதப்பட்டாலும் அந்தம்......"

"யார்? அந்த.....?"

"நீங்கள் அரண்மனையை விட்டுப்போக அந்தம்மா சம்மதப்பட மாட்டாங்க"

"ஏன், அப்படி நினைக்கிறாய்?"

"நீங்கள்தான் அந்தம்மா உயிரை மூணுதரம் காப்பாத்திவிட்டிங்களாமே!"

"நானா? இல்லை. ஆண்டவர் காப்பாற்றினார்."

"அந்தம்மா மேலே உங்களுக்கு ஆசையில்லியா? சத்தியமா சொல்லுங்கோ."

"ஆ! தகாத வார்த்தை! தகாத வார்த்தை! ஓர் இராஜகுமாரியை நான்......ஹோ? ஓர் ஹிந்து ராஜகுமாரியை ஓர் முஸ்லீம் சிப்பாய்...ஹோ!"

"தகாத வார்த்தை ஒன்றும் நான் சொல்லிவிடவில்லையே."

"வேறு என்ன சொல்லினை?"

"அந்தப் பெண் உங்கள் மேல் சிந்தையை வைத்துவிட்டால்? அந்தப் பெண் உங்களை விரும்பினால்?"

"செல்லம் உன்மனதிற்கு நிச்சயமாய்த் தெரியாத பேச்சைப் பற்றி பேச வேண்டாம்."

"என் மனதிற்கும் என் மனசாக்ஷிக்கும் நிச்சயமாய்த் தெரிந்த விஷயத்தைப் பற்றித்தான் பேசுகிறேன். அதனாலேதான் நான் தைரியமாய்ப் பேசுகிறேன்" என்றாள் செல்லம்.

"செல்லம். நீ ரொம்ப நல்ல பெண். உன்னிடம் மட்டும் என்னுடைய இருதயத்திலுள்ள உண்மையைச் சொல்கிறேன். வெளியில் யாரிடமும் சொல்லாதே!" என்று ஒருவிதமாய் வழிக்கு வந்தான் ஹுசேன்.

"பிரமாணமாய் யாரிடமும் சொல்லமாட்டேன்.'"

"இராஜகுமாரி லக்ஷ்மிபாயின் திரு உருவம் சதா என் இருதயத்தில் இருக்கின்றது. அங்கே அதை நான் வைத்து பூஜைசெய்து வருகிறேன்—அந்தப் பெண்ணரசி மாத்திரம் என்போன்ற ஏழைக் குடும்பத்தில் மட்டும் பிறந்திருந்தால்—நான் உடனே ஹிந்து மதஸ்தனாகி விடுவேன்."

செல்லம் சற்று நகர்ந்து ஹுஸேனுக்குச் சமீபமாய் வந்து உட்கார்ந்தாள்.

"இப்பொழுது முடவன் கொம்புத்தேனுக்கு ஆசைப்படுவதுபோல் படுகிறேன். ஆனால் சாப்பிட்டால் அந்தக் கொம்புத் தேனைத்தான் அருந்துவேனே ஒழிய அது கிடைக்காவிட்டால்—பட்டினி கிடந்து சாவேன்."

"கொம்புத்தேன் தானே வழிந்து முடவன் வாயில் வடிந்தால்?"

"அந்த முடவன் மிக மிக அதிர்ஷ்டசாலி ஆவான்."

"அப்படியானால் நீங்கள் அவனைவிட அதிர்ஷ்டசாலி என்று நான் சொல்வேன்!" என்றாள் செல்லம். ஹுஸேன் அவளை நோக்கினான். ஆனால் செல்லம் தலை குனிந்துகொண்டாள். கடைசியாகப் பேசியது செல்லத்தின் குரல் இல்லை. ஆதலால் ஹுஸேன் செல்லத்தை உற்று நோக்கினான். சேடி செல்லம் உண்மையில் சேடி செல்லம் அல்ல.

"லக்ஷ்மீ! ஆ!" என்ற சொற்கள் அவன் வாயினின்றும் உண்டாயின.

செல்லத்தைப்போல் மாறுவேடமணிந்திருந்த லக்ஷ்மி தனது வேஷத்தைக் கலைத்து சுய உருவத்தில் ஜோதியாய் விளங்கினள்.

"எந்தன் காதல் கற்பகமே!" என்றான் ஹுஸேன்.

காதலனும் காதலியும் இன்புற முத்தமிட்டு ஆலிங்கனம் செய்துகொள்வதை யார்தான் தடுக்க முடியும்?

"நான் ஆரம்பத்திலேயிருந்து இங்கே செல்லத்தைப்போல் வந்து உங்கள் அருகிலேயே காலத்தைக் கழித்து வருகிறேன்."

"ஓ! ஹா! ஹா! நீ என் பக்கத்திலேயே இருந்திருப்பதினாலேதான் என் வியாதிகூட சீக்கிரம் குணமாகிவிட்டது!"

"அன்பரே!"

"பெண்மணியே! எந்தன் பொன் மணியே! நமது காதல் முற்றிக் கனியாகுமா என்ற சந்தேகம் என்னை வதைத்து விடுகிறதே"

"ஏன் அந்த சந்தேகம்?"

"நான் ஏழை சிப்பாய்; நீ அரச குமாரி; நான் முஸ்லீம்; நீ மஹாராஷ்டிர ஹிந்து."

"சத்! சிவாஜி பிறக்கும்போது அரசனாகவா பிறந்தார்?"

"ஓ ஹோ!"

"உங்களது சுத்த வீரத்தனம் ஒன்றே எனது உள்ளத்தைக் கொள்ளை கொண்டு விட்டது. மன்னர் முடியும் மாக்ஷிமை ஆக்ஷியும் இனி என் உள்ளத்தை மாற்ற முடியாது, முடியாது; இது சத்தியம்" என்று பேசினள் லக்ஷ்மி பாய்.

"ஆனால், ஆனல், நான் முஸ்லீம் ஆயிற்றே. மஹாராஷ்டிரக் குடும்பத்தாரும் டில்லி முஸ்லிம் குடும்பத்தாரும் தலைமுறை தலைமுறையாகப் பகைமையாயிற்றே!" என்று அவன் சொல்லிக்கொண்டிருக்கும்போது அங்கு யாரோ வரும் அரவம் கேட்டு லக்ஷ்மிபாய் தனது வேஷத்தைச் சரிப்படுத்திக்கொண்டு சேடி செல்லத்தைப்போல் போய்விட்டனள்.

# இதுவும் ஒரு கலை.



ரசிக உணர்ச்சி உள்ளவர்களுக்கு ஓர் அழகிய படத்தைப் பார்த்ததும் எவ்வளவு சந்தோஷம் உண்டாகிறது! அவர்களது உள்ளத்திலிருந்து என்ன என்ன உணர்ச்சிகளெல்லாம் தோன்றி எழுகின்றன! சித்திரம்-சங்கீதம்-கவிதை இவையாவும் ஒரு பரவசத்தை அளிக்கின்றன. ஆனால் இக்கலைகளின் இன்பத்தை உலகிற்களிக்கும் திறமை சிலருக்குத்தான் உண்டு. இது போகட்டும், சாமானியமாகக் காணப்படும் சில காரியங்களைக்கூட வெகு ரஸமாகவும், இன்பமாகவும் செய்ய முடியும் என்பதை நீங்கள் அறிவீர்களோ! இப்படி இன்பம் பயக்கச் செய்வதில் 'டீ' தயாரிப்பதும் ஒன்று. இதுவும் ஒரு கலை. இந்தியத் தேயிலையைப் போட்டு தயாரித்த சுகமான ஒரு கப் 'டீ' அதை அருந்துவோருக்கெல்லாம் சந்தோஷத்தையும் சுகத்தையும் அளிக்கின்றது!

டீ செய்யும் முறை. நல்ல இந்தியத் தேயிலையை உபயோகியுங்கள். புதிய ஜலத்தைப் பொங்கவிட்டுச் சுத்தமாய் உலர்ந்த மண் பாண்டத்தை வெந்நீரால் அலம்பி, ஒருவருக்கு ஒரு டீ ஸ்பூன் வீதம் அதில் தேயிலையைப்போட்டு, பொங்குகிற ஜலத்தை விடுங்கள். ஐந்து நிமிஷம் கழித்து ருசிக்காக பாலையும் சர்க்கரையும் சேர்த்து அருந்தவேண்டும்.



**இதுவே குடும்பத்திற்கு ஈடற்ற பானம்-இந்தியத் தேத்தண்ணீர்.**

IK. 34

# " ஆனந்தபோதினி " பஞ்சாங்கம்.

யுவஞு பங்குனிமீ—கலியுகாதி 5037, சாலிவாகனம் 1858,
பசலி 1345, கொல்லமாண்டு 1111, ஹிஜரி 1354-55,
இங்கிலீஷ் 1936ஞு மார்ச்சுமீ—ஏப்ரல்மீ

| பங்குனிமீ | மார்ச்சுமீ | வாரம். | திதி. | நக்ஷத்திரம் | யோகம். | விசேஷங்கள். |
|---|---|---|---|---|---|---|
| 1 | 13 | வெள் | பஞ்40-38 | விசா56-30 | சித்60 | |
| 2 | 14 | சனி | சஷ்45-13 | அனு60 | சித்60 | |
| 3 | 15 | ஞா | சப்48-18 | அனு2-5 | மா60 | |
| 4 | 16 | திங் | அஷ்49-43 | கேட்-10 | சித்60 | |
| 5 | 17 | செவ் | நவ49-5 | மூல8-33 | அ8-33 சித் | |
| 6 | 18 | புதன் | தச46-23 | பூரா8-53 | அமி60 | |
| 7 | 19 | வியா | ஏகா41-43 | உத்7-13 | சித்60 | |
| 8 | 20 | வெள் | து35-13 | திரு3-40<br>அவி58-23 | மா3-40சி | |
| 9 | 21 | சனி | திர27-20 | சத51-45 | அ51-45ம | |
| 10 | 22 | ஞா | ச ● 18-15 | பூர44-15 | சி44-15அ | சர்வத்திர அமாவாசை |
| 11 | 23 | திங் | அமா8-43<br>பிர58-50 | உத்36-30 | சித்60 | அவமாகம், கோடியுடுக்க,<br>ஆபரணம் பூண |
| 12 | 24 | செவ் | துதி 49-28 | ரே28-55 | சித்60 | யுகாதி பண்டிகை |
| 13 | 25 | புத | திரி40-58 | அஸ்21-58 | மா21-58சி | ஆண்டோளன் திரிதிகை |
| 14 | 26 | வியா | சது33-40 | ப✻16-3 | சித்16-3ம | கிருத்திகை, மாச சதுர்த்தி |
| 15 | 27 | வெள் | பஞ்28-0 | கிரு11-38 | சி11-38ம | கரிநாள் [விரதம் |
| 16 | 28 | சனி | சஷ்24-0 | ரோ8-58 | அ8-58சித் | சஷ்டி, கங்கோற்பத்தி |
| 17 | 29 | ஞா | சப்22-8 | மிரு8-18 | சித்60 | 8-க்குள் மழை [குளிக்க |
| 18 | 30 | திங் | அஷ்22-13 | திரு9-33 | சி9-33அ | அசோகாஷ்டமி வியாதியர் |
| 19 | 31 | செவ் | நவ24-5 | புன12-38 | சித்60 | ஸ்ரீராமநவமி, ஸ்ரீராமஜயந் |
| | 1936ஞு ஏப்ரல்மீ | | | | | |
| 20 | 1 | புதன் | தச27-30 | பூச17-10 | சித்60 | தர்மராஜா தசமி, சர்வமுகூ |
| 21 | 2 | வியா | ஏகா32-0 | ஆயி23-3 | சி23-3 அமி | சர்வ, மத்வ ஏகாதசி [ர்த்தம் |
| 22 | 3 | வெள் | த37-18 | மக29-35 | ம29-35சி | வாமன, தமனத் துவாதசி |
| 23 | 4 | சனி | திர43-15 | பூர36-43 | சி36-43ம | சனிப் பிரதோஷம் |
| 24 | 5 | ஞா | சது49-20 | உத்44-3 | அமி60 | பங்குனி உத்திரம், சுப முகூ |
| 25 | 6 | திங் | ○55-25 | அஸ்51-20 | சி51-20பி | பௌர்ணமி [ர்த்தம் |
| 26 | 7 | செவ் | பிர60 | சித்58-38 | சித்60 | கிருதின ஸ்பிருக் |
| 27 | 8 | புதன் | பிர1-25 | சுவா60 | சித்60 | சைத்ர பகுளம் |
| 28 | 9 | வியா | துதி7-0 | சுவா5-40 | அ5-40சி | கோடியுடுக்க |
| 29 | 10 | வெள் | திரி12-10 | விசா12-5 | சித்60 | சங்கடஹர சதுர்த்தி |
| 30 | 11 | சனி | சது16-33 | அனு17-53 | சித்60 | யாத்திரை செய்ய |
| 31 | 12 | ஞா | பஞ்19-50 | கே22-38 | ம22-38அ | மேஷரவி கா. 54-48 |
| 1 | 13 | திங் | சஷ்21-58 | மூல26-3 | சி26-3 அமி | வருஷப் பிறப்பு |

| | | | |
|---|---|---|---|
| சூரி செவ் | | | கே |
| சனி சுக் புத | 10-மே-செவ்<br>15-மீன-புத<br>24-மீன-சுக்<br>30-மே-புதன் | | — |
| குரு ராகு | | | |

PRINTED & PUBLISHED BY N. MUNISAWMI MUDALIAR,
AT THE " ANANDA BODHINI " PRESS,
NO. 6, LAWYER CHINNATHAMBI MUDALI STREET, MADRAS

உ
ஓம்
பரப்பிரஹ்மணே நம:
ஸ்ரீ
# ஆனந்தபோதினி.

"எப்பொரு ளெத்தன்மைத் தாயினு மப்பொருண்
மெய்ப்பொருள் காண்ப தறிவு"—திருவள்ளுவர்.


| தொகுதி | தாதுஸூ சித்திரைமீ கஉ | பகுதி |
| --- | --- | --- |
| 21 | 1936ஸூ ஏப்ரல்மீ 13உ | 10 |

## கடவுள் வணக்கம்.

சிந்தைத் துயரென் றொருபாவி
சினந்து சினந்து போர்முயங்க
நிந்தைக் கிடமாய்ச் சகவாழ்வை
நிலையென் றுணர்ந்தே நிற்கின்றேன்
எந்தப் படியுன் னருள்வாய்க்கும்
எனக்கெப் படிநீ அருள் செய்வாய்
பந்தத் துயரற் றவர்க்கெளிய
பரமா னந்தப் பழம்பொருளே. (1)

பொருளைப் பூவைப் பூவையரைப்
பொருளென் றெண்ணும் ஒருபாவி
இருளைத் துரந்திட் டொளிநெறியை
என்னுட் பதிப்ப தென்றுகொலோ
தெருளத் தெருள வன்பர் நெஞ்சம்
தித்தித் திருக்கத் தெவிட்டாத
அருளைப் பொழியும் குணமுகிலே
அறிவா னந்தத் தாரமுதே. (2)

எல்லாமே மோனநிறை வெய்துதலா லெவ்விடத்து
நல்லார்கள் மோனநிலை நாடினார்—பொல்லாத
நானெனவிங் கொன்றை நடுவே முளைக்கவிட்டிங்
கேனலைந்தேன் மோன குருவே. (3)

எவ்வுயிருந் தன்னுயிர்போல் எண்ணுந் தபோதனர்கள்
செவ்வறிவை நாடிமிகச் சிந்தைவைப்ப தெந்நாளோ. (4)

# அரும்பொருள் விளக்கம்

1. இதனால் எந்தப்படி இறைவனருள் வாய்க்குமோ என்று ஏங்குகின்றார்.

(இ-ள்.) பிறவியால் வந்த துன்பத்தினின்றும் நீங்கினவர்க்கு எளியனும், மேலான இன்பத்தைத் தருகின்றவனுமான பழையபொருளே! மனத்துன்பம் என்கிற ஒரு பாவி கோபித்துக் கோபித்துப் போரினைச் செய்ய சிந்தனைக்கு இடம் ஆகி, உலக வாழ்க்கையை நிலையானதென்று அறிந்தே பற்றுள்ளவனாய் நிற்கின்றேன். தேவரீரது திருவருள் எப்படிக் கிடைக்கும்? அடியேனுக்கு நீ எவ்வாறு கிருபை செய்வாய்? என்க.

அகப்பற்றுப் புறப்பற்றுக்களுக்குக் காரணமான உலக வாழ்வனைத்தும் அநித்தியம்; அதை நித்தியமாக உணர்ந்தேன் என்பார் "சிந்தைக் கிடமாய் ............நிற்கின்றேன்" என்றார். இங்ஙனம் நின்றார்க்கு முதல்வன் திருவருள் உண்டாவது அருமை என்பார் "எந்தப்படி யுன்னருள் வாய்க்கும்" என்றார். எல்லாப்பற்றும் அற்றவர்க்கே இறைவன் திருவருள் எளிதில் கிடைக்குமாதலின் "பந்தத் துயரற்றவர்க் கெளியபரமானந்தப் பழம்பொருள்" என்றனர்.

2. இதனால் அறியாமை இருளை ஓட்டும் சன்மார்க்க ஒளியைத் தரும் நாள் எது என்று வினவுகின்றார்.

(இ-ள்.) (மனம்) தெளியத் தெளிய அடியார்களின் மனத்தின்கண் இனித்து உருகும்படி தெவிட்டாத கிருபை மழையைச் சொரிகின்ற குண மேகமே! ஞானனந்தமாகிய ஆமிர்தே! திரவியத்தினையும், பூமியையும், மாதரையும் உண்மை என்று எண்ணும் ஒரு பாவி அஞ்ஞான இருட்டினை நீக்கிவிட்டு ஒளியையுடைய சன்மார்க்கத்தினை அடியேன் மனத்தின்கண்ணே பதியச் செய்வது எந்நாளோ அறியேன் என்க.

நிலைபெறாதனவும், துன்பத்தை விளைவிப்பனவுமாகிய பொருள்கள் மண்-பெண்-பொன் என்பனவாம். இவற்றின்பால் பற்றுள்ளவும் அஞ்ஞானம் நீங்காதாகலின் "பொருளை......என்று கொலே" என்றனர். விஷய பேதத்தால் மன நாட்டம் பலவாக இருக்கவும் இம் மூன்றினை மட்டும் தொகுத்துக் கூறியது மனோரதம் யாவும் இம்மூவேடணையில் அடங்குவதால் என்க.

3. இதனால் அகங்கரித்தல் பயனில்லை என்று கூறுகின்றார்.

(இ-ள்.) மௌன குருவே! சகலமும் மௌனப் பூர்த்தியினை அடைதலினால் அறிஞர்கள் எவ்விடத்தினும் மௌன நிலையினையே விரும்பினார்கள். நான் என்ன செய்தேன்? அகங்கரித்து நான் எனும் பொல்லாத ஒன்றினை இடையிலே உண்டாக்கிக்கொண்டு இவ்வுலகில் எதன் பொருட்டுத் திரிந்தேன்? என்க.

4. எத்தகைய உயிரினையும் தனது உயிரினைப்போலவே நினைக்கின்ற தவத்தினர்கள் நல்ல அறிவினை விரும்பி அதன் பொருட்டுச் சிந்தை வைப்பது எந்நாளோ என்க.




# உயிர் போகும்வரை உண்ணாவிரதம்.





அன்பையும் அருளையும் அடிப்படையாகக்கொண்ட அறங்களும், தத்துவங்களும் செறிந்து விளங்குவதாக வருணிக்கப்படும் நமது நாட்டில், சாஸ்திரங்களின் பெயராலும், தெய்வங்களின் பெயராலும், சமயங்களின் பெயராலும் கொலைகளும் கொடுமைகளும் நடைபெற்றுக் கொண்டிருப்பதை நாம் கண்கூடாகக் கண்டு வருகின்றோம். நமது நாட்டின் இழிநிலைமைக்கு மூலகாரணங்களான மூட நம்பிக்கைகள், பழக்க வழக்கங்கள் எல்லாம் சமய—சாஸ்திர—தெய்வ ஆதாரங்களோடு ஆணிவேர்—சல்லிவேர்களுடன் ஊன்றிக் கிடக்கின்றன. இதனால் புதிய மாறுதல்கள்—சீர்திருத்தங்கள் இந்நாட்டில் மேலோங்காமல் கருகிக்கொண்டே வருகின்றன. நாட்டில் அறியாமையும், பிணிகளும், வறுமையும் தீவிரமாய் வளர்ந்து கொண்டு வருவதற்கு நமது சமூகத்தைப் பிணித்து நிற்கும் பொருளற்ற மூடப் பழக்க வழக்கக் கட்டுகளே முக்கிய காரணங்கள் என்பதை யாரும் எளிதில் மறுக்கத் துணியார்.

“சிறுதேவதைகட்கு உயிர்ப்பலியிடுதல் கூடாது; நேர்ச்சிக்கடனின் பெயரால் உடம்புகளை உயிருடன் சித்திரவதைக் கொடுமைகட்கு உட்படுத்தும் அலகு—செடில் குத்தல், முதுகுகளில் பெரிய பெரிய இரும்புக் கொக்கிகளைக் குத்தி அவற்றில் சிறுதேர்களையும் மோட்டார்களையும் கட்டி இழுத்தல், நெருப்புச் சட்டிகளை எடுத்து விளையாடல், நெருப்புக்குழிகளில் இறங்கல், வேப்பம் தழைகளைச் சுற்றி நிர்வாணமாய்க் கோயில் வலம் செய்தல் முதலிய கோரச் செயல்களை மேற்கொள்ளக்கூடாது” என்று நாம் அடிக்கடி எழுதி வருவதை

யேர்கள் மறந்திருக்க மாட்டார்கள். இந்த வழக்கங்களை ஒழிக்கக் கடமைப்பட்டவர்கள் சமயத் தலைவர்களான மடாதிபதிகள்.

மக்களின் இம்மை மறுமை வாழ்வைச் செழுமை செய்யவே மடங்கள் தோன்றின. மக்கட் சமூகத்தில் சமய அறிவையும், கல்வி அறிவையும், ஒழுக்க அறிவையும் பரப்ப மடங்கட்கு ஏராளமான மானியங்களும் விடப்பட்டிருக்கின்றன. இந்த மடங்களைச் சரியானபடி நிர்வகிக்கவே நமது முன்னோர் பற்றற்ற துறவிகளை மடாதிபதிகளாக நியமித்தனர். தென்னாட்டில் சைவ, வைணவ, அத்துவைத மடங்கள் பல இருக்கின்றன. இவற்றிற்கு வருமானம் மிகுதியும் உண்டு. சில மடங்கட்கு லக்ஷக்கணக்கான ரூபாய் வருமானங்களும் உண்டு. இப்படியே பல தேவாலயங்களும் மிகுந்த வருமானம் படைத்தவைகளாய் விளங்கி வருகின்றன. இக்கால மடாதிபதிகளும், கோவில் தருமக்கருத்தர்களும் மக்களின் சமய அறிவு—கல்வி யறிவு வளர்ச்சிகளில் கருத்தைச் செலுத்துகின்றனரா? இல்லை! இல்லை!! இவர்கள் உண்மையில் தங்கள் கடமைகளை நிறைவேற்றத் துணிந்தால் மக்களிடையே செறிந்துள்ள மூட இருளையும் போலி நம்பிக்கைகளையும் வெகு விரையில் நீக்கிவிடலாம் என்பது எமது உறுதியான நினைவு.

சிறுதேவதைகட்கு உயிர்ப்பலி கொடுத்தல், நேர்ச்சிக்கடன் நிறைவேற்றுவதல் முதலிய காரியங்களை மடாதிபதிகளும் கோவில் தருமக் கருத்தர்களும் ஏன் தடுக்கவேண்டும்? அவைகட்கும் மடாதிபதிகட்கும் என்ன சம்பந்தம் என்ற கேள்வி சாதாரணமாய் எழலாம். சிறுதேவதைகளின் பெயரால் அறிவற்ற ஆர்ப்பாட்டங்களையும் கொடுமைகளையும் செய்யும் மக்கள் யார் என்பதை ஒரு சிறிது ஊன்றிக் கவனித்தால் உண்மை வெட்ட வெளிச்சமாகிவிடும். மாரியம்மன், காளியம்மன், மாகாளியம்மன், வீரன், முனியன், இருளன், கருப்பன் முதலிய சிறு தெய்வங்களை வழிபடும் மக்கள் எந்தச் சமயத்தைச் சார்ந்தவர்கள்? தங்களைச் சைவர்கள், வைஷ்ணவர்கள், அத்துவைதிகள் என்று பெருமையாகச் சொல்லிக்கொண்டு அவ்வச் சமய சின்னங்களைப் பயபக்தியுடன் அணியும் மக்களே மேற்படி சிறுதேவதைகட்கு நேர்ச்சிக் கடனின் பெயரால் உயிர்ப்பலிகளையும், கோர விகாரங்களையும் செய்து வருகிறார்கள். சிறுதேவதைகளை வழிபடுவோரைச் சைவரல்லர் — வைஷ்ணவரல்லர் — அத்துவைதிகளல்லர் என்று யாரே கூறத் துணிவார்? சைவம் அன்பையும் அருளையும் அடிப்படையாகக் கொண்ட சமயம். வைஷ்ணவமும் அத்துவைதமும் அப்படியே அன்பையும் அருளையும் அடிப்படையாகக் கொண்டிருக்கின்றன. இச்சமயங்களுக்குக் கொல்லாமையாகிய அருளறமே ஆணிவேர். எனவே இந்தச் சமயங்களைச் சார்ந்த மக்கள் அறியாமை காரணமாய் அல்வழியில் சென்றால் அவர்களைத் திருத்தவேண்டிய பொறுப்பு யாரைச் சேர்ந்தது என்று கேட்கின்றோம். சைவர்களைத் திருத்துவது சைவ

மடாதிபதிகளின் பொறுப்பு அல்லவா? அப்படியே வைஷ்ணவர்களைத் திருத்துவது வைஷ்ணவ மடாதிபதிகளின் கடமை. அத்துவைத சமயிகளைத் திருத்துவது அத்துவைத மடாதிபதிகளின் உரிமை. இக்காலத்தில் இந்த மடாதிபதிகள் எல்லோரும் தங்கள் சிஷ்ய கோடிகளைச் சீர் திருத்த முன் வருகிறார்களா என்று வினவுகின்றோம்.

எங்கேயோ ஒரு சில அறிஞர் மட்டும் "சிறு தேவதைகட்குப் பலியிடக்கூடாது. அப்படிச் செய்வது பாவம்" என்று பேசியும் எழுதியும் வருகின்றனர். இவர்களுடைய பேச்சும் எழுத்தும் கடலிற் பெருங்காயம் கரைத்ததற்கு ஒப்பாகவே இருந்து வருகின்றன. மடாதிபதிகள் தங்கள் உண்மைக் கடமைகளை மறந்து இந்திரபோகம்—ராஜபோகங்களில் மூழ்கிக் காலங்கழித்து வருகின்றனர். கோயில் தருமக்கருத்தர்களின் நிலைமையும் படுமோசமே. கோயில்களுக்கு மானியங்களின் மூலமும், பக்த கோடிகள் செலுத்தும் காணிக்கைகள் மூலமும் ஆண்டுதோறும் கிடைத்துவரும் வருமானங்களையெல்லாம் விழலுக்கிறைத்த நீராக்கி வருகின்றனர். திருவிழாக் காலங்களில் தாசியாட்டம், வாண வேடிக்கை, சோம்பேறிச் சாப்பாடு போன்ற காரியங்களில் ஏராளமாகச் செலவு செய்து வருகின்றனர். சிறுதேவதைகட்கு அர்த்தமற்ற நேர்ச்சிகள் செய்துகொள்ளக் கூடாது என்று மடாதிபதிகளும் கோயில் தருமக்கருத்தர்களும் ஏன் தீவிரமான பிரசாரத்தை மேற்கொள்ளக் கூடாது? மக்கள் சிறுதேவதைகளை அர்த்தமற்ற முறையில்—காட்டுமிராண்டித்தனமான முறையில் வழிபட இடங்கொடுப்பது மடாதிபதிகட்கும், கோயில் தருமக்கருத்தர்கட்கும் மிகுந்த மானக்கேடாகும் என்றே கூறத்துணிவோம். ஏன்? மக்கள் சிறு தேவதைகளை வழிபடுவதால் அன்பு—அருள் நிறைந்த சமயங்களாகிய சைவ, வைஷ்ணவ, அத்துவைத மதங்களை அலக்ஷியம் செய்தவர்களாகிறார்கள். அச் சமயங்களால் பயனில்லை—சிவன் விஷ்ணுபோன்ற கடவுளர்கள் மக்கள் கோரிக்கைகளை நிறைவேற்றி வைக்கக்கூடிய சக்தி வாய்ந்தவர்கள் அல்லர் என்ற ஒரு விபரீதக் கருத்துப் பரவ இடங் கொடுத்தவர்களாகிறார்கள். எனவே நம்முடைய உண்மைச் சமயத் தத்துவங்களும் தெய்வங்களும் அலக்ஷியப்படுத்தப்படுவதை மடாதிபதிகளும் கோயில் தருமக்கருத்தர்களும் பார்த்துக் கொண்டிருப்பது தருமமா? நியாயமா? நீதியா? என்று கேட்கின்றோம். உண்மைச் சமய அறிவும் கடவுளுணர்வும் மக்கட்கு இருந்தால் காட்டுமிராண்டித்தனமான சிறுதேவதை வழிபாடுகள் நிகழ ஒரு சிறிதும் இடமில்லை என்றே உறுதியாக நம்புகின்றோம்.

தமிழ்நாட்டிலும் ஆந்திரநாட்டிலும் ஆண்டுதோறும் நடைபெறும் சிறுதேவதை—கிராமதேவதைகளின் திருவிழாக்களின் ஆர்ப்பாட்டங்கள் மேன்மேலும் பெருகிக்கொண்டே இருக்கின்றன.

கொஞ்சமேனும் குறைந்த பாடில்லை. சென்ற இரண்டு மூன்று ஆண்டுகளாகச் சில இடங்களில் அரசாங்கத்தார் 144-வது பிரிவுப்படி தடை யுத்தரவுகள் பிறப்பித்துச் சிறுதேவதைகளின் பெயரால் நடைபெறும் சித்திரவதைக் கொடுமைகளை அடக்க முற்பட்டமை கண்டு நாம் மகிழ்ச்சிப்பெருக்கு அடைகின்றோம். இரண்டாண்டுகட்கு முன் தஞ்சை ஜில்லா வீரசிங்கம்பேட்டையில் 144-வது பிரிவை அமலுக்குக் கொண்டுவர முயன்றதன் பயனாக ஏற்பட்ட கலகத்தைத் தவிர வேறு எங்கும் எத்தகைய அசம்பாவிதங்களும் நிகழவில்லை என்பது குறிப்பிடத்தக்கதாகும். சென்ற ஆண்டிலும் இவ்வாண்டிலும் அங்கே 144-வது தடை யுத்தரவு பிறப்பிக்கப்பட்டது. இதன் பயனாய் அலகு—செடில் குத்தல் போன்ற அநாகரிக கோரக்கொடுமைகள் தடை செய்யப்பட்டன. ஒரு சிலர் இத்தகைய "தெய்வ" சம்பந்தமான—"சமய" சம்பந்தமான விஷயங்களில் அரசாங்கத்தார் தலையிடக்கூடாது என்று வாதிக்கத் துணிகின்றனர். இவர்களுடைய அறிவைக்கண்டு இரங்குவதைத் தவிர வேறு என்ன செய்வது?

தென்னிந்தியாவைப் போலவே வடஇந்தியாவிலும் சிறுதேவதை வழிபாட்டுக் கொடுமைகள் மிகுந்திருப்பதாகத் தெரிகின்றது. கல்கத்தா காளிகோவிலில் உயிர்ப்பலிக் கொடுமைகள் அதிகம் என்று கேள்விப்படுகின்றோம். நவராத்திரித் திருவிழாக் காலங்களில் ஏராளமான உயிர்கள் வதைக்கப்படுகின்றனவாம். இதை அறிந்த பண்டித ராமசந்திர சர்மா என்ற உண்மை அந்தணர் மனம் புழுங்கினார். சென்ற நவராத்திரியின்போது கல்கத்தாவுக்குச் சென்றார்; "காளி கோவிலில் உயிர்ப்பலியை நிறுத்தினாலொழிய நான் உணவு கொள்ளப் போவதில்லை. பலி நிறுத்தப்படவேண்டும். இன்றேல் எனது உயிர் போகவேண்டும்" என்று உயிர்த்தியாகம் செய்யத் துணிந்தார். நாடெங்கும் ஒரு விதமான பரபரப்பும் கிளர்ச்சியும் ஏற்பட்டன. பலர் கூட்டங்கள் கூட்டி "உயிர்த்தியாகம் செய்யத் துணியக்கூடாது" என்ற வேண்டுகோள் தீர்மானங்களை நிறைவேற்றி அவருக்குச் சமர்ப்பணம் செய்தனர். இறுதியில் பண்டித மாளவியாஜியின் தலையீட்டால் அவர் உண்ணாவிரதத்தை நிறுத்தினார். பண்டித சர்மாவின் உண்ணாவிரதத்தைக் காளிகோவில் அர்ச்சகர் லக்ஷியம் செய்யவே இல்லை. அவர்கள் "உயிர்ப்பலி செய்து தீரவேண்டும்" என்று தீவிரமான எதிர்ப்பிரசாரமும் செய்யத் தொடங்கி விட்டனர். தென்னாட்டுப் பூசாரிகளின் மனப்பான்மையும் அதே விதமாகத்தான் இருந்து வருகிறது. தென்னிந்திய ஜீவரக்ஷா பிரசாரக சபையார் உயிர்ப்பலிக் கொடுமைகளை ஒழிக்கும் திறத்தில் குறிப்பிடத்தக்க அற்புதத் தொண்டாற்றி வரும் செய்தியை நம்மிற் பலர் அறிவோம். அவர்கள் செல்லு மிடங்கள்தோறும் கோயில் தருமகருத்தர்களும் பூசாரிகளும் தங்களால் எவ்வளவு இடையூறுகளை உண்டாக்க முடியுமோ

அவ்வளவையும் உண்டாக்கி வருகிறார்கள். இதைக் கலிகாலக் கொடுமை என்பதைத் தவிர வேறு என்னென்பது?

பண்டித ராமச்சந்திர சர்மா இப்பொழுது மீண்டும் உயிர் போகும் வரை உண்ணாவிரதம் இருக்கத் துணிந்துவிட்டார் என்று அறிந்து வருந்துகின்றோம். இந்தத் தடவை சாங்கிலி என்னும் இடத்தில் விரதம் இருக்கிறார். அவ் விடத்தில் உள்ள கோயிலில் உயிர்ப் பலியிடுவதை நிறுத்த வேண்டும் என்ற நோக்கத்துடனேயே அவர் விரதம் ஆரம்பித்திருக்கிறார். சாங்கிலி மக்கள் என்ன செய்யப் போகின்றனர் என்று இப்பொழுது விளங்கவில்லை. உண்மை அந்தண வீரான பண்டித ராமச்சந்திர சர்மாவின் ஆருயிரைக் கொள்ளை கொள்ளப் போகின்றனரா? அல்லது உயிர்ப்பலியை நிறுத்தப் போகின்றனரா? என்பது இனிமேல்தான் தெரிய வேண்டும்.

சமீபத்தில் சாங்கிலியில் வாலிபர் காட்டிய வீர உணர்ச்சியை இச் சமயத்தில் நினைவூட்ட விரும்புகின்றோம். அதாவது ஒரு சில பழைமை விரும்பிகள் சாங்கிலியில் "ஆட்தர் யாகம்" என்ற பெயரால் ஒரு உயிர்க் கொலை வேள்வியை நடத்தத் துணிந்தனர். இதையுணர்ந்த வாலிபர்கள் அத்தகைய வேள்வி நடைபெறக் கூடாது என்று பலமாகக் கிளர்ச்சி செய்தனர். இறுதியில் வெற்றி பெற்றனர். பிறகு "ஆப்தர் யாகம்" நடை பெறவில்லை என்று தெரிகிறது. வேதோக்தமானது என்று வருணிக்கப்படும் ஷ வேள்வியைக் தடை செய்த சாங்கிலி வாலிபர்கள் அநாகரிக வழக்கமாகிய உயிர்ப் பலிக் கொடுமையை ஒழித்துப் பண்டித ராமச்சந்திர சர்மாவின் ஆருயிரைக் காப்பாற்ற வேண்டும் என்று விரும்புகின்றோம். வாலிபர்கள் நேர்மை கடைப்பிடித்து முயன்றால் ஆகாத காரியம் ஒன்றில்லை. உயிர்ப் பலியிடுதல், செடில் குத்தல், முக்கால் நிர்வாணமாய்க் கோவில் வலம் செய்தல் போன்ற கோரக் கொடுமைகளை ஒழிக்கச் சட்டம் செய்ய வேண்டும் என்று நாம் அடிக்கடி வற்புறுத்தி வருகின்றோம். இதற்கு இன்னும் எத்தகைய விமோசனமும் ஏற்படவில்லை. பொது நலத் தலைவர்களும், சட்டசபை அங்கத்தினர்களும் இத்தகைய சமூகக் கொடுமைகளை ஒழிக்க முன் வரவேண்டும் என்று மீண்டும் நினைவூட்ட விரும்புகின்றோம். சட்டம் இயற்றத் தொடங்கினால் ஏதேனும் விபரீதங்கள் நேர்ந்து விடுமோ என்று அஞ்ச வேண்டியதே இல்லை என்பது நமது அபிப்பிராயம். சென்ற சில ஆண்டுகளாகச் சிறு தேவதைகளின் திருவிழாக்களில் கோரச் செயல்களைச் செய்யக் கூடாது என்று போடப்பட்ட தடை யுத்தரவுகள் தக்க பலன் அளித்து வருவதொன்றே நமக்குத் தைரியம் தந்து நிற்கிறது. எனவே சட்டம் செய்யத் தலைவர்கள் முன் வர வேண்டும் என்று விரும்புகின்றோம்.

ஓம் தத் ஸத்.




# பிரம சூத்திரம்

(சித்தூர் பண்டித-பூ. ஸ்ரீநிவாசன்)

(574-ம் பக்கத் தொடர்ச்சி.)

## ஜகத்வாசித்வாதி கரணம்

16-வது சூத்திரம் அவதாரிகை:— "ப்ரஹ்மதே ப்ரவாணி" × × "யோவை பாலாக ஏதேஷாம் புருஷாணாம் கர்த்தா—யஸ்யசைதத் கர்ம—ஸவை வேதிதவ்ய:" என்பது கௌஷீதகி ப்ராஹ்மணத்திலுள்ள ஒரு வாக்கியம். "உனக்குப் பிரம்மோபதேசத்தைச் செய்கிறேன். × × ஓ பாலாகி! எவன் புருஷர்களுக்குக் கர்த்தாவோ, இது (பிரபஞ்சம்) எவனுடைய கிருத்தியமோ (காரியமோ), அவன் தெரிந்து கொள்ளத் தக்கவன்" என்பது இந்த வாக்கியத்தின் பொருள். இந்த வாக்கியத்தில் காணப்படும் 'புருஷன் என்னும் பதம் சூரியன், சந்திரன், மின்னல், மேகம், ஆகாசம் முதலியவற்றிலுள்ள புருஷர்களைக் குறிப்பதாகும்.

இந்த வாக்கியத்திற்குச் சூத்திராத்ம பரமாகவும், ஜீவபரமாகவும் பூர்வ பக்ஷிகள் பொருள் கூறுகின்றனர். அவர்கள் கூறும் பொருள்:—சூரிய சந்திராதிகள் எவனுடைய விகாரமோ, சலனத் தன்மையுடைய எல்லாக் கர்மமும் எவனுடையதோ அத்தகைய முக்கிய பிராணன் வேதிதவ்யன் (வேதத்தில் கூறப்படுபவன்) சலனத் தன்மையுடைய கர்மம் பிராணனை ஆசிரயித் திருத்தலாலும், பிராண சப்தம் முக்கிய பிராணனிடத்தே பிரசித்தியாயிருத்தலாலும், புருஷர்களுக்கு முக்கிய பிராணனே கர்த்தாவாகத் தக்கவனாயிருத்தலாலும், ஆதித்தியாதி தேவதைகளில் பிராணனே முக்கியனென்று சுருதி வாக்கியமிருத்தலாலும் இந்த வாக்கியத்தில் கூறப்படுபவன் சூத்திராத்மாவே என்பது பூர்வ பக்ஷிகளின் வாதமாகும்.

மேலும் ஜீவபரமாகக் கூறப்படும் பொருள் பின் வருமாறு:— சூரியன் முதலானவர்களுக்கு போக்திருத் தன்மையால் எவன் கர்த்தாவோ, தர்மாதர்ம லக்ஷணமுடைய கர்மம் எவனுடையதோ, அத்தகைய ஜீவன் வேதிதவ்யன். ஜீவன் யோகியாகவும் சூரியன் முதலியோர் அவனுக்கு போக உபகரணங்களாகவும் இருத்தலால் அவன் (ஜீவன்) போக்திருத் தன்மையால் கர்த்தாவாயிருக்கிறான். தர்மாதர்ம லக்ஷணமுள்ள கர்மம் அவனையே ஆசிரயித் திருக்கின்றது. அன்றியும் வாக்கியத்தின் மற்றோர் பகுதியில் ஜீவ லக்ஷணம் சொல்லப்பட்டிருக்கின்றது. ஆகையால் பிரகரணப் பிரதிபாத்தியன் ஜீவனே என்பது மற்றொரு வாதம்.

இங்குக் குறிக்கப்பட்ட ஜீவலக்ஷணம் எது வென்றால்:—

"அஜாதசத்ரு கையில் பிரம்பொன்றைப் பிடித்த வண்ணம் பாலாகியை யழைத்துக்கொண்டு தூங்கிக்கொண்டிருக்கும் ஒருவனுக்கு அருகில் சென்று, அவனுடைய சுவாசத்தி னிடத்தில் சம்பாஷிக்கத் தொடங்கினான். அது பிரதி யுத்தரம் சொல்லாமையால் அது (பிராணன்) சேதனமல்ல (அறிவுள்ள பொருளல்ல என்பதைப் பாலாகிக்கு காட்டி, தூங்கிக் கொண்டிருந்த புருஷனைப் பிரம்பால் தட்டி யெழுப்பிச் சம்பாஷித்தான். அதனால் சைதன்ய வியாபாரத்தைக் காட்டி, அந்த சம்பாஷணை செய்தலாகிய சைதன்ய வியாபார கர்த்தாவாகிய ஜீவனைப் போக்தாவாக உபதேசித்தான்." இது, பாலாகி அஜாத சத்ருக்களின் சம்பாஷணை வாயிலாக பிராணங்களினிடத்து அனாத்மத் தன்மையைக் காட்டவந்த சுருதி வாக்கியம்.

இப்படி மேற்படி வாக்கியத்தைக் குறித்து அபிப்பிராய பேதம் இருக்கின்றது. ஆகவின் இந்த வாக்கியத்தில் வேதிதவ்யனாகக் கூறப்பட்டவன் ஜீவனா? முக்கிய பிராணனா? (சூத்திராத்ம வடிவ இரணிய கர்ப்பனா)? அல்லது பரமேசுவரனா? என்பது வாதம். இந்த வாதத்தில் முன்னிரண்டு அபிப்பிராயங்கள் சரியல்ல என்று கண்டிக்கப்படுகின்றது.

சூ. 16. "ஜகத்வாசித்வாத்."

பதவுரை:—ஜகத்வாசித்வாத்=கர்மம் என்னும் பதம் இங்கு ஜகத்தைக் குறிப்பதாக விருத்தலால் (வேதிதவ்யன் பரமேசுவரனே).

கருத்து:—மேற்கண்ட வாக்கியத்திலுள்ள கர்ம என்னும் பதம் எல்லாப் பிரபஞ்சத்தையும் குறிப்பதாகும். ஆகலின், எல்லாப் பிரபஞ்சத்தையும் தன் கர்மமாக (காரியமாக)க் கொண்டிருக்கத்தக்கவன் பரமாத்மாவாக இருக்க முடியுமே யன்றி ஜீவனாகவோ முக்கிய பிராணனாகவோ இருக்க முடியாது என்றறிக.

17-வது சூத்திரம் அவதாரிகை:—இந்த வாக்கியத்தில் ஜீவலக்ஷணத்தையும் பிராண லக்ஷணத்தையும் வார்த்தைகளிருக்க அவற்றை விட்டு பரமாத்ம பரமாக பொருள் கொள்வது சரியாமோ? என்னும் பூர்வபக்ஷிகளின் வினாவிற்கு விடை தரப்படுகின்றது.

சூ. 17. "ஜீவமுக்ய ப்ராண லிங்காந் நேதிசேத தத்வ்யாக்யாதம்."

பதவுரை,—ஜீவ முக்ய ப்ராண லிங்காத்=ஜீவனுக்கும் முக்கிய பிராணனுக்கும் லிங்கங்க ளிருத்தலால், நேதிசேத்=பரமாத்மாவல்ல என்பாயேல், தத்=அந்த வாதம், வ்யாக்யாதம்=இதற்கு முன்னமே கண்டிக்கப்பட் டிருக்கின்றது.

கருத்து:—முக்கிய பிராணனையும் ஜீவனையும் குறிக்கும் லிங்கங் (அடையாளங்)கள் இருப்பினும் அவை கண்டு கிரகிக்கத்தக்கவை யல்ல. பரப் பிரம்மமே கிரகிக்கத்தக்கது. இந்த மூன்றும் உபாசியங்கள் என்னுமிடத் துண்டாம் தோஷங்கள் விவரிக்கப்பட் டிருக்கின்றன. (பாதம் 1. சூ. 31.)

ப்ராண சப்தத்திற்குப் பிரம்ம பரமாக சுருதிகளில் விவகார மிருத்தலாலும், ஜீவன் பரமார்த்த தசையில் பிரம்மா பின்னனாகவே யிருத்தலாலும் முக்கிய பிராண ஜீவலிங்கங்கள் கூறப்பட்டன என்று அறிக. பிரகரணம் பிரம்ம பிரகரணமா யிருத்தலும் காண்க.

18-வது சூத்திரம். அவதாரிகை:—பிரகரணத்தில் கூறப்படுவது பிரம்மமேயானால் அதில் ஜீவ பிராணன்களைப் பற்றி ஏன் கூறவேண்டும்? என்னும் வினாவிற்கு விடை தரப்படுகின்றது.

சூ. 13. அந்யார்தந்து ஜைமிநிঃ
ப்ரச்நவ்யாக்யா னப்யாமபிசை வமேகே."

பதவுரை:—ப்ரச்நவ்யாக்யாநாப்யாம்=வினா விடைகளால், ஜைமிநிঃ=ஜைமினிமுனி, அந்யார்தந்து=ஜீவ பிராண உதாரணங்கள் வேறு பிரயோஜனத்திற்கென்று (பிரம்ம ஞானத்திற்காக வென்று, மந்யதே=எண்ணுகின்றார்); அபிச=மேலும், ஏவம்=இந்த அர்த்தத்தையே, ஏகே=வாஜச நேயர்களும், (ஆமநந்தி=சொல்லுகின்றார்கள்).

கருத்து:=சுருதியில் காணப்படும் வினாவிடையைக் கொண்டு அதில் கூறப்பட்டுள்ள ஜீவப்ராண உதாரணங்கள் பிரம்ம ஞானத்தின் பொருட்டே என்று ஜைமினி யாசாரியர் கருதுகின்றார்.

அவர் குறிப்பிடும் வினா விடைகள் வருமாறு:—

வினா:=க்வைஷ ஏதத் பாலாகே புருஷோ அசயிஷ்ட, க்வவா ஏதத்பூத் குத ஏததாகாத்=ஓ, பாலகீ! ஞான சூன்யமாக இப்புருஷன் எதனிடத்தில் சயனித்தான்? இந்த விஞ்ஞான சூன்யத்தன்மை எங்குண்டாயிற்று? அதாவது, இந்த தூங்கும் புருஷன் எவனோடு ஐக்கியத்தை யடைந்தான்? ஐக்கியத்தினின்று நழுவுதல் வடிவம் மீண்டும் வருதல் எங்கிருந்து?

இக் கேள்வியில் ஜீவனைவிட வேறான பொருள் ஒன்றிருப்பதாக போதிக்கப்பட்டது. இக்கேள்விக்கு முன்பு ஜீவன் பிராணனைவிட வேறானவனென்று பிரம்புகொண்டு செய்த சம்பாஷணையால் காட்டப்பட்டது.

விடை:—யதா சுப்தஸ் ஸ்வப்நம் நகஞ்சன பச்யத் யதாஸ்மிந் ப்ராண ஏவை கதாபவதி × × ஏதஸ்மா தாத்ம நஸ்ஸர்வே ப்ராணாயதா யதநம் விப்ரதிஷ்டந்தே, ப்ராணேப்யோ தேவா தேவேப்யோ லோகாঃ=ஜீவன் சொப்பனாவஸ்தையைத் தாண்டி எப்போது சுழுப்தியை யடைகின்றானோ அப்போது அவன் பிரம்மைக்கியத்தை யடைந்து அத்வித்யனாகின்றான். × × அந்த ஆத்மாவினின்றே பிராணன் முதலிய எல்லா ஜகத்தும் தோன்றுகின்றது.

உபாதியால் உண்டாகும் விசேஷ விஞ்ஞான மில்லாதவனாய் சுழுப்தியவஸ்தையில் ஜீவன் எவனைப் பொருந்துகின்றானோ, பின்பு அவித்தையின் வசத்தால் எவனிடத்தினின்று நழுவுதல் வடிவமான மீட்சியை யடைகின்றானோ, அத்தகைய பரமாத்மா வேதிதவ்யன் என்று இந்த வினா விடைகளால் தெரிந்து கொள்ள வேண்டுமென்பது ஜைமினி முனியின் கொள்கை.

## 6-வது வாக்யாந்வயாதி கரணம்.

19-வது சூத்திரம். அவதாரிகை:—"நவா அரே பத்யுঃ காமாய பதிঃ ப்ரியோ பவத்யாத்மநஸ்து காமாய பதிঃ ப்ரியோபவதி" + + "நவா அரே ஸர்வஸ்ய காமாய ஸர்வம் ப்ரியம் பவத் யாத்ம நஸ்து காமாய ஸர்வம் ப்ரியம் பவதி—ஆத்மாவா அரே த்ருஷ்டவ்ய ச்ரோதவ்யோ மந்தவ்யோ நிதித்யாஸிதவ்யோ மைத்ரேய் யாத்மநோவா அரே தர்சநேந ச்ரவணேந மத்யா விஜ

ஞாகேநேதம் ஸர்வம் விதிதம்." (இதன் பொருள்) எசமானனாகிய ஆத்மா விற்கு பதி பிரியவனாவானா? ஆவான். எல்லாருக்கும் எல்லாமும் பிரியமா குமா ஆகாதா? ஆத்மாவின் கோரிக்கைக்கு எல்லாம் பிரியமாகும். ஆத்மா பார்க்கத் தகுந்தது, கேட்கத் தகுந்தது, நினைக்கத் தகுந்தது, நிதித்தியாச னம் செய்யத் தகுந்தது. அந்த ஆத்மாவைப் பார்ப்பதாலும் கேட்பதாலும் நினைப்பதாலும் தியானம் செய்வதாலும் எல்லாம் அறியப்படுகின்றது. பிருக தாரண்யகோபநிஷத்து — மைத்ரேயி பிராமணத்தி லுள்ளதாகிய இந்த வாக்கியத்தின் ஆரம்பத்தில் ஜீவனுக்கும் முடிவில் பிரம்மத்திற்கும் பொருள் படும்படியான பதங்க ளிருத்தலால் இப்பிரகரணத்தில் சொல்லப் படுபவன் ஜீவனோ? அல்லது பரமாத்மாவோ என்று சந்தேகம் தோன்றுகின்றது. அதாவது "ஆத்மாவா அரேத் ருஷ்டவ்யஃ என்னும் வாக்கியத்தில் ஆத்மா என்னும் பதம் உபக்கிரம சாமர்த்தியத்தால் ஜீவ பரமா? அல்லது பிரகரண பலத்தால் பரமாத்ம பரமா? என்பது சந்தேகம். இச்சந்தேகம் நீக்கப்படு கின்றது.

சூ. 19. "வாக்யாந்வயாத்".

பதவுரை:—வாக்யாந்வயாத்=முன்பின்னுள்ள வாக்கியங்களின் ஒற்று மையால் (பிரகரண பிரதி பாத்தியன் பரமேசுவரனே).

கருத்து:—ஜீவனைப்பற்றிப் பிரஸ்தாபிக்கப்பட் டிருப்பதாக வாக்கியங் கள் காணப்படினும், பின்னால் ஜீவனுடைய பாரமார்த்திக சொரூபத்தைத் தெரிந்து கொள்வதால் எல்லாம் தெரிந்து கொள்ள முடியும் என்று உபதே சிக்கப்பட் டிருத்தலால் இது பிரம்ம பிரகரண மென்பது வெளிப்படையாக விளங்குகின்றது. எல்லாப் பதார்த்தங்களும் பிரம்மமும் ஏகமாக இல்லா விட்டால் தன் ஆத்மஞான மாத்திரத்திலேயே எல்லா விஞ்ஞானமும் உண் டாகும் என்று சொல்ல முடியாதல்லவா?

உலக சுகத்தால் வைராக்கிய முடையதாய் மோக்ஷத்தை யடைவதற் குத் தகுதியான ஞானத்தை உபதேசிக்க வேண்டும் என்று மைத்ரேயி தன் கணவனாகிய யாஜ்ஞவல்கிய மகரிஷியைக் கேட்டபோது, அவர், ஜீவப் பெயரை அடைந்துள்ள ஆத்ம சைதன்யத்தையே தியானித்தால் முக்தி யுண்டாகும் என்று "ஆத்மாவா அரேத்ருஷ் டவ்யஃ" என்னும் வாக்கியத் தால் உபதேசித்தார். எனவே, உபாதி சூனியனாகிய ஜீவனே பிரம்மம் என்று உபதேசித்தார். ஆகையால் இது பிரம்ம பிரகரணமே என்பது விளங்குகின் றது.

20-வது சூத்திரம். அவதாரிகை:—சுருதியில் "ஆத்ம நஸ்து காமாய பதி: ப்ரியோபவதி" என்று பிரியத்தைக் குறிப்பிடுவதாக ஆரம்பிக்கப்பட் டிருப்பதால் இதில் பார்க்கத்தக்கவனாகப் போதிக்கப்பட்டவன் விஞ்ஞா னாத்மாவே என்று பூர்வ பக்ஷிகள் மேலும் செய்யும் வாதம் கண்டிக்கப்படு கின்றது.

சூ. 20. "ப்ரதிஜ்ஞா ஸித்தேர் லிங்க மாச் மரத்யஃ"

பதவுரை:—ப்ரதிஜ்ஞா ஸித்தேஃ=பிரதிஜ்ஞையின் சித்திக்காக, லிங் கம்=ஆத்மா த்ருஷ்டவ்யன் என்றும் உபதேசம் சாதகமா யிருக்கிறது; என்று, ஆச்மரத்ய:=ஆச்மரத் யாசாரியர் (மந்யதே=நினைக்கின்றார்).

கருத்து:— "ஆத்மநி விஜ்ஞாதே ஸர்வ மிதம் விஜ்ஞாதம் பவதி," ஆத்ம விஞ்ஞானத்தினல் சகல விஞ்ஞானங்களும் உண்டாகும்), "இதம் ஸர்வம் யதய மாத்மா" (இந்தப் பிரபஞ்சம் முழுவதும் ஆன்ம சொரூபமே) என்னும் இவை விஷயங்கள். மேலே (முதலில்) குறிப்பிட்ட விஷய வாக்கியத்தில் ஆத்மா கஸ்து காமாயபதிஃ' என்னு மிடத்தில் ஆத்மா என்னும் பதத்தின் பொருளாவுள்ளவனும் (ஜீவனும்), "ஆத்மாவா அரேத்ருஷ்டவ்யஃ" என்னுமிடத்தில் ஆத்மா என்னும் பதத்தின் பொருளாகவுள்ளவனும் (ஜீவாத்மாவும்) ஒருவனே யெனவும், இந்த விஞ்ஞானத்மாவைப் பார்க்கத்தக்கவனுஃ உபதேசிப்பது மேலே காட்டப்பட்ட ஆத்ம விஞ்ஞானத்தினல் சகல விஞ்ஞானங்களு முண்டாகும் என்றது முதலிய வாக்கியப் பொருள்கள் சித்திப்பதற்குச் சாதகமே யென்றும் ஆச்மரத்யாசாரியரின் அபிப்பிராய மாகும்.

இந்த ஆச்மரத் யாசாரியர் பேதாபேத வாதி. காரியாவஸ்தையில் விஞ்ஞாஞத்மா பரமாத்மாவினும் பின்னனென்றும், காரணவஸ்தையில் அபின்னனென்றும், இந்தச் சுருதி வாக்கியத்தில் காட்டப்பட்டுள்ள "ஆத்மா பார்க்கத் தக்கவன்" என்னும் உபதேசம் ஜீவன் பரமாத்மாவினும் காரணவஸ்தையில் அபின்னன் என்பதைக் காட்டுவதற்கு லிங்கமாக (அடையாளமாக) இருக்கின்றது என்றும், பின்னனுஃவேயிருக்கும் பக்ஷத்தில் பரமாத்மாவின் ஞானத்தால் ஜீவாத்ம ஞானம் சித்திக்காமல் விஷய வாக்கியத்தின் பொருள் வேறுபட்டுப் போகுமென்றும், இந்த அபேதாம்சத்தை யுத்தேசித்தே மேல் காட்டப்பட்டுள்ள சுருதி வாக்கியத்தில் ஜீவோபக்ரமணம் (முதலில் ஜீவனைப் பற்றிய பதம்) சொல்லப்பட்டிருக்கின்றதென்றும் இந்த முனிவர் அபிப்பிராயப் படுகிறார்.

---




## 38-II ஏழாண்டுப் போரின் தொடர்ச்சி விவரம்.

(T. S. ராஜகோபாலன், B. A., L. T.)

முந்தின தொடர்ச்சியின் இறுதியில் கூறப்பட்டபடி, ஆஸ்ட்ரிய வார்சுப் போரின் ஆரம்பத்தில் ஆஸ்ட்ரிய ராணி மேரியா தெரிஸா இருந்த அந்த அனாதரவான நிலையில், ப்ரஷ்ஷிய அரசன் பிரடரிக், இந்த ஏழாண்டுப் போரின் ஆரம்பத்தில் இருந்தான் என்பதும், அந்த அனுதைக்கு ஆங்கிலேயர் ஆத்திரத்துடன் ஆதரவு செய்ய ஆர்வப் பட்டனர் என்பதும் குறிப்பிடப்பட்டன. ஆனால் பொது விரோத மனப்போக்கும், வியாபார, குடியேற்ற நாட்டு சம்பந்தமான சச்சரவுகளும் காரணங்களாயின என்ற விவரமும் எழுதப்பட்டது. ஆக இந்த யுத்தத்திற்கு ஆஸ்பதம் ஐரோப்பா, அமெரிக்கா, இந்தியா, சமுத்திரம் முதலிய இடங்களில் இருந்ததால், இந்த யுத்தம் உலகத்தின் பல பாகங்களிலும் வியாபித்து, பல விடங்களிலும் ஏக காலத்தில் யுத்தங்கள் நடந்தன வென்பது இயற்கையே யாகுமன்றோ ?

இந்த நிலைமையில் யுத்தத்தில் வேண்டிய ஏற்பாடுகளைச் செய்யத்தகுந்த ஒரு நிர்வாகி ஏற்பட வேண்டி, அந்தப் பதவியை வகித்துத் திறம்பட நடத்திக் கீர்த்தி பெற்ற வில்லியம் பிட் என்பவரைப் பற்றின சில அவசியமான குறிப்புக்கள் எழுதவேண்டி யிருக்கிறது. இவர் வாலிபர். நல்ல அறிவாளி. நேர் முறையில் நடந்து கொள்ளும் போக்குள்ளவர். அந்த முறையில் எந்தக் குற்றத்தையும் நிஷ்கண்டகமாய் ஒருவருடைய உவப்பு வெறுப்புக் கஞ்சாமல் கண்டனம் செய்து தாக்குவர். அஞ்சாத நெஞ்சினர். "நடுவிகந்தா மார்க்கத்தை யன்றே யொழியி விடல்" என்றப் புனிதவாக்கை, வாழ்க்கையின் குறிக்கோளாக ஏற்றவர். வால் போலின் கண்யமற்ற நடத்தைகளைத் துணிந்து கண்டனம் செய்து, கர்ச்சனை செய்தவர். "பொறுப்பற்ற இளம் பிள்ளைகள்" என்று வால் போலால் ஏளனம் செய்யப்பட்டு, திருப்பி நல்ல சூடான வார்த்தைகளால் அவரைத் தலை குனியும்படி மட்டம் தட்டிப் பேசினவர். ஆஸ்ட்ரிய வார்ஸ் யுத்தம் ஹானோவரின் க்ஷேமத்தைக் கருதிய போக்கில் போனதாகத் தோன்றிய போது அரசனுடைய கோபத்தையும் கருதாது கண்டித்தவர். அதே சமயத்தில் பிரதம மந்திரி பெல்ஹாமின் மத்தியஸதத்தின் காரணமாக அவருடைய நிர்வாக காலத்தில் சேனைகளுக்குச் சம்பளம் போடும் (Paymaster General of the forces) உத்யோகம் பார்த்தவர். அப்போது அந்தஸ்தானத்தில் உள்ளவர்களுக்கு மாமூலாகக் கொடுக்கப்பட்டு வந்த மேல் வரும்படியைத் துச்சமாகவெறுத்தும், கொடுக்கவந்த ஏழை உத்யோகஸ்தர்களைக் கண்

டித்தும் நேர் முறையில் கண்டித்தவர். பெரிய ஆபீஸ்களில் உள்ள பெருச்சாளிகளின் இந்த மனோபாவத்திற்கு மாறாக இந்தக் கண்யமான பிட் செய்த காரியம், அந்த மாமூல் உள்ளவர்களுக்கு எவ்வளவு திருப்தியை யளிக்கும் என்பதை நேயர்கள் ஊகித்துக் கொள்ளலாம். ஏழைகளின் மனம் குளிர்ந்தது. அது சம்பந்தமாய் மற்றவர்களின் குழப்பம் சேர்ந்த போது, உத்யோகத்தை உதைத்து தள்ளி, "இந்தத் தொண்டு நிலைமையைத் தூவென்று தள்ளி" ராஜீனமாச் செய்தவர். அதனால் "பொது ஜனப்பிரியன்" The Great Commner என்ற புகழ்ச்சியையும் சரித்திரத்தில் பெற்றவர். அந்த சமயத்தில் ஏராளமான உபசாரப் பத்திரங்கள் தங்கப் பேழைகளில் இவருக்குத் தரப்பட்டனவாம்! அதை வேடிக்கையாக, "ஒரு காலையில் என் வீட்டில் தங்கமழை பெய்தது" (It rained gold in my house, one morning) என்று குறிப்பிட்டாராம். கோழைத்தன முள்ளவர்களைக் கண்டித்துப் பேசும் அவருடைய வழக்கத்தை ஒருவர், "Nobody who went into his room would come out except as a brave man" (அவருடைய அறைக்குப் போனவர்கள் தைரிய முள்ளவர்களாகத் தான் திரும்பிவர வேண்டும்) என்று குறிப்பிட்டிருப்பது சரித்திர பூர்வமானது.

உரிய காலத்தில் உற்றதைச் செய்து, ஊக்கத்துடன் நடத்தி, வெற்றிகரமாகச் செய்ய வல்லவர். மேலே குறித்த ஏழாண்டுப் போரை வகித்த போது, "I know I can save the country and no one else") என் தேசத்தை நான்தான் காப்பாற்ற முடியும். வேறொருவராலும் முடியாது!) என்றும் "I will conquer Canada in Germany" (நான் ஜெர்மனியில் செய்யும் சண்டைகளினால் அமெரிகாவில் உள்ள கனடா தேசத்தை ஜெயித்து விடுவேன்) என்றும் சொல்லிக் கொண்டு, செய்தும் முடிக்கும் தன்னம்பிக்கை பூரணமாக உள்ளவர்.

இதற்காக, அரசர் மனதை நிரம்பவும் சமனப்படுத்த வேண்டியிருந்தது. யுத்த ஆரம்பத்தில் எங்கு பார்த்தாலும் எதிரிகளே வெற்றி பெற்று வந்தனர். சாம்ராஜ்யத்திற்கே ஹானி வந்து விடும் போலிருந்து, (The black year) கருப்பு வருஷம் துக்ககரமான வருஷம் என்றும் அவ்வருஷத்திற்குப் பெயர் வந்து விட்டது. வேறு வழியின்றி அரசனும் பிட் யுத்த மந்திரியாக இருக்க இணங்க வேண்டியதாகி விட்டது! வந்தார் பிட் யுத்த மந்திரியாக! உடனே ஸ்காட்லந்து மலை நாட்டு வீரர்களடங்கிய ஒரு திறமான சேனையைத் தயார் செய்து Wolfe என்ற சேனைத்தலைவர் வசமும், Hawke என்ற கப்பல் படைத் தலைவர் வசமும் அனுப்பி, அமெரிக்காவில் யுத்தம் நடத்தினர். அங்கேயே பிரஞ்சுக்காரருடன் விடாது போர் நடத்திய ஜார்ஜ் வாஷிங்டன் என்ற அமெரிக்க சேனாதிபதிக்கு ஏதேஷ்டமான உதவியனுப்பினர். ஐரோப்பாவில், விடாக் கண்டனாய், "காலனும் அஞ்சக் கலக்குபவனாய்" தளராது, தோற்ற போதிலும் உடனே உயிர்த்தெழுந்து சூரனாய்ச் சண்டை நடத்திய பிரடரிக்குக்கு சொல்ல முடியாத ஆட்களையும், பணத்தையும் வீரர்களையும் அனுப்பிக் கைசளைக்காமல் இருக்க வழி செய்தார்! இந்தியாவுக்கும், புகழ் பெற்ற க்ளைவ் பிரபுவை சேனாதிபதியாக்கித் தட்டிக் கொடுத்து உத்ஸாகப் படுத்தி போர் புரியத் திட்டம் செய்தார். இந்த ஒரு சந்தர்ப்பத்தில் தான் பிட் மேலே குறித்தபடி தன்னம்பிக்கையுடன் பேசி, தன்னம்பிக்கையுடன் செய்து, அதன்பலனாக, பல தோல்விகளையும்மாற்றி எங்கு பார்த்தாலும் வெற்

திகரமாக திடீரென மாந்திரீக சக்தியின் மூலம் நடப்பது போல் செய்து "வெற்றிகரமான வருஷமாக (The year of Victories) 1759ஐச் செய்தார்!!

அமெரிக்காவில், க்விபெக் (Quebec) என்ற பட்டணம் மலைக் கோட்டை பிடிபட்டு விட்டது! ஆனால் உல்ப் (Wolfe) உயிர்துறந்தார். இந்தியாவில் பிளாசி யுத்தத்தில் க்ளைவ் வெற்றி பெற்று வங்காளத்தில் ஆங்கிலேயர் ஆதிக்கம் ஸ்தாபனமாகக் காரணம் ஆக்கினர். ஐரோப்பாவிலும், Minden (மிண்டன்) என்ற விடத்திலும், Rossback (ராஸ்பெக்) என்ற விடத்திலும் வெற்றிகள் பிரடரிக்குக்கு ஏற்பட்டு எதிரிகள் கலங்கி நின்றனர். கடற் சண்டைகளிலும் பல விடங்களிலும் ஆங்கிலேயர் வெற்றிச் சங்கம் ஊதினர். எங்கு பார்த்தாலும் பிட்டின் பிரதாபமே பேச்சாக இருந்தது மிகையல்ல!

ஆனால் ஒரு கஷ்டம் நேர்ந்தது. வெற்றிகளைக் கண்டுகளித்த ஜார்ஜ் II மரணம் அடைய, அவருக்கு அடுத்த அவருடைய பேரன் ஜார்ஜ் III பட்டம் பெற்றான். இவன் வாலிபன். இங்கிலாந்திலேயே பிறந்தவன். இங்கிலாந்து பாஷை, பழக்க வழக்கம், மாமூல் சட்ட திட்டம், மனப் போக்கு, ராஜரீகம் யாவும் உணர்ந்தவன். காபினெட் ஆட்சி முறையில் தன் பாட்டனும் அவர் தகப்பனும் உரிமைகளற்ற பொம்மைகளாகப்பட்ட நிலைமையை வெறுத்து, பழைய அரசர்களைப் போல, பூரண உரிமைகளுடன் ஆளவிரும்பியவன். காபினெட் முறையை தகர்த் தெறிய தயாராகக்கப்பட்டவன். விக்கக்ஷியின் ஆதிக்கத்தைச் சிதைக்க வந்தவன். எவ்வளவு மேதாவியான மந்திரியானாலும், தனக்கடங்கா விட்டால் தட்டி விடக் கூடியவன். எது வந்தாலும் வரட்டும் என்று நினைக்கக் கூடியவன். எந்த முறையில் விக்கட்சியினர் ஆதிக்கம் ஸ்தாபித்தார்களோ அதே முறைகளைக் கையாண்டு மடக்க நினைத்து, தலையாட்டும் லோட்டாக்களடங்கியவர்கள் சேர்ந்த" அரசன் சிநேகிதர்கள்" (The king's friends) என்ற ஒரு கட்சியைப் பட்டம் பதவி செல்வாக்கு உத்யோகம் முதலியவற்றால் தயாராக்கிக் கொண்டு எந்த மந்திரியையும் திணறடிக்கத் தயாரானவன். "கொக்குக்கு ஒன்றே மதி" என்றவாறு காரியம் நடத்துபவன். பிறர் சொல்வதைக் கேட்க விருப்பமே யில்லாதவன். தன் பிசகை ஒத்துக் கொள்ளாதவன். இப்படியான அரசன் வந்த சமயம்.

தங்களுக்குள் ஏற்பட்டிருந்த இரகசியமான குடும்ப உடன்படிக்கைப்படி (Family compact) ஸ்பெயின்காரர் உதவி பிரஞ்சுக்காரருக்கு ஏற்பட்டதைக் கண்டு அவர்களைத் தண்டிக்க எண்ணி, அப்பொழுது அமெரிக்காவிலிருந்து வந்து கொண்டிருந்த ஒரு திரவியக் கப்பலைத் தாக்கும்படி கப்பல் தலைவர்களுக்கு 1760-ல் உத்திரவு பிட் அனுப்பி யிருந்தார். அதை அவசியமில்லையென்று ஒரு அடியில் அரசன் ரத்து செய்து விட்டான். பிட் கோபம் கொண்டு ராஜிநாமாச் செய்தார்! அது தான் அரசனும் வேண்டிய பலனும் ஆகும்! தனக்கிஷ்டப்பட்ட, தன் மனம் போல் நடக்கக் கூடிய ஒரு மந்திரியைப் போட்டுக் கொண்டான். யுத்தம் சற்று நிதானமாகவே நடந்தது. முந்தின முஸ்தீப்புகள் இல்லை. 1763-ல் பாரிஸில் சமாதானமும் நடந்தது. கானடா ஆங்கிலேயருக்குச் சொந்தமாயிற்று. வேறு சில உரிமைகளையும், பெற்றனர். முன்பு மேரியா தெரிஸா திடீரென கை விடப்பட்டது போல்

பிரடரிக்கும் அந்தரத்தில் விடப்பட்டான்! சரித்திர நிகழ்ச்சிகள் திரும்பத் திரும்ப வரும் (History repea s itself) என்ற சொல்லுக்கு இது ஒரு உதாரணமாகும். பல சொல்லிப் பயனென்ன? ஆங்கிலேயரில் பெரும்பாலானவரும், "பிட் இருந்திருந்தால் அவ்வளவு செய்திருப்பார். பெருத்த லாபம் கிடைத்திருக்கும். கூ! கூ! போய் விட்டது! மோசம்!" என்றனர். ஒருவரும் கவனிப்பாரில்லை. அரசன் தன் பாட்டில், தன் வேலைகளைத் தீவிரமாக ஆரம்பித்து விட்டான். முக்கியமாக, நரம்பில்லாத மந்திரிகள் ஏற்பட்டால், பார்லிமெண்ட்டில் ஆதரவு கிடைப்பது கஷ்டமாகி ஒடவேண்டியிருந்தது. கொஞ்சம் புத்திசாலியும் சுயபுத்தியும் சாமர்த்தியமும் உள்ள மந்திரி ஏற்பட்டால், அரசனுக்கு எப்போதும் அடங்கியிருக்க மாட்டான் என்ற முறையில், அரசனுடைய சிநேகிதர் கக்ஷியைக் கொண்டு அவர்களை நிர்வகிக்க முடியாமல் அரசன் திணறடிப்பான். இந்த முறையில், பார்லிமெண்ட்டின் ஆயுள் உள்ள வரையில் பொதுவாக காபினெட்டின் ஆதிக்கம் நிர்வாகமும் உண்டு என்றுள்ளது காற்று வாக்கில் போய், சுமார் 1773 ஆன பதின்மூன்று வருஷங்களில் 10-க்கு மேற்பட்ட மந்திரி சபைகள் கூடியும், கலைந்தும் வந்திருப்பது அரசன் காரியத்தினுல் என்பது எந்த இங்கிலந்து சரித்திரத்திலும் காணப்படும். பல மேதாவிகளும் முயன்று பலனில்லை. ஏனெனில் எக்காலத்திலும் எங்கும், ஏகோபித்த அபிப்பிராயம் ஒரு மனம் போல் ஏற்படுவது அனுபவ சாத்தியமில்லை. அந்த ஒரு பொதுஜன பலஹீனத்தைக் கொண்டு, "அயர்ந்தடித்தால் ஐயனும் இல்லை பிடாரியும் இல்லை" என்றபடியும் "தடியெடுத்தவன் தண்டக்காரன்" என்றபடியும் ஆக விட்டது காபினெட் சபையின் கதி. இந்தப் பலவித அலங்கோலத்தில் ஏற்பட்ட பல யோசனையற்ற காரியங்கள் காரணமாக ஏற்பட்ட அமெரிக்க சுதந்தர யுத்தத்தைப் பற்றின வரலாறு அடுத்த தொடர்ச்சியின் சாரமாகும்.

(பொதுவாக சரித்திரப் போக்கையும் அதன் மூலமுள்ள அரசியலறிவையும் காணச் செய்வது தான் இக் கட்டுரைத் தொடர்ச்சிகளின் போக்கு என்பதில் விவரங்கள் அதிகம் இல்லாததற்கு மன்னிக்க வேண்டி முடிக்கிறேன்.)






# ஔவையார்

(ஸ்ரீமதி. பண்டிதை-அசலாம்பிகை அம்மையார்.)

"தேசத்தோடொத்துவாழ்" என்பது அடுத்த நீதித்தொடர். இதற்கு நீ வசிக்கும் தேசத்தில் உள்ளவர்களுடனே பகையில்லாமல் ஒத்து வாழ்வு நடத்து என்பதுபொருள். கல்வியறிவில்லாதவரும் இவ்வொழுங்கைக் கடைபிடித்தொழுகல் வேண்டும். இவ்வுண்மையை அறிந்து நடவாவிடில் எவரும் அமைதியாகவும் இன்பமாகவும் வாழ முடியாது. பிறர் கொள்கை, நடை, ஒழுக்கம் இவைகள் தனக்கு ஒவ்வாதிருப்பினும் தான் அதுபற்றி இழிவாகவோ அலட்சியமாகவோ எண்ணவேகூடாது. உதாரணமாக வடநாடு செல்லும் யாத்ரீகர்கள் அத்திசை மாந்தர்கள் உடைகள் வெண்மையின்றி அழுக்கடைந் திருத்தலேயும் கங்கையில் நீராடுவோரும் நீராடுவதற்குமுன் தரித்திருந்து கரைமீது களைந்து வைத்துள்ள விழுப்பாடையையே அருவருப்பின்றி எடுத்து உடுப்பதைக்கண்டும் அதிசயப்படாமலிரார். ஆனல் அவர்கள் அந்தரங்கத்தில் கள்ளம், பொய் முதலிய குற்றங்கள் ஒன்றும் இருப்பதருமை. தென்னாட்டில் நீராடிவிட்டு அதே உடையை மீட்டும் ஆசாரம் இதுவென அறியாதவரும் உடுத்திக்கொள்ளப் பெரும்பாலும் விரும்பார். ஆனல் இவர்கள் உள்ளத்தில், கபடம், வஞ்சகம், சூது, பொய் முதலியன பெரும்பாலும் ஊறிப்போயிருக்கும். இவர்களிடமுள்ள வெளிப்படையான தூய்மையை வடதேசத்தினர் அநுஷ்டிக்கக் கற்பதும், இந்நாட்டினர் அவர்களுடைய மனத் தூய்மையைக் கற்கமுயல்வதும் சிறப்பேயொழிய ஒருவரையொருவர் குணத்தைவிட்டுக் குற்றங்களைமட்டில் கவனித்து இழிவாக மதிப்பது தவறு. தன்னிடமுள்ள குற்றங்களைச் சிந்தித்துப் பார்க்க முடியாதவர் எவரும் பிறர் குறைகளை எடுத்துக்காட்ட உரிமையானராகார். இவ்வுயர்ந்த எண்ணம் எவர் எவர் மனதில் இடம் பெறுமோ அத்தகையாளர் எத்தேசத்திலும் ஒத்து வாழ்வு நடாத்துவர். 'யாதும் ஊரே யாவரும் கேளிர்' என்ற ஆன்றோர்மொழி அத்தகையினர்க்கே பொருந்துவ தாகும்.

தேசத்தோடொத்துவாழ முடியாதவன் தன் சொந்தக் குடும்பத்தோடும் ஒத்துவாழ முடியாது. இதற்குத் திறவுகோல் சகிப்புத்தன்மைதான். இது பற்றியே,

"சினமுளான் மனைமைந்தர்கள் இவன் வெளிச்செல்லும்
தினமெல்லாம் பெருவிழவு கொண்டாடுவர் செல்லா

தினையன்தங்கு நான்இழவுகொண் டாடுவர் இறப்பின்
மனையிலோர் பெருநல்விழா வந்தென மகிழ்வார்"

என மொழிந்தனர் நீதிநூலாசிரியரும். இத்தகையார் தேசத்தோடொத்து வாழ்வதெப்படி? தேசத்தோடொத்து வாழ மாட்டாதவர்கள் உலகத்தோ டொத்து வாழ்வ தெவ்வண்ணம்?

"உலகத்தோ டொட்ட வொழுகல் பலகற்றும்
கல்லார் அறிவிலா தார்"

என்றனர் தெய்வப்புலவர் பெருமானும். உலகம் என்பது தேசத்தைவிடப் பலபடப் பெரியது. உலகம் உயர்ந்தோர் மாட்டு எனக் கொள்வதும் வழக்கு.

உலகத்தோடு பொருந்தி வாழ்வதற்குக் கல்லாதவர், பல கற்றாலும் அறிவிலாதாரேயாவர் என்பது புலனாகின்றது. பலகலை கற்றவர்கட்கும் உலகோடொப்ப (உயர்ந்தோர் ஏற்கும்படி) நடப்பது அருமையாதலின் ஈண்டு மூதாட்டியார் தேசத்தோ டொத்துவாழ் என்று அறிவுறுத்தினார்போலும். வருணவேற்றுமை, கடமை வேற்றுமை, தொழில் வேற்றுமை, ஒழுக்க வேற்றுமை, கொள்கை வேற்றுமை எனப்பல வேற்றுமைகள் நம் நாட்டில் உண்டாதலின் ஒற்றுமைகாண்பது முடியாதகாரியம் என்றும் ஆதலினால் எல்லாரையும் ஒரே குலமாக்க வேண்டுமென்றும் இக் காலத்திய சீர் திருத்தக்காரர்கள் சிலர் முயலத் துணிகின்றனர். உலகம் என்பது பல திறப்பட்டதென்னும் பொருளைக் கொண்டு திகழ்கின்றது. பலவகைப்பட்டுள்ள நிலையே வளர்ச்சியின் அடையாளமாகும். எல்லாம் ஒன்றாவதென்பது உலகம் அழியும் காலத்தில்தான். நமது கை விரல்களில் ஒன்றாவது ஒரே அளவு ஒரே வன்மை உடையவைகளாக இருக்கக் காண்கிலோம். ஒரு தாய் தந்தைக்குப் பிறக்கும் சந்ததிகளும் ஒரே சாயல் ஒரே குணம் ஒரே நிறம் உடையவர்களா யிருக்கக் காண்கிலம். ஆதலினால் தேச மக்களிடமுள்ள பாகுபாடுகளில் கவனம் செலுத்தினால் ஒத்துவாழ முடியாது. பல நிறமணிகளும் ஒரே நூலில் கோக்கப்பட்டிருப்பதுபோல அன்பென்னும் கயிறுடையார்க்கு எல்லோரிடையும் வேற்றுமையுணர்ச்சி எழ இடமில்லை. ஒற்றுமையுடன் நேசிக்கலாம். இதையே மூதாட்டியார் குறிப்பிட்டதாகக் கொள்ளல் வேண்டும். தேசத்தினை ஒன்றுபடுத்து என அன்னையார் கூறவில்லை. தேசம் எவ்விதம் இருந்தாலும் நீ அத் தேசத்தோடு பகையாமல் ஒத்துவாழ்க என்றே புகட்டியருளினர். இக்குறிப்பு ஊன்றி நோக்குவோர்க்கு விளங்கும். காலம், வர்த்தமானம் இரண்டும்கூட தேசத்தோடு ஒரே பாவனையில் கொள்ளல் வேண்டுமென்பது முதியோர் கண்ட முடிவு. இதுபற்றியே காலதேச வர்த்தமானங்களுக்கேற்ப எவரும் நடக்க வேண்டுமென்பது வழக்கில் உள்ளது. தேசம் என்பது பரந்த ஓரெல்லைக்குட்பட்ட நிலப்பரப்பு. இது உயர்திணையன்று. தேசம் என்பது இதன் கண் வசிக்கும் மக்களையே சுட்டுகின்றது. மக்கள் நடை, கொள்கை, அவ்வக் காலங்களின் மாறுதலுக்கேற்பப் பேதப்படும். அவ்வித பேதங்களுக்கியைய (வர்த்தமானம்) நடை முறைகளும் வேறுபடும். எனவே தேச மக்களும் கால பேதத்திற்குத் தக்கவண்ணம் மாறுதல் அடைதல் அவசியம் தேசத்தோடொத்து வாழப் பயிலாதவனுக்கு இன்ப வாழ்வே அமையாதென்பதை ஒவ்வொருவரும் நன்கு உணர்தல் கடனாகும்.

இனித், தையல் சொற் கேளேல் என்பது. இதை யாதாரமாக வைத்துப் பலர் பெண்கள் சொற்களையே கேட்கக்கூடாதென்று வாதம் புரியத் தலைப்படுவதும் உண்டு. பொது விதியாகப் பெண்பாலார் சொல்லும் அபிப்பிராயங்களையே கேட்டு அதன்படி நடக்கக் கூடாதென்றால் இந் நீதித் தொடரை இயற்றியருளிய ஔவையாரும் ஒரு பெண்ணினத்தைச் சேர்ந்தவரேயாவர். ஆதலினால் பெண் பாலராகிய ஔவையாரே தமது மொழியையும் ஆடவர் கேட்பது கூடாதென்று கூறியதாகவன்றோ முடியும்?

அன்றியும் அடுத்து இயற்றியருளிய கொன்றை வேந்தனில் தாய் சொற் றுறந்தால் வாசகமில்லை என்று வற்புறுத்திக் கூறியுள்ளார். ஆதலினால் மூதாட்டியார் கருத்துப் பால் வேற்றுமையைக் குறிப்பாகக்கொண்டு எழுந்த தென்பது விளக்கம்.

இனி தையல் என்பதற்குப் பெண் என்பதே நேரிய பொருள். பெண் என்பது இளம் பருவமுடையவர்களையே குறிக்கும். பொறுப் புணர்ச்சி வாய்க்கப்பெறாத அற்ப விஷயங்களில் கரை கடந்த ஆசை கொள்வதும், அவை தமக்குக் கிட்டாவிடின் அதற்காக அளவு கடந்து துன்பம் உழப்பதும், அதனைப்பெற ஒவ்வாத முறைகளிலும் ஈடுபட விரைவதும் இளம் பெண்களின் தலை சிறந்த குணமாகும். ஒன்றை மனதிற் கொண்டால் அதற்காக முயல்வதும் அது கிட்டாதாயின் அதனைச் சிறுகச்சிறுக மறப்பது ஆண்பால் இளைஞர் குணமாகும். இதனை உட்கொண்டே கொடிறும் பேதையும் கொண்டது விடாவென்னும் பழமொழியும் நின்று நிலவுகின்றது. ஆதலினால் யௌவனப் பெண்கள் சொற்படியெல்லாம் கேட்டு அவர்கள் உள்ளம் களிக்க வேண்டி அறிவுள்ள ஆடவர் செயலாற்றுதல் கூடாதென்பது பெறப்பட்டது. மனைவியும் சிறு பெண்ணா யிருக்கலாம், மகளும் சிறு பெண்ணா யிருக்கலாம். சகோதரியும் சிறு பெண்ணா யிருக்கலாம். பொதுவாக உலகில் சகோதரி மகள் இவர்கள் பற்றினைவிட மனைவியின்பற்றே அதிக வேகமுடையதென்பது வெள்ளிடமலை. அதற்கு சாஸ்திர சம்பந்தமான காரணங்களும் உண்டு. தவிர தையல் என்பது இருபொருள்களை ஒன்று படுத்துவ தென்பது எவரும் அறிந்ததே. தம்மை அணுகும் ஆடவர் மனதைத் தங்கள் அன்புச் சரட்டினால் தைத்துவிடும் இயல்புடையவர்கள் பெண்களே. இவ்வன்மை அவர்களிடம் இயல்பாகவே பிறப்பில் அமைக்கப்பட்டிருக்கின்றது. அவர்களாக ஆக்கிக்கொண்டதுமன்று.

சிறு பெண்களிடம் அணுகுவோரைக் கவரும் தன்மை அதிகம் உண்டு. முதிர முதிர அவ்வன்மை குறைகின்றது. அதைக் குறிப்பால் உணர்த்தவே பெண்களைமட்டில் தையல் என்று பெயர் கொடுத்தனர் போலும். தையல் என்பதற்கு மாதர் என்று வழக்கில் வரவில்லை. பொதுவாகத் தையல் என்பது பெண்கள் குழுவையே சுட்டுவதால்,

"தையலார் மயலிற் பட்டோர் தமக்கொரு மதியுண்டாமோ?"

என்றருளினர் முன்னூலாரும்.

உதாரணமாக எல்லா வுயர் குணங்களும் நிரம்பியவராய் புருஷோத்தமராய் மூவரிலொருவராகிய திருமாலின் அவதாரமாகிய இராமபிரானைப்

பற்றி எழுந்த இராமகாவியமே தையல் சொற் கேட்டவருல் விரிந்ததெனத் தர்க்க முறையில் நிலைநாட்டத் தடையுண்டோ?

தசரதரே ஆதியில் மனைவியாகிய கைகேசியின் தேர்விடும் திறமையை மெச்சி வரங்கள் கொடுத்தாகக் கதை வரலாறு. வரங்கள் அளித்தது நேர்மையே. ஆனல் அப்படி அளிக்கப்பட்ட வரங்கள் எத்தகையதாக இருத்தல் வேண்டுமென்னும் நிபந்தனையின்றி எவ்வாறு அளிக்கலாம்? அறத்திற்கும் அரச நீதிக்கும் மாறுபட்ட வரங்களையும் அளிப்பதெப்படி? இட்சுவாகு குலத் திலவதரித்து மனுமுறை தவருது "செயிரிலா வுலகினிற் சென்றும் நின்றும் வாழ், உயிரெலாம் தன்னுயிர் ஒப்ப ஓம்பினன்" எனக் கம்பநாடார் வியந்துரைக்கும் ஒப்பாரு மிக்காருமில்லாத ஒரு அரசர்க்கரசன் எதை விரும்பினுலும் கொடுப்பதாக வாக்களித்தது அக்காலம் அவ் வரசியின் சொல்லைக்கேட்டு அதன்படி நடக்கவேண்டுமென்னும் விருப்பத்தால் அன்றோ? சாரத்தியம் செய்த காலத்து மணங்கவரும் மங்கைப் பருவம் அக்கைகேயி இருந்ததே முக்கிய காரணம். முரண்படாத முறையில் வரங்கள் அளிக்கப் பட்டிருந்தால் கதையின் போக்கே வேறுவிதமாக வன்றோ இருக்கும்? இரண்டாவதாக ஆடவர் பெண்மையை அவாவும் தோளினனுகிய இராமபிரானே பஞ்சவடியில், இயற்கைக்கு மாறுபட்ட தோற்றத்துடன் வந்த மாரீசனுகிய மானைக் கண்ணுற்று தனது கட்டழகமைந்த இன்னுயிர்க்காதலி அதனைப் பற்றித்தரும்படி வேண்டியபோது என் செய்தார்?

"வெய்யவல்லரக்கர் வஞ்சம் விரும்பினர் வினையிற் செய்த
கைதவமா னென்றண்ணல் காணுதி கடையில்"

என்று தெளிந்துகூறிய தம்பியின் வசனத்தைச் சிறிதுஞ் சிந்தித்தாரா? செவி சாய்த்தாரா?

"ஆயிடையன்ன மன்னுள் அமுதகுத்தனைய செய்ய
வாயிடை மழலையின் சொற் கிளியினிற் குழறிமாழ்கி
நாயக நீயேபற்றி நல்கலைபோலும் என்னுச்
சேயரிக்குவளை முத்தம்சிந்துபு சிதறிப் போனுன்"

அவ்வாறு,

"போனவள் புலவிநோக்கிப் புரவலன் பொலன்கொள் தாரோய்
மானிது நானேபற்றி வல்லையின் வருவெனன்றே
கானியல் மயில் அன்னுளைக் காத்தனை யிருத்தி யென்னு
வேனகு சாமும் வில்லும் வாங்கினன் விரையலுற்றான்"

இவ்வண்ணம் தன் சொல்லை மதியாமல் காதல் மங்கையின் பிணக்கையே பெரிதாக மதித்து வேகமாய்ப் புறப்பட்ட தமயனை மீண்டும்,

"முன்னமு மகவாய்வந்த மூவரி லொருவன் போனுன்
அன்ன மாரீசனென்றே அயிர்க்கின்றேன் இதனையைய
இன்னமும் காண்டிவாழி ஏகென இருகைகூப்பிப்
பொன்னனுள் புக்கசாலை காத்தனன் புறத்துநின்றே"

"மந்திரத் தினையோன் சொன்ன வாய்மொழி மனத்துக்கொள்ளான்
சந்திரற்குவமை சான்றவதனத்தான் சலத்தை நோக்கிச்
சிந்துரப் பவளச் செவ்வாய் முறுவலன் சிகரச் செவ்விச்
சுந்தரத் தோளினன் அம்மானினைத் தொடரலுற்றான்"

இவ்வாறு மானைத் தொடராமல் தம்பியை அப்பணிசெய்யப் பணித்துச் சாலையில் இருந்தால் இராவணன் எவ்வாறு வருவதற்கு இடம் தரும்? தையல் சொற் கேட்டதனால் எய்தியதன்றென விவகார முறையில் சொல்ல முடியுமோ?

பிராட்டியை அரக்கன் கவர்ந்திராவிடில் அரக்கர் வதம் நடைபெறா தென்பது வேறு விஷயம்.

பிராட்டியாரே பிறகு அசோக வனத்தில் சிறையிருந்தபோது தன் சொல்லாலேயே தனக்கு இத்துன்பம் வாய்த்ததென்பதை எண்ணி வருந்தியிருக்கிறார்.

ஔவையாரே மதிமந்திரியுடையவளே நற்பெண் என்று பிறிதோரிடத்தில் சுட்டியிருப்பதால் பெண்கள் சொல்லெல்லாம் தள்ளக்கூடியவைகள் என்பது அவர் கருத்தன்று. பொருட்புணராத விளையாட்டு விஷயங்களில் இன்புற்று உலகியலறியாத நிலைமையில் குடும்ப நிர்வாகத்தில் ஈடுபடுத்தப்படும் சிறுமிகளின் இச்சைப்படியெல்லாம் ஆண்கள் செயல் புரிதல் கூடாதென்பதே அன்னையார் கருத்தாகும்.

சில சிறுமிகள் கணவன் இல்லம் எய்தியதும் கணவனைத் தவிர வேறு அக் கணவனுடைய தாய் தந்தை சகோதரர் முதலிய முதியோர்கள் வசிப்பதை விரும்புவதில்லை. காலைத் துயிலெழ வேண்டியதையும், பெரியோர்க்குக் கீழ்ப்படிந்து நடப்பதையும், குடும்ப வேலைகளைச் செய்வதையும் விரும்புவதில்லை. தங்கள் புருஷர்களுடன் மறைமுகமாகச் சல்லாபம் செய்யவேண்டியிருப்பதைப் பெரும் தண்டனையாகவும் தடையாகவும் நினைக்கின்றனர். அதற்காக அவ்வாண்மகன் தாய்தந்தையராதியரை விலக்கிவிடலாமா? அது அறமா? அல்லது இவர்கள் சுகவாழ்விற்குத்தான் நலமா? இதுபோற் பல உதாரணங்கள் நம் எதிரில் நடைபெறுகின்றன. கல்வி கேள்விகளாலோ இயற்கை வாய்ப்பினாலோ, நல்லறிவு படைத்தவர்களால் பெருந்தன்மை, பணிவு, இன்சொல், பொறுமை, கற்பு இவைகளை யணிகலன்களாக உடைய பெண்கள் எத்தனை பெயர்கள் நம் ஆரிய நாட்டில் வாழ்கின்றனர்.

இல்லான் முனிவுக்குப் பயந்து அறக் கடமைகளைச் செய்யமாட்டாதவர்களும் சிலர் உண்டாதலின் திருக்குறளாசிரியரும்

பெண்ணேவல் செய்தொழுகும் ஆண்மையின் நாணுடைப்
பெண்ணே பெருமை யுடைத்து

என்றிழித்துக் கூறினர்.

பேரறிவுடைப் பெண்டிரின் பெருமதியைப் பொருட்படுத்தவேண்டும். அவ்வாறு மதியாமல் கெடுதியுற்றவர்களும் உண்டு. உதாரணமாக,

"தாரை சலந்தரனூர் தையல் மண்டோதரியிக்
காரிகையார் இன்சொற் கருதாமல்—போரினிடை
ஆவியிழந்தார்கேள்வர் ஆசில் சுதாமாதன்
தேவிசொலாற் பெற்றான் திரு"

என்ற வெண்பா சிந்திக்கத்தக்கதாகும்.

வாலி மனைவி தாரை (பஞ்ச கன்னிகையர்களில்) ஒருத்தி. சுக்ரீவன் அரைகூவிப் போருக்கழைத்ததில் ஏதோ பின்பலம் இருக்கவேண்டும். போர்க்கோலங்கொள்ளாதே; சக்ரவர்த்தி திருமகன் சுக்கிரீவனுக்கு அபயம் அளித்து உடன் இருப்பதாகக் கேள்விப்படுகிறேன் என்று எவ்வளவோ தடுத்தும் கேளாது போர்செய்து விண்ணுலகெய்தினன்.

ஜலந்தராசுரனின் மனைவியாகிய பிருந்தையும், தசமுகன் மனைவியாகிய மண்டோதரி யென்னும் மயன் மகளும் பரதாரத்தை விடுத்து இராமனுக்கு அடிபணிந்து வாழ்வாயாக என்று எத்தனைமுறையோ தடுத்துரைத்தும் கேளாது அகங்காரத்தினால் முறையே சிவபெருமானுடைய சக்கரப் படையாலும், இராமபாணத்தாலும் இறந்தொழிந்தனர்.

கிருஷ்ணபரமாத்மாவின் சகபாடியான சுதாமா என்னும் பிராமண சிரேஷ்டர் கற்புடை மடந்தையின் சொற்படி நடந்து பரந்தாமனிடம் சென்று தன் வறுமை நோய் தீர்ந்து அஷ்ட ஐச்வரியமும் பெற்றுச் சிறந்தார். ஆதலினால் மூதாட்டியார் விறல் மந்திரி மதியுடையவள் பெண்ணெனப் பேசினர். பேதைமதியுடைய பெண்களின் தகுதியற்ற சொற்களைக் கேட்டு அதன்படி நடவாமல் இரு என்பதே தையல் சொற் கேளேல் என்னும் நீதியின் உட்கருத்தாகும். இங்ஙனம் சிந்தியாமல் சில ஆடவர் கற்பெண்டிர் சொல்லையும் கேட்பது தமக்கு இழிவு என எண்ணி அகம்பாவத்தினால் ஔவையாரின் தையல் சொற் கேளேல் என்னும் நீதித் தொடரின் உதாரணத்தை மேற்கோளாகக் காட்டுவதுமுண்டு. கூரிய மதிநலம் உடைய சில பெண்களுக்கு குறைாத விவேகமுள்ள புருடன் வாய்ப்பதும் உண்டாதலின் அத்தகைய இடங்களில் மேலே கூறிய உதாரணமும் எழும்.



# "மணிமேகலை" ஆராய்ச்சி

ஸ்ரீ R. V. இராமஸ்வாமி B. A., B. L. வக்கீல், சேலம்.


## 5. சரித்திரப் பகுதி.

### தொண்டைமான் இளந்திரையன்

சங்ககாலத்தில் பிரசித்திபெற்றுக் கஞ்சிக்கதிபதியாகிய இருந்த மன்னன் தொண்டைமான் இளந்திரையனின் பிறப்பு வரலாற்றோடு, 'மணிமேகலை'யில் கூறப்படும் பீலிவளையின் மைந்தனின் கதை, முற்றிலும் பொருத்தமாக உள்ளது ஆழ்ந்து நோக்கற்பாலது. அவ்விருவரும் ஒருவராக இருக்கலாம். இங்ஙனமாகக் கொள்ளுதற்குப் போதிய ஆதாரங்கள் சாசனங்களிலும் பிற பழந்தமிழ்நூற்களிலும் உள்ளனவென்று கற்றறிந்தோரும் கூறுவர். பத்துப்பாட்டில் நான்காம் பாட்டாகிய பெரும்பாணாற்றுப் படை, தொண்டைமான் இளந்திரையனைக் கடியலூர் உருத்திரங் கண்ணனார் பாடியது. அந்நூலில்,

"இருநிலங் கடந்த திருமறு மார்பின்
முந்நீர் வண்ணன் புறங்கடை யந்நீர்த்
திரைதரு மரபின் உரவோ னும்பல்
மலர்தலை யுலகத்து மன்னுயிர் காக்கும்
முரசு முழங்குதானை மூவருள்ளும்
இலங்கு நீர்ப்பரப்பின் வளைமீக் கூறும்
வலம்புரியன்ன வசைநீங்கு சிறப்பின்
அல்லது கடிந்த அறம்புரி செங்கோல்
பல்வேல் திரையன்." (29-37)

என வந்துள்ள அடிகள் இவ்விளந்திரையனைக் குறித்தலைக் காண்க.

அவ்வடிகளுக்கு, உரையாசிரியர் நச்சினார்க்கினியர், "அகன்ற இடத்தையுடைய உலகத்தில் நிலைபெற்ற உயிர்களைப் புரக்கும் முரசு முழங்குகின்ற நாற்படை யினையுடைய சேரசோழ பாண்டியரென்னும் மூவரிலும் விளங்குகின்ற நீரையுடைய கடலிடத்துப் பிறந்த சங்கில் மேலாக உலகங்கூறும் வலம்புரிச்சங்கை யொத்த குற்றம் நீங்கும் தலைமையினையும், மறத்தைப் போக்கின அறத்தை விரும்பின செங்கோலினையுமுடைய, பெரிய நிலத்தை யளந்த திருவாகிய மறுவை யணிந்த மார்பினையுடைய கடல்போலும் நிறத்தை யுடையவன் பின்னிடத்தோனாகிய சோழன் குடிப்பிறந்தோன்; அக்கடலின் திரை கொண்டு வந்து ஏறவிட்ட மரபாற் பல வேற்படையினையுடைய திரையனென்னும் பெயரை யுடையவன்" என்று பொருள் கூறிப் பின்னர்,

"திரைய" னென்ற பதத்திற்கு விசேடவுரையாக, "நாகப்பட்டினத்துச் சோழன் பிலத்துவாரத்தால் நாகலோகத்தே சென்று, நாககன்னியைப் புணர்ந்த காலத்து அவள், 'யான் பெற்ற புதல்வனை என்செய்வேன்' என்ற பொழுது, 'ஆதொண்டையை அடையாளமாகக் கட்டிக் கடலிலேவிட, அவன் வந்து கரையேறின் அவற்கு யான் அரசவுரிமையை யெய்துவித்து நாடாட்சி கொடுப்பல்' என்று அவன் கூற, அவளும் புதல்வனை அங்ஙனம் வரவிடத் திரைதருதலின், திரையன் என்று பெயர்பெற்ற கதைகூறினர்" என்றொரு கதையினைக் குறித்துள்ளனர்.

இளந்திரையனைக் குறித்த கதை முழுவதுமில்லாமையால் உரையாளரிக்கதையினைத் தாமே எழுதியுள்ளன ரென்பர். மகவொன்று பிறந்தால், அடையாளங்கட்டிக் கடலிலே இட்டுத் தன்னை அடையுமாறு அரசன் கூறியதற்குக் காரணமொன்றுங் கதை கூறினர் கூறவில்லை. ஒழுங்கற்ற முறையால் பிறந்த மகனைப் பயந்து அரசன் அங்ஙனம் கூறினனோ! அன்றி நாககன்னிகை மீண்டும் தன்னகருக்கு வாராளென்பதை அறிந்து, மகனையாகிலும் பெற்றிட இவ்வாறு இருவரு மொருமனப்பட்டுச் சூழ்ச்சி செய்து கொண்டனரோ, எதுவென்பது தெரியவில்லை. ஆயின் சாரணரால் பீலிவளையின் உண்மை வரலாற்றை அரசன் உணர்ந்ததாகக் கூறப்பட்டுள்ளது. நாகப்பட்டணம் சோழனென்றதால் நச்சினார்கினியர் யாரைக் குறித்துள்ளன ரென்று விளங்கவில்லை. பிலத்துவார வாயிலாக நாகலோகம் சென்றானென்பது பொருத்தமாகாதென்றும், நாககன்னிகையை ஜாவா நாட்டவளென்றும் கூறுவாரின் காரணங்களைக் காண்க.

## பீலிவளையின் பிள்ளை

கம்பளச்செட்டியின் கவிழ்ந்த கலத்தில் கடலில் மாய்ந்தானென்று கருதிக் கலங்கிய கட்டழகன், உயிரோடு பின்னர் அரசனிடம் கொணரப்பட்டனனென்றும், பீலிவளையோடு தான் முன்பு பேசி யிருந்தபடி, கொணர்ந்த குமரன் கைவளையலில் ஆதொண்டைக்கொடி யொன்றிருப்பது கண்டு சோழன், அவன் தனது மகனெனத் துணிந்து கொண்டானென்றும், இளம்பருவத்தில் திரையால் ஒதுக்கப்பட்டதால் 'இளந் திரைய'னென்றும், பீலிவளை தொண்டைக்கொடியோடு மனுப்பியதால் 'தொண்டைமானெ'ன்ற பதம் பெயருக்கு முன்னதாக அமைக்கபபட தொண்டைமான் இளந்திரையனென்ற பெயரைக் கொண்டனனென்றும்; அவனே பின்னர் காஞ்சிக் கதிபதியாயின னென்றும், மணிமேகலையில் கூறிய கதையையும் சேர்தது நோக்குமிடத்துத் தெரிய வருகின்றன. அவனாண்டு வந்த நாடுகளே தொண்டை மண்டலமெனப் படுமென்றும் கூறுவர்.

சாத்தனார் அரசனைப்பிள்ளையைத் தேடவிட்டதோடு நிறுத்தி மேலொன்றும் கூறாது போயினர். நச்சினார்க்கினியர் பெரும்பாணாற்றுப்படை உரையிலமைந்துள்ள,

"கங்குலு நண்பகலுந் துஞ்சா வியல்பிற்றாய்
மங்குல் சூழ்மார் கடலார்ப்பதூஉம்—வெஞ்சினவேல்

காண்பயந்த கண்ணிக் கடுமான் திரையனை
யான்பயந்தே னென்னுஞ் செருக்கு."

என்ற வெண்பா, தொண்டைமா னிளந்திரையன் கடலிற் தோன்றியவ னென்பதைக் கூறுகின்றது காண்க. பீலிவளையின் சரிதை சேறைக் கவிராஜ பிள்ளை செய்யுருலாவிலும் காணலாமென்பர்.

சரித்திர வாயிலாக நோக்குமிடத்துச் சோழமன்னர்கள் காஞ்சியைத் தலை நகராகக்கொண்டு ஆண்டுவந்த பல்லவர்களைத் தலைசாய்த்து, அவர்களது நாட்டைக் கைப்பற்றியபின்னர், சோழர்களின் பிரதிநிதிகளாகச் சிலர் காஞ்சியிலிருந்து நாடாண்டு வந்தனரென்பர். பல்லவ குலத்தினரே தொண்டைமானென்ற பெயர் தாங்கிய, சோழரின் கீழ்ப்பட்ட சிற்றரசர்களாக ஆண்டு வந்தனரென்பர்.

கடியலூர் உருத்திரங் கண்ணனாரென்பார் 'பட்டினப்பாலை'யைக் கரிகாலன்மேல் பாடிப் பல்லாயிரம் பொன்னைப் பரிசாகப் பெற்றனர். அப் புலவரே 'பெரும்பாணாற்றுப்படை'யை இளந்திரையன்மேல் பாடியுள்ளனர். பத்துப்பாட்டில் இளந்திரையனைக் குறித்திடும் பட்டினப்பாலை ஒன்பதாவதாகவும் வரிசை முறையில் அமைத்துக் கூறப்பட்டுள்ளது. இதனால், இளந்திரையன், கரிகாலனுக்கு முற்பட்டவனோ என்று சந்தேகித்தற்கு இடமுண்டு. அது எங்ஙனமாயினும், கரிகாலனும், இளந்திரையனும், அவர்களைப் பாடிய புலவர் உருத்திரங்கண்ணனாரும் சமகாலத்தவர்களாக இருக்க வேண்டுமென்று எண்ணவேண்டி யுள்ளது. சமகாலத்தவர்களாயின் இளந்திரையனைப் பீலிவளையின் மகனென்பது பொருந்தாத செய்தியாகும். அவ்விருவரையும் பாடிய புலவர், கரிகாலனை, அவனது அந்திக்காலத்திலும், இளந்திரையனை அவன் பின்னரும் பாடியிருத்தல்வேண்டுமென்றும், ஆற்றுப்படைகளை ஒருபாலாக முதற்கண்ணமைத்து ஒழுங்குபடுத்தும் எண்ணங்கொண்டே பத்துப்பாட்டைத் தொகுத்தோர், பாடப்பெற்றோரின் காலமுறையைக் கவனியாது அமைத்திருத்தல் வேண்டுமென்றும் கொள்ளுதலே ஏற்புடைத்தாகும். கால ஆராய்ச்சியாளர் விளக்கவேண்டிய விஷயங்களுள் இது வொன்று.

புறநானூற்றில் உள்ள பாட்டுக்களால் இளந்திரைய னென்பான், அதிகமான் நெடுமானஞ்சியின் காலத்தவனென்பதும், காஞ்சிக்கு அதிபதியாக இருந்தனனென்பதும், ஒளவை இவன் காலத்திலிருந்த புலவரு ளொருவரென்பதும் விளங்கும். அதிகமானஞ்சியை எதிர்த்துப் போருக்குச் செல்லும் நோக்கத்தோடு இளந்திரையன் இருக்கையில் ஒளவையார் அவனிடம் தூதாகச் சென்று பழித்ததுபோலத் தனது மன்னனைப்புகழ்ந்து சொற்பல கூறி, அவனை அச்சுறுத்திப் போருக்கு எழாவாறு செய்தனரென்பது புறப்பாட்டால் விளங்கும். (95)

இவனது பெயர், இளந்திரையன், திரையன், திரையல், தொண்டைமான் இளந்திரையன் என்று பலவாறாக நூற்களில் வழங்கப்படுகின்றன. "வில்லும் வேலும்" என்னும் தொல்காப்பிய மரபியல் சூத்திரஉரையில் (சூ. 83), பேராசிரியர் "மன்பெறு மரபினேனோரெனப்படுவார், அரசு பெறு மரபிற் குறுநிலமன்னரெனக் கொள்க; அவை பெரும்பாணாற்றுள்ளும் பிற

வற்றுள்ளுங் காணப்படும்" என்று குறித்துள்ளாராகலின், இத் தொண்டைமான் இளந்திரையன், ஒரு குறுநில மன்னனாகவே கருதப்பட்டனனென்பது பெறப்படும். இக்கொள்கை இவனைச் சோழமன்னரின் பிரதிநிதியாகக் காஞ்சியை ஆண்டுவந்தவனெனக் கூறும் செய்தியை வலியுறுத்தல் காண்க.

பரிசில் பெற்றானொருவன், அது பெறக்கருதி வந்திடும் பாணனொருவனைத் தொண்டைமான் இளந்திரையனிடத்தே ஆற்றுப் படுத்தியதாகப் பாடப்பட்டுள்ள பெரும்பாணாற்றுப் படையில் இளந்திரையனது வீரச்செயல்களும், கொடையின் சிறப்பும் விரிவாகக் கூறப்பட்டுள்ளன. இவ்விளந்திரையன் தமிழ்மொழியில் பாடும் திறமை வாய்ந்திருந்தனனென்பதும் தமிழ்ப்புலவர்களை ஆதரித்து வந்தனனென்பதும் அவனியற்றியதாக உள்ள, புறப்பாட்டாலும் (185) நற்றிணையிலுள்ள மூன்று பாடல்களாலும் (94, 99, 106) விளங்குகின்றன. இவற்றோடன்றி, நன்னூல் மயிலைநாதருரையாலும், இறையனாரகப் பொருளுரையாலும், "இளந்திரைய" மென்ற நூலொன்று இவனால் செய்விக்கப்பெற்றதென்பது பெறப்படுகின்றது. 'திரையனாற் செய்யப்பட்டது திரையனது ஊரெ'ன்று மயிலைநா தருரையில் பொருள் செய்திருத்தலைக் காண்க.

அகநானூற்றில், காட்டூர் கிழார்மகனார் கண்ணனாரென்பவரும், நக்கீரரும், திரையனென்பா னொருவனைப் பாடியுள்ளனர். நக்கீரர் திரையனது ஊர் பவத்திரி யென்றும், கண்ணனார் இவனது மலை வேங்கடமென்றும் கூறியுள்ளனர். அகத்திற் குறிக்கப்பட்டுள்ள திரையனும் தொண்டைமான் இளந்திரையனும் ஒருவனோ வேறோவென்பது தெரியவில்லை. கண்ணனார்,

"வெல்வேற் றிரையன் வேங்கட நெடுவரை."

யென இளந்திரையனது வேங்கடமலையைப் புகழ்ந்துள்ளார். (அகம்58.)

மீட்டும்,

"வினைநவில் யானை விறற்போர்த் தொண்டைய
ரினமழை தவழுமேற்றரு நெடுங்கோட்
டோங்கு வெள்ளருவி வேங்கடத்தும்பர்."

என (அகம். 213) வேங்கடம் குறிக்கப்படலும் காண்க. தொண்டைமானின் வழியினர் பெருமை,

"ஞாயிற் றொளியான் மதிநிழற்றே தொண்டையர்
கோவீற்றிருந்த குடை."

எனவும்,

"சோழனுறந்தைக் கரும்பினிது தொண்டைமான்
கச்சியுட் காக்கை கரிது."

எனவும் வந்துள்ள பழைய மேற்கோள் செய்யுளடிகள் விளக்குதல் நோக்குக.

(தொடரும்.)

---

# அறநெறி பிறழா அறிஞர்

(R. இராமலிங்க ரெட்டி.)

எண்ணரிய பிறவிதனி மானிடப்பிறவியே யாதினும் அரிது என்பது ஆன்றோர் துணிபு. அத்தகைய உயர்பிறவியை யெய்தின மானிடன் அறவழியை உணர்ந்து அவ்வழியே நடந்தொழுகல் வேண்டும். அவ்வமயம்தான் அவன் மானிட உடலுக்குகந்த பணியை ஆற்றினவனாகுவன். அவனுள்தான் ஆறுவதறிவாம் மெய்யறிவு மிளிர்ந்தொளிரும்.

அறநெறி ஒருவன் பிறழ்வனாயின், அவன் மானிட உடலின் பலனை எய்தினவனாகான்.

அங்ஙனம் அறவழியே உயர்வழியென உணர்ந்து அவ்வழியே நடந்தொழுகும் அறிஞருக்கு கடவுள் எப்பொழுதும் துணை புரிவர். அறவழி பின்பற்றி நடக்குங்கால், அவர்களுக்கு எவ்வித ஆபத்து நிலை ஏற்படினும் அருட்கடவுள் அவர்கட்கு ஏற்ற உதவி புரிவர். துணை புரியாது ஆண்டவன் சோதிப்பினும், அந்நிலையிலும் அறவழி பின்பற்றுவோன் அயர்வுறமாட்டான். அத்தகைய அறிஞரிடம்தான் 'தனக்கென வாழா பிறர்க்குரியாளர்' என்னும் உயர்குணம் தன் இருப்பிடமாகக் கொள்ளும். அம்மஹா புருஷர்கள் பிறருக்காக, பிறர் நன்மைக்காக, பிறர் அறவழியை பின்பற்றச் செய்விப்பதே தங்கள் உயிரியலுக்குரிய செயலெனக் கொள்வர்.

அவ்வுயரிய அறத்தோரைத் தாங்கி நிற்கும் பாக்கியமுடைய பூமிகளில் நம் பரதகண்டமே முதன்மை பெற்றது. இப்பரதகண்டத்தில்தான் அத்தகைய மஹான்கள் அடிக்கடி அவதரித்தருளினர். ஈண்டு அவர்களில் சிலரது வரலாற்றை ஆராய்ந்து, எவ்வண்ணம் அறநெறியைப் பின்பற்றுவது நியாயமெனக் காட்டிச் சென்றனர் என ஆராய்வாம்.

## 1. பிரகலாதன்

இரணியன் என்னும் அசுர அரசன் தான் பெற்ற வரச்செருக்கினால் யாவரும் 'இரணியாய நம' என்று தன் பெயரையே உரைத்தல் வேண்டுமெனக் கடும் உத்திர விட்டிருந்தனன். அவனது கொடுங்கோலுக்கு அஞ்சி எல்லோரும் தேவர்கள்கூட அக்கொடிய அரக்கனின் பெயரையே உரைத்தனர்.

அக்கொடிய இரணியனுக்குப் பிரகலாதனென்னும் ஓர் புதல்வனிருந்தனன். தக்கவயது வந்ததும் இரணியன் பிரகலாதனை கல்விபயில பள்ளிக்கனுப்பினன். ஆசிரியன், பிரகலாதனை, ஆரம்பத்தில் 'இரணியயாய நம,' என்

றுரைக்கும்படி சொன்னுர். பிரகலாதன் அதைச் சொல்ல மறுத்துவிட்டனன். கல்வி பயிலத் தொடங்கியபோது முதன்முதலில் பகவந்நாமத்தைச் சொல்வதே தர்ம நியாயமாக விருக்க, அறநூலில் சொல்லியதற்கு மாருகச் சொல்ல எங்ஙனம் அறச்செல்வன் மனது இசையும்? அதிலும் திமிர்கொண்ட அரக்கனின் பெயரைச் சொல்ல அறவழி நிற்கும் பிரகலாதனின் மனது ஒப்புமா? எனவே பிரகலாதன் 'ஹரிஓம் நாராயணுய நம:' என்று பரமனின் பெயரையே பகர்ந்தன்ன. ஆசிரியன் பன்முறை வலியுறுத்தியும் பயன்படவில்லை.

பிரகலாதனின் உறுதிக்கொள்கையைக் கேள்வியுற்ற அவன் தந்தையான கொடிய அரக்கன் பிரகலாதனை வரவழைத்து புதல்வனென்று மிரக்கமுமின்றி தன் கொள்கையை நிறைவேற்ற ஒரு விதத்திலா பலவிதத்திலும்—நினைக்கில் மனம் குழப்பமுறுகிறது—துன்புறுத்தினன். எதற்கும் பிரகலாதன் அஞ்சவுமில்லை. தான் கொண்ட உறுதிக் கொள்கையிலேயே பகவந்நாமத்தைச் சொல்வதிலேயே நிலைத்திருந்தனன். அத்தகைய துன்பங்கள், அறவழி நிற்கும் அறச் செல்வனுக்கு என்ன இடையூறு விளைத்தன? இத்தகைய ஆபத்துகளினின்றும் அவனைக் காப்பாற்றியது யார்? அறச் சக்தியே, கடவுட் சக்தியே, ஆத்மசக்தியே அவனைக் காப்பாற்றியது.

முடிவில் கடவுளே நரசிம்மமூர்த்தி உருகொண்டு தூணினின்றும் வெளிப்பட்டு மறவழியைக் கைக்கொண்ட அரக்கனைக் கொன்று அறவழியே உயிர் வழியெனக்கொண்ட பிரகலாதனை ரக்ஷித்தார்.

## 2. அரிச்சந்திரன்

அரிச்சந்திரன் பொய் சொல்லாததற்கு எவ்வளவு இன்னல்கட் குட்பட்டான்? அர்நிலைமையிலும் அறிஞன் சத்தியநெறி தவறினுை? தன் இராஜ்யத்தை இழந்தனன். அன்பான தன் மனைவியை இழந்தனன். அந்தோ! தன் உயிர்க்குயிரான மைந்தனையு மல்லவோ இழந்தனன். அத்துன்புறு நிலையிலும் அறிஞன் அறநெறிக்கு மாறாகப் பொய்சொல்ல மறுத்தனன். முடிவாக, அறநெறி பின்பற்றியதா லல்லவோ அரிச்சந்திரனுக்கு எவ்வளவு கஷ்டம் விளைந்ததோ அவ்வளவு மின்பமாக முடிந்தது.

## 3. புத்தர்

உண்மையைக் காண்பதற்கும், உலக துக்கத்தைப் போக்கடிப்பதற்கும் தன் அரச வாழ்வையும் துறந்தனர் புத்தர். இளமையிலேயே இவர் குதிரைப்பந்தயம் விளையாடும் தருணத்தில், தம் குதிரை அதி விரைவுடன் ஓடி, பந்தயம் ஜெயிக்கும் தருணத்திலும்கூட தம் குதிரை களைப்படைந்தாலும் அல்லது இரைக்கக் கண்டாலும் உடனே அக்குதிரையை சவாரி செய்யாமல் நிறுத்தி விடுவர். ஆ! என்னே இவ்விளம் பருவத்திலே இவர்கண் குடிகொண்டிருந்த அறத்தின் திறம்!

மற்ருெரு சமயம் ஒரு பூஞ்சோலையில் புத்தர் உலாவிக்கொண்டிருக்கும்போது, ஆகாயத்தில் அன்னப்பறவைகள் பல இமயமலையை நோக்கிப் பறந்து சென்றன. அக்காட்சியைக்கண்டு களித்தனர் புத்தர். அவ்வமயம் தேவதத்தனென்போன் தன் வில் வளைத்து ஓர் அன்னத்தின்மேல் குறிவைத்து அம்பெய்தனன். உடனே தைத்த அம்புடனுள்ள அன்னப்பறவை கதறிக்

# வீரசைவ சமயத்தின் தற்கால நிலையும் சீர்திருத்த முறையும்.

(சிதம்பரம்-K. V. சிவசுப்ரமணியன், B. A.)

மாண்புடைத்தாய மாகடல் சூழ்ந்த மகிதலத்து மல்கிக்கிடக்கும் மதங்களுள் வீரசைவம் என்பதுமொன்றும் மன்றலங்கா வயின் நின்ற பல் தருக்களின் தலைமரீஇய அன்றலர் மலர்கள்போலும் இங்குறும் பலசிறப்பட்ட மதங்கள். வீரசைவசமயமாவது யாது? அதன் கோட்பாடுகள் யாவை? என்பனவற்றை முதற்கண் கூறிப் பின்னர் அச்சமயம் இந்நாளுற்றிருக்கு மூறுபாட்டினையும், அவற்றைப் போக்கும் வழியையும் ஒருவாறு ஆராய்வதே இக் கட்டுரையின் நோக்கமாம்.

ஆசாரியனால் பூசிக்கப்பட்டுத் தந்ததொரு இட்டலிங்கத்தை அங்கை (ஹஸ்தம்) என்னும் ஆசனத்திலிருத்தி, அவ்விலிங்கத்திற் பதிந்து ஒன்றிய மனமுள்ளவனாய் வழிபாடியற்றுபவனே வீரசைவ னெனப்படுவான். அஃதாவது அட்டாவரணம், தபம், வேள்வியற்ற சிவ வழிபாடு என்பனவே வீரசைவன் பின்பற்றற் குரியனவாம். ஆயினுமிவற்றுள் அட்டாவரணமே சிறப்பாகக் கொள்ளப்படும். அட்டாவரணமாவது குரு, லிங்கம், சங்கமம், திருநீறு, உருத்திராக்கம், பஞ்சாக்கரம், தீர்த்தம், பிரசாதம் என எட்டாம். இந் நியமங்கள்யாவும் வாதுளம், காமிகம், வீரமாதி ஆகமங்களிலும், தைத்திரிய மாதி உபநிடதங்களிலும், வேதங்களின் உத்தர பாகங்களிலும் கூறப்பட்டிருத்தலான் வீரசைவ சமயம் வேதாகம விதிகட்குட்பட்ட சமயமென்பது

---

கொண்டே அரசகுமாரராகிய புத்தரது அடியில் வீழ்ந்தது. புத்தர் அப்பக்ஷியின் நிலையை நோக்கியவளவில் அவர் கண்களில் நீர்தாரை தாரையாகப் பெருகிறது. உடனே புத்தர் அப்பக்ஷிக்கு துன்பம் செய்த தேவதத்தனை கடிந்தனர். அவ்வன்னத்தின்மேல் பொத்திபிருக்கும் அம்பை எடுத்து, அக்காயத்தை பல மூலிகைகளைக் கொண்டு குணப்படுத்தி, அதற்கு பாலும் பழமும் பரிந்தூட்டி அவ்வன்னத்தை மறுபடியும் தன் சுற்றத்தாரொடு களிப்புற்றிருக்க விட்டுவிட்டனர். இன்னும் இத்தகைய அருட்செயல்கள் பல மலிந்தன இவர்தம் வாழ்வில்.

'அஹிம்ஸா பரமோதர்ம:' என்னும் அறமொழிப்படி நடந்ததற்கு வேறோர் சான்றும் வேண்டுமோ?

இன்னு மிவ்வகையறிஞர் நம் பாரதநாட்டில் பலரிருந்தனர்; இருக்கின்றனர். அவர்களைப்பற்றி ஈண்டு கூறப்புகின் ஒரு பெரிய புஸ்தகமும் போதாது. ஆதலால் இதோடு இக் கட்டுரையை முடித்துக் கொள்கிறேன்.

போதரும். R. E. எந்தோவன் என்னும் மேனாட்டாசிரியர் "The Lingayats are Dravidians i. e., to say they belong to a stock that was established in India even before the arrival of the so-called Aryans" என்று வீரசைவ சமயத்தின் காலத்தை Encyclopedia of Religion and Ethics என்னும் நூலுள் கூறியுள்ளார். பண்டைக்கால மக்களிற் பெரும்பாலோர் இச்சமய நெறியைப் பின்பற்றி பெரிதுஞ்சழிபேரின்பத்திற் றிளைத்திருந்தன ரென்பதை அருந்தமிழ் நூல்கள் பலவற்றா லறிகின்றோம். (வீரசைவ சமயத்தின் தொன்மையைப்பற்றி அறிய விரும்புவோர் வில்சன், வில்லியம்ஸ், கிட்டல், மூர், Dr. பர்நார்டு முதலியோர் ஆங்கிலத்தி லெழுதியவற்றினின்று முணர்க.) பரசிவத்தின் ஐந்து முகங்களினின்றும் ஐந்து ஆச்சாரியர்கள் தோன்றி வீர சைவ சித்தாந்தத்தை உலகுய்ய உபதேசித்தருளினர் என உபநிடத ஆகம வாக்கியங்களாலறிகின்றோம். இரேவணாராத்யர், மருளாராத்யர், பண்டிதா ராத்யர், ஏகோராமா ராத்யர், விஸ்வா ராத்யர் என்ற ஐந்து ஆச்சாரியர்களும் அவதரித்து முறையே ரம்பாபுரி, உச்சயினி, ஸ்ரீசைலம், பதரிகேதாரம் (இமய மலையில்) என்னு மிடங்களில் பெரிய பீடங்களை நிறுவினர். இமமடங்கள் நிறுவப்பெற்ற காலம் ஆராய்ச்சிக் கெட்டாதது. இவ் வாச்சாரியர்களே வெவ்வேறு யுகங்களிலும் வெவ்வேறு பெயருடன் அவதரித்தன ரென்ப. இனி சுருங்கக்கூறின் பண்டைக்காலந்தொட்டு இச்சமயம் பனி மலைச்சாரல் முதல் தென்குமரிவரை பரந்து கீர்த்தி வாய்ந்திருந்ததெனக் கூறலாம். சுமார் ஐயாயிரம் ஆண்டுகட்கு முற்பட்ட (யுதிட்டிர வாண்டு 89) சிலாசாசனங்கள் பல, வீரசைவ மடங்களிற் காணப்படுகின்றன வென்றால் இச் சமயத்தின் தொன்மையை வேறு சான்று கொண்டு விளக்கவும் வேண்டுமோ? வட இந்தியாவில் பதரிகேதார வீரசைவ மடத்திற்குக் காஷ்மீர தேசமன்னனும், உதயபுரி மஹாராணாவும் இன்னும் சீடர்களாய் இருக்கின்றன ரென்றால் இச்சமயத்தின் பெருமையைப் பேசவும் வேண்டுமோ? மாட்சிமிக்க ஐந்தாம் ஜார்ஜு மன்னரும் இம் மடாதிபதிக்கு வேண்டியமட்டும் துப்பாக்கிகளும் கத்திகளும் வைத்துக் கொள்ளுமாறு உத்தரவளித்திருக்கிறார்.

இம் மதத்திற்குரிய நூல்கள்:—வீரசைவ சித்தாந்தம் முற்றும் ஆரிய மொழியிலும் கன்னட மொழியிலும் பல நூற்களிற் கூறப்படுகின்றது. பண்டை நாட்டொடங்கி இச்சமயம் வட நாட்டின்கண் விளங்கினமையான் இச் சமயத்திற்குரிய நூல்கள் யாவும் அந்நாட்டு மொழிகளிலேயே இயற்றப்பட்டன. எஞ்சியுள்ள நூல்களில் காமிகாகமம், வாதுளாகமம், வீராகமம். தைத்திரியோபநிடதம், பிரம சூத்திரம், சங்கரசம்ஹிதை, அதிகரண பாடியம், ஸ்ரீகர பாடியம், தாருக பாடியம், பண்டித பாடியம், காசிக் காண்டம், வீரசைவ தர்மசிரோமணி, இலிங்கபுராணம், பசவ புராணம், சித்தாந்த சிகாமணி, இரேணுக பாடியம் முதலியவை சிலவாம். இவையாவும் இச் சமயத்திற்கு முதனூல்களாம். இவையேயன்றித் தமிழ்நாட்டு வீரசைவர்களுக் குரிய தமிழ் நூல்கள் பலவுள. அவை (1) வசவ புராணம் (2) சித்தாந்த சிகாமணி (3) பிரபுலிங்க லீலை (4) வீரசிங்காதன புராணம், (5) சிவப்பிரகாசம் (6) சிவஞான பாலைய சுவாமிகள் நெஞ்சு விடுதூது (7) சிவஞான பாலைய சுவாமிகள் தாலாட்டு (8) சிவஞான பாலைய சுவாமிகள் கலம்பகம் (9) கைத்தல வெண்பா (10) இட்டலிங்க அகவல் (11) இட்டலிங்க அபிடேகமாலை, (12) கைத்தல

மாலை (13) நெடுங்கழி நெடில் (14) குறுங்கழி நெடில் (15) நிரஞ்சன மாலை (16) திருமயிலம் இரட்டைமணிமாலை முதலியனவைகளாம். இந் நாள்வரை இவைகளிற் பல கிடைத்தில. சென்ற சில ஆண்டுகளாக ஞான ராசதானி எனப்படும் பொம்மபுரம் சிவ ஞானபாலைய சுவாமிகளின் நன் முயற்சியால் சிவப்பிரகாச சுவாமிகளின் சிறு நூல்கள் அச்சிட்டு வெளியிடப்பட்டு வீரசைவர்களிடையே உலாவி வருகின்றன. மற்றும் வழி நூல்களாகிய சித்தாந்த சிகாமணியையும் பசவ புராணத்தையும் வெளியிட்ட தனிப் பெருமையும், வீரசைவ விளக்க வினாவிடை வீராசாரக் கட்டளை முதலிய பலசார்பு நூல்களை யியற்றிய பெருமையும் சேலம், செவ்வாய்ப் பேட்டை ராகி செட்டியாரவர்களுக்கே யுரியது. இப்பெரியார் தம் சமயத்திற் கியற்றும் தொண்டுபெரிதும் போற்றற்பாலது. இவர் போன்ற பெரியார் பலர்தோன்றி நாட்டிற்கு நலம் புரிவாராக.

வீரசைவ சமயத்தின் தற்கால நிலை:—இந் நாளில் வீரசைவர்கள் பனி மலைச்சாரல் முதல் தென்குமரி வரையில் எங்கணும் பரவியுள்ளனர். நேபாளம் முதல் பம்பாய் வரையிலும், மத்திய நாடுகளிலும் வீரசைவன் அல்லது லிங்காயிதன் எனவும் ஆந்திர நாட்டில் வீரசைவன் அல்லது சீலவந்தன் எனவும் தென்றமிழ் நாட்டில் வீரசைவன் அல்லது சிவாசாரன் அல்லது சன்னடியன் எனவும் பல்வேறு பெயர்களால் வழங்கப்படுகின்றனர். இப்போது வீரசைவர்கள் மைசூர், ஐதராபாத்து ராச்சியங்களில் தான் அதிகமாய் வசிக்கின்றனர். 1911-ம் ஆண்டு சென்ஸஸ் படிக்கு இந்தியா முழுவதிலும் 2976293 லிங்காயுதர்களும், சென்னை ராஜதானியில்மட்டும் 134592 லிங்காயுதர்களும் இருந்ததாகத் தெரிகிறது. கடந்த 1931-ம் ஆண்டு ஜன சங்கியைக் கணக்குப்படி இந்தியா முழுவதிலும் 991218 ஆண்களும் 966306 பெண்களும், மைசூர் ராச்சியத்தில் மட்டும் 390,652 ஆண்களும், 380150 பெண்களும் வீரசைவர்களெனத் தெரிகிறது. இவ்வளவு மக்கள் நிறைந்த வீரசைவ சமயத்தின் நிலைமை எவ்வாறுளது? இது வடநாட்டில் ஏனைய மதங்களைப்போலவே சிறப்புற்று விளங்குகிறது. எனினும் இச்சமயம் தமிழ் நாட்டில் எந் நிலையிலிருக்கிறது என்று நோக்குவதே இக் கட்டுரையின் சிறந்த நோக்கமாம். தமிழ் நாட்டில் வீரசைவ சமயம் சீர் குலைந்திருப்பதுபோல் வேறெம் மதமும் இராதென்றே துணிந்து கூறலாம். பல மூடக் கொள்கைகளிடையே வீரசைவர்கள் அகப்பட்டுக்கொண்டு அல்லற்படுகின்றனர். ஒவ்வொருவரும் தன் னலங்கருதித் தானெங்ஙனமேனும் பொருளீட்டிப் பெருமையுற்றால்போதும்; ஏனையவர் எப்படிப்போயினும் எமக்கென் என்று குறுகிய நோக்கங்கொண்டு சமய விருத்தியைப்பற்றி ஒரு சிறிதும் கனவிலாயினும் நினைப்பதில்லை. சமய விருத்தியைக் கருதா தொழியினுமொழிக, தாமேயாயினும் வீரசைவ நூல்களைக் கற்று அதன்படி ஒழுகுகின்றனரா? அதுவுமின்று. ஒரு சிலரே பெரும் வைதிகர்களாய் கிராமங்களின் மூலை முடக்குகளில் உலகப்போக்குத் தெரியாது தாமே பெரியவரென்று இறுமாப்புற்று வதிகின்றனர். இக்குறைகளை யன்றித் தமிழ் வீரசைவர்கள் இளங்காட்டா ரெனவும், பாலைய மடத்தாரெனவும், குகை நமசிவாய ராதீனத்தாரெனவும், சாரங்கதேவ மடத்தா ரெனவும், ஜெயங்கொண்டத்தா ரெனவும், வேலூரா ரெனவும் பல பிரிவுகளைக் கற்பித்துப் பிரிந்து பிரிந்து நவக்கிரகங்கள்போல் வாழ்கின்றனர். ஆ! ஆ! ஊருக்கொரு பிரிவினரா? ஒரு ஊரில் இருபிரிவினரா? அம்மம்ம! என்ன

கொடுமை! வீரசைவ மக்களிடையே மலிந்து கிடக்கும் அறிவின்மையாலன்றோ சமய உணர்ச்சியில் இத்துணைத் திரிபுகளேற்படலாயின? ஒருவருக்கொருவர் உயர்ந்தோரெனவும் தாழ்ந்தோரெனவும் குறைகூறி உண்டியருந்தல், மணவினை முடித்தல் முதலியன கூடாதென்றும் பிரிந்து பிரிந்து வாழ்கின்றனர். பல கலைகளும் முற்போக்கிலிருக்கும் இவ் விருபதாம் நூற்றாண்டிலே, எம்மதமும் சம்மதமே எனுங் கொள்கை சிறிது சிறிதாக வேரூன்றி வரும் இவ் விருபதாம் நூற்றாண்டிலே, தென்னாட்டு வீரசைவர்கள் மாத்திரம் பண்டைக்காலத்துக் கொள்கைளைப் பற்றுக் கோடாகக்கொண்டு, பிறந்தழிஇருந்து போகுழி போகவறியாது 10-ம் நூற்றாண்டு மக்களைப்போல் அறிவிலும் கல்வியிலும், நாகரிகத்திலும் பிற்பட்டு நிற்கின்றனர். அரசியற்றிட்டங்களுக் கேற்பவும், மக்களின் சமூகவாழ்விற் கேற்பவும் காலமாறுபாட்டிற் கேற்பவும் நடையுடை பாவனைகளை மாற்றிக்கொள்ளாது குன்றமுட்டிய குரீஇப் போலிடருற்றுச் செய்வகையறியாது பொருளீட்டும் விதமறியாது வறுமை என்னும் பிணிவாய்ப்பட்டு வருத்த முறுகின்றனர். ஆகலின் இனியாகிலும் வீரசைவப் பெரியார்கள் கொண்டிருக்கும் மூடக் கொள்கைகளை அறவே ஒழிப்பார்களாக. மேனாட்டு உடையணிதல் கூடாதெனவும் தலைமயிரை க்ராப் செய்து கொள்ளக்கூடாதெனவும், கப்பலேறி அன்னியநாடு செல்லக் கூடாதெனவும் கூறுகின்ற வீரசைவப் பெரியார்களுக்கு அடியேன் கூறுவதொன்றுண்டு. மேனாட்டு நாகரிகத்தைப் பின்பற்றினால் வீரசைவ சமயத்திற்கு உண்டாகும் இழுக்கு ஒரு சிறிதுமில்லை. திரைகடலோடியுந் திரவியந்தேடு என்ற தமிழ் மூதாட்டியின் நலம்பொலி வாக்கிற்கிணங்க, அன்னிய நாட்டிற்குச் செல்வதால் பெரிய ஊதியம் கிடைக்குமேயெனின் கடற் பிரயாணஞ் செய்வதால் வரும் இழுக்கென்ன? எந்த நாகரிகத்தைப் பின்பற்றினுமென்? இட்டலிங்கத்தை எங்கிருப்பினும் இடைவிடாது பூசிக்கின்யாது நீங்குளது? மேனாட்டு நாகரிக உடையால் இட்டலிங்கவழிபாட்டிற்கு இடையூறேற்படுகின்றது என்னும் பெரியார்களின் கூற்று திண்ணைக்குத் தேள் கொட்ட மிடாவிற்கு நெறிகேறிய கதைபோலாம். மேனாட்டு நாகரிக வீரசைவர்கள்தானா மதத்திற்குப் புறம்பான செயல்களைச் செய்கின்றனர்? அந் நாகரிகமில்லார் அச் செயல்களைச் செய்யவில்லையா? எனவே, நாகரிகத்திற்கும் சமயத்திற்கும் ஒரு சம்பந்தமுமில்லை என்பது வெளிப்படை. வடநாட்டு வீரசைவர்கள் பிறநாடு சென்று கல்விகற்றுத் திரும்பிவந்து பெரிய உத்தியோகங்களை வகித்து தம் ஆசாரத்தில் சிறிதும் குறையாது புகழுடன் விளங்கவில்லையா? கிருஷ்ணபாய் என்னும் வடநாட்டு வீரசைவ மாதுசிரோமணி இங்கிலாந்துசென்று மருத்துவ நூல்பயின்று M. B. B. S. பட்டம் பெற்று மீண்டும் தாய்நாடுற்று மருத்துவத்தொழிலை நடாத்தி ஆசாரத்திற் குன்றாது வாழ்கின்றனர். இதுபோன்ற உதாரணம் எத்துணைவேண்டும்? ஒன்றல்ல, பலவுண்டு. மற்றும் அந்தணர்கள் வேதமோதல், சமஸ்தான வித்துவானாயிருத்தல் முதலிய பண்டைக்கால தொழின் முறைகளை விடுத்து ஆங்கிலம்பயின்று ஆனாப் பெருமையுடன் விளங்குகின்றனர். அதுபோல், நம் சமயத்தினருள் பட்டம் பெறுதற்குரிய ஆங்கிலக் கல்வியினைக் கற்றவர் ஒருவ ரிருவர்கூட இல்லையென்றே நினைக்கிறேன். ஆதிதிராவிடர், மயிர் வினைஞர், ஏகாலியர் முதலிய தாழ்த்தப்பட்ட வகுப்பினரும் கல்விகற்று பட்டம்பெற்று மகாநாடுகள் கூட்டி தத்தம் முன்னேற்றத்திற்குப் பாடு படுகின்றனரென்றால் வீரசைவ மதம் பெரும் பள்ளத்துள் கிடக்கின்றமை புலனாதும். வீரசைவ மக்களிடை

யே பலரிடம் ஆங்கிலக்கல்வி கற்றற்குப் போதிய பொருளில்லை. பொருளில்லாத தென்னையா வெனின், பரந்த நோக்கமும் உலகியலறிவும் முயற்சியும் இன்மையினாலேயே என்க. திங்களொன்றுக்குப் பத்து ரூபாயாக உதவிச் சம்பளமளித்துப் படிப்பித்துத் தமிழ் வித்துவானுக்கும் கழகங்கள் நிறைந்துள்ள இக்காலத்தில், எத்தனை வீரசைவமாணவர்கள் பயிலுகின்றனர். அதிகமாகப் போனால் ஐவருக்கு மேலிரார். என்னே வீரசைவ மக்களின் அறியாமை! இங்ஙனம் தமிழ்கற்றுப் பண்டிதர்களாய்க்கூட வரவியலாது குறைந்த சம்பளத்தில் ஆரம்ப ஆசிரியர்களாய் இருந்து துன்புற்றுக் காலங்கழிப்பது அவர் தம் அறியாமையாலும் முயற்சியின்மையாலுமே. வீரசைவப் பெரியார்கள் நாடோறும் செய்தித்தாள்களைப் படித்தறிதல்வேண்டும். அப்போதுதான் அவர்களுக்குத் தம் மக்களைப் படிப்பிக்க வேண்டுமென்னும் ஆர்வமேற்படும். ஒரு சிலருக்கு அத்தகைய ஆர்வமும் போதிய பொருளும் இருப்பினும், உண்டிவசதியின்மையால் படிப்பிக்க வியலாது தத்தளிக்கின்றனர். கல்லூரி இருக்குமிடத்தில் ஜாதியார் இரார். ஜாதியார் இருக்குமிடத்தில் கல்லூரி இராது. அங்ஙனமிருப்பினும் அவர்களுக்குள் நீ வேறு நான் வேறு என்ற வேற்றுமையிருக்கிறது. ஒருவர் வீட்டில் மற்றவர் உணவருந்துவதில்லை. இத்தகைய பிடிவாதக் கொள்கையால் பெருநஷ்டமடைகின்றனர். இங்ஙனம் கடந்த 20 நூற்றாண்டுகளாக உண்டி முதலியவற்றில் வேறாகப் பிரிந்து பிரிந்திருந்தமையான் வீரசைவர்களுற்ற பெருமையும் இலாபமுந்தா னென்னை? யானறிந்தமட்டும் ஒரு சிறிதுமின்று. பசவ புராணத்தின் கண் கூறப்பட்டுள்ள வரலாறுகளில், வணிகமல்லையார் என்பார் வைசியர்; காட்டக் கோட்டையர் ஆயர்குலத்தவர்; கலிய நாயனா ரென்பவர் இலிங்கதாரண மற்ற, பவி. இவர்களெல்லாம் வீரசைவர்களாக ஆக்கப்பட்டு சைவசமய தீபகங்களாய் விளங்கவில்லையா? இவற்றினை யறியாமலன்றோ வீரசைவர்கள் நீ வேறு நான் வேறு என்று விதண்டாவாதம் பேசுகின்றனர். இப் பெரியார்கள் பசவ புராணம் சித்தாந்த சிகாமணி முதலிய சமயநூல்களை ஓய்வு நேரங்களிற் கற்றறிந்து மனதிற்படிந்து கிடக்கும் வேற்றுமை இருளைக் கல்வி என்னும் விளக்குகொண்டு நீக்கி வீரசைவ சித்தாந்த மெய்ப்பொருளை ஆராக்காதலுடன் அறிந்து அதன்படி நடக்க விரும்புகிறேன். இவ் வேற்றுமைகளை யறவே யொழித்து வீரசைவரென்றால் ஒரு சமயத்தினரே எனக் கூறும்படி ஒற்றுமையாக்கும் வலிமை திருவண்ணாமலை, பொம்மபுரம், இறைக்குடி முதலிய விடங்களிலுள்ள மடாதிபதிகளுக்குத்தான் உண்டு. ஆகலின் அவர்கள் இந்நாள்காறும் உறங்கியதுபோல் இனியும் இராது விழித்தெழுந்து ஏனைய சமயிகளைப் பார்த்தாயினும் நம் சமயம் முன்னேற்ற மடையவேண்டுமே யெனும் பேராவலுடன் முயலுவார்களாயின் இம் மதத்திற்கு ஆக்கந்தேடுதல் கூடும். ஆண்டாண்டுதோறும் சங்கங்களின் றலைவர்கள் பலரும் சங்கங்கள்கூட்டி மக்களுக்கு நம் சமயத்தில் பற்றுண்டாகச் செய்தல்வேண்டும். ஆனால் மடாதிபதிகளோ, யார் எப்படிப்போயினுமென்! நம் காலத்தை நாம் சரியாகக் கழிப்பின் அது சாலும் என்று நினைத்து வாணாளைப் பாழ்நாளாக்குகின்றனர். அம் மடாதிபதிகளுக்கு சமயப்பற்று உண்டாமாறு இறைவன் அருள்பாலிப்பானாக.

மதத்திற்குப் புறம்பான சொல்லக்கூடாத செயல்களைச்செய்யும் பாவிகளாகிய வீரசைவர்களையெல்லாம் ஒன்றென சமமாகக் கருதுகின்ற வீரசைவப்

பெரியார்கள், நல்ல ஆசாரமுறையில் ஒழுகிநிற்கும் வீரசைவன் வீட்டில் சோறு உண்டுவிட்டால் அதனால் பெருந்தீமை வந்துவிடுகிறது என்கின்றனரே. சமன் செய்து சீர் தூக்கி யாராய்வார்க்கு இது மடமை என்பது புலனும். மெய்யன்பர்கள் இதனைச் சற்றுச் சிந்திப்பார்களாக. இற்றை நாட்களில் வீர சைவ இளைஞர்கள் பலரும் பெரியார்கள் சிலரும் இலிங்கத்தைக் கழுத்தில் அணிந்துகொள்வது "இன்டிஸென்ஸி" (indecency) அதாவது பார் வைக்கு விகாரமாயிருக்கிறதெனக் கூறுகின்றனர். ஆ! அவரது கூற்றை என்னென்பேன்! பூணூலையணியும் அந்தணரும், தோலையும் சிலுவை யையும் கழுத்திலணியும் கிறிஸ்தவர்களும் அவற்றை அகௌரவமாக நினைக்கின்றனரா? இல்லை. ஆயின், இத்தீய எண்ணம் வீரசைவ மக்களிடை மாத்திர மெழுந்ததெவன்? அங்ஙனம் நினையாமல், "எம்மதத்தினருக்கும் கிடைக்காத ஒரு ஆபரணத்தை அணிந்துகொள்ளும் பாக்கியம் நம்மொருவ ருக்கே கிடைத்திருக்கிறதே" என எண்ணி ஏன் மகிழக்கூடாது? பிற மதத் தினர்கள் கடுக்கன், சங்கிலி முதலியன அணிவதுபோல் இலிங்கப் பெட்டகம் நமக்கே சிறப்பாய் உரியதோர் அணி. ஆகலின் அன்பர்கள் இலிங்கதாரணக் கொள்கையை இகழ்ந்து இடருற்று வருந்தாது பேராதரவுடன் போற்றிவாழ் தல்வேண்டும். இங்ஙனமாக நம் சமயத்தில் மல்கிக்கிடக்கும் போலியாசாரக் கொள்கைகளை விவரித்து எழுதவேண்டுமானால் காலமும் இடமும் போதா வாகலின் விரிவஞ்சி இதோடு விடுத்தனன்.

முன்னேற்றந்திற்குரிய வழி:—இனி இம்மதத்தின் ஆக்கத்தைப்பற்றியும் இனிச் செய்யவேண்டுவனவற்றைப் பற்றியும் ஒரு சிறிது ஆராய்வோம். இப் போது இச்சமயம் ஒன்று இறந்துபடல் வேண்டும்; இன்றேல் புகழுடன் விளங் குதல்வேண்டும். இச் சமயமானது மதில்மேற் பூனையாக இல்லாமல் சிறப் புற்றிருக்க வேண்டுமானால் வீரசைவ மக்களிடையே மல்கிக்கிடக்கும் அறி யாமைப் பேயையும் போலியாசாரத்தையும் அறவே ஒழித்தல்வேண்டும். இச்செயல் இருதாரதாராலேயே இயலும். (1) வீரசைவ மடத்தலைவர்கள் முன்பு தம் மதத்தின் சித்தாந்தத்தை ஐயந்திரிபற ஓதியுணர்ந்து பின்பு ஆண்டுதோறும் குறைந்தது பத்து மாணவர்களுக்காயினும் அவற்றைக் கற் பித்து அவர்களை நாட்டின் நாற்பாலும் அனுப்பி வீரசைவ மதத்தின் அடிப் படையான கொள்கைகளை ஆங்காங்கே பிரசாரம் செய்யும்படி ஏற்பாடுசெய்ய வேண்டும். இதற்குச் செல்வமும் வேண்டுவதின்று; செல்வாக்கும் வேண் டுவதின்று. முயற்சி யொன்றிருந்தாற் போதும். மற்றும் தம் மடத்திற்கு எவரேனும் வீரசைவர் வந்தால் அவர் உண்மையில் வீரசைவரா லிங்காங்க சம்பந்தமுடையவரா, சமயநெறி வழுவாது நடக்கின்றனரா எனவறிந்து உண்டி முதலியன நல்கி உதவிபுரிதல்வேண்டும். வீரசைவர்களெனக் கூறிக் கொள்ளு மெல்லோரையும் தக்க மடாதிபதிகளைக்கொண்டு ஆசாரம் செய்வி த்து ஒரு தொகுதியினராக்கி உண்டிவசதி அளித்தல்வேண்டும். உண்டிவசதி என்று யான் பன்முறை அழுத்தமாகக் கூறுவதென்னையோவெனின் "சோற் றுச் சண்டை"யால் தான் நம் மதத்தில் பல இடையூறுகள் நிகழ்கின்றன. உண்டிகொடுத்தோ ருயிர் கொடுத்தோர்களாகலின் அங்ஙனம் செய்யின் மக்களி டையே ஊக்கமும் புத்துணர்ச்சியும் தோன்றி இச்சமயத்திற்கு ஆக்கந்தேட முற்படுவர். உண்டிவசதி ஏற்படவே வீரசைவ இளைஞர்கள் ஆங்காங்கே சென்று கல்விகற்றுப் பரந்த நோக்குடையராவர். மற்றும் ஒவ்வோராண்டி லும் வெவ்வேறிடங்களில் சங்கங்கள்கூட்டி இச்சமயத்திற்குள்ள குறைபாடு

களைப் பல பெரியார்களைக்கொண்டு நீக்க முயலவேண்டும். மடாதிபதிகளிடத்தில்தான் சீடர்களுக்கு நன் மதிப்பிருக்கு மாகலின், இது அவர்களால் செய்தற் குரியது. மேலும், போதிய பொருளுள்ள மடங்களின் தலைவர்கள், வீரசைவ மக்களுக்கு உண்மைச் சமயநெறியை அறிவுறுத்துவான் வேண்டி பத்திரிகைகளை வெளியிடுதல்வேண்டும். ஆனால் குறைந்த சந்தாவில் பத்திரிகைகளனுப்பினும் அவற்றை யாதரித்துவாங்கும் வீரசைவர்களில்லை என்பதை நினைக்குமிடத்து ஆற்றொணாத் துன்பத்தைத் தருகின்றது. முசிரி, திரு குமார வீரய்யரவர்களின் நன்முயற்சியால் பிறந்து சிலவாண்டு மக்களிடையே உலவி ஆதரிப்பாரின்றி இறந்துபட்ட "வீரசைவம்" என்னும் திங்கள் வெளியீட்டை உன்னுந்தோறும் பெருந்துன்பத்தையன்றோ தருகின்றது. பலதுறைகளில் பல ரூபாய்களைச் செலவழிக்கும் வீரசைவர்கள் இப்பத்திரிகைக்கு மாதம் ஒரு ரூபாய் தந்து உதவமுடியாமற் போனமை யாவரானும் எள்ளி நகையாடற்பாலதே. எனினும் பத்திரிகைகள் வெளியிடுவதில் முக்கியமாய்க் கவனிக்க வேண்டியவை சில்வுள. "வீரசைவம்" என்ற வெளியீடு வீரசைவ மக்களால்றிந்து கொள்ளமுடியாத அவ்வளவு உயர்ந்த தமிழ் நடையில், எளிதிரனுண முடியாத பெரியபொருள்களைக் கொண்டிருந்தமையான், அது மக்களிடையே ஆதரவிழந்தது என்று வீரசைவப் பெரியார் பலர் கூறக் கேட்டிருக்கிறேன். அது உண்மையே. ஏனெனில் நமது மதத்தில், நூற்றுக்கு எண்பதின்மர், போதிய தமிழ்க் கல்வி யறிவுகூட இல்லாமல் ஆரம்ப ஆசிரியர்களாய் இருத்தலின், இத்தமிழ் அவர்களுக்கு விளங்கவில்லை யென்பது மெய்யே. ஆகலின் இனிவரும் பத்திரிகைகள் எளிய நடையில் காலத்தை யொட்டி சமய முற்போக்குக்கான கட்டுரைகளைக்கொண்டிருத்தல்வேண்டும். இப்போது சேலம் குகையினின்றும் "சிவபக்தன்" என்ற ஒரு வீரசைவ பத்திரிகை வருகிறது; அதுவும் மக்கள் விரும்பக்கூடிய கட்டுரைகளை எழுதிவருவதாகத் தெரியவில்லை. நிற்க, சமய முன்னேற்றத்தைக் கருதி நூல்களெழுதி வெளியிட விரும்புவார்க்கு மடங்களின் தலைவர்களும், செல்வ வந்தர்களும் பொருளுதவி செய்தல்வேண்டும்.

2. இம்மதத்திற்கு ஆக்கந் தேடுதல் வீரசைவ இளைஞர்களாலுங் கூடும். தாய் மொழிப்பற்றே சுதந்தரந் தந்திடுமாகலின், இளைஞர்கள் முதற்கண் வித்வான் முதலிய தேர்வுகளிற் பயின்று போதிய தமிழ்க் கல்வியறிவு பெற்றுச் சமயநூற்களை கற்றல் வேண்டும். பொருளுள்ளார் ஆங்கிலக் கல்வியும் கற்பது மிகமிக அவசியம். ஏனெனில், பொதுவாக சைவ மதத்தைப் பற்றியும், சிறப்பாக வீரசைவத்தைப் பற்றியும் நூற்றுக்கணக்கான நூல்களுள்ளன. லண்டன் மாநகரில் "இந்தியா ஹவுஸி"ன் ஒரு கட்டிடத்தில் சைவ, வீரசைவ சித்தாந்தங்களைப் பற்றி 468 தமிழ் நூல்களும், சுவடிகளும், 500க்கு மேற்பட்ட தெலுங்குச் சுவடிகளும் படிப்பாரொருவருமின்றி ஒரு அறையில் அடுக்கப்பட்டு கிடக்கின்றனவாம். அவைகளுள் ஶ்ரீரேணுக பாஷ்யம் ஒன்று. ஜர்மனி தேசத்திலுள்ள கீல் யுனிவெர்சிடி (Keil University) யில் வடமொழிப் போராசிரியராக இருக்கும் Dr. F. O. ஸ்க்ரேடர் என்பார் "வீரசைவமதம்" என ஒரு நூலெழுதி சமீபத்தில் வெளியிடப்போவதாகத் தெரிவித்துள்ளார். வீரசைவ இளைஞர்கள் ஆங்கிலம் பயின்று இவற்றை யெல்லாம் பெற்று ஓதியுணர்ந்து சமயத் தொண்டாற்றினால், வீரசைவசமயம் அடைதற்குரிய புகழ் நாவினாலளவிட்டுரைக்கற்பாலதோ? இளைஞர்கள் பலரும் தங்கள் ஓய்வு நேரங்களில் பிரசாரம் செய்யவேண்டும். பத்திரிகைகளில் பல கட்டுரைகளெழுத

வேண்டும்; நூல்களியற்றவேண்டும். பலர் படித்துப் பட்டம்பெற்று அரசியலில் பெரிய உத்தியோகங்கள் வகிக்கவேண்டும்-மற்றும் சிலர் ஆங்கில உயர்தரக் கல்விபெற்று சென்னை சட்டசபையில் இடமும் பெறவேண்டும். இது காறும் யான் கூறியனவெல்லாம் செயற்கரிய செயல்களாயிருப்பினும் முயற்சி என்ற ஒரு துணையைக்கொண்டே எளிதில் முற்றுவிக்கலாம். இவையாவும் என்று நிறைவேற்றப்படுகின்றனவோ அன்றே வீரசைவர்களை வழிவழியாகப் பற்றியிருக்கும் வறுமைப் பிணிவிட்டு நீங்கும். ஒவ்வொருவருக்கும் தம் மதத்தில் தீவிர உணர்ச்சி இருக்கவேண்டும். அவர்கள் மறைந்து கிடக்கும் பல நூல்களையும் வெளியிடவேண்டும். தவப் பிரகாசராம் சிவப்பிரகாச அடிகள் தமிழ்நாட்டு வீரசைவர்களுக்குரிய நூல்கள் பல யாத்துப் போந்தார். அவற்றுள் சித்தாந்த சிகாமணி, திரு. நாகிசெட்டியாரென்னும் வீரசைவப் பெரியாரால் உரையுடன் வெளியிடப்பட்டுள்ளது. ஏனைய நூல்களுள் ஒருசிலவே அச்சிடப்பட்டுள்ளன. இச்செட்டியாரவர்கள் தமது முதுமைப் பருவத்திலும், மெய் வருத்தம் பாராது, இம்மதத்திற் கொண்டுள்ள காதலால் இன்னும் பல நூல்கள் வெளியிடக் கருதியுள்ளனர். அன்பர்கள் யாவரும் அவரை ஊக்குதல் வேண்டும். இது காறும் சிவப்பிரகாச சுவாமிகளின் சரித்திரம் யாவரானும் விரிவாக வெளியிடப்படவில்லை. ஆகையால் யானும் எனது நண்பர்கள் சிலரும் சிவப்பிரகாச அடிகளது இருப்பிடமாகிய துறைமங்கலம், நல்லாற்றூர், மைலம், பொம்மபுரம், வாலிகண்டபுரம் முதலிய விடங்களுக்குச் சென்று கிடைக்கும் கல்வெட்டுகளையும் சரித்திரக் குறிப்புகளையும் கொண்டு எனது சிற்றறிவுக்கெட்டியவாறு அப்பெரியாரின் சரித்திரத்தை ஒருவாறு எழுதி வெளியிடக் கருதியுள்ளேன். எல்லாம்வல்ல அல்லமன் அருளினாலும் சைவ வீரசைவப் பெரியார்களின் அருளினாலும் எளியேனுடைய எனது பேரவல் இனிது நிறைவேறப் பிரார்த்திக்கிறேன்.

"ஆசைபற்றி அறையலுற்றேன்" எனக் கம்பர்பெருமான் கூறியதுபோல் யான் சமயமுன்னேற்றத்திற்கொண்ட ஆசையால் அவ்வப்போது கிடைக்கும் கருத்துக்களை "ஆனந்தபோதினி" மாதவெளியீட்டில் வெளியிட உத்தேசித்துள்ளேனாகையால், வீரசைவ மெய்யன்பர்கள், மிகக் குறைந்த சந்தாவாகிய ஆண்டிற்கொருரூபாயைக் கட்டிப் பத்திரிகையைப் பெற்று இன்புறுமாறு வேண்டுகிறேன்.



# லீலா சுகர்.



(ஆசிரியர்-தே. வீரராகவ ஐயங்கார்.)

வடமொழியில் தேனினுமினிய தெய்வ நூலொன்றுளது. அதன் பெயர் ஸ்ரீகிருஷ்ண கர்ணாமிருதம். அது நிலங்கடந்த நெடுமுடி அண்ணலாகிய ஸ்ரீ கிருஷ்ண பரமாத்மாவினது பாலலீலைகளைத் தன்னகத்தே கொண்டு மிளிர்கின்றது. அதன் ஆசிரியர் ஸ்ரீலீலாசுகர். இவர் சரித்திரம் கேட்போர் உள்ளத்தை உருக்கி, மலத்தைப் போக்கி, மமதையையடக்கி எம்பெருமான் பாற் சேர்க்க வல்லதாகும். ஆகையால், அவர் சரித்திரத்தை யாம் கற்றுக் கேட்டு அறிந்தவரை வரைகின்றனம்.

பல்லாண்டுகட்கு முன்பு நம்மிந்தியாவில், எக்காலமும் அரனடியன்றிவேறு போற்றியறியாத அன்பர்கள் வாழ்ந்து வந்தவோர் உயர் குலத்தில் உத்தமர் ஒருவர் இருந்தார். இவர் தமது முன்னோர்களைப் போன்று அறநெறிவழாது அரனடி போற்றி வாழ்ந்து வருநாளில், நீறணி நெடுஞ்சடைப் பூரணனருளால் ஓர் ஆண்மகவைப் பெற்றார். பெற்ற அம்மகவிற்கு வில்வ மங்களன் என்று நாமகரணஞ் செய்தார். கல்வி பயிற்றுவித்தற்குரிய பிராயத்தே தம் மகவைத் தக்க ஆசானிடம் விடுத்து, வேத வேதாந்தங்களையும் சிவாகமங்களையும் நன்கு பயிற்றுவித்தார்.

வில்வ மங்களனும், கண்டோர் மெச்சும்படி, ஒழுக்க நெறியிற் பயின்று வருங்கால், தீவினை வயத்தால் தீநெறிப்பட்டோர் கூட்டத்தில் வீழ்ந்தான். நாளடைவில் வில்வமங்களனுக்குச் சிந்தாமணி யென்னும் ஓர் வேசையின் நேசமும் ஏற்பட்டது. காலஞ் செல்லச்செல்ல தீக்குணங்கள் யாவும் ஒன்றன் பின்னொன்றாக அவனை யாட்கொண்டன. இறுதியில் தன் தகப்பனார் மெய் வருந்திச் சேமித்து வைத்திருந்த செல்வத்தைச் சிந்தாமணியின் சேவையி லிழந்தான்.

செல்வத்தை யிழந்து வறியனானபோதும் சிந்தாமணி வில்வமங்களனை விட்டபாடில்லை. வில்வமங்களனும் சிந்தாமணியை விட்டு விலகி ஒரு நிமிடமிருக்கச் சம்மதியாதிருந்தான். மகன் தங்களை விட்டுப் பிரிந்து, தீ நெறியிற் பயின்று வருதலைக் கண்ட வில்வமங்களனின் தாய் தந்தையர் பிள்ளையை அவனொழுகிவரும் நெறியினின்றும் மீட்கப் பலவித உபாயங்களைச் செய்தார்கள். என்ன பாடுபட்டும் வில்வமங்களன் திருந்தியபாடில்லை.

மகவைப் பிரிந்த துக்கத்தால் அவன் தகப்பனார் வெகு விரைவில் அரனடி யடைந்தார்.

தன் தகப்பனார் இறந்ததைக் கேள்விப்பட்டும் வில்வமங்களன் சிந்தாமணியின் இல்லத்தை விட்டகல வில்லை. சிந்தாமணி வில்வமங்களன் தன்

னிடத்தே கொண்ட அன்பின் பெருக்கைக் கண்டு வியந்தானேனும், ஊரா ருக்குப் பயந்து, அவன் வீட்டிற்குச் சென்று வரும்படி தன்னை வற்புறுத்தி னள். வில்வமங்களன் சிந்தாமணியின் பாதங்களில் வீழ்ந்து தன்னை வற்புறுத் தாதிருக்குமாறு கேட்டுக்கொண்டான். சிந்தாமணியும் பேசாதிருந்தாள். தகப் பனர் இறந்தும் வீட்டுக்கு வில்வமங்களன் வாராததைக் கண்ட அவன் உறவி னர்கள் சிந்தாமணியின் இல்லத்தை யடைந்து வில்வமங்களனை அனுப்புமாறு கேட்டுக்கொண்டார்கள். உறவினர்களின் வேண்டுகோளைச் செவியேற்ற சிந் தாமணி வில்வமங்களனைக் கூப்பிட்டு அவன் வீட்டுக்குச் சென்று அவன் தந் தையின் ஈமக கடன்களை முடித்துவிட்டுப் பத்தாவது தினமே தன்னிடம் வருமபடி கேட்டுக்கொண்டாள். காமக் கடலில் வீழ்ந்து கரை தெரியாது சிற்றின்பத்தையே பேரின்பமெனக் கொண்டு தன் தகப்பனர் இறந்துவிட்ட தையும் பொருட்படாதிருக்கும் வில்வமங்களன் சிந்தாமணியின் உரைகளைச் செவியேற்காது வாளாவிருந்தான். அதைக்கண்ட சிந்தாமணி சீற்றங்கொண்டு வில்வமங்களனைத் தடிகொண்டு தாக்கித் தன் வீட்டை விட்டகற்றினள்.

தன காதலியினு லகற்றப்பட்ட வில்வமங்களன் வேறு வழியின்றித் தன் வீட்டையடைந்தான். தகப்பனருக்குச் செய்ய வேண்டிய ஈமக் கடன்களைச செய்யத் தொடங்கினன். கிரியைகளைச் செய்துகொண்டிருக்குங் காலையில் வில்வமங்களனின் மனம் முழுவதும் சிந்தாமணியின்பாலே யிருந்தது.

அந்தோ! காமத்தின் வேகம்தான் என்னே! பத்தாம் நாள் இரவின்வரு கையை வில்வமங்களன் வெகு ஆத்திரத்துடன் எதிர்ப் பார்த்திருந்தான். பத்தாம் நாள் இரவு வந்தது. கருமமும் முடிந்தது. தன் காதலியாகிய சிந்தா மணி வதியும் வீட்டை நோக்கிப் புறப்பட்டான். இவன் வீட்டைவிட்டுப் புறப்படுங் காலத்தில் மாசற்றிருந்த வானம், நடுவழியிற் சென்று கொண்டிருக் கும் பொழுது கறுத்தது. மேகங்கள் ஒன்றோடொன்று மோதிக்கொள்ளத் தலைப்பட்டன. ஊழிக்காலத்துக் காற்றுபோல் புயற் காற்று வீசத் தலைப்பட் டது. பேயுங்கண்டு நடுங்கும்படியான இரவில் வில்வமங்களன் சிந்தாமணி யின்பேரிற்கொண்ட காதலின்பெருக்கால், இவற்றைக்கண்டு அச்சங் கொள் ளாது மேல் நோக்கிச் சென்றுகொண்டிருந்தான். நடுவழியில் ஓர் ஆற்றைக் கடந்து அப்பாற் செல்லவேண்டியதாயிற்று. ஆற்றிலோ வெள்ளம் இருகரை யும் புரண்டு ஓடிற்று. எங்கும் இருள் சூழ்ந்து கொண்டது. வழியோ தெரிபவில்லை. எவ்வாற்றானும் சிந்தாமணியின் வீட்டைச் சேர்ந்துவிடவேண் டுமென்ற எண்ணமே வில்வமங்களனின் மனதிற் குடிகொண்டிருந்தமை யால், தண்ணீரில் இறங்கித் தன்னால் எவ்வளவு தூரம் நீந்திச்செல்ல முடியு மோ அவ்வளவுதூரம் நீந்திச் சென்றான். நட்டாற்றி லிருக்கும்பொழுது கை கால் சோர்ந்துவிட்டன. ஆயினும் சற்றும் மனத் தளர்ச்சியடையாது வில்வ மங்களன் மேல் நோக்கி நீந்திச் சென்றுகொண்டிருக்குங்காலை ஏதோ ஒன்று வில்வமங்களன் சரீரத்தில் தாக்கியது. உயிர் போகுந் தருவாயிற் கிடைத்த சஞ்சீவியைப் போன்று வில்வமங்களன் மிகுந்த ஆனந்தத்தோடு தன்மேற்றாக் கிய அப்பொருளை நதியைக் கடப்பதற்குரிய வோர் சாதகப் பொருளாகக் கொண்டு அடுத்தகரையை யடைந்தான். பின்பு சிந்தாமணியின் வீட்டை நோக்கிச் சென்றான். சிந்தாமணியின் வீட்டு வாயிற்கதவு சாத்தப்பட்டிருந் தது. கதவைத் தன்னாலானமட்டும் தட்டினன். மழை, காற்று, இடி இவற்

பின் ஆரவாரத்தால் கதவு தட்டப்படுஞ் சப்தம் சிந்தாமணியின் காதில் விழவில்லை. புழக்கடைப்பக்கம் சென்று வீட்டின் உள்ளே செல்வதற்கு ஏதாவது வழி யிருக்குமாவென்று பார்த்தான். அங்கும் வழி ஒன்றும் காணப் படவில்லை. இவ்வளவு பிரயாசைப்பட்டுச் சிந்தாமணியி னில்லத்தை யடைந் தும் தான் உள்ளே செல்லக்கூடாதிருந்ததற்குரிய தன் விதியை நினைந்து வில் வமங்களன் வருந்திக் கொண்டிருக்குங் காலையில், மின்னலொளியால், சுவரின் மீது ஏதோவொன்று தொங்கிக்கொண்டிருப்பதைக் கண்டான். வில்வமங்க ளனின் சந்தோஷத்தை யாரே சொல்லமுடியும்! தொங்கிக் கொண்டிருப்ப தைக் கயிறென நினைத்து அதனுதவியால் வீட்டினுள்ளே குதித்துச் சிந்தா மணி படுத்திருக்கும் அறையையடைந்து நன்னித்திரையிலிருந்த சிந்தாமணி யை யெழுப்பித் தன் வருகையை அவளிடம் தெரிவித்தான்.

தன் பேரில் வில்வமங்களன் வைத்திருக்கும் பேரன்பை யெண்ணிச் சிந் தாமணி வியந்து கொண்டிருக்குங்கால், வில்வமங்களனின் சரீரத்திலிருந்து ஓர் தீ நாற்றம் வீசுவதை யுணர்ந்தாள். வில்வமங்களன் தன் வீடடைந்த காலம் கடு நிசியா யிருந்தலையும் அப்பொழுது இடியிடித்து மழை பொழிவதையும் கண்ட சிந்தாமணி "இவ்விரவில் நீ இங்கு எப்படி வந்தாய்? உன்மீது தீ நாற் றம் வீசக் காரணமென்ன? வீட்டின் கதவுகள் திறக்கப்படாதிருக்க நீ எவ் வாறு என் வீட்டினுள் நுழைந்தாய்?" என்பன போன்ற பல கேள்விகளைக் கேட்டாள்; அப்பொழுது தான் ஆற்றைக் கடந்த முறையும் ஓர் கயிற்றின் உத வியால் வீட்டின் சுவர் ஏறிக்குதித்ததையும் வில்வமங்களன் சிந்தாமணியிடம் விளங்கக் கூறினான். வில்வமங்களன் கூறுவதைக்கேட்டு ஆச்சரியங்கொண்ட சிந்தாமணி ஓர் விளக்கைக் கையிலேந்திச் சென்று வில்வமங்களன் சுவரின்மீது ஏறிக்குதித்த வழியைப்பார்க்க, அங்கு ஓர் கருநாகம் தொங்கிக்கொண்டிருப் பதைக்கண்டாள்! அதைக் கண்ட சிந்தாமணி வியப்புக் கொண்டவளாய் வில்வமங்களனை நோக்கி "நீ ஆற்றைக் கடந்த வழியைக் காட்டு!" எனக்கேட் கச சிந்தாமணியை வில்வமங்களன் ஆற்றிற்கு அழைத்துச்சென்று, தான் ஆற் றைக் கடந்த இடத்தைக் காட்டினான். ஆற்றங்கரையில் ஓர் ஒதுக்கில் அழு கிய பிணம் ஒன்றி கிடப்பதை இருவரும் கண்டனர். வில்வமங்களன் மீதிரு ந்து வரும் தீ நாற்றமும் அப்பிணத்தின் நாற்றமும் ஒன்றாய் இருக்கவே அதன் உதவியாற்றான் அவ்வாற்றை வில்வமங்களன் கடந்திருக்கவேண்டுமெனச் சிந் தாமணி யூகித்துக்கொண்டாள்.

உடனே சிந்தாமணி வில்வமங்களனைப் பார்த்து "அப்பப்பா! இன்றே நீ என் மேற்கொண்ட காதலைப் பழுதற வறிந்தேன். இடி, மழை, புயற்காற்று, நகப்பனின் ஈமக் கடன், ஆறு, பிணம், பாம்பு இவையாவும் உனக்கு என்மீது கொண்ட காதலுக்கு முன்னால் மழுங்கிச் சென்றனவே! கேவலம் பொருளின் பொருட்டு என்னுடலத்தை விற்று வயிறு வளர்க்கும் இழி தொழிலுடைய விலை மாதாகிய யான், உன் பேரன்பிற்குத் தகுதியுற்றவளா வென்பதை நினைக்குங்கால், என் மனம் நாணத்தை யடைகின்றது. நீ என்மீது கொண்ட காதலில் ஆயிரத்தில் ஒரு பாகத்தை, தாயினும் சாலப் பரிந்துணவளித்து நம்மை காக்கும் தயாபரனாகிய எம்பெருமான்மீது வைப்பாயானால் புலன்களை வென்ற புனிதர்களாலும் காணமுடியாத கதியைக் காணலாமே! வஞ்சித்தலை யே பொருளாகப் போற்றி புனைந்து நிற்கும் மாபாவியாகிய என்மீது நீ சாற் றும் இன்சொல் மாலையை, நம் பிறவிப்பிணிக்கு மருந்தாகிய, ஒப்பிலா மணி

யாகிய நம் அப்பன்மீது சாற்றுவாயாகில் எல்லையற்ற' அழியாத இன்ப வுலகில் வாழலாமே. பெண்களின் உருவங்கள் துர்நாற்றம் வீசும் ஊன்பொதியென்பதை மறந்தாயே!" என்று மிருந்த ஆவேசத்துடன் அறிவுச்சுடர் கொளுத்தினள். சிந்தாமணியின் அன்பெனுந் தடாகத்தினின்றெழுந்த இன் சொற்களாகிற நீரூற்றுக்கள் வில்வமங்களனின் மனமெனும் களர் நிலத்திற் பரந்தவுடன் பக்தி யென்னும் பயிர் தழைத்தோங்க ஆரம்பித்தது. உடனே வில்வமங்களன், பேயாற் றூக்குண்டவன் போலவும் பித்துவாய் பட்டவன் போலவும், சிந்தாமணியினின்றும் ஓடவாரம்பித்தான். என்னதான் சிந்தாமணி தடுத்தும் வில்வமங்களன் தாங்காது ஒருவரும் காணுதவாறு ஓடிவிட்டான். பல நாட்கள்வரை அன்ன ஆகார மின்றிப் பேயன்போல் சுற்றி திரிந்தான்.

இறுதியில் நல்வினைப்பயனுல் ஸோமகிரி என்னும் மகானின் தரிசனம் வில்வமங்களனுக்குக் கிடைத்தது. அவர் ஸ்ரீ கிருஷ்ணபரமாத்மாவினது லீலா விபூதிகளை வில்மங்களனுக்கு உபதேசிக்க அவன் மனம் பகவானது லீலைகளின் வயமாயிற்று. சிற்றின்ப இருட்படலம் நீங்கப் பேரின்ப அருட்சோதி வில்வமங்களனின் இருதயத்தில் உதயமாயிற்று. அன்றே பகவானின் மீது இன்கவிமாலை தீட்ட வாரம்பித்தான். லீலா சுகர் என்ற நாமத்தையும் பெற்றுன். இனி வில்வமங்களனை லீலாசுகர் என்ற பெயரால் அழைக்கலாம்.

தாம் நற்கதி யடைவதற்கு மூதற்குருவா யிருந்த சிந்தாமணியையும், தமக்கு ஸ்ரீ கிருஷ்ணபரமாத்மாவினது திருவிளையாடல்களை அறிவுறுத்திய ஸோம கிரியையும லீலாசுகர் என்றும் மறந்தாரில்லை. அவ்விருவரையும் தாமியற்றிய ஸ்ரீ கிருஷ்ண கருணு மிருதத்தில் வைத்துத் துதித்திருக்கின்றார். தாம் சைவராயிருந்து சிவ தீக்கை பெற்றவராயினும் தம்மனம் நீலசெடுங்கிரி போன்றும், மழை முகில்போன்றும் திகழும் வண்ணத்துடனும் உலகை மயக்கும் மந்தஹாசத்துடனும் விளங்கும் ஸ்ரீ கிருஷ்ணனையே நாடுவதாகச் சொல்லுகிறுர்.

இவரது சரித்திரச் சுருக்கம், மனமெனுந் தோணி பற்றி மதி என்று சொல்லக் கூடிய கோலையூன்றிச் சினமெனும் சரக்கை ஏற்றிச் சம்சாரமாகிற அலைக்கடலில் ஓடிக்கொண்டிருக்கும்பொழுது, மதன் என்று சொல்லக்கூடிய பாறையாற் றூக்குண்டு போக நெறி தெரியாது அல்லற் பட்டுக்கொண்டிருக்கும் மன்பதைகளுக்குச் செல்லும் நெறிகாட்டக் கூடியவோர் சுக்காணுகத் திகழும். அல்லாமலும் ஒருவன் இழிவான தீ நெறியில் பயின்று யாவரும் கடிந்து பழிக்கக்கூடிய செயல்களைச் செய்யினும், எப்பொழுதாவது ஒருமுறை, தன் குற்றத்தை யுணர்ந்து, உண்மையாகப் பகவானிடம் தான் செய்த குற்றங்களுக்காக இரங்கிக் கழுவாய் செய்துகொள்வானுகில் அவனது விண்ணப்பங்களுக்குப் பகவான் செவி சாய்த்து, அவனை அணைத்துக் கொள்வார் என்பதும் இவர் சரித்திரத்தால் புலனுகின்றது.



# தமிழ்மொழியின் முன்னேற்றம்

——:(o):——

(V. வெங்கடாசலம், B. A.)

நம் தமிழ் மொழியின் மேன்மை சிறிதன்று; அம் மொழியை வளர்த்துள்ள புலவர்கள் வன்மையும் சிறிதன்று. அவர்கள் தமிழ் மொழிக்கு என்றுமழியா நீதிநெறிகளையும் அறிவு வாக்கியங்களையும் தந்துள்ளனர். ஒளவை, வள்ளுவர், கம்பர், நக்கீரர், புகழேந்தி ஆகிய சிலர் தமிழ் மக்கள் வீட்டில் சாசுவதமாய்க் குடிபுகுந்திருக்கின்றன ரன்றோ? ஆயினும் நாம் இம் மட்டுடன் திருப்தி யடைந்து மேலும் மேலும் நம் மொழியை வளர்க்க வேண்டாமா வென்று கேட்கிறேன்?

தமிழ் மொழி எப்படியோ முன்னேற்ற மடைந்து கொண்டுதானிருக்கிறது. ஆனால் அதன் வளர்ச்சிக்கு இந்த வேகம் போதுமா? தமிழையும் மற்ற மொழிகளையும், அதாவது உலகில் இன்று நிலவுகின்ற ஆங்கிலம், பிரெஞ்சு போன்ற ஐரோப்பிய பாஷைகளையும் மலையாளம், தெலுங்கு வங்காளம் முதலியவற்றையும் ஒப்பிட்டுப் பார்ப்போமாயின் தமிழின் மலை மேல் ஏறுந் தன்மை எளிதில் புலப்படும். முக்கியமாகச்,சென்ற ஐம்பது வருடங்களில் மலையாளமும் வங்காளமும் அடைந்துள்ள அபிவிருத்தியைக் கண்டால் நாம் நாணமுற்று நிற்க வேண்டும். இங்கிலாந்தில் ஆங்கிலம் எவ்வளவு சீக்கிரம் முன்னேற்ற மடைந்து தற்பொழுது ஞாலமுழுவதும் பரவி சர்வ தேச மொழியாய் விளங்குகிறது! சுமார் 800 வருடங்களுக்கு முன் "ஆங்கிலம்" என்பதே இல்லை. சாஸர் என்னும் புலவர் காலத்து ஆங்கிலத்தின் கேவல நிலையை யான் கூற வேண்டுவதில்லை. அவர்தான் ஆங்கிலத்தின் முதல் புலவர்; முதன் முதலில் கவிகளை இயற்றியவர். அவருக் கப்பால் ஸ்பென்சர் (Spencer) ஜெகப்பிரியர் (Shakespeare), பென் ஜான்ஸன் (Ben Johnson) மார்லோ (Marlow) டிரயிடன் (Dryden) ஜான்ஸன் (Johnson) கார்லைல் (Carlyle) ரஸ்கின் (Ruskin) எனப் பல புலவர் நூற்றுக் கணக்கில் தோன்றி ஆங்கிலத்தின் விரிவு இவ்வளவு என்று ஒரு வரையறுத்துக் கூற முடியாதவாறு செய்து விட்டனர். இன்றோ பெர்னார்ட் ஷா, (Bernard Shaw), எச். ஜி. வெல்ஸ் (H. G. Wells) ஈ. வி. லூகஸ் E. V. Lucas), இன்னும் அனேகர் ஆங்கிலத்தின் மன்னர்களாய் விளங்குகின்றனர். இவர்கள் யாவரையும் போற்றி வளர்த்த ஆங்கில மக்கள் சுதேசப் பித்துக் கொண்டவர்கள்; தங்கள் பாஷையை உயிர் போல் மதித்தவர்கள். ஆகவே அப் புலவர்கள், நாவலர்கள், யாவரும் மொழியை நாளுக்கு நாள் அபிவிருத்தி யடையும்படி செய்துள்ளனர். இதற்கு நேர்மாறாக நம்மவர் மொழியைக் கவனியாது இருக்கின்றனர். தொன்று தொட்டே விளங்கிய மொழியை ஒவ்வொரு காலத்திற்கும் தகுந்தவாறு வளர்க்காது அடியோடு ஆற்றில் தள்ளி விட்டனர். அதன் பயனாக இன்று தமிழின் வீரியமும், விரிவும், வல்லமையும் குறைந்துள்ளன. அதன் மக்களே அதைப் படியாது வேறு மொழிகளைக்

கைக்கொள்ளுகின்றனர். மொழியும் படிப்பாரின்றிக் காட்டில் வளர்ந்த மல்லிகை போல் மணம் நீங்கி மாசுற்று உறங்குகிறது.

முற்காலத்தில் தமிழ் இயல், இசை, நாடகம் என மூன்று வகையாகப் பிரிக்கப்பட்டிருந்தது. அதில் இயற்றமிழிலேயே பண்டை நூல்கள் யாவும் செய்யப்பட்டுள்ளன வென்பது யாவருமறிவர். இசைத் தமிழும் நாடகத் தமிழும் இக் காலத்தில் இல்லை யென்றே கூறலாம். இதுவரையிலும் பண்டைக் காலத்தில் எழுதப்பட்டுள்ள தமிழ் நாடகம் ஒன்றாவது கிடைக்கவில்லை. தவிர ஜனங்கள் சாதாரணமாய்ப் பேசும் வசனம் இல்லாது போயிற்று. செய்யுள்களுக்குள்ள உரைகளே முற்கால வசனங்கள்—தமிழில் வசன நூல்கள் இல்லாமை ஒரு பெருங் குறை. ஆனால் இப்பொழுதுதான் பெருகிவருகின்றன. ஆகவே தமிழன்பர்கள் செய்ய வேண்டிய முக்கிய கடமை யாது? பற்பல விஷயங்களைக் குறித்தும் தம் மொழியில் வசன நூல்கள். இயற்ற முன் வரவேண்டும். சர்வ கலாசாலைப் பட்டம் பெற்றோரும், தற்கால உலகவியல்பை யறிந்தோரும் ஆங்கிலம் முதலிய பாஷைகளின் முக்கிய காவியங்களைப் படித்தோரும் புது வழியில் பற்பல புத்தகங்களை எழுதித் தமிழ்த் தாய்க்கு நல்ல தொண்டாற்றலாம்.

எதற்கும் முதலில் பண்டைத் தமிழ் நூற்களில் முக்கியமான சிலவற்றை யாவது யாவரும் கற்றல் அவசியம். தமிழ்த்தாய் போற்றுவாரின்றிப் பரிதவிக்கின்றனள். இன்னும் தமிழ் மொழியில் உள்ள பல நூல்களின் பெயர்களையேனும் பலர் கேட்டதே கிடையாதெனின் இதனினும் இழிவு வேறுண்டோ?

தமிழ்த்தாரகைகளின் ஜீவிய சரித்திரங்களை நன்குயறிந்து கொள்ள அவர்களைச் சூழ்ந்து கொண்டிருக்கும் மூடக் கங்குலையகற்றி அவர்கள் வாழ்க்கையின் குறிக்கோள்களை விளக்கும் புத்தகங்களைப் பண்டிதர்களும் ஆசிரியர்களும் இயற்றல் வேண்டும். இப் புலவர்களைப் பற்றி மிகவும் சிறிதே நாமறிவோம். அதுவும் பற்பல பிரயோஜன மற்ற நம்ப முடியாத கட்டுக் கதைகளாகவே யறிவோம். இவற்றையெல்லாம் ஆராய்ந்து பழைய செப்புப் பட்டயங்கள், கல்வெட்டுகள், ஏடுகள் முதலியவற்றைப் படித்து அவை யளிக்கின்ற இன்சாற்றைச் சரித்திரத்திலும் ஆராய்ச்சியிலும் தேர்ச்சியுள்ளோர் புத்தக ரூபமாய் வெளியிடல் அவசியம். தமிழ் மொழி மன்னர்களைச் சூழ்ந்திருக்கும் மூடுபனியை நீக்கினால் தான் அன்னோர் பெருமை உலகெலாம் விளங்கும். ஆங்கிலத்தில் பலவாசிரியர்கள் சேர்ந்து, "ஆங்கிலப் புலவர்கள்" English men of Letters) என்னும் தொகுதியைச் செய்திருப்பது போல் நாமும் நந்தமிழ் நாவலர்களை ஓர் தொகுதியாகச் செய்து "தமிழ் நாவலர் மாலை" யொன்று தொகுத்தல் இன்றியமையாதது. இவ்வளவு நாள் நாம் நம் புலவர்களை அசட்டை செய்தது போதும்; இனி மேலும் வேண்டாம். இங்ஙனம் செய்வதில் ஓரோர் மலர் சேர்ப்பவரும் தாம் மிகவும் விரும்பும் ஆசிரியரை யெடுத்துக் கொண்டால் மாலை மிகவும் அழகு பெறும். இங்ஙனம் தொடுத்துள்ள மாலையை நம் தாய் கழுத்திலணிந்து அம் மலர்களின் விரையையும் இன்பத்தையும் பருகி அன்னாரைக் கைகூப்பி வணங்காநிற்போம்.

எளிய வசன நடையில் நம் புலவர்களைப் பற்றிய புத்தகங்களையும் அவர்கள் நூல்களில் கூறப்பட்டிருக்கும் பொருள்களைப் பற்றிய விரிவான கட்டுரைகளையும் தமிழ்மாது மிகுதியாய் விரும்புகிறாள். வள்ளுவர், நக்கீரர்

கம்பர், கூத்தர், இளங்கோவடிகள, சாத்தனார் போன்ற எண்ணிறந்தவர்களுடைய தத்துவஞானம், உலகக் கொள்கைகள், நீதி நெறி, கவித்திறம், இன்னும் பல விஷயங்களைப் பற்றியும் நூலகளை வளர்க்கலாம். இத்தகைய நூல்களைச் செய்யக் கற்றறிந்தோர் முன்வந்தால் மொழி எளிதில் அபிவிருத்தியடையு மென்பதில் ஐயமில்லை.

பொதுவாக வசன நூலில், கட்டுரைகள், நாவல்கள நாடகங்கள, குறிப்புரைகள், சாஸ்திர நூல்கள் மிகுதியாய் எழுதவேண்டும்; நம் இலக்கியத்தை வளர்ப்பதற்கு எளிதான வழி இதன்றி வேறில்லை. தற்பொழுது நாம் சில சஞ்சிகைகளில் பார்க்கும் வியாசங்கள் மட்டும் போதா. ராஜ்யம், பொருளாதாரம், சமூகம், சமயம், கலைகள், சாஸ்திரம் யாவற்றிலும் கட்டுரைகளை அறிஞர் எழுத வேண்டும். ஆனால் அவை எளிய நடையில் அழகாயும், நகைச்சுவை, பொருட் சுவை பெற்றுக் குற்றமற்றவையாயும் இருத்தல் நலம். ஒவ்வொரு ஆசிரியரும் இலக்கியத்திலும் எழுத்து நடையிலும் நல்ல தேர்ச்சியும் உயர்வும் அடைய முயல வேண்டும்.

சாஸ்திர சம்பந்தமான கட்டுரைகள் அனேகம் வேண்டும். ஆங்கிலத்திலும் ஜர்மன் பாஷையிலும் இருப்பது போல் தமிழில் சாஸ்திர புத்தகங்கள் வளர வேண்டும். அனேக கஷ்டங்கள் இடையில் இருந்த போதிலும் நாம் நமது வேலையில் பின் வாங்குதல் கூடாது.

தற்காலத்துத் தமிழ் நாவல்களைப் பற்றியொன்றும் நான் கூற வேண்டியதில்லை. நாம் நாவல்கள் எழுதத் தொடங்கி அதிகம் நாளாக வில்லை. மேலும் நமக்கு முன்னால் வசன நூல்கள் இல்லாததால் ஒரு நாவல் எழுதுவதற்கு மிகுந்த சிரமப்பட வேண்டியிருக்கிறது. இருந்தாலும் நாவல் அல்லது நவீனம் என்பதன் முக்கிய அம்சங்கள் யாவை யென்று நாம் அறிந்து கொள்ளுதல் வேண்டும். வாழ்க்கையின் உண்மைச் சரித்திரமே நாவலாகும். மேல் நாட்டு ஆசிரியர்களை யப்படியே இவ்விடம் கொண்டு வராமல் நம் நாட்டுப் பழக்க வழக்கங்களையும், நாட்டு நடத்தையையும், மக்கள் மனப் போக்கையும் தழுவியே நாவல்கள் எழுத வேண்டு மென்று யாவரும் அறிந்து கொள்ள வேண்டும். நாவல்கள் மனிதர்கள் வாழ்க்கையில் நடக்கும் சம்பவங்களைக் கூறுவன வாதலால் அவற்றில் ஆசிரியருடைய நீண்ட பிரசங்கங்களுக்கும், விரிவான வாக்கு வாதங்களுக்கும் இடம் கிடையாது.

நாவல் மட்டுமன்றி நாடகங்களும் மிகுதியாய் எழுதப்படல் வேண்டும். ஆனால் இவ்வளவுடன் நம் வேலை முடிந்து விடவில்லை. செய்யுள் தற்பொழுது ஓர் புது நோக்கத்தைக் கைக்கொள்ள வேண்டும். எப்பொழுதும் கடவுளையும், நீதிகளையும், மனிதன் இறந்த பின்பு செல்லக் கூடிய நரகத்தையும் கூறுவதாயின்றி உலக விஷயங்களைப் பற்றியே யிருத்தல் அவசியம். மிகவும் எளிய நடையிலும் எழுதப்பட வேண்டும். எளிய நடையிலேயே அரிய பெரிய பொருள் அடங்கிய விதமாய்ச் செய்யுள் கற்பிக்கலாம். இதற்குப் பாரதியாரே ஓர் பெரும் வழி காட்டியாவார்.

ஒரு சிறு வியாசத்தில் இரண்டாயிரம் வருஷங்களாய் வாழ்ந்த மொழியின் முன்னேற்றத்தைப் பற்றிக் கூறுதல் முடியாத காரியம். நாம் செய்ய வேண்டிய பல வேலைகளில் சிலவற்றையே கூறியுள்ளேன். இவையாவும் செய்வோரை மக்கள் போற்ற வேண்டும். வாழ்க தமிழ்மொழி!

# மரபு காத்த மன்னவன்

(தே. ப. பெருமாள்.)

'செந்தமிழ் நாடென்னும் போதினிலே—இன்பத்
தேன்வந்து பாயுது காதினிலே.'

என்று பாரதியார் புகழ்ந்து போற்றிய நஞ்செந்தமிழ்நாடு முன்னை ஞான்று மூப்பிரிவினதாய் இருந்தது. அவை முறையே சேரநாடு சோழநாடு, பாண்டி நாடென்ப. இவற்றுள் பாண்டிநாட்டை ஈண்டிய சிறப்பிற் பாண்டியர் மாட மதுரையைத் தலைநகராகக்கொண்டு ஆண்டு வந்தனர். இவர் வீரத்திலே மிக்கவர். வெற்றியிலே சிறந்தவர். குடிமக்களிடம் அன்பு பெருகியவர். இவர் குடிகளைத் தங்கண்ணெனக் காத்து வந்தனர். இவரது செங்கோன் முறையில் மக்கள் துன்பம் என்பதை அறியாராய் வாழ்ந்து வந்தனர். மாதவர் நோன்பும் மடவார் கற்பும் இக்காவலர் காவலால் விளக்கமுற்றிருந்தன. எங்கணும் உயரிய நீதியே வழங்கிவந்தது. இவ்வாறு நீதியாய் மன்பதை புகழ அரசாண்ட இம்மன்னர் மரபிலேயே நெடுஞ்செழியன் என்னும் மன்னனும் தோன்றினன். இவன் தம் முன்னோர் கொண்ட முறையை முழுதுங் கொண்ட மன்னனவான். உயரிய நற்குணம் படைத்தோன். இவனது பெருமை தமிழகமெங்கணும் பெருகி யிருந்தது. இம்மன்னன் காலத்தி லேயே சிலம்பு காரணமாகக் கொலை நிகழ்ந்தது. வஞ்சக நெஞ்சனாய பொற் கொல்லன் இம்மன்னனை ஏய்த்துத் தானும் உடந்தையாக நின்று கோவலனைக் கொலை செய்வித்தான். இம்மன்னன் பின்னர் அக் கொலை அவக்கொலை யெனக் கண்ணகியின் வாயிலாய் அறிகிறான். உடனே அக் கொலைக் குற்றத் திற்குத் தன்னுயிரை நீத்து மாசற்ற தன் மரபைக் காத்தான். இவ்வாறு தன் னுயிரையும் நீத்து தன் மரபைக்காத்த இம் மன்னவன் பெருமையை சிலப் பதிகாரம் என்னும் செந்தமிழ்நூல் நன்கு போற்றுகிறது. இவனது குற்ற மின்மையையுங் கூறி இவன் தன் மரபிடை வைத்த பற்றையும் நன்கு விளக்குகின்றது. அப் பகுதியினை ஈண்டெடுத்துக்காட்டி அம்மன்னனின் பெருமையை விளக்குதற்கே இக் கட்டுரை எழுந்த தென்க.

கணவனை யிழந்த கண்ணகி பாண்டியமன்னவன் முன்னர்த் தோன்றி னள். ஆண்டுக் கண்ணகியின் துன்பக்கோலத்தைக்கண்ட காவலன் மதி மயக்கமுற்று அவளை யாரென வினவினன். அதற்குக் கண்ணகி,

'தேரா மன்னா செப்புவ துடையேன்
....................................
வாயிற் கடைமணி நடுநா நடுங்க
ஆவின் கடைமணி யுகுநீர் நெஞ்சு சுடத்
தான்றன்—அரும்பெறற் புதல்வனை யாழியின் மடித்தோன்
பெரும் பெயர்ப்புகா ரென்பதியே யவ்வூர்
ஏசாச் சிறப்பி னிசைவிளங்கு பெருங்குடி
மாசாத்து வணிகன் மகனையாகி

வாழ்தல் வேண்டி யூழ்வினை துரப்பச்
சூழ்கழன் மன்ன! நின்னகர்ப் புகுந்திங்
கென்காற்சிலம்பு பகர்தல் வேண்டி நின்பாற்
கொலைக் களப்பட்ட கோவலன் மனைவி
கண்ணகி யென்பதன் பெயரே........'

எனத் தன்னை விளக்கமாகக் கூறினள்.

இதுகேட்ட மன்னவன் கண்ணகியை நோக்கி "பெண்ணே! நின் கணவன் என் தேவி காற்சிலம்பைக் களவு செய்தான். ஆதலின் அவனைக் கொல்லுதல் செய்தேன். கள்வனைக் கொல்லுதல் கடுங்கோ லன்று. அது மன்னவர் நீதியே" என்றுரைத்தான்.

"மன்னவனே! என் கணவன் கள்வனல்லன்; அவன் கொணர்ந்த சிலம்பிடை அமைந்தது மாணிக்கம்" என்றாள் கண்ணகி.

அரசன் "அங்ஙனமாயின் "எம்தேவி சிலம்பிடை அமைந்தது முத்தே" என்றவனாய், கோவலன் கையினின்றும் பெற்ற சிலம்பைத் தன் முன் வைத்தான். தன் சிலம்பைக்கண்ட கண்ணகி அதை உடைத்தாள். அதினின்றும் மாணிக்கம் மன்னவன் வாயிலில் துள்ளித் தெறித்தது.

மன்னவன் தன் தவற்றை உணர்ந்தான். தன் முன்னோர் செய்த உயரிய நீதிகளெல்லாம் அவன் உள்ளத்தே தோன்றி நின்றன. அதுபோழ்து அவனது உயிர் உடலில் தங்கப்பெற்றிலது. வெண்குடை தாழ்ந்தது. அவன் செங்கோல் தளர்ந்தது. அவன்

'பொன்செய் கொல்லன் றன்சொற் கேட்ட
யானோ வரசன்? யானே கள்வன்!
மன்பதை காக்குந் தென்புலங் காவல்
என்முதற் பிழைத்தது, கெடுக வென்னாயுள்.'

எனக் கூறி மயங்கி விழுந்து மடிந்தான். இதுகண்ட கோப்பெருந்தேவியும் நடுக்கம் எய்தியவளாய், கொழுநன் பாதம் தொழுதவளாய்த் தன்னுயிரை நீத்தாள்.

தவறு செயப்பெறாத மனிதர் உலகிடைக் காண்டல் அரிது. அங்ஙனம் ஒருவர் இருப்பராயின் அவர் மக்களினும் மேம்பட்ட பிற குலத்தினராகவே இருத்தல் வேண்டும். மக்களாய்ப் பிறந்தார் எவரிடையும் தவறு காணுதல் இயல்பு. அத் தவற்றுக்கு அவர் பின்னர் உணர்ந்து கழுவாய் தேடுவர். ஆனால் நெடுஞ்செழியனின் தவற்றால் விளைந்ததோ அவக்கொலை. அக் கொலைக்கு அவன் எம்முறையில் கழுவாய் தேடுவன்? தற்கொலையாலேயே அவன் அக்கொலைக்குக் கழுவாய் தேடுவா னாயினன்.

நெடுஞ்செழியன் மாசற்றவன். நன் மனப்பாங்குடையன். தம் மக்களும் தம்மைப்போல் மாசற்றவராகவே இருப்பர் என்பது இவன எண்ணம். அவ் வெண்ணத்தாலேயே இவன் வஞ்சநெஞ்சப் பொற்கொல்லனின் புன்மொழியை நன்மொழியென நம்பினன். பின்னர்க் கண்ணகியால் அம்மொழி பொய்ம் மொழியென இவன் அறியநேர்ந்தது. அதுபோழ்து அம்மொழி நம்பிய தன்னை 'பொன்செய் கொல்லன் தன் சொல்கேட்ட, யானோ வரசன்? யானே கள்வன்' என இழித்துக் கூறுகிறான். ஏக்கம் கொள்ளுகின்றான்.

உயிரையும் விடுகின்றான். இது வன்றோ உயரிய மன்னவர் நீதி! இதனால் நெடுஞ் செழியனின் நல்மனப்பான்மை புலனாகின்ற தன்றோ!

தட்டான் மொழியை நம்பித்தான் புரிந்த வினையாலேயே தன் குலம் கெட்டது என்பதை அறிந்ததே காவலன் உயிர் அகலுதலுக்கு ஏவலாய் இருந்தது. அது அவன் சாவின் இறுவாயிற் கூறிய 'மன்பதை காக்குந் தென்புலங் காவல் என்முதற் பிழைத்தது. கெடுக வென்னாயுள்' என்னும் உயரிய மொழியாற் போதரும்.

உண்மையாய் ஆயுங்கால் மன்னவனிடம் அவமாய் நிகழ்ந்த கொலைக் குற்றம் காணப்பெறல் அரிது. நெடுஞ்செழியன் தன் காதலி காற்சிலம்பைக் களவாடிய கள்வனைக் கொல்ல ஏவல் செய்தானேயன்றி குற்றமற்ற கோவலனைக் கொலை செய்யக் காவலரிடம் கூறினானல்லன். இது காவலரிடம் பணித்த ஆணையாற் புலனாகும்.

'ஈங்கென்
தாழ்பூங்கோதை தன் காற்சிலம்பு
கன்றிய கள்வன் கையதாகிற்
கொன்றச் சிலம்பு கொணர்க வீங்கென.'

என்பதே மன்னனின் ஆணையாகும்.

ஆனால் தட்டான் மன்னனை ஏய்த்தான். மன்னன் தட்டான் கூறிய குற்றமற்ற கோவலனையே தன் உள்ளத்தின்கண் கள்வனென உறுதிப்படுத்தினான். இதனாலேயே இவன் கோவலனைக் கொல்ல ஆணையும் கொடுத்தது. இதனால் கொலைப்பழி ஏய்த்த தட்டானையே சாரும். இதில் மன்னனின் தவறு என்னவெனின் ஆய்ந்தறியாமை ஒன்றே.

கோவலன் இறந்தது அவனது பண்டை ஊழ்வினைப் பயனாலேயே. பண்டைப் பிறப்பில் பரதனென்னும் பெயரிய இக்கோவலன் சிங்க புரத்துறைந்த சங்கமன் என்னும் ஒரு வணிகனை வீணே அந்நாட்டு மன்னனால் கொல்லுவித்தான். கொலைப்பாவமே இவனை இப்பிறப்பில் அடுத்தது. ஆதலாலே இவன் கொலைப்பட்டான். இது இளங்கோவடிகள் மக்களை நோக்கிக்கூறிய,

'நண்ணும் இருவினையும் நண்ணுமின்கள் நல்லறமே
கண்ணகி தன் கேள்வன் காரணத்தால்—மண்ணில்
வளையாத செங்கோல் வளைந்ததே பண்டை
வினையாகி வந்த வினை.'

என்னும் நல்லுரையால் விளங்கும். இவ்வடிகளினின்று இன்னும் மன்னனின் வளையாத செங்கோற் பெருமையும் தெளிவுற இலங்கும்.

கொல்லனால் நிகழ்ந்த கொடுங்கொலைக்குத் தானும் உடந்தையென எண்ணி, உயிரை நீத்துத், தன் மரபைக்காத்த இம்மன்னவன் பெருமையைச் சிலப்பதிகார ஆசிரியர்,

'மெய்யிற் பொடியும், விரித்த கருங்குழலும்
கையில் தனிச் சிலம்பும் கண்ணீரும்—வைக்கோல்
கண்டளவே தோற்றான், அக்காரிகை தன் சொற்செவியில்
உண்டளவே தோற்றான் உயிர்.'

என்னும் பொன்மொழியாற் புகழ்ந்து கூறுவாராயினர்.

# பாரதி சித்திரம்

## "கண்ணம்மா—என் காதலி"

(ஆரியூர்-வ. பதுமநாப பிள்ளை.)

### V

### 'குறிப்பிடம் தவறியது'

எங்கும் அமைதி குடிகொண்ட நள்ளிரவு. தனது காதலனாகிய கடலரசனை விரைந்தடைய விரும்பிய யமுனாதேவி, வெகு வேகமாக ஓடிக்கொண்டிருக்கிறாள். புனிதம் மிகுந்த புண்ணிய நதிகள் ஏழில் ஒன்றாகிய அந்த யமுனை யாற்றின் கரையிலே, தென் மூலையிலே, உள்ளத்தைக் கொள்ளை கொள்ளும் பரிமளம் மிகுந்த மலர்கள் நிறைந்த செண்பகச் செடிகள் நிரம்பியதொரு பூஞ்சோலையிலே, பளிங்குக் கல்லால் அமைந்ததொரு அழகிய மேடைமீது, ஒரு வாலிபன் அமர்ந்துகொண்டிருக்கிறான். நீல வான வீதியிலே கம்பீரமாக பவனி வரும் மோகன சந்திரன், தனது வெள்ளி நிலவை அள்ளி அள்ளி எங்கும் இறைத்துச் சிரித்துக் கொண்டிருக்கிறான். அமைதி குடிகொண்ட அந்த நடு நிசியிலே, அந்த வாலிபன் வெண்ணிலவின் குளிரொளியைக் கண்டு பெரிதும் மகிழவேண்டியதற்குப் பதிலாக, துயரம் மிகுந்த முகத்தினனாய் அமர்ந்து கொண்டிருக்கின்றான். துன்ப மிகுதியினால், அவன் தன்னை மறந்தவனாய் தனக்குத் தானே பலவாறு பிதற்றத் தொடங்கி விடுகிறான். அவ்வாலிபன் என்ன பிதற்றுகிறானென்பதைச் சற்று கவனிப்போம்:—

" தீர்த்தக் கரையினிலே—தெற்கு மூலையில்
செண்பகத் தோட்டத்திலே,
பார்த்திருந்தால் வருவேன்—வெண்ணிலாவிலே
பாங்கியோ(டு) என்று சொன்னாய்!
வார்த்தை தவறிவிட்டாய்!—அடி, கண்ணம்மா!
மார்பு துடிக்குதடீ!
பார்த்த விடத்திலெல்லாம்—உன்னைப்போலவே
பாவை தெரியுதடீ! "

"கண்ணம்மா! இன்று மாலையிலே, நான் உன்னைச் சந்தித்தபோது, நீ எனக்கு அளித்த வாக்குறுதி இப்பொழுது என்ன ஆயிற்று? யமுனை யாற்றங் கரையிலே— தெற்கு மூலையிலுள்ள செண்பகத் தோட்டத்திலே—எல்லோரும் அயர்ந்து உறங்கும் நள்ளிரவிலே—உள்ளத்தைக் கொள்ளைகொள்

ளும் வெள்ளி நிலவிலே வந்திருந்து எனக்காகக் காத்துக்கொண்டிரு. அவ் வேளையிலே, நான் எனது சிந்தைக்கினிய அந்தரங்கத் தோழியுடன் அங்கு வந்து சேர்வேன்."—என்று நீ என்னிடம் கூறிய மொழி என்ன ஆயிற்று? மன்னர் குலத்தில் பிறந்தவளாகிய நீ, சொன்ன சொல் தவறமாட்டாயென்ற உறுதியான நம்பிக்கையினாலல்லவா, நான் உன் பொருட்டு இவ்விடத்தில் இவ்வளவு நேரமாகக் காத்துக் கொண்டிருக்கிறேன். உனது வார்த்தையை உறுதியாக நம்பி இங்கு வந்து சேர்ந்த என்னை, நீ இவ்வாறு ஏமாற்றிவிடத் துணிந்தது தருமந்தானா? எனது நெஞ்சக் கோயிலில் கம்பீரமாக வீற்றிருக்கும் எனது ஹிருதயேச்வரியாகிய நீ—கள்ளமற்ற தூய உள்ளமுடைய புண்ணியர்களின் குலத்தில் பிறந்தவளாகிய நீ— பெண்மைத்தன்மைக்கே ஒரு தனிப் பெருஞ் சிறப்பை அளிக்கப் பிறந்த நற்குணச் செல்வியாகிய நீ—உன்னைக் கண் குளிரக் காணாவிடில், எனது மனம் எத்தகைய கொடிய துன்பத்தை அனுபவிக்கக் கூடுமென்பதை நன்கு உணர்ந்திருப்பவளாகிய நீ, இப்பொழுது சொன்ன சொல் தவறிவிட்டாயென்பதை நினைக்கும்போதே எனது நெஞ்சம் எவ்வாறு பதைபதைக்கிறது தெரியுமோ? அதைச் சிந்திக்கச் சிந்திக்க எனது மார்பு எவ்வாறு துடிதுடிக்கிறது தெரியுமோ?

எனது சிந்தைக்கினிய செல்வியே! இந்த நள்ளிரவிலே—இந்த வெள்ளி நிலாவிலே—நீமட்டும் என்னருகில் இருந்தால், எனது மனம் அனுபவிக்கக் கூடிய ஆனந்தம் எத்தகையதாக இருக்குமென்பதை வருணித்துக் கூறக் கூடிய சக்தி எனக்கு உண்டோ? அதோ, வான வீதியிலே குளிரொளி பரப்பி உலவும் அந்தச் சந்திரன் உற்று நோக்கும்போது, அது எனது கண்களுக்கு எனது மனத்திற்கினிய கண்மணியாகிய உனது மலர் முகமாகவே காட்சியளிக்கிறது! அங்கு தோன்றி நிற்கும் உனது மலர் முகத்தைக் காணும்போது, அம் முக மலரிலுள்ள செந்தாமரைச் செவ்விதழ்களில் முத்தமிட்டுக் களிக்க



வேண்டுமென்னும் வெறிகொண்டு எனது உள்ளம் பெரிதும் துள்ளுகிறது! ஆனால், அந்தோ! அங்குவந்து சேரக்கூடிய சக்தி, எனக்கு உண்டோ? அதோ,

மெள்ள மெள்ள நகர்ந்து செல்லும் அவ் வெண் மேகத்தைப் பார்க்கும்போது, அங்கும் நீலச் சேலை உடுத்தி சித்திரப்பதுமைப்போல் சிரித்து நிற்கும் சுந்தரியாகிய நீயே எனது கண்களுக்குக் காட்சி யளிக்கிறாய்! எனது கைகளால் கட்டியணைத்துக் களிக்க முடியாதவாறு நீல வானத்தில் சிரித்துக்கொண்டு நிற்கும் உன்னிடம் வந்து சேர, எனக்கு இரு சிறகுகள் மட்டும் இருந்திருந்தால், இப்பொழுது நான் எத்தகைய ஆனந்தத்தை அனுபவிப்பேன்! அதோ, அந்த செண்பகப் புதரை உற்று நோக்கும்போது, அங்கும் உனது மோகன வடிவமே எனது கண்களுக்குப் புலனாகிறது! சரி, சரி—விட்டேனா பார் உன்னை! இதோ உன்னைக் கட்டியணைத்து எனது காதல்விடாயைத் தணித்துக்கொண்டு விடுகிறேன் பார்!''

இவ்வாறு கூறியவாறே, அந்த வாலிபன் எழுந்து சென்று, தனது காதலியின் மலர் முகத்தின் உருவெளித்தோற்றம் தோன்றிய செண்பகச்செடியிடம் சென்று, அச் செடியைப் பேரார்வத்துடன் கட்டியணைத்துக்கொண்டுவிடுகிறான்! அந்தோ, என்ன பயங்கரமான ஏமாற்றம்! அச் செடியிலிருந்து, மலர்களும் தழைகளும் நிலத்தில் உதிர்ந்து விழுகின்றன! மிகுந்த ஏமாற்றமும் பெருந் துயரும் அடைந்தவனாய் நிலத்தில் விழுந்த அவன், தரையில் சிதறிக்



கிடந்த செண்பக மலர்களைப் பொறுக்கி யெடுத்து, "எனது சிந்தைக்கினிய செல்வக்காதலி மட்டும் இவ்வேளையில் இங்கு இருப்பின், இவ்வழகிய மண மலர்களை அவளது கருங்குழலில் எனது கைகளினாலேயே சூட்டி எவ்வளவு இன்பத்தை அனுபவிப்பேன்!''—என்று எண்ணி எண்ணிப் பெரிதும் ஏங்குகிறான். சிறிது நேரம் சென்றபின், அவனது நோக்கம் அருகில் ஓடிக்கொண்டிருக்கும் யமுனையாற்று நீரிற் செல்கிறது. என்ன விந்தை! ஓடிக்கொண்டிருக்கும் அந்த நீரில்கூட, அவனது கண்களுக்கு அவனது காதலியின் மலர் முகமே காட்சியளிக்கிறது! அதைக் கண்டு விரைந்தெழுந்து அவன், ஆற்றின் கரையில் சென்று நின்று, அதில் தோன்றிய தனது காதலியின் மலர் முகத்தின்மீது ஒரு செண்பக மலரை எறிகிறான். அந்தோ! அம் மலர் முகத்

தோற்றத்துடன் அம்மலரும் விரைந்து மறைந்துவிடுகிறது! அதைக்கண்டு பெரிதும் வருந்திய அவன், பழையபடியே செண்பகத் தோட்டத்திலுள்ள பளிங்கு மேடைக்குத் திரும்பிவந்து அதன்மீது அமர்ந்துகொண்டு சிந்தனைக் கடலில் மூழ்கிவிடுகிறான். மீண்டும் அவனது வாய், பின்வருமாறு பிதற்றத் தொடங்கியது:—

"கண்ணம்மா! என் கண்மணியே! இவ்வேளையிலே—இவ்விடத்திலே—நீ என்னருகில் இல்லாததன் பயனாக, என் உள்ளத்திலிருந்து கிளம்பிய வெப்பம் உடல் முழுதும் பரவி, எல்லா அங்கங்களையும் பெரிதும் கொதிக்கச் செய்கிறதே! உனது குளிர்ந்த கொங்கைகளின் நடுவிலிருந்து இன்புறவேண்டிய எனது தலை—நீ என்னருகில் இல்லாததன்பயனாகத் தன்னை மறந்து மயங்கித் தளர்ந்து சுழன்று வருந்துகின்றதே! அதோ, நீலவானில் கம்பீரமாக நிமிர்ந்து நிற்கும் அந்த மோகன சந்திரன், பரந்த வானம் முழுவதையும் அணைந்து நிற்கும் காட்சி எவ்வளவு அற்புதமாக இருக்கிறது! உள்ளத்தைக் கொள்ளை கொள்ளும் மோகனப் பேரழகிலாவது—உயிரையும் உடலையும் ஒருங்கே குளிர்விக்கும் ஒப்பற்ற குளிரொளியிலாவது—கைம்மாறு கருதாத தனிப் பெருங் கருணையிலாவது வேறு எதிலாவது நீ அந்தச் சந்திரனைக் காட்டிலும் சிறிதேனும் தாழ்ந்தவளா என்ன? உன்னைப் பிரிந்து தனித்திருந்து தவித்து நிற்கும் என்னை நோக்கி. அந்த குறும்புக்காரச் சந்திரன் சிரித்துப் பரிகசித்து நிற்பது, என் உள்ளத்தைக் கூரிய வாளால் அறுப்பது போலிருக்கிறதே! உனது இன்னருள் ஒன்றையே உறுதியாக நம்பி நின்ற என்னை, இத்தகைய கதிக்குள்ளாக்க நீ மனந் துணிந்தது தருமந்தானா?

இந்த நள்ளிரவிலே, இந்த மண்ணுலகில் வாழும் உயிர்களெல்லாம், நித்திரா—தேவிக்கு அடிமைப்பட்டுத் தம்மை முற்றிலும் மறந்து தூக்கமாகிய இன்பத்தில் ஆழ்ந்து மகத்தான மகிமை பொருந்திய மோன நிலையில் இருக்கின்றனவே! எல்லா உயிர்களும் எல்லாத் துயர்களையும் மறந்து மோன-ஆனந்தத்தில் மூழ்கியிருக்கும் இவ்வேளையிலே, நான் ஒரே ஒருவன்மட்டும் 'பிரிவு' என்னும் கொடிய மேகத்தில் கிடந்து சித்திரவதைப்படுவது முறையோ? வேறு எத்தகைய துன்பத்தையும் எனது மனம் துணிந்து ஏற்றுக்கொண்டு கலங்காதிருக்கக்கூடிய உறுதி உடையதே; ஆனால், உன்னைப் பிரிந்து தனித்துத் தவித்து நிற்பதன் பயனாக உண்டாகும் கொடுந் துன்பத்தைச் சகித்துக் கொண்டு சும்மா இருக்கக்கூடிய சக்தி, எனது மனத்திற்கு இல்லையே!

என் மனத்தை நானே நொந்துகொள்வதில் என்ன பயன்? என்று நீ எனது மனத்தை உன் வசப்படுத்தி உனக்கே உரிமைப்படுத்திக்கொண்டுவிட்டாயோ, அன்றுமுதல் இன்று வரையில் அது எனது நலத்தில் சிறிதும் சிரத்தை யின்றி—எனது கட்டுப்பாட்டுக்குச் சிறிதும் அடங்காமல்—இரவும் பகலும் எந்நேரத்திலும் உன்னையே சிந்தித்துச் சிந்தித்து ஏங்கிக் கொண்டிருக்கிறது. அது படும் கொடுந்துயரை நீக்க உனக்கே மனமில்லாமற் போய்விட்டால், நான் எவ்வளவு வருந்தினாலும் என்ன பயன்? என் மனம் இப்பொழுது எனக்குச் சொந்தமாக இல்லை; அது உன்னையே தஞ்சமாகக் கொண்டு உனது இன்னருளைப் பெற்றுமகிழ இரவும் பகலும் ஏங்கிக்கிடக்கிறது. உன்னையே தஞ்சமாக அடைந்த எனது நெஞ்சத்தை—உனக்கே அடிமைப்பட்டுவிட்ட எனது நெஞ்சத்தை—நீ இன்னும் சோதித்துச் சோதித்

துத் துன்புறுத்த மனம் துணிந்திருந்தால், அப் பழிபாவம் உன்னையே சாரு மென்பதை நீ சிறிதேனும் நினைத்துப் பார்க்கவில்லையா?

கண்ணம்மா! நீ ஊரிலுள்ள பெண்களைப்போல், ஒரு சாதாரணப் பெண்ணா என்ன? பலவகைப்பட்ட அலங்காரங்களும் சிறந்துவிளங்கும் உனது மகத்தான திருமாளிகையிலே, இரவிலும் பகலிலும் எந்த நேரத்திலும்—எல்லா வாசல்களிலும்—காவற்காரர்கள் இடையறாமல் கடுமையான காவல் செய்துகொண் டிருக்கிறார்களென்று கேள்வியுற்றேன். உனக்கு நான் மிக வும் வேண்டியவனாக இருந்தும்—எனது நெஞ்சத்தை உனக்கு அடிமைப் படுத்திவிட்ட பின்பும்—நான் நினைத்தபோ தெல்லாம் உனது மாளிகைக்கு வந்து உன்னோடு கலந்து உரையாடிக் களிக்கக்கூடிய மனத்துணிவு எனக்கில் லையே! இந்த எளிய உடையுடனும் தளர்ந்த நடையுடனும் நான் உனது மாளிகைக்கு வரத் துணிவேனாயின், எனது நோக்கம் நிறைவேறக் கூடுமோ? செல்வத்திற் சிறந்த சீமான்கள் சிறந்த அலங்காரங்களுடன் கூடியவர்களாய் உனது மாளிகையை அடைவார்களானால், உனது மாளிகையின் வாசலிலுள்ள காவற்காரர்கள் அவர்களை மரியாதையாக வரவேற்று உள்ளே செல்ல அனும திக்கக்கூடும்; ஆனால், வெளிப்பகட்டு சிறிதும் அறியாத எளியவனாகிய நான், அங்கு வருவேனாயின், அவர்கள் என்னை அவமதித்து வந்தவழியே திரும்பிச் செல்லுமாறு வெருட்ட மாட்டார்களென்பது என்ன நிச்சயம்? எனக்கும் உனக்கும் இடையில் உள்ள தொடர்பு எத்தகையதென்பதை, அப் பேதைக் காவலர்கள் அறிவார்களா என்ன? கட்டும் காவலும் மிகுந்து கிடக்கும் உன் மாளிகையைத் தேடிவந்து நான் அவமானமடைய விரும்பவில்லை; அக் கொடிய அவமானத்தைப் பொறுத்துக் கொள்ளக்கூடிய சக்தியும் என் மன திற்கில்லை. மேலும், 'கடு—நிலைமை' எனும் அரசியும், அவ்விடத்திலேயே எக் காரணத்தை முன்னிட்டோ தலைநிமிர்ந்து நிற்க வெட்கியவளாய் மனம் குலைந்து நிற்கிறாளாம். ஆதலின், உன்னைக்கண்டு களிப்பதற்காக உனது மாளி கையைத் தேடிவர நான் விரும்பவில்லை. என் கண்ணே! என் இன்னுயிர்ச் செல்வியே! எனது ஆருயிர் அரசியே! நீ எனக்கு அளித்த வாக்குறுதியை உறுதியாக நம்பி, இச் செண்பகத் தோட்டத்திலே—இந்த இரவிலே—இவ் வளவு நேரமாகக் காத்திருந்து பார்த்தும், இன்னும் நீ எனக்குக் காட்சி யளிக்கவில்லையே! ஒருகால், என்னைச் சோதிக்க எண்ணி இவ்விடத்திலேயே எங்கேனும் ஒளிந்துகொண்டிருந்து, என்னைப் பலவாறு பிதற்றச்செய்து வேடிக்கை பார்த்துக் கொண்டிருக்கிறாயா என்ன? என் கண்ணே! என் இன்னுயிரே! இதுவரையில் என்னைச் சோதித்தது போதும்; அதோ பார்! கீழ்வானம் வெளுத்து விட்டது! இன்னுமா உன் மனம் இறங்கவில்லை! ஏதோ என் எதிரில் வந்துநின்று, இவ்விரவு முழுவதிலும் நான் அனுபவித்த துயரமெல்லாம் தொலையுமாறு, உனது செங்கனி வாயினால் எனக்கு ஒரே ஒரு முத்தம்கொடு பார்க்கலாம்!"

——— அவ்வேளையிலே, அவனெதிரில் நிற்கும் செண்பக மரத்தடியிலே, சித்திரத்தில் தீட்டிய அழகிற் சிறந்ததொரு மங்கையின் உருவத்தைப்போன்ற தொரு உருவெளித் தோற்றம் காணப்படுகிறது. அத் தோற்றத்தைக் கண்ட வுடன் அவ் வாலிபன் கண்கள் எவ்வளவு ஆனந்தமாக மலர்கின்றன! துயரம் கொண்டிருந்த அவனது முகத்தில், எவ்வளவு அழகான புன்னகை தோன்று கிறது! மேடையை விட்டு எழுந்து நிற்கும் அவன், அவ்வுரு வெளித்தோற்

றத்தை நோக்கி எத்தகைய ஆவேசத்துடனும் எவ்வளவு ஆர்வத்துடனும் பாடுகிறுன் பாருங்கள்:—

"கூடிப் பிரியாமலே—ஓர் இரவெலாம்
கொஞ்சிக் குலவி அங்கே,
ஆடி விளையாடியே—உன்றன் மேனியை
ஆயிரங் கோடி முறை,
நாடித் தழுவி மனக்—குறை தீர்ந்து நான்
நல்ல களி எய்தியே—
பாடிப் பரவசமாய்—நிற்கவே தவம்
பண்ணிய தில்லையடீ!"

"என் கண்ணே! என் இன்னுயிர்ச் செல்வியே! என் இன்னமிர்தே! என் பெருந்தவப் பயனே! மண்ணுலகக் கற்பகமே! மங்கையர்க் கரசியே! மனித வாழ்வைப் புனிதப்படுத்தவந்த அருள் உருவே! இவ்வளவு நேரம் எனது மன நிலையைச் சோதிக்கத் துணிந்து இதுவரையில் நீ ஒளித்துக் கொண்டிருந்தது தருமந்தானு? இவ்வளவு நேரம் சித்திரவதைப் பட்டிருந்து இப்பொழுது உன்னைக் கண்டபின்னும், என் மனம் நீ மீண்டும் பிரிந்து சென்றுவிடுவாயோ என்று பெரிதும் அஞ்சுகிறதே! அவ்வாறு உன்னை இனியேனும் பிரியாமல், ஓர் இரவு முழுவதும் உன்னோடு கூடிக் கொஞ்சிக் குலவி மகிழ எனது நெஞ்சம் ஆவல் மிகுந்து நிற்கிறது. சிறியதொரு இடத்தில் அடைபட்டிருந்து 'கிசுகிசு' வென்று பேசிக்கொண்டிருக்கும் 'காதலை' நான் விரும்பவில்லை; உன்னுடன் கை கோத்துக்கொண்டு களித்து ஆடவும்—கந்தர்வர்களைப்போல் பூஞ்சோலையிலும் ஆற்றங்கரையிலும் வெண்ணிலவின் குளிரொளியில் மானினத்தைப்போல் மிகுந்த குதூகலத்துடன் துள்ளி விளையாடவும்—உனது பொன்மேனியை எனது ஆர்வம் தீரும்வரையில் ஆயிரங் கோடி முறைகளில் தழுவித் தழுவிப் பரவசமடையவும்—உற்சாகம் பொங்கும் உச்சக் குரலில் நமது காதலின் சிறப்பைப் பாடிப் பாடிப் பரவசமடையவும் நான் தவம் செய்திருக்கிறேனு?"

இவ்வாறு கூறியவாறே அந்த வாலிபன், அச் செண்பக மரத்தடியில் தோன்றிய உருவெளித் தோற்றத்தை நோக்கியவண்ணமே நடந்துசென்று, அம் மரத்தைப் பேரார்வத்துடன் தழுவிக்கொள்கிறுன். அந்தோ! என்ன ஏமாற்றம்! தான் தழுவிக் கொண்டிருப்பது செண்பக மரத்தையேயன்றி, தனது ஆருயிர்க் காதலியாகிய கண்ணம்மாவையல்ல வென்பதை அறிந்ததும்—தான் ஆசைப்பட்டவற்றை உண்மையில் அனுபவிக்கக்கூடிய அரும் பெருந்தவத்தைத் தான் செய்யவில்லை யென்பதை உணர்ந்ததும்—அவன் மனம் அடைந்த துன்பம் எத்தகையதென்பதை எவராலேனும் வருணிக்க முடியுமோ?

---



# பண்டைத் தமிழர் இசைச் செல்வம்

(சுவாமி விபுலானந்தர்)

ஸ்வாமி விபுலானந்தர் என்பவர் இலங்கையைச் சேர்ந்தவர். ஆங்கிலப் புலமையும், தமிழ்ப்புலமையும், தத்துவ ஆராய்ச்சியும், விஞ்ஞான ஆராய்ச்சியும் சிறக்கப் பெற்றவர். சிதம்பரம் அண்ணாமலைப் பல்கலைக் கழகத்தின் தமிழ்ப்பிரிவுக்குத் தலைவராயும் விளங்கியிருக்கிறார். இவர் சமீபத்தில் சென்னை செனட் மண்டபத்தில் பண்டைத் தமிழ்மக்களின் இசைக் கலையைப்பற்றித் தொடர்ச்சியாக ஆறு சொற்பொழிவுகளை நிகழ்த்தினார். அவற்றுள் மூன்று சொற்பொழிவுகளின் சாரம் வருமாறு.—

மஹா மஹோபாத்யாய சுவாமிநாத ஐயரின் அரும் பிரயாசையின் பயனாகக் கடந்த நூற்றாண்டின் இறுதியிலே சங்க இலக்கியங்கள் வெளியாயின. இந் நிகழ்ச்சியானது மிகவும் முக்கியமானதாகும். அந்த இலக்கியங்களிலே விலை மதிக்கவொண்ணாத பொக்கிஷங்கள் இருக்கின்றன. அவை மூடுமந்திரமாகவே இருக்கின்றன. அப் பொக்கிஷங்களால் தற்காலத்துத் தமிழ் மக்கள் பலனடையவில்லை. அவைகளை அறிவு மேம்பாட்டிற்காக உபயோகித்துக் கொள்ளவுமில்லை. புராதன தமிழ்நாட்டு ஞானிகளது அறிவு பதேசங்கள் தமிழ் மக்களுக்கு புத்துயிர் அளிக்கத் தக்கவையாகும். சங்க இலக்கியங்கள் வெளிவந்ததால் தமிழர் வாழ்க்கையின் பல துறைகளிலும் புதிய சகாப்தம் ஏற்பட்டிருக்கவேண்டும். ஆனால், மேனாட்டுக் கல்வியும் தமிழ்ப் புலமையும் நிறைந்த பண்டிதர்கள் வெகு சிலராகையால், அத்தகையவர்களால் அச்சங்க இலக்கியங்களில் காணும் விலைமதிக்க வொண்ணாத மாணிக்கங்களைத் தமிழரனைவரும் அறிந்து பெரும்பலனைப் பெறும்படிச் செய்ய முடியாமற் போயிற்று. தற்கால வாழ்க்கை அதிகப்படியாக பலன் தருவதாகச் செய்ய உதவியான படிப்பினைகளுக்காகவே நாம் புராதன நூல்களையும், வாழ்க்கை முறை முதலியவற்றையும் ஆராய்கின்றோம். இவ்விதமே பண்டைக்காலத்து சங்கீதம், சித்திரக் கலை, சிற்பக் கலை இவை எவ்வாறிருந்தன வென்பதுபற்றி ஆராய்வோம். சங்கீதம், சித்திரம், சிற்பம் இவை கலை

யுணர்ச்சி சம்பந்தப்பட்டவையாகும். கலையுணர்ச்சி முதிர்ந்த காலத்தில் இக்கலைகளும் அபிவிருத்தி யடைந்திருக்கும். ஒரு நாட்டின் மக்களது மனோநிலையும், கலையுணர்ச்சியும், நாகரிகமும், சங்கீதம், சித்திரம், சிற்பம் இவைகளாலேயே தெளிவாகும்.




ஸ்வாமி-விபுலானந்தர்.

### தமிழர் பழைமை

தமிழர் மிக்க புராதன மக்கள். ஏசுநாதர் பிறக்கும் பல நூற்றாண்டுக்கு முன்பே தமிழர் எகிப்து, கிரீஸ் முதலிய அயல் நாடுகளுடன் வர்த்தகம்

நடத்தி வந்தனர். இந்தியாவின் பல பாகங்களிலும் வசித்து வந்தனர். அவர்களது பூர்விகத்தைப்பற்றி அபிப்பிராய பேதம் உண்டு. தமிழர் வேறு நாட்டிலிருந்து குடியேறியவர்களல்லர் என்பதற்கு ஆதாரங்கள் பல.

குமரிக்குத் தெற்கே தமிழர் வசித்துவந்த பெரும்பாகத்தை கடல் கொண்டது. புராதனத் தமிழர் சங்கீதக் கலை மிக்க அபிவிருத்தி யடைந்திருந்தது.

### காலப் பாகுபாடு

நாம் கவனிக்க வேண்டிய விஷயம் சங்கீதமாகும். இது சம்பந்தமாக காலப் பாகுபாடு செய்து கொள்வது அவசியமாகும். காலத்தை மூன்று பிரிவுக ளாக்கலாம். முதல் பிரிவான சங்க காலமானது சரித்திர காலத்திற்கு முற்பட்டதாகும். இடைக்காலம் 7-வது நூற்றாண்டிலிருந்து ஆரம்பமாகிறது. அக்காலத்தில்தான் சோழமன்னர்களது ஆட்சி செழித்திருந்தது. நாயன்மார்களும், ஆழ்வார்களும்தோன்றி யிருந்தார்கள். சங்கீதக் கலையும் புத்துயிர் பெற்றது. கடைப்பாகம் 14-வது நூற்றாண்டிலிருந்து ஆரம்பமாகும். சங்ககாலத்தையே இரு பிரிவுகளாக்கலாம். முதல் பாதியில் பௌத்த சமயமும், ஜைன சமயமும் பரவி விட்டன. ஏசுநாதர் பிறக்கும் இரண்டு நூற்றாண்டுகளுக்கு முன்பு பௌத்தர்கள் வடநாட்டி லிருந்து தமிழகம் புகுந்தனர். அதற்கு முன்பு தமிழ் மொழியும் தனி இயல்புடனிருந்தது.

### பாணர் துறைநிசயங்கள்

நான் பேசப்போகும் பாணர், சங்க காலத்தவர்கள்; அவர்கள் கலையுணர்ச்சியே உருவானவர்கள்; எனினும் ஏழைகள்; அவர்களுக்குச் சொந்த வீடு வாசல்களில்லை; அவர்கள் தத்தம் மனைவிகளுடனும், யாழ்களுடனும் ஒரு குறுநில மன்னரது சபையிலிருந்து மற்றொரு குறுநிலமன்னரிடம் செல்லுவார்கள்; அம் மன்னர்களை மகிழ்வித்துப் பரிசில் பெறுவார்கள். பாணனது மனைவியின் பெயர் பாடினி; இவள் யாழ் வாசிக்கமாட்டாள்; நடனமே செய்வாள்.

தமிழ் மொழியிலே இலக்கிய சம்பிரதாயங்கள் இருக்கின்றன. காதல், இல்லறம் இவை சம்பந்தப்பட்டது அகத்திணையாகும். புறத்திணை போரிடல் முதலிய நடவடிக்கைகளைக் குறிப்பதாகும். குறுநில மன்னரது இல்லற வாழ்க்கைக் குரிய பாத்திரங்களைக் கீழ்கண்ட தொல்காப்பிய சூத்திரத்தால் அறியலாகும்:—

தோழி தாயே பார்ப்பான் பாங்கன்
பாணன் பாடினி யிளையர் விருந்தினர்
கூத்தர் விறலிய ரறிவர் கண்டோர்
யாத்த சிறப்பின் வாயில்க ளென்ப.
கற்புங் காமமு நற்பா லொழுக்கமு
மெல்லியர் பொறையு நிறையும் வல்லிதின்
விருந்துபுறந் தருதலுஞ் சுற்ற மோம்பலும்
பிறவு மன்ன கிழவோன் மாண்புகள்
முகம்புகன் முறைமையிற் கிழவோற் குரைத்தல்
அகம்புகன் மரபின் வாயில்கட் குரிய.

எக்காலத்திலும் காதல் வாழ்க்கை இடையூறாக ளில்லாமலிருப்பதில்லை. புராதன தமிழ் மக்கள் நாகரிக மடைந்து விளங்கியதால் மனைவிமார்களுடன் சச்சரவு ஏற்பட்ட காலத்து அநாகரிக மக்களைப்போல் நடக்கவில்லை. சமாதானத்திற்குச் சிரிய முறையையே கையாண்டனர். குடும்பத்தில் சச்சரவு ஏற்படுமானால் பாணன் அங்குச் சென்று தனது சாதுர்யத்தால் சச்சரவைப் போக்கிச் சமாதானம் செய்வான். பாணனுக்கு அந்தப்புரத்தில் செல்ல யாதொரு தடையுமில்லை. எனினும், இந்த பாணர்கள் ஊர்களுக்கு வெளியே தனியான இயற்கை வளப்பமுள்ள இடங்களிலேயே வாசம் செய்வார்கள். அவர்கள் வாழும் இடங்களின் சுற்றுப்புறங்கள் மனதைப் பரவசப்படுத்த வல்லனவாகவிருக்கும்.

**பேரியாழ்**



### புராதன வாழ்க்கையின் சிறப்பு

விழாக் காலங்களிலே ராஜசபையில் பாணன் யாழ் வாசிப்பதும், பாடினி ஆடுவதும் வழக்கம். அக்காலத்து வாழ்க்கை தற்காலத்து வாழ்க்கையைப் போன்றதல்ல. ரோமாபுரி சாம்ராச்சியம் நிலைத்திருந்தபோது அந்நாட்டு மக்கள் எத்தகைய வாழ்க்கை நடத்தினரோ அத்தகையதே புராதன தமிழரது வாழ்க்கையாகும். ராஜ சபையில் தங்கக் கிண்ணியிலே மதுவை எல்லோரும் பருகுவார்கள். அம்மதுவை இளம் பெண்களே வழங்குவார்கள். உள்ளூரிலே செய்த மதுவல்லாமல் அயல் நாட்டிலிருந்துவரும் மதுவையும் பருகினார்களாம். பாணன் இன்றி ராஜா சபை பூரணமானதல்ல. குறுநில மன்னர்கள் போர்க்குச் சென்று திரும்பியபோதும் வேட்டையாடித் திரும்பியபோதும் பாணன் தமது இன்னிசையால் அவர்களுக்கு உற்சாக மூட்டுவான். குறுநில மன்னர்கள் மிக்க மகிழ்வுடைந்தபோது பாணனுக்கு பொன் தாமரையை பரிசளிப்பார்கள்; பாடினிக்குப்பொன்மாலை அளிப்பார்கள். பாணனுக்கும், பாடி

ளிக்கும் ராஜசபையில் நன்மதிப்பும், சமத்துவமும் அளித்து வந்தனர். அவ ரது தொழிலுக்கும் மதிப்பிருந்தது. குறுநில மன்னர்கள் பாணனுக்கு எவ் வித சௌகரியங்களையும் செய்து தங்களைவிட்டு நீங்க வேண்டாமென்று வற் புறுத்தினாலும் அவன் ஓரிடமே இருப்பதில்லை. அவ்வப்போது கிடைத்த திரவியத்தைச் செலவிட்டு மற்றொரு ராஜ சபைக்குச் செல்வதே வழக்கமா கும். இத்தகைய பாணர்கள் தங்கள் யாத்திரையின் போது நடுவழியில் ஒரு வரை யொருவர் சந்திப்பதுண்டு. ஒரு பாணன் மற்றவனுக்கு தனக்கு பரிசு அளித்த வள்ளல் இருக்கும் இடத்திற்கு வழி சொல்வதுண்டு. பரிசில் பெற் றானொருவன் தனக்கு பரிசில் அளித்தவரது வள்ளன்மையையும், அவரது நக ரங்களினியல்பையும், அவற்றிலுள்ளாருடைய நற்குண நற்செய்கைகளையும்: அவரது அரண்மனையின் சிறப்பை யும், பல திறத்தினரும் எத்தும்படி பல துணை விசேடத்தோடு அவர் வீற் றிருத்தலையும் பரிசில் பெறக் கருதிய பாணனொருவனுக்குக் கூறுவான். பாணர்கள் தேர், குதிரைகள், யானை கள் முதலிய வற்றைப் பரிசிலாகப் பெறுவார்கள். குறுநில மன்னர்கள் இந்த பாணரை அன்புடனும் சமத் துவத்துடனும், நன்மதிப்புடனும் நடத்துவார்கள்.




யாழ்கள்

இந்த பாணர் எடுத்துச் செல் லும் யாழ்கள் இருவகைப்படும். ஒன்று பேரியாழ்; மற்றொன்று செங் கோட்டியாழ்; இந்த யாழ்களின் வரு ணனை பத்துப் பாட்டில் காணலாம். இந்த யாழ்களின் அமைப்பு எவ்வா றிருந்தென்பதை யூகிக்கக்கூடும். இந்த வாத்தியங்கள் நாளுக்கு நாள் விருத்தியடைந்து வந்தன. சிறிது காலத் திற்குப் பின் மகரயாழ், சகோடயாழ் என்ற இருபுதிய யாழ்கள் தோன்றின. முதலிரண்டு யாழ்களும் சங்க காலத்தவை; செங்கோட்டியாழான சிறிய யாழுக்கு 7 தந்திகள்; பேரியாழுக்கு 21 தந்திகள்; சகோட யாழுக்கு 14 தந்தி கள்; மகர யாழுக்கு 17 தந்திகள். மகரயாழும், சகோட யாழும் சிலப் பதிகார காலத்திற்குப் பிற்பட்டவையாகும்.

பாணனுடனே அவனது மனைவியான பாடினி உடன் செல்வாள். பாணன் யாழ் வாசிக்கும்போது இவள் ஆடுவாள்; இவள் யாழ் வாசிப்பதே இல்லை. பாடினி கற்புடையவள்; கற்புக்கு அறிகுறியான முல்லை மலரை அணிந்திருப்பாள். எனவே கற்புடைய மாதர்கள் அக்காலத்தில் நாட்டியம் செய்தன ரென்றால் அக்காலத்து நாட்டியம் விலை மாதருக்குரிய கலையாகி க்ஷீணதிசை யடையவில்லை யென்பது விளங்கும். பின்னர் நாட்டியம் விற லியர், கூத்தர் இவர்களது கலையாயிற்று. விறலியரே யாழ் வாசிக்கவும் ஆரம் பித்தனர்.

கல்லாடம் மத்தியகால நூலாகும். அப்பொழுது ஆரியக் கலை தமிழ் நாட்டில் கலந்து விட்டது. அக்காலத்திலே 1000 தந்திகளையுடைய நாரதப் பேரியாழ், 100 தந்திகளையுடைய கீசக யாழ், ஒரே தந்தியுடைய மருத்துவ யாழ் இவைகள் ஏற்பட்டன. இந்த யாழ்களின் லட்சணங்களைக் கல்லாடம் என்னும் நூலில் காணலாம்.

செங்கோட்டியாழ்



[இந் நிலையில் சுவாமி விபுலானந்தர் தமது யூகத்தால் ஆராய்ச்சிகளை அடிப்படையாகக் கொண்டு எழுதிய மேலே கண்ட பல யாழ்களின் உருவப்படங்களைக் காட்டி விளங்கினார். இது வரையில் எவரும் இந்த யாழ்கள் எவ்வாறிருக்குமென்பதை நிர்ணயித்துக் கூறவில்லை யென்பது குறிப்பிடத் தக்கதாகும்.]

முடிவாக சுவாமிகள் கூறியதாவது:—"தற்போது பரத நாட்டியமும், சங்கீதமும் புத்துயிர் பெற்றிருக்கையில் புராதன தமிழர் கலையையும் ஆராய்வது பலனுடையதாகும்."

## தமிழ் இசை ஸ்வரங்களும், கணித அளவும்

"தமிழ் இசை ஸ்வரங்களும், கணித அளவும், அவை தோன்றிய வரலாறும்" என்பது பற்றி சுவாமி விபுலானந்தர் தமது இரண்டாவது பிரசங்கத்தில் பேசியதின் சாரமாவது:—

புராதன தமிழ் இசை வல்லுநர்கள் ஆரம்பத்தில் உபயோகித்து வந்தது இரு யாழ்களாகும். ஒன்று பேரியாழ்; மற்றொன்று செங்கோட்டி யாழ் அல்லது சிறு யாழுக்கு 7 தந்திகள். கிறிஸ்து பிறந்த இரண்டொரு நூற்றாண்டுகளில் 17 தந்திகளையுடைய மகரயாழும் 14 தந்திகளையுடைய சகோட யாழும் தோன்றலாயின. கி. பி. 10-வது நூற்றாண்டிலோ அல்லது, அதற்குப் பின்னரோ வாழ்ந்த கல்லாடர் என்ற புலவர் இதர நான்கு யாழ்களைக் குறிப்பிடுகின்றார். அவையாவன:—1000 தந்திகளையுடைய நாரதப் பேரியாழ்; 100 தந்திகளையுடைய கீசகப் பேரியாழ்; 9 தந்திகளையுடைய தும்புருயாழ்; ஒரே தந்தியுடை மருத்துவயாழ்; தும்புரு யாழும், மருத்துவ யாழும் வீணை போன்றவையாகும். நூல்களில் காணும் வருணனையி லிருந்து அந்த இசைக்கருவிகள் அழகிய வேலைப் பாடமைந்தன வென்றும், விலையுயர்ந்த ரத்னங்களை அக் கருவிகளுக்குள் போட்டிருந்தனரென்றும் அழகிய மாதர்கள் உபயோகிக்கும் யாழ்களைப் பட்டால் செய்த அழகிய பெட்டிகளில் வைப்பரென்றூர் தெரிகிறது.

### யாழின் வருணனைகள்

யாழின் வருணனைகளைச் சிறு பாணாற்றுப்படை, பெரும்பாணாற்றுப் படைகளிலும், பொருநாற்றுப்படையிலும், மலைபடு கடாமிலும், சிலப்பதி

காரம், கல்லாடம் இவைகளிலும் விரிவாகக் காணலாம். இனி நான் கூறப் போகும் விஷயங்கள் எல்லாம் அந்த வருணனைகளையே அடிப்படையாகக் கொண்டவையாகும். பேரியாழ் கையில் தூக்கிச்செல்லக் கூடியதாகும்; பிற் காலத்து நாரதப் பேரியாழ், தம்புரு யாழ் போன்றதல்ல. பேரியாழ் மூன்று ஸ்தாயிகளிலும், ஏழு ஸ்வரங்களை ஒலிக்கும்; 21 தந்திகளை யுடையதாகும். 7 ஸ்வரங்களுக்கும் தமிழ்ப்பெயர்கள் வருமாறு.

குரல்
துத்தம்
கைக்கிளை
உழை
இளி
விளரி
தாரம்

தாரம் என்பது சமஸ்கிருதச் சொல்லன்று. சமஸ்கிருதத்திலுள்ள தாரம் என்பதற்கு வேறு பொருள் உண்டு. புராதனத் தமிழ் ஸ்வரங்கள் என்ன வென்பதையும், அவைகளுக்கும் தற்போதுள்ள ஸ்வரங்களுக்கு முள்ள சம்பந்தம் என்ன வென்பதையும் விவாதிக்கு முன்பு நாம் 7 ஸ்வரங்களின் தோற்றத்தைப் பற்றியும், பாணன் தனது யாழை எம்முறையில் வாசித்தா னென்பதையும் கவனிக்கவேண்டும். முதலில் தோன்றிய ஸ்வரம் தார மென்பதாகும்.

தாரத்திலிருந்து உழையும், உழையிலிருந்து இளியும், இளியிலிருந்து துத் தமும், துத்தத்திலிருந்து விளரியும், விளரியிலிருந்து கைக்கிளையும் தோன் றின. தமிழ்ப்பாணன் ஒரு ஸ்வரத்தையும் இதர ஸ்வரங்களோடு கூட்டிக் கூட்டி வாசிக்க ஆரம்பித்தான். ஒரு ஸ்வரத்தையும் அதன் பஞ்சமத்தையும் கூட்டி வாசித்தபோது இனிமையான நாதம் ஏற்பட்டதைக் கண்டான். ஒரு தந்தியால் ஒரு ஸ்வரம் ஏற்பட்டால் அதன் மூன்றில் இரண்டுபாகம் அந்த ஸ்வரத்தில் பஞ்சமத்தையும், அரைபாகம் உச்ச ஸ்தாயியில் எட்டாவது ஸ்வ ரத்தையும் தோற்றுவிக்கு மென்பதை பாணன் ஆரம்பத்திலேயே கண்டு விட்டானென்று தெரிகிறது. இந்த விஷயங்களை அடிப்படையாகக் கொண்டு இசைப் புலவனும், இசைக்கருவி செய்வோனும் சங்கீத சாஸ்திர மொன்றைச் சிருஷ்டித்தனர்.

## தந்தி நீள கணிதம்

முதன் முதலாக பேரியாழின் 21 தந்திகளின் நீளத்தைக் கணித்துக் கொள்ளலாம். முதல் தந்தி 36 விரல் அளவு நீள மிருக்கும ஞல் 8-வது தந்தியும் 15-வது தந்தியும் முறையே 18 விரல் அளவும், 9 விரலளவு மிருக் கும், 5,9,13,17,21-வது இந்த தந்திகள் முறையே 21,16,10 2-3,17-9, 4,20-27 விரல் அளவு இருக்கும். 16-வது தந்தி 9 ஆவதைவிட உச்ச ஸ்தா யியில் 8-வது ஸ்வரமாகையாலும் இவை இரண்டின் நீளம் முறையே, 8,32 விரல் அளவாகும். இது போலவே இதர தந்திகளின் நீளத்தையும் கவ னிக்கவேண்டும்.

### சுருதி ஸ்தானங்கள்

பிறகு பாணன் ஸ்வர ஸ்தானங்களைப்பற்றி ஆராய்ச்சி செய்ய ஆரம்பித்த 7 ஸ்வரங்களோடு புதிய 5 ஸ்வர ஸ்தானங்களைக் கண்டு பிடித்தான். அடுத்தபடியாக 12 ஸ்வர ஸ்தானங்களைப்பற்றி ஆராய்ச்சி செய்து மேலும், 10 ஸ்வர ஸ்தானங்களைக் கண்டுபிடித்தான். ஸ்வர ஸ்தானமென்பதற்கு தமிழில் அலகு என்பார்கள்.

மகரயாழ்



கி. பி 1-வது நூற்றாண்டிலேயே இந்த 22 சுருதி ஸ்தானங்களையும் தமிழர் கண்டுபிடித்து விட்டனர்; ஆனால் ஆராய்ச்சி அம்மட்டோடு நிற்கவில்லை. பாணன் அலகை (ஸ்ருதி ஸ்தானம்) பின்னப்படுத்திக் கொண்டேபோனான். இதனால் 41 அரை சுருதி ஸ்தானங்களும், 94 கால் சுருதி ஸதானங்களும், 421 அரைக்கால் சுருதிஸ்தானங்களும், 388 வீச (1-8) சுருதி ஸ்தானங்களும் கண்டு பிடிக்கப்பட்டன. பாணனது 100 ) தந்தியுடைய யாழ் அரைவீச (1-16) சுருதி ஸ்தானத்தையும் காட்டியது. அந்த யாழில் பெரிய தந்தியின் நீளம், 84 விரல் அளவாகும்; சிறிய தந்தியின் நீளம் 32 விரல் அளவாகும்.

22 அலகுகள் அல்லது சுருதிகளைப் பாணன் கீழ்க்கண்டவாறு பாகுபாடு செய்தான்:

| | | |
|---|---|---|
| குரல் | 4 | அலகுகள் |
| துத்தம் | 4 | ,, |
| கைக்கிளை | 3 | ,, |
| உழை | 2 | ,, |
| இளி | 4 | ,, |
| விளரி | 3 | ,, |
| தாரம் | 2 | ,, |

புராதன தமிழ் இசைக் கணிதத்தின்படி மாவே முதல் ஸ்வரமாகும். இதற்குப் பல ஆதாரங்கள் உண்டு. இந்த ஸ்வரங்களை சில மிருகங்கள், பறவைகள் இவைகளின் சப்தத்தோடு தமிழர் ஒப்பிட்டுள்ளனர். புராதன தமிழரின் குரல்-மா; துத்தம்-பா; கைக்கிளை-தா; உழை-நி; இளி-சா; விளரி-ரி; தாரம்-கா.

புராதன தமிழர் சோதிட சாஸ்திரத்தையும், இசைக் கணிதத்தையும் சம்பந்தப்படுத்தி யிருப்பது மற்றொரு விசேஷமாகும். கீழ்க்கண்ட செய்யுள் அதனை வலியுறுத்தும்:—

இளி யிடபங் கற்கடமாம் விளரிசிங்கம்
தளராத தார மதுவாந்—தளராக்
குரல் கோற்றனுச துத்தங் கும்பங் கிளையாம்.
வரலால் உழை மீனம்.

தற்போது கருநாடக சங்கீத சாஸ்திரப்படி அலகுகளைக் கீழ்க்கண்டவாறு பாகுபாடு செய்துள்ளனர். ச 4; ரி 3; க 2; ம 4; த 3; நி 2;




12 ராசிகளில் தமிழர் கீழ்க்கண்ட ஏழை மட்டும் தெரிந்து கொண்டனர்; ரிஷபம், கடகம், சிங்கம், துலாம், தனுசு, கும்பம், மீனம். இளியை ரிஷபமும், விளரியை கடகமும், தாரத்தை சிங்கமும், குரலை துலாமும், துத்தத்தை தனுசும், கைக்கிளையை கும்பமும், உழையை மீனமும் குறித்தன.

சிலப்பதிகாரத்தில், இடைச்சிகள் குரவைக் கூத்தாடுகையில் மேலே கண்ட 7-ராசிகளின் ஸ்தானங்கள் அமைந்திருப்பது போலவே வரிசையாக நிற்பார்களென்று கண்டிருக்கிறது.

## சிலப்பதிகாரம் அரங்கேற்று காதை

### 3-வது பிரசங்கம்

சிலப்பதிகாரம் அரங்கேற்று காதை என்பது பற்றித் தமது 3-வது பிரசங்கத்தில் சுவாமி விபுலானந்தர் பேசினர். அப் பிரசங்கத்தில் அவர் குறிப்பிட்டதாவது:—

சிலப்பதிகாரத்தில் அரங்கேற்று காதை மாதவி என்ற நாட்டியப்பெண் அரங்கேறியது பற்றியும், கி. பி. ஆரம்ப நூற்றாண்டுகளிலே தமிழரது நாகரிகம் எவ்வாறிருந்த தென்பதைப்பற்றியும் விவரமாகக் கூறுகிறது. '1800 ஆண்டுகளுக்கு முன் தமிழர் நிலை' என்ற தலைப்புடன் கனகசபை பிள்ளை வெளியிட்ட நூலிலிருந்து ஒரு பாகத்தை வாசித்துக் காட்ட விரும்புகின்றேன். 'சமூக வாழ்க்கை' என்ற அத்தியாயத்திலே அந்த தமிழறிஞர் கூறுவதாவது:—அக் காலத்தில் நடிகச் சிறுமி 5-வது பிராயத்தில் கல்வி கற்க ஆரம்பிப்பாள்; 3 வருஷ காலம் தொடர்ச்சியாக கல்வி கற்பாள். அச் சிறுமியின் கல்வி தற்காலத்தில் பூரண கலையுணர்ச்சியுள்ள மாதரின் படிப்பிக்குக் குறைவான தல்ல. அவளுக்கு ஆடவும், பாடவும், வசீகரத்துடனிருக்கவும் கற்றுக்

கொடுத்தனர். யாழ், குழல், மத்தளம் இவை வாசிக்கவும், அயல்நாட்டு பாஷைகளில் இயற்றிய பாடல்களைப் பாடவும், சித்திரம் எழுதவும் உல்லாசமாக நீராடவும் நல்ல நிறமுள்ள மாவுகளைப் (பவுடரை)ப் பூசிக் கொள்ளவும், அழகிய மாலைகள் தொடுக்கவும், நகைகளால் தன்னைத் தானே அலங்கரித்துக் கொள்ளவும், படுக்கையை அழகாகப் போடவும், பருவகாலங்களைக் கவனிப்பதோடு அந்தந்த பருவத்திற்கு பொருத்தமானது எது வென்பதை அறிந்து கொள்ளவும், பலவித கலைகளின் முக்கிய விஷயங்களைப் பற்றி விவாதிக்கவும் மற்றவர்களது எண்ணங்களைத் தெரிந்து கொள்ளவும் கற்றுக் கொடுத்தனர். ஆடவரது மனதை வசீகரப் படுத்துவதற்கானதும் அவர்களுக்குச் சந்தோஷமுண்டு பண்ணுவதற்கானது மான ஒவ்வொரு விஷயத்தையும் அவள் கற்றுக் கொண்டாள். 12-வது வயதில் அவள் மன்னர் முன்பும்: பிரபுக்கள் முன்பும் அரங்கேறுவாள். அவளுடன் ஒரு கவிஞனும், ஒரு இசையாசிரியனும், யாழ் வாசிப்பான் ஒருவனும் குழல் வாசிப்பா னொருவனும், மத்தளக்காரன் ஒருவனும் இருப்பார்கள். அரங்கமானது இரண்டடி உயரமும், 14 அடி அகலமும் 16 அடி நீளமுமுள்ள மேடையைப் போன்றிருக்கும். தூண்களின் பேரில் மேடைக்கு மேல் 8 அடி உயரத்தில் விமான மொன்று அமைப்பார்கள். அந்த விமானத்தின் மீது இஷ்ட தெய்வங்களின் படங்கள் இருக்கும். விமானத்தின் நாலா பக்கங்களிலும் திரைகள் விட்டிருப்பார்கள். இரவிலே அரங்கத்தை தீபாலங்காரம் செய்த பிறகே ஆடல் ஆரம்பமாகும். மேடையின் முன் பாகத்தில் 6 அடி அகலத்தை நடிகப் பெண்ணுக்காக ஒதுக்கியிருப்பார்கள். அவளுக்குப் பின் இரண்டு அல்லது மூன்று பழைய நடிகப் பெண்கள் நின்று வண்ணம் அவ்வப்போது சொல்லிக் கொடுப்பார்கள். அவர்களுக்குப் பின் இசைக்காரர்கள் சிலரிருப்பார்கள். இவர்கள் இடையிடையே பாடுவார்கள். அப்போது நடிகச் சிறுமி ஓய்வு எடுத்துக் கொள்வாள். திரையை தூக்கியதும் மிக்க அலங்காரம் செய்து கொண்டிருக்கும் அச் சிறுமி தோத்திரம் செய்வாள். பிறகு பல பாடல்களைப் பாடுவாள், ஆடுவாள். வசீகரத்துடன் அபிநயங்கள் செய்வாள். அவள் தனது யௌவனத்தாலும், அழகாலும் இனிய குரலாலும் வசீகரத் தோற்றத்துடனும் இசை வல்லமையாலும் சபையினரது உள்ளத்தைக் கொள்ளை கொள்வாள். அரசன் 1008 பொன் காசு விலையுள்ள பொன் மாலை யொன்று வெகுமதியாகக் கொடுப்பான். அதுவே பெரிய வெகுமானமாகும்.

ஒரு நாடகக் கணிகை அரங்கேறுவதற்கு அவசியமானவர்கள் வருமாறு:—

1. நாடகக் கணிகை
2. ஆடலாசிரியன்
3. இசையாசிரியன்
4. கவிஞன்
5. மத்தளக்காரன்
6. குழலோன்
7. யாழிசைப்போன்
8. அரங்கம்
9. அரங்கத்தின் மீது ஆடல்

அரங்கேறுவது சம்பந்தமாக சிலப்பதிகாரத்திலுள்ள செய்யுட்களில் பல விவரங்களைக் காணலாம். அரங்கேற்று காதையில் 70-வது வரி முதல் 94 வரி வரையில் யாழிசைப்போனைக் குறிக்கின்றன அந்த வரிகளுக்குப் பூரணமாக அர்த்தம் தெரிந்து கொண்டால் பண்டைத் தமிழ் இசையினர் பொக்கிஷத்திற்குத் திறவுகோல் கிடைத்து விடும். 5 வருஷகாலத்திற்கு மேலாக நான் ஆராய்ச்சி செய்ததின் பலனாகச் சிறிது ஒளி கிடைத்துள்ளது. அந்த வரிகளுக்கு அடியார்க்கு நல்லார் வியாக்கியானம் எழுதவே இல்லை. அடியார்க்கு நல்லார் காலத்திலேயே பண்டைத் தமிழ் இசை புறக்கணிக்கப்பட்டதென்று தெரிகிறது. மத்திய காலத்தில் கலைவல்லவர்களாக விருந்த ஜைன சன்னியாசிகளும், ஆடல், பாடல் என்ற இரு கலைகளையும் புறக்கணித்தனர்.

நாடகக் கணிகை அரங்கேறும் போது மகரயாழையே உபயோகித்தனர். இந்த யாழுக்கு 14 நரம்புக ளிருந்ததோடு அந்தரக் கோல்களும் இருந்தன. இந்த யாழால் நி முதல் த வரையில் 14 ஸ்வரங்களில் மூன்று ஸ்தாயிகளில் வாசிப்பார்கள், நி, ச, ரி, க இந்த நான்கு ஸ்வரங்களும் கீழ் ஸ்தாயி; ம, ப, த, நி, ச, ரி, க இந்த 7 ஸ்வரங்களும் மத்திம ஸ்தாயி; ம, ப, த இவை மேல் ஸ்தாயி. புல்லாங் குழலையே முதலில் வாசிப்பார்கள்; பிறகு யாழ், மத்தளம் முதலியவற்றை வாசிப்பார்கள்.

ஏக காலத்தில் குழலால் கொடிப் பாலை வாசிக்க ஆரம்பிப்பார்கள். யாழால் செம்பாலை வாசிப்பார்கள்.

பண்டைத் தமிழிசை உயிர் பெற வேண்டுமானால் புராதனக் கருவிகளும் தோன்ற வேண்டும்.



# சாங்கிய தரிசனம்

(திரு. எஸ். ஏ. திருமலைக் கொழுந்துப் பிள்ளை, பி.ஏ.)

(707-ம் பக்கத் தொடர்ச்சி.)

## 23-வது காரிகை

*அத்யவசாயோ புத்திர்த்தர் மோஜ்ஞானம் விராக ஐஸ்வர்யம்—சாத்விக் மேதத் ரூபம் தாமகமஸ் மாஹிபாய் ஸ்யதம்.*

### புத்தியின் இலக்கணம்

புத்தியென்பது உறுதியை விளைவிப்பது. அஃது ஒளியின் வழியிற் சேருங்கால், தர்மம், ஞானம், விரக்தி, விபூதியாகிய இவைகள் அதன் சொரூபமாம். அஃது இருளை வகிக்கின் அவற்றிற்கு மாறானவை யதன் சொரூபமாம்.

உரை:—புத்தி யென்பது புருஷனுக்கு விளக்குப் போன்று இருக்கின்றது. விளக்கு ஏற்றப்படின் எப் பொருளும் விளங்குவது போல் தருமத்தையும், ஞானத்தையும், விரக்தியையும், ஐசுவரியத்தையும், புத்தி விகசிக்கின் காட்டவல்லாம். புத்தி விகசித்தல் குறையும் பொழுது அதர்மம், அஞ்ஞானம், ஆசை, அனைசுவரியம் ஆகிய நான்கும் உண்டாவதாம்.

புத்தி உறுதியை விளைவிப்ப தென்றது, இது மரம், இது பாம்பு, இது நல்லது, இது தீயது என உள்ளவாறு காட்டுந் திறமாகிய தன்மையை, சந்தேகத்தை யறுத்துத் துணிவாக இது இன்னதெனக் காட்ட வல்லதே புத்தியா மென்பது. இஃது உதாரண முகத்தால் பின்னர் விளக்கப்படும்.

புத்திக்கு இருமுகங்கள் உள்ளன. ஒளிமுகம் என்றது அதனுடைய சாத்துவிக இயல்பை; இருள் முகம் என்றது அதனுடைய தமோகுண இயல்பை. விளக்கை ஏற்றவுஞ் செய்யலாம் அணைக்கவுஞ் செய்யலாம். ஏற்றுமிடத்துப் பிரவிருத்தி மார்க்கமாய்ச் சித்து விளையாடலாம். ஆனந்தமாகிய தூக்கத்தை விரும்பும் பொழுது புத்தி விகசிக்கின் தூக்கம் வாராது. புத்தி தமோகுணத்தால் பீடிக்கப்படும் பொழுது செய்ய வேண்டியது இது வென உணரலாகாது அதர்மத்தைச் செய்ய நேரும். தெரிந்த விஷயங்களும் மனதிற்குத் தோன்றாமற் அறியாமையுங் குடி கொள்ளும். விரும்பத்தகாதவற்றின் மாட்டும் ஆசை யெழலாம்; ஆசைக்குக் கண் இடையாதென உலக வழக்கு முண்டு புத்தி அந்தகாரமாகவே தரித்திரமும் பீடிக்கும்.

கௌடபாதர் உரைச்சுருக்கம் வருமாறு:—யமம், நியம மாதி நல்லொழுக்கத்திற் பிரவர்த்திப்பதுவே தர்மம். இது கிரியா ரூபமாய் புத்தி தெளிவு பெறச் செல்லும் மார்க்கம். ஞானம், உள், வெளி யென இரண்டு வகையாயுள்ளது. வெளி ஞானமாகிய அபரஞான மென்பது வேதம், அதனுடைய அங்கங்களாகிய பிரமம் (Orthography), வியாகரணம் (Syntax), நிருத்தம் (Etymology) சந்தம் (Prosody), கற்பம் (Ritual inclusive of geometry), சோதிடம் (Astronomy) (ஆகிய ஆறு விஷயம்), புராணம், நியாயம், மீமாம்சம், தர்மநூல் இவற்றை யுள்ளவாறு தெரிந்து கொள்வதாம். உள்ஞானமோ (பரஞானமோ) ஆத்துமாவிற்கும் பிரகிருதிக்கும் உள்ள வித்தியாசத்தை யுணர்தலாம். வெளிஞானத்தால் உலகத்திற் சிறிது நல்வாழ்வு பெறலாம். உள்ஞானத்தால் சம்சார துக்கத்தைத் துறந்து பேரின்ப முத்திக்கரையைக் காணலாம். விராகமும் இருவகைத்து; பிரபஞ்சத்தி லுண்டாகும் துன்பத்தைக் கவனித்து ஒன்றின்பாலும் ஆசை கொள்ளாமை வெளி வைராக்கியமாம். முத்தியின்கண் ஆவேசங்கொண்டு பிரபஞ்சத்தை மாயாஜாலம் எனத் தெரிந்து அம்மாயையைக் கீறத் துணிதலே பரவைராக்கியமாம். ஐசுவரிய மென்பது அட்டமாசித்திகளைப் பெறுதலாம். இவற்றின் இலக்கணத்தைப் பதஞ்சலியோக சூத்திரங்கட்கு எழுதப்பட்டிருக்கும் உரையிற் காணலாம். அனைஸ்வரியமென்பது தெரிந்த சித்திகளை மறத்தலாம்.

## 24-வது காரிகை.

அபிமானோ அகங்கார ஸ்தஸ்மாத்விவித: பிரவர்த்ததேஸாக:—யேகாதசகச் சகணஸ்த்தன்மாத்ர: பஞ்சகச்சைவ.

(அகங்காரத்தின் இலக்கணமும் அதன் வயிற் பிறந்த தத்துவங்களும்)

அகங்காரம் என்பது அபிமானமாகிய தன்மதிப்பாம். அதனிடமிருந்து சிருஷ்டி இருகிளைப்படும்:—பதினொன்றன் கூட்டம் ஒன்று. தன் மாத்திரைகளாகிய ஐந்தன் கூட்டம் மற்றொன்று.

உரை. அகங்காரம்—நான் என்பதனைச் செய்யுந் தத்துவம் இதுவே அகண்டாகார அறிவைச் சுருக்கி ஓரிடத்திற் குடிகொண் டிருப்பதாகப் பாவிப்பது. ஆகவே பந்தத்திற்குக் காரணமாகிய தத்துவமும் இதுவே. இது ஆத்துமாவின் விபுத்துவத்தைத் தன் வயிற்றிற் கட்டியிருக்கும் முடிச்சாகும். இதனை யவிழ்ப்பவரே முத்தர்.

"அவிழ்க்கின்றவாறும் அதுகட்டுமாறும்
சிமிட்டலைப் பட்டுயிர் செல்கின்றவாறும்
தமிழ்ச்சொல் வடசொல்லெனும் இவ்விரண்டும்
உணர்த்தும் அவனை யுணரலுமாமே."

## 25-வது காரிகை.

சாத்வீக யேகாதசக: பிரவர்த்ததே வைகிருதாதகம் காராத்—பூதாதேஸ்தந் மாத்ர: சதாமஸஸ்தைஜ சாதுபயம்.

{ அகங்காரம் இராஜோகுண சொரூபம்; ஓர்கிளை வைகிரிகா அகங்காரம், ஓர்கிளை பூதாதியகங்காரம். }

வாக்கால் திரிவுற்ற வைகரி அகங்காரத்திருந்து ஒளி மயமான பதி னொன்றும் பிறக்கும். இருள்வழி நிற்கும் அகங்காரத்திருந்து தன் மாத்திரை களான பூதாதிகள் தோன்றும்.

ஆயினும் (ஒளி, இருள் இரண்டிற்கும் இயக்கம் இல்லாததால்) இராஜோ குணமே இவ்விருவித தத்துவக் கூட்டங்களின் பிறப்பிற்குக் காரணமாம்.

உரை. அகங்காரம் மூன்று வகையினது என்று சிலர் கூறுவர். அவை யாவன:—வைகரிகா அகங்காரம், தைஜச அகங்காரம், பூதாதி யகங்காரம். இம் மூவகை யகங்காரமும் முக்குணங்களால் ஏற்றப்பட்டன. இம் முக்குணங் களில் நடுவில் நிற்பது இராஜோ குணமாம். இதுவே அகங்காரத்தின் பொதுத் தன்மை. இந்தப் பொது வகையான அகங்காரம் ஓர்பக்கம் ஒளியாயும் மற்றோர் பக்கம் இருளாயு மிருக்கும். ஒளியின் வழியாக ஞானேந்திரியங் களும், கன்மேந்திரியங்களும் மனமும் ஆகிய பதினொன்றும் பிறக்கும். இரு ளின் வழியாக தன் மாத்திரைகள் பிறக்கும். இக்காரிகை இவ்வாறு குறிக்கா நின்றது.

சாங்கிய சூத்திரங்களின்படி வைகரிகா அகங்காரமாகிய சாத்துவீக அகங்காரத்தினின்று மனமும், தைஜச அகங்காரமாகிய இராஜோகுண அகங் காரத்திருந்து இந்திரியங்களும், பூதாதி யகங்காரமாகிய தமோகுண அகங் காரத்திருந்து தன் மாத்திரைகளும் தோன்றின.

இவ்வாறு கூறுவதால் காரிகையும் சூத்திரமும் முரண்படுகின்றனவோ எனின், அவ்வாறன்று. இரண்டும் ஒரே அருத்தத்தைத் தருவனவாம்; பேதத் தின் காரணம் பாவனா வித்தியாசமே.

## 26-வது காரிகை

புத்தீந்திரியாணி சக்ஷு: ஸ்ரோத்ரக்ராண ரசனஸ்பர்ச நகானி—வாக் பாணி பாதபாயூபஸ்தான் கர்மேந்திரியாண் யாகு:

## இந்திரியங்கள்.

அறிதற்கு வாயிலாகிய இந்திரியங்கள் யாவை யெனின் கண் (சக்ஷு) செவி (சுரோத்திரம்), நாசி (ஆக்கிராணம்), நா (ரசனம்), தோல் (பரிசநகாம்), என்னும் ஐந்தாம்.

செயல் புரிதற்கு வாயிலாகிய இந்திரியங்கள் யாவை யெனின் வாக்கு, கை (பாணி), கால் (பாதம்), ஜல மலப்பை (பாயு), உபத்தம் என்னும் ஐந் தாம்.

உரை. அறிதற்கு வாயிலாகிய இந்திரியங்கள்:—புத்தி யிந்திரியங்கள். ஞானேந்திரியங்கள்.

செயல் புரிதற்கு வாயிலாகிய இந்திரியங்கள்:—கன்மேந்திரியங்கள்.

கண்ணின் வழியாக ரூபங்களும், செவியின் வழியாகச் சப்தங்களும், நாசியின் வழியாக வாசனைகளும், நாவின் வழியாகச் சுவைகளும், தோலின் வழியாக உணர்ச்சிகளும் அறியப்படும்.

## 27-வது காரிகை.

உபயாத்மக மத்ரமன: ஸம் கல்பக மிந்திரியம் சசாதர்மியாத்—குணபரி ணாம விசேஷான் நாநாத்வம் வாக்ய பேதாஸ்ச்ச.

இவ்விரு இந்திரியங்களினிடத்திருந்து ஞானத்தையும் கன்மத்தையும் விளைப்பது மனம். ஆதலின் இம்மனம் ஞானேந்திரிய கன்மேந்திரிய ரூபமான இரட்டைத்தன்மை பெற்றுளது.

இது (இனிச் செய்யற் பாலவற்றை) முன்னைக் கூட்டியே உருவகப் படுத்துவது (சங்கற்பிப்பது). இந்திரியங்களினுடைய தன்மை தன்னிடம் இருத்தலால் மனம் ஓர் இந்திரியமுமாம்.

மனம் பல கிளைப்படுவதும், வெளித் தோன்றும் வண்ணம் உருவங்களை யெடுப்பதும் முக்குணங்களி னுடைய பரிணாமத்தால் ஆம்.

உரை. மனம் ஞானேந்திரியமும், கன்மேந்திரியமுமா யிருக்கின்றது. தூலப் பிரபஞ்சத்தை நோக்குதற்குக் கண் உதவுவதுபோல், சூக்கும பிரபஞ்சத்தை நோக்குதற்கு மனமே கருவியாம். ஆதலின் மனம் ஞானேந்திரிய மென்பது தெள்ளிதில் துணியப்படும். சுருதியும் "மனம் தெய்வ நயனம்" எனக் கூறுவது கவனிக்கத்தக்கது. இதன்றியும் மனம் நினைத்த இடத்தைப் பற்றிக் கொள்ளுதலாலும், மறந்த விஷயங்களைத் தேடியோடிப் பிடித்து ஞாபக எல்லைக்குட் கொண்டு வருதலாலும், மனத்தை யடக்க வகையறியாத ஒருவன் ஒன்றை நாடி நிற்கும்போது மனம் அதனை விட்டு ஓடி வேறு ஒன்றினைப் பற்றலாலும், மனத்திற்கு இயங்குந் தன்மை யிருப்பது உண்மையாகக் காணப் படுதலால் அது கன்மேந்திரியமுமாம். மனத்தின் சொரூபத்தைத் தீபச் சிகைபோற் கொள்க. தீபச்சிகையின் அருகில் பற்றக் கூடிய பொருள் நெருங்குங்கால் தீப ஒளியானது வளைந்து அதனைப் பற்றிக்கொண்டு எரிவது போல் மனமும் எதனையேனும் பற்றிக்கொண்டே யிருக்கும் இயல்பினையுடையது.

மனம் ஓர் நிலையி லமைந்து கிடக்காது பல துறைகளிலும் சென்று சென்று கிடப்பதும், வெளிப்படையாக உருவம் வகிப்பதும் இடையறு முக்குண விகற்பங்களால் விளைகின்றன. வெளிக்குத் தோன்றும் வண்ணம் மனம் தேகம் வகிப்பதனை மாயா தேகமென்பர். யோக சூத்திர உரையில் பிராணாயாமத்தை விளக்கிய விடத்து ஓர் சரிதங் கூறப்பட்டுளது. ஆங்கு மாயா தேகத்தின் இயல்பைக் கண்டு தெளிக.

## 28-வது காரிகை.

சப்தாதிஷு பஞ்சாநாமா லோச்சன மாத்ர மிஷ்யதே விருத்தி:—வசநாதாண விகரணோத்ஸர்க் கானந்தாச்ச பஞ்சாநாம்.

## இந்திரியங்களின் செயல்.

ஐந்து ஞானேந்திரியங்களின் வியாபாரம் சப்தாதி விஷயங்களை நோக்கும் பொழுதே யாம். மற்றைக் கன்மேந்திரியங்கள் ஐந்தின் வியாபாரம் முறையே பேச்சு, தானம், நடை, மலஜலங் கழித்தல், சிற்றின்பம் ஆகியவற்றை விளைத்தலாம்.

உரை. செவி ஓசையை நோக்கும், தோல் பரிசத்தை நோக்கும்; கண் உருவத்தை நோக்கும்; நா ரசத்தை நோக்கும்; நாசி மணத்தை (வாசனையை) நோக்கும்.




புதிய தமிழ் அகராதி

1913-ல் சென்னை சர்வகலா சங்கத்தின் ஆதரவில் அகராதிக் கமிட்டியாரால் ஆரம்பிக்கப்பட்ட புதிய தமிழ் அகராதிவேலை இம்மாத முதலில் பூர்த்தியாயிற்று. இந்த அகராதியில் 104,405 வார்த்தைகள் அடங்கி யிருக்கின்றன. இதுவன்றி, இன்னும் 20,000 வார்த்தைகள் அநுபந்தமாக வெளிவருமெனத் தெரிகிறது. இவ்வேலைக்கு 4 லட்சத்து 10 ஆயிரம் ரூபாய் செலவாயிருக்கிறதாம். இதில் ஒருலட்ச ரூபாய்தான் சர்க்கார் கொடுத்துதவியதாகவும், பாக்கியைச் சென்னை சர்வகலாசங்கம் ஏற்றுக்கொண்டதாகவுந் தெரிகிறது.

***

மலையுச்சியில் கமால் பாஷாவின் உருவச்சிலை

துருக்கி சர்வாதிகாரியான கமால்பாஷாவின் உருவச்சிலையை 1,60,000 ஆயிரம் பவுன் செலவில் மிகப் பெரிதாகச்செய்து உயரமான மலையுச்சியின் மீது வைத்து வெகுதூரம்வரை தெரியும்படி செய்யவேண்டுமெனத் துருக்கியில் ஒரு திட்டம் போடப்பட்டிருக்கிறதாம்.

***

குற்றத்துக்குப் புத்தகம் படிக்குந் தண்டனை

அமெரிக்காநியூயார்க் நீதிபதி ஜாக் கெப்பாங்கன் என்பவர், குற்றவாளியான 13-வயது சிறுவனுக்குத் தண்டனையாகச் சில அறிவு நூல்களைப் படிக்கும்படி கட்டளையிட்டார். அதன்படியே புத்தகங்களை வாசித்ததால் அச்சிறுவன் சீர்திருந்தி வீடு சென்றானாம்.

***

சைக்கிலைக் கண்டுபிடித்த அறிஞர்

உலகில் முதன் முதலாக, பைசைக்கிலைக் கண்டுபிடித்தவர் "ஜார்ஜ் ஸ்ஜாஸர்" என்பவர். இவர் கண்டுபிடித்த சைக்கிலை 4-மணி 40-நிமிஷத்தில் 62 மைல் தூரம் ஓடியிருக்கிறது. இவருடைய சைக்கில்கடை இன்னும் பேர்டோலி என்னுமூரில் இருக்கிறது. அக் கடையிருக்கும் வீதிக்கு இவரது பெயரே வைக்கப்பட் டிருக்கிறதாம்.

***

"காலண்டர்" என்னும் பெயர் வந்தவிதம்

"காலண்டர்" என்னும் பெயர் கிரேக்க மொழியிலுள்ள 'காலண்டஸ்' என்ற சொல்லிலிருந்து வழங்கப்பட்டதாகக் கூறப்படுகிறது. "காலண்டஸ்" என்னுஞ்சொல்லுக்கு அறிக்கை என்று அர்த்தமாம். கிரேக்க நாட்டில் மாதத்தின் முதல் தேதியைச் சர்க்கார் தண்டோரா மூலமாயும், அறிக்கை வாயிலாகவும் பொது மக்களுக்கு அறிவிக்கப்பட்டு வந்ததாம். அதிலிருந்து 'காலண்டர்' என்னும் சொல் உலகமுழுதும் பரவியதாம்.




பிரிட்டனில் வாசிக்கும் மாணவர்களில் சுமார் 5-லட்சம்பேர் மூக்குக் கண்ணுடி உபயோகிக்கிருர்களாம்.

* * * *

ரஷியாவில், சினிமா படமொன்றில், களிமண், மரம், உலோகம் முத லியவற்ருல் செய்யப்பட்ட பதுமைகள் நடிகர்களாக நடித்தனவாம்.

* * * *

ருஷியாவில் மாஸ்கோ நகரில் 42 வயதுள்ள அன்னுலாவாரிகினு என்ற பெண் ஆண்வேடம் பூண்டு ஒருவர்பின் ஒருவராக 9 பெண்களைக் கலியா ணஞ் செய்து கொண்டு, அவர்களது பொருள்களைத் திருடிக்கொண்டு ஓடி விட்டாளாம். ஆனுல் அவள் போலீஸாரால் கைது செய்யப்பட்டதாகத் தெரிகிறது.

* * * *

ஒரு டன் சாக்கடை நீரைக் காய்சினுல் அதில், சுமார், 190-ராத்தல் உப்பு கிடைக்கிறதாம்.

* * * *

எதிர் காலத்தில் உலகிலுள்ள உணவுப்பொருள்கள் குறைவடைந்து போகும் என்றும், அக்காலத்தில் மனிதர்கள் கடலிலிருந்து கிடைக்கும் உண வுப் பொருள்களைத் தின்று உயிர் வாழ்வார்க ளென்றும் விஞ்ஞானிகள் கூறு கிருர்கள்.

* * * *

அமெரிக்க வர்த்தக இலாகா அறிக்கையிலிருந்து பேசும் படங்களைவிட சலன படங்களுக்கே உலகில் அதிக ஆதரவு இருப்பதாகத் தெரிகிறது. ஐரோப்பாவில் 160,86, லத்தின் அமெரிக்காவில் 4624, கானடாவில் 113, கீழ்க்கோடி தேசங்களில் 1356, சோவியத் ருஷியாவில் 8187, ஆப்பிரிக்கா சமீப கிழ்த்திசை நாடுகளில் 274, இந்தியாவில் 154 ஆகச் சலனப் படக் காட்சிசாலைகள் இருக்கின்றனவாம்.

* * * *

அமெரிக்க ஐக்கிய நாட்டில் பேசும் படம், சலனப்படம் ஆகிய இருவித காட்சி சாலைகளுமாக 10143 இருக்கின்றன.

* * * *

ஸோவியத் ருஷியாவில்கூட சலனப்படங்களுக்குத்தான் ஆதரவு அதிக மிருப்பதாகத் தெரிகிறது. அந்நாட்டில் 16,000 பேருக்கு ஒரு சினிமாசாலை இருக்கிறது. ஆனுல், இந்தியாவிலோ, 534,587, பேருக்கு ஒரு சினிமா சாலையே இருந்துவருகிறது.

# ஆசிரியர் குறிப்புக்கள்

## தாய் மொழியில் பேசவும் தடையா?

தேசிய மொழிகளை வளர்க்கவேண்டும் என்ற உணர்ச்சியும் கிளர்ச்சியும் மேலோங்கிவரும் இக்காலத்தில் கல்வி சம்பந்தப்பட்ட ஸ்தாபனங்களில் கூடத் தாய் மொழியில் பேசக்கூடாது என்று தடுப்பது விபரீதமாகும். சென்ற மாதம் சென்னை சர்வ கலாசாலை செனட் சபையின் ஆண்டுக்கூட்டம் வைஸ்சான்சலர் லிட்டில் ஹெயில்ஸ் தலைமையில் நடைபெற்றது. அச்சமயம் இண்டர்மீடியட் பரீக்ஷைக் கட்டண சம்பந்தமாக ஸ்ரீமான் வி. ராமநாதன் கொண்டுவந்த வெட்டுப் பிரேரபணையை ஸ்ரீமதி அலர்மேல்மங்கைத் தாயாரம்மாள் எம். எல். ஸி. அவர்கள் ஆமோதிக்கும் முகத்தான் தமிழில் பேசத் தொடங்கினர். வைஸ்சான்சலர் அதற்கு இடங்கொடுக்காமல் தடை செய்துவிட்டது வருந்தத்தக்கதாகும். "தெலுங்கு கன்னடம் முதலிய மொழிகளைப் பேசுவோரும் செனட்டில் அங்கத்தினர்களா யிருக்கிறார்கள். இவர்களும் தங்கள் தங்கள் மொழிகளில் பேச ஆரம்பித்து விட்டால் ஒரு மொழி பெயர்ப்பாளரை நியமிக்கவேண்டி நேரிடும். எனவே தமிழில் பேசக்கூடாது" என்று காரணங் காட்டினர் வைஸ்சான்சலர். ஸ்ரீமதி அலர்மேல்மங்கையார் "நான் சட்ட சபையிலும் தமிழில்தான் பேசுவது வழக்கம்" என்று அவருக்கு விடை பகர்ந்தார். அதற்கு வைஸ்சான்சலர் "இது சட்டசபை அன்று" என வெகு சமத்காரமாகப் பதில் சொல்லி நிலைமையைச் சமாளித்துக்கொள்ள முயன்றிருக்கிறார், இந்தப் பதில் வெளியானதும் அங்கே கூடி யிருந்த அங்கத்தினர் எல்லாரும் சிரித்தார்களாம். இது சிரித்துக் கேவலப்படுத்தவேண்டிய விஷயமாக மாறிவிட்டதைக் கண்டு நாம் இரங்குகின்றோம். வைஸ் சான்சலர் தமிழில் பேசக்கூடாது என்று தடுத்தமைக்குச் சொன்ன காரணங்கள் ஒப்பிக்கொள்ளத்தக்கவை அல்ல. பல மொழிகள் பேசக்கூடியவர்கள் அங்கம் வகித்தால் அதற்காக ஆங்கிலத்திலேயே பேசவேண்டு என்பது என்ன கட்டாயம்? அங்கத்தினர்களின் தாய்மொழிப் பேச்சுரிமையைப் பறிமுதல் செய்வதைக்காட்டிலும் மொழிபெயர்ப்பாளரை வைத்துக்கொள்வதே நியாயமாகும். சட்ட சபைகளிலும் தாய் மொழிகளில் பேச அநுமதி இருக்கும்போது செனட்டில்மட்டும் தடை செய்வான் ஏன்? அன்று அங்கே கூடியிருந்த மற்ற அங்கத்தினர்கள் இம் முக்கிய பிரச்சினையைத் தீர்த்து வைக்கச் சிரத்தை காட்டாமல் சிரித்துக் கழித்துவிட்டது மனக் கேடாகும். ஸ்ரீமதி அலர்மேல்மங்கைத்தாயார் அவர்களேனும் வாளா இருந்து விடாமல் இனியேனும் இதற்கொரு முடிவு காண நடவடிக்கை எடுத்துக் கொள்ளவேண்டும் என்று விரும்புகின்றோம்.

---

## "அரையணுக் கார்டு இல்லை"

இந்தியா சட்டசபையானது இப்பொழுது முக்காலணாவாக இருக்கும் தனிக்கார்டை அரையணாவாக்கவேண்டும் என்றும் ஒன்றரை அணாவாக இருக்கும் ரிப்ளை கார்டை ஒரு அணா ஆக்க வேண்டும் என்றும் தீர்மானம் நிறைவேற்றியது. பொது ஜனங்களால் தேர்ந்தெடுக்கப்பட்ட ஜனப் பிரதிநிதிகள்

எல்லோரும் இத் தீர்மானத்திற்குச் சாதகமாக இருந்தது குறிப்பிடத் தக்கதாகும். இதற்கு 83 பேர் அநுகூலமாகவும் 44 பேர் பிரதிகூலமாகவும் வாக்களித்தனர். எனவே ஷை தீர்மானம் பெரும்பாலான வாக்குகள் பெற்று நிறைவேறி விட்டது. சட்டசபையில் பொதுஜன அபிப்பிராயம் இன்னது என்று இதற்குமேல் வெளிப்படுத்தவே முடியாது எனலாம். "நாங்கள் ஜனநாயக தருமத்தைக் கடைப்பிடித்து ஆட்சி புரிகின்றோம்" என்று அடிக்கடி பெருமை பேசிக் கொள்ளும் அரசாங்கத்தார் எத்தனையோ விஷயங்களில் எதேச்சையாய் நடந்திருப்பது போலவே அரையணாக் கார்டு விஷயத்திலும் நடந்து கொண்டிருக்கின்றனர். கார்டு விலையைக் குறைப்பதால் ஐம்பது லக்ஷ ரூபாய் நஷ்டம் ஏற்படும் என்று அரசாங்கச் சார்பில் வாதிக்கப்பட்டது. வெளி நாட்டுத் தபால் போக்கு வரவு, தபால் இலாகா உத்தியோகஸ்தர் சம்பளம் முதலியவைகளில் அளவுக்கு மீறிய பெருந் தொகைகள் செலவழிக்கப்படுகின்றன. இத் தொகைகளில் ஒரு சிறிது குறைத்துக் கொண்டாலும் நஷ்ட ஈடு செய்து கொள்ளலாம். ஆனால் வைஸிராய்ப் பிரபுவின் மனம் இதற்கு இடந்தரவில்லை. அவர் அரையணாக் கார்டு இல்லை என்று முடிவு செய்து விட்டது வருந்தத் தக்கதாகும். அடுத்த வருஷம் இதைப் பற்றிக் கவனிக்கப்படும் என்று நல்ல வார்த்தைகள் சொல்லிக் கொண்டிருப்பதால் என்ன பயன்? இப்பொழுது ஏழைமக்கள் படும் துயரங்கட்கு ஒரு சிறிதாவது ஆறுதல் வேண்டாமா?

---

## "உப்பு வரியும் அப்படியே இருக்க வேண்டும்"

காற்றையும் தண்ணீரையும் போல உப்பும் இலவசமாய்க் கிடைக்க வேண்டிய வஸ்து. தோட்டி முதல் தொண்டைமான் வரை எல்லாருக்கும் இன்றியமையாத வஸ்து. இதையெல்லாம் கருதித் தான் காந்தியடிகளும் உப்புச் சத்தியாக்கிரகம் தொடங்கியது என்பது நேயர்கட்குத் தெரியும். இந்திய சட்டசபையில் பண்டித நீல கண்ட தாஸ் உப்பு வரியை முற்றிலும் நீக்கி விட வேண்டும் என்று ஒரு தீர்மானம் கொண்டு வந்தார். அரசாங்கத்தார் வழக்கப்படி அதை எதிர்த்தனர். தீர்மானத்தை வாக்கெடுக்க விட்டதில் 54 பேர் அநுகூலமாகவும் 41 பேர் பிரதி கூலமாகவும் வாளிக்களித்தனர். மற்றவர்கள் நடு நிலைமை வகித்தனர். எனவே உப்பு வரியை முற்றிலும் நீக்க வேண்டும் என்ற தீர்மானம் நிறைவேறி விட்டது. இதற்கும் அரையணாக் கார்டு தீர்மானத்திற்கு நேர்ந்த கதியே ஏற்பட்டது வருந்தத்தக்கது. அதாவது வைஸிராய் "உப்பு வரியை நீக்குவதற்கில்லை. அது அப்படியே இருக்க வேண்டியது தான்" என்று தீர்ப்புக் கூறி விட்டார். அரையணாக் கார்டு—உப்புவரித் தீர்ப்புக்கள் ஏழை மக்கள் மீது அரசாங்கத்தார் கொண்டிருக்கும் கடின மனப்பான்மைக்குச் சிறந்த சான்றுகளாகும் என்றே எண்ணுகின்றோம்.

---

## ஈழுவத் தலைவர்களின் நன்முடிவு

கேரளத்தில் திருவாங்கூர்—கொச்சி சமஸ்தானங்களில் உள்ள தாழ்த்தப்பட்டவர்களாகிய ஈழுவர்களின் ஜனத்தொகை பெரியது. இவைகளின் முன்னேற்றத்திற்காகப் பல ஸ்தாபனங்கள் இருக்கின்றன. பத்

கிரியைகளும் இருக்கின்றன. இவர்களில் அநேகர் "எங்களுக்கு எந்த மதமும் வேண்டாம்" என்று சொல்லிக் கொண்டிருக்கிறார்கள். சிலர் ஆரிய சமாஜிகளாகவும், சிலர் கிறிஸ்தவர்களாகவும் மாறிவிட்டனர். சமீபத்தில் "நாங்கள் இந்து மதத்தை விட்டு வேறு மதத்தைத் தழுவுவோம்" என்று பலர் தீர்மானம் செய்தனர். இத்தகைய ஸ்திரமற்ற-ஒரு குழப்பமான நிலைமையில் கேரள ஈழுவ சமூகம் வாழ்ந்து வருகிறது. இச்சமூகத்திலே கல்வி அறிவு பெற்றவர்களின் தொகை நாளுக்குநாள் வளர்ந்து கொண்டிருப்பதால் சுயமதிப்பு உணர்ச்சி வீறுகொண்டு விளங்குகின்றது. சென்றமாதம் திருவாங்கூரில் ஈழுவப் பிரமுகர் பலர் ஒன்றுகூடி "யாரும் பிறமதத்தைத் தழுவக்கூடாது. இந்து மதத்திலேயே இருக்கவேண்டும்" என்று தீர்மானம் செய்ததைக் கண்டு மகிழ்கின்றோம். இந்துமதம் நன்றாயில்லை—மற்ற மதம் நன்றா யிருக்கிறது என்பது இக்கரைக்கு அக்கரை பச்சை என்பதைத் தவிர வேறில்லை. எனவே திருவாங்கூர் ஈழுவத் தலைவர்கள் குழப்ப நிலையில் உள்ள தங்கள் சமூக மக்கட்குத் தக்க வழிகாட்டுவார்கள் என்றே எதிர்பார்க்கின்றோம்.

---

## திண்ணை வேதாந்தம் வேண்டாம்

இதுகாறும் ஆந்திர சர்வகலாசாலை உபதலைவர் பதவி வகித்து அதைத் திறம்பட நடத்தி வந்தவர் ஸர் ராதாகிருஷ்ணன் என்பது எல்லாருக்கும் தெரியும். இவர் இப்பொழுது அந்நிய நாட்டுக்கு உயர் பதவி வகிக்கச் செல்லுகின்றார். விசாகபட்டினத்தில் இவருக்கு வாசித்தளித்த ஒரு பிரிவுபசார பத்திரத்திற்கு விடைகூறு முகத்தான் வெளியிட்ட கருத்துப் பொன்னே போல் போற்றத் தக்கதாகும். அது வருமாறு "மானுட சமூக வாழ்க்கையை மேம்படுத்துமுன் அதனை எல்லாத் துறைகளிலும் சீர்திருத்தம் அடையச் செய்யவேண்டும், மேலை நாட்டினரை உலகாயதர்-ஜடநாகரிகர் என்று இழித்துக் கூறுவதில் பயனில்லை. அவர்கள் தங்களுடைய அறிவுத் திறமையால் இயற்கையைப் பலவழிகளிலும் ஜெயித்து வாழ்க்கையை மிகவும் இன்பகரமானதாக்கி இருக்கின்றனர். தத்துவஞானம் உண்மையாக இருக்கவேண்டுமானல் அதற்கும் வாழ்க்கைக்கும் நேரான சம்பந்தமிருக்க வேண்டும்"—இப்பேச்சை நேயர்கள் ஆழ்ந்து சிந்திக்கவேண்டும் என்பதற்காகவே அப்படியே எடுத்துக் காட்டியிருக்கின்றோம். நாம் நம்முடைய சமயப் பெருமைகளையும் தத்துவப் பெருமைகளையும் வானளாவப் புகழ்ந்துபேசிக் கீழ்நோக்கிப் போய்க் கொண்டிருக்கின்றோம். மேலைநாட்டினர் எல்லாவகையிலும் உயர்ந்து கொண்டு வருகின்றனர். நாம் அவர்களை ஆன்மார்த்த நாகரிகம் இல்லாதவர்கள் என்று இழித்துக் கூறிக்கொண்டு அவர்களுக்கு அடிமைப்பட்டுக் கிடக்கின்றோம். ஸர். ராதாகிருணன் எடுத்துக் காட்டியதுபோல் தத்துவஞானத்திற்கும் வாழ்க்கைக்கும் நேரான தொடர்பை ஏற்படுத்திக்கொள்ள வேண்டும். வீண் திண்ணை வேதாந்தம் பேசிக் கொண்டிருப்பதிற் பயனில்லை. இந்திய மக்கள் தங்கள் தத்துவ பொக்கிஷங்களை நித்திய வாழ்க்கையில் பயன்படுத்தும் நன்னாளை நாம் ஆவலுடன் எதிர்பார்க்கின்றோம்.

---



# லக்ஷ்மிபாய்

அல்லது

# ஆற்காட்டு முற்றுகை.

(எம். லக்ஷ்மண முதலியார்.)

(718-ம் பக்கத் தொடர்ச்சி.)

## நான்காம் அத்தியாயம்.

தஸராப் பண்டிகையை முன்னிட்டு பிரதாப்சிங் மஹாராஜா ஒரு குஸ்திப் பந்தயம் நடத்த ஏற்பாடு செய்திருந்தார். அது நடக்கும் நாள் முதலியவைகளைக் குறிப்பிட்டு இந்திய தேசத்திலுள்ள சகலமான சமஸ்தானங்களுக்கும் நிருபம் அனுப்பி வைத்து அவரவர்களுடைய சமஸ்தானத்திலிருந்து தேர்ந்த பயில்வான்களை பந்தயத்தில் கலந்து கொள்ளும்படி அனுப்பிவைக்குமாறும் கேட்டுக் கொள்ளப்பட்டிருந்தது. தஞ்சையின் பெருமையும் சிறந்த பயில்வான்களையும் கல்வியிலும் இதர வித்தைகளிலும் தேர்ச்சி பெற்ற நிபுணர்களையுக் தஞ்சை மகாராஜா ஆதரித்து வந்த உண்மையும் உலகப்பிரசித்தி வாய்ந்தவை. ஆகலின் இந்தப் போட்டியில் கலந்து கொள்ளுவதற்காக பாரசிகம், ஆப்கானிஸ்தானம் முதலிய தூர தேசத்திலிருந்து கூட பயில்வான்கள் முன்னதாகவே வந்து சமஸ்தான ஆதரவில் தங்கி யிருந்தார்கள். வேடிக்கை பார்ப்பதற்கு வட இந்தியாவிலிருந்தும் இன்னும் பல பாகங்களிலிருந்தும் ஜனங்கள் திரள் திரளாக வந்து கொண்டிருந்தார்கள்.

கோட்டைக்கும் வெளியில் மேல்புறமாய் ஆயிரக் கணக்கான ஜனங்கள் ஏக காலத்தில் இருந்து வேடிக்கை பார்ப்பதற்காகப் போதுமான சௌகரியங்களோடு லக்ஷக் கணக்கான வராகன் செலவிட்டு இடம் அமைக்கப்பட்டிருந்தது. குஸ்தி, மல்யுத்தம் முதலியன நடப்பதற்கென்று வட்ட வடிவமான ஒரு மேடை செப்பனிட்டிருந்தது. இதன் ஓரமாக அழகான ஒரு சிறு உப்பரிகை கட்டப்பட்டிருந்தது. இதிலிருந்துதான் மகாராஜாவும் மகாராணி முதலிய அந்தப்புர ஸ்திரீகளும் வேடிக்கை பார்ப்பார்கள். இதற்குப் பக்கத்தில் மற்றொரு சிறிய உப்பரிகைக் கட்டப்பட்டிருந்தது. இதில்தான் பந்தயத்தை நடத்தி வைக்கும் உத்தியோகஸ்தர்கள் தங்கி யிருந்தார்கள். விளையாட்டில் அடிபட்டுக் காய மேற்பட்டால் அதற்கு உடனே சிகிச்சை செய்வதற்காக அங்கேயே ஒரு சிறிய வைத்தியசாலை அமைத்து அதில் அரண்மனையிலுள்ள கைதேர்ந்த ரண வைத்தியர்களை திட்டப்படுத்தி வைக்கப்

பட்டிருந்தது. ஸ்திரீகளுக்கென்று பிரத்தியேகமான இடம் வசதியாய் அமைக்கப்பட் டிருந்தது.

இப் பந்தயத்தில் கலந்து கொள்ளுவதற்கு நிபந்தனை என்ன வென்றால், ஜாதி, மத வித்தியாசம் இல்லாமல் மனோ தைரியமும், தேக வலிவும் உள்ள யாரும் தோட்டி முதல் தொண்டமான் வரையில் முன் வரலாம். ஒவ்வொரு பயில்வானும் சல்லடம் முதலிய உடை யணிவதோடு ஒரு கருப்புத் துணியால் அடையாளம் தெரியா வண்ணம் முகத்தை கெட்டியாய் மூடிக்கொள்ள வேண்டும். கண் தெரிவதற்காக துணியில் இரண்டு ரந்தாங்கள் மட்டும் வைத்துக்கொள்ளலாம். பந்தயம் நடத்திவைக்கும் அதிகாரி சர்தார் மாபத்கான். இவரும் முன்பு ஒருதரம் நடந்த போட்டிப் பந்தயங்களில் சிறந்து விளங்கியதால் இந்தப் பதவிக்கு வந்தவர். இவரிடம் எல்லா பயில்வான்களுடைய பெயரும் விலாசமும் இருந்தது. ஒவ்வொருவரும் ஒரு தனி இலக்கம் அழைப்பதற்கு ஏதுவாய் இருக்கும் வண்ணம் கொடுக்கப்பட்டிருந்தது. வெற்றி யடைந்தவர்களுடைய பெயரும், அவர்கள் இருக்கும் சமஸ்தானத்தின் பெயரோ, தேசத்தின் பெயரோ, பிறகு வெகு விமரிசையுடன் பகிரங்கப் படுத்தப்பட்டு அவர்களுக்கு அரிய பெரிய சன்மானங்களும் மகாராஜாவினால் வழங்கப்படும்.

"டொப்" என்று கோட்டைக்குள் பெரிய பீரங்கி வெடித்தது. இன்றுதான் போட்டிப் பந்தய விளையாட்டு ஆரம்பதினம். மைதானத்திலிருந்து ஜே ஜே என்று இரைச்சல் எங்கும் ஒலித்தது. பதினாயிரக் கணக்கான ஜனங்கள் வேடிக்கை பார்ப்பதற்காக கூடி யிருந்தனர். எல்லா பயில்வான்களும் நிபந்தனைப்படி மாறுவேஷத்தில் உடையணிந்து வந்திருந்தார்கள். ஒவ்வொருவருடைய சல்லடத்திலும் துடைப் பக்கத்தில் அவர்களுக் கிடப்பட்ட இலக்கம் வெண்மையான துணியினால் தயாரித்து தைக்கப்பட் டிருந்தது. மேடையின் மத்தியில் ஓர் உயர்வான பீடத்தில் 5 பஞ்சாயத்தார்கள் அமர்ந்திருந்தனர். யார் ஜெயித்தது, யார் தோல்வி அடைந்தது என்று நிர்ணயிப்பதற்கு இவர்களுடைய தீர்ப்பே முடிவானது. பண்டிதர்களால் நல்ல வேளை என்று குறிப்பிடப்பட்ட நேரத்தில் பலவித வாத்தியங்கள் முழங்கின. அத்துடன் விளையாட்டும் ஆரம்பமாகியது.

விளையாட்டின் முழு விபரங்களை எழுதுவதென்றால் வீணே கதையை வளர்த்தியதாகும். ஆதலால் நமது கதையின் போக்குக்கு வேண்டிய பாகத்தை மட்டுமே இங்கு சுருக்கமாக வரைகிறேன். முதல்நாள் நடவடிக்கைகளில் சிறந்த வீரன் என்று பெயர்வாங்கியவன் "பத்தாம் நெம்பர்" என்ற ஒரு வாலிபன். இவன் மெல்லிய சரீரமும் ஆனால் உளிபோன்ற அழுத்தமான அவயவங்களும் உள்ள வாலிபன். முகம் கருப்புத் துணியால் கெட்டியாக மூடப்பட்டிருந்த படியால் அவன் வயதை நிஷ்கரணமாய் சொல்ல முடியவில்லை. ஆனால் தேக அமைப்பிலிருந்து 22 க்கு மேல் இராதென்று சொல்லலாம். இந்த "பத்தாம் நெம்பர்" அன்று 12 பஞ்சாப் பயில்வான்களுடனும், 4 ஆப்கானிய வஸ்தாத்துக்களுடனும், 8 தென்னாட்டு சண்டியர்களுடனும் குஸ்தி செய்து அவர்கள் ஒவ்வொருவரையும் வெகுவாக மெச்சத்தக்க விதமாக தோற்கடித்து விட்டான். இதனால் இவனது பலம் நன்கு விளங்கியது. மேடையில் இவனே சிம்மக் குட்டியாய் விளங்கினான். ஒரு சிறுவன்

தன்னைவிட பலத்திலும் சரீர பருமனிலும் வயதிலும் அதிகமான 24 முரட்டு மனிதர்களையும் தோற்கடித்தான்! என்ற அதிசயமான விஷயம் யாரைத்தான் கவர்ச்சி செய்யாது? யாவர்களுடைய உள்ளத்தையும் கொள்ளை கொண்டு விட்டதில் என்ன அதிசயம்? ஜனங்களெல்லாம் வியப்புற்று அச்சிறுவனுடைய சாமர்த்தியத்தை மெச்சி அபரிமிதமாய் கரகோஷம் செய்தனர்.

"பத்தாம் நம்பருக்கு ஜே" என்று கொண்டாடினார்கள். "பத்தாம் நம்பர் யார்?" என்று கூட்டத்தின் அநேக மூலைகளினின்றும் கேள்விகள் கிளம்பின.

"கோஷா ஸ்த்ரீகளின் கூட்டத்தில் தான் "பத்தாம் நம்பரை" அதிகமாகக் கொண்டாடி ஆரவாரித்தார்கள். வீரத்தின் பெருமையை உணர இந்திய மாதர்களைத் தவிர வேறு எந்த தேசத்துப் பெண்களுக்குத் தெரியும்? யௌவனப் பெண்கள் அவ் வாலிபனின் அதிபல பராக்கிரமத்தினால் கவரப்பட்டு அவன் பால் எழுந்த பிரியமானது காதலாய் மாறித் தவித்தார்கள். தங்கள் உள்ளத்தை கொள்ளை கொடுத்து மெய்ம் மறந்து தங்களது தலையினின்றும் நழுவி விழுந்த பர்தாத் துணியைக் கூட கவனியாமல் அவனையே உற்று நோக்கிய வண்ண மிருந்தனர். அவனை உள்ளத்தில் துதி செய்ய ஆரம்பித்த ஒவ்வொரு பெண்ணும் அவன் தன் ஜாதி, மதத்தைச் சேர்ந்தவனாய் இருக்க வேண்டுமென்று தங்களது ஜாதி சமய தெய்வங்களை பிரார்த்தனை செய்து கொண்டிருந்தனர். "ஆ! இந்த யுவன் யாராக இருக்கும்!" என்று வியப்புற்றனர் சிலர். மத்திய வயதுடைய மாதர்கள் அவன் பேரில் கொண்ட பேரன்பிற்கு அளவே யில்லை. "ஆ! இவ் வீரன் எனக்குப் பிள்ளையாய் பிறக்கக் கூடாதா?" என்று நினைத்ததும் ஒவ்வொரு அன்னைக்கும் மார்பு விம்மியது. "கடவுளே இந்த பாலகனுக்கு தீர்க்காயுள் அளிப்பீராக" என்று கடவுளை வேண்டினர் சிலர்.

ஆனால் இவ்வளவு தூரம் தனது வீரப் பிரதாபத்தில் பிரியங் காட்டி மகிழ்ச்சியடைந்து தன் முகத்தை ஒரு முறையாவது நோக்க மாட்டானா என்ற ஆவலோடு ஒவ்வொருவரும் கருப்புத் துணியினால் மறைக்கப்பட்ட அவனது வதனத்தை உற்று நோக்கிய வண்ண மிருக்க, அந்த பால்ய வீரனின் கண்கள் மட்டும் கறுப்புத் துணிகளிலுள்ள ரந்தரங்களின் வழியாய் அரண்மனை அந்தப்புர ஸ்திரீகள் தங்கியிருந்த உப்பரிகையையே உற்று நோக்கிய வண்ண மிருந்தன என்பதை யாரும் அறியார். ஒரு வேளை அங்கிருந்து ஒரு ஜோடிக் கண்கள் அவனது கண்களை எதிர் கொண்டு சந்தித்து அவைகளினின்று வரும் காந்தப் பார்வையானது அவனை ஊடுருவிப் பாய்ந்து உள்ளத்தைப் பற்றிப் பிடித்திருக்கலாம்! ஆகையால் தான் அவன் நிலை தடுமாறி தன்னை மதித்துப் போற்றும் பொழுது ஜனங்களுக்கு தன் நன்றியைத் தெரிவித்துக் கொள்ள மறந்து நின்றான் போலும்!

இரண்டாம் நாளும் பந்தயம் நடை பெற்றது. வெற்றி முழுவதும் "பத்தாம் நம்பருக்கே" கிடைத்தது. இனி உலகப் பிரசித்தி பெற்ற சில பயில்வான்களே பாக்கி. அதில் மாபத்கான் ஒருவர். இவருக்கு சமஸ்தானத்தில் நல்ல மதிப்பு. இதுவரைக்கும் தஞ்சை சமஸ்தானத்திற்கு வெளியிலிருந்து வரும் ஒவ்வொரு வஸ்தாத்துகளையும் இவர் குஸ்தியில் தோற்கடித்துக்

கொண்டு வந்தார். மறு நாளாகிய மூன்றும் நாள் தனது கீர்த்தியை நிலை நிறுத்த வேண்டி தானே ஒரு சமயம் "பத்தாம் நம்பருடன்" குஸ்தியில் ஜோடி செய்ய நேரிடும் என்று எதிர்பார்த்தார். இரண்டு நாட்களாய் இந்தச் சிறுவன் படே படே ஆசாமிகளை எல்லாம் வெகு எளிதில் முதுகுக்கு மண் காட்டியதை யெல்லாம் இவர் சமீபத்திலிருந்து பார்த்திருந்தவர். அதை நினைத்ததும் அவருக்கு உள்ளுக்குள்ளேயே கொஞ்சம் நடுக்கல் உண்டாகியது. "ஏது, இவன் நாளைக்கு நமது தலையிலும் கை வைத்து விடுவான் போலிருக்கிறதே!" என்று முதலில் ஏங்கினர். "சே! சிறு பயல். இன்னும் முகத்தில் அரும்பு கூட கட்ட வில்லை! இவனிடத்திலா நாம் தோல்வி யடைவது! பார்க்கிறேன் படே சாகிபு ஒரு கை!" என்று மீசையில் கை போட்டு முறுக்கேற்றிக் கொண்டார்.

மூன்றும் நாளும் வந்தது. மைதானத்தில் முன்னிரண்டு நாட்களையும் விட இன்று கூட்டம் அதிகம். "பத்தாம் நம்பர்" எங்கே? இன்று பத்தாம் நம்பரிடம் யார் அடிபடப் போகிறான்?" பத்தாம் நம்பருக்கு வெற்றி? என்று பலவிதமான கூச்சல் தோன்றிக் கொண்டிருந்தன. "பத்தாம் நம்பரும்" தனது விநோதமான உடையில் வந்தான். அவன் முன்னால் மாபத்கான் வந்தார். இவர் பின் வருமாறு பேச ஆரம்பித்தார்.

"மகாராஜாவின் உத்தரவுப்படி நான் சில வார்த்தைகள் தெரிவித்துக் கொள்கிறேன். அதாவது இன்று நமது பால்ய பயில்வானுடன் குஸ்தி செய்வதாக சம்மதப் பட்டிருந்த 4 பஞ்சாப் வஸ்தாதுகள் குஸ்தி செய்யாமலே தாங்கள் தோற்று விட்டதாக எழுதிக் கொடுத்து விட்டு ஊருக்குப் புறப்பட்டு விட்டார்கள். பாக்கியிருக்கும் ஒன்றிரண்டு சண்டியர்களும் அதே விதமாகச் செய்ய தீர்மானித்து விட்டார்கள். எனவே நமது "பத்தாம் நம்பர்" இப்பொழுது இந்தியாவிலே நிகரற்ற பயில்வானாகி விட்டார். ("உங்களை இன்னும் ஜெயிக்க வில்லையே" என ஓர் குரல் கூவியது.) மகாராஜா அவர்கள் இப்பேர்ப்பட்ட பேரும் புகழும் வாய்ந்த இந்த வீரனிடத்தில் அளவிலா அன்பு கொண்டிருக்கிறார்கள். இருந்த போதிலும் இந்த சமஸ்தானத்தில் பயில்வான் என்ற பேரில் நான் ஒருவன் இருக்கிறேன். ஆகையால் மகாராஜா அவர்களுடைய ஆக்ஞைப்படி இன்று நான் நமது பிரபல் பத்தாம் நம்பருடன் குஸ்தி செய்யப் போகிறன். எல்லோரும் கண்டு களியுங்கள். ஆண்டவன் அருள் புரிவாராக" என்று தனது பேச்சை முடிவு செய்து கொண்டு மேடையை விட்டுக் கீழிறங்கி அங்கு நின்று கொண்டிருந்த "பத்தாம் நம்பருடன்" கை குலுக்கிக் கொண்டார். அப்பொழுது ஒரு பணியாளன் இரண்டு பொற் கிண்ணங்களில் மகாராஜா விடுதியிலிருந்து ஷர்ப்பத்து கொண்டு வந்து இருவருக்கும் கொடுத்தான். மாபத்கான் ஒரு கிண்ணத்தை வாங்கிப்பருகி விட்டார். பத்தாம் நம்பர் மற்றொரு கிண்ணத்தை வாங்கிப் பருகு வதற்காக உதட்டில் வைத்தான். அப்பொழுது ஒரு சம்பவம் நடந்தது. கோதா மேடையில் இருந்த வேலையாள்களில் ஒருவன் யுத்தத்தில் படுகாயப்பட்டு தனது அவயவங்களில் சிலவற்றை இழந்த குரூபி. ஒரு கால் வெட்டப்பட்டு ஊனமா யிருந்தது. இடது கை புஜம் வரையில் இல்லை. மூக்கு தரை மட்டமாக வெட்டப் பட்டிருந்தது. முகத்திலும் மண்டையிலும் அநேக கத்தி வெட்டுகளால் உண்டான விகாரமான காயங்கள் இருந்ததோடு ஒரு கண் சின்னபின்னமாக்கப்பட்டு கண் இருந்த இட—

மே தெரியாமல் மிக அருவருப்பான பள்ளம் மட்டும் இருந்தது. ஆக எல்லாம் கூடி பார்வைக்கு மிக பயங்கரமான கண் காக்ஷியை அளித்தன. ஆனால் அவன் ஒரு காலத்தில் மிக திடகாத்திரமான சரீரத்தை யுடையவன் என்று அவனது எஞ்சிய புஜமும், பார்வைக்கு கொஞ்சம் சுத்தமான தோற்றத்தோ டிருந்தவன் என்பதை பிரகாசமாய் உள்ள அவனது ஒற்றைக் கண்ணும் விளக்கின. இவனுக்கு இப்போது திடீரெனப் பைத்தியம் பிடித்து விட்டது.

"கூ, கூ, கீ, கீ,—மேரேகு, ஏ ஷர்பத். தே, ஓ" என்று கூறிக் கொண்டு இளம் பயில்வானிடம் இருந்த பொற் கிண்ணத்தைத் தனது ஒரே கையினால் வெடுக்கென்று பிடுங்கினான். ஆனால் கிண்ணம் தவறிக் கீழே விழுந்து ஷர்பத் முழுமையும் சேதப் பட்டது மல்லாமல் விலையுயர்ந்த அரண்மனைக் கிண்ணமாகிய அதுவும் நடுங்கிப் போய் விட்டது. "பத்தாம் நம்பர்" பயில்வான் திக் பிரமை கொண்டு அசைவற்று நின்றான். மாபத்கானுக்கு இந்தக் குரூபி செய்த அசட்டுத் தனத்தைக் கண்டதும் கோபம் தாள முடியாமல் பொங்கியது.

"ரே! ஹராம் ஜாதா!" என்று சொல்லிக் கொண்டு தனது இடுப்பில் தொங்கிக் கொண்டிருந்த உடைவாளை உருவிக் கொண்டு அந்தக் குரூபிச் சேவகன் பேரில் பாய்ந்து வீசினார். அந்த வீச்சுக்கு குரூபியின் கோரத்தலை அகப்பட்டிருந்தால் அது இரு துண்டாய் வெட்டுண்டு அப்பால் போய் விழுந்திருக்கும். ஆனால் குரூபி தன் நொண்டிக் காலோடு எல்லோரும் ஆச்சரியப் படும்படி ஒரு துள்ளு துள்ளிக் குதித்து தன் ஒற்றைக் கையினால் தன்னை நோக்கி மின்னல் போல் வந்த வாள் வீச்சை தட்டினான். மாபத்கான் கையிலிருந்து வாள் பிடுங்கிக் கொண்டு போய் வெகு தூரத்திற்கும் அப்பால் கல் தரையில் விழுந்து இரு துண்டாய் உடைந்தது. தன் சாமர்த்தியத்தால் தன்னுயிரைக் காப்பாற்றிக் கொண்ட சேவகன் அத்துடன் நிற்க வில்லை. நாகத்தைப் போல் சீறிக் கொண்டு தனது ஒற்றைக் கையினால் ஓங்கி ஒரு குத்து விட்டான் மாபத்கானை. "அல்லா" என்று அலறிக் கொண்டு கீழே விழுந்து பொறிகலங்கினார் சர்தார். பத்தாம் நம்பர்மாத்திரம் அந்த குரூரனைப் பிடித்துக்கொள்ளா விட்டால் மாபத்கானை நெஞ்சில் அடிவைத்துக் கொன்றிருப்பான். அவன் வேடிக்கை பார்த்துக்கொண்டிருந்த பிரமுகர்களும் ஸ்திரீகளும் கொல்லென்று நகைத்தார்கள்.

"மாபத்கானுக்கு வெட்கம்!" "நொண்டிக்கி ஜே" என்ற இரைச்சல் கூட்டத்திலிருந்து வெகுநேரம்வரைக்கும் ஒலித்துக்கொண்டிருந்தது. மாபத்கானுக்கு பெரிய அவமானம் உண்டாகியது. சே! கேவலம் ஒரு நொண்டிச் சேவகனிடம்தான் தோற்றுவிடுவதா? அதிலும் ஆயிரக்கணக்கான ஜனங்களிடையிலே! உடனே மகா கோபாவேசத்துடன் எழுந்தார். அவருக்குண்டான உக்ரத்திற்கு குரூபியையும் அவனுக்காக பரிந்து வருபவரையும் இரு துண்டாக வெட்டியிருப்பார். ஆனால் அவர் எதிரில் பிரதானிவந்து சாந்தமாய் நின்றனர். அவரைக் கண்டதும் மாபத்கான் தன் கோபம் அதிகரிக்க என்ன செய்யவேண்டுமென்ற மாதிரி அவரை நோக்கினார்.

"மகாராஜா நடந்தவை பூராவும் பார்த்திருந்தார். குரூபிக்குத் தண்டனை தான் விதிப்பதாக வாக்களித்துவிட்டார். நீர் உமது வேலையை சாந்தத்துடன் செய்யவும்" என்றார்.

மாபத்கான் கோபம் தணிந்தது. சிறிது நேரத்தில் 4 சிப்பாய்கள் வந்து குரூபியை சங்கிலியால் பிணித்து இழுத்துக் கொண்டுபோய்விட்டனர் அதைப் பார்த்ததும் மாபத்கானுக்கு ஆனந்தம் உண்டாகி பழைய உற்சாகமும் திரும்பியது.

பிறகு மாபத்கானுக்கும் பத்தாம் நம்பர் பயில்வானுக்கும் குஸ்தி ஜோடி ஆரம்பமாகிறது. "ஒரு சொத்தை சிப்பாயிடம் ஒரே குத்தில் எட்டு குட்டிக் கரணம் போட்ட இவரா பத்தாம் நம்பருடன் குஸ்தி செய்யப்போகிறார்!" என்பதாக அனேகர் ஏளனம் செய்தனர். ஆனால் மாபத்கான் சிறந்த பயில்வான் ஆனதால் பத்தாம் நம்பருடன் அதிக தைரியமாய் சண்டை செய்தார். ஆனால் 99 ஆடு தின்ற புலிக்கு இந்தக் கிழ ஆடு எம்மாத்திரம்? சிறுவனுடைய வலதுகை மாபத்கானின் லங்கோடைக் கோத்துப் பிடித்தது. மற்றொரு கை அவரது முழங்காலுக்குக் கீழே பிடித்தது. மாபத்கான் தனது பருத்த கைகளினால் குச்சிபோன்ற மெல்லிய கைகளை எளிதில் தட்டிவிடலாமென்று ஒரு பூட்டுப்போட்டுத் திருகினார். உளிக்கம்பி மெல்லியதாக இருந்தாலும் பருத்த மரக் கொட்டாபிள்ளிக் கட்டை அதை என்ன செய்யமுடியும்? "வீர்ர்" என்றும் அதன் பின்னால் "தடார்" என்றும் இரண்டு சப்தங்கள் கேட்டன. மன்னர்களால் புகழப்பட்ட மாபத்கான் அடியற்ற மரம்போல் சாய்ந்துவிட்டார். அவர் மார்பில் பத்தாம் நம்பர் பயில்வான் ஜெயம் பெற்ற கம்பீரத் தோற்றத்துடன் விளங்கினான். ஒரு பெருத்த கரகோஷத்துக்கிடையே யுவன் அப்பால் விலகினான். இதற்குள் 4,5 சிப்பாய்கள் ஓடிவந்து மாபத்கானைத் தூக்கி ஒரு பல்லக்கில் போட்டுக்கொண்டு போய்விட்டார்கள்.

பத்தாம் நம்பரே இதுவரைக்கும் வெற்றியடைந்த வீர பயில்வானானபடியால் ஒவ்வொருவரும் அவனைக் கண்டு பேசி ஆசீர்வதிக்கவேணுமென்று ஆவல் கொண்டார்கள். பெண்கள் தங்களது கோஷாவை எடுத்துவிட்டு எட்டி எட்டிப் பார்த்தார்கள். பையன்கள் உற்சாகக் கூச்சலிட்டனர் அந்தச் சமயம் பிரதானி உயரமான மேடையின் பேரில் ஏறிக்கொண்டு கையமர்த்தினர். ஏதோ விசேஷமான செய்தி இருக்கும் என்று ஜனங்கள் நினைத்தபடியால் ஒரு க்ஷணத்திற்குள் இரைச்சல் ஓய்ந்துவிட்டது.

"பிரியமுள்ள குடிகளே, மன்னர்களே! மாதர்களே! நமது பாலிய சண்டரின் வீர பிரதாபங்களைக் கேள்வியுற்று இப்போது ஒரு புதிய பயில்வான் வந்திருக்கின்றார். இவர் தமது பெயர் விலாஸம் முதலியவை அறிவிக்க மறுப்பதோடு தானும் முற்றிலும் அடையாளம் கண்டுகொள்ள முடியாதபடி மாறு வேஷத்தில் தான் முன்தோன்றுவாராம். மஹாராஜா அவர்களே இந்தப் புதிய பயில்வானின் நிபந்தனைக்குட்பட்டு தமது பூரா சம்மதமும் கொடுத்திருக்கிறார்கள். நமது பால சண்டியரவர்களும் சம்மதப்படுவார் என்று நம்புகிறேன்" என்று பேசினர்'

"தனக்கு ஒரு ஆக்ஷேபனையும் இல்லை" என்பதை பத்தாம் நம்பர் பிரதானியிடம் மெதுவாய் தெரிவித்துக்கொண்டான். சிறிது நேரத்தில் கூட்டத்தில் ஒருவராய் அமர்ந்திருந்த ஒரு புதிய மனிதன் எழுந்து கோதா மேடைக்கு வந்தார். இவர் ஒரு வயது முதிர்ந்த முஸ்லீம்போல் மாறுவேஷமணிந்திருந்தபோதிலும், அவரது அழகிய தேக கட்டுகளின் அமைப்பைப் பார்த்ததில் அவருக்கு வயது 40-க்குமேல்இராது என்றே சொல்ல வேண்டும்

அவர் மேடைக்கு வந்ததும், "இவர்தான் சற்றுமுன்பு குறிப்பிட்ட புதிய பயில்வான்" என்று பிரதானி சொல்லிவிட்டுப்போனார்.

சிறிது நேரத்தில் குஸ்தி ஜோடி ஆரம்பமாயிற்று.

புதிய பயில்வான் இதுவரையிலும் யாரும் சண்டை செய்யாதவிதமாய் சண்டை செய்தார். அவருடைய ஒவ்வொரு பிடியிலும் பத்தாம் நம்பர் திணறினன். திணறிடபோதிலும் அவனே மீசுரமாய் நின்றான். அவன் பிடிக்கும் ஒவ்வொரு பிடியையும் முஸ்லீம் கிழவர் வெகு சுலபமாக தட்டிக்கொண்டிருந்தார். அவருடைய பலமான ஒவ்வொரு பிடியையும் யுவன் தன்மேல் படா வண்ணம் சாமர்த்தியமாக தப்பித்துக்கொண்டு வந்தான். இதுவரையிலும் யார் ஜெயிப்பார், யார் தோல்வி அடைவார் என்று சொல்லமுடியாவண்ணம் இருந்தது. பால சண்டியரிடத்தில் ஏற்கனவே ஜனங்களின் அபிமானம் இருந்தபடியால் "சண்டையை நிறுத்துங்கள். வயது முதிர்ந்த தடியனிடத்தில் சின்னஞ்சிறு பையனை ஜோடிவிட்டுப் பார்ப்பது அனியாயம்!" என்ற கூச்சல் எல்லா திசைகளிலிருந்தும் புறப்பட்டது. கோஷா ஸ்திரீகளிடத்தில் அதிக கவலையும் மனக் குழப்பமும் காணப்பட்டது. பத்தாம் நம்பர் தோல்வியடையும் விஷயத்தில் அதிக சிரத்தை காண்பித்தது ஒரே ஒரு ஆள்தான். அவர்தான் மறைவிலிருந்து சண்டையை கவனித்து வரும் மாபத்கான். இருவரும் சாதாரணமாய் வெகுநேரம்வரை ஒருவரை ஒருவர் பிடித்துத் தூக்கி எறிவதும் ஒருவர் பிடியிலிருந்து ஒருவர் அபூர்வமாய் தப்பித்துக் கொள்வதுமாய் சரிசமானமாக குஸ்தி செய்து வந்தார்களே யாயினும் முடிவு சொல்ல முடியாமல் இருந்தது. மூன்று நாட்களாக அநேகருடன் ஓய்வில்லாமல் சண்டைசெய்து களையுற்றிருந்த பாலன் என்ன செய்வான் என்ற எண்ணம் அந்தப்புர ஸ்திரீகளுக்கு உண்டாகிவிட்டது. முஸ்லீம் கிழவரும் தனது புஜங்கள் சோர்வடைவதை உணர்ந்தார். அந்தச்சமயம் "போதும், போதும்; சண்டையை நிறுத்திவிடுங்கள்" என்ற குரல் ஜனங்களிடையே கிளம்பியது. அதே சமயத்தில் பஞ்சாயத்தாருக்கு மகாராஜாவிடமிருந்து ஜனங்களின் விருப்பத்தின்படி சண்டையை நிறுத்த உத்திரவு வந்தது. சண்டையும் நிறுத்தப்பட்டது. இருவரும் சரிசமானமான பயில்வான்கள் என்று தீர்மானிக்கப்பட்டது. உடனே இருவருக்கும் அநேக வெற்றி மாலைகள் வந்து விழுந்தன. கரகோஷங்களும் ஜே கூச்சல்களும் கொஞ்சமல்ல. அந்தக் கூட்டத்தில் எப்படியோ அதிசயமான அந்த முஸ்லீம் கிழவர் மகா ராஜாவின் தரிசனத்தைக்கூட எதிர்பாராமல் மாயமாய் மறைந்து விட்டார். எங்கும் தேடியும் காணவில்லை.

இந்தக் கிழவர் யார்? இவர் எங்கிருந்து வந்தார்? இந்த வயதிலேயே பத்தாம் நம்பருடன் சரி சமானமாக குஸ்தி செய்தாரே! இளம் வயதில் எப்படியிருந்திருப்பார்? இதுவரைக்கும் இவர் வீர பிரதாபம் எங்கே மறைந்திருந்தது ஆ! மிக அதிசயமான வீரன்!" என்று ஜனங்கள் பலவகையாக எண்ணமிட்டுப் பேசிக்கொண்டனர். ஆனால் அந்த அதிசயமான மனிதன் யார் என்பது ஒருவருக்குமே தெரியாது.

வாசகர்களே! உங்களுக்கும் தெரியாமலிருக்கலாம். சமயம் வரும் போது நானும் சொல்லுவதற்கு மறந்துவிடமாட்டேன்.

# "ஆனந்தபோதினி" பஞ்சாங்கம்.

தாது௵ சித்திரை மீ—கலியுகாதி 5038, சாலிவாகனம் 1859,
பசலி 1345, கொல்லமாண்டு 1111, ஹிஜரி 1355,
இங்கிலீஷ் 1936௵ ஏப்ரல் மீ—மேமீ

| சித்திரை | ஏப்ரல் மீ | வாரம். | திதி. | நக்ஷத்திரம் | யோகம். | விசேஷங்கள். |
|---|---|---|---|---|---|---|
| 1 | 13 | திங் | சஷ்21-58 | மூல26-3 | சித்26-3ம | வருஷப் பிறப்பு, விஷு [புண்ணியகாலம் |
| 2 | 14 | செவ் | சப்22-18 | பூரா28-3 | சி28-3அமி | கணிதாரம்பம் செய்ய |
| 3 | 15 | புதன் | அஷ்20-55 | உத்28-13 | அ28-13சி | தானியம் செலவிட |
| 4 | 16 | வியா | நவ17-45 | திரு26-33 | சித்60 | வியாதியஸ்தர் குளிக்க |
| 5 | 17 | வெள் | தச12-43 | அவி23-3 | சித்60 | சுப முகூர்த்தம் செய்ய |
| 6 | 18 | சனி | ஏகா6-13<br>து58-15 | சத18-5 | அமி18-5ம | சர்வ,மத்வ ஏகாதசி, அப்பர் சுவாமிகள் திருநக்ஷத்தி [ரம் |
| 7 | 19 | ஞா | திர49-13 | பூர11-48 | சி11-48அ | பிரதோஷம் |
| 8 | 20 | திங் | சது39-45 | உத்4-45<br>ரே57-18 | சித்60 | மாச சிவராத்திரி, ரிஷபாயனம் நா-16-23 |
| 9 | 21 | செவ் | அ● 30-18 | அஸ்49-48 | சித்60 | சர்வத்திர அமாவாசை |
| 10 | 22 | புத | பிர21-15 | பர43-3 | சி43-3அ | வைசாக சுத்தம், அவமாகம் |
| 11 | 23 | வியா | துதி 12-53 | கி✳37-20 | மர60 | கிருத்திகை, அக்ஷயதிரிதிகை |
| 12 | 24 | வெள் | திரி5-50 | ரோ33-0 | மர33-0சி | மாச சதுர்த்தி விரதம் |
| 13 | 25 | சனி | சது0-25<br>பஞ்56-58 | மிரு30-33 | சித்60 | சங்கர ஜயந்தி, அவமாகம் பிரயாணம செய்ய |
| 14 | 26 | ஞா | சஷ்55-35 | திரு29-48 | சித்60 | |
| 15 | 27 | திங் | சப்56-15 | புன31-23 | அ31-23சி | |
| 16 | 28 | செவ் | அஷ்58-38 | பூச34-40 | சித்60 | |
| 17 | 29 | புதன் | நவ60 | ஆயி39-40 | சித்60 | |
| 18 | 30 | வியா | நவ2-43 | மக45-48 | அ45-48சி | |
| 19 | 1 | வெள் | தச8-0 | பூர52-50 | சித்60 | |
| 20 | 2 | சனி | ஏகா13-48 | உத்60 | மர60 | |
| 21 | 1936௵ மேய்<br>3 | ஞா | து19-53 | உத்0-13 | அமி60 | |
| 22 | 4 | திங் | திர25-50 | அஸ்7-35 | சித்7-35பி | |
| 23 | 5 | செவ் | சது31-33 | சித்14-18 | சித்60 | |
| 24 | 6 | புதன் | ○36-43 | சுவா21-28 | சித்60 | சித்திரா பௌர்ணமி |
| 25 | 7 | வியா | பிர41-5 | விசா27-30 | சித்60 | வைசாகபகுளம் |
| 26 | 8 | வெள் | துதி44-45 | அனு32-50 | சி32-50ம | சர்வ முகூர்த்தம் |
| 27 | 9 | சனி | திரி47-28 | கே37-15 | சித்60 | குளம் கிணறு வெட்ட |
| 28 | 10 | ஞா | சது49-8 | மூல40-40 | அ40-40சி | சங்காஷ்ட சதுர்த்தி |
| 29 | 11 | திங் | பஞ்49-35 | பூரா42-58 | மர60 | வராக ஜயந்தி |
| 30 | 12 | செவ் | சஷ்48-38 | உத்43-53 | அ43-53சி | வியாதியஸ்தர் குளிக்க |
| 31 | 13 | புதன் | சப்46-15 | திரு43-28 | சி43-28பி | ரிஷபாவி நா-48-33 |

| சுக் | கு-பு<br>செவ் | | கே |
|---|---|---|---|
| சனி<br>— | 14-ரிஷ-புத<br>17-மேஷ-சுக்<br>22-ரிஷ-செவ்<br>31-விரு-குரு | | — |
| குரு<br>ராகு | | | |

PRINTED & PUBLISHED BY N. MUNISAWMI MUDALIAR,
AT THE "ANANDA BODHINI" PRESS,
NO. 6, LAWYER CHINNATHAMBI MUDALI STREET, MADRAS

உ
ஓம்
பரப்பிரஹ்மணே நம:

# ஆனந்தபோதினி

"எப்பொரு ளெத்தன்மைத் தாயினு மப்பொருண்
மெய்ப்பொருள் காண்ப தறிவு "—திருவள்ளுவர்.


| தொகுதி | தாதுஸு வைகாசிமீ கஉ | பகுதி |
|---|---|---|
| 21 | 1936ஸு மேமீ 14உ | 11 |

## கடவுள் வணக்கம்.

ஆரா வமிர்தம் விரும்பினர்கள்
அறிய விடத்தை அமிர்தாக்கும்
பேரானந்தச் சித்த னெனும்
பெரியோ யாவிக் குரியோய் கேள்
காரார் கிரக வலையினிடைக்
கட்டுண் டிருந்த களைகளெல்லாம்
ஊரால் ஒருநாள் கையுண வேற்று
உண்டால் எனக்கிங் கொழிந்திடுமே. (1)

எனக்கென் றிருந்த உடல் பொருளும்
யானும் நினவென் றீந்தவண்ணம்
அனைத்தும் இருந்தும் இலதாக
அருளாய் நில்லாது அழிவழக்காய்
மனத்துட் புகுந்து மயங்கவுமென்
மதிக்குட் களங்கம் வந்ததென்னே
தனக்கொன் றுவமை யறநிறைந்த
தனியே தன்னர் தனிமுதலே. (2)

நாளவங்கள் போகாமல் நாடோறு நந்தமையே
ஆளவந்தார் தாளின்கீழ் ஆட்புகுந்தாய்—மீளவுன்னைக்
காட்டாமல் நிற்கும் கருத்தறிந்தால் நெஞ்சேயுன்
ஆட்டாளுன் ஐயமில்லை யால். (3)

நாளவங்கள் போகாமல் நன்னெறியைக் காட்டியெமை
ஆளவந்த கோலங்கட்கு அன்புவைப்ப தென்னாளோ. (4)

# அரும்பொருள் விளக்கம்

1. இதனால் உண்மைத் துறவின் சிறப்பைக் கூறுகின்றார்.

(இ-ள்) தெவிட்டாத அமுதத்தினை விரும்பினர்களாகிய தேவர்கள் தேவரீர் மகிமையினை அறியுமாறு நஞ்சினை அமுதமாக்கிய பேரானந்தச் சித்தன் என்கிற பெரியோனே! அடியேன் உயிரினுக்கு உரியவனே! கேட்பாயாக. கருமைதங்கிய சமுசார வலையில் கட்டுப்பட்டிருந்த களைகள் எல்லாம் ஊர் தோறும் ஒவ்வொரு நாளாகக் கைப்பிச்சை வாங்கியுண்பேனுயின் இவ்விடத்து அடியேனுக்கு ஒழிந்து போகும் என்க.

அற்புதச் செயல்களைச் செய்து காட்டுவோர் சித்தர் எனப்படுவர். மூதல்வன் உண்மையிலேயே விஷத்தை அமிர்தமாக மாற்றிய எல்லாம் வல்ல சித்தராகலின் சித்தர் என்றார். கையில் உணவேற்றுண்ணும் காலம் நேரிடின் உலகப் பற்றுக்கள் அனைத்தும் ஒழிந்து விடுமாகலின் அத்தகைய நிலைமையினைத் தந்தருள வேண்டும் எனக் குறிப்பித்தனர்.

2. எல்லாவற்றையும் இறைவனுக்கு உரிமையாக்கியும் மதிக்குட் களங்கம் வந்த காரணங் காணது மயங்குதல் கூறுகின்றார்.

(இ-ள்) தனக்கு எவ்வகையான ஒரு உவமையும் இல்லாதவாறு வியாபித்து நின்ற ஒப்பற்ற பொருளே! அடியேனுக்கு என்று நம்பியிருந்த உடலும் பொருளும் யானும் தேவரீருடையன வென்று கொடுத்தபடி எல்லாமிருந்தும் இல்லாதனவாக அருள் வடிவமாய் நிற்காமல் கெடுவழக்காகி மனத்திற் பிரவேசித்துக் கலங்கவும் என்னறிவுக்குள் களங்கம் வந்ததற்குக் காரணம் யாதோ அறிகிலேன் என்க.

உடல் பொருள் ஆவி மூன்றினையும் தத்தம் செய்த பின்னரும் மனத்தில் மயக்கம் விளைவதற்கு நியாயமென்ன வென்பார் "உடல் பொருளும்.... .........என்னே" என்றனர்.

3. இதனால் ஞானசாரியனது அநுக்கிரகம் உண்டாதற்கு ஏது கூறுகின்றார்.

(இ-ள்) காலத்தை வீண் காரியங்களில் கழியாமல் எந் நாளும் நம்மையே ஆளவந்த ஆசாரியனது திருவடியின் கீழ் அடிமையாயினை. மறுபடியும் உன்னைத் தோற்றுவியாமல் நிற்கும் கருத்தினை அறிந்தனையாயின் மனமே! நான் உன்னுடைய ஆள்தான். ஐயம் இல்லை என்க.

ஞானசாரியனை வழிபட்டுய்ந்த பின்னர் பிரபஞ்ச முகமாக மனத்தினைச் செலுத்தாது வாழுதலே மேலும் மேலும் ஆசாரியனது அநுக்கிரகம் உண்டாதற்கு ஏது வுண்டாகும் என்பதாகும்.

4. நாட்கள் வீணே கழிந்து போகாமல் சன்மார்க்கத்தினைக் காட்டி எம்மை அடிமையாக் கொள்ள எழுந்தருளிய திருக்கோலங்கட்கு அன்பு வைப்பது எந்த நாளோ என்க.

---




# லக்ஷ்மணபுரி காங்கிரஸ்.





சென்ற மாதம் லக்ஷ்மணபுரியில் கூடிய 49-வது இந்திய தேசிய காங்கிரஸ் மகாசபைக் கூட்டம் வெகு சிறப்பாக நடைபெற்று முடிந்த விவரங்களை நேயர்கள் பத்திரிகைகளில் படித்திருக்கலாம். இந்திய மக்களின் விடுதலைக்குக் காங்கிரஸைப் போல் வேறொரு ஸ்தாபனம் உழைக்கவில்லை என்பது உலகப் பிரசித்தம். ஐம்பதாண்டுகளுக்கு முன் விரல்விட்டு எண்ணத்தக்கவர்களான ஒரு சிறு தொகையினரால் காணப்பட்ட காங்கிரஸ் இப்பொழுது முப்பத்தைந்து கோடி மக்களின் பிரதிநிதித்துவம் வாய்ந்த ஸ்தாபனமாய்—சர்வ வல்லமை பொருந்திய பிரிட்டிஷ் ஆட்சிமுறையையே எதிர்த்துப் போராடும்படியான தன்மை வாய்ந்ததாய் விளங்குகின்றது. காந்தியடிகள் காங்கிரஸில் ஆதிக்கம் வகிக்குமுன் இருந்த நிலைமை வேறு; இப்பொழுதிருக்கும் நிலைமை வேறு. காந்தியடிகள் வருவதற்கு முன் காங்கிரஸில் மிதவாதமும் அமிதவாதமும் இருந்தபோதிலும் எல்லாம் கற்றறிந்தவர்களின் நலங்களை நாடும் வாதங்களாகவே இருந்தன. காந்தியடிகள் புகுத்திய அமிதவாதக் கொள்கை ஒன்றே ஏழை எளிய மக்களின் நலங்களை நாடும் கொள்கையாக ஆதிக்கம் பெற்று விளங்குகின்றது. இப்பொழுது லக்ஷ்மணபுரி காங்கிரஸில் அதிதீவிர அமிதவாதக் கொள்கை ஒன்று செல்வாக்குப் பெற்றிருப்பது குறிப்பிடத்தக்க பெரிய விசேஷமாகும்.

காங்கிரஸ் எந்த மாகாணத்தில் நடைபெறுமோ அந்த மாகாணவாசியை அதன் தலைவராகத் தேர்ந்தெடுக்கப் படாது என்பது காங்கிரஸ் சம்பிரதாயம். இந்தச் சம்பிரதாயம் பண்டித ஜவஹர்லால் நேருவின் திறத்தில் விலக்குச் செய்யப்பட்டது ஏன்? காங்கிரஸ் தலைவராக முறைப்படி தேர்ந்தெடுக்கப்பட வேண்டிய உரிமை வாய்ந்தவர்களிற் சிலர் தாமாக ஒதுங்கி நின்றுகொண்டு, முன்னரும் ஒரு முறை காங்கிரஸில் தலைமை வகித்தவரான பண்டித ஜவஹர்லாலுக்கே மீண்டும் தலைமைப்பதவி தேடியடையுமாறு செய்ததேன்? என்பன போன்ற கேள்

விகளுக்கு விரிவான விடைகளை எழுதிக் கொண்டிருக்க நாம் விரும்பவில்லை. தீவிர சமதரும வாதியாகவும் வாலிபர் தலைவர்கவும் விளங்கும் பண்டித ஜவஹர்லால் நேருவும், அதேவிதமான தீவிரக் கொள்கை படைத்த ஸ்ரீ பிரகாசரும் முறையே தலைவராகவும், வரவேற்புக் கழகத் தலைவராகவும் தேர்ந்தெடுக்கப் பட்டதிலிருந்து, நாட்டின் மனப்போக்கை நன்கு அறிந்து கொள்ளலாம். இந்தியாவில் சமதரும வாதிகளின் தொகை இன்னும் பெரும்பான்மையாகப் பெருகவில்லை. சமதருமம் என்றாலே துள்ளிவிழக் கூடிய தேசியத் தலைவர்களின் ஆதிக்கமே மேலோங்கி நிற்கிறது. இனி, மற்றவர்களைப் பற்றிக் கேட்க வேண்டியதே இல்லை. இந்நிலையில் மகாநாட்டுத் தலைவரும் வரவேற்புக்கழகத் தலைவரும் ஆகிய இரண்டு பேரும் தீவிர சமதரும வாதிகளாகவே அமைந்ததானது காலச்சக்கரத்தின் வேகத்தையே வெளிப்படுத்துகிறது. பண்டித ஜவஹர்லால் நேருவின் தொண்டு—அவர் நாட்டு முன்னேற்றத்திற்காக அடைந்துள்ள கஷ்ட நஷ்டங்கள்—அவரது களங்கமற்ற தன்மை—அவரது குடும்பத்தின் தியாகப் பெருமை முதலியவை அவரைச் சம்பிரதாயத்திற்கு விரோதமாகக் காங்கிரஸ் தலைவராக்கின என்று ஒரு சிலர் வாதிக்க முன்வந்தாலும் அவருடைய தீவிர சமதருமக் கொள்கைகள் நாட்டில் செல்வாக்குப் பெற்று வருகின்றமையும், புதிய உயிருள்ள நிருமாணத் திட்டம் வேண்டும் என்ற வேட்கையும் அவர் தலைவராக ஏகமனதாகத் தேர்ந்தெடுக்கட்டமைக்கு முக்கிய காரணங்களாகும் என்று நாம் கருதுகின்றோம். பட்டக்கல்வி பயின்று வேலையில்லாத் திண்டாட்டத்தில் தத்தளித்துக் கொண்டிருக்கும் பெரும்பாலான வாலிபர் உள்ளங்கள் சமதருமக் கொள்கைகளுக்கு நல்வரவு கூறிக்கொண்டிருக்கின்றன என்பதை யாரே மறுக்கவல்லார்? காங்கிரசிலும் சமதரும வாதிகளின் கக்ஷி நாளுக்குநாள் வலிமை பெற்றுக்கொண்டு வருகிறது. எனவே தலைவர்-வரவேற்புக் கழகத் தலைவர் ஆகிய இருவரும் சமதருமவாதிகளாகவே அமைந்தது இயற்கையாகப் பொருந்தி விட்டது எனலாம்.

பண்டித ஜவஹர்லால் நேருவின் தலைமைப் பேருரை கம்பீரமானது. பட்ட வர்த்தனமானது. உள்ளொன்று வைத்துப் புறம் பொன்றுபேசும் தன்மை அப்பேச்சில் ஒரு சிறிதும் இல்லை. அவரது சொற்பொழிவு தற்கால உலகஅரசியல் விவகார உண்மைகளையும், இந்தியாவின் அரசியல்—சமூகவியல் நிலைமைகளையும் உள்ளபடியே காட்டும் பிரதிபிம்பம் என்றே சொல்லவேண்டும்.

இந்தியாவின் முன்னேற்றம் என்றால் என்ன? அது எத்தகைய் அந்தஸ்தை அடைதல் வேண்டும்? உலக விவகாரங்கட்கும் இந்தியாவுக்கும் உள்ள தொடர்பு என்ன? என்பனபோன்ற அம்சங்களை அவர் சிறிதும் ஒளிமறைவின்றி வெளியிட்டுவிட்டார். "சமதருமமே (அபேதவாதமே) இந்தியாவின் விமோசனத்திற்குரிய சாதனம். இந்திய விமோசனத்திற்கு மட்டுமன்று—உலக விமோசனத்திற்கே அது

தான் பரிகாரம் அளிக்கவல்லது என்று நான் நம்புகின்றேன். நான் விளக்கமற்ற ஜீவகாருண்ய முறையைக் குறிக்க இப்பதத்தை உபயோகிக்கவில்லை. சாஸ்திரீயமான பொருளாதார முறையை ஒட்டியே இதை உபயோகிக்கிறேன். சமதருமமுறை என்பது வெறும் பொருளாரத் தத்துவத்தை மட்டும் குறிப்பதன்று. அது வாழ்க்கைத் தத்துவத்தையே குறிக்கின்றது" என்று அறிஞர் ஜவஹர்லால் கூறியதைப்போல் இதுகாறும் காங்கிரஸ் மகாநாடுகளில் தலைமை வகித்த எந்தத் தலைவரும் கூறவில்லை. மேலும் அவர் "நமது அரசியலை நாமே நிர்ணயித்துக் கொள்ளவேண்டும். வெளியார் முடிவு நமக்குத் தேவை இல்லை. நாம் ஜனப்பிரதிநிதி சபை அமைத்து அதில் நமக்குரிய அரசியலை நிர்ணயிக்கவேண்டும்" என்று கூறியிருப்பதை இந்திய சட்டசபையில் உள்ள காங்கிரஸ் அங்கத்தினர்கள் சிறப்பாகக் கவனிக்கவேண்டும் என்று சுட்டிக்காட்ட விரும்புகின்றோம்.

ஸ்ரீபிரகாசர் வரவேற்புரையும் பண்டித ஜவஹர்லால் வெளியிட்ட சமதருமக் கருத்துக்களையே பெரிதும் வற்புறுத்தி நின்றது. வரவேற்புரையின் இயற்கைக் கேற்ப அது சுருங்கி யிருப்பினும் பொருட்பொலிவுடன் விளங்கி நிற்கின்றது என்பதில் ஐயம் இல்லை. "காங்கிரஸிலுள்ள நாங்கள் தற்காலச் சமூக நிலையையே மாற்றி அமைக்க முயல்கின்றோம். ஒரு சிலர் இந்திரபோகம்—ராஜ போகங்களை அனுபவிப்பதும், பெரும்பாலோருக்கு அன்னப்பிடி வெல்லப்பிடியாய் அவர்கள் தெருவில் நின்று திண்டாடுவதுமான ஒரு நிலைமை இன்னும் நீடிப்ப தென்றால் அது சகிக்க முடியாததாகும். சிலர் அளவு கடந்த அதிகாரம் வகிப்பதும் பலர் அடிமைகளாய் அல்லற்படுவதும் கூடாது" என்று ஸ்ரீ பிரசாகர் வெளியிட்டுள்ள உணர்ச்சி ததும்பும் மொழிகள் அவரது சமதரும வேட்கையை இனிது வெளிப்படுத்தும் என்று நம்புகின்றோம். இப்படிக் கூறுவதால் பெரியோர்கள் மன வருத்தம் அடையக்கூடாது என்று அவர் கேட்டுக்கொண்டு "பெரிய மனிதர்களைக் கண்டு நான் எப்போதும் மயங்குவதில்லை அவர்கள் எனக்கு உற்சாகத்தை அளிக்கவில்லை. வயல் வெளிகளிலும் தொழிற் சாலைகளிலும் உழன்று உழைக்கும் சாதாரணப் பாட்டாளிகளே எனக்குப் பெரியவர்கள். அவர்களுடைய அந்தஸ்தும் வாழ்க்கை நிலையும் உயர்ந்தா லொழிய நாம் செய்யும் முயற்சிகள் எவ்வளவு சிறந்தனவாக இருந்தாலும் பயன்படமாட்டா" என்று கூறியதிலிருந்து ஸ்ரீ பிரகாசரின் உண்மை நோக்கமும் போக்கும் நன்கு விளங்கும் என்று நம்புகின்றோம். மேற்காட்டியவற்றில் காங்கிரஸ் தலைவரும் வரவேற்புக் கழகத் தலைவரும் ஒரே கொள்கை படைத்தவர்கள் என்பது தெளிவாகும். இவர்களால் காங்கிரஸ் புதிய வழியில் திரும்பக் கால் கோள்விழா செய்யப்பட்டிருக்கிறது என்றே கூறலாம். யாரோ ஒரு சில உலகப் போக்கறியாத கிணற்றுத் தவளைகளையும், சுயநலமிகளையும் தவிர மற்றவர்கள் எல்லாரும் சமதரும முறைகளைக் கொள்கை அள

வில் ஒப்புக்கொள்ளுகிறார்கள். ஆனால் பல்லாயிரம் ஆண்டுகளாக வந்துள்ள சமூக அமைப்பைத் திடீரென்று மாற்ற முயலும்போதே சங்கடங்கள் குறுக்கிடுகின்றன. கல்வியறிவும், முற்போக்கும், நாகரிகமும் பொருந்தி விளங்கும் மேனாடுகளிலேயே சமதரும முறைக்கு எதிர்ப்புகள் பலமாகக் கிளம்பிக் கொண்டிருக்கும்போது, இந்தியாவைப்பற்றிக் கூறவும் வேண்டுமோ? எனவே, காங்கிரஸ் மகாசபைத் தலைவர் பண்டித ஜவஹர்லால் நேரு அவர்களும், வரவேற்புக் கழகத் தலைவர் ஸ்ரீ பிரகாசர் அவர்களும் வெளியிட்ட சமதருமக் கொள்கைகள் நடைமுறையில் தருவதற்கு நீண்டகாலம் பிடிக்கும் என்பது எமது அபிப்பிராயம். இதற்கிடையில் காங்கிரஸ் விவசாயிகள்—தொழிலாளர்கள் போன்ற பாட்டாளிகளின் க்ஷேமலாபங்களைக் கவனிப்பதில் முனைந்து நிற்கவேண்டும். இன்றேல் பல விபரீதங்கட்கு இடம் உண்டாகலாம்.

லக்ஷ்மணபுரி காங்கிரஸ் இரண்டொரு விஷயங்களைத் தவிர மற்ற எல்லா விஷயங்களிலும் நாட்டுக்கு நல்லவழி காட்டியிருக்கிறது என்றே சொல்லவேண்டும். அகில இந்திய காங்கிரஸ் கமிட்டியில் சரியானபடி அதிகப் பிரதிநிதித்துவம் இருப்பதற்கு வேண்டிய ஏற்பாடு செய்திருப்பது பாராட்டத்தக்கது. அடக்கு முறைக் கண்டனம், அயல் நாட்டு இந்தியர் க்ஷேமலாபம், அந்நிய நாடுகளில் பிரசாரம் முதலிய அம்சங்களில் காங்கிரஸ் மகாசபை கருத்தைச் செலுத்தியது கண்டு நாம் மகிழ்வுறுவகை அடைகின்றோம். கமிட்டித் தேர்தல்களுக்கு உடல் உழைப்பு நிபந்தனை இருந்தது மிகுந்த இடையூறு விளைத்தது. இதனால் தகுந்த யோக்கியதையும், தேசிய உணர்ச்சியும் வாய்ந்தவர்களில் அநேகர் வரமுடியாத ஒரு நிலைமை ஏற்பட்டிருந்தது. லக்ஷ்மணபுரி காங்கிரஸ் உடல் உழைப்பு நிர்ப்பந்தத்தை நீக்கி விட்டது மகிழ்ச்சிக்குரிய விஷயமாகும். சட்டசபைத் தேர்தல் போர்டுகளை எடுத்து விட்டது சரியானதே. புதிய சீர்திருத்த அரசியலை நிராகரிக்க வேண்டும் என்று காங்கிரஸ் தீர்மானித்திருப்பதும் நியாயமே. அதற்குரிய காரணங்களும் தெளிவாக எடுத்துக் காட்டப்பட்டிருக்கின்றன. நிராகரிப்பு என்பதற்கு எத்தகைய குயுக்திகளுக்கும் இடமில்லை. அடியோடு ஒழிக்க வேண்டும் என்பதே காங்கிரஸ் தீர்மானம். புதிய சீர்திருத்தத்தில் காங்கிரஸ்காரர்கள் மந்திரி பதவி போன்ற உத்தியோகங்களை ஏற்றுக் கொள்ளுவதா வேண்டாமா? என்பது பெரிய பிரச்சினை ஆகிவிட்டது. இதற்குச் சாதகமாகவும் பாதகமாகவும் இதுகாறும் பிரசாரம் செய்யப்பட்டிருக்கிறது. "உத்தியோகம் ஏற்கும் விஷயம் லக்ஷ்மணபுரி காங்கிரஸே தீர்மானிக்க வேண்டும். அதற்கிடையில் யாரும் இதைப் பற்றிப் பேசக் கூடாது" என்ற கட்டளைகள் அவ்வப்போது பிறப்பிக்கப்பட்டு வந்தன. இப்பொழுது லக்ஷ்மணபுரி காங்கிரஸ் இதைப்பற்றி என்ன முடிவு கட்டியது? ஒன்றும் இல்லை

என்று தான் சொல்ல வேண்டும்: "நிலைமை எப்படி இருக்குமோ தெரியாது. இப்பொழுது ஒன்றும் நிச்சயமாகச் சொல்லுவதற்கில்லை. எனவே இப்பொழுது உத்தியோகம் ஏற்கும் விஷயமாக ஒரு முடிவு செய்து விடுவது சரியன்று. மாகாணக் கமிட்டிகளைக் கலந்து கொண்டு இவ் விஷயத்தைத் தக்க சமயத்தில் அகில இந்திய காங்கிரஸ் கமிட்டி ஒரு முடிவு செய்ய வேண்டும்"—இதுதான் உத்தியோக ஏற்புப் பற்றிய காங்கிரஸ் தீர்மானம். சத்தியத்தை அடிப்படை தருமமாகக் கொண்டு விளங்கும் காங்கிரஸ், பதவி ஏற்கும் விஷயத்தில் மட்டும் மூடு மந்திரங் காட்டுவான் ஏன்? நிலைமையில் என்ன சந்தேகம் வந்து விட்டது? அது தெளிவாகவே இருக்கிறது! புதிய அரசியலின் வடிவம் என்ன என்பது எல்லாருக்கும் தெரியும். அகில இந்திய காங்கிரஸ் கமிட்டி கூடியபோ தெல்லாம் பெரிய மகாநாட்டில் முடிவு செய்ய வேண்டும் என்பதும், பெரிய மகாநாடு கூடியபோது அகில இந்திய காங்கிரஸ் கமிட்டி முடிவு செய்ய வேண்டும் என்பதும் நகைப்பிற்கிடமான செய்திகளாகும். எல்லாருடைய மனங்களையும் அலைத்துக் கொண்டிருக்கும் பதவிப் பிரச்சினை விஷயத்தில் காங்கிரஸ் உண்டு அல்லது இல்லை என்று தெளிவான ஒரு வழி காட்டாமல் போனது குற்றம் குற்றமே. லக்ஷ்மணபுரி காங்கிரஸில் தலைமை வகித்த பண்டித ஜவஹர்லால் பதவி ஏற்புக்கு எதிரிடையா யிருப்பதால் இத்தகைய பிடி கொடாத் தீர்மானம் செய்ய நேர்ந்தது என்பது சரியான சமாதானமாகாது என்று நாம் சென்ற தடவையிலும் விளக்கியிருக்கின்றோம்.

லக்ஷ்மணபுரி காங்கிரஸ் செய்த முக்கிய தீர்மானங்களுள் விவசாயிகளின் கஷ்ட நிவாரணம் பற்றிய தீர்மானம் ஒன்று குறிப்பிடத் தக்கதாகும். நமது நாடு விவசாய நாடு. அரசாங்க வருமானத்தில் பெரும் பகுதி நிலவரி வாயிலாகவே கிடைக்கிறது. ஆனால் அரசாங்கத்தாருக்கு விளைந்தாலும் விளையா விட்டாலும்—விளை பொருள்களுக்கு விலை யிருந்தாலும் விலை யில்லாவிட்டாலும் நிலவரி வசூலில் இருக்கும் சிரத்தை விவசாயிகளின் க்ஷேமலாபங்களில் இல்லை என்பது கண்கூடு. நாடோறும் வெளிவரும் பத்திரிகைகளில் விவசாயிகளின் துயரங்களை காணுத பத்திரிகையைக் காணல் அரிது. எனவே காங்கிரஸ் விவசாயிகளின் முன்னேற்றத்தில் கருத்தைச் செலுத்தத் தீர்மானித்திருப்பது பாராட்டத்தக்கதாகும். விவசாயிகளின் கொடிய வறுமை, வேலையின்மை, கடன் ஆகியவையே இந் நாட்டின் முக்கிய அவசரம் என்று கண்டு அவற்றை நீக்க வேண்டிய வழிகளும் காங்கிரஸ் தீர்மானத்தில் குறிப்பிடப் பட்டிருக்கின்றன. இந்தத் தீர்மானம் விரைவில் தக்க முறையில் அநுஷ்டானத்திற்கு வரவேண்டும் என்று ஆசைப்படுகிறோம்.

ஓம் தத் ஸத்.

---

# நேயர்கட்கு ஒரு வேண்டுகோள்

## 22-வது ஆண்டின் முன்னறிக்கை

நிகழும் தாது ஆண்டு ஆடித் திங்கள் 1-ம் தேதி (16-7-36) நமது "ஆனந்தபோதினி" மாத சஞ்சிகைக்கு 22-வது ஆண்டு பிறக்கப்போகிறது. தமிழ் மக்களின் அன்பும் ஆதரவும் பெற்று நீண்ட நாட்களாக நின்று நிலவும் மாத சஞ்சிகைகளில் இது முதன்மை வாய்ந்ததாகும். மக்கள் வாழ்க்கை எல்லாத் துறையிலும் செழித்தோங்குமாறு செய்வதே "ஆனந்தபோதினி"யின் தனிப்பெரும் நோக்கம். வரப்போகும் 22-வது ஆண்டு முதல் வழக்கப்படி தமிழ்நாட்டில் பேரும் புகழும் பெற்று விளங்கும் தமிழ்ப்போறிஞர், சமயப் போறிஞர் கட்டுரைகளும், புத்தம் புதிய அறிவூட்டும் ஏனைய கட்டுரைகளும் "போதினி"யை அலங்கரித்து எல்லாருக்கும் மகிழ்வூட்டும் என்று தெரிவித்துக் கொள்ளுகின்றோம். ஆதலால் "ஆனந்தபோதினி"யின் பால் அன்பு பூண்டு ஆதரித்துவரும் சகோதர சகோதரிகள் எல்லாரும் 22-வது ஆண்டின் சந்தாத் தொகையை நாளிது தாது ஆண்டு ஆனித்திங்கள் 31-ம் தேதி (14-7-36)க்குள் மணியார்டர் மூலமாகவோ நேரிலோ எங்கட்குக் கிடைக்குமாறு செய்ய வேண்டுகின்றோம். சந்தாத் தொகையின் பொருட்டு வி. பி. பி. அனுப்புவதால் தபாற் செலவு 4 அணு மணியார்டர் கமிஷன் 2-அணு ஆக 6-அணு அதிகச் செலவும் சஞ்சிகை வந்து சேர வீண் காலதாமதமும் ஏற்படும். ஆகையால் எல்லாரும் மேற்குறிப்பிட்ட தேதிக்குள் மணியார்டர் செய்து விடுவதுதான் உங்கட்கும் எங்கட்கும் இலாபமும் சௌகரியமும் ஆகும். வி. பி. அனுப்புவதால் இன்னொரு சங்கடமும் உண்டு. அதாவது வி. பி. வந்தால் ஏழு நாளைக்குமேல் தபாலாபீஸில் வைத்திருக்க மாட்டார்கள். அதற்குமேல் வி. பி.யை நிறுத்தி வைக்கவேண்டும் என்று விரும்புகின்றவர்கள் நாள் 1-க்கு 2 அணு வீதம் தபால் தலைவாங்கி ஒட்டி விண்ணப்பித்துக் கொள்ளவேண்டும். அதுவும் பத்து நாளைக்குமேல் தபாலாபீஸில் வைத்திருக்க மாட்டார்கள். இந்தச் சங்கடங்களையெல்லாம் உத்தேசிக்கும்போது எல்லாரும் சந்தாத் தொகையை முன் பணமாக அனுப்பி ஆதரிப்பதே நன்மை என்று தோன்றும்.

குறிப்பு:-முன் பணம் அனுப்புவோர் பழைய சந்தாதார்களாயிருந்தால் மணியார்டர் கூபனில் தங்களுடைய சந்தா எண்ணைக் குறிப்பிட்டு "22-வது ஆண்டுக்கு" என விவரம் எழுதவேண்டும். புதிய சந்தாதார்கள் "புதிய ஆண்டுக்கு" என்று விவரம் எழுதவேண்டும்.

**இனாம் ! இனாம் !! இனாம் !!!**

சந்தாத் தொகையை குறிப்பிட்ட தேதிக்குள் அனுப்புகிறவர்களுக்கு அடுத்த ஈஸ்வர வருஷ எங்களது "ஆனந்தபோதினி" பஞ்சங்கம் ஒன்று இனாமாக அனுப்பப்படும்.

மானேஜர்.




# பிரம சூத்திரம்

(சித்தூர் பண்டித-பூ. ஸ்ரீநிவாசன்)

(574-ம் பக்கத் தொடர்ச்சி.)

21-வது சூத்திரம். அவதாரிகை:—ஜீவப்ரம்மங்களுக்கு சம்சாரியாக விருக்கும் காலம் சம்சாரத்தைவிட்டு மோக்ஷமடையும் காலம் என்னும் கால பேதத்தால் பேதாபேதம் உண்டாகும் என்னும் கொள்கையைக் கொண்ட ஔடுலோமிமதம் காட்டப்படுகின்றது.

சூ. 21. "உத்க்ரமிஷ்யத ஏவம் பாவாதித்யௌடுலோமிः"

பதவுரை:—உத்க்ரமிஷ்யதः=முக்தியை யடையும் ஜீவனுக்கு, ஏவம் பாவாத்=இத்தகைய ப்ரம்மைக்கிய பாவமிருத்தலால், இதி=ஜீவத்ருஷ்டவ்யத்வ உபதேசம் செய்யப்பட்டது என்று. ஔடுலோமிः=ஔடுலோமிருஷி (மந்யதே=நினைக்கிறார்).

கருத்து:—தேகம் இந்திரியம் மனம் புத்தி ஆகிய உபாதிகளின் சேர்க்கையால் அவற்றோடு ஒன்றுபட்டுள்ள ஜீவன் ஞானம் தியானம் முதலிய சாதனங்களை அனுஷ்டிப்பதால் சுத்தனாய், தேகாதி சங்காதத்தினின்று வெளிப்பட்டு பிரம்மத்தோடு ஐக்கிய மடைகிறான். இந்த உண்மையைக் கிரமமாகப் போதிப்பதற்கே சுருதியில் ஜீவ உபக்கிரமம் செய்யப்பட்டிருக்கின்றது. அவ்வாறு தேகாதி சங்காதத்தினின்று வெளிப்பட விருக்கும் ஜீவனுக்கு பிரம்மைக்கிய ஞானம் இருத்தலால் அவன் திருஷ்டவ்யனாக (பார்க்கத் தக்கவனாக)க் கூறப்படுகிறான் என்பது ஔடுலோமி முனியின் கருத்து.

22-வது. சூத்திரம். அவதாரிகை:—ஜீவாத்ம பரமாத்மாக்களின் அத்தியந்த அபேதம் போதிக்கப்படுகின்றது.

சூ 22. "அவஸ்திதேரிதி காசக்ருத்ஸ்நः

பதவுரை:—அவஸ்திதேः=பிரம்மமே ஜீவரூபமாக இருத்தலால், இதி=ஜீவோபக்ரமணம் உபபன்னமென்று, காசக்ருத்ஸ்நः=காசக்ருத்ஸ் நாசாரியர் (மந்யதே=கருதுகிறார்).

கருத்து:—பிரம்மமே பலவகைப்பட்ட ஜீவாத்மாக்களாக விளங்குதலால் ஜீவப்ரம்ம அபேதத்தைக் காட்டுவதற்காக சுருதியில் ஜீவ உபக்கிரமம் செய்யப்பட்டிருக்கின்றதென்பது காசக்ருத்ஸ்நாசாரியரின் அபிப்பிராயம். இவர் மதத்தில் அவிக்ருத பரமேசுவரனே ஜீவனாக விருக்கிறான். இந்த ரிஷியின் கருத்தே சுருதியோடு பொருந்தியதென்றும் சூத்திரகாரராகிய வியாசபகவான் கருத்தாமென்றும் ஸ்ரீ சங்கராச்சாரியர் அபிப்பிராயப்படுகிறார்.

ஆரோபித பதார்த்தத்திற்கு சத்தியமாகிய பதார்த்தமொன்று ஆதாரமாக இருத்தல் வேண்டும். கயிற்றரவு திருஷ்டாந்தத்தில் ஆரோபித பதார்த்தத்தின் சொரூபம் விளக்கப்பட்டவுடன் அவ்வாரோபித வஸ்து ஆதார வஸ்துவினும் வேறாகாமற் போகின்றது. இந்தப் பிரபஞ்சத்திற்கு ஆதாரம் சர்வ வியாபகமும் சைதன்ய கனமுமாகவுள்ள பிரம்மமாக விருக்கின்றது. அது விளங்கினவுடன் பிரபஞ்சம் இல்லாததாகின்றது. சோதித்தறியப்பட்ட பிரத்தியகாத்மாவும் இத்தகைய லக்ஷணங்களை யுடையவனாகவேயிருத்தலால் அவன் திருஷ்டவ்யனாக (பார்க்கத்தக்கவனாக) உபதேசிக்கப்படுகிறான். சிருஷ்டி கற்பனைக்கு முன்பு ஏகரூபமாக விருந்த பிரம்மமே பலவித ஜீவாதிகளாக ஆதலால் பிரம்மத்தினும் வேறான வஸ்து ஒன்றுமில்லை என்பதைக் காட்டுவதற்காக சுருதியில் ஜீவதர்ம விவரணத்தோடு கூடிய உபக்கிரமமும் பிரம்ம சொரூப நிரூபணத்தோடு கூடிய உபசம்மாரமும் செய்யப்பட்டிருக்கின்றன என்பது காசக்ருத்ச் நாசாரியரின் கொள்கையாகும்.

தத்வமசி, ஏகமேவாத்விதீயம், ஆத்மைவேதம் சர்வம், ப்ரஹ்மைவேதம் ஸர்வம், இதம் ஸர்வம் யதயமாத்மா" என்பன போன்ற சுருதிவாக்கியங்கள் ஜீவாத்மாவிற்கும் பரமாத்மாவிற்கும் உள்ளதுபோலத் தோன்றும் பேதம் அநாதிய வித்தையின் கற்பிதமே யன்றி, பாரமார்த்திகமல்ல என்பதை நன்கு காட்டுதல் காண்க. மேலும்,

## 7. ப்ரக்ருத்யதி கரணம்.

23-வது. சூத்திரம். அவதாரிகை:—"நிஷ்களம் நிஷ்க்ரியம் சாந்தம் நிரவத்யம் நிரஜ்ஜனம்" (களங்க மில்லாதது, கிரியையற்றது, சாந்த வடிவானது, தோஷமில்லாதது, பற்றில்லாதது) முதலிய லக்ஷணங்களை யுடையது பிரம்மம். இவற்றிற்கு நேர்விரோதமான அவயவமுடைமை, அசேதனத்தன்மை, அசுத்தத்தன்மை முதலிய லக்ஷணங்களை யுடையது பிரபஞ்சம். ஆதலால் அத்தகைய பிரபஞ்சத்திற்கு பிரம்மம் குடத்திற்குக் குலாலனைப்போல நிமித்த காரணமாயிருக்கலாமேயன்றி உபாதான காரணமாயிருக்க முடியாது. ஏனெனில் "பார்த்தான், பிரதானத்தைச் சிருஷ்டித்தான்" என்னும் வாக்கியங்கள் சுருதியிலிருத்தலாலும் மேலே காட்டியபடி பிரம்மமும் பிரபஞ்சமும் ஒன்றுக்கொன்று நேர்மாறான தன்மைகளை யுடையனவா யிருத்தலாலும் என்று இவ்வாறு வரும் வாதம் கண்டிக்கப்படுகின்றது.

(காரணம் முதற் காரணம் அல்லது உபாதான காரணம், நிமித்த காரணம், துணைக் காரணம் என மூவகைப்படும். குடத்திற்கு மண்முதற் காரணம் (உபாதான காரணம்), குலாலன் நிமித்த காரணம், தண்ட சக்கரங்கள் துணைக் காரணம் என்றறிக).

சூ. 23. "ப்ரக்ருதிச்ச ப்ரதிஜ்ஞா த்ருஷ்டாந்தானு பரோதாத்."

பதவுரை:—ப்ரதிஜ்ஞா த்ருஷ்டாந்தானு பரோதாத்=சுருதியிலுள்ள பிரதிஜ்ஞா (விஷய) வாக்கிய திருஷ்டாந்த வாக்கியங்களுக்கு விரோதமில்லாம விருத்தலால், ப்ரக்ருதிச்ச=உபாதான காரணமும் (பிரம்மமே).

கருத்து:—"ஒரு விஞ்ஞானத்தினால் எல்லா விஞ்ஞானங்களு முண்டாம்" என்று சாந்தோக்கியத்திலுள்ள விஷய வாக்கியமொன்று கூறுகின்றது. இதன் திருஷ்டாந்த வாக்கியம் "ஒரு மட்குடத்தின் ஞானத்தினால் எல்லா மண்விகாரப் பொருள்களின் ஞானம் உண்டாகும்" என்று கூறுகின்றது.

பிரம்ம ஞானத்தால் சமஸ்த பிரபஞ்ச ஞானமும் உண்டாகுமென்றும், பிரம்மமே ஜகத்திற்கு உபாதான காரணமென்றும் இந்த திருஷ்டாந்த வாக்யத்தால் நிரூபிக்கப்பட்டது. காரியமெல்லாம் அவற்றின் உபாதான காரணத்தின் வேறாகாமையால், உபாதான காரண விஞ்ஞானத்தால் அதன் காரிய முழுதும் தெரிகின்றது. இங்ஙனமன்றி நிமித்த காரண ஞானத்தால் அதன் காரியம் தெரிவதில்லை. பிரம்மம் பிரபஞ்சத்திற்கு உபாதான காரணமாக இருந்தலாலேதான் பிரம்ம ஞானத்தால் சர்வ விஞ்ஞானமு முண்டாம் என்று போதிக்கப்பட்டது.

"ஏகமேவாத்விதீயம் (இரண்டாவதற்ற ஒரு பொருளே யுள்ளது.) நேஹநாநாஸ்தி கிஞ்சந (இங்கே நாநா (பல) என்பது சிறிதுமில்லை) என்பன போன்ற வாக்கியங்களால் ஒரே வஸ்து இருப்பதாகக் கூறப்பட்டிருத்தலாலும், மேலே காட்டிய விஷய வாக்கிய திருஷ்டாந்த வாக்கியங்களாலும் வேறு பொருள் இல்லை யென்று விளக்கமாகக் கூறப்பட்டிருத்தலாலும் பிரம்மத்தினும் வேறான அதிஷ்டானமில்லை யென்றும் ஆதலால் பிரம்மமே அபின்ன நிமித்தோபாதான காரணமென்றும் விளங்குதல் காண்க.

சிலந்திப் பூச்சியினின்றும் உற்பத்தியாகும் நூலுக்கு அதுவே நிமித்த காரணமாகவும் உபாதான காரணமாகவும் இருத்தல் போல, பிரம்மமே ஜகத்திற்கு நிமித்த உபாதான காரணமாக இருக்கின்றதென்பது சித்தாந்தமாம்.

24-வது. சூத்திரம். அவதாரிகை:—பிரபஞ்சத்திற்கு ஈசுவரனே அபின்ன நிமித்தோபாதான காரணமென்பது ஸ்திரப்படுத்தப் படுகின்றது.

சூ. 24. "அபித்யோப தேசாச்ச".

பதவுரை:—அபித்யோபதேசாத்—ச=தியானபூர்வக சிருஷ்டி சுருதிகளில் உபதேசிக்கப் பட்டிருத்தலாலும், (பிரம்மமே நிமித்த காரணமென்பதும் பெறப்படுகின்றது).

கருத்து:—பிரம்மம் பிரபஞ்சத்திற்கு நிமித்த காரணமென்று சில வாக்கியங்களும் உபாதான காரணமென்று சில வாக்கியங்களும் கூறுகின்றன.

சூ. 25. "ஸாக்ஷாச்சோ பயாம் நாநாத்."

பதவுரை:—ஸாக்ஷாச்ச=பிரத்தியக்ஷமாகவே, உபயாம் நாநாத்=பிரபஞ்ச உற்பத்திலயங்கள் பிரம்மத்தினாலேயே உண்டாகின்றன வென்று உபதேசிக்கப் பட்டிருத்தலால். (பிரம்மமே உபாதான காரணம்)

கருத்து:—பிரம்மத்தினின்றே பிரபஞ்ச சிருஷ்டியும் பிரம்மத்தினிடத்திலேயே பிரளயமும் உண்டாகின்றனவென்று சுருதி கூறுவதால், பிரபஞ்சத்திற்கும் பிரம்மம் உபாதான காரணமென்று நிச்சயிக்கப்படுகின்றது.

சூ. 26. "ஆத்மக்ருதேः பரிணாமாத்."

பதவுரை:—ஆத்மக்ருதேः=தன்னைத்தானே பிரபஞ்சரூபமாகச் செய்து கொண்டிருத்தலாலும், பரிணாமாத்=ஆகாசம் முதலிய பிரபஞ்ச ரூபமாகப் பரிணமித்தலாலும் (பிரம்மமே உபாதான காரணம்.)

கருத்து:—"அந்த பிரம்மம் சுயமாகத் தன்னையே பிரபஞ்சரூபமாகச் செய்து கொண்டது," "பிருதிவி அப்பு தேயுக்களாகவும், வாயு ஆகாசங்களாகவும் அந்தப் பிரம்மமே பரிணமித்தது" என்னும் வாக்கியங்களால் பிரம்மமே ஜகத்தாகப் பரிணமித்ததென்பது விளங்குகின்றது.

## சூ. 27. "யோகிச்ச ஹிகியேதே."

பதவுரை:—ஹி=எந்தக் காரணத்தால், யோகிச்ச = பிரம்மம் ஜகத்து பாதன மென்று, கியேதே=வேதத்தில் கானம் செய்யப்படுகின்றதோ, (அதனால் பிரம்மமே உபாதான காரணம்.)

கருத்து:—வேத வாக்கியங்களும் பிரம்மம் ஜகத்துக்கு உபாதானகாரண மென்று கூறுவதனாலும் இவ்வுண்மை நிச்சயிக்கப்படுகின்றது. ஈசுவரனுக்குப் பார்த்தல் வாயிலாகக் கர்த்திருத்துவம் சுருதிகளில் சொல்லப்பட்டிருத்தலால் அந்த ஈசுவரன் குலாலனைப்போல நிமித்திகாரண மாத்திரமாக இருக்கிறானென்று எண்ணலாகாது. பிரம்மமானது அநுமான சாத்தியமாக இல்லாமலிருத்தலாலும், சப்தத்தால் மாத்திரம் அறியத்தக்கதா யிருத்தலாலும் சங்கற்பத்தை முன்னிட்டுக் கொண்டவனாகிய ஈசுவரனுக்கே உபாதான காரணத் தன்மை சுருதிகளில் சொல்லப்பட்டிருந்ததாலும், பரமாத்மாவே அபின்ன நிமித்தோபாதான காரணமென்பது நிச்சயிக்கப்படுகின்றது. (இந்த விஷயம் பின்னர் ஈவிலக்ஷணத்வாதி கரணத்தில் விரிவாகக் கூறப்படும்)

(சத்தப் பிரமாணம் என்பது ஆகமப் பிரமாணம். வேதம் சத்தப் பிரமாணமாம்).

## 8. ஸர்வவ்யாக்யாநாதிகரணம்

28வது சூத்திரம். அவதாரிகை:—தேவல ரிஷி முதலிய சாங்கியமத கர்த்தாக்கள் தமது ஸ்மிருதிகளும் சுருதியை யனுசரித்தவைகளே எனவும் குடத்திற்கு மண் உபாதான காரணமா யிருப்பதுபோல ஜகத்திற்குப் பிரதானம் உபாதான காரணமெனவும், பிரதானஞானமே புருஷனுக்கு மோக்ஷசாதனமா மெனவும் வாதிக்கையில் அவர்களின் யுக்திகளை அங்கங்கு நிராகரித்து, அந்த மதத்தோடு சில அம்சங்களில் உடன்படும் அணுவாதி காரண வாதங்களும் அந்தந்த ஏதுக்களினாலேயே நிராகரிக்கப்பட்டன என்று தெரிவிக்கப்படுகிறது.

## சூ. 29 "ஏதேந ஸர்வே வ்யாக்யாதா:"

பதவுரை:—ஏதேந=பிரதானவாதநிராகரணத்தால், ஸர்வே=அதனோடு சமானமான மற்ற மதங்களும், வ்யாக்யாதா:=சுருதி விரோதமென்று நிரூபிக்கப்பட்டன.

கருத்து:—பிரதான காரணவாதம் சூத்திரங்களால் அங்கங்கு நிராகரிக்கப்பட்டது. இந்த மதத்தில் (சாங்கிய மதத்தில்) வேதாந்த மதத்தைப் போலவே காரியத்திற்கு காரணம் வேறல்ல என்பது அங்கீகரிக்கப்படுவதால் அந்தக்காரணம் பிரதானமல்ல வென்று நிச்சயிப்பதற்கு முயற்சி செய்யப்பட்டது. வேதாந்த மதத்திற்கு விருத்தமான மதங்களில் இதுவே மிக்க பலமுடையது. ஆகையால் இது முக்கியமாக நிராகரிக்கப்பட்டது. அணுவாதி காரண வாதங்களும் வேதாந்த மதத்திற்கு விரோதமானவைகளா யிருத்தலின் விடத்தக்கனவே. எனினும் அவற்றை நிராகரிப்பதற்கு முயற்சி செய்யப்படவில்லை. ஏனெனில், பிரதானமே காரணமென்னும் வாதத்தை நிராகரிப்பதற்காகக் காட்டப்பட்ட நியாயங்களாலேயே பிரதானமல்ல நிபர்ஹண நியாயத்தால் மற்ற வாதங்களெல்லாம் நிராகரிக்கப்பட்டதாக ஏற்படுகின்றது.

(பிரதானமல்ல நிபர்ஹண நியாயம்=பெரியமல்லன் கொல்லப்பட்டதாலேயே மற்ற மல்லர்கள் ஜயிக்கமாட்டார்கள் என்னும் திருஷ்டாந்தம்)

# இரண்டாம் அத்தியாயம் முதல் பாதம்.

அவதாரிகை:—சர்வஞ்ஞனுகிய பிரம்மமே சிருஷ்டி திதி லயங்களுக்குக் காரணமென்றும், சில வேதாந்த வாக்கியங்கள் சாங்கியம் முதலிய மதங்களுக்கு உபகாரியங்களல்லாமல் போதலோடு அவைகளும் பிரமத்தைப் பிரதிபாதிப்பனவே யென்றும் முதலத்தியாயத்தில் விளக்கப்பட்டன.

இனி, இரண்டாம் அத்தியாயத்தில் சுபக்ஷத்தில் ஸ்மிருதி நியாய விரோதங்களின் பரிகாரமும், பரமதத்தில் காட்டப்படும் நியாயங்களின் ஆபாசமும் நிரூபிக்கப்படும்.

இந்த முதல் பாதத்தில் சாங்கியம் முதலிய ஸ்மிருதிகளின் விரோதத்தாலும் நியாயவிரோதத்தாலும் வேதாந்த மதத்தில் காணப்படும் தோஷங்கள் நிராகரிக்கப்படும்.

(வாசகர்களுக்கோர் விண்ணப்பம்:—சாதாரணமாக வேதாந்தமதானுஷ்டான முன்னவர்களுக்குண்டாகும் பல சந்தேகங்களுக்குத் தக்க சமாதானங்கள் இவ்வத்தியாயத்தில் நன்கு காட்டப்படுமாதலின் சிரத்தையோடு ஊன்றி வாசித்து விசாரித்து உண்மைகளை உணர்ந்துகொள்ளுமாறு வேண்டுகின்றேம்.)

## ஸ்மிருத்யதிகரணம்

1வது சூத்திரம் அவதாரிகை:-பிரம்மமே ஜகத்காரணம் என்று போதிக்கும் வேதாந்தமதம் கபில பஞ்சிகாதி ரிஷிகளால் செய்யப்பட்ட ஸ்மிருதிகளுக்கு விரோதமாயிருத்தலால் அது அங்கீகரிக்கத்தக்கதல்ல என்று பூர்வபக்ஷிகள் வாதிக்கிறார்கள். இந்த வாதம் கண்டிக்கப் பட்டிருக்கின்றது.

சூ. 1. "ஸ்மிருத்ய நவகாச தோஷப்ரஸங்க இதிசேந்
நாந்ய ஸ்மிருத்ய நவகாச தோஷ்ப்ரஸங்காத்."

பதவுரை:—ஸ்மிருத்ய நவகாச தோஷப்ரஸங்கః=சாங்கியம் முதலிய ஸ்மிருதிகளுக்கு அப்பிராமாண்ய தோஷப்ராப்தி (யுண்டாகும்), இதிசேத்= என்று கூறுவராயானுல், ந=அது சரியல்ல. ஏனெனில், அந்யஸ்மிருத்யநவகாச தோஷப்ரஸங்காத்=மனு முதலிய மற்ற ஸ்மிருதிகளுக்கு அப்பிராமாண்ய தோஷமுண்டாவதால்.

கருத்து:—வேதாந்தமதம் யுக்தமானதாக இருக்கும்போது சாங்கியம் முதலிய ஸ்மிருதிகளுக்கு அப்பிராமாண்ய தோஷம் (பிராமாணமாகாமையாகிய குற்றம்) சம்பவிப்பது உண்மையே. அந்த சாங்கியமத ஸ்மிருதிகளை ஸ்தாபிப்பதற்காக வேதாந்தமதம் அயுக்தம் என்று சொன்னுல் சாங்கிய முதலிய ஸ்மிருதிகளும் அங்கீகரிக்கத்தக்கனவான மனுவாதிஸ்மிருதிகளுக்கு அப்பிராமாண்யதோஷம் சம்பவிக்கும். தவிர, மனுவாதி ஸ்மிருதிகள் சுருதியனுசாரிகளாயிருத்தலாலும், சுருதிக்கு விரோதமாகவுள்ள ஸ்மிருதிகள் புறக்கணிக்கப்படத்தக்கனவா யிருத்தலாலும் சாங்கியயோக காணுதாதி ஸ்மிருதிகள் அப்பிரமாணங்களே.

பிரம்மமே ஜெகத் காரணமென்றும், பிரதானமானது சுதந்தரமற்றதும் ஜடமானதுமா யிருத்தலால் பலவித விசித்திரங்களையுடைய பிரபஞ்சத்தை யுண்டாக்கும் சாமர்த்தியம் அதற்கு இல்லையென்றும் வேதங்களெல்லாம் கூறுதல் காண்க. (தொடரும்)

# "மணிமேகலை" ஆராய்ச்சி

ஸ்ரீ R. V. இராமஸ்வாமி B. A., B. L. வக்கீல், சேலம்.



## 3. சரித்திரக் குறிப்பு

### 8. 'துணையிளங்கிள்ளி'

சோழன் கிள்ளிவளவனுக்குத் துணையிளங்கிள்ளி யென்ற இளைய சகோதரன் ஒருவன் இருந்தனனென்பதும், அவன் காஞ்சியை ஆண்டு வந்தனனென்பதும் 'மணிமேகலை' கூறுகின்றது. காஞ்சியம்பதி, சோழராது நாடாகிய அருவ நாட்டிலுள்ளது. சோழரது காலத்திற்குப் பின், காஞ்சி பல்லவமன்னர்களது வசப்பட்டு அவர்களால் ஆளப்பட்டு வந்ததென்று சரித்திரம் கூறும்.

மணிமேகலையில், பவத்திற மறுகெனப் பாவை மணிமேகலை, நோன்பைக் கைக்கொண்ட வமயத்து இவ்விளங்கிள்ளியே காஞ்சியை ஆண்டு வந்தனன். அவன் தொடுகழற்கிள்ளியின் துணையிளங்கிள்ளி யென்று கூறப்பட்டிருப்பதால், முற்கூறிய கிள்ளியின் உடன் பிறந்த இளைய சகோதரனாக இருத்தல் வேண்டுமென்பது பெறப்படுகின்றது, தொடுகழற்கிள்ளி யென்பது, கிள்ளி வள்வனின் பல பெயர்களில் ஒன்றாதல் வேண்டும். துணையிளங்கிள்ளி யென்பது, கிள்ளிவளவனுக்குப் பின் சோழநாட்டை ஆளவந்த சோழன் நலங்கிள்ளியாக இருக்கலாமென்று தோன்றுகின்றது. இவ்வரலாறுகளில், காஞ்சி சோழரது ஆட்சிக்குட்பட்டதென்றும் அது சோழமன்னனின் உடன் பிறந்தோனால் அவனது துணைவனால் ஆளப்பட்டு வந்திருத்தல் வேண்டுமென்பதும் ஊகித் துணரலாம். இவ் விஷயம் மேலே தொண்டைமான் இளந்திரையனின் சரிதையில் விரிவாகக் கூறப்பட்டுள்ளது.

(காஞ்சியம்பதி)

துணையிளங்கிள்ளியால் ஆளப்பட்ட காஞ்சியைப் "பூங்கொடி கச்சிமா நகர்" (மணி. 28: 152) என்றும்; "பொன்னெயிற் காஞ்சிநாடு" (28: 156) என்றும், மணிமேகலையில் அதன் ஆசிரியர் சிறப்பித்துக் கூறியுள்ளனர். இப்பதி கச்சி யென்றும் காஞ்சி யென்றும் அழைக்கப்பட்டு வந்ததென்பது இதனால் விளங்குகின்றது. இது வஞ்சியின் வடமேற்றிசையி லிருந்ததென்பது,

'கொடிமதின் மூதூர்க் குடக்கணின் றோங்கி
வடதிசை மருங்கின் வானத்தியங்கி."

என்ற மணிமேகலை அடிகளால் உணரலாம். இவ் வடிகளின் உதவியால் வஞ்சிமா நகரிருந்த இடத்தையும் ஆராய்ந்திடலாம். காஞ்சி, தொண்டை

மண்டலத்தின் இராஜதானிப்பட்டணமாக விளங்கியதொரு சிறந்த நகரமாகும். அம்மண்டலத்தின் சிறப்பைத் தொண்டைமண்டல சதகம் விரிவாகக் கூறு தல் நோக்கற்பாலது.

(நாட்டின் பஞ்சம்)

இளங்கிள்ளியின் காலத்தில் காஞ்சி நகரம் மழையின்மையால் பெரிதும் வருந்தியது. வறுமை நோயால் நலிந்து தவித்தது. பல வுயிர்களும் துடித்துத் துடித்து மடிந்தன. நகர் முழுவதினும் கவினழிந்து பாழ்பட்டுக் கிடந்தது. (மணி. 21: 147) பஞ்சப்பிணியால் அவதிப்பட்டோரிற் பலர் அந்நாட்டை விட்டு வேற்று நாடுகளுக்கும் சென்றனர். இக் குறைபாடுகள் யாவையும் மணிமேகலையிடத்திருந்த அமுத சுரபியால் தீர்க்கப்பட்டதென்று, 'மணி மேகலை' கூறுகின்றது. மணிமேகலை தன்னாட்டிற்கு வந்துள்ள செய்தியைக் காவலாளன் ஒருவனால் அறிந்து இம்மன்னன், மந்திர சுற்றத்தவர்களோடு அவள்பால் சென்று, எதிர்கொண்டழைத்து, "கலத்தகை நல்லாய்! எனது செங்கோல் கொடுங்கோலாயிற்றோ? அன்றிச் செய்திடும் தவங்கள் பிழைத் தமை பற்றியோ? மற்றுமதுவன்றிக் கொங்கவிழ் குழலார் கற்புக் குறை பட்ட காரணத்தாலோ? யாது பற்றியோ அறியேன். இந் நன்னடெல்லாம் இன்மையால் வருந்திச் சொல்லொணாத் துன்புற்றுத் துயருகின்றது. தெய்வ மொன்று, உனது வருகையால் இந்நாடு சீரடையுமெனக் கூறிச் சென்றது" என்று தனது நாடு படும்பாட்டை வாயாற்கூறி வருந்தினன். அவளை அழைத்துச்சென்று தன்னாட்டின் தென்மேற்கேயுள்ள தரும தவனமென்ற சோலையினிடத்தி லிருக்குமாறு செய்வித்தனன். ஆங்கிருந்து மணிமேகலை யும் பசித்து வந்தோரின் அரும்பசி களைந்து அவர்கள் மகிழ்ந்து செல்லுமாறு செய்து வந்தனள். மணிமேகலை, தனது செயலைக்கண்டு மகிழ்ச்சியுற்ற அர சனைக்கொண்டு, புத்த மதத்தவர்களால் புண்ணிய ஸ்தலமாகக் கருதப்பட்டு வந்த மணிபல்லவ தீவத்திலுள்ளவாறுபோல், கச்சியில் புத்த சயித்தியமொன் றுகட்டி வைத்து, இந்திரவிழாவையும் நடத்தி வைத்தனள். நாடு பின்னர் செழித்து வளமுற்றது. அரசன் புத்த சயித்தியம் கட்டினனென்பது,

"தொடு கழற்கிள்ளி துணையிளங்கிள்ளி
செம்பொன் மாச்சினை திருமணிப் பாசடைப்
பைம்பூம் போதிப் பகவற் கியற்றிய
சேயர் தொழுது......"

(28: 172-5) என்ற அடிகள் கூறுகின்றன. இப் பதியிலே மணிமேகலை பௌத்த தருமங்களை அறவணர்பால் கேட்டு நித்தியானந்த சொரூபனாகிய பரம்பொருளை அறிதற்குத் தனது அந்திக்கால பரியந்தம் அறம்பல செய்து வசித்து வருவாளாயினள். (மணி. 30-ம் காதை) இவை யாவும் 'மணி மேகலை'யால் விளங்குவன.

(கரியாற்றுப் போர்)

இளங்கிள்ளி, தனது சகோதரன் மாவண்கிள்ளிக்காக அவனை எதிர்த்து வஞ்சியினின்றும் கிளம்பி, வஞ்சிசூடி, சிலைக்கொடியும், கயற்கொடியும் கொண்டு, நிலவேட்கை மிக்குவந்த சேரபாண்டியர்களின் நாற்பெரும் படை

களையும், கரியாற்றில் மடக்கி, அதி தீவிரமாகப்போர் செய்து, அவர்களைத் தோற்றோடுமாறு செய்தனனென்பதைச், சாத்தனார் சுருக்கமாகக் கூறியுள்ளனர்.

"தலைத்தார்ச் சேனையொடு மலைத்துத் தலைவந்தோர்
சிலைக்கயல் நெடுங்கொடி செழிவேற் றடக்கை
ஆர்புனை தெரியல் இளங்கோன் றன்னால்
கரியாற்றுக் கொண்ட காவல் வெண்குடை
வலிகெழு தடக்கை மாவண்கிள்ளி."

(மணி. 19: 124-8) என்ற அவ்வடிகளை நோக்குக. சமரில் வெற்றி பெற்றுப் பகைவரது வெண் கொற்றக்குடையை அவரிட மிருந்து யுத்த சன்மானமாகப் பெற்று, அதைத் தனது சகோதரனுக்குப் பரிசாக இவனளித்தனனெனினும் பொருந்தும்.

புறநானூற்றில் கரியாற்றுப் போரொன்றில், பகைவராற் கொல்லப்பட்டு உறையூர்ச்சோழன் நெடுங்கிள்ளி யென்பான் மாய்ந்தனனெனக் காணப்படுகின்றது. (செ. 47) மாண்ட களப்பெயரோடு அம்மன்னின் பெயரையும் காட்டிக் 'கரியாற்றுத் துஞ்சிய நெடுங்கிள்ளி' யென்ற பெயரால் இவன் பாடப்பட்டிருப்பது காண்க. அச் செய்யுளின் அடிக்குறிப்பால் கரியாற்றுப் போரில் தோற்றுச் சென்ற சேரபாண்டியர்களன்றிச் சோழரிவருரில் ஒருவனாகுய உறையூர்ச்சோழன் நெடுங்கிள்ளி யென்பானும் இறந்தனனென்பது புலனாகின்றது. சேரன் செங்குட்டுவனின் தாயுடன் பிறந்த மணக்கிள்ளி யென்பானின் மகன் நெடுங்கிள்ளி கிள்ளிவளவன் புகாரை ஆண்டுவந்த காலத்தில் உறையூரை ஆண்டு வந்தனனென்றும், அவனே மணிமேகலையில் குறிக்கப்பட்டுள்ள கரியாற்றுப் போரில் இளங்கிள்ளியால் மாவண் கிள்ளிக்காகக் கொல்லப்பட்டவனென்றும் கூறுவர். புறநானூற்றில், "உறந்தையோனே" என்று இக்கிள்ளியும், "பிறங்குநிலை மாடத் துறந்தையோனே" என்று கிள்ளிவளவனும் கூறப்படுதல் காண்க. கரியாற்றுப் போருக்குப் பின்னர், உறையூரும் இக் கிள்ளிகளின் வசப்பட்டு ஆளப்பட்டது போலும்! இவ்விரு ஊர்ச்சோழர்களும் அடுத்தடுத்துப் போர் செய்துவந்தன ரென்பது புறநானூற்றாலும் அறியலாம். (செ. 44, 45, 47.)



# காளமேகப்புலவர் சிலேடை நயம்



(பண்டித. இராமசுப்பிரமணிய நாவலர்.)

## புலவர் வரலாறு



இற்றைக்கு ஏறக்குறைய ஐந்நூறு வருடங்கட்கு முன்னர் இருந்த புலவர்களுள் காளமேகப்புலவர் ஆசினிலும் வசையினும் சிறந்தவர் என்பதைப் புலவருலகு மறுத்துரைப்பது இல்லை. 'ஆசுக்குக் காளமுகி லானவனே' எனவும், 'வசைபாடக் காளமேகம்' எனவும் பிற்றைப் புலவர் இவரை வியந்து உரைத்துப் போந்தனர்.

இவர் திருக்குடந்தையில் (கும்பகோணம்) தோன்றினர்; அந்தண குலத்தினர். பாண்டிநாட்டுத் திருமோகூர்க் காளமேகப்பெருமாள் கோயிலில் பரிசாரகரா யிருந்த பார்ப்பார் ஒருவருடைய புதல்வர் இவரெனவும் கூறுவாருளர். இவருடைய இயற்பெயர் வரதர் எனவும் இவர் வைணவ சமயத்திருந்து சைவந்தழுவினர் எனவும் கூறக் கேட்டிருக்கின்றோம்.

இவர் சின்னாள் திருவரங்கம் (ஸ்ரீரங்கம்) பரிசாரகரா யிருந்தனர். அக்காலத்துத் திருவானைக்காக் கணிகை யொருத்தியின் காமவலையிற் சிக்குண்டனர். எனவே, தம் வைணவமதத்தை ஒருவி அக் கணிகைப் பொருட்டுச் சைவந் தழுவினர். இவர் திருமாலை வைதுரைப்பனவும் சிவபிரானைப் புகழ்ந்துரைப்பனவுமாகப் பாடியன பல. திருவானைக்கா அகிலாண்டவல்லியால் இவர் பாடுந்திறல் எய்தின ரென்ப.

அகிலாண்டவல்லியை வயப்படுத்துவான் கருதி மறைமொழி விஞ்சையன் ஒருவன் மறை உருவேற்றியிருப்புழி அம்மை கொடுவடிவு எடுத்து வந்தனளாக, அவன் வெருவி ஓடினன். ஆண்டு, ஓர்பால், கையான் மெய்ம் மறைத்துக் கிடந்த வரதரை அம்மை கண்டு தன்வாயிற் றம்பலத்தை அவர் வாயில் உமிழ்ந்து ஏகினள். 'ஒன்றை, நினையாத முன்வந்து நிற்பினும் நிற்கும்' என்பதற் கேற்பத், தற்செயலாகப் பெற்ற தெய்வத் தம்பலத்தால் வரதர் வரகவிவாண ராயினர். அவரே நம் காளமேகப்புலவர். வாயாத விஞ்சையன் அஞ்சிப் பயனிழந்தான். அகிலாண்டேசுவரி பதிகம் ஒன்று வரம்பெற்ற போழ்தே இவர் பாடியதாகக் கூறுவர் சிலர். இவர் பாடியன திருவானைக்கா உலா, சித்திரமடல், பரப்பிரம விளக்கம், கடல் விலாசம் என்பன.

இவர் திருமலைராயன் பட்டணத்துச் சென்று ஆண்டு அதிமதுர கவிராயரைத் தலைவராகப் பெற்றிருந்த அவைப்புலவர் அனைவரையும் யமகண்டம் பாடித் தோற்கடித்தனர். அதிமதுர கவிராயர் இவரை நோக்கி, நீவிர் யார்? எனக் கேட்டபோது, இவர் தாம் பல் பிரபந்தங்களும் விரைவிற் பாடவல்ல கவி காளமேக மெனக் கூறினர். கறுத்தமேகம் சோனை மழையைப் பொழிவது போன்று கவிமாரி பொழிவர் என்பது காளமேகப் புலவர்

என்பதன் பொருளாம். காளமேகப் பெருமான் பெயரே இவர்க்கு இயற் பெயராக இடப்பட்டதென்னும் கருத்தினருஞ் சிலர் உளர். இவரது ஆசு கவித்திறத்தைக் குறித்து,

"ஆசுகவி மாரியகில வுலகமெல்லாம்
வீசுகவிகாள மேகமே"

எனப் பிற்காலத்துப் புகழ்ந்து புகன்றாரு முளர்.

இவர் திருமலைராயன் அவைக்களத்துத் தம்மை இன்னாரெனத் தெரிவித்த பாட்டு:—

"தூதைந்து நாழிகையி லாறுநா ழிகைதனிற்
சொற்சந்த மாலை சொல்லத்
துகளிலா வந்தாதி யேழுநா ழிகைதனிற்
றொகைபட விரித்துரைக்க
பாதஞ்செய் மடல்கோவை பத்துநாழிகைதனிற்
பரணியொரு நாள்மு ழுவதும்
பாரகா வியமெலா மோரிரு தினத்திலே
பகரக் கொடிகட் டினேன்
சீதஞ் செயுந்தொங்கல் மார்பனொ னியலிசை
தெரிந்ததிரு மலைரா யன்முன்
சீறியே வாதுகவி பாடுதற் கெதிர்வருந்
திடமிக்க புலவர் தம்மைக்
காதும் பிடித்துக் கவித்துக் கதுப்பில்
கரந்திட் டடித்து முதுகில்
கலணைவைத் தேமுழுக் கடிவாள மிட்டேறு
கவிகாள மேக நானே"

இங்ஙனம் அரசவை புலவரவைகளில் புலவாணர் தம்மைப் புகழ்ந்துரைப்பது இயல்பு.

"மன்னுடைமன்றத் தோலைத் தூக்கினும்
தன்னுடையாற்ற லுணரா ரிடையினுந்
தன்னைப் புகழ்தலுந் தகும்புல வோர்க்கே"

இவர் திருமலைராயன் அவைக்களத்து இயமகண்டம் பாடி வெற்றி பெற்றும், அரசன் பரிசளித்து மதியாமையால், அவன் பட்டினம் மண்மாரியா லழிய வாட்டினர் என்ப.

'செய்யாத செய்த திருமலைரா யன்வரையில்
அய்யா வரனே அரைநொடியில்—வெய்யழற்
கண்மாரி யான்மதனைக் கட்டழித்தாற் போற்றீயோர்
மண்மாரி யாலழிய வாட்டு'

'கோள ரிருக்குமூர் கோள்கரவு கற்றவூர்
காளைகளாய் நின்று கதறுமூர்—நாளையே
விண்மாரி யற்று வெளுத்து மிகக்கறுத்து
மண்மாரி பெய்கவிந்த வான்'

## சிலேடை நயம்

### ஆமணக்கு—யானை

1. முத்திருக்குங் கொம்பசைக்கு மூரித்தண் டேந்திவரும்
கொத்திருக்கும் நேரே குலைசாய்க்கும்—எத்திசைக்கும்
தேமணக்குஞ் சோலைத் திருமலைரா யன்வரையில்
ஆமணக்கு மால்யானை யாம்.

முத்து இருக்கும்—கொட்டைகள் இருக்கும்; (யானைக்) கொம்பில் முத்துக்கள் இருக்கும். மூரித்தண்டு—பெரியகொம்பு. யானை மரக்கொம்புகளை புசித்துக் கொணர்தலால் யானைக்கு மொக்கும். கொத்து இருக்கும்—காய்கள் கொத்தாக இருக்கும்; மதமாகிய கள் இருக்கும். குலை சாய்க்கும்—காய்க்குலை விடுக்கும்; பகைவரைக் குலையச்செய்யும் குலைக்குக் கொலையென்று பொருள் கொள்வது பொருத்த மன்று. இதனுள் ஆமணக்குக்கும் யானைக்குஞ் சிலேடை சொல்லப்பட்டது.

### வைக்கோல்—யானை

2. வாரிக் களத்தடிக்கும் வந்துபின்பு கோட்டைபுகும்
போரிற் சிறந்து பொலிவாகும்—சீருற்ற
செக்கோல மேனித் திருமாலைரா யன்வரையில்
வைக்கோலு மால்யானை யாம்.

வாரி...ம்—வாரன்றிக்களத்திலே அடிக்கப்படும்; வீரரை முகந்து போர்க்களத்தில் அறையும். கோட்டைபுகும்—நெல்கோட்டை என்னும் அளவு கருவியிலே புகும்; நகரத்தின் அரணுக்குட் புகும். போரிற்...—போராக (குவியலாக) சிறந்து விளங்கும்; போரில் (யுத்தத்தில்) சிறந்து விளங்கும்.

### பாம்பு—வாழைப்பழம்

3. நஞ்சிருக்குந் தோலுரிக்கு நாதர்முடி மேலிருக்கும்
வெஞ்சினத்திற் பற்பட்டால் மீளாது—விஞ்சுமலர்த்
தேன்பாயுஞ் சோலைத் திருமலைரா யன்வரையில்
பாம்பாகும் வாழைப் பழம்.

நஞ்சிருக்கும்—நைந்திருக்கும். தோலுரிக்கும்—தன் றோலைப் பாம்பு உரிக்கும்; பழம் தோல் உரிக்கப்படும். நாதர்...ம்—ஈசன் முடியில் ஆபரணமாக இருக்கும்; வழிபாட்டின் பொருட்டுப் பழம் ஈசன் முடிமீது வைக்கப்

பெறும். பற்பட்டால் மீளாது—பற்பட்டால் விடமேறி எளிதில் மீளாது; பல்லிடையிற் பழம் நைந்து பழைய உருப்பெறாது.

பாம்பு—எள்

4. ஆடிக் குடத்தடையு மாடும்போ தேயிரையும்
மூடித் திறக்கின் முகங்காட்டும்—ஓடி மண்டை
பற்றிற் பரபரெனும் பாரிற்பிண் ணாக்குமுண்டாம்
உற்றிடும் பெள்ளெனவே யோது.

ஆடிக்—ம்—; எள் செக்கிலாடி எண்ணெயாய்க் குடித்தடைக்கப் படும். ஆடும்...ம்—, மூடித்......ம்—பாம்பை யடைத்து மூடின் படங் காட்டும். எண்ணெயைக் குடத்துமூடி நோக்கின், நோக்குவாரது முகத்தி னிழலைத்தான் காட்டும்; ஓடி......ம்—பிண்ணாக்கு—; பிள்நாக்கு—பிளந்த நாக்கு (பாம்புக்கிரட்டை நாக்கென் றறிக.)

பாம்பு—எலுமிச்சம்பழம்

5. பெரியவிட மேசேரும் பித்தர்முடியேறும்
அரியுண்ணு முப்புமே லாடும்—எரிகுணமாம்
தேம்பொழியுஞ் சோலைத் திருமலைரா யன்வரையில்
பாம்புமெலு மிச்சம் பழம்.

பெரிய விடம்; பெரிய இடம். பித்......ம்—ஈசனுடைய சடையில் இருக்கும்; மயக்க நோயுடையார் தலையில் தேய்க்கப்படும். அரி யுண்ணும்—காற்றை உணவாகக் கொள்ளும்; அரியப்படும். உப்புமேல் ஆடும்—உப்பின் மேல் ஆடும்; உப்புமேல் இடப்படும் (ஊறுகாய் சமைக்கும் போழ்து) எரி குணம்—சிறுங்குணம்; எரிப்புடைக்குணம்.

நாய்—தேங்காய்

6. ஓடு மிருக்கு மதனுள்வாய் வெளுத்திருக்கும்
நாடுங் குலைதனக்கு நாணாது—சேடியே
தீங்கான தில்லாத் திருமலைரா யன்வரையில்
தேங்காயு நாயுநேர் செப்பு.

ஓடும், இருக்கும்; ஓடு (சிரட்டை) இருக்கும்.
நாடும்......து—குரைக்க நாணாது; குலையில் இருக்க நாணாது.

மீன்—பேன்

7. மன்னீரி லேபிறக்கும் மற்றலையிலே மேயும்
பின்னீச்சிற் குத்தும் பெருமையால்—சொன்னேன்கேள்
தேனுந்து சோலைத் திருமலைரா யன்வரையில்
மீனும்பே னுஞ்சரியா மே.

மன் நீரிலே பிறக்கும்—நிலைத்த நீரில் தோன்றும்; பொருந்துகின்ற நீரிலே தோன்றும். (மற்று) அலையிலே மேயும்—நீரலையில் தவழும்; மன் தலையிலே மேயும்—பொருந்திய தலையில் மேயும்.

பனைமரம்—வேசை

8. கட்டித் தழுவுதலாற் கால்சேர வேறுதலால்
எட்டிப் பன்னாடை யிழுத்தலால்—முட்டப்போய்
ஆசைவாய்க் கள்ளை யருந்துதலால் அப்பனையும்
வேசையென லாமே விரைந்து.

பன்னாடை—பனங் கொதும்பு; பொருந்திய ஆடை; ஆசைவாய்க்கள் அருந்துதலால்—விருப்பமிடமாக மதுவைக் குடித்தற் கிடனாதலால்; விருப்பத்தால் இதழ்நீரைப் (அதராமிருதம்) பருகுதலால்.

தென்னை—வேசை

9. பாரத் தலைவிரிக்கும் பன்னாடை மேற்சுற்றும்
சோர விளநீர் சுமந்திருக்கும்—நேரேமேல்
ஏறி யிறங்கவே யின்பமாம் தென்னைமரங்
கூறுங் கணிகையெனக் கொள்.

பன்னாடை—தென்னஞ் செதும்பு; பொருந்திய ஆடை; இளநீர்—முலை.

வெற்றிலை—வேசை

10. கொள்கையா னீரிற் குளிக்கையால் மேலேறிக்
கிள்ளுகையாற் கட்டிக் கிடக்கையால்—தெள்ளுபுகழ்ச்
செற்றலரை வென்ற திருமலைரா யன்வரையில்
வெற்றிலையும் வேசயா மே.

மேலே...ல்—வெற்றிலைக்காம்பைக் கிள்ளி எறிதலால்; உடம்பிலேறி நகக்குறி செய்ததால்.

கதவு—ஆடு

11. செய்யுட் கிடைமறிக்குஞ் சேர்பலகை யிட்டுமுட்டும்
ஐயமற மேற்றாள் அடர்க்குமே—தய்யநிலை
தேடும் புகழ்சேர் திருமலைரா யன்வரையில்
ஆடுங் கதவுநிக ராம்.

செய் உட்கு இடைமறிக்கும்—செய்யப்பட்ட வீட்டுக்கு இடையே மறைக்கும்; செய் உள் கிடைமறிக்கும்—வயலினுள் கிடைமறிக்கும் (ஆட்டுக் கிடை வளத்தின் பொருட்டுக் கொள்வர்.) பலகை...ம்—பலகைகள் இட்டு முட்டப்படும்; பலதரம் மற்றை ஆடுகளொடு போர் செய்யும். தாள் அடர்க்கும்—தாழ்ப்பாள் செறிக்கப்படும்; கால்களால் ஏனை ஆடுகளைச் செறும்.

## வானவில், திருமால்—வெற்றிலை

12. நீரிலுளவால் நிறம்பச்சை யாற்றிருவால்
பாரிற் பகைதீர்க்கும் பான்மையால்—சாருமனுப்
பல்வினையை மாற்றுதலால் பாரீர் பெருவான
வில்விண்டு கோவெற் றிலை.

வான்வில்—நீரில் தோன்றும் (மழையாற் றோன்றும்); பச்சைநிறத்தது; திரு-அழகு; பசியாகிய பகையைத் தீர்க்கும் (இனிப் பகைஞர் நட்பாம் போழ்து உறுதிப்பொருட்டு வானவில்லை நோக்குப என்ப.) சாரு......ல்—மக்களுடைய துன்பங்களை மழைபெய்து நீக்குதற்குக் காரணமாதலால்.

திருமால்—நீர்......ல்—பாற்கடலில் வாழ்வதால்;

பச்சைநிறத்தை யுடைமையால்; திருவால்—மார்பில் திருமகள் இருப்பதனுல் ; பகை......ல்-பகைஞராகிய அசுரரை (பாவிகளை) ஒழிப்பதனுல்; மக்களுடைய தீவினைகளை மாற்றுதலால்.

வெற்றிலை—நீரிற்......ல்—; நிறம்...ல்—;

திருவால்—வெற்றிலையில் நுனிப்பக்கத்துத் திருமகள் இருப்பதனுல்; இதனை 'தாம்பூலாக்ரே வாஸேலக்ஷ்மீ' என்பதனுலு முணர்க.

பகை......ல்—தாம்புல மளிப்பப் பகைஞரும் நட்பாதலால் (தாம் புலத்தை யளித்துப் பகைஞரை நட்பாக்கிக் கொள்ளாதலால்); மனு......ல்—மக்களுடைய பல் நோய்களை மாற்றுதலால்.

## விநாயகன்—முருகன்–சிவபிரான்

13. சென்னிமுக மாறுளதால் சேர்காமுன் னுலுகையால்
இங்கிலத்திற் கோடொன் றிருக்கையால்—மன்னுகுளக்
கண்ணுறுத லானுங் கணபதியுஞ் செவ்வேளு
மெண்ணரனு நேரொவ ரே.

விநாயகன்—சென்...ல்—தலையும் முகமுமாறுபாடாக (யானைமுகமாக) இருப்பதால்; கர......ல்—கை முன் பக்கத்தே தொங்குதலால்; (சேர்கரம்+முன்...ல்—ஐங்கரங்க ளிருப்பதனுல்); கோ......ல்-ஒரு கொம்பு மட்டுமிருத்தலால்; குளக்......ல்—குளத்தங் கரையில் இருப்பதனுல் (நெற்றிக்கண்ணுறுதலால்.)

முருகன்—சென்......ல்—தலையு முகங்களும் ஆறு (6) ஆக இருப்பதனுல்; (முன்......ல்—பன்னிரண்டு கரங்களிருப்பதனுல் (மூன்நாலு என்றிவ்வாறெழுதவதே பொருந்துமாயினும் ஓசை நயம் பற்றி 'முன்னுலு' என்பது தழுவப்பட்டது. இங்ஙனம் *சிலேடை இயமகங்களுள் வருவதுண்டு); கோ...ல்—மலையில் வாழ்வதனுல்; கோடு—மலை; குளக்...—ஈசனுடைய நெற்றிக்கண்ணிற் தோன்றியதனுல்; குளம்-நெற்றி.

சிவபிரான்—செ...ல்—தலையில் கங்கை என்னு மாறுதங்குதலால்; சேர்...ல்—முன் நஞ்சானது கழுத்திற் றங்குதலால்; கரம்—விஷம்;

கோடொன்...ல்—இடப்பாகத்து வஞ்சிக்கொம்பு போன்ற உமை இருப்பதனுல்; கோடு—கொம்பு; (கயிலையில் வாழ்வதனுல்) கோடு—மலை; குளக்...ல்...நெற்றியிற் கண் பொருந்துதலால்.

# இந்தியாவின் மஹாத்மியம்

—(0)—

(வீ. சங்கரையர்.)

(தொகுதி 20, 433-ம் பக்கத் தொடர்ச்சி)

நமது லக்ஷிய மென்ன என்பதை நாம் முதலில் தெரிந்து கொள்ள வேண்டும். ரயிலில் ஏறுவதற்கு முன் டிக்கெட் கொடுப்பவரிடம் தாம் போக உத்தேசித்திருக்கும் ஊர் எது என்று கூறியாக வேண்டும். பிறகு அவர் நமக்கு அவ்வூருக்குரிய பணத்தை நம்மிடம் பெற்றுக்கொண்டு ஒரு டிக்கெட்டை நம்மிடம் கொடுப்பார்.—அந்த டிக்கெட் அவ் வூர் வரையிலும் தான் செல்லும். இன்னும் அதிக தூரம் செல்ல வேண்டுமானல் இன்னும் அதிகப் பணம் கொடுத்தாக வேண்டும். அது போலவே நமது வாழ்க்கையில் நமது பரம லக்ஷிய மென்ன வென்பதை நாம் முதலில் முடிவு செய்து கொள்ள வேண்டும்.

நமது லக்ஷியம் ஒன்றே. அதற்கான வழிகள் பல உண்டு. எல்லாரும் ஆனந்தத்தையே முடிவான லக்ஷியமாகக் கொள்ளுகிருர்கள். இந்த ஆனந்தத்தை அடைய சாதனமாக 'ஸத்'தும் 'சித்'தும் அவசியம் வேண்டும்.

ஸத்:— என்ருல் அரோக திடகாத்திரத்துடன் ஜீவித்திருப்பது.

சித்:—என்ருல் ஞானம்—அறிவு என்று கூறப்படுவது.

ஸத்துக்கும், ஆனந்தத்துக்கும் சித் என்பது அவசியமாகும். அதற்குத்தான் படிப்பு என்ற சித் அவசியமாகும். அதனுல் தான் 'எண்ணும் எழுத்தும் கண்ணெனத்தகும்,' என்றும், 'வித்தியாதனம் ஸர்வதனுத் பிரதானம்' என்றும், இன்னும் பற்பல பிரகாரத்திலும் வித்யையை மிகவும் சிலாக்கியமாகக் கூறப்படுகிறது. ஆகையால் ஒரு மனிதனுடைய லக்ஷியம் ஆனந்தமும், அதை அடைய ஸத்தும், அவ் விரண்டையும் அடைய சித்தும் அவசியமென்று நமது சாஸ்திரம் கூறுகிறது.

இனி ஆனந்தம் என்பது என்ன என்று ஆராய்வோம். அதுவே மோக்ஷம் என்றும், சுதந்திரம் என்றும், சுயராஜ்யம் என்றும் கூறப்படுகிறது. இதுவே விடுதலை என்றும் சொல்லப்படுகிறது. இந்த விடுதலை சகல பிராணிகளுக்கும் உண்டு. ஒரு எலி கூடத் தன்னை விடுவித்துக் கொள்ள வழி தேடுகிறது. பிராணனேடு கூடின சகல ஜந்துக்களுக்கும் உள்ள பொதுவான இயல்பு இந்த மோக்ஷமாகிற ஆனந்தத்தை அடைவதே ஆகும்.

இந்த மோக்ஷத்தை அடைவதற்குப் பலவித பாகுபாடுகள் செய்யப்பட்டிருக்கின்றன.

'ஆகாசாத் பதிதம் தோயம்,
யதாகச் சதி சாகரம்
ஸர்வதேவ நமஸ்காரः
கேசவம் பிரதி கச்சதி.'

ஆகாசத்திலிருந்து விழும் தண்ணீர் எவ்வாறு சமுத்திரத்தில் போய்ச் சேருகிறதோ அவ்வாறு எந்தக் கடவுளை எப் பெயரால் வணங்கினாலும் எல்லாம் ஒரே கடவுளான கேசவனையே போய்ச் சேருகிறது என்பது பீஷ்மருடைய வாக்கு.

வேதம், வேதாங்கம் முதலியவை எல்லாம் தர்மத்தையே போதிக்கின்றன. பிறர் நம்மை எவ்வளவு கேலி செய்தாலும் இன்னும் அந்தத் தர்மப் பைத்தியம் நம்மை விட்டபாடில்லை. நமது தேகத்திலுள்ள எல்லா இந்திரியங்களும் எல்லா வேலைகளையும் செய்வ தென்றால் எப்படி முடிவில் தேகத்திற்கே கெடுதி ஏற்படுமோ, அவ்விதமே சமூகத்தில் எல்லாரும் எல்லாக் காரியங்களையும் செய்வ தென்றால் முடிவில் குழப்ப மேற்படும் என்பதில் சந்தேகமில்லை. இந்தத் தத்துவத்தை இப்பொழுதுதான் மேனாடுகளில் ஆராய்ச்சி செய்து வருகின்ற பிரமுகர்கள் உணர்ந்திருக்கின்றனர்.

உதாஹரணமாக சென்ற 15 வருஷங்களாக எல்லா வருணத்தாரும் தங்கள் தங்கள் தொழில்களைச் செய்யாமல் உத்யோக மோகத்தால் தங்கள் பூர்வீகர்கள் சம்பாதித்து வைத்திருந்த பூஸ்திதிகளை யெல்லாம் விற்று B. A; M. A. முதலிய பட்டங்கள் பெற விரும்பிப் படித்து, காலேஜ் ஸஹவாச தோஷத்தால் கெட்டுத் தங்கள் குடும்ப பாரம்பரியமாக ஏற்பட்ட தொழில்களைச் செய்யவும் அசக்தராகி, சர்க்கார் உத்தியோகமும் கிடைக்காமல் ஊணுக்கும் உடைக்கும் கூட வழியில்லாமல் திண்டாடும் பலரை நான் பார்த்திருக்கிறேன். எல்லாரும் சர்க்கார் உத்யோக மோகம் கொண்டால் சர்க்காரால் எவ்வளவு பேருக்குத்தான் உத்யோகம் கொடுத்துக் காப்பாற்ற முடியும். உழவு முதலிய பல தொழில்களைச் செய்ய அசக்தராகி விட்டபடியாலும், சக்தர்கள் அவைகளைச் செய்வது கேவலம் என்று நினைத்தபடியாலும், விவசாயமும், கைத்தொழிலும் கெட்டு விட்டன. முன் கூறிய பிரகாரம் அவரவர்கள் தொழிலை அவரவர்கள் சரிவரச் செய்து வந்தால்தான் தேசம் முன்னேற்ற மடையும். அவரவர்கள் தொழில்களில் தங்கள் முழுச் சாமர்த்தியமும் காட்டிப் புகழும் பெறலாம். 'பலமரம் கண்ட தச்சன் ஒரு மரமும் உபயோகியான்' என்றபடி எல்லாவற்றையும் அறிய விரும்பி ஒன்றுமே செய்யாச் சக்தியற்றவனாகிறான். இதுவே நமது தற்கால நிலைமை. ஆனால் இந்தப் புண்ணிய பூமியில் அநாதி சித்தமாகத் தோன்றிய ஸனாதன தர்மத்தை நம்மில் பலர் அழிக்க முயன்ற படியால் தான் நாமெல்லோரும் கஷ்டப்படுகிறோம். ஒரு குடும்பத்தில் ஒரு குயுக்தி யிருந்தாலும் போதும் அக் குடும்பத்தின் கேட்டுக்கு. ஆகையால் எல்லா விஷயங்களையும் தீர விசாரணை செய்து சரியான முடிவுக்கு வந்து அதன்படிக்கு நடக்க வேண்டுமாய்க் கேட்டுக் கொள்ளுகிறேன். நமது அநாதியான தர்மத்தை ஒருவராலும் அழிக்க முடியாது. ஒரு எறும்புக்குச் சுவரின் மீது நேராக ஏற முடியும். மீன் ஜலத்திற்குள் வசிக்கிறது. பறவைகள் பறக்கின்றன. அவ்வாறு மனிதனால் செய்ய முடியாது. அவனுக்கு எவ்வளவோ விசேஷ சக்தியும் அறிவும் இருக்

கின்றன. ஆகவே மனிதனுயினும், மிருகமாயினும், தம் தம் வழியில் ஒவ்வொரு உயர்வைப் பெற்றிருக்கலாம்.

'சரீரமாத்யம் கலுதர்ம ஸாதனம்' என்றபடி தர்மம்செய்ய சரீரம் வேண்டும். அதுவோ நீரின் மேல் குமிழி போலும், தாமரையிலை மீதிருக்கும் நீர்த்துளி போலும் அநித்தியமானதே. அச்சிறிது காலத்திற்குள், சிலர் பாவத்திற்கு வழி தேடலாம், சிலர் சகாம கர்மங்களால் ஸ்வர்க்காதிகளில் பலன் பெறலாம், வேறு சிலர் நிஷ்காம கர்மங்களால் மோக்ஷத்திற்கு வழி தேடலாம். எந்த இடத்தில் எப்படிப்பட்ட விதையை நாம் விதைக்கிறோமோ அப்படியே தான் பலனும் கிடைக்கும்.

'ஜந்துநாம் நரஜன்மதுர்லபம்' என்றும் 'க்ஷீணே புண்யே மர்த்யலோகம் விசந்தி' என்றும் கூறியிருக்கிற பிரகாரம் பிராணிகளில் நரஜன்மம் விசேஷ மென்றும் அதில் செய்யும் புண்ய கர்ம பலனாக சுவர்க்காதி போகங்கள் கிடைக்கு மென்றும், புண்ய பாவ அனுபவமானதும் மறுபடியும் பூமியில் ஜாதமாகிறார்கள் என்றும் நம் பெரியோர்கள் கொள்கை.

மிருத்யு ஒருவரையும் விடுவதில்லை. அவன் திடகாத்திரனோ, நோயாளியோ, வாலிபனோ, விருத்தனோ ஆனாலும் இறப்பது இயல்பே. 'ஜாதஸ்ய ஹித்ருவோ மிருத்யு' என்பது ஆன்றோர் வாக்கியம்—எப்பொழுது நமது மரணகாலம் என்பது அறிய ஒருவருக்கும் சக்தியில்லை. காரணம் தெரியாமலே மரணம் திடீரென சேருவது நாமறிந்த விஷயமே. வீடு, நிலம், பாரியை முதலிய ஒன்றும் நம்மை மரணானந்தரம் பின்பற்றுவதில்லை யென்றும், நாம் செய்திருக்கும் புண்யபாவங்கள் தான் நம்மைப் பின்பற்றி வருகின்றன என்றும் நாம் அறிய வேண்டும். 'ஸர்வம் பரவசம் துக்கம்' என்றும் 'ஸர்வம் ஆத்மவசம் சுகம்' என்றும் உள்ள வசனங்களைக் கவனிக்கவும். ஆகையால் பந்தத்தில் இருந்து விடுபட்டு மோக்ஷம் அடைய அதாவது 'நரோ நாராயணோ பவேத்' என்ற பிரகாரம் நந்தனர் பகவானுடன் ஐக்கியமான பிரகாரம் நாமும் கடவுளாகவே ஆகி ஐக்கியமாகப் பாடுபட வேண்டு மென்று நமது வேதம், சாஸ்திரம், புராணங்கள் கூறுகின்றன. இதற்கே எல்லா நமது ஸத் கர்மாக்களும் காரணமாகும். 'மாமுபேத்யது கௌந்தேய புனர்ஜன்ம நவித்யதே' என்ற கீதாசாரியர் வசனப்படி பகவானை அடைந்தவர்களுக்கு புனர்ஜன்மமே கிடையாது. 'நமெபக்தப்ரணச்யதி' என்று பகவான் கூறியிருக்கிறபடியால் பகவத் சந்நிதியில் நிச்சயபுத்தியுடன் வஞ்சனை யன்னியில் ஸ்வ தர்மத்தை அனுஷ்டிக்கும் பக்ஷத்தில் அர்ஜுனன் மாதிரி நிச்சயமாக வெற்றி பெறலாம்—'அடியார்க்கும் அடியான்' என்ற பிரகாரம் பகவான் பார்த்த சாரதியாக இருந்தார். பகவான் ஒருவன் உதவியாலே அர்ஜுனன் வெற்றி பெற்றான் என்பதையும் அறியவும்.

நமது சுருதி, ஸ்மிருதி, புராண இதிஹாஸங்களில் கூறி யிருப்பவைகள் எல்லாம் உண்மையானவைகளே என்று தற்சமயம் பாச்சாத்ய சாஸ்திர பண்டிதர்கள் செய்து வரும் பரீக்ஷைகளிலிருந்து நமக்கு நன்கு விளங்குகிறது. நாம் நிச்சயமாக சாஸ்திராதிகளை நம்புவதில்லை. வேறொருவர் வந்து நம்முடைய சாஸ்திரத்தில் கூறி யிருப்பவைகளை எடுத்துக் கூறினால் ஏதோ புதிய விஷயம் என்று நாம் நம்புகிறோம். நமது பூர்விகர்கள் தினமும் காலையில் குளித்து சூரிய நமஸ்காரம் செய்து அரோக திடகாத்திரர்களாக

இருந்தார்கள். அதை சுமார் 50 வருஷ காலங்களாக இந்தியர்கள் விட்டு விட்டார்கள். சூரிய நமஸ்காரத்தைக் குறித்து பம்பாய் இராஜதானி ஔந்து சம்ஸ்தானத்தின் அரசரான மே. த. பவானிராவ் ஸ்ரீனிவாஸராவ் அவர்கள் பல ஆராய்ச்சிகள் மூலம் ஒரு புஸ்தகமே எழுதியிருக்கிறார். அவர் தேசத்திலுள்ள எல்லா ஆரம்ப, நடுத்தர, உயர்தரப் பாடசாலைகளிலும் இதை 1924-வது வருஷம் முதல் கட்டாய தேகாப்பியாசமாக ஏற்படுத்தியிருக்கிறார்—இப்படி ஆராய்ச்சி செய்து புதிதாகக் கூறினால் தான் நாம் நம்புகிறோம்.—நமது சாஸ்திரத்தை நம்புவதில்லை. நானும் சூரிய நமஸ்காரத்தைப் பற்றி ஆனந்தபோதினி Vol 21; No 3 பக்கம் 204 முதல் 206 வரை எழுதியிருப்பதை அன்பர்கள் கண்ணுறுவார்களாக.

கங்காநதி திரி புவனத்தையும் பாவன மாக்குகிறது என்றெல்லாம் நமது சாஸ்திரங்களும் புராணங்களும் கூறுகின்றன. இதற்குக் காரண மென்ன? 'சாஸ்திராயச சுகாயச' என்றபடி சாஸ்திர மெல்லாம் நம்முடைய க்ஷேமத்தைக் கருதி எழுதப்பட்டவையே. சாஸ்திரமும் சுகாதாரமும் ஒன்றாக இணைக்கப்பட்டிருக்கின்றன. ஆறு தன் வேகத்தினால் சுத்தமாகிறது என்று மனு கூறியிருக்கிறார். இதைப் பல நவீன சாஸ்திரிகளும் ஒப்புக் கொள்ளுகிறார்கள். மாஜி சென்னை சானிட்டெரி கமிஷநாக இருந்த லெப்டினென்ட் கர்னல் கிங். ஐ. எம். எஸ். என்பவர் காவேரி நதியின் ஜலத்தைப் பரீக்ஷை செய்து நதிஜலம் தன் வேகத்தாலேயே சுத்த மடைகிறது என்பதைக் கண்டு பிடித்தார். மிஸ்டர் ஹான்கின் செய்த பரீக்ஷையிலிருந்து யமுனா நதியின் ஜலத்துக்கு அசுத்தங்களை அதி சீக்கிரத்தில் பரிசுத்தம் செய்யும் சக்தி யிருக்கிறது என்றும், டாக்டர் டி. ஹெரிலி செய்த பரீக்ஷையிலிருந்து கங்கா ஜலத்தில் எந்த அசுத்தம் கலந்தாலும் அச் சமயமே அவைகளெல்லாம் காணாமல் போய் விடுகிறது என்றும் தெரிய வருகிறது. இவைகளை யெல்லாம் நன்கு உணர்ந்த பாச்சாத்ய சாஸ்திரிகள் இப்பொழுது கங்கா நதியின் மஹாத்மியத்தை உணர்ந்து நம் முன்னோர் அபிப்பிராயம் சரி என்று ஒப்புக் கொள்ளுகிறார்கள். கங்கா ஜலத்தைக் கல்கத்தாவிலிருந்து கப்பல்களில் ஏற்றி லண்டனுக்குக் கொண்டு போகிறார்கள். அந்த ஜலமும் வெகு காதம் வரையிலும் கெட்டுப் போவதே கிடையாது. ஆனால் தேம்ஸ் நதி ஜலமோ லண்டனிலிருந்து வரும் கப்பல்களில் கொண்டுவரப்பட்டு ஸூவெஸ் கால்வாயை அடைவதற்குள் கெட்டுப்போகிறது. நாம் நம்முடைய சாஸ்திரத்தில் கூறப்பட்டவைகளை நம்புவதில்லை. ஆனால் பாச்சாத்தியர்களான இதரர்கள் கூறினால் நம்புகிறோம். இதுவும் கால வேற்றுமையேயாகும்.

காசியிலுள்ள கல்லூரியில் தலைமை ஸ்தானம் வகித்த மே. த. ரிச்சார்ட்ஸன் துரை அவர்களுக்கு எவ்வாறு கங்கா பக்தர் என்ற பெயர் வந்தது என்பதைக் கேட்க யாவரும் ஆவலுள்ளவர்களாக இருப்பீர்கள் என்று நம்புகிறேன். கங்கா ஜலத்தில் பல சாக்கடை நீர்களும் பிணங்களும் வந்து சேர்ந்து அசுத்தப்படுகிறது என்பதைக் கண்ணால் பார்த்த மேலே கூறப்பட்ட துரை அவர்கள் தன் பாடசாலை வித்தியார்த்திகளையும், மற்ற பேர்களையும் கங்கா ஜலத்தை அருந்தக் கூடாது என்று பலவிதத்திலும் கண்டித்தார்—ஆனால் அவர்கள் கேட்க வில்லை. பிறகு, தனக்கு சந்தேகம் உண்டாகி அந்த நீரை ரசாயன பரீக்ஷை செய்ய ஆரம்பித்தார். முடிவாக அந்தப் புனிதமான தீர்த்தத்துக்கு எல்லா விதமான ரோக பீஜங்களையும் இல்லாமல் உடனே

செய்யும் சக்தி யுண்டு என்று அறிந்து அதிக ஆச்சரிய மடைந்தார். கங்கையின் பிரபாவம் நன்கு அறிந்தார். அது முதல் கங்கா நதியில் தினமும் தவருமல் காலை 4 மணிக்கே ஸ்நானம் செய்யவும் அந்த நீரையே அருந்தவும் ஆரம்பித்தார். அது முதல் அவர் ஹிந்து சாஸ்திரத்தின் மஹிமையை அறிந்தவராகி தானும் ஹிந்து மதக் கொள்கைகளை யெல்லாம், தற்காலத்து பிள்ளைகளைப் போல் 'என்?' என்ற கேள்வி கேட்காமலே அநுஸரிக்கலானார்—தன் பெயரையும் கங்கா பக்தர் என்று மாற்றிக் கொண்டார்.

காசிவாசிகளும் அவரைக் 'கங்கா பக்தர்' என்ற பெயராலேயே அழைக்கத் தொடங்கினர்கள். இம் மாதிரிப் பிரபாவம் கங்கா ஜலத்திற்கு இருப்பதனால் தான் வெகு காலமான கங்கையை ஒரு தெய்விக நதி யென்றும் அந்த நதி தீர்த்தத்தை ஒவ்வொரு கிருகங்களிலும் பாத்திரங்களில் வைத்து மூடி பூஜை செய்ய வேண்டு மென்றும் ஏதாவது அசுத்தங்கள் ஏற்படவோ, தொத்து வியாதியால் ஒரு வீட்டில் யாராவது இறக்கவோ செய்தால் அந்தத் தீட்டு தீரும் காலத்தில் பஞ்சகவ்யமும், கங்கா தீர்த்தமும் பிராசனம் செய்தால் அவன் பரிசுத்தனுகிறான் என்றும் நமது சாஸ்திரம் கூறுகிறது. பல வருஷங்கள் வைத்திருந்த போதிலும் கங்கா ஜலம் கெட்டுப் போவதில்லை என்பது நம்மில் பலருக்கும் நன்கு தெரிந்த விஷயமேயாகும்.

ஆகையால் தான் கங்கா நதியில் ஸ்நானம் செய்து வருவது மிகப் புண்ய மென்றும் அதனுல் தேக பீடை, மனக்கிலேசம் இவைகள் நீங்குகின்றன என்றும் நமது சாஸ்திரம் கூறுகிறது. இவ்வளவு மகிமை கங்கைக்கு இருக்கிறது என்பது ஜனங்களுக்குத் தெரிவிப்பதன்பொருட்டே பல கதைகளால் கங்கை விஷ்ணு பாதத்திலும் சிவனுடைய ஜடையிலும் இருந்து புறப்படுகிறது என்றும், சுப்பிரமணியருடைய பிறப்பிடம் என்றும், பகீரதனுடைய பிதருக்களைப் பாபத்திலிருந்து காப்பாற்றியது என்றும் நமது சாஸ்திரம் கூறி நம்மை நம்பும்படிச் செய்கிறது. யாவரும் கங்காஸ்னானம் செய்ய விரும்புவீர்களாக—விருப்ப மிருந்தால் காரியம் சித்தியடையும்.

கிரஹணம் பிடிக்கும்போது நமது பித்தப் பையில் இருக்கும் நுட்பமான நரம்புகள் பலஹீனப்பட்டு விடுவதனுல் அக் காலத்தில் பட்டினி கிடக்க வேண்டுமென்று "பிஸியாக்ரபி" என்ற சாஸ்திரத்தில் அதிகத் தேர்ச்சிபெற்ற பிராக்ஞர் 'தாரன்டன்' என்பவர் 'ஸயன்ஸ் ஸிப்டிங்ஸ்' என்ற சாஸ்திரப் பத்திரிகையில் எழுதியிருக்கிருர். இவ் விஷயம் நமக்கு (இந்தியர்களுக்கு) ஒரு புதிதல்ல. நம் முன்னேர்கள் இவ் விஷயம் அறிந்தவராகையால் நன்மையைக் கருதி அக் காலத்தை ஒரு வைதிக காலமாகச் செய்து, கிரகணம் பிடிப்பதற்கு 3 ஜாம காலத்துக்கு முன்னுடியே ஆகாரம் செய்ய வேண்டு மென்று நமக்கு விதித்திருக்கிருர்கள்.

சென்னை கிரிஸ்டியன் காலேஜில் சாஸ்திர போதகராக யிருந்த டாக்டர் ஹெண்டர்ஸன் என்ற மஹான் வெற்றிலைக் காம்பிலுள்ள விஷம் மனிதனின் தேக வளர்ச்சியை தடுக்கிற தென்றும், நரம்பில் ஒருவித மயக்க வஸ்து இருக்கிற தென்றும், நுனியில் தாது நஷ்டத்தை விளைவிக்கும் ஒருவித ரசம் இருக்கிறது என்றும் இவைகள் நீங்கியுள்ள வெற்றிலையின் மற்றப் பாகம் விஷய அனுபவத்தால் தேகவலுவைக் குறைத்துக் கொண்டுவிட்டவர்களுக்கு ஜீரண சக்தியைக் கொடுக்கிறது என்றும் கூறி யிருக்கிருர். இவ்

விஷயங்கள் எவ்வளவோ காலத்துக்கு முன்னுடியே நம் முன்னோர் கண்டு பிடித்திருக்கிறார்கள். நரம்பு, காம்பு, நுனி—இவைகளை நீக்கிவிட்டுப் பிறகு தான் நாம் வெற்றிலையை உபயோகிக்கிறோம். பிரம்மசாரிகள் (விவாஹ மாகாதவர்கள்,) ஸன்னியாசிகள் (பாரியை யில்லாதவர்கள்) விதவைகள் (பர்த் தாவில்லாதவர்கள்) ஆகிய இவர்களுக்கு காம இச்சையை உண்டாக்குவது தகாத காரியமாகையால் இவர்கள் வெற்றிலையை உபயோகிக்கக் கூடாது என்று நமது சாஸ்திரம் ஆக்ஞாபிக்கிறது. இவர்கள் வெற்றிலையை உப யோகிப்பதால் பலவித ரோகங்களும், அவமானங்களும் நேரிடும்.

ஜன்மாந்தரங்கள் உண்டு என்று கூறுகிறதையும் இப்பொழுது பாச் சாத்ய நிபுணர்கள் ஒப்புக்கொள்ள வேண்டியதாகவே யிருக்கிறது. இதற்கு எல்பெர்பீல்ட் குதிரை விஷயமே போதும். ஜெர்மனி தேசத்திலுள்ள எல்பெர்பீல்ட் என்ற பட்டணத்தில் ஒரு உபாத்தியாயா இருந்தார். அவர் ஒரு நாள் தன் பிள்ளைகளோடும், தன் குதிரையோடும் பக்கத்திலிருக்கும் ஒரு தோப்புக்குப் போயிருந்தார். அங்கே குதிரையை அருகில் கட்டிவிட்டு அவர் பிள்ளைகளுக்கு கணக்குப்போட்டார். உடனே குதிரை கனைக்கவும், தன் கால்களை பலதடவை பூமியில் அடிக்கவும் செய்தது. அடுத்த கணக்குப் போட வும் அப்பொழுதும் அக்குதிரை அவ்வாறே செய்தது. பிறகு குதிரையை கவனித்தார். அந்தக் கணக்குக்கு விடை 256. ஆகையால் குதிரை ஒரு காலால் 2 அடியும், மற்றொன்றால் 5 அடியும், வேறொரு காலால் 6 அடியும் தரையில் அடித்தது. இன்னும் சில கணக்குகள் போட்டார். விடை சரி யாகக் குதிரைக் கூறிற்று.

அத்துடன் அவர் தன் உபாத்தியாயர் தொழில் விட்டுவிட்டு அக்குதி ரையை ஊரூராகக் கொண்டுபோய் அதன் கணித சாஸ்திர சாமர்த்தியத்தை காட்டிவந்தார். பல சாஸ்திர நிபுணர்களும் இதைப் பார்த்து ஆச்சரிய மடைந்தனர். முடிவாக ஹிந்துக்கள் கூறுவதுபோல் குதிரை பூர்வ ஜன்மத் தில் மனிதனாக இருந்திருக்கவேண்டுமென்ற முடிவுக்கு வந்தனர். இம்மா திரி இன்னும் ஏராளமாகக் கூறமுடியும். எல்லாம் நமது சனாதன தர்மத் தையே ஆதரிக்கின்றன.

ஆகையால் கங்காபக்தரான ரிச்சர்ட்ஸன் துரை அவர்களைப்போல நமது சாஸ்திரத்தை நம்பி அதன்படி நடந்துவந்து நாமெல்லோரும் அரோக திடகாத்திரராக இருக்க முடியும் என்பதிலும் முடிவில் மோக்ஷமாகின்ற சாம் ராஜ்யத்தை அடைய முடியும் என்பதில் சந்தேகமே இல்லை.



# வறுமை

[R. ஷண்முகம் பிள்ளை.]

ஒருவன் நிலவுலகில் அனுபவிக்கவேண்டுவ தின்மையே வறுமை என்பது. ஒவ்வொருவரும் அங்ஙனம் அனுபவிக்க வேண்டுவதில் உணவும் ஆடையுமே தலையாயதென்பது வெளிப்படை. உண்பதும் உடுப்பதும் பொருளில்லாவிடத்து நிகழாதாதலின், பொருளின்மையே வறுமைக்கு ஏதுவாமென உணர்க.

மக்கள் வாழ்க்கைக்கு இன்றியமையாத கருவி செல்வமே யென்றுணராதவர் அவைகளை வீணிற் செலவழித்து வறியவராகின்றனர். சிலர் பொது நலத்தார் புன்னலந் தோய்தலிலும், சிலர் தாயத்தார்மீது வழக்கு தொடுப்பதிலும், சிலர் தம் பகைவர்மீது பொய்வழக்குச் சாதிப்பதிலும், சிலர் உயர்ந்த ஆடை, ஆபரணங்களை அணிவதிலும், சிலர் மதுபானம் செய்வதிலும் சிலர் சூது ஆடுதலிலும், சிலர் கீதம் கேட்டல், நாடகம் பார்த்தல் முதலியவைகளிலும் திரண்ட பொருள்களை வீணுகச் செலவுசெய்து வறியவராகின்றனர்; சிலர் சோம்பலால் தொழில்செய்து சீவனம் செய்யாது பொருள்களெல்லாம் கொடுத்துக் கொடுத்து வறுமையால் பீடிக்கப்பட்டு வருந்துகின்றனர்; மற்றும் சிலர் தத்தம் வருவாய்க்குத் தக்க செலவுசெய்யாது பொருளிழந்து துன்புறுகின்றனர்.

வறுமையினுங் கொடியது உலகில் வேறொன்றுமில்லை என்று திடமாகக் கூறலாம். நற்குடியிற் பிறந்து திரண்டபொருள் வருவாயினைப் பெற்றிருந்த சீரிய செல்வர்களும் வறுமை வந்துற்றபோது பெரிதும் வருந்துகின்றனர். அந்தோ! அவர்கள் வறுமைத்துன்பம் ஒன்றினுல் மாத்திரமா வருந்துகின்றனர்? அதனடிப்படையாகத் தாம் முன்னிருந்த நிலைமையை எண்ணியெண்ணி மனம் வருந்திச் செல்வர்மனைவாயிலை நோக்கிச் செல்லுதற் றுன்பத்தினுலும், அவரைக் காணுதற் றுன்பத்தினுலும், அவர் மறுத்தவிடத்து உண்டாந்துன்பத்தினுலும் மறுது அவர் கொடுத்தவிடத்து அதைப் பெற்றுக்கொண்டு வந்து தம் வீட்டில் வேண்டுவன கூட்டுதற் றுன்பத்தினுலும் நாள்தோறும் வருந்துகின்றனர்.

திரண்ட பொருளுடையோன் பின்னர் வறியோனுகி அனுபவிக்கும் துன்பத்தினும் இளமையிலேயே வறுமையால் பீடிக்கப்பட்டவன் அனுபவிக்கும் துன்பம் மிகக் கொடியது. விடயங்களை அனுபவித்த பிறகு அதில் வெறுப்புத் தோன்றுவது இயற்கை. ஆதலால், செல்வங்களையனுபவித்து வறியோனுவோன் அத் துன்பங்களை ஒருவாறு சகிக்கிறுன். இளமையிலேயே

வறுமையுற்ரேன் அங்ஙனம் அனுபவித்தலின்மையால் பிறரைக்கண்டு ஏங்கி ஏங்கி மனம் வருந்துகிருன். இதைப் பற்றியே

"கொடிது கொடிது வறுமை கொடியது
அதனிலுங் கொடிது இளமையில் வறுமை"

என்ருர் நந்தமிழ் மூதாட்டியார்.

மலர்கள் புட்பித்து நறுமணம் வீசியவிடத்து வண்டுகள் அதன் இனிய தேனை நுகர்தற்கு அவைகளைத் தேடிச்சென்று வீழ்வதேபோலச் செல்வரிடத்து அனைவரும் நாடிச் சூழ்ந்துகொள்வர். மலராத அரும்பினிடத்துப் பயனின்மை கருதி வண்டுகள் சேர்தலின்மைபோல வறியரிடத்து ஒருவரும் அணுகார்.

வறுமையினுல் நாள்தோறும் மனங்கன்றி வாடிய அவன் மக்களும் மனைவியும் அவனை வெறுக்கத் தொடங்குகின்றனர். தன்னை அன்போடு பாலூட்டி வளர்த்த அன்னையுமவனை அந்நியனுகக் கருதுகின்ருள். ஏனைய சுற்றத்தாரும் தாம் அவனுக்குக் கொடுத்தலுண்மையேயன்றி அவனிடமிருந்து கொள்வதொன்று மின்மையால் அவனைக் கைவிடுகின்றனர். அவன் மெய்ப்பொருளைக் கூறினும் அதை விரும்பிக் கேட்கின் அவன் வேண்டுவன நல்கி அவன் குறைமுடித்தல் வேண்டுமென்று அஞ்சி உலகினர் அவனிடம் முகங் கொடுத்துப் பேச முன்வரார். எனவே, அவனுடைய மொழியும் விழுமிய கல்வியறிவும் பிறருக்குப் பயன்படா தொழிகின்றன. இது பற்றியே,

"இல்லானை
இல்லாளும் வேண்டாள் மற்றீன் றெடுத்த தாய் வேண்டாள்
செல்லாதவன் வாயிற் சொல்"

என்ருர் சான்ருேர்.

இம்மையிலே வறுமையினுல் இத்தகைய துன்பமடைவதொன்று மட்டோ! மறுமைப்பயன்களுக் கேதுவாகிய தர்மார்த்தங்களை இம்மையில் இயற்றுதற்குச் சக்தியற்றவர்களாகி அதன் பயனுக மறுமையிலும் மீளாத் துன்பத்தை யடைகின்றனர். இதனை வலியுறுத்தவே,

"இன்மை யெனவொரு பாவி மறுமையும்
இம்மையு மின்றி வரும்"

என்ருர் திருவள்ளுவனர்.

வறியோர்க்கு வேண்டுவன வழங்கும் சீரியர் ஒரு சிலரே உலகிற் காணப்படுகின்றனர். இத்தகைய ஈவோரிடத்தும் காலம் இடமறிந்தும், அவர் குறிப்புணர்ந்தும், அவரைத் தம் வசப்படுத்தற்கு மனமிரங்கத்தக்கன கூறியும் செல்ல வழியறியாத இரவலர் ஒன்றும் பெருது திரும்புகின்றனர். பொருள் வழங்காதவரிடத்துச் சென்று இரந்தபோது அவரடையுந் துன்பங்களையும் அவமானத்தையும் கூற வேண்டுமோ? இரத்தல் குடிப்பிறப்புக்கு இழிவையும் அவமானத்தையும் உண்டாக்குகின்றது. இரத்தலினும் இழிவான தொழில் வேறு ஏதேனும் உண்டோ? இல்லை, இல்லை!

வறுமை நேர்ந்த காலத்துத் தம் நிலைமையினின்றும் பிறழாது, செய்ய வல்லதோர் முயற்சிசெய்து பிழைத்தலே வறியோர்க் கழகாகும். நித்திய தரித்திரம் வாய்ந்த குலேசர் பிறரிடம்சென்று இரவாது நாள்தோறும் காட்ட

# குமண வள்ளலும் கோசலை வள்ளலும்

(S. இராமலிங்கம், நெல்லை)

கொடையிற் சிறந்தவராய குமணரும், இணையில் வீரராய இராமரும் குமணாபுரியிலும், கோசலத்திலும் முறையே தேன்றியவர்கள். குமணவள்ளல் வம்புத் தம்பியாக அமணன் விருப்ப அரச பதவியை அவனுக்கு நல்கி, நாடுவிட்டுக் காடு சென்றார். இராமரும் 'தாயுரை செய்த தந்தையேவ' லால் அருமைத் தம்பியாம் பரதனுக்கு அரசினைக் கொடுத்துத் தேனடைந்த சோலைத் திருநாடு கைவிட்டுக் கானடைந்தார். குமண வள்ளலின் பிரிவுக்காற்றாத குமணாபுரி மக்கள் வேலியோடு வரம் பிழந்த பயிரைப்போல்—கரமிழந்த கரியைப்போல் கருந்துயருழந்தார்கள். கோதண்ட வீரனின் பிரிவுக்காற்றாத கோசலை மக்கள் பொறியிழந்த பாவையைப் போல்—உயிரிழந்து பரதவிக்கும் உடம்பே போல் பெரிதும் வருந்தினார்கள். இவ்வாறு நகர மாந்தர் அனைவரும் அகமிக வருந்தி அருந்துயரடைந்து நிற்கவும், இவ்விருவள்ளல்கள் மாத்திரம் 'அன்றலர்ந்த செந்தாமரை யொத்த' முகத்தினராய் அகமிக மகிழ்ந்து அடவியிற் புகுந்து அல்லல் பலவும் எய்திக் காட்டில் விளையுங் காயுங் கனியும் அயின்று கானகப்புல்லில் துயின்று காலங் கழித்து வருவாராயினர்.

சீதேவி தோன்றிய திருப்பாற் கடலில் மூதேவியும் வந்து தோன்றியது போல், குமணனுக்கு மாறாக வந்துதித்த அமணன் ஆசை நோயால் அருமை அண்ணனது அரசினைப் பறித்து அவரை அடவியிற் புகுத்திய தோடமையாமல், அவரது தலையைக் கொய்து வருவார்க்குக் கோடி செம்பொன் கொடுப்பதாகவும் பல்லோர் அறியப் பறையறைவித்தான். இதனையறிந்த வொருவன் விரைந்து வந்து குமணனைக் கண்டு பணிவோடு நின்று கூறினான். அப்பழிமொழியைக் கேட்ட குமணன் கோபங் கொள்ளாமல் அளவிலா மகிழ்வடைந்து "ஆவி பிரிந்தபின் நாய், நரி, பேயிவைகள் நக்கும் இழிவான இவ்வுட

---

கத்தே சென்று புல்லரிசியைச் சேமித்துவந்து தன்னரு மனையாளிடம் கொடுக்க, அவ்வம்மையாரும் மகிழ்வோடு அதைப்பெற்று அடிசிலமைத்து அதிதிகளுக்கும் வழங்கித் தாமும் உண்டு அருமந்த புத்திரர் இருபத்தெழுவரையும் காப்பாற்றிவந்தது யாமறிந்ததே.

"தெண்ணீ ரடுபுற்கை யாயினுந் தாள்தந்தது
உண்ணலி னூங்கினியது இல்"

என்றதனால் வறுமையுற்றோர் பிறரிடம் சென்று இரத்தலையறவே ஒழித்துத் தம்மாலியன்ற வரையில் முயற்சியோடு தொழில் செய்து அதனால்வந்த ஊதியம் சிறிதளவு கஞ்சியாயினும் அதை உள்ளமகிழ்ந்து உண்டு வாழக்கடவர்.

லி லொருபாகமாகிய தலையைக் கோடிப் பொன் விலை எனக் கூறி மகிமைப் படுத்திய என் தம்பியே தாயினும் இனியவனுவான்" என்று எண்ணுவானுயி னுர். அன்று அவர் கருதி நின்றதை அடியில் வரும் கவியில் அழகுறக் காணலாம்.

"ஆயுவோ யுற்ற காலை அடுப்பவ ரருவருக்கச்
சீயொடு புழுவும் மண்ணுஞ் சேருமிச் சென்னிதன்னை
மீயுயர் செம்பொன் கோடி விலையென விளங்கச் செய்தான்
தாயினு மினியன் எம்பி தானெனக் கருதலுற்ருன்."

உடன் பிறந்தே கொல்லும் வியாதியாம் அமணனை அன்னையினும் இனியவனுக எண்ணி நிற்கும் குமண வள்ளலை—முற்றறிவின் முதிர் கனியாக விளங்கும் இப்பெருந்தகையைச் சிற்றறிவுடையேன் எவ்வாறு எற்றிப் போற்றிப் புகழ்ந்து வருணித்து எழுத முடியும்? தினையளவு சிறு குற்றஞ் செய்யினும் பனையளவு பெருங் குற்றஞ் செய்ததாகக் கருதி நின்று குற்றஞ் செய்தவன் மேற் சீற்றங் கொண்டு தண்டத்தால் அடித்து மண்டையை யுடைக்கும் இக்கால மக்களுக்கும், இவ்வள்ளலுக்கும் உள்ள வேற்றுமையைச் சற்று இங்குச் சிந்திக்கவேண்டும்.

இவ்வாறே இராம மூர்த்தியும் இலங்குகின்றுர். இராவண வதஞ் செய்து இன்னுயிர்த் தேவியைச் சிறை மீட்டுப் போர்க் கோலத்தோடு இலங்கையில் இராகவர் நிற்குங்கால், அருமை மகனது பிரிவால் ஆவி துறந்து இறந்து போன தயரதன் துறக்கத்திலிருந்து தெய்வ யாக்கையோடு தோன்றி இராமரை இறுகத் தழுவி நின்று,

"பண்டு நான் தொழும் தேவரும் முனிவரும் பாராய்
கண்டு கண்டெனைக் கைத்தலங் குவிக்கின்ற காட்சி
புண்டரீகத்துப் புராதனன் தன்னேடும் பொருந்த
அண்ட மூலத்தோர் ஆசனத் திருத்தினை யழக!"

என்று தான் மக்கட் பேற்றால் மறுமையில் அடைந்த மாண்பினைக் கூறி மேலும் கூறுகிருர். "என் கண்ணினுஞ் சிறந்த புண்ணியப் புதல்வ! உனக்கு முடி சூட எழுந்தபொழுது கொடிய கைகேசியானவள் ஊடே புகுந்து கூடாதென நிறுத்தி, "பரதன் நாடாளவேண்டும்; இராமன் காடாள வேண்டும்" என்று வேண்டிய இருவரங்களும் இதுவரை என் மனதில் நின்றன. இப்பொழுது உன்னைக் கண்டதும் அவை அகன்றன. உனக்கு வேண்டியதொரு வார்த்தை இத்தருணம் நீ என்பால் அன்பால் வினவிப் பெற்றுக் கொள்ளலாம்." என்று அறிவிப்பாராயினர். அன்பளாவிய இவ்வின்ப மொழியைக் கேட்ட இராமர்,

"தீயள் என்று நீ துறந்த என் தெய்வமும் மகனும்
தாயும் தம்பியும் ஆம் வரந் தருகெனத் தாழ்ந்தான்."

என்பதாகக் கவிஞர் கவி புனைகின்றுர். தன்னருமைத் திருமகனுக்குக் கைகேசி அடாத செயலைச் செய்தாளென்று அகங் கொதித்து வயிறெரிந்து அவளைத் தனக்கு மனைவியல்லள் என்றும், அவள் வயிற்றிற் பிறந்த பரதனைத்

தனக்கு மகனல்லன் என்றும் இறக்கும்போது கூறிவிட்டு இறந்தார்' இதனைப் பொறுத்து அருள் புரிந்து கைகேசியை மனைவியென்றும், பரதனை மகனென்றும் ஒப்புக்கொள்ளுமாறு தயாதனை இராமர் இவ்விடத்தில் வேண்டி நிற்கின்றனர்.

ஆனால், தயரதனுக்கு அவள்மீதுள்ள கோபம் அணுவளவும் தணியவில்லை. "சிந்தைக்கினிய என் செல்வமைந்த! பரதன் நாடாளுவதற்காக உனக்கு இவ் விரத வேடந் தந்து காடாளவைத்து என்னைவி நீங்கச்செய்த அப்பாவிமேல் உள்ள கோபம் என் மனதைவிட்டு என்றும நீங்காது" என மனங் கொதித்து மொழிந்தார். செற்றம் நீங்காமல் சொற்றவன் இவ்வாறு உரைக்கவும், நற்றவ இராமன் நயந்து நோக்கி "நற்றந்தையே! என் அன்னை எனக்கு நன்மை செய்தனளேயன்றிப் புன்மை யாதுஞ் செய்யவில்லை. அரச பாரத்தை இச்சிறுவன் மீது வைக்கலாமா? என்ற கருணையால் இனிமையான இவ்வேடத்தை எனக்கு ஈந்தனள்; ஆகையினால், அவளிடங் கொண்ட சினத்தை நீவிர் கருணைகூர்ந்து விட்டுவிடுவீர்." என்று வேண்டி நின்றான். இதுவன்றோ "இன்னா செய்தார்க்கும் இனியவே செய்யாக் கால், என்ன பயத்ததோ சால்பு" எனுங் குறளுக்கு இலக்காக நிற்கும் முறைமை! "யானெப்போ" என்று வாழைப் பழத்தில் ஊசி இறக்கியதுபோல் வாய் குளிரப் பேசி, நாட்டை விட்டும் காட்டுக்கு ஓட்டினவளான கைகேசியை "தெய்வம்" என்று போற்றிப் புகழுவதோடல்லாமல், தயரதன் கொண்டுள்ள சீற்றத்தையும் மாற்றுவதற்கு இயன்றவரை முயன்று நிற்கும் கீர்த்தி மிக்க இம்மூர்த்தியின் குண நேர்த்தியை என்னென்று புகழ்வது?

ஆகவே இதுகாறும் கூறியவற்றால், குமண வள்ளலும் கோசலை வள்ளலும் நாடுவிட்டுக்காடு சென்றனரென்பதும், தன் தலையைக் கொய்து செல்பவருக்குக் கோடிப் பொன் கொடுப்பதாகக் கூறிய அமணனது கொடுந் தன்மையை நினைந்து அணுவளவும் வருத்தம் அடையாமல் அவனை அன்னையினும் இனியவனாகக் குமண வள்ளல் கருதி நின்றதுபோலவே, கோதண்ட வீரனும் நெடுங்காலம் வருந்தி யுளையத்தக்க கொடுஞ் செயலினை செய்த கைகேசியிடத்தும் அன்பு குன்றாமல் நின்று அவளைத் தெய்வம் என்று கூறிப் புகழ்ந்தனனென்பதும் பெறப்படும்.

மனிதத் தன்மை கடந்த இப்புனிதர்களது குணநலங்களை இனிது உணரும் அருமை நண்பர்களே! சிறு சிறு காரியங்களுக்கும் வீணாக நீங்கள் சண்டை செய்யாதீர்கள்! "இன்னா செய்தாரை ஒறுத்தல் அவர் நாண, நன்னயம் செய்து விடல்" என்னும் வள்ளுவரது வாய் மொழியை மனதிற் கொண்டு, துன்பம் செய்தவர் நாணிப் போகும்படி அவருக்கு நன்மையைச் செய்ய நாடுங்கள்! மிகுதியான் மிக்கவை செய்தாரை நம் தகுதியால் டீக்கவே செய்து வென்று விடுங்கள்!

"ஒறுத்தார்க்கு ஒருநாளை யின்பம்; பொறுத்தார்க்குப்
பொன்றுந் துணையும் புகழ்."—வள்ளுவர்

# மனிதனே, மதுபானத்தை விலக்கு!

——:(o):——

(தென்னாப்பிரிகா டர்பன் சரஸ்வதி சபைத் தலைவர்
திரு. ச. முனிசாமி பிள்ளை.)

முயற்சிக்கு ஏற்ற பலன் முட்டின்றிக் கிடைக்குமாதலால் மனிதனே! நீ சௌக்கியமாயிருக்க விரும்புகிறாயா? ஆமெனில், நயைசெய்து மதுபானத்தை விலக்கிவிடு. விரும்பிய காரியம் கைகூடும். மதுபானம் மருந்து மருந்தென்று உன்னை ஏமாற்றி அகால மரணக்கிடங்கில் தள்ளி விடுமென்பது நிச்சயம். நோயாளிகள் நூற்றுக் கெழுபதுபேர் மதுபானத்தால் பிணியுற்றவர்களென்று வைத்திய சாஸ்திரிகள் நிச்சயித் திருப்பதால் மதுபானத்தின் கெடுதி எவ்வளவென்று சொல்லவேண்டிய தில்லையே. ஐயோ! தேசத் துரோகியும் குல விரோதியுமாகிய மதுபானத்தை விட்டு எச்சரிக்கையாயிரு! மது விலக்கு உன் சுகத்தையும் பலத்தையும் விருத்திசெய்வதன்றியும், உனது ஐம்பொறிகளாகிய—மெய், வாய், கண், மூக்கு செவி ஆகிய இவைகள் தத்தம் அலுவலை சரியாய் நடந்தவேண்டுமானால் மனிதனே! நீ எப்படியாவது மதுபானத்தை விலக்கவே முயலவேண்டும்.

மனிதனே! நீ சந்தோஷமா யிருக்க விரும்புகிறாயா? அப்படியானால், தாமதியாமல் மதுபானத்தை அறவே ஒழித்துவிடு. பிறப்பு இறப்புவரை சந்தோஷந் தேடுவது மானிட சுபாவம். அப்படித் தேடிக்கொள்வதில் நல்ல வழியும், கெட்ட வழியுமாகிய இரண்டு வழிகளுண்டு. நல்லவர்கள் நல்ல வழியைத் தேடிக் கொள்வார்கள். ஆனால் அறிவீனருள்ளும் பேதையருள்ளும் அநேகர் மதுபானத்தைக்கொண்டு சந்தோஷமாயிருக்க நினைக்கிறார்கள். இவர்கள் தம் மனைவி மக்கள் இருக்கும் எளிய நிலையை அறிகிறார்களில்லை. ஐயோ! உயிரில்லாத மரம் போலவும், உருண்டு விழுந்த கருங்கல் போலவும் இவர்கள் விழுந்துகிடக்கும் நிலையையேனும் அறிகிறார்களா? இல்லையே! கவலையை மாற்றக் குடிக்கிறார்களாம் சிலர். மயக்கந் தீர்ந்தபின்னர் கவலை முன்னிருந்ததைப் பார்க்கிலும் அதிகமாகிவிட அக்கவலையை ஒழிக்கத்திரும்பவுங் குடிக்கவேண்டியிருக்கிறது. ஆகவே கவலைக்குமேல் கள்ளின்மேல் கள்ளை வாரி ஊற்றிக் கொண்டிருப்பதுதான் வேலையாய் வந்துவிடுகிறது. மயக்கமில்லாத மாலுமியே தனது மரக்கலத்தைக் கொந்தளிப்பான சமுத்திரத்திலுங் கொண்டு செலுத்த வல்லவனாகின்றான். அப்படியே மதுபான மயக்கமில்லாத மானிடர்தான் உலக விவகாரமென்னும் பெருங்கடலுள் பிரயாணஞ்செய்யத் தகுதியானவர். ஆகையால் மனிதனே! மதுபானத்தை அறவே ஒழிக்க வழிதேடு.

மனிதனே! நீ புத்திமானாயிருக்க விரும்புகிறாயா? ஆமென்றால், சந்தேகமின்றி நீ உலகப் புகழுக்குரியவனாய் விடுவாய். மதுபானியை புத்திமானென்று சொல்லுதல் தகாது. மதுபானம் புத்தியைக் கெடுப்பதொழிய கொடுப்பதல்ல. உலகத்தில் மாண்புடையவன் மனிதன் அவனிலுஞ் சிறந்த பொருள் அவன் மனது. அப்பேர்க் கொத்த மனத்தையே கலங்கவைக்கும் சக்தி மதுபானத்துக்கு இருக்கிறதென்றால் வேறு கேட்பானேன்? மதுபானம் மூளையை மந்தப்படுத்தும், உணர்ச்சியை மழுங்கவைக்கும். நடமாடுகிறவனைப்

# "சேக்கிழார் பிள்ளைத்தமிழின் சிறப்பு"

—(0)—

(இலஞ்சி-டி. சண்முகவேலு.)

"ஒப்பரிய தொண்டர்தம் அருமையும் பெருமையும்
உவக்குமவர் அவர் செய்கையும்
உவமையில் லாச்செய்கை நுட்பமுந் திட்பமும்
உம்பர்கோன் அருள் தட்பமும்
தப்பரிய செந்தமிழ்த் தொடை நடையு மடையுந்
தவாப்பொரு ளணிச் சிறப்புந்
தமிழ்மறை யடங்குபல மந்தணமும் வெள்ளிடைத்
தவிரும்வெற் பெனவிளங்க
வெப்பரிய மூழுமதிக் குடைகிழற் றனபாயன்
மேயவவை யகநயந்து
வியந்துமெய்ப் பாட்டிஒனு பாராட்டி மகிழுமேன்
மேல்விரித் தருளிய பிரான்." (செங்-3)

ஆன சேக்கிழார் பெருமானைப் பாட்டுடைத் தலைவராக வைத்து திருவாவடுதுறை யாதீனம் மகாவித்துவான் மீனட்சிசுந்தரம் பிள்ளையவர்களால் பாடப்பெற்றது. இப்பிள்ளைத் தமிழிலுள்ள செய்யுட்களெல்லாம் செம்பாகமான சொற்களால் அழகுற யாக்கப்பட்டிருக்கிறது. கற்போர் உள்ளத்தை கனிவிக்கவல்லனவாய் மிளிர்கின்றன.

அமிழ்தினும் இனிய தமிழ் மொழியதனில் விளங்கும் பிரபந்தங்கள் தொண்ணூற்றாறு. அவைகளில் பிள்ளைத் தமிழுமொன்று. பிள்ளைக் கவியெனவுங் கூறப்படும். தேவரையும் மக்களுட் சிறந்தாரையும் பிள்ளைப் பருவத்தினராக வைத்து, அப்பருவத்திற்குரிய பத்துவகை நிகழ்ச்சிகளை நிரலே அமைத்துப் பாடுவது. ஆண் பெண் என்ற இருபாலரையும் இங்ஙனம் பாடுவது உண்டு. ஆண்பாலாயின்,

---

படுக்க வைக்கிறதே யொழியப் படுத்திருப்பவனை நடமாடச் செய்யாது. அது நீதிமான்களுக்காவது மற்றப் பெரியோர்களுக்காவது உரியதல்ல. அறிவென்பது மதுபானத்தால் அகப்படக் கூடியதன்று. அதனால் அறிவு முயற்சி மானம் முதலியவை அழிவதுடன் தன்னையீன்ற மாதாவுங்கூட வெறுத்து விடத்தக்க ஸ்திதிக்குக் கொண்டுவந்து விடுமே! ஐயோ! மதுபானப் பிரியர் ஆடையாபரணங்களை விற்று மானங்கெட்டு மரியாதைகெட்டு திரியும் நிலைமைக்கு வந்து விடுவரே! ஆகவே மனிதனே இத்தீய பழக்கத்தை இகழ்ந்து நீக்கி புத்திமானாக முயலுவாயாக!

"சாற்றரிய காப்புச்செங் கீரைதால் சப்பாணி
மாற்றரிய முத்தமே வாரானை—போற்றரிய
அம்புலியே யாய்ந்த சிறுபறையே சிற்றிலே
பம்பு தேரோடும் பத்து"

என்னும் வெண்பா பாட்டியலிற் கூறியுள்ள பத்து நிகழ்ச்சிகளும் பாடப்பெறும். பெண்பாலாயின் இறுதியிலுள்ள மூன்று மொழித்து, அம்மானை, நீராடல், ஊசல் என்பன கூட்டிக் கூறப்படும்.

தொண்டர் சீர் பரவும் தண்டமிழ்த் தலைவரான சேக்கிழார் சுவாமிகள் பிள்ளைத் தமிழில் பல நயங்கள் காணப்படுகின்றன. ஆசிரியர் பிள்ளையவர்கள் சில விடங்களில் வேளாளர்களின் விழுப்புகழை விளக்கியுள்ளார். சில விடங்களில் நல்லமைச்சரின் நற்குணங்களையும், தவநெறியான சிவ நெறியின் மாண்பையும், ஆதீனத்தின் அருமை பெருமைகளையும் நடேசப் பெருமானது திருமுகங்கொண்டு பெற்றான் சாம்பனுருக்கு முத்திகொடுத்தருளியவரான கொற்றவன்குடி உமாபதி சிவாசாரிய சுவாமிகள் பெருமைகளையும் வெள்ளிடைத் தவிரும் வெற்பென விளக்கியுள்ளார். சிவபெருமான் கொடுத்த "உலகெலாம்" என்ற முதலை வைத்துச் சேக்கிழார் "பெரிய புராணம்" என்ற வியாபாரத்தை இனிது நடத்தினர் என்று கூறும் நயம் பாராட்டற்பாலது. இன்னோரன்ன நயம் சிறந்து விளங்குவதால் அன்றோ, 1934 வருட முதல் "வித்துவான் ப்ரிலிமினரி" வகுப்புக்கு பாடப் புத்தகமாக அமைத்திருக்கின்றனர் சென்னை பல்கலைக் கழகத்தார். இந்நூல் பெரிய புராண ஆராய்ச்சிக்கு சாலப் பயனுடைத்து. உதாரணமாக,

"முறையினொரு சிறுதூக்கி னெழும்பரவை யும்புக
முடித்துற நிறுத்தான்."

என்ற அம்புலிப் பருவம் ஆறுவது பாட்டில் இருக்கிறது. "தூக்கு" என்பதற்கு, பாட்டு, தராசு என்பது பொருள். சிறு தூக்கு-இலேசாகத் தூக்குதல் எனப் பொருள் தந்து எமது பெருமான் எழுபரவையும் (எழுகடலையும், சிறிதளவும் முயற்சியின்றி எடுத்து நிறுத்தான் என வரும் நயம் கருதற்பாலது. இவ்வடிக்கு மூலதனம் தடுத்தாட்கொண்ட புராணத்துளது. அது,

பேர்பரவை பெண்மையினிற் பெரும்பரவை விரும்பல்கு
லார்பரவை யணிதிகழு மணிமுறுவ லரும்பரவை,
சீர்பரவை யாயினா டிருவுருவின் மென்சாய
லேர்பரவை யிடைப்பட்ட வென்னுசை யெழுபரவை"

என்ற திருவிருத்தம். காப்புப் பருவத்திற்கு முதலில் எல்லாப் பிள்ளைத்தமிழ்களிலும் "விநாயகர் வணக்கம்" மட்டும் காணப்படுகிறது. இச்சேக்கிழார் பிள்ளைத் தமிழில் முதலில் விநாயகர் வணக்கமும், இரண்டாவதாக "குரு வணக்கமும் அவை யடக்கமும்" என்ற ஒருதுப்பு சிறப்புறக் கூறியது சாலச் சிறந்ததாகும். "குரு வணக்கமும் அவையடக்கமும்" என்ற தலைப்பையுடைய திருவிருத்தத்தில், திருவாவடுதுறை ஆதீனச் சிறப்பையும், ஆதீன மகா சந்நிதானங்களின் வரிசைக் கிரமத்தையும், உமாபதி சிவாச்சாரிய சுவாமிகளது எண்ணிறந்த மகிமையையும் தெற்றெனக் காணலாம். அக்கவி,

"ஓங்குகயி லாய பரம் பரைநந்தி யடிகட்
குறுமரபெட் டாவது பிற் றோன்றலாயெங்க
ளுயர்திருவா வடுதுறைச் சுப்பிரமணிய குரவற்
குற்றபத்தோன் பதாவதுமுற் றோன்றலாய்ப் பொலிந்து
தேங்குசிவப் பிரகாச முதலியவாய் மலர்ந்து
திகழுமா பதிசிவன்" என்பது.

இன்னும் இச்செய்யுளில் சேவையர் காவலரை முருகனார்க்கும், மூத்த பிள்ளையார்க்கும், முக்கட் கடவுளுக்கும் ஒப்புவமை கூறும் சிலேடை பாராட்டற்பாலது. அவ்வரிகள்.

"....................................
குன்றையுற மேவித்
திருந்துமேர் வளங்கொண்டு பெருமையின்மே லாகிச்
சிறத்தலாற் செம்மேனிக் குமரவே ளொத்தும்
பரங்குபெறத் துதிக்கையொடோர் கோட்டத்த னுய
பயிற்சியினைக் குமரவே டிருத்தமைய னொத்தும்
பரவுசேக்கிழானெனும் பேர் பரித்தலினக் கணேசப்
பண்ணவனை யினிதுயிர்த்த திருத்தாதை யொத்தும்"

என்பது. குன்றைமேவுதல்-குன்றத்தூரில் எழுந்தருளி யிருத்தல்: குன்று தோருடல். ஏர் வளம்-உழவு வளம், அழகு வளம். பெருமையின்மேலாதல்-புகழின் மேம்படல். பெரிய மயிலின்மீது இவர்ந்து வருதல். இது சேக்கிழார்க்கும் முருகனுக்கும். துதிக்கை-துதித்தல், யானைத் துதிக்கை. ஓர் கோட்டத்தன்-புலியூர்க் கோட்டத்தையுடையவர். ஒரு. கொம்பினை யுடையவர். சேக்கிழாருக்கும் கணபதிக்கும் ஒப்புவமை கொள்க. சேக்கிழான்-சேக்கிழான் என்னும் குடியினது இயற் பெயர், இடபத்திற் குரியார். இது சேக்கிழாருக்கும் சிவனுக்கும் சிலேடை.

சேக்கிழார் நாயனாரது புராணத்தைப் பாடியவர் உமாபதி சிவாச்சாரியார். புராணமுடையாருக்கு, பிள்ளைத்தமிழ்ப் பாடுவது மிகையே என்றும், அவரது திருவடிகளை வணங்கி ஒரு பிள்ளைத் தமிழ் கூறவேன் என்றும் அது அறிவாளிகட்கு நகை தரும் என்று பொருள்படும்படியாக கூறிய வரி.

"வீங்குபுகழ் படைத்தவருண்
மொழித் தேவன் புராணம்
விரித்துரைத்தா னவனடி தாழ்ந்
தென்னறிவிற் கேற்ப
மேயபிள்ளைத் தமிழெனவொன்று
உரைப்பலஃ தறிவான்
மிக்கவர்தங் குழாத்தினுக்கு
மிக்க நகை தருமே."

இன்னும் இந்நூலிலுள்ள அரும்பெரும் விடயங்களையும் நயங்களையும் காப்புப் பருவத்தில் திருமால் முதலியோரைக் கூறாது திருத் தொண்டர்களைக் கூறிய பெற்றியையும், காப்புப் பருவத்திலுள்ள இன்னோரன்ன தன்மைகளையும் அடுத்த இதழில் எழுதுவாம்.

---

# மஹாத்மா மணிமொழி

(S. கணேசன்.)

தண்டனை விதிப்பதிலும் மன்னிப்பது புருஷத்தனத்தைக் காட்டும். வீரன் மன்னிக்கும் அழகுடையவன்; தண்டனை தருவதற்குச் சக்தியுடையவன் அதைத் தராதிருப்பதே மன்னிப்பதாகும்.

* * * *

தடித்த தேகம் இருந்து விடுவதாலேயே பலம் இருப்பதாக எண்ண முடியாது ; திடமான மனோவேகமே முக்கியமானது.

* * * *

அஹிம்சை யென்றால் அறிவோடு துன்பத்தை ஏற்பதாகும். தீமை விளைவிப்பவனுடைய எண்ணங்களுக்கு அடங்கி நடக்கவேண்டுமென்றல்ல. ஆனால் அவனுடைய தீமையை எதிர்க்க ஆத்ம சக்தியைப் பிரயோகிக்கவேண்டும். இந்த தத்துவத்தைப் பிரயோகித்தால் ஓர் பெரிய சாம்ராஜ்யத்தின் வலிமையைக் கூட எதிர்க்கலாம். சுயமரியாதையையும் மதத்தையும் ஆத்மாவையும் காத்துக்கொள்ளலாம். கடைசியில் அவனால் எதிர்க்கப்பட்ட சாம்ராஜ்யம் சீர்திருந்தும்; அல்லது அழிந்துவிடும்.

* * * *

இந்தியா கத்தியின் தத்துவத்தை அனுஷ்டித்தால் ஓர்வேளை ஜயிக்கலாம். ஆனால் அந்த ஜயம் அழிவுடையது ; மேலும் இந்தியாவினிடத்து எனக்குள்ள அன்பும் குறைவுபடும்.

* * * *

ஹிந்து மதத்தின் மறைபொருளான அஹிம்ஸா தர்மத்தைக் கொண்டு இந்திய சேவையில் எனது வாழ்க்கையைச் செலவிடுவேன்.

* * * *

ஆண்களைவிடப் பெண்மணிகளிடம் விசேஷ குணங்களிருக்கின்றன என்பது எனது அபிப்பிராயம் இவற்றில் அஹிம்ஸை பிரதானமானது. ஸ்திரீகளுக்கு சுபாவமாகவே அஹிம்ஸைக் குணம் அமைந்துளது. பெண்மணிகள் பொறுமையின் பூஷணம். மனிதன் கடினமான அப்பியாசத்தின் மூலமாகவே அஹிம்ஸை நிலையை அடைகின்றான்.

* * * *

இந்தச் சரீரத்தினின்று விடுபடுபவனுக்கே சாஸ்வத இன்பநிலையான மோக்ஷம் கிட்டுகின்றது. மோக்ஷத்தைத் தவிர இதர இன்பங்களெல்லாம் அழிவுடைவன. மன்னிப்பதின் உச்ச ஸ்தானம் அஹிம்ஸையேயாகும். தைரியவான் தான் மன்னிக்கும் ஸ்வபாவமுடையவன். பயமில்லாமல் இருப்பவனாலேயே அஹிம்ஸையை அனுஷ்டிக்க முடியும்.

* * * *

அஹிம்ஸையின் அடி வேரை ஆராய்ந்து பார்ப்போமாயின் தன்னலம்

துறப்பதே அஹிம்ஸையெனத் தெரிவோம். சரீரத்தினிடத்துள்ள பற்றை யுந் துறந்து விடுதலையடைவதே தன்னலம் விடுவதாகும்.

* * * *

சுதந்தர தாகமுள்ள தேசமானது பல பயங்களை ஒழிக்கவேண்டும், பட்டம், சொத்து, அந்தஸ்து இவைகள் போய் விடுமே யென்ற பயத்தையும் சிறைப்பயத்தையும், சரீர ஹிம்ஸைப் பயத்தையும் விட்டொழிக்கவேண்டும்.

* * * *

அஹிம்ஸையின் திருக்கோயிலில் உறைபவர் பேடிகளாயிருப்பதைக் காணவே நான் வருந்துகின்றேன். அஹிம்ஸா தர்மம் பேடித்தனத்தைச் சார்ந்ததன்று; சக்தியற்ற தன்மையைச் சார்ந்த தல்ல; அடக்கமுடியாத சக்தியே அஹிம்ஸையாகும். அதனுடைய அபாரமான பிரகாசத்தைக் கண்டு நாம் அணுகவும் பயப்படுகின்றோம். நம்மில் சிலருக்குத் தான் அதனுடைய ஒளி புலனாகிறது. அடக்கமுடியாத ஆத்மாவின் தனிக்குறைவே அஹிம்ஸை யாகும். அதுபல நற்குணங்களுக்கு அடிப்படையாகவும் இருக்கின்றது. பகுத் தறிவு, துறவு, தவம், சமத்வம், அறிவு முதலிய பல அஹிம்சையின்மீது கட்டப்பட்டுள. தைரியசாலிகளின் வழி அஹிம்ஸையேயன்றி பயப்படுபவ ரின் ஆயுதமல்ல.

* * * *

உலகத்திற்கு உழைக்கவேண்டுமென கங்கணங் கட்டிக்கொண்ட அன்றே என் தலையை மனித வர்க்கத்துக்கு அர்ப்பணம் செய்துவிட்டேன். உலகிலே மிகவும் சுலபமான காரியம் எதுவென்றால் என் தலையைச் சீவித் தள்ளிவிடு வதுதான். இதற்கு யாதொரு முஸ்தீப்பும் ஸ்தாபனமும் வேண்டியதில்லை. என்னைக் காப்பாற்றிக்கொள்ள பிறாது உதவியை நான் என்றும் நாடியதில்லை. என்னைக் காப்பாற்றவேண்டுமென எண்ணுவதிலும் பயனில்லை. ஏனென் றால் பரமாத்மா ஒருவரால்தான் நம்மைக் காப்பாற்ற முடியும்.

* * * *

அச்சு ரூபத்தில் அட்டை போட்டுத் தைக்கப்பட்டுள்ள எதையும் புத்தக மென்று கொள்ளக்கூடாது. மனிதனின் பரிசுத்த வாழ்க்கைக்கு எவை துணை செய்யுமோ அவைதான் புத்தகங்கள். ஏனையவை புத்தகங்களாகா. கைக்குக் கிடைக்கும் புத்தகங்களை யெல்லாம் மாணவர்கள் படிக்கக்கூடாது.

* * * *

ஹிருதயங்களைப் பரிசுத்தப்படுத்திக்கொள்வதே மாணவரின் முதற் கடமை. ஏக்கம், ஏமாற்றம், அதைரியம், அச்சம், கர்வம், கோபம் என்பவை மாணவர் அகராதியில் இருக்கவே கூடாது.

* * * *

வேதங்கள், புராணங்கள், இதிகாசங்கள் முதலிய ஹிந்து தர்ம சாஸ்தி ரங்களிலும், பகவானின் அவதாரங்களிலும், மறு பிறப்பிலும் எனக்கு நம்பிக் கையுண்டு.

* * * *

வருணாச்சிரம தர்மத்தில் எனக்கு நம்பிக்கையுண்டு. ஆனால் என்னு டைய வர்ணாச்சிரம தர்மம் தற்காலத்தில் ஜனங்களால் அர்த்தமற்ற முறையில் அநுஷ்டிக்கப்பட்டு வரும் தர்மமல்ல. வேதங்களில் சொல்லியுள்ள வர்ணா சிரம தர்மத்தையே நான் கொண்டாடுகிறேன்.



# பண்டைத் தமிழர் இசைச் செல்வம்

(சுவாமி விபுலானந்தர்)

ஸ்வாமி விபுலானந்தர் என்பவர் இலங்கையைச் சேர்ந்தவர். ஆங்கிலப் புலமையும், தமிழ்ப்புலமையும், தத்துவ ஆராய்ச்சியும், விஞ்ஞான ஆராய்ச்சியும் சிறக்கப் பெற்றவர். சிதம்பரம் அண்ணாமலைப் பல்கலைக் கழகத்தின் தமிழ்ப்பிரிவுக்குத் தலைவராயும் விளங்கி யிருக்கிறார். இவர் இரண்டு மாதங்கட்குமுன் சென்னை செனட் மண்டபத்தில் பண்டைத் தமிழ்மக்களின் இசைக் கலையைப்பற்றித் தொடர்ச்சியாக ஆறு சொற்பொழிவுகளை நிகழ்த்தினார். அவற்றுள் மூன்று சொற்பொழிவுகளின் சாரம் சென்ற இதழில் வெளியிடப்பட்டது. மற்ற சொற்பொழிவுகளின் சாரம் வருமாறு.—

பண்டைத் தமிழர்களைப் பற்றிய தமது நான்காவது பிரசங்கமாக, சென்னை சர்வ கலாசாலையின் சார்பில் சுவாமி விபுலானந்தர் "7-வது நூற்றாண்டிலும் பின்னரும் தமிழிசையின் நிலை" என்னும் விஷயத்தைப்பற்றிப் பிரசங்கம் செய்தார். அவர் கூறியதாவது: காலம் செல்லச் செல்ல தமிழ்ப்பாணனின் நிலை எவ்வாறு மாறுதலடைந்ததென்பதை கவனிக்கலாம். 7-வது நூற்றாண்டில் தமிழ் நாட்டில் அரசியல் துறையில் கலாபிவிருத்தி சம்பந்தமாகவும் புதிய சகாப்தம் ஏற்பட்டது. அக்காலத்தில்தான் சைவப் பெரியார்களான திருஞான சம்பந்தரும், அப்பரும் தோன்றினார்கள். அவர்களது தோற்றம் புதிய சகாப்தம் ஏற்பட்டதற்கு முக்கிய காரணங்களில் ஒன்றாகும். திருநீலகண்ட யாழ்ப்பாண நாயனாரும் திருஞானசம்பந்தரைச் சந்தித்தனர். அக்காலத்தில் ஞானசம்பந்தரது பக்திரசம் ததும்பும் பண்கள் எல்லோரது மனதையும் உருக்கி வந்ததோடு அவர்களது மனம் சீரிய லட்சியங்களை நாடும்படியும் செய்துவந்தன. திருநீலகண்ட யாழ்ப்பாண நாயனாரது இசைக்கு மிக்க மதிப்பு ஏற்பட்டிருக்கிறது. பாணனைப்போல வறுமையுடையவரல்ல. திரு

நீலகண்டர் பெரிய பக்தர்; வறுமை யில்லாமலே யிருந்தார். ஞானசம்பந்தரும் நீலகண்டரும் ஒருவரையொருவர் சந்தித்ததிலிருந்து இருவரும் பெரிய நண்பர்களாயினர். ஞானசம்பந்தரது பண்களுக்கு திருநீலகண்ட யாழ்ப்பாணரும் அவரது மனைவியும் ஸ்வரம் கோத்து யாழில் பாடுவார்கள். தர்மபுரத்தில் யாழில் வாசிக்க முடியாதவாறு திருஞானசம்பந்தர் யாழ்மூறி என்ற பண்ணை இயற்றிய சம்பவமும், திருநீலநக்கர் என்ற பிராமண பக்தர் தீண்டாதவருமான திருநீலகண்ட யாழ்ப்பாணருக்கும், அவரது மனைவிக்கும் தமது வீட்டிலே பூஜை அறையில் இடமளித்த சம்பவமும் சேக்கிழாரின் பெரிய புராணத்தில் விரிவாகவுள்ளன. சைவப் பெரியார்களின் தேவாரப்பண்களும் வைஷ்ணவ பெரியாரான நம்மாழ்வாரின் திருவாய்மொழியும் இசையபிவிருத்திக்குச் சாதனங்களாக விருந்தன. தமிழ் மொழியிலே இன்றுவரையில் அவைகளைவிட மேலாக பக்திரசம் வாய்ந்த பாடல்களில்லை.

1904-வது வருஷத்தில் புதுக்கோட்டை சமஸ்தானத்திலுள்ள ஸ்ரீ கந்தசாமி கோவில் மலையில் கல்வெட்டுகளைக் கண்டுபிடித்து அந்த கல்வெட்டுகளில் கண்ட விஷயங்களை ராவ்பகதூர் பி. ஆர். பந்தர்கார் பிரசுரித்துள்ளார். 7-வது நூற்றாண்டின் இசையைப் பொறுத்தவரையில் அந்த கல்வெட்டுகளை முக்கியமாக கவனிக்கவேண்டும். அந்த கல்வெட்டுகளில் 7 பகுதிகள் உண்டு. அந்த கல்வெட்டுகள் தேவநாகரி எழுத்துக்களிலுள்ளன. அவைகளின் அடியில் தமிழில் 'எட்டுக்கும் ஏழுக்கும் இவை உரிய' என்று கண்டிருக்கிறது. இவ்விஷயங்கள் ஆராய்ச்சிக் குரியனவாகும்.

9-வது நூற்றாண்டிலே பக்திமான்களான இரு பாணர்கள் தோன்றினார்கள். அவர்களில் ஒருவரான பாட்டீனார் என்பவர். சுந்தரமூர்த்தி சுவாமிகளும், சேரமான் பெருமானும் இருந்த காலத்திலிருந்தவர். மற்றொருவர் திருப்பாணாழ்வார். பெருங்கதையும், சீவக சிந்தாமணியும் 10-வது நூற்றாண்டைச் சேர்ந்தவை. யாழ் வாசிப்பதுபற்றி அவ்விரு நூல்களும் குறிப்பிடுகின்றன. கதாநாயகன் கதாநாயகிக்கு இசை சொல்லிக்கொடுப்பதும் இருவருக்கும் இசைப்போட்டி நடப்பதும் வழக்கமென்று அவ்விரு நூல்களும் குறிப்பிடுகின்றன. 13-வது நூற்றாண்டிலே சாரங்க தேவர ரத்னாகரத்தில் தமிழ் தேவாரப் பண்களைப்பற்றி சில இடங்களில் குறிப்பிட்டிருக்கிறார். அவ்விஷயங்களை உதவியாகக்கொண்ட தேவாரராகங்கள்பல தற்போது மறைந்துவிட்டன. 17-வது 18-வது நூற்றாண்டுகளிலே தஞ்சையில் அரசாண்ட நாயக்க மன்னர்களும், மகாராஷ்டிர மன்னர்களும் சங்கீதத்தை ஆதரிக்க ஆரம்பித்தனர். அப்பொழுது புராதன தமிழிசை முற்றிலும மறைந்தது. அதற்குப் பதிலாக புதியமுறை தோன்றியது. வேங்கடமாகியின் சதுர்தண்டி-பிரகாசிகை (1660) தோன்றியது முதல் சங்கீதமுறையில் புதிய சகாப்தம் ஏற்பட்டது. அது இன்றைக்கும் மாறவில்லை. ஷாஜி (1677-1711) சங்கீத அபிவிருத்தியை ஆதரித்தார். அவரும் ஒரு சங்கீத வித்வானே. அவரது ராஜ சபையில் திருவாரூர் கிரிராஜ கவியும் ஒரு சங்கீத வித்வானவார். கிரிராஜ கவியின் பேரனே திருவையாறு தியாகராஜ சுவாமிகள். பிறகு துலாஜாஜி (1673—1787)யின் காலத்தவரான அருணாசலக் கவியார் ராமாயணக் கீர்த்தனம் பாடினார். அதன்பின் எட்டியாபுரம் சமஸ்தானத்தைச் சார்ந்த முத்துசாமி தீக்ஷதர் (1775) திருவாரூர் சாமசாஸ்திரியார் இவர்கள் தோன்றினார்கள். தற்போது சங்கீதத்தில் ஜனங்களுக்கு விசேஷ சிரத்தை

ஏற்பட்டுள்ளது. தற்காலத்தவர்கள் சுயமாக சங்கீத அபிவிருத்தி வேலை செய்வார்களென்று புதிய முறைகளைச் சிருஷ்டிசெய்து சங்கீதத்தை ஜீவனுடைய சக்தியாக்குவார்களென்று நம்புவோமாக.

## 5-வது பிரசங்கம்

### சிற்ப-ஓவியக் கலைகள்

6-வது பிரசங்கத்தில் 'பண்டைத் தமிழரின் சிற்பக்கலை, ஓவியக்கலை' என்பதுபற்றி சுவாமி விபுலானந்தர் பேசுகையில் குறிப்பிட்டதாவது:—

சங்க நூல்களிலும் இதர பழைய நூல்களிலும் அரண்மனை, ஆலயங்கள், மாளிகைகள், நந்தவனங்கள், நாடகமேடை முதலியவற்றின் வர்ணனை உள்ளது. நமது முன்னோர்கள் நமக்கு விட்டுச்சென்றவை இலக்கியமட்டுமன்று; அழகிய ஆலயங்களில் செதுக்கியுள்ள தெய்வச் சிலைகள், சித்திரங்கள் முதலியனவுமாகும். தமிழ் சிற்பக்கலை வல்லுநர்கள், சித்திரக்கலை வல்லுநர்கள் இவர்களது திறமை மறைந்துபோய் விடவில்லை. அதனைத் தற்போதும் தமிழ் நாட்டிலும் இலங்கையிலுமுள்ள கோயில்கள் முதலியவற்றில் காணலாம். சங்க நூல்கள் முதலியவற்றில் காணும் புராதன நகரங்களின் வருணனையை ஆதாரமாகக் கொண்டு அந்நகரங்கள் எவ்வாறிருந்தன வென்பதை ஒருவாறு ஊகிக்கலாம்.

சோழ மன்னரது தலைநகரமான காவிரிப்பூம்பட்டினத்தின் வருணனையை மணிமேகலையில் காணலாம். பௌர்ணமி தினத்தில் அந்நகர் எப்படியிருந்த தென்பதையே அந்நூல் கூறுகிறது. அந்நகரை ஒரு அழகிய பெண்ணுக்கு ஒத்திட்டும், நகரின் நடுவிலுள்ள அரசன் மாளிகையை அப்பெண்ணின் முகத்திற்கும், நகரின் இரு கோடியிலுமுள்ள கற்பக விருக்ஷக் கோட்டத்தையும் வச்சிராயுதக் கோட்டத்தையும் அப்பெண்ணின் ஸ்தனங்களுக்கும், கீழ்த் திசையில் எழுந்திருக்கும் சந்திரனையும் சூரியனையும் அப்பெண்ணின் காதணிகளுக்கும் ஒத்திட்டுக் கூறியுள்ளார். அரசனது அரண்மனை நகரின் நடுவிலிருக்கு மென்பது இதிலிருந்து தெரிகிறது. எல்லைகளில் மதில்களிருக்கு மென்பது காஞ்சிநகர் வருணனையிலிருந்து புலப்படும்.

சிற்பக்கலை சம்பந்தப்பட்ட வரையில் நாம் எதனையும் இழந்துவிடவில்லை. கோபுரமானது பிற்கால சிருஷ்டியன்று ஆரம்பக் காலத்திலிருந்தே கோபுரமானது அமைக்கப்பெற்று வந்த தென்பதற்கும், அது நீளமான தென்பதற்கும், வாசல்கள் விசாலமானவை யென்பதற்கும் பல ஆதாரங்கள் இருக்கின்றன. புராதன நகரில் அரசர், மந்திரிகள், பார்ப்பனர், நெசவுக்காரர், பொற்கொல்லர், தையல்காரர் முதலியவர்களுக்குத் தனித்தனியாக வீதிகளிருந்தன. நகரில் ஸ்நான மண்டபங்களும் சோலைகளும் இருந்தன. அயல்நாட்டினர் வாசம் செய்துவந்த துறைமுகப் பட்டினங்களும் இருந்தன. நகரிலே பலவித ஆலயங்கள் இருந்தன. இருபுறங்களிலும் யானைகளுடன் லட்சுமி சிலை அமைப்பதோ சித்திரப்படம் எழுதுவதோ நீண்டகாலமாகவே இருந்துவருகிறது. உயரமான கட்டிடங்களே அமைத்து வருகின்றனர். பெரிய நோக்கமுடையவர்க ளென்பதற்கு அது அத்தாட்சியாகும். மூன்றடுக்கு மாளிகை கட்டியுள்ளன ரென்பதற்கும் சிலப்பதிகாரத்திலேயே ஆதார மிருக்கிறது.

அக்காலத்திலே சிற்பிகளும் ஓவியக்காரர்களுக்கும் மிக்க மதிப்பு ஏற்பட்டிருந்தது. அவர்கள் சிலைகள் மண்ணுேடியைந்த மரத்தால் அமைத்தனர். கீர்த்தியுடையவர்கள் இறந்தபின் அவர்களைப்போல் உருவச் சிலைகள் அமைத்தனர்.

அரங்கேற்று காதையில் நாடகமேடையின் வருணனையைக் காணலாம். அம் மேடையின் நான்கு பக்கங்களிலும் தேவதைகளின் உருவப்படங்களை எழுதி வந்தனர்.

புராதன சிற்பிகளும், சித்திரக்கலை வல்லுநரும் தங்களது தொழிலின் ரகசியங்களை வெளியிடுவதில்லை. தங்களது சந்ததியாருக்குப் போதித்து வந்தனர். சிவாகமங்களில் 60 ஆகமங்கள் நகர அமைப்பு முதலிய விஷயங்களையே குறிக்கின்றன. அக்காலத்து சிற்பிகள் சாமான்யரல்லர்; புலமை வாய்ந்தவர்கள்; அநுபூதிபெற தகுதி யுடையவராக விளங்கினர். தங்களது கலையின் மேம்பாட்டிற்காக சன்மார்க்கத்தை கடைப்பிடித்தனர். உபாசனை செய்தே எந்த தெய்வத்தின் உருவத்தையும் அமைத்தனர். அவ்விதம் நன்ருக அமைந்த உருவத்தில் தெய்வம் குடிகொள்வது வழக்கமாம். பளிங்குமாடம் அமைத்துள்ளன ரென்பதற்கு மணிமேகலையில் அத்தாக்ஷி இருக்கிறது. விக்கிரகங்களை கற்களிலேயே செதுக்கிவந்தன ரென்றும் தெரிகிறது. ஒருவன் தான் காதலிக்கும் பெண்ணைப் பெறமுடியாவிட்டால் தனது துயரினை ஊராருக்குத் தெரிவித்து அப்பெண்ணை மணக்க மடல் ஏறுதல் வழக்கம். அவ்வாலிபன் தனது கையில் தான் காதலிக்கும் பெண்ணின் உருவத்தை வைத்திருப்பான். இதிலிருந்து பண்டைக் காலத்தில் சித்திரக்கலையும் சிறப்படைந்திருந்ததென்பது விளங்கும். முகாம் அமைக்கத் துணியை உபயோகிப்பது புராதன தமிழ் வழக்கம். தமிழர் போரிடுவதில் ஆர்வ மிக்கவராக விருந்தபோதிலும், அவர்கள் கலாபிவிருத்தியிலும் சௌகரியங்களைச் செய்துகொள்வதில் விருப்புடையவராக விளங்கினர்."

## 6-வது பிரசங்கம்

### ரசவாத ஆராய்ச்சி

தமது கடைசி பிரசங்கத்தில் சுவாமி விபுலாநந்தர் "ரசவாத ஆராய்ச்சி" என்பதுபற்றிப் பேசுகையில் குறிப்பிட்டதாவது:—

"நான் இங்கே கொண்டுவந்திருக்கும் புத்தகங்கள் 60 ஆண்டுகளுக்கு முன்பு அச்சிடப் பெற்றவை. தமிழ்நாட்டிலே அச்சிடும் முறை ஏற்பட்டபோது இவை மட்டமான தாளில் அச்சிடப்பெற்றன. இவைகளைச் சிறு புஸ்தகக் கடைகளிலும், தெருக் கடைகளிலும் வாங்கலாம். கிராம வைத்தியர்களுக்கும் இவைகளே சாஸ்திர நூல்களாகும். நான் கொண்டுவந்துள்ள சில புத்தகங்களின் பெயர்களைச் சொல்லுகின்றேன். நந்தீஸ்வரர் நிகண்டு, திருவள்ளுவர் கற்பம் மூந்நூறு, ரோமரிஷி நூல், பரிபாஷைத் திரட்டு, மச்சமுனி நூல், தன் வந்திரி பகவானின் நூல் முதலியன.

இந்தப் பெயர்கள் முக்கியமானவை. இவைகளின் பிரயோஜனம் என்னவென்பதை ஆராய்ச்சி செய்வதால் பலனுண்டு. இந்தப் புத்தகங்கள் பார்

வைக்கு நன்றாக விராவிட்டாலும், இவைகளில் சிலவற்றை பெரிய ஞானிகளே எழுதியிருக்கின்றனர். ஓலைச் சுவடிகளி லிருந்தே இவை அச்சிடப் பெற்றன.

'கெமிஸ்டரி' என்ற ரசாயன சாஸ்திர வரலாற்றில் பல நிலைகள் உண்டு. இயற்கையின் மறை பொருள்களைப் பகிரங்கப்படுத்துவதைப் பண்டைக் காலத்து மக்கள் வெறுத்தனர். இதனாலேயே விஞ்ஞான சாஸ்திரத்தை ஆரம்பத்தில் ஜால வித்தையைப்போல் ஜனங்கள் கருதினர். அவ்வித ஆராய்ச்சியில் ஈடுபட்டவர்களையும், சமூகத்தில் சேர்த்துக்கொள்ளவும் அருவருப்புக் கொண்டனர். புராதன விஞ்ஞான சாஸ்திரிகளான 'வாதி'களின் நூல்களில் சிற்சில உண்மைகள் பொதிந்து கிடக்கின்றன. எந்த நாட்டிலும் இந்த வாதிகள் முறை ஒரே விதமானதாகும்.

நம் நாட்டிலே தான் விஞ்ஞான சாஸ்திரமும், கணித சாஸ்திரமும் தோன்றின. அரேபிய தேசத்தின்மூலம் நம் நாட்டிலிருந்து அந்தச் சாஸ்திரங்கள் மேனாட்டிற்குச் சென்றன.

விஞ்ஞான சாஸ்திரத்தின் மத்திய நிலையே 'ரசவாத ஆராய்ச்சி' யாகும். இதனாலேயே இவை பிற்காலத்து புத்தகங்கள் என்று கூறிவிட முடியாது. கம்பர், சேக்கிழார் காலத்தில் ஜனங்கள் சாதாரணமாகப் பேசும் நடை இலக்கியச் செறிவோடிருக்குமென்று கூறிவிடவே முடியாது. அந்த ரசவாதிகளின் நூல்கள் பல விஷயங்களைப்பற்றிக் கூறுகின்றன.

அந்த ரசவாதிகள் மருந்துகள் செய்ததோடு இரும்பு செம்பு முதலிய உலோகங்களைப் பொன்னாக்கவும் முயன்றனர். மூப்புப் பிணிகளின்றிக் காய கற்பத்தால் மனிதர் பல நூற்றாண்டுகள் வாழலாம், சாதாரண உலோகங்களைப் பொன்னாக்க ரசத்தைக் கட்ட முயன்றனர்.

அவர்களது நோக்கம் மேலானதே யாகும். அவர்கள் தங்களது முயற்சிகளில் சித்தி பெற்றிருப்பார்களே யானால், மூப்பு, பிணி, திரை இவைகளால் மனித சமூகம் கட்டுப்பட வேண்டியதில்லை. பொன்னாசையால் விளையும் இன்னல்களுக்கும் இடமில்லாமற் போயிருக்கும். ரசவாத ஆராய்ச்சியின் பலனாகவே 'கெமிஸ்டரி' (ரசாயன சாஸ்திரம்) என்பது தோன்றியது. வாத நூல்கள் அஷ்டாங்க யோகத்தைப் பற்றியும், ஆசைகளை நிறைவேற்றவல்ல மந்திரங்களையும், பேய் முதலியவற்றை ஓட்டவல்ல யந்திரங்களையும் பற்றி குறிப்பிடுகின்றன.

திருமந்திரம் என்பது பன்னிரு திரு முறைகளில் ஒன்றாகும். அந்நூலை அருளிச்செய்த திருமூலர் ஒரு சித்தர். அவர் தம்மைப்பற்றி கூறுகையில் தாம் நந்தியினிடம் உபதேசம் பெற்ற எட்டுப்பேர்களில் ஒருவரென்று குறிப்பிடுகின்றார். திருவள்ளுவர் "ஞான வெட்டியான்" என்ற நூலிலும் ரசவாத ஆராய்ச்சிகளைக் காணலாம். இந்தத் திருவள்ளுவர் திருக்குறள் எழுதியவ ரல்லர். திருமூலர் யோக சூத்திரங்கள் எழுதிய பதஞ்சலி காலத்தவர்.

திருமூலர் போன்ற பெரிய சித்தர்களைப் பின்பற்றியே இதர சித்தர்கள் தோன்றி குழப்பத்தை விளைவித்தனர். இவர்கள் தாங்கள் கூறுவதை மறைபொருளாகவே கூறிவந்தனர். இவர்கள் 15-வது நூற்றாண்டிலே வாழ்ந்

தனர். உண்மைக் குறிக்கு வழிகாண விரும்பியவர்கள் இவர்களது தத்துவங்களைப் பாராட்டினர். இந்த ரசவாதிகள் எந்த வஸ்துவையும் சுத்தம்பண்ணச் சிறந்த முறையைக் கண்டுபிடித்தனர். பாதரசம், பொன், செம்பு, இரும்பு, துத்தநாகம், தகரம் இவைகளைப் பஸ்பமாக்கவும் அவர்களுக்குத் தெரியும், அவர்கள் 3 ஜெய நீர்களைக் கண்டு பிடித்திருந்தனர். ரஸவாதிகள் தங்கத்தைத் திரவ பதார்த்தமாகவும், சில உலோகங்களை ஒன்ருக்கவும் வல்லவர்கள். இதற்கு வேர்கள், மூலிகைகள், இவைகளின் சாற்றையும் உபயோகித்தனர். இவர்கள் தங்களது ஆராய்ச்சிகளை குரு சிஷ்ய பரம்பரையாக வெளியிட்டு வந்தனர்.

நாம் தமிழில் விஞ்ஞான சாஸ்திரங்கள் எழுதவேண்டும்? விஞ்ஞான ஆராய்ச்சிகளிலும் ஈடுபடவேண்டும். சென்னைச் சர்வ கலாசாலையின் சார்பில் விஞ்ஞான சாஸ்திரங்களை மொழி பெயர்த்து வருகின்றனர். ஆனல் அவர்கள் அனுசரிக்கும் முறை விபரீதமானதாகும். ஹைடிரோஜன் என்பதை ஆப்ஜனகம் என்று மொழி பெயர்க்கின்றனர். மொழிபெயர்ப்பு இதற்கு மேலும் மோசமாக விருக்கிறது. இவ்விதமெல்லாம் சர்வ கலாசாலையின் சார்பில் நடக்கிறது.

விஞ்ஞான சாஸ்திரங்களை மொழிபெயர்ப்பதில் சிறந்த விதிகளை அநுசரிக்கவேண்டும். எளிதில் ஜனங்கள் கையாளத் தக்கதும் பழக்கத்தில் சுலபமாகக் கூடியதுமான சொற்களால் மொழி பெயர்க்கவேண்டும். இவ்விஷயத்தில் பிரத்யேக தோரணையில் பலர் முயற்சிசெய்து சித்தியடைந்துள்ளனர். தமிழ் மொழியில் விஞ்ஞான சம்பந்தமான சொற்கள் என்னென்ன வென்பதை ஆராய்ந்து பார்க்கவேண்டும். இது முதலில் செய்யவேண்டிய வேலையாகும். நான் குறிப்பிட்ட வாத நூல் தங்கள் விஷயத்தில் மிக்க பயனுடையனவாகும். பாதி வேலை இந்தப் புத்தகங்களின் உதவியால் செய்துவிடலாம். பெயர்கள் முதலியனவற்றை அப்படியே உபயோகிக்கலாம். தொழிலைக்குறிக்கும் வார்த்தைகளைத் தொழிலாகு பெயராக மொழி பெயர்க்கவேண்டும். ஞான நூல்களில் பல வார்த்தைகள் இருக்கின்றன. அவை கணிதநூல், தர்க்கநூல் இவைகளின் மொழி பெயர்ப்புக்குப் பேருதவியாகும். இவ்விதவேலைக்குப் பிரயாஸை வேண்டும். தமிழ் மொழியைப் பல துறைகளில் உபயோகிக்கக் கூடுமென்பதில் தினையளவும் மிகையாகாது. (பலத்த கரகோஷம்.)

தலைவர் தமது முடிவுரையில் சுவாமி விபுலானந்தர் செய்த அருமையான பிரசங்கங்களுக்கு வந்தனங் கூறியதுடன் விஞ்ஞான சாஸ்திர மொழி பெயர்ப்பு சம்பந்தமாக அவர் கூறிய யோசனைகள் மிகவும் பயனுடையனவென்று குறிப்பிட்டார்.






# ஔவையார்



(ஸ்ரீமதி. பண்டிதை-அசலாம்பிகை அம்மையார்.)

"தொன்மை மறவேல்" என்பது அடுத்த நீதி. இது பழமையான சிநேகத்தை நீ மறவாதே என்று உணர்த்தியதாகும். ஒருவருடைய வாழ்க்கையில் இளமையிலிருந்து பற்பல மாறுதல்கள் இயல்பாகவே ஏற்படுவது கண்கூடு. எண்ணங்களும், தேவைகளும் செயல்களும் அவ்வப் பருவங்களுக்கேற்ப மாறுபடுகின்றன. இம்மாறுதல்களுக்கிடையில் மாறுமல் கால் கொண்டு நிமிர்ந்து நிற்கவேண்டுவது பழமையான சிநேகமாகும். இக்குணம் அநேகரிடம் அழிந்துவிடுவதும் உண்டு. பட்டம், பதவி, பணவருவாய் இவைகள் காரணமாகவே தமது பழைய நண்பர்கள் எளியவர்களாயின் அவர்களை முகமறியாத அயலாரைப்போலக் காண்பதும், நெருங்கக் கூசுவதும், அசட்டை செய்வதும் உண்டு. இது மிகக் கொடுமை. ஒரு யுவன் தன்னைப்பெற்ற தந்தை நவநாகரிகக் கோலம் புனைந்திராத காரணத்தினுல் புதிய சிநேகிதரிடம் இவர் என் சமையல்காரர் என்று ஆங்கிலத்தில் கூறியதாக ஒரு உதாரணக் கதை நம் நாட்டில் உலாவி வருகின்றது. இவ்வாறு கூறத்தகுந்த பேர்வழிகள்தான் பழம் பண்பினரையும் மறக்கக்கூடியவர்க ளாவர்.

"இனைய ரிவர்எமக் கின்னம் யாமென்று
புனையினும் புல்லென்னு நட்பு"

என்றருளியபடியால் முறைபாராட்டும் உறவினர்கள் அனைவரும் நண்பனுக்கு இணையாகமாட்டார்கள் என்பது தெளிவு. அத்தகைய ஒப்பற்ற நட்பினை மறவாத மனப்பான்மையே போற்றப்படுவதாகும்.

"விழையார் விழையப்படுப பழையார்கட்
பண்பிற் றலைப்பிரியா தார்"

என்பதால் பழைய நண்பர்களிடத்தில் சிநேகம் நீங்காதவரை பகைவரும் இச்சிக்க முற்படுவர் என்று தெரிகிறது. இது;

"அழிவந்த செய்யினும் அன்பறார் அன்பின்
வழிவந்த கேண்மை யவர்"

என்ற குறட்பாவினுல் வற்புறுத்தப்படுகிறது. அழியத்தக்கவைகளைச் செய்தாலும் பழைய நட்பினர் கைவிடத்தக்கவர் அல்லர் என்பதை உன்னுங்கால்

பழைய நட்பு எத்துணைச் சிறப்புடைய தென்பது புலனாகும். கிருஷ்ணபக வான் துவாரகையில் ராஜபூஜிதராய் எழுந்தருளியிருக்கையில் பாலிய சகபாடி யாயும் நித்திய தரித்திரராயும் பரமசாந்தராயும் இருந்த சுதாமா வென்னும் பிராமணோத்தமர் மனைவியின் வேண்டுகோளின்படி சகிக்கவொண்ணு வறு மையை நீக்கிக்கொள்ள வேண்டி வழி நடந்து அரண்மனை வாயிலை யடைந் தார். தேவரும் முனிவரும் சேவைக்கெதிர்பார்க்கும் அப்பரந்தாமனுடைய அரண்மனை வாயிற் காவலர்கள் இவ்வறுமையே வடிவெடுத்தது போன்று தோன்றிய இளைத்துலர்ந்த யாக்கையும் பசைவற்றிய தசையும் ஊசி முனை நாட்ட இடமில்லாத கந்தலான ஆடையுமுடைய இவ்விப்பிரரைக் கண்டு திடுக்கிட்டு இவரோ துவாரகாநாதனைத் தரிசிப்பவர் என்று எள்ளி நகையாடினர். என்றாலும், தங்கள் தலைவரின் கட்டளைப்படி வேதியரைக் காக்கவைக்கக் கூடாதவர்களாய் உடனே சுதாமாவின் வரவை அந்தப்புரத் தில் ருக்மணி பிராட்டியாருடன் எழுந்தருளியிருந்த கண்ணனுக்கு அறி வித்தனர். உடனே மரியாதையுடன் உள்ளே அழைத்து வரும்படி கட்டளை யிட்டு, அவ்வாறே வந்த சிநேகிதரை எதிர் சென்றழைத்து அர்க்கிய பாத்திய மளித்து தமது அரியணையிலிருத்தி அவரது பாதங்களை வருடிக் குசலம் விசாரிக்கலானார். இச்செயலைக் கண்டு அனைவரும் திடுக்கிட்டுப் போனார்கள். இந்திரன் குறை முடிக்கும் ஏந்தல் இவ்வேழைப் பார்ப்பனனைக் கண்டு அரு வருக்காமல் பிராட்டியாரைச் சாமரை வீசப் பணித்து பாதம் வருடி உபசரிக் கின்றாரேயென அதிசயித்ததில் வியப்புண்டோ? இதுதான் பழைய நட்புக்கு உதாரணம். "தொன்மை மறவேல்" என்ற முதுமொழி இத்தகையபண்பையே குறிப்பதாகும். இதைப்போலவே இராமபிரான் இராவண வதம் செய்து பிராட்டியாரை மீட்டு அயோத்தி வந்து மகுடாபிஷேகம் செய்துகொண்டு அரியணைமீது சகோதரர்களுடனும் ஜானகியுடனும் விபீஷண சுக்கிரீவ அநு மனாதி பக்த ஜனங்களுடனும் வசிஷ்டாதி மஹரிஷிகளுடனும் அரசர் குழாங்களுடனும் கொலுவீற்றிருந்தார். அதுசமயம் யாவரும் திடுக்கிடும்படி ஒரு அருவருக்கத்தகுந்த பிச்சைக்காரன் அடா ராமா; வென்று அழைத்துக் கொண்டு எவருடைய தடை நியதிகளையும் கவனியாமல் ஒரே ஓட்டமாக ஓடிவந்து தன்னை மறந்தவனாய்ச் சிம்மாதனத்திலேறி இராமச்சந்திர பிரபுவை இருகைகளாலும் இறுகக் கட்டித் தழுவிக்கொண்டு தேம்பித் தேம்பி அழு தான். அருகிலிருந்த மந்திரி பிரதானிகளும் அரசசேவகர்களும் தடுக்க முயல்கையில் இராமமூர்த்தியும் அவ்வெளிய பரதேசியைக் கட்டிக்கொண்டு அழுவது கண்டு ஒன்றும் தோன்றாதவர்களாய் மதிமருண்டனர். சிறிது நேரத் திற்கெல்லாம் இராமன் அவனைச் சமாதானப்படுத்தி விடுத்து அவனை ஸ்நானம் செய்வித்து ஆடை யளித்து அறுசுவை யுண்டி யூட்டி என்றும் வேண்டுவன பெற்று சுகமே யிருக்குமாறு ஆணைதந்து போகவிடுத்தனர். குலகுருவாகிய வசிஷ்ட பகவான் ரகுகுல திலகனை நோக்கி இந்நிகழ்ச்சிக்குக் காரணம் யாதென வினவ சக்கரவர்த்தி திருமகன் பின்வருமாறு கூறலானார்.

முனிபுங்கவரே, யான் இளைஞனாக விருக்கையில் அயோத்தியின் நகர வீதிகளில் பலமுறை உலாவி வருவதுண்டு. எளியவர்களின் நிலைமையை உணரும் ஆவல் எனக்கதிகமாதலின் அக்குழுவினர்களைக் கண்டு அவர்கள் விரும்பும் உதவிகள் செய்து குறைதீர்த்து ஆறுதலுடன் திரும்புவது வழக்கம். அதுமுதல் இந்தப் பிச்சைக்காரனுக்கு என்னிடம் விசேஷ அன்புண்டு. தவிர

வும், தந்தையாகிய சக்கரவர்த்திக்கு மகப்பேறில்லாக் குறையிருந்ததும், புத்திர காமேஷ்டி யாகம் செய்ததும், அதன் பயனாக நாங்கள் உதித்தோம் என்பதும் இவன் மனத்தில் நிலைத்திருந்ததால் என்னை வெகு அருமையாகக் காணும்போ தெல்லாம் பாராட்டிச் சீராட்டி அன்பான மொழிகளைப் புகன்று நீடூழி வாழவேண்டும்—அரசு செலுத்திப் பார்க்கவேண்டுமென ஆசி கூறுவான். அத்தகைய தலையன்புடைய இப்பிச்சைக்காரன் யான் வனவாசம் செய்ய முடிபுனையாமல் நாடிழந்து சென்ற விஷயம் பொதுஜன வாக்கியத்தால் உணர்ந்து மகா துக்கிதனாகி நான் இல்லாத இவ்வயோத்தியில் புகுத மனமிசையாமல் சுற்றுப்புறங்களிலுள்ள ஊர்களில் பதினான்கு வருடங்களாகப் பிச்சை யெடுத்துண்டு உயிர் ஓம்பி வருகையில் நான் சுகமே திரும்பி வந்து முடிசூடிய செய்தியைக் கேட்டு அடக்கமுடியாத ஆநந்தத்தினால் ஓடோடியும் வந்து என்னைக் காணும் ஆசையினால் தனது நிலைமையை மறந்து அரசவைக்குள் எவரையு மதியாது புகுந்து அரியணைமீதேறி அடா ராமா வென்று அழுதரற்றிக்கொண்டே அணைத்துத் தன் துயரத்தை ஆற்றிக்கொண்டான், எனக்கு அவனைக் கண்டு துக்கம் பொங்கிய காரணம் என்னைப் பெற்றெடுத்த சக்கரவர்த்தி ஒருவரே அடா ராமா என்று உரிமையுடன் அழைப்பது வழக்கம். சிற்றரசர்கள் சக்கரவர்த்தி திருமகனென்றும், பந்துவர்க்கத்தினர்கள் ரகுபதி, காகுஸ்தன் என்றும், முதியோர்கள் தாசரதி என்றும், ஜனகராதியோர் சீதாபதி யென்றும் தேவரீர் இராமச்சந்திரா என்றும் அழைப்பது வழக்கம். திரும்பி நகரம் புகுந்த யான் எல்லா பந்துமித்திரர்களாலும் சூழப்பட்டிருந்தாலும் என்னுயிரைத் தன்னுயிராக எண்ணிய அருமைத் தந்தையைக் காணப்பெறாத பெருங் குறையுடையவனா யிருந்தேன். இந்த நிலைமையில் பிச்சைக்காரன் அழைத்த அடாராமா, என்னும் விளிக்குறி என் செல்வத் தந்தையாரின் ஞாபகத்தை நினைப்பூட்டியது. ஆதலினால் நானும் மனங் குழைந்து அழுதேன் என்று விடைபுகன்றார். முனிவர்களும் அன்பர்களும், அரசர்களும், ஜனத்தலைவர்களும் இவ்வரலாறு கேட்டு வியந்து மிக மிகப் புகழ்ந்தின்புற்றனர். தொன்மை மறவாத உயர் குணத்திற்கு இதைவிடச் சிறந்த உதாரணமு முண்டோ? இதையன்றி தொன்மை மறவேல் என்பதற்குப் பழமையான தர்மங்களை நீ மறவாதே என்று பொருள் கொள்வதும் பொருத்தமுடையதேயாகும். பழமையான தர்மங்கள் யாவுமே கழிக்கற்பாலன என்பது ஒரு சில நவநாகரிக யுவர்களின் அபிப்பிராயமாகி விட்டதென்பது எவரும் அறிந்ததே. தவிர பழையன கழிதலும் புதியன புகுதலும் வழுவல, கால வகையினானே என்றதும் அப்பழமையாளர் வகுத்ததேயாகும். இப்புதியர்கள் அம்மொழியை மட்டில் தங்கள் நவீன விருப்பங்களுக்கும் செய்கைகட்கும் ஆதாரமாக எடுத்துக்காட்ட முற்படுகின்றனர். அம்மொழியும் தொன்மைப் பழமொழியென்று அசட்டை செய்வதில்லை. உதாரணமாக நம் நாட்டில் வீடு கட்டுவதையே எடுத்துக்கொள்வோம்.

பழய காலங்களில் வீட்டில் உள்ளோர்களின் உபயோகத்தைவிட புறத்திண்ணைகளை விசாலமாகவும், தலைக்குயரமான தலையணைக் குறடுகள் உள்ளனவாகவும் அமைப்பது மரபு. அதனால் முதியோர், மெலிந்தோர், பிணியாளர், வழிப்போக்கர் ஆகிய பலரும் சுகமாய் இளைப்பாற அநுகூலமிருந்தது. வீட்டில் வசிப்போருடைய தயவில்லாமல்கூட அந்நியருக்குப் பரோபகாரம் செய்யும் குறிப்பே அவைகளை அமைக்கும் நோக்கம். இந்தியநாடு தவிர எந்நாட்டி

னர்கட்கும் வெளிப்புறத்தில் திண்ணை வைத்துக் கட்டும் வழக்கம் கிடையா தென்று அறிகின்றோம். பிறர்க்குதவி புரியவே இல்வாழ்வான் வாழ்வு நடத்த வேண்டுமென்பது இந்து மதக் கொள்கையாதலின் அதற்கேற்ப எல்லா அமைப்பு முறைகளிலும் அறச்செயல் காணப்பட்டது. தற்காலம் மேல்நாடு களில் யாத்திரை செய்ய வசதியுடைய தனவந்தர்கள் கட்டும் வீடுகளுக்கு மேலே கட்டிய பழைய முறையில் தெருத் திண்ணைகளைக் காண முடிய வில்லை. ஆங்கிலர் இந்நாட்டில் வசித்தாலும் பங்களாக்களில் வாசம் செய்வ தால் அவர்கள் நடையுடைகளைப் பின்பற்றி நடக்கும் விருப்பமுடைய தன வான்களும் அவர்களைப்போலவே தங்கள் வசிப்பிடங்களையும் சுற்று மதி லெடுத்து சிறைச்சாலைகளைப்போல பங்களாவையே கட்டி வசிக்கின்றனர். தாங்கள் குடியிருக்கும் இடத்தை வீடு என்று கூறவும் நாணுகின்றனர். இதற் கும் 'பழையன கழிதலும் புதியன புகுதலும்' வழுவல கால வகையினுனே, என்ற பல்லவி பாடப்படுகிறது. இம்மட்டோ! மேஜைமேல் பரிமாறச்செய்து உண்பதையே கண்ணியமாக நினைப்பவர்களும் பலர். இதன் மூலம் எத் தனையோ அருவருக்கத்தகுந்த செயல்கள் விளைகின்றன. தலைச்சாத்தணி தல் முதல் காற் செருப்புவரை எத்தனையோ மாறுதல்கள் பரந்த வெளியில் திறந்த உடம்போடு தூயகாற்றை சுவாசிக்கும் பாக்கியமும் இக்கனவான்களுக் கில்லை. சிறு பிள்ளைகள் மூக்குக் கண்ணாடி யணிந்து நாணமின்றி வெளிவருவ தும், வன்மையுள்ள வாலிபர்கள் கையில் அலங்காரப் பிரம்பு பிடிப்பதும் இது போல் எண்ணிறந்த செயல்களும் நாம் தினமும் காணும் காட்சிகளல்லவோ? இவைகளினுல் சரீர ஆரோக்கியத்திற்கு வழி காணக்கூடிய சிறு சாதகம் இருக்குமாயினும் புதியன என்பதற்காக இகழத் தேவையில்லை. ஒவ்வொரு செய்கைகளிலும் தீமையே விளையக்கூடிய தன்மை யிருப்பது ஆராய்ச்சி யாளர்க்கு விளங்கும்.

ஆகவே மூதாட்டியார் தொன்மை மறவேல் என்று வெகு தந்திரமாகவும் விநயமாகவும் போதிக்கின்றார் என்றும் பழைய நேசத்தை மறவாது பேணு வதோடு பழமையாக முதியோர் செய்துவந்த அறம் நியதி முதலியவற்றையும் நீ ஒருபோதும் மறவாதே என்று நினைவூட்டுகின்றார் என்பதும் நாம் மன திற்கொள்ளல் வேண்டும். தவிர தொன்மையான காரியங்களில் ஆண்பா லார்களுக்குள்ள நம்பிக்கையைவிட பெண்களுக்கே பன்மடங்கு அதிகம். நம் நாட்டில் தற்பொழுது அவ்வவர்களின் வருணங்களுக்கேற்றபடியான வைதிக ஒழுக்கங்களும் சடங்குகளும், தேவதா பூஜைகளும் விரதாதிகளும் ஓரளவு நடைபெறுவதும் பெண்களின் பழமை பாராட்டும் குணத்தினுலேயே என்பது எவரும் அறிந்ததே. ஆடவரிலும் ஒரு சிலர் பெண்களைப்போல் பழமைப் பற்றுடையவர்கள் இல்லாமலில்லை. பெண்களிலும் சிலர் அவ்வாறே நவநாகரிக மோக முடையவர்களாய் மாறிவருகின்றனர் என்பதை மறுக்க முடியாது. பேதமை மிகுதியால் அறிவற்ற—பொருளற்ற சில அநாகரிகச் செய்கைகளும் இடையில் புகுந்து தொன்மையின் தூய்மையையும் கெடுத்து வருவது கண்கூடு. குளத்தில் இடப்பட்டுள்ள கருங்கற்களில் படர்ந்துள்ள பாசிகளை அகற்ற வேண்டுமேயன்றிக் கற்களையே பெயர்த்தெறிதல் கூடாது. அவ்வாறு செய்யின் தண்ணீரில் இறங்கவே முடியாது. இறங்குவோர் அபா யத்திற் குள்ளாகுவர். அதுபோலவே தொன்மையாய் வரும் எந்தச் செய்கை களையும் அறிவால் ஆராய்ந்து கைக்கொண் டொழுகல் வேண்டும். விரதாதி

களின் நோக்கமே பொருட்பற்றும் சுயநல வேட்கையும் மிகுதியுடைய வர்கள் பிறருக்கொன்றைத் தானம் என்கிற பெயரால் உபகாரம் செய்யப் பயிற்றுவதேயாகும். சாஸ்திர சித்தாந்தமும் அதுவே. பரோபகாரம் தவிர வேறு பயன் நம் அநுஷ்டானத்தில் உள்ள எந்தச் சடங்குகளிலு மில்லை. சர்க்கரையைக் காட்டி மருந்தூட்டும் தாய்போல் முதியோர் பிறருக்கொன் றை சந்தோஷத்துடன் அளிக்கவேண்டி வகை செய்தனர் என்றுணர்வதே அறிவுடைமையாகும். சில வாலிபர் பிள்ளையாருக்குத் தேங்காய் உடைப்ப தாகக் கோருவோர்களை வெகுவாய் இகழ்ந்து பரிகசிக்கின்றனர். ஒரு தேங் காய்க்காக ஒரு கடவுள் நமக்கு அபீஷ்டம் அளிக்க அவ்வளவு அற்ப புத்தி யுடையதாக இருக்கலாமா? அப்படியானால் அது கடவுளாகுமா? பரிதானம் பெறும் அதிகாரிகளுக்கும் இத்தகைய தெய்வங்களுக்கும் என்ன வேற்றுமை? என்றெவ்வளவோ வாது புகல்வதைக் கேட்டிருக்கிறோம். ஒரு அணு விலை கொடுத்து ஒரு நைவேத்தியப் பொருளை வாங்கத் துணிவதனால் அந்த ஒரு அணுவில் உள்ள பற்று குறைகிறது. இதுவே உண்மைக் கருத்தல்லது விநா யகர் தேங்காயை விரும்பிப் பிரதி பிரயோஜனம் செய்வதற்கு அன்று என் பதை யுணரவேண்டும். நைவேத்யம் செய்யும் பொருள்களை சுவாமியா சாப்பிடுகிறது? செய்பவர்கள் தானே உண்கிறார்கள் என்றும் சமாதானம் சொல்லக்கூடும். ஆனால் அதிலும் ஒரு வழக்கம் சுயநலத்திற்கு முரணாக வுளது. அதாவது நைவேத்தியம் செய்யப்படும் பொருள்களை ஒரு சிலருக்கோ பலருக்கோ விநியோகித்தல் வேண்டுமென்கிற ஓர் அநுஷ்டானமும் உண்டு. இதிலும் தியாக புத்தி ஏற்படுகிறது. இவ்வளவுக்கு மேலாக கற்பூரம் கொளுத் தாமல் எந்தப் பூஜையும் முடிவுபெறுவதில்லை. அது முற்றிலும் கரைந்து ஒருவருக்கும் பயன்படா தொழிதலால் அந்த அளவுக்காவது அதற்குரிய செல வின் பற்றினை அறவே விடுவது கடனாகின்றது. எல்லாம் சிறுகச் சிறுகத் தியாகத்திற்கு நம்மைப் பயிற்சி செய்வதாகும். கற்பூரம் மிச்சமின்றிக் கரைந்து தான் என்னும் எண்ணம் இறந்து வஸ்துமயமாக அன்வயப்படுவது என்பது அதன் இரகஸியார்த்தம். ஆயினும் மேலே நாம் காட்டிய பொருள் பாஹ்யார்த்தமே. இதன் உண்மையையும் உணராமல் பிள்ளையாருக்குத் தேங்காய் உடைப்பது மூட வழக்கமென்றும், கிழங்களின் தொந்திரவென் றும் பேசுவோர் நிலைமைக்கிரங்கியே நமது மூதாட்டியார் தொன்மை மற வேல் என்றருளியதெனக் கோடல் சிறப்புடையதே.

வைசூரியுள்ள இடங்களில் வேப்பிலையை மிகுதியும் உபயோகிப்பதும் மூடக்கொள்கை பழங்கதை யென்போர் அப்பச்சிலையின் வல்லமையை அறி யாதவரே யன்றி வேறென்ன? வேப்பிலையில் உள்ள கிருமிகளைப் பரவவிடா மல் அழிக்கும் ஆற்றல் குரோடன்ஸுகளுக்கு இல்லை யென்பதையும் இவர் கள் அறியார். புது நாகரிக விருப்பமுள்ள பெண்கள் பலர் மஞ்சள் பூச்சை நாகரிகமாக மதிப்பதில்லை. அதில் எவ்வளவோ அரிய சுகத்தை வளர்க்கும் சக்தி நிரம்பியிருக்கிறது. அதை வெறுத்து தோலுக்கு வறட்சியை யுண்டு பண்ணும் நவீன சாதனத்தையே நாகரிகமாகக் கொண்டிருக்கின் றனர். முதன்மையாகக் கண்களுக்குக் குளிர்ச்சியைத் தரும் ஆமணக்கெண் ணெயினால் எரிக்கப்பட்ட விளக்குகள் நம் நாட்டில் இருந்ததென்று சொன்னா லும் தற்கால நாகரிகர்கள் நம்புவதுகூட கஷ்டம். கண்ணொளியை நாள டைவில் மழுங்கச் செய்துவரும் காந்த விளக்குகளால் இந்திய நாடே பகற்




## 39. அமெரிக்க சுதந்தர யுத்தம்.

(T. S. ராஜகோபாலன், B. A., L. T.)

எவ்விதத்தில் ஆஸ்ட்ரிய வார்சு யுத்தம் ஏழாண்டுப் போருக்குக் காரணமாயிற்றோ அவ்விதமே ஏழாண்டுப் போரும் அமெரிக்க சுதந்திர யுத்தத்திற்கும் காரணமாயிற்று. முன்பு விவரித்தபடி ஏழாண்டுப் போர் உலகத்தின் பல பாகத்திலும் பரவி நடந்ததும் ஆனதிலும் வெற்றி யொன்றே கருத்தாகி, செலவைப் பொருள்படுத்தவேயில்லை யானதாலும் ஏராளமான கடன் ஏற்பட்டு ஆங்கில அரசாங்கம் ஆழ்ந்த யோஜனையி லிறங்கியது. மந்திரிகளாவது நிலைத்து நிர்வாகம் செய்திருந்தால் ஒரு விதத்தில் நல்லபடியாக யோசனை செய்திருக்கலாம். மந்திரிகளாலும் நிலைக்க முடியவில்லை. அந்தந்த மந்திரிகளுக்குத் தெரிந்த யோசனைகளை நடத்திப் பார்த்தார்கள். அரசனுக்கும் மந்திரிகள் விஷயத்தில் உண்டான பிடிவாதம் இந்த அமெரிக்கா விஷயத்திலும் வியாபித்து விட்டது. அதன் பலன் யுத்தமும், கஷ்டமும், கெட்டபேருமே என்பது இந்த யுத்தத்தினால் விளங்கும்.

ஏழாண்டுப் போருக்குள்ள பல காரணங்களில் அமெரிக்காவி லிருந்த இங்கிலீஷ் குடியேற்ற நாட்டு வாசிகளுக்கு அங்குள்ள பிரஞ்சு குடியேற்ற நாட்டுவாசிகளால் ஆபத்து நேராமல் தடுப்பதும் ஒரு காரணம் என்பது விளங்கியிருக்கும். அதைச் சாக்காகவைத்து இங்கிலாந்து அரசியல் நிர்வாகியான கிரென்வில் என்ற மந்திரி, இங்கிலாந்து பார்லிமெண்டில் முத்திரைக் காகிதச் சட்டம் (Stamp Act) என்பதைச் செய்து, அதை அமெரிக்காவில் அமலுக்குக் கொண்டுவந்து அந்த வரும்படியில் யுத்தச் செலவுக்கு ஈடு செய்ய முயற்சி செய்தார். அதன்படி அமெரிக்கர்கள் தாங்கள் செய்து கொள்ளும் ஒப்பந்தங்கள், வர்த்தமானங்கள் போன்ற காரியங்கள் இந்த முத்திரைக் காகிதங்களில் எழுதினால்தான் செல்லுபடியானவை யென்று ஆங்கிலேயர் திட்டம் செய்திருந்தனர். அது பொது நோக்கப்படி நியாயமானதானாலும் அமெரிக்கர்கள், தங்கள் சம்மதம் பெறவில்லையென்றும், தங்களுடைய பிரதிநிதிகளே யில்லாத இங்கிலாந்து பார்லிமெண்டில் இந்தச் சட்டம் தங்களைக்

---

குருடர்களின் இராஜதானியாய்விட்டது. எனினும் தொன்மையான சாதனங்களை வாழ்வில் அமைத்துக்கொள்ளும் மனமாறுதல் ஏற்படுமென்று தோன்றவில்லை. இவ்வித ஆற்றல் புதுமைக்கு ஏற்படும் என்று முன்கூட்டியறிந்துதானோ, ஔவையார் தொன்மை கைவிடேல் என்று கூடக் கூறத் துணியாதவராய் பயந்தவர்போல் மனத்திலாவது ஞாபகப்படுத்திக்கொள் (மறவேல்) என்றருளினரோ என்றும் எண்ணவேண்டியிருக்கிறது.

கட்டுப்படுத்தாதென்றும் சொல்லிக் கூக்குரலிட்டார்கள். அது நியாயமானதே யென்று இங்கிலாந்திலும் பிட், பர்க் முதலியவர்கள் ஆதரவு செய்து, ஆங்கில அரசாங்கத்தைக் குறை கூறினார்கள். இதுகண்ட அமெரிக்கர்கள் கொஞ்சம் கூடக் கிளர்ச்சி செய்தார்கள். அந்த வரும்படியைக்கொண்டு பின்னுக்குப் பிறர் உபத்திரவம் ஏற்படாதபடி ஒரு சேனையை வைப்பதாக ஆங்கில கவர்ன்மெண்டார் சொன்னார்கள். அமெரிக்கர் அதையும் ஆமோதிக்க வில்லை. ஆங்கிலேயர் விடுவதாக இல்லை. அமெரிக்கர் ஆங்கிலேயருடைய சாமான்களைப் பஹிஷ்காரம் செய்யலானார்கள். என்ன செய்வார்கள் ஆங்கி லேயர்கள். அடுத்த மந்திரியான ராக்கிங்ஹாம் நிர்வாகத்தில் ஒருபாடாய் அந் தச் சட்டத்தை 1766-ல் ரத்து செய்துவிட்டு, இங்கிலாந்து பார்லிமெண் டுக்கு அமெரிக்கர்களுக்கு வரி விதிக்கப் பாத்தியம் உண்டு என்ற தத்து வத்தை வற்புறுத்தி "பிரகடனச் சட்டம்" என்ற அர்த்தமுள்ள "The-Declaratory" என்றது ஏற்பட்டது.

தங்கள் கிளர்ச்சிக்குப் பலன் ஏற்பட்டது என்பதை அமெரிக்கர்கள் உணர்ந்த பிறகு மறுபடியும் (Townshend) டௌன்ஷெண்ட் என்ற மந்திரி காலத்தில் கண்ணாடி, காகிதம், வர்ணங்கள், தேயிலை முதலிய அமெரிக்க இறக்குமதி சாமான்களின்மீது சுங்கவரி விதித்தார்கள். இந்த வரி விதிக் கப்பட்ட காலத்தில் வில்லியம்பிட் பிரதம மந்திரியாக இருந்தார் எனச் சொல்லுவதுண்டு. ஆனால் அவருக்கு உடம்பு குணமில்லாத நிலையில் அவ ருடைய அறிவுக்கு எட்டாமலே, இந்தச் சட்டம் ஏற்பட்டதாம். ஆகவே அமெரிக்கர்கள் மறுபடியும் கிளர்ச்சிகளை ஆரம்பித்தனர் என்பது சொல்லத் தேவையில்லை. மந்திரி சபைகளையும் ஒன்றன் பின் ஒன்றாக அரசன் கலைத் துக்கொண்டும் வந்தான். கடைசியாக, விக் கக்ஷி மந்திரியே இல்லாமல் டோரிக்கட்சியைச் சேர்ந்த நார்த் பிரபு (Lord North) அரசன் கைக்கருவி யாய் அரசன் சொன்னபடியெல்லாம் எலும்பில்லாமல் வளையும் புழுவாய், ஏற்பட்டு பிரதம மந்திரியானார். அவர் காலத்திலும் மேலே சொல்லப்பட்ட சாமான்களின்மீது வரிகளைப் பற்றின கிளர்ச்சியின் வேகம் இருந்து வலுத்தது. உள்நாட்டிலும் அபிப்பிராயபேதம் இருந்தது. அதை மதித்துத் தேயிலை நீங்கலாக உள்ள மற்ற கண்ணாடி, காகிதம், சாயங்கள் முதலிய மூன்று சாமான்களின் வரிகளும் விலக்கப்பட்டன. (ஒருவேளை பிரகடனச் சட்டத்தின் தத்துவத்தை ஸ்தாபனம் செய்திருக்கலாம்.) ஆனால் அமெரிக்கர் களுக்கு அதிக இடம் கொடுத்தது போலாகியது (1773-ம் வருஷம் என்பது குறித்துக் கொள்ளவேண்டிய விவரம்.) பின்னும் கிளர்ச்சி வலுத்தது. அரச னுக்கும் அடங்காத கோபம் வந்துவிட்டது. இந்த நிலையில் நேர்ந்ததொரு ருசிகரமான சம்பவம்!

பாஸ்டன் (Boston) என்ற துறைமுகத்தில் ஒரு தேயிலைக்கப்பல் வந்து தங்கிய காலத்தில், பாஸ்டன் வாசிகளில் சிலர், சுதேசிகளான சிகப்பு இந்தி யர்களைப்போல் உருமாறி, கப்பலில் நுழைந்து, பல தேயிலைக் கட்டுகளிருந்த வந்த பெட்டிகளை கடலில் தள்ளிவிட்டு வந்து விட்டார்களாம்! இதை யறிந்துகொண்ட ஆங்கில அரசாங்கத்தார் அப்படிச் செய்தவர்களைப் பிடித் துக் கொடுக்கவேண்டும் என்று பாஸ்டன் வாசிகளை வெருட்டினராம்! அவர் கள் ஒன்றும் செய்யாததைக்கண்டு வெகுண்டு, பாஸ்டன் துறைமுகம் வியா பார உரிமைகளை யிழந்ததாகவும், அதை அடைத்து விடுவதாகவும் விளம்

பரம் செய்து, பாஸ்டன் நகரத்தை அக் கள்வர்களைப் பிடித்துக்கொடுக்கும் வரையிலுமென்று ராணுவச்சட்ட அமுலுக்குள்ளாக்கினராம்! (அரசாங்கத்தார் இஷ்டப்பட்டபோது காரணமிருந்தோ இல்லாமலோ ராணுவச்சட்ட அமுல் திடீரென ஆரம்பிப்பது எப்போதும் எங்கும் உள்ள ஒரு விபரீத மாத்திரை போலும்.) ஆகக் கிளர்ச்சியும் கலகங்களும் ஏற்பட துப்பாக்கிப் பிரயோகங்களுக்கும் ஹேதுவானது சரித்திரப்போக்கும் ஆகும்.

இம்மாதிரி ஒரு பட்டணத்திற்கு ஏற்பட்ட அவமானத்தைக் கண்டு பொறுத அமெரிக்க நாட்டுவாசிகள் பிலடல்பியா (Philadelphia) நகரில், பதின்மூன்று மாகாணப் பிரதிநிதிகளும் ஒன்றுகூடி, இங்கிலந்து அரசியல் போக்கையும் கண்டனம் செய்து, பாஸ்டன் வாசிகளிடம் அனுதாபம் காட்டி, அவசியமானுல் பதின்மூன்று மாகாணங்களும் ஒன்றுகூடி, ஒரு சேனையையும் தயாரித்து, சண்டை செய்யத் துணிந்து, தாங்கள் சுதந்தரத்தை யுத்தம் செய்து வேண்டுமானுலும் காப்பாற்றிக்கொள்ளத் தயார் என்று பிரகடனம் செய்து, முன்பு ஏழாண்டுப் போரில் சண்டை செய்து அனுபவமுள்ள ஜார்ஜ் வாஷிங்ட்டனைத் தங்கள் சேனுதிபதியாக்கி வேண்டிய யுத்த முஸ்தீபுகளைச் செய்ய அதிகாரமும் கொடுத்து விட்டார்கள் 1775-ல்! இதற்குத்தான் சரித்திரத்தில் "அமெரிக்காவின் சுயேச்சைப் பிரகடனம்" ("The Declaration of American Independence") என்று சொல்லுவது வழக்கம்

இரு திறத்தாரும் ஆத்திர மூண்டுவிட்டனர். ஒருவருக்கொருவர் சளைத்தவரில்லை. ஏனெனில் ஆங்கிலக் குடியேற்ற நாட்டுவாசிகளும் ஆதியில் ஆங்கிலேயர்க ளல்லவா? இரு கட்சியிலும் இருந்த நிதானப் போக்குக்காரர்களின் புத்திமதிகளும் விழலுக்கிறைத்த நீராயின. பிட், பர்க் போன்றவர்களோ ஆங்கில அரசாங்க நிர்வாகிகளுக்கு எவ்வளவோ எடுத்துரைத்தனர். பயனில்லை. "வாதத்திற்கு மருந்துண்டு. பிடிவாதத்திற்கேது மருந்து?" என்பதற்கு தடை யுண்டோ? கடைசியாக விஷயம் முற்றிய பிறகு ஆங்கில மேதாவிகளின் தூது கோஷ்டி சமரஸத்திற்குப் பாடுபட்டதாம். ஆனுல் அம் முயற்சி "கண் கெட்ட பிறகு சூரிய நமஸ்காரமாய்" முடிந்ததெனச் சொல்லப்படும். அமெரிக்கர்கள் விட்டுக் கொடுக்க இம்மியும் இணங்க வில்லை. ஆக, முத்திரைக் காகிதச் சட்டம், பிரகடனச் சட்டம், நான்கு சாமான்களின் மீது இறக்குமதி வரி, பாஸ்டன் தேயிலைக் கப்பல் சம்பவம், அமெரிக்கரின் சுதந்தரப் பிரகடனம், காலங்கெட்ட சமரச முயற்சி என்பன அமெரிக்க சுதந்தர யுத்தகாரணங்கள் என்று சாதாரணமாகக் காணப்படும்.

ஆனுல் மனித சுபாவத்தின் போக்கை யுணர்ந்து சரித்திர நிபுணர்கள் இந்த யுத்தத்திற்குச் சில ஆழ்ந்த காரணங்களையும் கூறுவர். ஆங்கில மக்களின் இரத்தமேயுள்ளவர்கள் என்ற முறையில் அமெரிக்கர்களுக்கு வெகு காலமாகவே இருந்து வந்த நீடித்த க்ஷாத்திரத்திற்கு, இந்தக் காரணங்கள் கடைசியாக ஒரு தீப்பொறி மட்டும் போன்றது என்பது அந்த மேதாவிகளின் கருத்து. ஆக அந்த ஆழ்ந்த காரணங்களை விவரித் தெழுதுவது தான் நாம் சரித்திர மூலம் பெறக் கூடிய அறிவு அடைவதற்கு ஹேதுவாகும்.

குடியேற்ற நாடுகள் ஏற்பட்ட காலத்தில் அந்த மக்களுக்கு ஸ்வபாவமான தேசாபிமானம் முன்பொரு வியாசத்தில் குறிப்பிடப்பட்டது. அதையொட்டியவர்கள் தங்கள் அரசர்களுக்கும் மரியாதை செலுத்தும் பாவனையில்

ஆபிவிருத்தியான பொழுது, அவர்களால் அனுப்பப்பட்ட கவர்னர்களை யேற றுக் கொண்டார்கள். மற்றபடி தங்கள் போக்குப் படிக்கும் சௌகரியப் படிக்கும் நடந்து கொள்ள விரும்பினார்கள். அந்த மாதிரி பேருக்கு "ஆவ ணியவிட்டப் பெரியவர்களாக மதித்து" செய்த மரியாதையை ஆங்கிலேயர் வேறு விதமாக நினைத்து, குடியேற்ற நாடுகளைத் தங்கம் மூளைக்கும் மரங்களா கவும், தங்கள் சௌகரியங்களுக்காகவே இருக்கிறார்கள் என்ற முறையிலும் நினைத்து, "ருசித்த கரும்பை வேருடன் பிடுங்குவது" போல, குடியற்ற நாட்டு வாசிகளை நடத்தத் தொடங்கினர். கவர்னர்களுக்கும் குடிகளுக்கும் சச்சரவு நேர்ந்த காலங்களில் கவர்னர்கள் பக்கமே தீர்ப்பளித்து வந்தனர் என்பது ஒன்று.

காலடைவில் பல யுத்தங்களினால் ஏற்பட்ட பண முடைகளுக்கு அமெ ரிக்கர்களிடம் பணம் எதிர்பார்ப்பது மற்றொன்று. அவர்களும், தங்கள் பக்கத் தில் பிரஞ்சுக்காரரின் குடியேற்றங்கள் பெருகுவதைக் கண்டு, தாய் நாட்டுக்கு அடங்குவது போலிருந்தால் ஆபத்து வந்த காலத்தில் ஆதரவு கிடைக்கு மென்று இருந்தனர். ஏழாண்டுப் போரில் பிரஞ்சுக்காரர்கள் தோற்று கனடா ஆங்கிலேயர் வசமான பிறகு அந்தப் பயம் அறவே ஒழிந்தது என்ப தில் ஆங்கிலேயரிடம் ஆதரவு கேட்கத் தேவை யில்லாமல் போய் விட்டது மற்றொன்று. மேலும், அலிகனி மலைகளுக் கப்பாலிருக்கும் பிரதேசங்களில் பாவி குடியேறும் பாத்தியம் தங்களுக்கு இயற்கையாக உண்டு என்று ஆங்கிலக் குடியேற்ற நாட்டுமக்கள் நினைத்திருந்ததற்கு மாறாக ஆங்கில கவர்ன்மெண் டாரே அந்த உரிமைகளை யுடையவர் என்றும் குடியேறற நாட்டு வாசிகளுக் குக் கிடையாது என்றிருந்ததும் மிகவும் அவசியமான மற்றொரு காரணம் ஆகும். இது இயற்கையாகவே உள்ளக் கொதிப்பை ஏற்படுத்தியது.

தவிரவும் குடியேற்ற நாட்டு வியாபாரத்தில் ஏற்றுமதி விஷயங்களையும் ஆங்கில கவர்ண்மெண்டார் தங்கள் நன்மையை யுத்தேசித்தே ஒழுங்குபடுத் திக் கட்டுப்பாடு செய்தனர். உதாரணமாக கிராம்வெல் காலத்திய கப்பல் போக்குவரத்து சட்டம் (The Navigation) ஆங்கில இரத்தம் உள்ள அமெ ரிக்கர்களையே பாதித்தது. இதே விஷயம் ஸ்காட்லண்டு மக்களையும் வெறுக் கச் செய்தது வாசகர்கள் அறிந்ததே. அந்த வகையில் அமெரிக்கர்கள் சொந்த முறையில் வியாபாரமோ, கைத்தொழிலோ, கப்பல் தொழிலோ நடத்த முயன்ற போது, அந்நியர்களாகவே கருதப்பட்டு, சட்ட அமுலின் பாதைகளை யனுபவித்தனர்! இது உண்மையில் மனக் கொதிப்பை யுண்டாக் கியது இயற்கையோ அன்றோ, பொதுவாக "நீ அவல் கொண்டுவா. நான் உமி கொண்டு வருகிறேன். இரண்டையும் கலந்து, ஊதி, ஊதி நாமிருவரும் தின்போம்" என்ற குழந்தைகளின் போக்கையும், "எங்கள் வீட்டுக்கு வந்தால் என்ன கொண்டு வருகிறாய்?" என்ற மனப் போக்கையும் அனுசரித்து, குடி யேற்றநாட்டு வாசிகளை நடத்தியதில் அவர்கள் தீர்க்க வைரம் வைத்துக் கொ ண்டு, "சண்டி வெருண்டால் காடுகொள்ளாது" என்ற "பழமொழிக் கொப்ப வெகு நாளைய கோபத்தின் காரணமாக ஏற்பட்ட உணர்ச்சியாகும். (மற்ற ஜனங்களின் போக்கும் அது தான் என்றாலும், காலத்தை யொட்டியும், சந் தர்ப்பத்தை யொட்டியும் கிளர்ச்சிகள் தீவிரமாகவோ நிதானமாகவோ ஏற் படும். ஆனால் எக் காலத்திலும், ஏகோபித்த ஒரே உணர்ச்சி எந்த மக்களி டமும் ஏற்படுவதில்லை என்பது மனித சுபாவம்.)

இதைப் படித்த பின் அமெரிக்கரின் ஆத்திரத்தின் காரணம் விளங்கியிருக்கலாம். பிரஞ்சுக்காரர் பயமோ இல்லை. தாய் நாடோ தொலையாத தூரத்தில் இருந்து யுத்த முஸ்தீபுகளையும் தளவாடங்களையும் தயார் செய்வதையும் உணர்ந்தனர் அமெரிக்கர்கள். தவிரவும் இங்கிலாந்திடம் தீர்க்க வைரம் கொண்டிருந்த பிரான்சின் உதவியை ஒருவாறு எதிர் பார்த்தார்களோ என்னவோ என்றும் நினைக்கவேண்டியிருக்கிறது. எல்லாவற்றிற்கும் முக்கியமாக அரசனுடைய போக்கைத்தான் குறிப்பிடவேண்டியிருக்கிறது.

பல விதங்களிலும் யுத்தம் ஏற்பட்டது. குடியேற்ற நாட்டு வாசிகள் ஆரம்பத்தில், அபிப்பிராய பேதத்தாலும், தளவாடக் குறைவாலும், துரோகத்தினாலும் படாத பாடுகளைப் பட்டுச் சளைத்து, பணம் இல்லாமல் கஷ்டப் பட்டார்கள். சந்தர்ப்பத்தில் பிரான்ஸ் குடியேற்ற நாட்டு வாசிகளுடன் சேர்ந்து கொண்டு தங்கள் தீர்க்க விரோதத்தைக் காட்டிப் பழிதீர்த்துக் கொண்டார்கள் என்றே சொல்லலாம்! பணம், பொருள்கள், வெடி மருந்து, பீரங்கி, வீரர்கள் எல்லாம் உதவினர். ஆங்கிலேயர் கடலாதிக்கத்தையும் எதிர்க்க ஆரம்பித்தனர். ஏனெனில், ஆங்கிலேயர்கள் "கடலில் செல்லும், பொது தேசக் கப்பல்களை தாங்கள் விரோதிகளுக்கு உதவி சாமான்கள் செல்லுகின்றனவா என்று சோதிக்க உரிமையுண்டு" என்று வற்புறுத்தினார்கள். இதைப் பொது தேசத்தினர் தங்களுக்கு மதிப்புக் குறைவான காரியமாக நினைத்து எதிர்க்கத் தீர்மானித்து விட்டனர். அதில் தான் அமெரிக்கர்களுக்கு யோகம் அடித்தது. உதவியும் கிடைத்தது. கடைசியில் இங்கிலாந்தும் சளைத்தது. பணிய விரும்பியது. (யுத்தங்கள் விவரம் சாதாரணமான எந்த சிறிய இங்கிலாந்து சரித்திரத்திலும் காணப்படும். முடிவாக அமெரிக்க நாடுகள் சுயேச்சையை யடைந்தன. இங்கிலாந்துக்கு வயது வந்த மக்களான குடியேற்ற நாட்டு வாசிகளை எப்படி நடத்துவது என்ற அறிவும் ஏற்பட்டதாம்!!)

---

# பாரதி சித்திரம்

## "கண்ணம்மா—என் காதலி"

(ஆரியூர்-வ. பதுமநாப பிள்ளை.)

### VI

கருத்தொருமித்த காதலர்களுக்குப் பெருமகிழ்வூட்டும் மாலை வேளை—நாசிக்கும் கண்களுக்கும் முறையே வாசனையினுலும் பேரழகினுலும் பெருமகிழ்வூட்டும் மலர்கள் மிகுந்த செடிகள் நிறைந்ததொரு மனோகரமான பூஞ்சோலை. அச் சோலையின் நடுவிலே, வெள்ளை வெளேலென்ற சலவைக் கல்லினுல் அமைக்கப்பட்டதொரு அழகிய மேடையின்மேல், அழகிற் சிறந்த இளைஞன் ஒருவன் அமர்ந்து கொண்டிருக்கிறுன். அவனது மடியின் மேல், உள்ளத்தைக் கொள்ளை கொள்ளக் கூடிய வடிவழகி ஒருத்தி உல்லாஸமாகப் படுத்துக் கொண்டு, அவனது முகத்தைக் கூர்ந்து நோக்கிக் கொண்டிருக்கிறுள். ஹிருதயத்தில் ஊடுருவிப் பாயும் காதல் நோக்குடன் தன்னை நோக்கும் அந்தச் சுந்தரியின் நீலக் கண்களும், கோவைக் கனியை யொத்த அவளது செம்பவள இதழ்களும், முல்லை அரும்பைப் போன்ற அவளது முத்துப் பற்களும், ரோஜாநிறம் வாய்ந்த அழகிய கன்னங்களும் அவ் விளைஞனது உள்ளத்தைக் காதல் வெறி கொள்ளச் செய்துவிடுகின்றன. அவளை அவன் எவ்வாறு மதித்திருக்கிறு னென்பதை அவளுக்கு உணர்த்தி விட வேண்டு மென்று அவனது நெஞ்சு பெரிதும் துடிதுடிக்கிறது. அவனது உள்ளத்தில் பொங்கி அலை எறியும் காதல், அவனது மனமாகிய மடையை உடைத்துக் கொண்டு, வாய் வழியாக வெளிப்படுகிறது. புன்னகை ததும்பும் மதி முகத்துடன் தன்னையே கூர்ந்து பார்த்துக் கொண்டிருக்கும் அவளது மலர் முகத்தை நோக்கிய வண்ணமே, அவன் பின்வருமாறு பேசத் தொடங்கினுன்:—

"என் அன்பே! என் ஆருயிரே!! என் செல்வமே! என் கண்ணே!! இரவிலும் பகலிலும் எந்த நேரத்திலும் என் மனத்தில் இடையறுமல் குடி கொண்டிருக்கும் உன்னை என்னென்று புகழ்வேனடீ! உன்னை நான் எவ்வாறு மதித்திருக்கிறே னென்பதை கேவலம் வார்த்தைகளால் வர்ணித்துக் கூறக் கூடிய சக்தி எனக்கில்லையே! உன்னை மயக்குவதற்காக நான் உன்னை இவ்வாறு புகழ்வதாக எண்ணிக் கொண்டு விடாதே! உன்னைப் பற்றி எனது நெஞ்சில் ஊறிப் பதிந்துள்ள எண்ணங்கள் எத்தகையவை என்பதை வாய் விட்டுச் சொல்லி விட வேண்டு மென்று என் மனம் பெரிதும் துடி துடிக்கிறது.

உனது முகமாகிய முழுமதியின் குளிரொளி, எனது விழிகளின் வழி

யே உள்ளே நுழைந்து எனக்கு எவ்வளவு இன்பூட்டுகிறது தெரியுமா? இவ்வுலகிலுள்ள அழகிய பொருள்களை யெல்லாம் கண்டு களிப்பதற்குக் காரணமான உனது கண்களை நீ எவ்வளவு அருமையாக மதிக்கிறாயோ, அவ்வண்ணமே உனக்குப் பல வழிகளிலும் இன்பூட்ட முயலும் என்னையும் மதித்திருக்கிறா யென்பதை நான் நன்கு அறிவேன். உனது செங்கனி வாயைத் திறந்து குயிலினுமினிய குரலிலே 'கண்ணாளா!' என்று நீ என்னை அழைக்கும் போது, என் மனம் எவ்வளவு பரவசமடைகிறது தெரியுமா? கோவைக் கனி போல் சிவந்து எத்தனை முறை பருகினாலும் தெவிட்டாத செந்தேனை வைத்துக் கொண்டிருக்கும் செவ்விதழ்களோடு கூடிய உனது வாய் மலரிலே எனது மனமாகிய பொன்வண்டு எவ்வளவு ஆர்வம் கொண்டிருக்கிற தென்பதை நீ அறிவாயோ? அடர்ந்து கருத்து நீண்டு தொங்கும் உனது கருங் கூந்தல், எனக்கு இருண்டு பரந்த நீலவானைப் போலவே தோன்றுகிறதடீ! துன்பக் கலப்பற்ற தனிப்பட்ட இன்பமே நிறைந்துள்ள விண்ணுலகிலிருந்து கொள்ளையடித்துக் கொண்டு வரப்பட்ட ஒப்புயர்வற்ற தேவாமிர்தத்தையே ஒரு பெண்ணுருவமாகச் செய்திருப்பது போல், உன் பொன்மேனி என் கண்களுக்குத் தோன்றுகிறதடீ! உனது மேன்மையை யெல்லாம் எடுத்துச் சொல்ல எனது மனம் எவ்வளவோ துடிதுடிக்கிறது; ஆனால் அவ் விருப்பத்தை திருப்திகரமாக நிறைவேற்றக் கூடிய சக்தி, எனது ஊற்றை வாய்க்கு இல்லையே!

என் கண்ணே! நீ உனது குயிலினுமினிய மோகனக் குரலிலே கொஞ்சிக் கொஞ்சிப் பேசும்போ தெல்லாம், வாணியின் வீணை என் மனத்தின் முன்பு காட்சியளிக்கிறது; உனது அழகிய மெல்லிய விரல்கள் வீணையின் தந்திகளை முறைப்படி மீட்டி எவ்வாறு கர்ணாமிர்தமான இன்னிசையை எழுப்புகிறதோ, அவ்வாறே உனது காதல் மொழிகளுக்குக் காரணமாக நிற்கும் நானும் அவ் விரல்களைப் போலவே உன் மனத்தில் இன்ப மெழுப்பும் கருவியாக இருக்கிறேனல்லவா? ஒளி வீசும் மணிமாலையைப் போலவே உனது மார்பகத்தில் சாய்ந்து மகிழும் நான் உன் மார்பகத்தைச் சேர்ந்ததனால் பன்மடங்கு புத்தழகு பெற்று நடு நாயகமாக விளங்கும் உயரிய புதிய வயிர மணியைப் போலவே உன்னைப் பெரிதும் மகிழ்விக்கிறே னல்லவா? எங்கு நோக்கினும் வஞ்சமும் பொறாமையும் சூழ்ச்சிகளுமே மலிந்து காணப்படும் இந்தப் பாழும் மண்ணுலகிலே, என்னை இன்னும் உயிர் வாழ்ந்திருக்க விரும்பிநிற்கச் செய்பவள் நீ ஒருத்தியே அல்லவா? நீ ஒருத்தி மட்டும் இல்லா விட்டால், இப் பொல்லாத மண்ணுலகில் நான் உயிர் வாழ்ந்திருக்க வல்லவனோ?

என் நெஞ்சாகிய சிங்காசனத்திலே கம்பீரமாக வீற்றிருந்து என்னை அடிமை கொண்டு ஆண்டு வரும் அழகுக் கரசியே! எங்கு நோக்கினும்—எதை நோக்கினும்...அங்கங் கெல்லாம் உனது கருங்கயற் கண்களின் நீலப் பேரொளியே வீசுகிறதடீ! என் கண்களுக்கு எல்லாப் பொருள்களும் உன் மயமாகவே தோன்றுகிறதடீ!

"வான மழை நீ எனக்கு—வண்ண மயில் நான் உனக்கு;
பானமடி நீ எனக்கு—பாண்டமடி நான் உனக்கு;
ஞான ஒளி வீசுதடி—நங்கை! நின்றன் சோதிமுகம்
ஊனமறு நல்லழகே! ஊறு சுவையே! கண்ணம்மா!"

நீலச் சேலை உடுத்து—அடர்ந்து வளர்ந்துள்ள கருங்கூந்தல் முழங்காலளவும் நீண்டு படிந்து கிடக்க—மரகதக் கம்பளம் பரப்பப்பட்டதே போன்ற பசும்புல் தரையின் மேல் நீ கவிழ்ந்து படுத்துக் கொண்டிருக்கும் போது, எனது கண்களுக்கு நீல வானத்தைப் போன்றே காட்சியளிக்கிறாய்! அக் காட்சியைக் காண நேருந்தோறும், எவ்வாறு என் மனமாகிய மயில் உன் அழகில் ஈடுபட்டு எண்ணங்களாகிய இறகுகளை விரித்து தன்னை மறந்து களிக்கூத்தாடுகிற தென்பது உனக்குத் தெரியுமோ? உனது இன்ப மணி மொழிகளை என்னென்று சொல்வேன்? கருப்பஞ்சாறு என்பேனோ? கலப்பற்ற தனிப் பசும்பா லென்பேனோ? தனித்தனி முக்கனி பிழிந்து வடித்தெடுத்த இன்கனிச் சாறென்பேனோ? புத்தம் புதிய கொம்புச் செந்தேன் என்பேனோ? வேறு என்னென்று புகழ்வேன்? நீ எனக்கு இன்சுவை மிகுந்த பானமாக உயரிய பானமா யிருப்பின், அப் பானத்தைக் தாங்கிக் கொண்டிருக்கும் பாண்டத்தைப் போலல்லவா உனக்கு நான் இருந்து வருகிறேன்! கண்ணே! கண்ணிமைக்காமல் எவ்வளவு நேரம் பார்த்துக் கொண்டே யிருந்தாலும் சிறிதும் சலிப்பு தோன்றாதவாறு, உனது சோதி முகத்தினின்றும் கேவலம் வாய்ச் சொற்களால் இப்படிப்பட்ட தென்று வர்ணிக்க முடியாத அற்புதமான ஞானப் பேரொளி வீசிக் கொண்டிருக்கிறதடீ! எத்தகைய குற்றமும் கூற முடியாத சீரிய பேரழகும் மேன் மேலும் ஊற்றெடுத்துப் பெருகிக் கொண்டே யிருக்கும் இன்சுவையுமே ஒரு பெண் வடிவங் கொண்டு வந்ததுபோல் விளங்கும் உனது தனிப்பெருஞ் சிறப்பைப் பேதையாகிய என்னால் எவ்வாறு வர்ணிக்க முடியும்?

கண்களுக்கும் மனத்திற்கும் ஒருங்கே பெருங் களிப்பூட்டும் குளிரொளியைப் பரப்பிக் குறுமுறுவல் செய்து நிற்பதால், நீ எனது கண்களுக்கு வெள்ளி வெண்ணிலவைப் போன்றே விளங்குகிறாய்; பலவகைப்பட்ட எண்ணங்களாகிய அலைகள் ஒன்றன் பின் ஒன்றாக எழுந்து அலைந்து கொண்டே யிருக்கும் மனத்தை உடையவனாகிய நான், உனக்கு நீலக் கடலைப்போல் விளங்குகிறேன். நீ எனக்கு இன்னிசை வல்லோர் எழுப்பும் இனிய சுதியைப் போல் இருப்பின், நான் உனக்கு அச்சீரிய கீதத்தைப் பொருள் உணர்ந்து சம்பூர்ண ஹிருதய பாவத்துடன் குற்றமற்ற பண்ணினிமை முற்றும் நன்கு கலக்குமாறு சிறந்த சங்கீத ஞானமுடைய வித்வான் ஒருவன் பாடும்போது எத்தகைய இன்பம் பிறக்குமோ அத்தகைய பாட்டின்பத்தைப் போல் இருக்கிறே னல்லவா? எனது இரு கண்களுக்குள் இலங்கும் கருமணியைப் போன்ற எனது இன்னுயிர்க்கினிய காதலியே! இன்னமிர்தக் கட்டியே! பத்தரை மாற்றுத் தங்கத்தை உருக்கி உருப்படுத்திய பொற் சிலையை யொத்த மங்கையர்க்கரசியே! நீ எனக்கு அளிக்கும் இனிய சுவையை எதற்கு ஒப்பிட்டுக் கூறலாமென்று எவ்வளவோ எண்ணி எண்ணிப் பார்த்தும், தகுந்த உவமை எதுவும் எனக்குத் தோன்றவில்லை!

உன்னால் அனுபவிக்கப்படுவதற் கென்றே, ஆண்டவன் என்னை இம் மண்ணுலகில் பிறப்பித்தருளினன் போலும்! உனது கண்களுக்கும் கருத்துக்கும் பெருமகிழ்வூட்டும் நான் மெல்—லிதழ்களை விரித்துப் புன்னகை பூத்து நிற்கும் அழகிய மலரைப் போல் இருக்கிறே னல்லவா? நீயோ அம் மலருக்கு உயிர் போன்றதும் அதன் சிரிப்புக்குக் காரணமாக இருப்பதுமாகிய மனோகரமான சிறந்த பரிமளத்தைப் போல் விளங்குகிறாய்! கேட்கக் கேட்

கச் சிறிதும் சலியாத காதற் சுவை மிகுந்த இனிய மொழிகளைப் போல் நான் இருந்தால், உள்ளத்தைக் கொள்ளை கொண்டு பரவசப்படுத்தும் அம் மொழிகளில் பொதிந்து கிடக்கும் அரும் பெரும் பொருள்களைப் போல் நீ இருந்து வருகிறாய்! என்றும் ஒளி குன்றாமல் சுடர் வீசி நிற்கும் சிறந்த நட்சத்திரத்தைப் போல் விளங்கும் எனது மனோகரியே! ஒப்புயர்வற்ற உனது அற்புதப் பேரழகைப் பலவாறு வர்ணித்துப் பாடிப் பரவசமடைய விரும்பி நிற்கும் எனக்கு உன்னைக் குறித்து எவ்வளவு தான் வர்ணித்தாலும் மேன் மேலும் பொங்கிப் பொங்கிக் கொண்டேயிருக்கும் ஆர்வம் சிறிதும் அடங்கியபாடில்லையே! நீ அளிக்கும் இனிய சுவை, வேறு எதைத்தான் ஒப்பிட்டுக் கூற முடியும்?

'முதன் முதலில் சந்தித்தவுடனே கண்களின் வழியே உள் நுழைந்து என்றேனும் சற்று நேரமும் அகலாமல் எப்பொழுதும் மனத்திற்குள்ளே சாசுவதமாகத் தங்கியிருந்து கொண்டு என்னைத்தான் விரும்பியவாறெல்லாம் ஆட்டி வைத்து வரும் சீரிய தெய்விகக் காதலுக்குக் காரணமாக நிற்பவள், நீ ஒருத்தியே அன்றோ! மங்கையர் மனத்தை எளிதில் இழுத்து வசப்படுத்திக் கொள்ளக் கூடிய அழகுடையவனாகிய நான்—தன்னைத் தீண்டிய எப் பொருளையும் விடாது பற்றிக் கொண்டு விடும் காந்தத்தைப் போன்றவனாகிய நான்—கண் ணெதிர்ப்பட்ட அழகுடைய எம் மங்கையையும் காதலிக்கக் கூடிய கள்ளக் கருத்துடையவனாக இருப்பேனென்று எண்ணிக் கொண்டு விடாதே! எனது வடிவழகாகிய காந்தத்தின் துணை கொண்டு, உன்னொருத்தியைத் தவிர மற்றெவளையும் நான் காதலித்ததில்லை யென்பதை நமது சீரிய தெய்விகக் காதலின் மீது ஆணையிட்டுக் கூறுகிறேன். பழகப் பழக அறிவையும் அன்பையும் மேன் மேலும் பெருகச் செய்யும் தெய்விகத்தன்மை பொருந்திய வேதத்தைப் போல், நீ எனக்கு எவ்வளவோ உண்மைகளை உணர்த்தியிருக்கிறாய். வேதத்தின் பலவகைப்பட்ட சுவைகளையும் அனுபவித்திருப்பதற்குக் காரணமான வித்தையைப் போல், நான் உன் மனத்தில் மேன் மேலும் ஆர்வத்தைப் பெருக்கிக் கொண்டே வருவதையும் நீ அறிவாய். மெய்யறிவு விளங்கிய போது எளிதில் விளங்கும் பேருண்மையைப் போல், அன்பு முதிர்ந்து உண்மைக் காதலின் உயர்ந்த தத்துவங்களை நான் உணரும் போது, எனக்கு ஒப்பற்ற பேரின்பத்தை அளிக்கப் பொங்கிப் பெருகி ஓடிவரும் இன்னமிர்தச் சிற்றருவியைப் போல் நீ என்னைத் தழுவிப் பரவசமடையச் செய்து விடுகிறாய்! இப் பூவுலகம் நாதவடிவாக விளங்குகிறதென்று வேதாந்திகள் சொல்லக் கேட்டிருக்கிறேன். ஆனால், அந்த நாதத்தின் தத்துவத்தை—இன்னொலியின் அற்புதச் சிறப்பை, நீ உனது செம்பவள வாயைத் திறந்து கூறும் சுவை வடிவான இனிய மொழிகளிலேயே கண்டு தெளிந்து களித்திருக்கிறேன்.

கண்ணம்மா! இனனும் உன்னை என்னென்று வர்ணிப்பேன்? ஏனைய எல்லாவற்றிலும் எனது இன்னுயிர் ஒன்றே எனக்குப் பன்மடங்கு இனியதாகும்; அத்தகைய இன்னுயிராகவே நீ எனக்கு இருந்துவருகிறாய்! நானோ, உனக்கு அவ்வுயிரின் துடிப்பை உணர்த்தும் நாடியைப்போல் இருந்துவருகிறேன். உயிருக்கு அடுத்தபடியாக எனக்கு மகிழ்வூட்டுவது, இன்ப நுகர்ச்சிக்குப் பேருதவியாக இருக்கும் செல்வம்; அத்தகைய செல்வத்தைப் போன்ற நீ எனக்குப் பெருமகிழ்வூட்டி வருகிறாய்! நானோ உனக்கு களிப்புக்கும் கர்

வத்துக்கும் காரணமான சேமநிதியைப்போல் இருந்துவருகிறேன். அழகுக் கனியாகிய எனது கண்மணியே! உனது ஒப்புயர்வற்ற அற்புதப் பேரழகுக்கு எல்லையுண்டோ? அழகுப்போட்டியில் ஒன்றையொன்று வெல்லமுயலும் அவயவங்களை உடைய ஸர்வாங்க ஸுந்தரியே! உனது இணையற்ற இயற்கைப் பேரழகு, கேவலம் வர்ணனைக்கு அடங்கக்கூடியதாகுமோ? எங்கு நோக்கினும் எனது கண்களுக்குக் காட்சியளிக்கும் செம்பொற்சுடரே? பூஞ்சோலையில் முல்லை மலர்கள் மலர்ந்து மாலைக்காற்றில் குலுங்கி நிற்கும் காட்சியைப்போல், முத்துப்பற்கள் வெளித்தோன்ற புன்னகைபூத்து நிற்கும் உனது மலர் முகத்தைக் காணுந்தோறும் எனது ஆன்மா எவ்வளவு பரவசமடைகிறதென்பதை நீ அறிவாயோ? காதற்பித்து மிகுதியினால் நான் மதிமயங்கி நிற்கும் போது, என்மேல் வந்துமோதி எனது உடலையும் உள்ளத்தையும் ஒருங்கே பரவசமடையச் செய்விக்கும் ஒப்பற்ற இன்பக்காதலை நான் எவ்வாறு வர்ணிப்பேன்?

"தாரையடி நீ எனக்கு—தண் மதியம் நான் உனக்கு;
வீரமடி நீ எனக்கு—வெற்றியடி நான் உனக்கு;
தாரணியில், வானுலகில், சார்ந்திருக்கும் இன்பமெலாம்
ஓர் உருவமாய்ச் சமைந்தாய்! உள்ளமுதே! கண்ணம்மா!!"

என் இன்னுயிர்க்கினிய இன்பக் களஞ்சியமே! என் நெஞ்சக் கோயிலில் கம்பீரமாக வீற்றிருக்கும் அழகுராணியே! நீ தாரையைப்போல் எனக்கு இணையற்ற காதலின்பத்தை ஊட்டுகிறாய்! உனது பேரழகின் முன்பு எனது அழகு, நீலவானில் சுடர் வீசிகிற்கும் ஒளி மிகுந்த நட்சத்திரத்தின் முன் கேவலம் பளிச் பளிச்சென்று மின்னி மின்னி மறையும் அற்ப மின்மினிப் பூச்சியைப்போல் மிகமிக அற்பமாக இருப்பினும், அதை நீ பன்மடங்கு உயர்வாக மதித்து, என்னை வெண்ணிலவு பரப்பும் தண்மதியைப் போன்றவனாக எண்ணி மகிழ்ந்துகொண்டிருக்கிறாய்! எனது எண்ணங்களும் செயல்களும் வெற்றி பெறுவதற்குக் காரணமாக விளங்கும் நீ, எனது கண்களுக்கு இணையற்ற சீரிய வீரத்தின் வடிவாகவே காட்சியளிக்கிறாய்! நீயோ, என்னை வாழ்க்கையில் அடைந்த பெருமித வெற்றியாகவே மதிக்கின்றாய்! இப் பூவுலகிலும் மேலுள்ள வானுலகிலும் என்னென்ன இன்பங்களெல்லாம் இருக்கின்றனவோ, அவையனைத்தும் ஒருங்கே திரண்டு ஒரே உருவமாய்ச் சமைந்ததுபோல் விளங்கும் இன்னமிர்தக் களஞ்சியமே! எண்ண எண்ண—பார்க்கப் பார்க்க—என் உள்ளத்தைப் பரவசப்படுத்தும் எனது கண்ணம்மா! சீரிய குணநலங்கள் யாவும் திரண்டமைந்துள்ள இன்னமிர்தக்களஞ்சியமாகிய உன்னை, இன்னும் என்னென்றுதான் புகழ்வேனடீ?"





# சாங்கிய தரிசனம்

(திரு. எஸ். ஏ. திருமலைக் கொழுந்துப் பிள்ளை, பி.ஏ.)

(787-ம் பக்கத் தொடர்ச்சி.)

## 29-வது காரிகை

கன்மேந்திரியங்கள்:—வாக்கு பாதம், பாணி, பாயுரு, உபத்தம். வாக்கு பேச்சை யுண்டாக்கும். (Raises articulate sounds), பாதம் இடம் விட்டுப் பெயர்தலை யுண்டாக்கும். (Locomotion), பாணி எற்றலை யுண்டாக்கும், (Grasping a thing from outside), பாயுரு மல ஜலங் கழித்தலை யுண்டாக்கும். (Throws out excreta and urine), உபத்தம் இந்திரியத்தை யுண்டாக்கும். (Production and discharge of semen)

இரகசியம். ஞானேந்திரியங்களும், கன்மேந்திரியங்களும் தூல தேகமாகிய அன்னமய கோசத்தி லிருப்பதாகத் தோன்றினும், அவ்வாறெனை மயங்கற்க. இவை அன்னமய கோசத்தை நடத்துகின்ற பிராணமய கோசத்தி லிருக்கின்றன இப்பிராணமய கோசம் உப்பு நீரில், நீர் உறையுமிட மெல்லாம் உப்பும் இருப்பதுபோல் அன்னமய கோசத்தோடு அத்துவிதமா யிருக்கின்றது.

மனமோ பிராணமய கோசத்திற்கும் உள்ளீடா யிருந்து பிராணமய கோசத்தைப் பணிகொள்ளும் திறமுடையது. இப்பிராணமய கோசம் மனம் நினைந்தபடியே எந்த உருவத்தையும் எடுக்கவல்லது. இப்பிராணன் தூல தேகம் முழுமையும் விரவி நிற்பதன்றியும் நாடிகளில் இடைவிடாது ஒழுகிக் கொண்டிருக்கின்றது. இந்நரம்புகளின் வாயிலாகத் தொழில் புரியும்பொழுது தேகத்தை யசைக்கவும், பேச்சுப் பேசவும், எதனையும் பிடிக்கவும், மல ஜலங்களை வெளித்தள்ளவும், இந்திரியத்தை யுண்டாக்கி வெளிப்படுத்தவும் வல்லது. ஞானேந்திரியங்க ளிடத்தும் பிராணன் நிற்பதினால்தான் அவற்றின் வியாபாரத்தை மனம் அறிய நேர்கின்றது. மனம் நேரே தூல தேகத்தைப் பணி கொள்ளும் தன்மையதல்ல. மனத்தைச் சூத்திரதாரனாகவும் பிராணனை சூத்திரமாகவும், தேகத்தைப் பொம்மையாகவும் பாவித்து உணர்க.

ஞானேந்திரியங்கள் நோக்கம் அறின் பகிர்முகப் பிரபஞ்சம் தோன்றுது. இவ்வாறு இந்திரியங்களை வெளி நோக்க விடாது உள் இழுத்தலைப் பிரத்தியாகாரம் என்பர். கன்மேந்திரியங்கள் தமக்கென ஓர் பொதுத் தன்மையின்றி விசேஷமாகவே பிரவர்த்திக்கின்றன.

ஸ்வாலக்ஷண்யம் விருத்திஸ் திரயஸ்யசைஷா பவத்ய சாமான்யா—சாமான்ய கரணவிருத்திః பிராணாத்யாவாயவః பஞ்ச.

## முக்கரணங்களின் வியாபாரம்.

முன்னர், புத்தி, அகங்காரம், மனமாகிய மூன்று கரணங்கட்கும் முறையே கூறிய இலக்கணங்களே அவற்றிற்கு வியாபாரமாம். ஒவ்வொன்றும் தனித்தனி வியாபார முடையாது.

இம்முக்கரணங் கட்கும் பொதுச் செய்கை யாதெனின் பிராணன் முதலாய வாயுக்கள் ஐந்தாக நின்று உயிர்த்தலாம்.

உரை:—புத்தியினுடைய விசேஷ வியாபாரம்தான் ஒருவன் உளனென்றும் தன்னை யெவரும் மதிக்கவேண்டுமென்றும் எண்ணுதலாம்.

மனம் சங்கல்பத்தைச் செய்யும். அதாவது, நாளை நான் இதனை முடிப்பேன் என்பதுபோல்.

சாங்கிய பிரவசன பாஷியத்தின்படி, "புத்தி, அகங்காரம், மனமாகிய முக்கரணங்களும் ஐவகையா யுயிர்த்தலே அவற்றின் பொது வியாபாரம்; முக்கரணங்களும் உள்ள விடத்தே பஞ்ச பிராணன்களும் உள்ளன; அக்கரணங்க ளில்லாதவிடத்தே தாமுமில்லை." அன்றியும் அந்நூல் ஐந்துவித உயிர்ப்பையும் முக்கரணங்களினுடைய விருத்தியெனக் கொள்வதைவிட முக்கரணங்களே பஞ்சப்பிராணனாகத் திரிந்தன வெனக்கொள்ளுதல் சால்புடைத்து (மேம்பாடுடையது) எனக் கூறுகின்றது.

ஆகவே ஓர் பாவனைக்கு முக்கரணங்களாய்த் தோன்றுவன மற்றோர் பாவனையால் பஞ்சப் பிராணன்களாய்த் தோன்றும் என்பதாம். ஓர் முடிச்சில் ஐந்துவிதச் சக்திகளிருந்து தம் தம் தொழிலை முடிப்பதுபோல் இரசமயமான ஒன்றில் ஓர் சக்தி வதிந்து சுவாசத்தை விளைக்கின்றது. இது பிராண சக்தி எனப்படும். மற்றோர் சக்தி மலஜலத்தைக் கீழே கொண்டுபோய்த் தள்ளிவிடுகின்றது; இது அபான சக்தி எனப்படும். மற்றோர் சக்தி பிராண சக்தியும் அபான சக்தியும் அதிகமாய் மீறாமல் (வரம்பு கடவாமல்) வேலை நடத்துமாறு சமம் செய்கின்றது; இது சமான சக்தி எனப்படும். மற்றோர் சக்தி ஜீவரசத்தைக் கண்டத்தின் வழியாகச் சிரசிற்குக் கொண்டு போகின்றது; இது உதான சக்தி எனப்படும். ஐந்தாவதாகிய வியான சக்தி எனப்படுவது ஜீவரசத்தை ஓரிடத்தில் தங்கவிடாது சர்வ நாடிகளிலும் பரவச் செய்து தேகத்திற்கு நலத்தை விளைக்கின்றது. இப்பஞ்ச சக்திகளின் இருப்பிடம் நாபிக்கமலம். இவற்றிற்கு உற்பத்தியிடமாய் உயிர் கொடுப்பது இருதயத்திலிருக்கும் ஆன்மா. அதனிடமிருந்து ஜீவன் பிறந்து பின்னர் ஐமுகங் கொண்டதெனத் தெளிக.

பிராணன்=The great director; அபானன்=Force of gravitation; உதானன்=Force of levitation; சமானன்=Balancing force; வியானன்=Counterpetal force.

All these together appear as the breath in the body. Of the breaths, Pranan is ever active and is the cause of all vitality; Apanan the force of gravitation is specially active

during the time of expulsion of dung or discharge of urine; Udanan the force of limitation is specially active during speech. Samanan the balancing force does its function continually excepting during மலஜலங் கழித்தல்; when it allows the Apanan to join on upper head over Udanan or Pranan. Vyanan the counterpetal force is ever active in its function. The functions of the mind co-operate with this five-faced force.

30-வது அவதாரிகை

யுகபஞ்ச துஷ்டஸ்ய துவிருத்திః கிரமஸச் சதஸ்யனிர்த்திஷ்டா-திருஷ்டே ததாப்ய திருஷ்டேதிரயஸ்ய தத்பூர்விகா விருத்திః

{ அந்தக்காரணங்களும் ஞானேந்திரியங்களும் ஓர் விஷயத்தைத் தெரிந்து கொள்ளும் விதம். }

கட்புலனிற்கு எட்டிய விஷயத்தின் மாட்டு புத்தி, அகங்காரம், மனம், இந்திரியமாகிய நான்கும் பிரவர்த்திக்குங்கால் ஒரே காலத்தில் தொழில் புரிவதாய்த் தோன்றினும் தோன்றும். அல்லேயேல் படிப்படியாய் பிரவர்த்திப்பதாய்த் தோன்றினும் தோன்றலாம்.

கட்புலனிற்கு எட்டாத விஷயத்தில் மூன்றன் முன் இந்திரிய வியாபாரம் நிகழும்.

உரை. ஒரு மனிதன் தன்னருகில் ஒரு நாகம் வந்ததைத் திடீரென உணரும்படி நேர்கின்றது. அப்பொழுது கண்காட்சியும், மனப்பற்றும், தன் வேதனையும், தெளிவும் (பாம்புதான் என்று மதித்தலும், ஓட்டம் பிடித்தலும் ஒழுங்காய் நேர்ந்திருப்பினும் யாவும் திடீரென ஏககாலத்தில் நேர்ந்தனவாகவே மதிக்கப்படுகின்றது. தெளிவு கடிதில் ஏற்படும் விஷயங்களுள் காணங்களும் இந்திரியமும் குபீரெனத் தொழில் புரிவதாய்த் தோன்றும்.

தெளிவு கடிதிற் பிறக்காத விஷயத்துள் இந்திரியமும் காணங்களும் படிப்படியாய்த் தொழில் புரியும்.

உதாரணம்: சாயங்கால நேரத்தில் நடந்துகொண்டு போகும் ஓர் மனிதன் தன்னெதிரில் சிறிது தூரத்தில் ஏதுவோ ஒன்று நிற்பதைக் காண்கின்றான். அது குற்றியோ மனிதனோ என ஐயத்தை யுண்டாக்குகின்றது. முதலாவது நேர்ந்தது சுத்த இந்திரியக்காட்சி; இது மனதிற்குத் தன் வேதனையை யுண்டாக்கிற்று. மனம் நாடிற்று. நாடிய மனம் பற்றிற்று. பற்றுதலும் ஏதோ ஒன்று இருக்கின்றதெனும் திண்ணமான எண்ணம் பிறந்தது. அகங்காரம் குற்றிதானெனத் துணியப் பார்க்கின்றது. புத்தியோ "நிதானி, இன்னும் சிறிது நோக்குவம், உறுதி யேற்படுமெனச் சொல்லுகின்றது" உடனே ஓர் அசைவு அந்த ஐயப்பொருளினிடத்துக் காணப்படுகின்றது. அப்பொழுது குற்றியன்று என்பது உறுதி யடைகின்றது. பின்னர் அப்பொருட்கண்ணிருந்து ஒரு சொல் பிறத்தலும், புத்தியும் அகங்காரமும் கூடி இது நமது நண்பனல்லவா எனத் தீர்மானிக்கவும், தேகம் சென்று அந்த நண்பனைக் கட்டித் தழுவிக் கொள்கின்றது.

இந்திரியம் எதனை யேனும் பற்றிப் பிடித்து மனதிற்கு நாட்டத்தை யுண்டாக்கும்; மனம், பற்று ஒன்றுண்டென்னும் உறுதிப்பாடு பிறக்கின்றது; பின்னர் ஐயம் விளைகின்றது, பின்னர் தெளிவும், துணிவும் ஏற்படுகின்றன. The steps are sensation, feeling, outward rush of mind, mental grasp, certainty of the existence of an object, doubt as to its being this or that, clearance of doubt, certainty of determination.

கண்ணெதிர் நிற்காது மறந்துபோன ஓர் விஷயத்தைத் திடீரென உள் கண்ணானது கண்டு குருட்டுப்பிடி பிடித்து ஞாபகத்திற்குக் கொண்டு வருகின்றது. ஞாபக எல்லைக்குள் அவ்வியக்தமாய் வந்ததனை மனம்பற்றி இது ஒன்றெனத் துண்டித்து எடுக்கும். பின்னர் ஐயம் சிறிது சிறிதாய் விலக (இது அன்று, அதுவல்ல, அது வல்ல என்று நியதி களையப்பட்டு) கடைசியில் இது வெனத் தெளிவும், துணிவும் பிறக்கும்.

உதாரணம்: இருபது வருடங்களுக்கு முன்னர் ஓர் அற்புதமான பொருளை ஒரு இடத்திற் கண்டோம். அது அடிக்கடி தூண்டப்படாமையால் ஞாபக எல்லையை விட்டு நாளடைவில் மறந்து போயிற்று. தற்காலம் ஏதோ ஒரு ஞாபகத்தால் அந்தப் பொருள் அந்தர் திருஷ்டிக்குச் சற்று தென்படுகின்றது. அப்பொழுது ஏதோ அற்புதமான ஓர் பொருளை நாம் அவ்விடத்தக் கண்டது உண்டு; அது எப்பொருள் எனத் துணிதற்கு அகங்காரம் பிறக்கின்றது. உடனே மனம் (ஞானக்கண்) ஞாபக எல்லைக்குள் புகுந்து பற்றி உருவம் நன்கு விளங்காது தேய்ந்த ஓர் படத்தைப் புத்திக்குக் கொண்டு வந்து காட்டுகின்றது. இதன்மேல் ஐய நீக்கமும், தெளிவும், துணிவும் படிப்படியாக உண்டாகின்றன. ஆதலின் இறந்த காலத்தில் நடந்த நிகழ்ச்சிகளை நாடித் தெளிதலில் உறுதியை யுண்டாக்குதற்கு முதலில் நேர்வது இந்திரிய வியாபாரமே.

## 31-வது காரிகை

ஸ்வாம் ஸ்வாம் பிரதிபத்யந்தே பரஸ்பரா கூதஹேதுகாம் விருத்திம்—
புருஷார்த்தயே வஹேதுர்னகேன சித்கார்யதே கரணம்.

[இவ்வாறு நிகழ்கால விஷயங்களையும், இறந்த கால விஷயங்களையும், எதிர்கால விஷயங்களையும், அந்தக்கரணமும் இந்திரியமும் கூடி யெவ்வாறு அறிதற்கு இயைந்தன வென்பதனைக் காட்டுகின்றார்.]

ஒவ்வொன்றும் தம் தம் தொழிற்கண் பிரவர்த்திப்பதற்குக் காரணம், அவை பரஸ்பரம் ஓர் இச்சையால் தூண்டப்படுதலாம். இந்த இச்சையின் காரணம் புருஷனுடைய நன்மையைக் கருதியதே யாம்.

ஓர் காரணமேனும் வேறு ஏதேனும் ஒன்றாலும் தூண்டப்பட்டுத் தொழில் புரிவதன்றாம்.

உரை. ஒன்றைத் துணிந்து அறியுங்கால் கரணங்களுக்கும் இந்திரியங்களுக்கும் விருப்பமுளது. இந்த விருப்பத்தால் ஒன்று மற்றையதைத் துண்டித்தலும் தன் தொழில் புரியா நிற்கின்றது. இந்த விருப்பம் புருஷனுடைய நன்மையைக் கொடுப்பதற்காக ஏற்பட்டதாம்.

# கம்பர் மதம்

(தே. வீரராகவ அய்யங்கார்.)

ஒருகாலத்தில் நம் பாரதநாடு சிறப்புற்று உலகினுக்கோர் அணியாய் விளங்கிற்றேனும் இதுகாலைப் பரிதாபகரமான இழிநிலையிலிருக்கின்ற தென்பது தேற்றம். இந்தியாவிற் கேற்பட்டிருக்கும் பல்வித துரதிருஷ்டங்களில் தமிழன்னைக் கேற்பட்டிருக்கும் துரதிருஷ்டம் மிகப்பெரிதெனின் அது மிகையன்றாம். பண்டைக்காலத்தில் நம்மருந்தமிழன்னையை ஈடற்ற நூலருங் கலன்களால் அணி செய்த அருந்தமிழ் வாணர்களின் சரித்திரங்கள் அவ்வக்காலை வரைவாரற்று, இது போழ்து உண்மை யறிதற் கியலாவாறு மறைந்து கிடக்கின்றனதெனின் இதைக் காட்டிலும் தமிழ்த்தாய்க் கேற்படக் கூடிய குறை வேறொன்றுளதோ? கர்ண பாம்பரையாக வழங்கிவரும் காலற்ற சிறு கதைகளும், புலவர்களின் நூற்களுந்தான், அவர்களது காலம், மதம் முதலியவற்றை ஊகித்தறிய ஒரு சிறிது உதவி பயக்கின்றன. இவைகளாற்றுற் பெறப்படும் விஷயங்கள் பெரும்பாலும் ஐயப் பாட்டிற்கு மிடனுகும். ஏனெனின் ஒரு சைவரும் விஷ்ணு சம்பந்தமான வோர் நூலியற்றலாம். இதுபோன்ற சந்தர்ப்பங்களில் நூலாசிரியரின் மதத்தைக் கண்டறிவது இயலாதாம். ஆயினும் கிடைத்த ஆதாரங்களை விருப்பு வெறுப்பின்றி ஆய்ந்து துணிவதே அறிவோரின் செயலாகும்.

உதாரணமாகக் கம்பர் மதம் என்னும் பொருளை யாராய எடுத்துக் கொள்வோம். கம்பரைச் சைவரென் றுரைப்பார்களுளரேனும், இவர், ஸ்ரீவிஷ்ணுவி னம்சமாய் அவதரித்த ஸ்ரீ சக்கரவர்த்தி திருமகனாரின் சரிதையைத் தேனினுமினிய செந்தமிழ்ப் பாடல்களி லியாத்து, ஆங்காங்கே, ஸ்ரீ இராமபிரானே முத்தேவருக்கும் முதலாய பரம்பொருளென்று கவினுறத் தீட்டி யிருத்தலானும், வைணவ சமயாசிரியராகிய ஸ்ரீசடகோபரைப் பற்றியோர் அந்தாதி பாடி யிருத்தலானும், வெகு காலமாக "ஆழ்வார் என்னும் திருமாலடியார் பெயரால் இவரழைக்கப்பட்டு வருதலானும், இவர் மதம் வைணவ மென்பதைக் காய்த லுவத்த லின்றி ஆய்வார் ஒப்புக் கொள்வார். ஆயினும் இவர் மறந்தும் புறந்தொழா வைணவரா, இன்றேல் சமநோக்குடைய வைணவரா என்பதுதான் நம் ஆராய்ச்சியின் நோக்கமாகும்.

இவர் தம் அருமை மகனாருக்கு "அம்பிகாபதி" என்று பெயரிட்டிருந்ததை நோக்குங்கால் இவரைச் சிவதுவேஷியாகக் கருதற்குச் சற்று மிடமில்லை. அல்லாமலும் இராமாயணத்திலுள்ள ஒவ்வோர் காண்டத்திலும் இவர் சமரஸ நோக்குடைய வைணவரே என்பதை நிறுவுவதற் காதாரமாகப் பல பாக்களுளவேனும் விரிவஞ்சி சில பாடல்களையே நம்மாராய்ச்சிக் கெடுத்துக் கொள்கிறோம்.

முதன் முதலாகப் பால காண்டத்தின் தொடக்கத்தில் கடவுள் வாழ்த்துக் கூறப் போந்த கம்பர் தமக்கிஷ்ட தேவதை விஷ்ணுவாக விருப்பினும், அவரையே நேர்முகமாகக் குறிக்கும் சொற்களை உபயோகிக்காமல் எத்தேவருக்கும் ஒப்பாகச் சமரஸ நோக்குடன்,

"உலகம் யாவையும் தாம் உளவாக்கலும்
நிலை பெறுத்தலும் நீக்கலும் நீங்கலா
அலகிலா விளையாட் டுடையார் அவர்
தலைவர் அன்னவர்க்கே சரணங்களே."

என்று கூறி, படைத்தல், காத்தல், அழித்தல் ஆகிய முத்தொழில்களையும் தம் விளையாட்டாகக் கொண்டிருக்கும் ஒரு பரம் பொருளைத் தாம் வணங்குவதாக முடிக்கின்றார்.

தத்தம் கடவுளரே இம் முத்தொழில்களையும் செய்வதாக ஒவ்வொரு மதத்தவரும் சொல்வாரெனின் அதை மறுத்துரைக்க யாரே இயைவர். ஆகவே முதற் பாடலிலேயே தம்மதம் சமரஸமதம் என்பதைக் கவிஞர்பிரான் வெளியிட்டிருக்கின்றாரெனின் அதை மறுத்துரைக்கத் தொடங்கல் மதத் தடிப்பின்றி வேறென்னும்?

பின்னர்க் கையடைப் படலத்தில், இருடி விசுவாமித்திரன், தயரதன்பா லிராமனை வேண்டிச் சென்றவிடத்து, அயோத்தி மன்னன் அவனையாண்டடைந்த செய்தி வினயதற் குத்தரமாகச் சொல்லும்,

"..............பன்னகமும் நகுவெள்ளிப் பனிவரையும்
பாற் கடலும் பதுமபீடத்தன் நகரும்................"

என்ற முத்தேவர்களும் அகமகிழ்ந்து வீற்றிருக்கும் இடங்களை விளக்கும் சொற்றொடரில் தம் சமரஸ பாவனையை உய்த்துணரவைக்கு முறை கூர்ந்து நோக்கத் தக்கதாகும்.

மீட்டும் கொள்கையை வற்புறுத்துவார் போன்று, கிட்கிந்தா காண்டம் நாடவிட்ட படலத்தில் சுக்கிரீவன் வாயிலாக,

"அரனதிகன் உலகளந்த அரியதிகன் என்றுரைக்கும்
அறிவிலோர்க்குப் பரகதி சென்று அடைவரிய பரிசேபோல்"

என்ற வாசகத்தில், தேவதைகளிடம் உயர்வு தாழ்வுகளை கற்பித்தற் றகாதெனத் தெள்ளிய மொழிகளால் தம் சமரஸ தர்மத்தை நிலைநாட்டியிருக்கும் கம்ப நாட்டாழ்வார் மதிநலம் போற்றத்தக்கதாம்.

இத்துடன் நின்றனரோ கவிஞர் தலைவர்? இல்லை! இல்லை! தமது கொள்கை யாதோ வெனப் பின்னும் ஐயமுறக் கூடிய சந்தேகிகளுக்கு அறிவுச் சுடர் கொளுத்துவார் போன்று சுந்தர காண்டம் பிணிவீட்டுப் படலத்தில், அநுமான் இலங்கேசன் முன்னிலையில், தான்

"மூலமும் நடுவும், ஈறும் இல்லதோர் மும்மைத்தாய
காலமும் கணக்கும் நீத்த காரணன்; கைவிலேந்திச்
சூலமும் திகிரிசங்கும் காகமும் துறந்து தொல்லை
ஆலமும் மலரும் வெள்ளிப் பொருப்பும்விட்டு அயோத்தி வந்தான்."

என்று சொல்லும் விடையில், முத்தேவரும் ஸ்ரீதசரத ராமனே யன்றி வேறில்லை என்ற உண்மையையும், தம் சமரஸக் கொள்கையையும் மறைவின்றி வெளியிட்டிருப்பதை எவரே காணார்?

இறுதியாகத் தமது கொள்கையைப் பருவுருப்படுத்துவார் போன்று, கும்பகருணன் வதைப்படலத்தில்,

"உற்பத்தி அயனே யொக்கும்;
ஓடும்போது அரியே யொக்கும்;
கற்பத்தின் அரனே யொக்கும்
பகைவரைக் கலந்த காலை..................."

என்ற யாப்பில், இராவணன், அறந்தலை நிறுத்த அயோத்தியில் வந்த ஸ்ரீ இராம பிரானின் அத்திரமும் முத்தேவர்களின் தொழில்களாகிய ஆக்கல், காத்தல், அழித்தல் எனு மூன்றையும் தன்னிடத்துக் கொண்டிருப்பதாகக் கூறி, அவ் வத்திரத்தின் தலைவனைப் புகழ்வதில் சமரஸ மணங் கமழ்வதைப் பிடிவாதக் காரர்களாலன்றிப் பிறரால் எண்மையிற் காண முடியுமன்றோ?

இவை போன்று இன்னும் பல்வேறிடங்களில் கம்பர் தாம் வைணவரா யினும் சமரஸ நோக்குடைய ரென்பதைச் சுட்டியிருக்கின்றார். இவ் வுண்மையைத் துணிந்தேற்றுக் கொள்ளாத சிலர், அவர் பாடல்களைத் தம் கருத்திற் கேற்பத் திரித்து விரிக்க முயற்சி செய்து பூதம் பிடித்தவருக் கொப்பாகின்றனர். மேலும் தங்களது குறுகிய நோக்கத்தையும், தாம் கவியுள்ளத்தைக் காண வில்லை யென்பதையும் அதனாற் புலப்படுத்திக் கொள்கின்றார்கள்.

கடவுள் ஒருவரே. பலரல்லர். ஆனால் அவரது நாமரூபங்கள் எண்ணில. இவ்வுண்மையை எல்லா மதங்களும் ஒப்புக்கொள்ளுகின்றன.

"சர்வதேவ நமஸ்காரஃ கேசவம் பிரதிகச்சதி."
"ஏகோதேவஃ கேசவோவா, சிவோவா"

என்பனபோன்ற வட மொழித் தொடர்களும்,

"யாதொரு தெய்வங் கொண்டீர்
அத்தெய்வ மாகி யாங்கே
மாதொரு பாகனார் தாம்வருவர்..............."

என்ற சிவஞான சித்தியாரின் வாக்கும்,

"ஒன்றெனப் பலவென அறிவரும்
வடிவினுள் நின்ற
நன்றெழில் நாரணன் நான்முகன்
அரன் என்னுமிவரை
ஒன்றநம் மனத்து வைத்து உள்ளிநம்
மிருபசை யறுத்து
நன்றென நலஞ் செய்வது அவனிடை
நம்முடை நாளே"

என்ற ஸ்ரீசடகோபர் அமுதமொழியும், "அரியும் சிவனும் ஒன்று; அறியாதவர் வாயில் மண்ணு" என்னும் சாதாரண பழமொழியும் மக்களுக்குச் சமரச ஞானம் இருக்கவேண்டியது அத்யாவசியம் என்பதை வற்புறுத்தவில்லையா?

ஆராய்ச்சி செய்யின் மதத்துவேஷங்களும், மதக்கண்டன நூற்களும் இடைக்காலத்தில் விருத்தியடைந்தனவாகத் தோன்றுகின்றது.

பண்டைப் பாவலர்களிடத்து 'மதவெறி' இல்லையென்பதை வலியுறுத்த அவர்கள் நூற்களே போதிய சான்றும். அப்புலவர் பெருமக்களைப் போன்று கம்ப நாட்டாழ்வாரும்—இடைக்காலத்துக் கவிஞராயினும் சமரச ஞானத்துடன் விளங்கினர் என்பதே இச்சிறு வாராய்ச்சியின் முடிபாம்.




**காற்றில் ஓடும் நூதன வண்டி.**

பாரிஸ் நகரில் நூதனமாகச் செய்யப்பட்ட வண்டிகள் ஓடுகின்றனவாம். அவ்வண்டிகள் காற்றின் உதவியால் செலுத்தப் படுகின்றனவாம்.

***

**'ராஜா' தவளைகள்.**

ஜப்பானைச் சேர்ந்த தீவுகளில் உள்ள தவளைகள் 3-அடி உயர முதல் 5-அடி உயரம் வரை இருக்கின்றனவாம். அவைகள் 'ராஜா' தவளைகள் என வழங்கப்படுகின்றனவாம்.

***

**400-அடி உயர முள்ள மரம்.**

கலிபோர்னியாவில் 'சிகோரா' என்ற ஒருவகை மரம் இருக்கிறதாம். அதன் உயரம் 400-அடிகளும், அதன் அடிப்பாகத்தின் சுற்றளவு 100-அடிகளும் உடையதாக இருக்கிறதாம்.

***

**நாளொன்றுக்கு 80,000 முட்டைகளிடும் பூச்சி.**

மற்ற ஜீவராசிகளைவிட அதிக முட்டைகள் இடுவது கரையான் பூச்சிகளேயாம். ஒரு பூச்சி நாளொன்றுக்கு 80,000 முட்டைகள் விகிதம் ஒரு மாத காலம் வரை முட்டைகளிட்டுக்கொண்டே இருக்குமாம்.

***

**சுவாசாசயத்தில் பல அறைகள்.**

சுவாசாசயத்தில் 17-கோடி 50-லட்சம் சிறிய அறைகளிருக்கின்றனவாம். அதைப் பிரித்துவைத்தால், மனிதனின் தேகத்தைவிட 30-பங்கு அகலம் இருக்குமாம்.

***

**ஆண் சுக்கிலங் கூட இல்லாமல் கர்ப்பம்.**

ஹார்லார்ட் சர்வகலாசாலை டாக்டர் கிரிகரி பின்கஸ் என்பார், ஆண் சேர்க்கை மட்டுமல்ல; கர்ப்பம் உண்டாவதற்கு மிக முக்கியமான சுக்கிலங் கூட இல்லாமல் பெண்கள் கர்ப்பந்தரித்து குழந்தை பெறலா மென்பதைக் கண்டுபிடித்திருக்கிறார். அவர் தமது ஆராய்ச்சி முடிவைக் குழி முயல்களிடம் பரிக்ஷை செய்து பார்த்து வெற்றிபெற்றாராம். ஒரு பெண் முயலின் கழுத்து நரம்பில் மின்சார சக்தியைக் கொண்டு "சுரோணிதம்" வெளிப்படுத்தி, அதை வேறொரு பெண் முயலின் கர்ப்பப் பைக்குள் வைத்துக் கருவை வளர்த்தாராம். முடிவில் அம்முயல் ஒரு குட்டியை ஈன்றதாம். இவ்வெற்றியிலிருந்து அவர் மனிதர்களிடையேகூட இவ்வித முறையைக் கையாண்டு கர்ப்பமுண்டாக்கலாமெனக் கருதுகிறார். ஆனால், இதில் ஆண் உதவி சிறிதுமில்லாமையால் ஆண் குழந்தைகளைப் பெறச் செய்ய முடியாதாம்.




ஒரு அங்குல அகலமுடைய தேக்கு மரத்தை 160 சிதள்களாகப் பிரிக்கலாமெனக் கூறப்படுகிறது.

*　　*　　*　　*

பசுமாடுகள் தினமொன்றுக்குச் சராசரி 100 ராத்தல் புல் தின்றுகின்றனவாம்.

*　　*　　*　　*

இன்னிசை வாத்தியங்களில் துருத்தி வாத்தியமே மிகப் பழைமையானதென்று கூறப்படுகிறது.

*　　*　　*　　*

லண்டனிலுள்ள தேம்ஸ் நதியில் 188 மைல் தூரம் வரை கப்பல்கள் போகுமாம்.

*　　*　　*　　*

திடகாத்திர தேகமுள்ள மனித னொருவனுடைய இருதயத்தில் மணி ஒன்றுக்கு 540 ராத்தல் நிறையுள்ள ரத்தம் பாய்ந் தோடுகிறது.

*　　*　　*　　*

சாமுத்ரிகா லட்சணப்படி பெண்களின் உயரம் 5 அடி 2 அங்குலமிருக்க வேண்டுமாம்.

*　　*　　*　　*

எட்டுக்கால் பூச்சி தன் நிறையைப் போல் 27 மடங்கு நிறையுள்ள இரையைத் தினந்தோறும் தின்கிறதாம்.

*　　*　　*　　*

மக்கள் சாதாரணமாக உரையாடும் போது நிமிஷ மொன்றுக்கு 143 வார்த்தைகளைப் பேசுகிறார்கள் எனக் கணிக்கப் பட்டிருக்கிறது.

*　　*　　*　　*

இங்கிலாந்தில் முதன் முதலாக ஜேம்ஸ் I அரசரையே "ஹிஸ் மெஜஸ்டி" என அழைக்கப்பட்டது.

*　　*　　*　　*

பக்கிங்காம் அரண்மனையில் 150 கடியாரங்களும், வின்ட்ஸர் அரண்மனையில் 360 கடியாரங்களும் இருக்கின்றனவாம்.

*　　*　　*

கலிபோர்னியாவில் ரூத்கியூபிட் என்ற பெண், ஆதியில் ஏவான் நிர்வாணமாய் மரங்களில் வசித்து வந்ததைப் போல், தானும் நிர்வாணமாக மரக்கிளைகளில் வசித்து வருகிறாளாம்.

*　　*　　*　　*

ஜப்பானிலுள்ள ஆண்களும், குழந்தைகளும் பின்னல் துணி வேலைகளில் மிகவும் கெட்டிக்காரர்களாம். ரஷியப் பெண்களும் இவர்களுக்கு நிகரானவர்களே!

*　　*　　*　　*

# ஆசிரியர் குறிப்புக்கள்

## புதிய வைஸிராய் லார்டு லின்லித்கோ

ஏறக்குறைய தமது வாழ்நாளில் பெரும் பகுதியை பிரிட்டிஷ் ஏகாதிபத்திய ஊழியத்துக்கே அர்ப்பணம் செய்திருப்பவரான லார்டு வில்லிங்டன் இந்திய வைஸிராய் பதவியினின்றும் விடுதலை பெற்றுத் தாய் நாட்டுக்குச் சென்று விட்டார். அவருக்குப் பதிலாக டில்லியில் லார்டு லின்லித்கோ வைஸிராயாக வந்து அமர்ந்திருக்கிறார். பழைய வைஸிராய் பிரியும் போதும் புதிய வைஸிராய் பதவி ஏற்கும் போதும் முறையே இறுதிச் சொற்பொழிவும் முதற் சொற்பொழிவும் நிகழ்த்துவது சம்பிரதாயம். லார்டு வில்லிங்டன் தமது கடைசிச் சொற்பொழிவில் தமக்கிருந்த பொறுப்புக்களையும், கடமைகளையும், தம்முடைய ஆட்சிக் காலத்தில் நிகழ்ந்த விசேஷ சம்பவங்களையும் அடுக்கியிருந்தார். அவைகளைப் பற்றி விரிப்பதை அவ்வளவு முக்கியமாக நாம் கருதவில்லை. ஏன்? கடந்து போன விஷயங்களைப் பேசுவதில் என்ன பயன் விளையப்போகிறது? பொதுவாகப் புதிய வைஸிராயான லார்டு லின்லித்கோவைப் பற்றியும், அவரது சொற்பொழிவைப் பற்றியும் ஒரு சிறிது எடுத்துக்காட்டவே நாம் விரும்புகின்றோம். லார்டு லின்லித்கோ பேரும்புகழும் பெற்ற பரம்பரைப் பெருமைக்கு உரிமையானவர். இவருடைய தந்தையார் ஹோப் டௌன் 7-வது ஏர்ல் 1900 வது ஆண்டில் ஆஸ்திரிரேலியா பிரஜாதிபத்தியத்திற்கு முதல் கவர்னர் ஜெனரலாக நியமிக்கப்பட்டிருந்தார். லார்டு லின்லித்கோ இதற்கு முன் குறிப்பிடத்தக்க பெரிய உத்தியோகம் எதையும் பார்க்க வில்லையாயினும் உலகியலை நன்குணர்ந்தவர் என்றே புகழப்படுகிறார். "லார்டு லின்லித்கோவின் அறிவு நிலக்கரிச் சுரங்கத்திலிருந்து எளிது வித்தைகள் வரை பரவியிருக்கிறது" என்று ஒரு அறிஞர் இவரை வருணிப்பதிலிருந்து இவர் பல துறைகளிலும் ஊக்கமும் உற்சாகமும் காட்டுபவர் என்று தெரிகிறது. இவருக்கு இந்திய விவகாரங்கள் புதுமை இல்லை. சில ஆண்டுகளுக்கு முன் இந்திய விவசாயக் கமிஷன் தலைவர் ஹோதாவில் இந்தியா முழுவதிலும் சுற்றுப் பிரயாணஞ் செய்து இந் நாட்டு நிலைமையை உணர்ந்து கொண்டிருக்கிறார். வரப்போகும் புதிய சீர்திருத்த அரசியல் சட்டத்திற்கு முதற்காரணமாய் இருந்த பார்லிமெண்ட் கூட்டுக் கமிட்டித் தலைவராக விருந்தும் இந்திய விவகாரங்களை நுனித்தறிந்திருக்கிறார். எனவே, புதிய சீர்திருத்த அரசியல் அமலுக்கு வரும் சமயத்தில் இவரது நியமன நுட்பம் ஊன்றிக் கவனிக்கத் தக்கதாகும்.

---

## "நடுநிலைமையைக் கடைப்பிடிப்பேன்"

புதிய வைஸிராயரான லார்டு லின்லித்கோ ராஜ விசுவாசப் பிரமாணம் செய்து பதவி யேற்றவுடன் இந்திய மக்களுக்கு ரேடியோமூலம் ஒரு சொற்பொழிவு நிகழ்த்தினர். அந்தச் சொற்பொழிவு முழுவதிலும் மிகுந்த அநுதாப உணர்ச்சி ததும்பி நின்றது. "சட்டப்படி எனக்கு ஏற்பட்ட அதிகாரங்களைக்

கொண்டு நான் அச்சம், பாரபக்ஷம், குரோதம், தாக்ஷண்ணியம் இன்றி எல்லாருக்கும் நன்மை செய்யும் முறையில் எனது கடமையை நிறைவேற்றுவேன்'' என்று அவர் குறிப்பட்டது பெரிதும் பாராட்டத்தக்கதாகும். பலவேறு சமயங்களும், வகுப்புக்களும் மலிந்துள்ள இந்நாட்டில் எல்லாருக்கும் திருப்தி அளிக்கும்படியான முறையில் ஆட்சி புரிவது மிகுந்த சங்கடமான வேலையாகும் என்பதில் ஐயமில்லை. "எனக்கு ஆண்டவன் ஐந்து குழந்தைகளைத் தந்திருக்கின்றான். அவர்களில் ஒவ்வொருவருடைய இயற்கை ஒவ்வொருவிதமாக இருக்கிறது. அவர்களுடைய இயற்கையை யொட்டி அவரவர்களின் தேவைகளை நிறைவேற்ற நான் முயன்று வருகின்றேன். அவர்களிடம் எனக்கு அளவு கடந்த அன்பு இருக்கிறது. ஆனால் எனக்கு அதிகமாக வேண்டியவர் ஒருவர் உண்டு என்று சொல்லுவதற்கே இல்லை'' என்று புதிய வைஸிராய் வெளியிட்டிருப்பதிலிருந்து அவருடைய பாரபக்ஷமற்ற நடுநிலைமைக் குணம் இனிது விளங்கும். அவர் ஒரு வகுப்பாரை உயர்வாகவும் மற்ற வகுப்பாரைத் தாழ்வாகவும் கருதாமலிருக்கவேண்டிய அவசியத்தை உன்றி உணர்ந்திருப்பதைக் கண்டு நாம் மகிழ்கின்றோம். லார்டு வின்லித்கோ விவசாய விஷயத்தில் சிரத்தையுடையவர். அதற்கேற்ப அவர் இந்திய விவசாயிகளின்பால் அநுதாப உணர்ச்சி காட்டியிருப்பதும் கவனிக்கத்தக்கது. ஜில்லா அதிகாரிகள் கிராம வாசிகளோடு நேரடியான சம்பந்தம் வைத்துக்கொள்ளவேண்டும் என்று புதிய வைஸிராய் ஆசைப்படுகிறார். "ஜில்லா அதிகாரிகள் இனியாவது அதிகமாகச் சுற்றுப்பிரயாணம் செய்து கிராமவாசிகளின் கஷ்ட நஷ்டங்களை நேரில் அறிய ஏதாவது வழியுண்டா என்ற விஷயமாக நான் மாகாணக் கவர்னர்களுடன் கலந்து ஆலோசிக்க உத்தேசித்திருக்கிறேன். எத்தனை கஷ்டங்கள் இருந்தாலும் ஜில்லா அதிகாரிகள் கிராமங்களைப்பற்றிய விஷயங்கள் அனைத்தையும் அறிந்து கொள்ளுவது நலமாகும்'' என்பதிலிருந்து அவர் கிராமவாசிகளின் முன்னேற்ற அவசியத்தை எவ்வளவுதூரம் உணர்ந்திருக்கிறார் என்பது தெளிவாகும். மேலும், படித்தவர்களின் வேலையில்லாத் திண்டாட்டமும் புதிய வைஸிராயின் கவனத்தை ஈர்த்திருப்பது குறிப்பிடத்தக்கது. 'கற்றறிந்த வாலிபர்கள் பலருக்குத் வேலையில்லாத் திண்டாட்டம் அதிகமாக இருப்பதால் அவர்கள் மிகவும் வருந்துகிறார்கள். இந்தக் கஷ்டத்தைப் போக்க என்னால் என்ன செய்ய முடியும் என்பதை நான் முதலில் யோசிக்கப் போகிறேன். இவ்விஷயத்தில் சற்றுப் பரிகாரம் ஏற்பட்டுவிட்டால் அதுவே எனக்குப் பெரிய திருப்தியைஅளிக்கும்'' என்று அவர் காட்டியுள்ள அநுதாப உணர்ச்சி மகிழ்ச்சிக்குரியதாகும். இந்தியா முழுதும் ஒருமுகமாகக் கண்டித்து ஒதுக்கித் தள்ளும் புதிய அரசியல் சீர்திருத்தத்தை அமல் செலுத்த வந்திருக்கும் லார்டு வின்லித்கோ அதை எந்த முறையில் நிறைவேற்றுவார் என்பதை எல்லாரும் ஆவலுடன் எதிர்பார்த்துக் கொண்டிருக்கின்றனர். வைஸிராயின் பேச்சுச் சம்பிரதாயப் பேச்சாகப் போய்விடாமல் இருந்தால் ஓரளவு இந்திய மக்களின் நன்மதிப்புக்கு அவர் பாத்திரராவார் என்றே எதிர்பார்க்கலாம். வைஸிராய் பேச்சு முழுவதிலும் ஒரு புதிய மனமாறுதல் ஊடுருவிப் பாய்ந்து நிற்பது ஊன்றிக் கவனிப்பாருக்குப் புலப்படும். புதிய வைசிராய் பேச்சு காலச்சக்கர வேகத்தை உணர்ந்து அதற்கேற்ப இணங்கிப்போகும் பிரிட்டிஷ் அதிகாரவர்க்கத்தின் மனமாறுதலை உணர்த்தும் பேச்சாக நாம் கருதலாமா?

---

## நாகபுரி இலக்கிய சபைகள்

சமீபத்தில் நாகபுரியில் ஹிந்தி ஸாஹித்ய சம்மேளனத்தின் வெள்ளி விழா பாபுராஜேந்திர பிரஸாத் அவர்கள் தலைமையிலும், பாரதியஸாஹித்ய பரிஷத் காந்தியடிகள் தலைமையிலும் வெகு சிறப்பாக நடைபெற்றன. பாபுராஜேந்திரர் ஹிந்தியே இந்தியாவின் பொதுமொழியாகவேண்டும் என்று வற்புறுத்தினர். ஹிந்தி மொழியைப் புதிய முறையில் வளர்க்கவேண்டும் என்று எடுத்துக்காட்டினர். வேகமாக எழுதுவதற்குச் சௌகரியமான முறையில் ஹிந்தி எழுத்துக்கள் அமைந்திருக்கவேண்டும் என்று ராஜேந்திரர் கூறிய அறிவுரையைத் தமிழ்ப் புலவர்களும் கவனிக்கவேண்டும் என்று விரும்புகிறோம். ஏன்? தமிழ் எழுத்துக்களில் சீர்திருத்தம் ஏற்படவேண்டும் என்று தமிழன்பர் மகாநாட்டில் ஒரு தீர்மானம் வந்தபோது பண்டிதர்கள் துள்ளி விழுந்ததை நாம் நேரில் அறிந்தோம். இப்பொழுது ஒரு சாரார் தமிழ் வரிவடிவில் சில மாறுதல்களை ஏற்படுத்தி உபயோகிப்பதையும் பண்டிதர்கள் விரும்புகின்றார்கள் இல்லை. ஒரு மொழி புதிய முறையில் வளர்ச்சி பெறவேண்டுமானால் இத்தகைய சீர்திருத்தங்கள் இன்றியமையாதவை என்பதைச் சிறந்த அறிஞரான பாபுராஜேந்திரரும் ஒப்புக்கொண்டு விட்டது கவனிக்கத்தக்கதாகும். எத்தகைய இலக்கியங்கள் பெருகவேண்டும் என்பதைப் பாரதீய ஸாஹித்ய பரிஷத்தில் தலைமை வகித்த காந்தியடிகள் தெளிவாக எடுத்துக்காட்டியிருப்பதை எல்லாரும் கூர்ந்து கவனிக்கவேண்டும். "வகுப்பு ஒற்றுமை, ஒழுக்கம் முதலியவற்றை உண்டுபண்ணக்கூடிய நூல்கள் இந்நாட்டில் மலியவேண்டும். காம நூல்களை நான் வெறுக்கின்றேன். வகுப்புத் துவேஷங்களை ஊட்டும் வெளியீடுகளைப்போல் காம நூல்களும் நிராகரிக்கப்படவேண்டும். எனக்கு அதிகாரம் இருந்தால் நான் அப்படித்தான் செய்வேன்" என்று கூறியிருக்கிறார் காந்தியடிகள். தமிழில் ஒழுக்க நூற்களுக்குப் பஞ்சம் இல்லை' அப்படியே வகுப்பு வேற்றுமையையும் சமய வேற்றுமையையும் கிளப்பக்கூடிய நூல்களும் ஏராளமாக மலிந்திருக்கின்றன. இதற்குச் சைவம், வைஷ்ணவம், அத்துவைதம், சமணம், பௌத்தம் முதலிய சமயச் சார்பான நூல்கள் பிரத்தியக்ஷப் பிரமாணங்களாயிருக்கின்றன என்று கூறினல் பலருக்குக் கோபம் வரலாம். எனினும் உண்மையை மறைப்பதற்கில்லை. சிற்றின்ப உணர்ச்சியை ஊட்டக்கூடிய சில்லறை நூல்களும் தமிழில் மலிந்து வருகின்றன. உண்மைப் புலவர்கள் காந்தியடிகளின் உபதேசத்தைக் கடைப்பிடிக்க வேண்டும் என்று விரும்புகின்றோம். காந்தியடிகள் "இமயம் முதல் கன்னியாகுமரிவரை உள்ளவர்கள் எல்லாரும் ஒரே குழாம். எனவே எல்லா மொழிப் புலவர்களும் ஒன்றுபட்டுழைக்கலாம்" என்று கூறுகிறார். இதற்குத் தமிழ்ப்புலவர்கள் தயார்தானா என்று சிந்தித்துப் பார்க்குமாறு அவர்களைப் பணிவுடன் கேட்டுக்கொள்ளுகின்றோம். ஒரு மாகாணமொழியை மற்ற மாகாணத்தினரும் கற்றிருத்தல் ஒற்றுமைக்கு ஏதுவாகும் என்பது அடிகள் கருத்து. தமிழ்மக்களைத் தவிர மற்றவர்கள் எல்லாரும் அதற்கு இணங்கி வரலாம் என்றே நாம் கருதுகின்றோம். ஏன்? தமிழ்மக்கள் இந்தியாவின் பொதுமொழியாகிய ஹிந்தியைக் கற்பதில் எவ்வளவு சிரத்தை காட்டிக் கொண்டிருக்கிறார்கள் என்பதைக் கவனித்தாலே போதுமானது. இந்தியாவைப்போல் சாதி சமய வேற்றுமைகள் மிகுந்த நாடு உலகில் வேறொன்று இல்லை. மொழி வேற்றுமையும் நாட்டைப் பாழ்

படுத்திக் கொண்டிருக்கிறது. "எல்லாரும் இந்தியர்—எல்லாரும் இந்தியத் தாயின் மக்கள் — இந்தியத்தாய் பேசும் மொழி பதினெட்டுடையாள்— எனினும் சிந்தனை ஒன்றுடையாள்" என்று மேடைப் பிரசங்கம் செய்தல் எளிது. உண்மை என்ன? அவ்வளவும் வேற்றுமை மயம் என்பது கண்கூடு. மொழி வேற்றுமையாலும் பழக்க வழக்க வேற்றுமையாலும் ஒரு மாகாணத்தார் மற்ற மாகாணத்தாரைக் கண்டு கைகொட்டி நகைக்கும்படியான முறையிலேயே இன்னும் வாழ்ந்து வருகின்றோம். இதற்கெல்லாம் என்ன பரிகாரம்? பலவேறு தேசங்கள் அடங்கியது போன்ற இந்தியா ஒன்றுவதற்கு என்ன வழி? காந்தியடிகள் குறிப்பிட்டிருக்கும் வழியே சரியான வழியாகும். எல்லா மாகாணப் புலவர்களும் ஒன்று கூடிப் பொதுமை உணர்ச்சியைக் கிளப்புவதற்குப் பாரதீயஸாஹித்ய பரிஷத் நிர்வாகிகள் முயற்சி எடுத்துக் கொள்ளவேண்டும் என்று ஆசைப்படுகின்றோம்.

---

## கமலா நேருவின் ஞாபகச் சின்னம்

செல்வக் குடும்பத்தில் பிறந்து செல்வக் குடும்பத்தில் புகுந்தும் வாழ்நாள் முழுவதும் நாட்டுப் பணிக்கே அர்ப்பணம் செய்திருந்த வீரப் பெண்மணி ஸ்ரீமதி கமலா நேருவுக்குத் தகுந்த ஞாபகச் சின்னம் ஏற்படுத்த வேண்டிய முயற்சிகள் நடைபெறுகின்றன என்று அறிந்து மகிழ்கின்றோம். அந்த வீர மாதரசியின் பெயரால் ஒரு வைத்தியசாலை நிறுவப்படும் என்று தெரிகிறது. அவருடைய அருந்தொண்டுக்கு நன்றியறிதல் செலுத்தும் அறிகுறியாக நாட்டுமக்கள் எல்லாரும் மேற்படி ஞாபகச்சின்ன நிதிக்குத் தாராளமாகப் பொருளுதவி செய்யவேண்டும் என்று தமிழ் மக்களைக் கேட்டுக்கொள்ளுகின்றோம்.

---

## சென்னையில் பட்டாணியர் அதிக்கிரமம்

சென்னையில் முஸ்லிம்களில் ஒரு பிரிவினரான வட இந்தியப் பட்டாணியர்களின் நடமாட்டம் அதிகமாக இருப்பதைப்பற்றியும், அவர்கள் ஏழை எளிய மக்களிடம் லேவாதேவி செய்து துன்புறுத்தும் கோரங்களைப் பற்றியும் ஸ்ரீமான் வி. டி. அரசு. எம். எல். சி. அவர்கள் பத்திரிகைகளில் வெளியிட்டுள்ள செய்தியை நேயர்கள் கவனித்திருக்கலாம். சென்ற ஆண்டில் ஒரு டஜன் பேர்வழிகளாக இருந்த பட்டாணியர்கள் இப்பொழுது ஆயிரம் பேர்களுக்குமேல் வந்திருக்கின்றனர் என்று ஸ்ரீமான் வி. டி. அரசு ஊகித்துக் கணக்கிட்டிருக்கிறார். இவர்களுக்குச் சென்னையில் ஒரு நிலையான வியாபாரமோ தொழிலோ இல்லை என்பதையும், ஏழை எளிய மக்களிடம் கடன்கொடுத்து மனிதத்தன்மைக்கு ஒவ்வாத முறையில் வசூலித்து வருகிறார்கள் என்பதையும் அவர் கண்டறிந்து தெரிவிக்கிறார். "மடியைப் பிடித்து மாங்காய் போட்டுக் குடுமியைப் பிடித்துக் காசு வாங்குவது" என்னும் நாட்டுப் பழமொழிக்கு இணங்கப் பட்டாணியர்கள் லேவாதேவி நடத்துவதை அடக்கவேண்டும் என்றே நாமும்

விரும்புகின்றோம். ஏழைமக்கள் வசிக்கும் இடங்கள்தோறும், தொழிற்சாலைகள்தோறும் பட்டாணியர்கள் பணத்தை எடுத்துக் கொண்டுபோய் வலியக் கொடுத்துப் பிறகு கோரமான முறையில் வசூலிக்க முயல்வது கண்டிக்கத் தக்கதாகும். கடன் வாங்கிய ஏழை குறித்த தவணைப்படி பணம் கொடுக்கத் தவறினால் அவன்பாடு திண்டாட்டமே. நடுத்தெருவில் கழுத்தைப் பிடித்து நெரித்துக் குலுக்கல், தடிகொண்டு தாக்கல், சாட்டையால் வளாசல் முதலிய தண்டப் பிரயோகங்கள் செய்து பட்டாணியர்கள் கடன் வசூல்செய்து வருகிறார்களாம். இதற்கொரு விமோசனங் கண்டு ஏழை மக்களைக் காக்கவேண்டியது அரசாங்கத்தார் கடமை என்பதை நாமும் வற்புறுத்த விரும்புகின்றோம்.

---

## ஜஸ்டிஸ் வீரத்தொண்டரின் மறைவு

ஜஸ்டிஸ் கக்ஷியின் போக்கும், நடை முறைகளும் நமக்கு பிடித்தமில்லையாயினும் அக் கக்ஷிக் கொள்கையை உண்மை உணர்ச்சியுடன் நிறைவேற்றி வைக்கவும்-நாட்டில் பரப்பவும் அருந்தொண்டாற்றிய தியாகிகளின் பொதுநல உணர்வையும் அவர்கள் அடைந்த கஷ்ட நஷ்டங்களையும் அவமானங்களையும் வியந்து பாராட்டாமல் இருப்பதற்கில்லை. ஜஸ்டிஸ் கக்ஷியின் ஆரம்ப காலத்தில் தமிழ் நாடெங்கும் சுற்றுப் பிரயாணம் செய்து தங்கள் சொற்பொழிவுகளின் மூலம் மக்களுக்கு உணர்வூட்டிய வீரத் தொண்டர்களில் ஸ்ரீமான்கள் ஜே. என். ராமநாதனும், டி. வி. சுப்பிரமணியமும் தலை சிறந்தவர்களாவார்கள். ஸ்ரீமான் ராமநாதன் சுமார் $1\frac{1}{2}$ ஆண்டுக்கு முன்னர் உலக வாழ்வை நீத்தார். ஸ்ரீமான் டி.வி. சுப்பிரமணியமும் சென்றமாதம் காலில்பட்ட நெருப்புப் புண் வியாஜமாகச் சென்னை ஜெனரல் ஆஸ்பத்திரியில் மறைந்தார். ஸ்ரீமான் சுப்பிரமணியம் அஞ்சா நெஞ்சம் படைத்தவர். ஆவேசமும் உணர்ச்சியும் ததும்பும் பேச்சுக்காரர்—எழுத்துக்காரர். அவர் "திராவிடன்" ஆசிரியராகவும் விளங்கினர். ஜஸ்டிஸ் கக்ஷிப் பிரசாரத்தில் கல்லடிகளும் தடியடிகளும் பட்டும் இரத்தம் ஒழுக ஒழுகப் பிரசங்கம் செய்த காட்சியை நாம் அறிவோம். இத்தகைய வீரத் தொண்டரின் பிரிவுக்கு நாம் பெரிதும் வருந்துகின்றோம். ஜஸ்டிஸ் கக்ஷிப் பிரமுகர்கள் ஸ்ரீமான்கள் ஜே. என். ராமநாதன் அவர்கட்கும் டி. வி. சுப்பிரமணியம் அவர்கட்கும் தகுந்த ஞாபகச்சின்னங்கள் ஏற்படுத்துவதோடு அவர்களுடைய குடும்பத்தாருக்கும் பொருளுதவி செய்ய வேண்டும். ஆனால் அவர்கள் அப்படிச் செய்வார்களா? ஸ்ரீமான் சுப்பிரமணியத்தின் ஆன்மா சாந்தி அடைவதாக.





# லக்ஷ்மிபாய்

அல்லது

# ஆற்காட்டு முற்றுகை.

(எம். லக்ஷ்மண முதலியார்.)

(799-ம் பக்கத் தொடர்ச்சி.)

இது தான் போனால் போகட்டும். கழுத்தில் விழுந்த எல்லா புஷ்ப மாலைகளையும் விட்டு அந்தப்புர வாஸிகளிடமிருந்து வந்த ஒரு மாலையை மட்டும் எடுத்து இடைவிடாது முகர்ந்து ஆனந்த வெள்ளத்தில் அமிழ்ந்து நின்ற ஜெய வீர பாலனான அந்தப் "பத்தாம் நம்பர்" தான் யார்? வாசகர்களே, எங்கே, ஊகியுங்கள் பார்க்கலாம்!

## ஐந்தாம் அத்தியாயம்

பொன் ஜரிகையினால் விசித்திரமான பூவேலைகள் செய்யப்பட்ட உயர்வான வெல்வெட்டு அங்கி தரித்த ஓர் வாலிபன் மஹாராஜாவின் பக்கத்தில் நின்றுகொண்டிருந்தான். அவனது மார்பில் வீரப் பதக்கங்கள் ஜ்வலித்தன. அவனது வதனத்தினின்றும் வீசிய அதிசயமான பிரகாசமானது வைரப் பதக்கங்களினின்றும் எழும் ஜோதியை தோற்கடித்துக் கொண்டிருந்தது. தர்பாரிலுள்ள யாவரும் இந்த சுந்தர வாலிபனையே கண்சிமிட்டாமல் பார்த்தவண்ண மிருந்தனர். ஆனால் சர்தார் மாபத்கான் ஒருவனுடைய கண்களிலிருந்து மட்டும் பொறாமை என்ற தீப்பொரிகள் பறந்துகொண்டிருந்தன.

"சர்தார் ஹூசேன்கான்!" என்றார் மஹாராஜா.

ஹூசேன் தலைவணங்கி நின்றான்.

"நாம் நடத்திய போட்டிப் பந்தய விளையாட்டுகளில் பத்தாம் நம்பர் என்ற பெயரில் நீ உலகப் பிரசித்தியடைந்துவிட்டாய். இது நமது சமஸ்தானத்திற்கே பெருமை யளிக்கும் அல்லவா? உனது வன்மைக் கேற்றவாறு நீ நமது சமஸ்தானத்து சைனியத்தில் சர்தாராய் நியமனம் பண்ணப்பட்டதை அங்கீகரித்து நமது ராஜ்யத்திற்கு மேன்மேலும் கீர்த்தியும் பிரதாபமும் சம்பாதிப்பாயாக" என்று வாழ்த்தினார் ராஜா.

பண்டிதர்களும் புலவர்களும் அவனை வாழ்த்தினார்கள்.

மாபத்கானின் பொறாமை வரவர அதிகரித்துக் கொண்டேயிருந்தது. ஹூசேன் தனக்குப் போட்டியாகவும் தனது முன்னேற்றத்திற்குத் தடையாகவும் இருப்பதாக அவனது மனதில் பட்டது. அவனை ஒழித்துவிட ஏதாவது வழி இருக்கின்றதாவெனத் தேடுவதற்கு இப்பொழுதே அவனது தீய மனம் புறப்பட்டது.

"சர்தார் ஹூசேன்கான், உனது பேரில் நமக்கு ஏற்பட்ட வாஞ்சையினால் உனக்கு ஒரு அரிய சன்மானம் அளிக்கவேண்டும் என்று கருதியிருக்கிறோம். உனக்கு வேண்டுவதைக் கேள்" என்றார் ராஜா.

கொலுவில் வீற்றிருந்த அதிகாரிகளே பொறாமை யடைந்தார்கள் என்றால் சர்தார் மாபத்கானின் மனம் பொறாமையினால் பட்டபாட்டை நீங்களே ஊகித்துக்கொள்ளுங்கள். ஹூசேன் சற்று தயங்கினான்.

"அச்சமில்லாமல் உன் இஷ்டமானதைக் கேள்" என்று மன்னர் தைரியப் படுத்தினார்.

"மஹாராஜ்! எனக்கு சன்மானம் ஒன்றும் வேண்டுவதில்லை. எதற்காக என்னை மன்னிக்கவேண்டும். ஆனால் ஓர் குற்றவாளியை தண்டனையினின்றும் மன்னித்துவிடவேண்டும்."

"நல்லது. யார் அந்தக் குற்றவாளி? சீக்கிரம் தெரிவி. மன்னித்துவிட்டோம்."

"பந்தய விளையாட்டு நடந்த அன்று புத்தி பேதகத்தினால் செய்த குற்றத்திற்காக குரூபியான ஓர் பணியாளன் மரணதண்டனை விதிக்கப்பட்டு சிறையிலிருந்து வருகிறான். அவனது குற்றத்தை மன்னித்துவிட்டு அவனை எனது சேவகனாக வைத்துக்கொள்ளும்படிக்கும் அனுமதிக்கவேண்டுமாய் விண்ணப்பித்துக் கொள்கிறேன்" என்றான் ஹூசேன்.

"ஆஹா, அப்படியே" என்று மன்னர் கட்டளைப் பிறந்தது.

* * * *

அன்றிரவு நடுநிசியிருக்கும். அரண்மனை உப்பரிகைகளில் ஒன்றிலுள்ள தனது படுக்கையறையில் சர்தார் ஹுசேன்கான் தூக்கம் பிடிக்காமல் கைகளைப் பின்புறம் கட்டியபடியே அங்குமிங்கும் நடந்துகொண்டிருந்தான். சிறிது நேரத்திற்கு ஓர் முறை நின்று காது கொடுத்து எதையோ உற்றுக் கேட்பது போல் காணப்பட்டான். இவ்விதமாக ஒரு நாழிகை சென்றதும் அவன் எதிர்பார்த்த சப்தம் வந்தது. உடனே நின்றுவிட்டான். "டக்டக்" என்று மிகவும் மெதுவான சப்தம் கேட்க ஆரம்பித்தது. அவன் சந்தடியில்லாமல் கதவைத் திறந்துகொண்டு வெளியிலுள்ள மஹாலுக்கு வந்தான். அங்கு யாரும் இல்லை என்பதை குளோபர் வெளிச்சத்தினால் திண்ணமாய்த் தெரிந்துகொண்டான். பிறகு நேரே சென்று தனது புதிய சேவகனாகிய குரூபி தூங்கிக்கொண்டிருப்பதை சாளரத்தின் வழியாய்ப் பார்த்துவிட்டுத் திரும்பி அந்தஹாலின் நடுவில் திருக்குளம்போல் சலவைக் கற்களால் அமைக்கப்பட்டிருந்த இடத்திற்கு வந்தான். விசித்திரமான அந்த சிற்ப வேலையை என்னென்று சொல்வது! உண்மைத் தடாகத்தில் அநேகம் தாமரை புஷ்பங்கள் நன்றாய் மலர்ந்து இலைகளும் கொடிகளுமாய் அதை அலங்கரிப்பது போலவே அமைக்கப்பட்டிருந்தது. நமது இளம் வீரன் ஓர் புஷ்பத்தினிடம்

குனிந்தான். அதன் நடுவில் மகரந்தம்போல் மஞ்சள் நிறமாய் தோன்றிய ஓர் பளிங்குக்கல்லை தனது பெரு விரலால் அழுத்தினன். "கடக்" கென்ற சப்தத்துடன் அது உள்ளே அமுங்கியது. அந்த இடத்தில் ஒரு விரல் நுழையக்கூடிய ஒரு ரந்தரம் உண்டாகியது. அந்த ரந்திரத்தில் ஹூசேன் தனது விரலை நுழைத்து மாட்டித் தூக்கினன். உடனே மூன்று தாமரை இலைகளும் அதன் நடுவேயுள்ள ஓர் தாமரைப் புஷ்பமும் சேர்ந்து கையோடு வந்துவிட்டது. அந்த இடத்தில் ஓர் மனிதன் தாராளமாய் புகுந்து செல்லக்கூடிய ஒரு கள்ள வழி உண்டாகியது. இந்தக் கள்ள வாசலுக்கும் கீழே ஏக இருட்டாய் இருந்தாலும் அந்த இடத்திற்கும் மேலே எரிந்துகொண்டிருந்த ஒரு குளோபரின் வெளிச்சம் அந்தக் கள்ளவாசல் வழியாக கீழே சென்றபடியால் அங்கு ஒரு சுரங்க வழி இருப்பதாகத் தெரியவந்தது. அச்சுரங்கத்தின் வழியில் கருப்புத் துணியினல் சர்வாங்கமும் மறைத்துக்கொண்டு ஓர் உருவம் நின்றது. மேலே இருப்பது யார் என்பதை நன்ருய் உணர்ந்துகொண்ட பிறகு அந்த உருவம் வாசலுக்குச் சமீபத்தில் வந்து போர்வைக்குள்ளிருந்த தனது இரண்டு கைகளையும் மேலே நீட்டியது. ஆஹா! என்ன அழகு! பத்தரை மாற்றுப் பசும் பொன்னினல் செய்தவைகளோவென ஐயுறும்படி இருந்தன அந்த இரண்டு கரங்களும்! பசும் பொன்னின் அழகை அதிகப்படுத்துவது கருநிறமுள்ள வெல்வெட்டு அல்லவா? அவ்விதமே கருப்பு வெல்வெட்டுப் போர்வையினின்றும் புஜம் வரையில் நீட்டிக்கொண்டிருந்த அந்தக் கைகளின் அழகில் ஹூசேன் மயங்கினன். கைகளைக் கண்ட கண்கள் அந்தப் புனிதமான கைகளுக்குச் சொந்தமான பேரழகியின் வதனத்தைத் தேட ஆரம்பித்தன. மறுக்ஷணமே, கார்மேகத்தில் மறைபட்டிருந்த பூரணச் சந்திரன் அதினின்றும் விலகிப் பிரகாசிப்பதுபோல் அந்தப் போர்வையினின்றும் ஓர் சந்திரவதனம் உதயமாகியது. ஹா! ஹா! இந்தப் பேரழகி லக்ஷ்மிபாயைத் தவிர வேறு யாராய் இருக்க முடியும்?

"லக்ஷ்மீ!" என்ற தொனி ஹூசேனின் மூலாதாரத்திலிருந்து உகித்தெழுந்தது. அதைக் கேட்டு அம்மங்கை தன் சிரசை நிமிர்த்தினன். அவளது வதனத்தின் பிரகாசத்தில் குளோபர்களின் ஒளி மங்கியதுபோல் தோன்றியது. அவனுக்கு உடனே லக்ஷ்மிபாயின் கைகளைப் பற்றிப்பிடித்து மேலே தூக்கிவிட்டான். பிறகு கள்ள வாசலை முன்போல் மூடிவிட்டு இருவரும் ஒருவர் தோள்மேல் ஒருவர் கைபோட்டுக்கொண்டு உல்லாஸமாய் அவன் அறைக்கு வந்து சேர்ந்தார்கள். மகுடம் தாங்கிய மன்னர் வம்சத்தில் பிறந்தாலும் சுமைதாங்கும் ஏழைக் கூலியின் வயிற்றில் பிறந்தாலும், காதல் என்ற விலங்கில் சிக்கிய யாவரும் காமனுக்கு அடிமைகள்தானே!

"கல்யாணமாகாத கன்னிப் பெண்களுக்கும் வாலிபர்களுக்கும் மன்மதன் பொல்லாத பகைவனல்லவா? அவனை எதிர்த்து போராடி ஜெயிப்பதற்கு உங்களது இனிய முத்தம் ஏராளமாய் வேண்டியிருக்கும்! அதிகமாய் சில வழித்துவிடாமல் பத்திரப்படுத்தி வையுங்கள்" என்று வேடிக்கையாகச் சொன்னள் லக்ஷ்மிபாய்.

"ஒருவேளை அப்படியே சிலவழித்துவிட்டால் உன்னிடமிருந்து பெற்றுக்கொள்கிறேன்" என்று அதற்குத் தக்க பதில் சொன்னன் ஹூசேன்.

"நாம் இருவரும் ஒன்று கூடிவிட்டால் மன்மதன் புறமுதுகுகாட்டி ஓடுவான்" என்றாள் இளவரசி. அவளது குரல் பஞ்சமத்தில் மீட்டும் யாழின் தொனியைவிட அதிக இனிமையாய் இருந்தது.

"அப்படியானால் மன்மதன் நம்மிடம் புறமுதுகு காட்டி ஓடும் நாள் எப்போது வரும்?" என்று ஹுசேன் சொன்னதும் யாரோ நடமாடுவது போன்ற அரவம் கேட்டது. உடனே ஹுசேன் எழுந்தான். அவன் கை வாளின் பிடிமேல் இருந்தது. அறையைவிட்டு மஹாலுக்கு வந்தான். எங்கும் சுற்றிப் பார்த்தான். ஒருவரும் காணப்படவில்லை.

"ஒன்றுமில்லை. காற்றினால் ஏதாவது ஓசைப்பட்டிருக்கும்" என்றாள் இராஜகுமாரி.

"ஆம். நானும் அப்படித்தான் நினைக்கின்றேன்" என்றான் ஹுசேன்.

"வேறு ஏதாவது விசேஷம் இருந்தால் சொல்லுங்கள்."

"ஒரு விசேஷமும் இல்லை. ஆனால் எனக்கு இந்த ராஜ்யத்தில் ஒரு படைத் தலைவன் உத்தியோகம் கொடுத்திருக்கிறார்கள்."

"பலவானுக்கு பெருமை சேர வேண்டியதுதானே?"

"நானா பலவான்? என்னைவிட பலவான் ஒருவன் இருக்கின்றான். அன்று என்னை ஒரு கிழவன் ஜெயித்துவிடவில்லையா?"

"ஆம், ஆம். அந்தக் கிழவன் யார்?"

"நானும் அதுதான் தெரியாமல் அலைகிறேன். அந்த அதிசய மனிதன் எப்படி வந்தாரோ அதேவிதமாக மறைந்துவிட்டார். ஆஹா! மிகவும் அற்புதமாய்ச் சண்டை செய்தார். இப்போது எனக்குக் கிடைக்கிற கீர்த்தி முழுவதும் உண்மையில் அவரைச் சேரவேண்டியதே. என் அவர் தன்னை இன்னாரென்றுகூட காண்பித்துக் கொள்ளாமல் மாயமாய்ப் போய்விட்டார்."

"ஒரு சமயம் அவர் உங்களுடைய நன்மைக் கருதியே தன் பெயரை வெளியிடாமல் இருந்துவிட்டாரோ?"

"அப்படி எனக்கு உபகாரியாய் இருந்தால் பிறகாவது என்னை சந்தித்திருக்கமாட்டாரா?"

"என் ஒரு வேளை நமது அரண்மனைக்குள் ஒருவராய் இருக்கக் கூடாதா?"

"நான் இந்த அற்புத மனிதனைப் பற்றி மஹாராஜாவினிடம்கூட விசாரித்துவிட்டேன்."

"அவர் என்ன சொன்னார்."

"தனக்கும் தெரியவில்லை யாதலால் தாமும் தேடிக்கொண்டிருப்பதாகவே சொல்கிறார். ஆனால் அந்த மனிதன் யாராய் இருந்தாலும் சரி, அவர் அதிபராக்ரமசாலி என்பதில் கொஞ்சமேனும் சந்தேகமில்லை."

"ஆனால் நமது மஹாராஜாவுக்கு ஈடான பராக்ரமசாலி இந்திய நாட்டிலேயே யில்லை என்பது உங்களுக்குத் தெரியுமல்லவா?"

"ஆம்; அவருடன் நான் ஒருதரம் குஸ்தி செய்யவேண்டும்."

---

# " ஆனந்தபோதினி " பஞ்சாங்கம்.

தாதுஞு வைகாசிமீ—கலியுகாதி 5038, சாலிவாகனம் 1859,
பசலி 1345, கொல்லமாண்டு 1111, ஹிஜரி 1355,
இங்கிலீஷ் 1936ஞு மேமீ—ஜூன்மீ

| வைகாசிமீ | மேமீ | வாரம். | திதி. | நக்ஷத்திரம் | யோகம். | விசேஷங்கள். |
|---|---|---|---|---|---|---|
| 1 | 14 | வியா | அஷ்42-88 | அவி41-40 | சி41-40ம | விஷ்ணுபதி புண்யகாலம் |
| 2 | 15 | வெள் | நவ37-48 | சத38-28 | சித்60 | சீமந்தம், சுப முகூர்த்தம் |
| 3 | 16 | சனி | தச30-58 | பூர33-55 | ம33-45சி | ஏற்றம் ஸ்தாபிக்க [கம் |
| 4 | 17 | ஞா | ஏகா23-38 | உத்28-33 | அமி60 | சர்வ, மத்வ ஏகாதசி, விவா |
| 5 | 18 | திங் | து15-38 | ரே22-28 | சித்60 | பிரதோஷம்,தான்யம் செல |
| 6 | 19 | செவ் | திர7-13<br>சது58-45 | அஸ்16-5 | சித்60 | மாச சிவராத்திரி, [விட<br>அவமாகம் [திகை |
| 7 | 20 | புத | அ● 50-48 | ப✲9-45 | சித்9-45அ | சர்வத்திர அமாவாசை,கிருத் |
| 8 | 21 | வியா | பிர43-43 | கிரு3-55<br>ரோ59-3 | மர60 | ஜேஷ்டசுத்தம், மிதுனயன<br>நா-14-20, 8-க்குள் மழை |
| 9 | 22 | வெள் | துதி37-48 | மிரு55-3ப | சித்60 | சந்திர தெரிசனம் |
| 10 | 23 | சனி | திரி33-33 | திரு53-40 | சித்60 | கல்கிஜயந்தி,பலராமஜயந்தி |
| 11 | 24 | ஞா | சது30-58 | புன53-35 | சித்60 | மாச சதுர்த்தி விரதம் |
| 12 | 25 | திங் | பஞ்30-13 | பூச55-25 | சித்60 | |
| 13 | 26 | செவ் | சஷ்31-0 | ஆயி59-3 | சித்60 | |
| 14 | 27 | புதன் | சப்34-23 | மக60 | சித்60 | |
| 15 | 28 | வியா | அஷ்38-45 | மக4-10 | அ4-10சி | |
| 16 | 29 | வெள் | நவ44-8 | பூர10-40 | சித்60 | |
| 17 | 30 | சனி | தச49-58 | உத்17-45 | மர60 | |
| 18 | 13 | ஞா | ஏகா55-53 | அஸ்25-8 | அ25-8சி | |
| 19 | 1936௵ ஜூன்மீ 1 | திங் | துவா60 | சித்32-15 | பி32-15அ | |
| 20 | 2 | செவ் | து1-20 | சுவா38-40 | சி38-40ம | |
| 21 | 3 | புதன் | திர6-8 | விசா44.33 | சித்60 | |
| 22 | 4 | வியா | ச○9-58 | அனு49-25 | சி49-25பி | பௌர்ணமி, ரிஷப பூஜை |
| 23 | 5 | வெள் | பவு12-48 | கே53-5 | ம53-5அமி | குளம் கிணறு வெட்ட |
| 24 | 6 | சனி | பிர14-20 | மூல55-48 | சித்60 | ஜேஷ்டபகுள, பிரயாணம் |
| 25 | 7 | ஞா | துதி14-53 | பூரா57-23 | சி57-23அ | கணிதாரம்பம் செய்ய |
| 26 | 8 | திங் | திரி14-23 | உத்57-48 | ம57-48அ | சங்காஷ்ட சதுர்த்தி |
| 27 | 9 | செவ் | சது12-50 | திரு57-23 | சித்60 | வியாதியஸ்தர் குளிக்க |
| 28 | 10 | புதன் | பஞ்10-8 | அவி55-48 | பி55-48சி | வியாதியஸ்தர் மருந்துண்ண |
| 29 | 11 | வியா | சஷ்6-33 | சத53-20 | மர53-20சி | தானியம் செலவிட |
| 30 | 12 | வெள் | சப்2-3<br>அஷ்56-45 | பூர50-3 | சித்60 | திரிலோசன பூஜை, அவமா<br>கம், மந்திரம் ஜெபிக்க |
| 31 | 13 | சனி | நவ50-43 | உத்46-5 | சித்46-5ம | யாத்திரை,பிரயாணம் செய் |

| | சுக் | ஞாயி-செ புதன் | கே |
|---|---|---|---|
| சனி<br>— | 11-ரிஷ-சுக் | | — |
| ராகு | குரு | | |

PRINTED & PUBLISHED BY N. MUNISAWMI MUDALIAR,
AT THE "ANANDA BODHINI" PRESS.
NO. 6, LAWYER CHINNATHAMBI MUDALI STREET, MADRAS

உ
ஓம்
பரப்பிரஹ்மணே நம:

# ஆனந்தபோதினி.

"எப்பொரு ளெத்தன்மைத் தாயினு மப்பொருண்
மெய்ப்பொருள் காண்ப தறிவு"—திருவள்ளுவர்.



| | | |
|---|---|---|
| தொகுதி 21 | தாது ௵ ஆனிமீ ௧ உ<br>1936 ௵ ஜூன்மீ 14உ | பகுதி 12 |

## கடவுள் வணக்கம்

ஆசையெனும் பெருங்காற்று டிலவம்பஞ் செனவுமன
தலையும் காலம்
மோசம்வரு மிதனாலே கற்றதுங்கேட் டதுந்தீர்ந்து
முத்திக் கான
நேசமுநல் வாசமும்போய்ப் புலனாயிற் கொடுமைபற்றி
நிற்ப ரந்தோ
தேசுபழுத் தருள்பழுத்த பராபரமே நிராசையின்றேற்
றெய்வ முண்டோ. (1)

இரப்பானங் கொருவனவன் வேண்டுவகேட் டருள்செயென
வேசற் றேதான்
புரப்பான்ற னருளடி யிருப்பதுபோ லெங்குநிறை
பொருளே சேனாய்
மரப்பான்மை நெஞ்சினன்யான் வேண்டுவகேட் டிரங்கெனவே
மௌனத் தோடங்
தரப்பான்மை அருணிறைவில் இருப்பதுவோ பராபரமே
சகச நிட்டை. (2)

சாட்டையிற் பம்பர சாலம் போலெலாம்
ஆட்டுவா னிறையென அறிந்து நெஞ்சமே
தேட்டமொன் றறவருட் செயலி னிற்றியேல்
வீட்டறந் துறவறம் இரண்டு மேன்மையே. (3)

வெந்துவெடிக் கின்றசிந்தை வெப்பகலத் தண்ணருளாய்
வந்துமொழி கின்ற மழைகாண்ப தெந்நாளோ? (4)

# அரும்பொருள் விளக்கம்

1. இதனால் ஆசையின் கேட்டையும், நிராசையின் சிறப்பையும் கூறுகின்றார்.

(இ-ள்.) ஆசை என்று சொல்லப்படுகின்ற பெருங்காற்றில் இலவம் பஞ்சு அலேவது போலவும் மனமானது அலேயுங்காலத்தில் மோசம் நேரிடும். இதனாலே கற்றவையும், கேட்டவையும் வீணாகி மோக்ஷத்திற்கான விருப்பமும் நல்ல க்ஷேத்திரவாசமும் நீங்கி, ஐம்புலன் வழியாகி, கொடுமையான சமுசாரத்தில் அழுந்திக் கட்டுண்டு நிற்பர். ஆதலால் ஒளிமிகுந்து அருள் பெருகிய பராபரமே! ஆசையின்மை இல்லேயானால் ஒருவனுக்குத் தெய்வம் உளதாகுமோ? என்க.

ஒருவனுக்கு நிராசை யுண்டானாலன்றித் தெய்வ உண்மை விளங்காதென்பதாம். இதனை "ஆசையும் அன்பும் அறுமின் அறுத்த பின், ஈசன் இருந்த இடம் எளிதாமே" என்ற திருமூலர் திருவாக்கானும் நன்கு தெளியலாம்.

2. இதனால் சகச நிட்டையின் தன்மை கூறுகின்றார்.

(இ-ள்.) எங்கும் வியாபகமான வஸ்துவே கேட்பாயாக. பராபர வஸ்துவே! யாசகம் செய்பவனாகிய ஒருவன் தனக்கு வேண்டுவனவற்றைக் கேட்டுக் கிருபை செய்தருளவேண்டும் எனப் பழிப்பற்று ரக்ஷிப்பவனுடைய கிருபையை நாடி யிருப்பதுபோல், மரத்தின் தன்மை வாய்ந்த செஞ்சினனாகிய நான் விரும்புமவற்றைத் திருச்செவி சாத்தி இரங்கி யருள்வாய் என்று மௌனநிலேயுடன் ஆகாயத்தின் தன்மை அமைந்த தேவரீர் திருவருட் பூரண நிலேயில் இருப்பதுதானே அடியேனுக்குச் சகச நிஷ்டை என்று சொல்லப்படுவது?

இரப்போன் கொடையாளியின் அருள் ஒன்றினையே நாடி, வேறொன்றிலும் மனத்தினைச் செலுத்தாது அக் கொடையாளியையே எண்ணி வாழ்த்தல்போல் முதல்வன் திருவருள் ஒன்றினையே நாடி வேறு முகத்தில் சிறிதும் அறிவைச் செலுத்தாது அவ்வருள் வியாபகத்திலேயே இருத்தல் சகச நிட்டை என்பதாம்.

3. இதனால் இல்லறம் துறவறம் ஆகிய இரண்டும் மேன்மை ஆகும் சந்தர்ப்பத்தைக் கூறுகின்றார்.

(இ-ள்.) மனமே! கயிற்றினு லாட்டபடுகின்ற பம்பரக்கூட்டங்களைப் போல் எல்லா உயிர்களையும் முதல்வன் ஆட்டுவிப்பான் என்று தெரிந்து, கவலே யொன்று மில்லாது திருவருட் செய்கைக் குட்பட்டு நிற்பாயாகில் இல்லறம் துறவறம் ஆகிய இரண்டறங்களும் மேன்மை யுடையனவே என்க.

(இ-ள்.) அஞ்ஞானத்தால் வெந்து மோகத்தால் வெடிக்கின்ற என் மனவெம்மை நீங்கக் குளிர்ச்சி பொருந்திய திருவருளே சொரூபமாகப் பெய்கின்ற மழையைத் தரிசிப்ப தெந்நாளோ" என்க.

---




# இயற்கை வைத்தியம்





மாக்களினின்றும் மக்களை வேறாக மதிக்கச் செய்வது மக்களிடம் இயற்கையாக விளங்கும் பகுத்தறிவு அல்லது காரண காரிய உணர்வு எனச் சுருக்கமாகக் கூறலாம். மக்கள் பகுத்தறிவின் வன்மையால் நாகரிகம் எனப்படும் செயற்கை வாழ்வின் உச்ச நிலையை எட்டிப் பார்த்துக் கொண்டிருக்கின்றனர். நாகரிக மக்கள் இயற்கையின் தொடர்பை அறுத்துக் கொண்டு வெகு தூரம் விலகிப் போய் விட்டனர். இக்கால மக்கள் வாழ்க்கை முழுவதும் செயற்கை மயம். தங்களுக்கு இயற்கையாக அமைந்துள்ள பகுத்தறிவாற்றலால் மக்கள் இயற்கையை வயப்படுத்தி அதனை ஏவல் கொள்ள முனைந்து நிற்கின்றனர். இறுதியில் இபற்கை வெல்லுமா? பகுத்தறிவு வெல்லுமா? என்பது ஆழ்ந்த ஆராய்ச்சிக்குரிய சிக்கலான பிரச்சினை ஆகும்.

உயிர் வாழ்க்கைக்குக் காற்று, நீர், ஒளி, உணவு, உழைப்பு முதலியன இன்றியமையாத சாதனங்கள். நாகரிக மக்கள் இவைகளை ஒழுங்கான முறையில் பயன்படுத்துகின்றனரா என்னும் உண்மையை ஒவ்வொருவரும் ஊன்றிக் கவனிக்கக் கடமைப்பட்டிருக்கின்றனர். நகரங்களில் வசிக்கும் மக்கட்கு நல்ல காற்று இல்லை. நல்ல ஒளி இல்லை. நல்ல தண்ணீர் இல்லை. பார்வைக்கு அழகான மாட மாளிகைகள் பகுத்தறிவின் வன்மையைக் காட்டுமாயினும் உடல் நலத்திற்கு உதவி செய்கின்றன என்று கூற முடியாது. காற்றையும் ஒளியையும் அடைத்துப் புழுக்கம் கொடுக்கும் மாட மாளிகைகள் மலைகளைப் போல் இருந்து பயன் என்ன? அவைகளில் வசிக்கும் பெண்களும் குழந்தைகளும் இருட்டு வீட்டுப் பல்லிகளைப் போல் காலங் கழிக்கின்றனர். நோய்க் களஞ்சியங்களாய் இருக்கின்றனர். இந் நிலையில் புதிது புதிதான பொருந்தா உணவு வகைகளும் பானவகைகளும் தோன்றி மக்களை அடிமைகளாக்கிப் பாழ்படுத்திக் கொண்டிருக்கின்றன. நகர மாந்தர்க்கு உடல் உழைப்புச் செய்ய

வாய்ப்பு இல்லை. பகலை இரவாக்குவதும் இரவைப் பகலாக்குவதும் சகஜமாகி விட்டன. இக் காலத்தில் எல்லாத் துறையிலும் கிராமங்களும் நகரங்களையே பின்பற்றிக் கொண்டிருக்கின்றன. செல்வர்களும் நடுத்தர வகுப்பினரும் மேற்குறிப்பிட்டபடி இயற்கையை மீறிக் கொண்டிருக்கின்றனர். ஏழை மக்கள் சற்றே இயற்கையோடு இயைந்து வாழ்க்கை நடத்துகின்றனராயினும் அவர்களைப் பற்றி நிற்கும் வறுமைப் பேயானது பல விதத்திலும் ஆட்டி வைத்துக்கொண்டிருக்கின்றது. செல்வர்களும் நடுத்தர வகுப்பினர்களும் நாகரிக ஆடம்பர உணர்ச்சி மேலீட்டால் பொருந்தா உணவு வகைகளை மிதமிஞ்சி அருந்தல், பொருந்தா மாடமாளிகைகளில் வசித்தல், ஒவ்வாத ஆடைகளை அணிதல், உடல் உழைப்பு இன்றி இருத்தல் போன்ற செயல்களால் இயற்கைக்கு மாறுபட்ட வாழ்க்கையை மேற்கொள்ள வேண்டியவர்களாய் இருந்து வருகிறார்கள். ஏழை மக்கள் போதிய உணவின்றி வருந்தல், போதிய இருப்பிட வசதிகளின்றி ஏங்குதல், போதிய ஆடையின்றி வாடல், வரம்பு கடந்த உடல் உழைப்புக்களை ஏற்றல் போன்ற செயல்களால் இயற்கைக்கு மாறுபட்ட வாழ்க்கையை மேற்கொள்ள வேண்டியவர்களாய் இருந்து வருகிறார்கள். இக் கால மக்கள் இயற்கை வரம்பைக் கடந்து வாழும் நிலைமைகளையெல்லாம் விரிக்கிற் பெருகும் என்று அஞ்சியே முக்கியமான சிலவற்றைக் குறிப்பிட்டோம். இவ்விதம் இயற்கை ஒழுங்கை மீறி வாழும் மக்கள், உலகத்தைத் துன்பமயமாகக் காண்கிறார்கள். இந்த உலகத்தில் ஏன் பிறந்தோம் என்று ஏங்குகின்றார்கள். அற்ப ஆயுளில் மடிகின்றார்கள்.

பகுத்தறிவின் பயனாகவும் விஞ்ஞானத்தின் பயனாகவும் எல்லா நாடுகளிலும் மருந்து வகைகள் கண்டுபிடிக்கப்பட் டிருக்கின்றன. அலோபதி, ஹோமியோபதி, யூனானி, ஆயுர் வேதம், சித்தர் முறை, சிந்தாமணி முதலிய வைத்திய முறைகளில் ஏராளமான மருந்துகள் கண்டுபிடிக்கப்பட் டிருக்கின்றன. மக்களின் நோய்களையும், நோய்க் காரணங்களையும், நோய் நீக்கும் முறைகளையும்பற்றிக் கூறும் நூல்கள் ஒவ்வொரு வைத்தியத்திலும் வண்டி வண்டியாகப் பாரம் ஏற்றத்தக்க விதமாய்க் குவிந்து கிடக்கின்றன. ஒவ்வொரு நாட்டிலும் அரசாங்கங்களும், ஸ்தலஸ்தாபனங்களும், தனிப்பட்ட தரும ஸ்தாபனங்களும் மக்கள் நோய்களைப் போக்கும் பொருட்டும், அவர்களுக்குரிய சுகாதார சௌகரியங்களின் பொருட்டும் ஏராளமான பொருளைச் செலவு செய்து வருகின்றன. இவ்வளவு இருந்தும் நாகரிக மக்கள் சமூகம் நோய்க்களஞ்சியமாய் இருத்தல் கண்கூடு. ஏதேனும் ஒரு நோயேனும் இல்லாத மனிதனைக் காண்பது அருமையிலும் அருமையாயிருக்கிறது. மக்கட்கு வயது நூறு என்பது ஏட்டளவே ஒழிய அநுபவத்தில் இல்லை. செல்வமும், சுதந்தரமும், விஞ்ஞானமும், சுகாதார சௌகரியங்களும் மேலோங்கி யிருக்கும் நாடுகளிலேயே

சராசரி மனிதன் வாழ்வு நாற்பது ஐம்பதாண்டுகளாக இருக்கிறது. இனி, அடிமையும், வறுமையும், அறியாமையும் குடிகொண்டிருக்கும் இந்தியாவைப் போன்ற நாடுகளைப்பற்றி விரிக்கவும் வேண்டுமோ? இந்தியாவில் சராசரி மனிதன் வயதெல்லை இருபத்தைந்து ஆண்டுகளுக்குமேல் இல்லை. இதற்கெல்லாம் மூலகாரணம் என்ன? ஏதோ ஒருவிதமாய் இயற்கை வரம்பு கடத்தல் ஆகும் என்பதை எவரேனும் மறுக்கத் துணிவரோ? இவ்வுண்மையை ஒரு உதாரண வாயிலாகவும் விளக்கிக் காட்ட முயல்கின்றோம்.

விலங்கினங்களின் வாழ்க்கையைக் கூர்ந்து கவனியுங்கள். மிருகங்கட்கும் பறவைகட்கும் பகுத்தறிவில்லை; கல்வியில்லை; விஞ்ஞான அறிவில்லை; நாகரிகம் இல்லை; வைத்திய சாஸ்திரங்கள் இல்லை; பதார்த்தகுண சிந்தாமணிகள் இல்லை; ஜீவசத்து உணவு ஆராய்ச்சிகள் இல்லை. எனினும் அவை நோயற்ற வாழ்வாகிய குறைவற்ற செல்வத்தை அநுபவித்துக் கொண்டிருக்கின்றன என்னும் உண்மையை எவரேனும் எளிதில் மறுக்க முன்வருவரோ? அவையெல்லாம் இல்லாத மிருகங்களும் பறவைகளும் நோய்வாய்ப்பட்டும், எல்லாம் உள்ள மக்கள் நோய் இன்றியும் அன்றோ இருத்தல் வேண்டும்? மாறாக இருக்கக் காரணம் என்னை என்பதை எத்தனை மக்கள் சிந்திக்கின்றனர்?

மக்கள் நோய்க்களஞ்சியங்களாய் இருப்பதற்கு அவர்கள் இயற்கை வரம்பைக் கடந்து வாழ்வதே காரணம். மிருகங்களும் பறவைகளும் நோயின்றி இன்ப வாழ்வில் திளைப்பதற்கு அவை இயற்கையோடு இயைந்து வாழ்வதே காரணம். இவ்வுண்மை இக்காலத்தில் சிறிது சிறிதாக உணரப்பட்டு வருகின்றது. அமெரிக்காவிலும் ஐரோப்பாவிலும் "இயற்கைக்குத் திரும்புக" என்ற இயக்கம் நாளுக்கு நாள் செல்வாக்குப்பெற்று வருகிறது என்று தெரிகிறது. மேனாடுகளில் ஆங்காங்குத் தலைகாட்டிக்கொண்டிருக்கும் நிருவாண இயக்கமும் இயற்கையின் சிறப்பை வற்புறுத்துவதே. ஆனால் அந்த இயக்கத்தைப்பற்றிய சாதக பாதகங்களை விரித்துரைப்பது இத்தலையங்கத்தின் நோக்கம் அன்று. அதைப்பற்றிச் சமயம் நேர்ந்தபொழுது எழுதுவோம். இயற்கை வைத்தியத்தின் சிறப்பைச் சுருங்கக் கூறி விளங்க வைப்பதே இப்பொழுது எடுத்துக்கொண்ட விஷயம்.

சென்றமாதம் (23,24-5-36) சென்னைச் சாஸ்வதி சங்கத்தின் ஆதரவில் நடைபெற்ற இயற்கை வைத்திய மகாநாட்டின் நடவடிக்கைகளை நேயர்கள் பத்திரிகைகளில் படித்திருக்கலாம். மக்கட்கு இயற்கையோடு இயைந்த வாழ்க்கை முறைகளை எடுத்துக்காட்டிச் செயற்கை மருந்துகளை விலக்கவேண்டிய அவசியத்தை வற்புறுத்துவதே ஷை மகாநாட்டின் முக்கிய நோக்கம். ஷை மகாநாட்டில் அறிஞர் திரு. வி. கலியாணசுந்தர முதலியாரவர்கள் தலைமை வகித்தார்கள். மகாநாடு

கூடிய இரண்டு நாட்களிலும் இயற்கை வைத்தியத்தைப்பற்றிப் பல அறிஞர்கள் சொற்பொழிவு நிகழ்த்தினர்கள். சிலர் உடற்பயிற்சி முறைகளைச் செய்து காட்டினர்கள். தலைமை வகித்த திரு. வி. கலியாண சுந்தர முதலியாரவர்கள் நிகழ்த்திய சொற்பொழிவு இயற்கையோடியைந்த வாழ்வின் சிறப்புக்களைத் தெள்ளத்தெளிய எடுத்துக் காட்டியது கவனிக்கத்தக்கதாகும். திரு. முதலியா ரவர்கள் உடலை நல்வழியில் ஓம்பவேண்டிய அவசியத்தை முதற்கண் அறிவுறுத்தினர்கள் "உடம்பை நல்வழியில் ஓம்புதற்குரிய வழிதுறைகள் பலவுண்டு. அவைகளுள் தலையாயது இயறகை வாழ்வு. இயற்கையுடன் இயைந்து வாழ்தலே சிறப்பு. இயற்கை, இறையின் உடல். இறையை உயிர் என்றும் இயற்கையை உடலென்றும் உண்மை கண்டோர் கூறியுள்ளார் இறையின் உடலாகிய இயற்கையுடன் இயைந்து வாழ்வது இறையுடன் இயைந்து வாழ்வதாகும். இயற்கையை விடுத்து 'இறை இறை' என்று கூவுவது அறியாமை" என்று அவர்கள் கூறியுள்ள கருத்தின் நுட்பத்தை நேயர்கள் ஊன்றிக் கவனிக்கவேண்டும் என்று விரும்புகின்றோம். வைகறைத் துயிலெழுந்து தண்டாலெடுத்தல், பந்தாடல், குதிரையேற்றம், நீந்தல், உலவுதல், ஆசனங்கள் முதலிய உடற்பயிற்சிகளை மேற்கொள்ளவேண்டும் என்று திரு. முதலியாரவர்கள் வற்புறுத்தினர்கள். நமது முன்னோர்கள் மேற்கொண்ட உணவு வகைகள் இயற்கையாகப் பொருந்தியிருந்தன என்று எடுத்துக் காட்டினர்கள். தற்கால நாகரிக முறைப்படி அமைந்துள்ள நகரங்களும், அவைகளைப் பார்த்து நடிக்கும் கிராமங்களும் இயற்கை வாழ்வை விடுத்துச் செயற்கை வாழ்வுச் சேற்றில் நெளிவதை திரு. முதலியாரவர்கள் எடுத்துக் காட்டிக் கண்டித்தது பாராட்டத்தக்கதாகும். மலச்சிக்கலின் கொடுமையைப்பற்றி அவர்கள் கூறியதை எல்லாரும் கூர்ந்து கவனிக்கவேண்டும் என்று விரும்புகின்றோம்.

"மருந்து சிகிச்சை நெருப்பில் நெய்விடுவது போன்றது. மருந்தால் உற்ற நோய் தீர்வதில்லை" என்ற திரு. முதலியாரவர்கள் எடுத்துக் காட்டியதை எல்லாரும் நன்கு கவனித்து எல்லா நோய்கட்கும் மூல காரணமாகிய மலச்சிக்கல் நேராதவாறு தடை செய்தல்வேண்டும். இயற்கை வாழ்வினின்றும் வழுவியதே மலச்சிக்கலுக்குக் காரணம் என்பது முற்றிலும் உண்மையே ஆகும். மக்கட்கு மருத்துவரே தேவை இல்லை. "ஒளியாரும், காற்றாரும், நீராரும், மண்ணாரும், கனியாரும், கீரையாரும், இயற்கை வைத்தியாரவர்" என்பது பொருள் பொதிந்த பொன்மொழியாகும். சென்னைச் சாஸ்வதி சங்கத்தார் இயற்கை வைத்தியத்தை வளர்க்க முற்பட்டதைக் கண்டு பாராட்டுகின்றோம் அச்சங்கத்தார் ஷை மகாநாட்டு நடவடிக்கைகளை விரைவில் வெளியிடல் நலம் என்று கருதுகின்றோம்.

ஓம் தத் ஸத்.

---

# நேயர்கட்கு ஒரு வேண்டுகோள்

## 22-வது ஆண்டின் முன்னறிக்கை

நிகழும் தாது ஆண்டு ஆடித் திங்கள் 1-ம் தேதி 16-7-36) நமது "ஆனந்தபோதினி" மாத சஞ்சிகைக்கு 22-வது ஆண்டு பிறக்கப்போகிறது. தமிழ் மக்களின் அன்பும் ஆதரவும் பெற்று நீண்ட நாட்களாக நின்று நிலவும் மாத சஞ்சிகைகளில் இது முதன்மை வாய்ந்ததாகும். மக்கள் வாழ்க்கை எல்லாத் துறையிலும் செழித்தோங்குமாறு செய்வதே "ஆனந்தபோதினி"யின் தனிப்பெரும் நோக்கம். வரப்போகும் 22-வது ஆண்டு முதல் வழக்கப்படி தமிழ்நாட்டில் பேரும் புகழும் பெற்று விளங்கும் தமிழ்ப்பேரறிஞர், சமயப் பேரறிஞர் கட்டுரைகளும், புத்தம் புதிய அறிவூட்டும் ஏனைய கட்டுரைகளும் "போதினி"யை அலங்கரித்து எல்லாருக்கும் மகிழ்வூட்டும் என்று தெரிவித்துக் கொள்ளுகின்றோம். ஆதலால் "ஆனந்தபோதினி"யின் பால் அன்பு பூண்டு ஆதரித்துவரும் சகோதர சகோதரிகள் எல்லாரும் 22-வது ஆண்டின் சந்தாத் தொகையை நாளிது தாது ஆண்டு ஆனித்திங்கள் 31-ம் தேதி (14-7-36)க்குள் மணியார்டர் மூலமாகவோ நேரிலோ எங்கட்குக் கிடைக்குமாறு செய்ய வேண்டுகின்றோம். சந்தாத் தொகையின் பொருட்டு வி. பி. பி. அனுப்புவதால் தபாற் செலவு 4 அணா மணியார்டர் கமிஷன் 2-அணா ஆக 6-அணா அதிகச் செலவும் சஞ்சிகை வந்து சேர வீண் காலதாமதமும் ஏற்படும். ஆகையால் எல்லாரும் மேற்குறிப்பிட்ட தேதிக்குள் மணியார்டர் செய்து விடுவதுதான் உங்கட்கும் எங்கட்கும் இலாபமும் சௌகரியமும் ஆகும். வி. பி. அனுப்புவதால் இன்னொரு சங்கடமும் உண்டு. அதாவது வி. பி. வந்தால் ஏழு நாளைக்குமேல் தபாலாபீஸில் வைத்திருக்க மாட்டார்கள். அதற்குமேல் வி. பி.யை நிறுத்தி வைக்கவேண்டும் என்று விரும்புகின்றவர்கள் நாள் 1-க்கு 2 அணா வீதம் தபால் தலைவாங்கி ஒட்டி விண்ணப்பித்துக் கொள்ளவேண்டும். அதுவும் பத்து நாளைக்குமேல் தபாலாபீஸில் வைத்திருக்க மாட்டார்கள். இந்தச் சங்கடங்களையெல்லாம் உத்தேசிக்கும்போது எல்லாரும் சந்தாத் தொகையை முன்பணமாக அனுப்பி ஆதரிப்பதே நன்மை என்று தோன்றும்.

குறிப்பு:-முன் பணம் அனுப்புவோர் பழைய சந்தாதார்களாயிருந்தால் மணியார்டர் கூபனில் தங்களுடைய சந்தா எண்ணைக் குறிப்பிட்டு "22-வது ஆண்டுக்கு" என விவரம் எழுதவேண்டும். புதிய சந்தாதார்கள் "புதிய ஆண்டுக்கு" என்று விவரம் எழுதவேண்டும்.

**இனாம் ! இனாம் !! இனாம் !!!**

சந்தாத் தொகையை குறிப்பிட்ட தேதிக்குள் அனுப்புகிறவர்களுக்கு அடுத்த ஈஸ்வர வருஷ எங்களது "ஆனந்தபோதினி" பஞ்சங்கம் ஒன்று இனாமாக அனுப்பப்படும். மானேஜர்.



# சாங்கிய தரிசனம்

(திரு. எஸ். ஏ. திருமலைக் கொழுந்துப் பிள்ளை, பி.ஏ.)

(864-ம் பக்கத் தொடர்ச்சி.)

## 32-வது காரிகை

*கரணம் தரயோத சவித்தம் ததாஹாணதாரண பிரகாசகரம்—கார்யம் சதஸ்ய தஸ்தா ஹார்யம் தார்யம் பிரகாஸ்யம்ச.*

*[கரணங்களின் தொகையும், வியாபாரமும், விஷயமும்]*

*கரணங்கள் பதின்மூன்று விதமானவைகள்; அவை இழுத்தற்கும், இழுத்ததனை விடாது நிறுத்துதற்கும், விடாது நிறுத்தப்பட்டதனைப் பிரகாசப்படுத்துதற்கும் ஏற்பட்டனவாம். இவ்வாறு இழுத்து நிறுத்தப்பட்டுப் பிரகாசப்படுத்தப்பட வேண்டிய விஷயங்கள் பத்தாகும்.*

உரை. ஞானேந்திரியங்களின் விஷயம் 5:-சப்தம், பரிசம், ரூபம், இரசம், கந்தம். கன்மேந்திரிய விஷயங்கள் 5:-வசனம், கமனம், தானம், விசர்ஜனம், ஆனந்தம். இந்தப்பத்தும் 13-கரணங்களுக்கும் விஷயங்களாம்.

செவி. ஓசையைத் தன்னிடத்து இழுத்து (ஏற்றுக்கொண்டு) நிறுத்தி இது இன்ன ஓசையெனத் தரிசிப்பதற்கு உகந்த கரணம். இதன் உண்மையை அதிகத் தூரத்தில் நிகழும் ஓசையை நோக்கிக் கண்டு தெளிக.

தோல். (துவக்கு) பரிசத்தைத் தன்னிடம் இழுத்து (ஏற்றுக்கொண்டு) நிறுத்தி இத்தன்மையது எனத் தெரிதற்கு ஏற்ற கரணம். தோற்பரப்பை யொட்டி நிற்பவற்றையும் இந்திரியத்தால் உணர்த்தக்கூடும். தூரத்தில் அக்கினியாவது பனியாவது இருப்பின் சூடு அல்லது குளிரின் தன்மை யுணரப் படுகின்றது. இதனால் கிரஹணம் ஏற்படுகின்றது.

கண். உருவத்தைத் தன்னிடம் இழுத்து (ஏற்றுக்கொண்டு), நிறுத்திக் காண்பதற்கேற்ற கரணம். இதனுண்மையைத் தெள்ளிதிற் புலப்படாத மூன்றாம் பிறையை நோக்கித் தெளிவாயாக.

நாவும் மூக்கும் சுவையையும் நாற்றத்தையும் முறையே இழுத்து, நிறுத்தித் தரிசிப்பித்தலை யெளிதில் உணரலாம்.

இனிக் கன்மேந்திரிய விஷயங்கள் ஒவ்வொன்றும் இழுத்து நிறுத்தப்பட்டுத் தரிசனமாதல் உணரத்தக்கது.

வாக்கு:—செவி நிகழ்காலத்திய ஓசைகளை யிழுத்து (ஏற்று) நிறுத்தி தரிசிப்பித்தற்கு உகந்த காரணமெனக் கண்டாம். வாக்கோ ஞாபகமென்ற இறந்தகாலப் பொக்கிஷத்தினின்று ஓசைகளை இழுத்து (ஏற்று) நிறுத்தி தரிசிப்பித்தற்கு உகந்த கருவியாம். வாக்கினால் தரிசனமாகும் ஓசைகள் சுதந்தரத்தால் விளைகின்றன. செவி சாக்ஷி மாத்திரையாய் நின்று சப்தத்தை உண்பவர்க்கு அகங்காரத்தால் தூண்டப்பட்டு சுதந்தரத்தோடு மறைவிருக்கும் ஓசைகளை வெளிக்குக் கொண்டு வருவதற்கு இயைந்த காரணமாம். வாக்கென்பது ஓர் சக்தியின் பீடமாய்க் கண்டத்தி லிருக்கின்றது.

பாதம்:—இதுவும் ஓர் சக்தியின் பீடம்; கமனம் என்பதனை மறைவாய் வைத்திருப்பது. அகங்காரந் தூண்டும்பொழுது மறைவிருந்த கமனம் பாதத்தின்கண் இழுத்து நிறுவப்பட்டு விளங்குகின்றது.

பாணி:—தானம் என்பது மறைவாய் எப்பொழுதும் ஒருவனிடம் இருக்கின்றது. அகங்காரந் தூண்டும்பொழுது அஃது கையினிடத்து இழுத்து நிறுவப்பட்டு வெளியாகின்றது.

உபத்தம்:—ஆனந்தம் என்பது மறைவா யுறைகின்றது; அதனைத் தரிசிக்க அகங்காரம் விரும்பும்பொழுது மறைவிருக்கும் ரேதசு கிரகிக்கப்பட்டு சிறிது நேரம் உபத்தத்தில் நிறுவப்பெற்றுப் பின்னர் ஆனந்தமயமாய் வெளிப்படுகின்றது.

பாயுரு:—இது அகங்காரம் தூண்டியபொழுது கீழ்நோக்கமாகிய விசர்ஜன நோக்கத்தோடிருக்கும் மல ஜலங்களை அந்த இடத்தில் இழுத்துச் சிறிது நிறுவி வெளிப்படுதற்கு இயைந்த கருவியாம்.

ஞானேந்திரியங்களிடத்தும் கன்மேந்திரியங்களிடத்தும் இழுத்தலும், நிறுத்தலும், தரிசிப்பித்தலும் அமையுமாயினும் ஞானேந்திரியங்கள் தரிசிப்பித்தற்கு மிகவும் நன்கு வாய்ந்தன; கன்மேந்திரியங்களோ இழுத்தலாகிய கன்மத்திற்கு மிகவும் இயைந்தன. இக்காரணம் பற்றியே இவற்றை ஞானம், கன்மம் என இருவகையினவாகப் பிரித்தனர் பெரியோர்.

ஞான விஷயங்களையும் கன்மரூபமான விஷயங்களையும் நிறுவுதற்கண் புத்தி, அகங்காரம், மனமாகிய அந்தக்கரணங்கள் சிறந்த சாதனமாம். இவற்றுள்ளும் மனம் இழுத்தற்கும், அகங்காரம் நிறுத்தற்கும், புத்தி தரிசிப்பித்தற்கும் மிகச் சிறந்தனவெனக் கொள்க.

அந்தக்கரணங்கட்கும் வெளிக்கரணங்கட்கும் உள்ள வேற்றுமையை விளக்கலுற்றார்.

## 33-வது காரிகை

அந்தக்கரணம் திரிவிதம் தஸதா வாத்யம் திரஸ்ய விஷயாக்யம்—சாம்பிரதகாலம் வாத்யம் திரிகாலமாம் யந்தரம் கரணம்.

## உட்கரணங்கட்கும் வெளிக்கரணங்கட்கும் உள்ள பேதம்

உட்கரணங்கள் மூன்று; இவ்வுட்கரணங்களுக்கு விஷயங்களை சமர்ப்பித்தற்கு இயைந்த வெளிக்கரணங்கள் பத்தாம். வெளிக்கரணங்கள் இயல்பாய் நிகழ்கால விஷயங்களிற் றொழில் புரிவனவாம். உட்கரணங்களோ காலத்தின் முக்கூற்றின் கண்ணும் தொழில்புரிய வல்லனவாம்.

உரை. மனம், புத்தி, அகங்காரம் மூன்றும் உட்கரணம். இந்திரியங்களாகிய வெளிக்கரணங்களால் தரப்பட்ட விஷயங்களை மனம் சேவகன் போலவும் தூதன் போலவும் வாங்கி உட்கொண்டுபோய் மந்திரி போன்ற புத்திக்குக் காட்ட புத்தி தனது ஒளியால் அரசன்போல் தன் மதிப்புக்கொண்ட அகங்காரத்திற்கு தரிசிப்பிக்கின்றது.

வெளிக்கரணங்கள் தற்கால விஷயங்களில் பிரவர்த்திக்கின்றனவேயன்றி இயல்பால் இறந்தகால எதிர்காலங்களை நோக்குதற்கேனும் அவற்றின் கண் தொழில் புரிதற்கேனும் இயலாவாம். கண்ணானது எதிரில் தோன்றும் விஷயத்தைக் காண்பதன்றி நேற்றுக்கண்ட விஷயத்தையேனும் நாளை நேரும் விஷயத்தையேனும் காணுதற்கு இயலாது. செவி நிகழுகின்ற ஓசையை யறிவதன்றி நேற்றுக்கேட்ட ஓசையையேனும் நாளைவரும் ஓசையையேனும் கேட்க இயலாது. துவக்காகிய தோல்பரப்பும் நிகழ் காலத்திய உணர்ச்சிகளையே உணரவல்லது. சென்ற பிறவியில், தான், இன்புற்ற உணர்ச்சிகளையேனும், இனி வரற்பாலதாய உணர்ச்சிகளையேனும் பற்றித் தருதற்கு ஆற்றாது. நாவும் மூக்கும் அத்தகையனவேயாம்.

உட்கரணங்களோ இறந்த காலமாகிய ஞாபக சொரூபத்தின் கண்ணும் எதிர்காலமாகிய பிரமபாவனையின் கண்ணும், பிரத்தியக்ஷத்தின் கண்ணும் சென்று மறந்த விஷயங்களையும் இனிவரும் விஷயங்களையும் தற்காலம் நேரும் விஷயங்களையும் அறிதற்கு இயைந்தன. எவ்வாறெனிற் சிறிது விளக்குதும்:—

எதிரே நிற்கும் ஒன்றைக் கண்ணினால் நோக்கும் பொழுது உட்கரணங்களுங்கூட இருக்கவேண்டும். அப்பொழுதுதான் காக்ஷி போதத்திற்குத் தென்படும். விழித்திருக்கும் மனிதன் பராமுகமா யிருக்குங்கால் அவன் எதிரில் ஏதேனும் நிகழின் அவன் அதனை அறிகின்றிலன். ஆகவே அந்தக்கரணங்கள் பிரத்தியக்ஷமாகிய பகிர்முக இந்திரியங்களோடு கலந்து நிகழ் காலத்தை யறிகின்றன.

பத்து வருடங்களின் முன்னர் ஓரிடத்தில் நிகழ்ந்த அற்புதத்தை யறிய வேண்டின் மனம் ஞாபக சொரூபத்தை இழுக்க, இழுக்கப் படிப்படியாய் முன் நிகழ்ந்த விஷயங்கள் போதத்திற்குத் திரும்பவும் தரிசனமாகின்றன. யோகியானவன் ஞாபக சொரூபத்தின் தந்திரமுழுமையும் உணர்ந்தவனாதலின் தனது பூர்வஜன்மங்களையும் மற்றும் மேற்போய விஷயங்களையும் ஆராய வல்லவன்.

இறந்த காலத்தில் அந்தக்கரணம் தொழில் புரியவல்லது என்பதனை நெடுங்காலத்திற்கு முன்னம் பார்த்த ஊர் ஒன்றை ஞாபகத்தில் இழுத்து நோக்குவோமாயின் முதல் முதல் சிறிது மங்கலாகத் தோன்றும். மனம் அதனை விடாது பற்றிநிற்க அவ்வூர் வீதிகளும் சந்துகளும் அந்தர் திருஷ்டிக்கு விசிதமாகும். இந்நிலை முற்றுப் பெறுவதனையே ஜாக்கிர சொப்பன மென்பர். இது லலாட சொப்பனமென்றும் பெயர் பெறும். அந்தக்கரணங்கள் இறந்த காலத்தில் தொழில் புரியும் தன்மையைச் சிறிது விளக்கப் பட்டது.

இனி அந்தக்கரணம் எதிர்காலத்திலும் தொழில் புரியவல்ல திறத்தினைச் சிறிது ஆராய்வாம். நிகழ்காலத்தை யறிதற்கு அந்தக்கரணங்களை

வெளி யிந்திரியங்களோடு பூட்டி வழியைக் கண்டோம். இறந்த காலத்தை ஞாபக சொரூபமாகிய விஞ்ஞானமய கோசத்தை அந்தக்கரணத்தோடு ஒட்டிக் கண்டோம். இனி எதிர்காலத்தை எவ்வாறு தெரிந்து கொள்வது? ஓர் குயவன் திகிரியை யுருட்டி மட்பாண்டங்களை வனைந்து கொண்டிருக்கின்றான். இறந்தகாலத்தில் வனைந்த பாண்டங்கள் திகிரியாகிய சக்தியைக் கடந்து வெளியே கிடப்பதனால் அவற்றை நோக்கி இவைதான் முன் வனையப்பட்டனவென உணர்கின்றோம். தற்காலம் திகிரியேறி வனையப்படும் பாண்டத்தையும் திகிரியின்கண் பூட்டப்பெற்ற மண்ணையும் அது பெறும் கோலத்தையும் நோக்கி இது ஓர் குடம் போலுமெனக் காண்கின்றோம். இனி எவ்விதமான பாண்டங்களை வனைவானோ அவற்றை எவ்வாறு உணர்வது? குயவன் மனத்திற்கொண்ட பாவனை சொரூபங்களை நோக்குவோமாயின் ஒருவாறு அறிதல் கூடும். இவ்வாறே ஒவ்வொரு மனிதனுடைய ஆயுள், போகம் முதலியன பிரமன் தனது பாவனைகளை எழுதிய தலையெழுத்தில் மறைவுற்றிருக்கின்றன இதனால்தான் மாந்தரும் தாம் நினைக்காத வண்ணம் ஏதேனும் ஓர் காரியம் நேரின் "இது எனது தலைவிதி" "இதுதான் எனக்குப் போட்ட எழுத்தோ" எனவும் கூறுகின்றனர்.

மற்றுஞ் சிறிது கூறி முடிப்பாம். சிலர்க்குச் சொப்பனத்தால் பின் நடக்கும் விஷயங்கள் முன்னைக் கூட்டியே தெரிவிக்கப்படுகின்றன. எதிர்காலமென்பது சூக்குமரூபமாயிருந்து பின்னர் தடித்து இந்திரிய பிரத்தியக்ஷத்திற்கு வருவதான ஒன்றாம்.

## 34-வது காரிகை

புத்தீந்திரியாணி பஞ்சவிசேஷா விசேஷ விஷயாணி—வாக்பவதி சப்த விஷயாஸேஷாணிது பஞ்ச விஷயாணி.

ஞானேந்திரியங்கள் ஐந்தும் தடிப்பெய்தி வெளிப்பட்ட ஐம்பொருள்களையும் வெளியுறாது நிற்கும் ஐம்பொருள்களையும்பற்றி நிற்கும்.

கன்மேந்திரியங்களுள் வாககோ சப்தத்தையே தனக்கு விஷயமாக அமையப்பெற்றுளது. மற்றை கன்மேந்திரியங்கள் நான்கும் ஒவ்வொன்றும் ஐந்து பொருள்களையும் தமக்குப் பற்றுக்கோடாக உடையனவாம்.

உரை. செவி சாதாரணத்தில் உணர்வது தடிப்பெய்திய சப்தத்தையே; அதாவது அச்சப்தம் மண்ணை யொட்டியேனும், வாயுவை யொட்டியேனும் வரின் உணரவல்லது.

ஆகாசத்தி லுண்டாகும் சப்தத்தைத் தனித்துணர்வது சாதாரணத்தில் நிகழாது. பூலோகத்தி லுண்டாகும் சப்தத்தையே சாதாரணத்தில் மாந்தர் செவியுறுவர். பூவுலகினர் மிகச் சூக்குமமான புவர்லோக சப்தத்தைப் பூவுலகிலிருந்தே யுணர்தல் சிலர்க்கே எளிதாம் லெட்பீட்டர் என்பவர் எழுதிய ஞானதிருஷ்டி (Clairvoyance) என்ற நூலில் கூறிய மெய்ச்சரிதத்தால் இதன் உண்மையைத் தெளிக. சொப்பன உலகத்தில் திரியும் ஒருவன் அவ்வுலகில் விளையும் பெரும் ஓசை யொன்றைக் கேட்டுத் திடீரெனப் பூவுலகிற் றொண்டுவந்து தள்ளப்படுதல் அனுபவத்தில் நடக்கின்றது.

பூலோக பரிசத்தினும் மிக நுண்ணியமான மேல் உலக பரிசங்களையும் சிலர் ஜாக்கிரம் நழுவிச் சொப்பனத்தில் இறங்கும் பொழுது அறிவார்கள். சொப்பனத்தில் அனுபவித்த தேகசுகத்தை நாடி நாடி நைவாருமுளர். பதஞ்சலி பகவான் யோக தரிசனத்தில் சித்தத்தை நிறுத்தப் பல வழிகளையுங் காட்டிய இடத்தில் தூக்கத்தையும் சொப்பனத்தையும் நாடி யொருவன் சமாதியின் இரகசியத்தை யுணர்ந்து கொள்ளக்கூடு மென்றனர். ஆங்கு கண்டு தெளிக.

கண் பூலோக காக்ஷிகளுக்கு மேற்போய சில விஷயங்களைச் சிலர்க்குத் தோற்றுவிக்கும். பிசாசு முதலியனவற்றைக் கண்டவரும் உளர்; அவற்றோடு பேசும் மாந்தரீகமும் உளர் என்பது உலகப் பிரசித்தம். புகைப்படம் எனப் பிடிக்கப்படுகின்ற (Photograph என்பன) ரூப தன்மாத்திரைகளைச் சில மருந்துகளிற் படியவைத்து வெளிக் காட்டப்படும் உருவங்களன்றி மற்றல்ல.

ஆத்துமாவினிட மிருந்து பிராணனும் பிராணன் உள்ளிருந்து மனமும் மனத்திட மிருந்து பிரபஞ்சம் முழுமையும் தோற்றிய இரகசியத்தை நாட வல்லார்க்குப் பஞ்சபூதங்களினுடைய இயல்பு விசிதமாம்.

"சுவை ஒளி ஊறு ஓசை நாற்றம் என்றிவை யைந்தின்
வகைதெரிவான் கட்டே யுலகு."

என்றனர் தெய்வப்புலமைத் திருவள்ளுவர். தெய்வீகச் சுவையும் தெய்வீக கந்தமும் உள்ளனவேயாம். தெய்வீக கந்தத்தைப்பற்றியே நக்கீரனும் இறைவனோடு வாதாடி ஞானம் பெற்றுப் பின்னர் மூத்தி யடைந்ததும்.

யோகம் கைகூடியவர்க்கு பஞ்ச தன்மாத்திரைகளின் இரகசியம் உள்ளங்கை நெல்லிக்கனிபோல் விளங்கும். நிற்க.

வாக்குக்கு விஷயம் அதாவது நிலைக்களன் சப்தமே. தான் சப்தத்தைப் பீடமாய்க் கொண்டிருப்பதனாலன்றே எவ்வித சப்தத்தையும் எழுப்பா நின்றது. பாதத்திலோ சப்தமும், பரிசமும், ரூபமும், இரசமும், கந்தமும் அமைந்துள்ள தாகையால் அவை அதற்குப் பற்றுக்கோடு; தொழிலோ தானம், உபத்தம் இரேதசைப் பற்றுக்கோடாய்க் கொண்டிருப்பதால் இரேதசுவின் மாட்டுள்ள பஞ்ச தன்மாத்திரைகளும் அதற்குப் பற்றுக்கோடு; செயலோ ஆனந்த விளைச்சி பாயுரு பஞ்ச தன்மாத்திரைகளைக் கொண்ட மலத்தைப் பற்றுக்கோடாகக் கொண்டது.






# 40. அரசன் போக்கும், அரசியல் ஸ்தாபனத்திற்கு ஏற்பட்ட பெரிய ஆபத்தும்.

(T. S. ராஜகோபாலன், B. A., L. T.)

சென்ற கட்டுரையில் எழுதப்பட்ட, அமெரிக்க சுதந்திர யுத்தம் உண்டானதற்கும், அதன் நிர்வாகப் போக்கிற்கும், முடிவில் உண்டான தோல்விக்கும் காரணம் அரசனுடைய குணம் தான் என்று சரித்திரக்காரர்கள் சொல்வதுண்டு. அத்துடன், அரசனைப் பொம்மை நிலையில் இருத்திய காபினெட் ஆட்சிமுறையைத் தகர்த்தெறிய பல முறைகளிலும் முயன்றான். இவைகள் எவ்வாறென்பதை ஒருவாறு ஆராய்வது இக்கட்டுரையின் நோக்கமாகும்.

காபினெட் ஆட்சிமுறையை ஸ்தாபிக்க வால்போல், தனக்கு இஷ்டப்படாதவர்களை வெருட்டியும், இணங்காதவர்களைப் பட்டம், பதவி, உத்யோகம், வஞ்சம் முதலியவற்றின் மூலம் மடக்கியும், விக் கக்ஷியின் நிர்வாக செல்வாக்கையும், தன் ஸ்தானத்தைப் பலப்படுத்தியும் செய்துகொண்டார் என்ற விவரத்தையும் அரசன் நன்கறிந்திருந்தான். தவிரவும் தன் முன்னோர்களைப் போன்று, பாஷை, பழக்க வழக்கங்கள், சட்டதிட்டங்கள் முதலியன அறியாதவனல்ல. இங்கிலாந்திலேயே பிறந்து வளர்ந்தவன். அவனுடைய தாயார் அவனுக்கு விஞைத்தெரிந்த காலம் முதற்கொண்டே. ("George! Be a King!") மகனே நீ அரசர்க்குரிய எல்லா உரிமைகளுடன் ஆளவேண்டுமேயல்லாது, உன் பாட்டனார் அவருடைய தகப்பனார் போன்று பதுமையாக இராதே" என்று மீண்டும் மீண்டும் வற்புறுத்தி வந்தாள். மேலும் விக் கட்சியின் அசைக்கமுடியாத ஸ்தானத்தைக் கண்டு ஆத்திரமும் அசூயையும் கொண்ட பாலிங்ப்ரோக், "Patriot King" (தேசாபிமானமுள்ள அரசன்) என்று பெயருள்ள ஒரு புஸ்தகம் வெளியிட்டான். அந்தப் புஸ்தகத்தில், தேசத்தில் அரசன் அனுபவிக்கவேண்டிய உரிமைகளையும், வால்போலின் அதிக்ரமங்களையும், இந்த விபரீதப் போக்கைத் தடை செய்யவேண்டிய காரியங்களையும் விவரித்து எழுதியிருந்தான்.

இவ்வளவில், முள்ளைக்கொண்டே முள்ளையெடுப்பது போலும், விஷத்திற்கு விஷமே மாற்றுவது போலும், வால்போலின் முறைகளைக்கொண்டே வால்போலை வீழ்த்த அரசன் முனைந்துவிட்டான். "விரல் உரலானால், உரல் எவ்வளவு பெரிதாகும்?" என்பது ஒரு பழமொழி. நிர்வாகத்தைப் பலபேர் ஆதரவில் நடத்தவேண்டியிருக்கும் ஒரு மந்திரி பட்டம் பதவி முதலியவற்றை விநியோகித்து பலப்படுத்திக் கொண்டால், உரிமையை இயற்கை

யாகப் பெற்ற ஒரு அரசன் என்னதான் செய்யக்கூடாது? தானும், பட்டம், பதவி இனும், லஞ்சம் முதலியவற்றை வழங்கி, தான் சொல்லுவதை அப் படியே செய்யக்கூடிய ஒரு கோஷ்டியினரை பார்லிமெண்ட் அங்கத்தினர்களி லிருந்து தயாரித்துக் கொண்டான். அவர்களுக்கு "The King's Friends" (அரசன் நண்பர்கள்) என்ற பெயருண்டு இவர்களுக்குத் தனிப்பட்ட முறை யில் பலம் இல்லாதபோதிலும், வேறொரு கோஷ்டியினரைத் திணறவைக்கும் சக்தி உண்டு. ஆகவே எப்பேர்ப்பட்ட மந்திரியையும் திணறவைத்தான். நல்ல அறிவும், சுயேச்சையும், சாமர்த்தியமும் வாய்ந்த மந்திரியானால் அவனை இருக்கவொட்டாமல் செய்தான். சுத்த முட்டாளாக இருந்து ஒன்றும் முடி யாதவனான மந்திரியானால் அரசனுக் கடங்கலாம். ஆனால் பார்லிமெண்டில் பெரும்பான்மை பலம் கிடைப்பது கஷ்டம். ஆக அந்த மந்திரி யும் தரிப்பது கஷ்டம். தீய வழிகளில் ஏற்பட்ட செல்வாக்கானாலும், ஒரு முறை ஸ்தாபனமானபோது, அதை சுலபத்தில் அழிக்க முடியாதென்ற அனு பவஞானம் உள்ள இக்காலத்தவர்களுக்கு, அக்காலத்தில் வால்போலின் விக் கக்ஷிக்கு நல்ல பலம் இருந்தது வியப்பாகாது. அரசன் 1760-ல் பட்டம் பெற் றும், 1773 வரையில் விக் செல்வாக்கு இருக்கத்தான் செய்தது. இந்தப் பாராவில் கண்ட விஷயங்களுக்குச் சில உதாரணங்கள் எழுதுவோம்.

1760-ம் வருஷம் 7-ஆண்டுப் போர் நிகழ்ந்து கொண்டிருந்த வருஷங்க ளில் ஒன்று. 1757-ல் எங்கும் தோல்வியாக இருந்தபோது, வில்லியம் பிட் யுத்த மந்திரியாகவந்து, 1759-ல் எங்கு பார்த்தாலும் வெற்றிகரமாகச் செய்து, சரித்திரத்தில் "The year of Victories" வெற்றி வருஷமாகச் செய்து, அழியாப் புகழ்பெற்று இருந்தார். பிரான்ஸுடன் சண்டை மும்முரமாகச் செய்து வரும்போது, ஸ்பெயின் தேசத்தினர் தங்களுக் குள்ளிருந்த குடும்ப ஒப்பந்த உடன் படிக்கைப்படி (Family Compact) உதவி செய்தனர். அந்த ஸ்பானியரைத் தண்டிக்கும் நோக்கத்துடன், 1760-ல் பிட் ஒரு ஏற்பாட் டிற்கு யுத்த மந்திரி என்ற முறையில் ஒரு உத்தரவு போட்டிருந்தார். அதா வது, அந்த சமயம் அமெரிக்காவிலிருந்து, ஸ்பெயினுக்கு வந்துகொண்டிருந்த ஒரு திரவியக் கப்பலைத் தாக்க ஒரு கப்பல் படையை யனுப்பினார். இதை யறிந்த அரசன் பட்டம் ஏற்றுக்கொண்டதும், அந்த உத்திரவை ரத்து செய்து விட்டு கப்பல்படை செல்லாதபடி தடைசெய்து விட்டான். தன் போக்கில் தலையிட்டதைத் தாங்காத பிட்ராஜிநாமாச் செய்தார்! அரசன் அலக்ஷியமாகவே யிருந்துவிட்டு வேறொரு மந்திரியை நியமித்துக் கொண்டான். நிர்வாகம் அசாத்தியமாகி 1763-ல் சமாதானமும் செய்துகொண்டு பிரடரிக் கைவிடப் பட்ட விஷயம் முன்பு குறிக்கப்பட்டது.

1762-ல் ப்யூட் பிரபு (Lord Bute) என்ற ஒன்றும் புரியாதவன் பிரதம மந்திரியானான். நிர்வாகத் திறமையற்றவன் ஆனதால் பெரும்பான்மை பல மின்றி வேலையைவிட்டான். விக் கக்ஷி பலம் அவ்வள விருந்தது. சுருங்கச் சொல்லுமிடத்து, 1762-லிருந்து 1773-வரையில் பல மந்திரி சபைகள் ஏற் பட்டு கலைக்கப்பட்டன. சட்டப்படி 7-வருஷ செல்வாக்குண்டு என்ற கொள் கை காற்றில் பறந்தது. முறையே, க்ரென்வில், ராககிங்ஹாம், டௌன் ஷெண்ட், ஷெல்போர்ன் முதலியவர்கள் ஒருவர் பின் ஒருவராய் நிர்வாகித்துப் பார்த்தனர். கடைசியாக 1773-ல்தான். டோரிக் கக்ஷியைச் சேர்ந்த "Lord North" நார்த் பிரபு பிரதம மந்திரியானான். இதற்குள்தான், ஏழாண்டுப்

போரின் முடிவு, பணச் செலவிற்கு ஈடுசெய்ய முயற்சி சம்பந்தமான முத்திரைக் காகிதச் சட்டம், பிரகடனச் சட்டம், தேயிலை, கண்ணாடி, சாயம், காகிதம் முதலியவற்றின்மீது வரிகள், பிரிட்டிஷ் சாமான்கள் பஹிஷ்காரம், கிளர்ச்சிகள், முதலிய உண்டாகி, அமெரிக்க சுவதந்திர போருக்கு ஆஸ்பதமாகின. நார்த் பிரபு நிர்வாக காலத்தில்தான் பாஸ்டன் துறைமுக தேயிலைப் பெட்டி சம்பவம், சுயேச்சைப் பிரகடனம், யுத்தம் நிறுத்த சமரஸ முயற்சியின் முறிவு முதலியன ஏற்பட்டன. இவ்வளவுக்கும் அரசன் குணமே காரணம்.

சுயேச்சை புத்தியும், பொதுஜன ஊழியப் போக்கும் உள்ளவர்களுக்கு சகஜமான கஷ்டங்களிலும். கஷ்டங்களிலும், வறுமையும் உள்ள நிலையில், பிட் இருந்தபோது, அவருடைய சாமர்த்தியத்தையும், ஏழாண்டுப்போரை திறம்பட நடத்தியதையும் அறிந்தவர்கள் அரசனிடம் அனுசி, பிட்டையும் சரிப்படுத்தி அமெரிக்க சுதந்திரப்போரை நிர்வகிக்க வழி செய்தனர். அந்த சமயம் பிறகு, சாதம் பிரபு (Earl of Chathan) ஆக்கப்பட்டார்! இந்த சந்தர்ப்பத்தில், பிட் வயது சென்றவர் ஆனர். பிரபுவும் ஆனர். அதன் சின்னங்கள் தோன்றவும் செய்தன. ஆரம்பகாலத்தில், சுயேச்சை, நியாயம் முதலிய போக்கில் அமெரிக்க விஷயத்தை நினைத்தவர், பிற்காலத்தில், "நியாயமானலும், ஒரு கொள்கை யொட்டி அமெரிக்கர்கள் செய்தது அடாத காரியம். ஆக அவர்கள் செய்ததைக் கண்டிக்கவேண்டும்" என்று ஊக்கத்துடனும், உணர்ச்சியுடனும், பார்லிமெண்ட் கூட்டத்தில் பிரசங்கம் செய்து, வியாதியால் பீடிக்கப்பட்டு, மாரடைப்பால் விழுந்து மரணமடைந்தார்! இப்படி மனோபாவம் மாறியதைக் காணும்போது "பட்டம் இருந்தால் என்ன? பதவி ஏற்றால் என்ன? சரியான ஆட்களைப் பொறுக்கி அனுப்பினல் கெடுதல் ஒன்றும் வராது" என்ற தற்காலத்திய சமாதானங்களும், "பட்டங்கள் பதவிகள். பெருஞ்சம்பளங்கள் எல்லாம் மாயவலைகள். "குணத்தோரும் வீழுங்குழி! எப்பேர்ப்பட்டவரையும் தலைதடுமாறச் செய்யும் ஸ்தாபனங்கள்" என்ற மறுகக்ஷி யோசனையும், ஆழ்ந்து கவனிக்கப்பட வேண்டியனவே! இந்த உபய தரப்பு வாதங்களுக்கு தக்க சான்றுகள் இக்காலத்தில், அனுபவத்தில் இருப்பன போன்று, அக்காலத்திலும் இருந்திருக்கின்றன! எக்காலத்திலும் இருப்பவை என்பதை நாமும் உணர்ந்து கொள்ளலாம். கொண்டால் சமயோஜிதம்போல் நமது போராட்டத்தை ஒழுங்கு படுத்தலாம். ஆக இந்தக் குறைபாடு எந்த தேசத்திலும், எந்த சமூகத்திலும், எந்தக் காலத்திலும் உள்ளது என்பதை யுணர்ந்து, நம் விஷயத்தில் மட்டும் ஒரு பெருங்குறையாக காட்ட பிறருக்கும் உரிமையில்லை. நமக்குள்ளும் இல்லை. இருப்பதனுல் அதைரிபப்பட வேண்டியதும் இல்லை என்பதும் மட்டும், ஞாபகத்தில் வைக்கவேண்டும்.

நிற்க, எலும்பே யில்லாத புழுவைப்போல, தன்னுணர்ச்சியற்று, யஜமான் இட்டதே சட்டமாகக் கொண்டும், நார்த் பிரபுவுக்கு அரசன் அனுதாபம் ஏற்படவில்லை. அருவருப்பே ஏற்பட்டது. யத்தத்தின் அபஜெயத்திற்குப் பொறுப்பை அபாண்டமாய்ச் சுமத்தினன். மனதுடைந்து ராஜினமாச் செய்துவிட்டான். அரசன் விதியின் விக் கக்ஷியினரைக் கொண்டு மந்திரி சபையை யமைக்கச் செய்தபோது அரசனுக்குண்டான கோபம் அளவிடக் கூடியதில்லை. முன்பு இருந்த ராக்கிங்ஹாம் மறுபடியும் மந்திரியானுன். அமெரிக்கர்களுடன் சமாதானமும் செய்துகொள்ள நேர்ந்தது. அடுத்த வரு

ஷம் அவன் இறந்தான். ஷெல்போர்ன் பிரபு மந்திரியானான். ஆனால் அவனுக்கு எதிர்ப்புக் கக்ஷி ஏற்பட்டது. அந்த எதிர்ப்புக்கக்ஷியும் Fox, Burke என்ற விக் கக்ஷியினராலேயே ஏற்பட்டது. அவர்கள் பதவி யிழந்த டோரி கக்ஷியினரின் தலைவனான நார்த் பிரபுவுடன் ஒன்று சேர்ந்ததில் ஷெல்போர்ன் மந்திரி சபை கவிழ்ந்தது. அடுத்தது விக், டோரி கலப்பு மந்திரி சபை (Coalition ministry) ஸ்தாபிக்கப் பட்டபோது, அரசன் நண்பர்கள் கோஷ்டியினர் அலக்கழித்தனர். இந்திய அரசியல் திருத்த மசோதாவை Fox பிரேரேபித்த போது, அது தோற்று Fox ராஜீனாமாச் செய்ய நேர்ந்துவிட்டது! இதில் வேடிக்கை என்னவெனில் பெரும்பான்மை பலம் Fox மந்திரி சபைக்கு, பார்லிமெண்டில் இருந்தும், நிர்வாகம் ஸ்தம்பித்ததேயாகும்!

இந்த சமயத்தில்தான் சாதம் பிரபுவின் மகன் இளைய பிட் என்ற மகா மேதாவி வயது 21 ஆகிலும், டோரிகளின் தலைவனாகி, துணிச்சலுடன் மந்திரி சபையை அமைத்துக்கொண்டு பார்லிமெண்ட் சபையையே கலைத்துவிட்டு, புதுத்தேர்தல் நடத்தி, பெரும்பான்மை பலம் பெற்றான். அரசனுக்கு அணுவளவும் விட்டுக் கொடுக்காத தீரன். தன் திட்டங்களே நிறைவேற்ற வேண்டும் என்ற தன்மையுள்ளவன். தன் திட்டங்கள் நிறைவேறா விடினும், ராஜீனாமாச் செய்யமாட்டேன் என்று கர்ஜித்தவன். அரசனாலும் ஒன்றும் செய்ய முடியாதபடி, ஐரோப்பாவையே ஆட்டின பிரஞ்சுப் புரட்சி பிரான்ஸில் ஏற்பட்டது. சரித்திரத்தில் அதுவரையில் தோன்றாத் தீரன் நெப்போலியன் முன்னணிக்கு வந்துகொண்டிருந்த சந்தர்ப்பம். இருந்தும் அரசன் தன் குணத்தை விடவில்லை. பிட்டும் 17-வருஷம் நிர்வாகம் செய்தே தீர்ந்தது. அரசனுக்கும் தன் காரியம் கூடாமல் இரண்டு தடவைகள் பைத்தியமும் பிடித்தது சரித்திரப் பிரசித்தம். பிட்தான் ராஜீனாமாச் செய்ய 1802-ல் ஏற்பட்டது. ஆனாலும் அடுத்த 1804-ம் வருஷம் மீண்டும் மந்திரியானான்.

மேலே எழுதப்பட்டபடி காபினெட் ஆட்சிமுறை ஜார்ஜ் IIIன் பிடிவாதத்தினால் பல விதங்களிலும் தாக்கப்பட்டு ஏதோ அதிருஷ்ட வசமாய் தப்பியது. அரசனும், மற்ற எல்லாரையும்விட அதிகமாக ஆண்டவன் என்ற முறையில் ஏமாற்றம் பலமாக ஏற்பட்டு கஷ்டமும் அடைந்து, "திண்டாடி மண்டை கலங்கினான்" என்றவசனத்திற் கொப்ப, மூளையும் குழம்பி, இரண்டு சந்தர்ப்பங்களில் ரீஜன்ஸி சபைகள் நிறுவப்பட்டதும் சரித்திர பூர்வமான உண்மை. ஜனப்ரதிநிதிகள் ஒன்று சேர்ந்துவிட்டால் அரசன்தான் என்ன செய்யமுடியும் என்பது நிரூபணமாயிற்று. இவ்வளவு போராட்டம் முடிந்துதான் ஆங்கில நிர்வாகமுறை இப்பொழுதுள்ளதாகி இருக்கிறது.

அடுத்த அமெரிக்க சுதந்திர யுத்தத்தினால் "தீப்பொறி காரணம்" ஏற்பட்டு, பிரான்ஸில் நிகழ்ந்த பெரும்புரட்சியைப் பற்றின சில விபரங்கள் எழுதப்படும்.



# மாதர் உலகம்



## ஔவையார்



(ஸ்ரீமதி. பண்டிதை-அகலாம்பிகை அம்மையார்.)

"தோற்பன தொடரேல்"

என்பது அடுத்து வரும் நீதி.

இதற்கு தோல்வி யடையக்கூடிய வழக்குகளிலே நீ சம்பந்தப்படாதே என்பது பொருள். ஒவ்வொருவரும் தாம் தொடர்பு கொள்ளும் கட்சி வெற்றி பெறலாம் என்னும் நம்பிக்கைகொண்டே முயல்கின்றனர். உண்மையற்றதென்று தெரிந்தாலும் பொய்ச்சான்றுகளாலும் பொருட் செருக்காலும் வெல்லலாமென்னும் துணிவு பற்றி முனைவோர்களே பற்பலராவர்.

"பொய்யுடை யொருவன் சொல்வன்மையினால்
மெய்போலும்மே மெய்போலும்மே."

"மெய்புடை யொருவன் சொல்லமாட்டாமையால்
பொய்போலும்மே பொய்போலும்மே."

என்ற உதாரணப்படி வெற்றி ஏற்படுவதும் உலகியற்கை யாதலின் அறநெறிக்கு மாறுபட்ட வழக்குகளும் நாட்டில் மலிந்து விட்டன. இன்றேல் எண்ணி முடியாத நீதி மன்றங்களும், வாதிப்பதற்கென்றே தேர்ச்சி பெறும் வழக்கறிஞர் கூட்டங்களும் இத்துணை பெருகி மலியக் காரணமில்லை. நியாயவாதிகளென்பதே இரு தரப்புகளின் சார்பாகப் பேசும் அறிஞர்கட்கும் பெயர். இரண்டு பக்கங்களிலும் நீதி இருக்க முடியாதென்பது எவரும் உணர்ந்ததே. சில சமயங்களில் நீதிவாதிகள் என்னும் புனை பெயரைவிட நிதி வாதிகள் என்னும் பெயர் மிகப் பொருத்த முடையதென விளங்குகின்றது. பொருளுக்காகவே அநீதியையும் நீதியாக நிரூபிக்கப் பின் வாங்காத பலரைக் காண்பது சர்வ சாதாரணம். இவ்வித மனநிலையாளர்களின் தூண்டுதல்களினாலேயே நாட்டில் வழக்குகள் மலிந்து விட்டனவென்பது பேரறிஞர்களின் திடமான அபிப்பிராயம். வழக்குத் தொடர்பவர்கள் பிறர் தூண்டுதலுக்கு இடங் கொடாதவர்களா யிருப்பின் நாட்டின் வறுமை வெகுதூரம் குறையும். சாட்சிக்காரன் காலில் விழுவதைவிடச் சண்டைக்காரன் காலில் விழு என்னும் பழமொழி இவ் வழக்குகளினால் ஏற்படும் கொடுமையைக் குறிப்பிடுவதாகும். தவிர வழக்காடுவோர் இருவராயின் அவர்களைச் சேர வொட்டாமல் ஊக்கிச் சூழ்ந்து துணை நின்று சுயநல நாட்டத்தினராய் வழக்கை வளர்ப்போர் பற்பலர். இதுபற்றியே தோல்வி தரக்கூடிய விவகாரங்களில் நீ சம்பந்தப்படாதே என்று கூறி யருளினர். இந்நீதியின் குறிப்பு வழக்காளிகளுக்குத் துணை நிற்போர்களையே பெரும்பாலும் குறிப்பதாகக் கொள்வதும்

தவறன்று. பண்டைக்காலங்களில் சிக்கலான வழக்குகளில் அறநெறி பேணும் அரசர்கள் கடவுளின் அருட்டுணை கொண்டு உண்மைகண்டு வெற்றி குறித்தனர். திருவிளையாடற் புராணத்தில் மாமனாக வந்து வழக்குரைத்த காதையே இதற்கு நற்சான்றாகும். இது குறித்தே கவிச் சக்கரவர்த்தியும் "பொய்யிலா நிற்பி னின்றன நீதி" என்று அருளி யுள்ளார். அத்தகைய தெய்வாநுகூலம் தற்கால நீதிமன்ற நிருபர்களுக்கு தோன்றும் துணையாய் வாய்த்திடுதல் கூடாதெனினும்; உண்மைக் கடவுள் தோன்றாத் துணையாய் உடனின்று உத்தமர்கள் வாயிலாய்க் கடனாற்றுவதென்பது மறுக்கற் பாலதன்று. உண்மையை எதிரி முன் மறைக்கலாம். கடவுள் முன்பு மறைக்க முடியாது. அறநெறி நின்று கடவுளுக்குப் பயந்து கடனாற்றும் உத்தம நீதிபதிகளின் முன்னிலையிலும் மறைக்க முடியாது.

தவிர தோல்வி ஏற்பட்டதும் அதில் சம்பந்தப்பட்டவர்களுக்கு விசேஷ ஏமாற்றம் ஏற்படுவதியல்பு. ஏமாற்றம் உண்டானால் கோபமும் எதிரியை எவ்விதமாவது வெல்லவேண்டு மென்பதில் ஊக்கமும் உண்டாகின்றது. இது செயலில் வரும்போது மனம் போனபடி அதற்கேற்ப எவ்வித உபாயங்களிலும் ஈடு படுத்தும். இதுபற்றியே ஆரம்பத்திலேயே நன்மை விரும்புவோர் எவரும் தோற்பன தொடரேல் என்று எச்சரித்தனர் மூதாட்டியார். இனி

"நன்மை கடைப்பிடி"

என்பதாகும். இதற்கு நீ புண்ணியத்தை உறுதியாகக் கடைப்பிடி என்று கூறியதாகும். நன்மையானதென்று பெரியோர்களால் விதிக்கப்பட்ட செயல்களையே செய்வ தென்பதில் உறுதி கொள்ளவேண்டும்.

இது நன்மைக்குக் காலமில்லை. புண்ணியம் செய்வோர் அல்லல் உழப்பர். பாவம் புரிவோர் பதமாய் வாழ்வர் என்று வாது புரியும் தீர்க்கதரிசிகள் பிற்காலத்தில் மூளைத்துச் செழிப்பர் என் றுணர்ந்தே மூதாட்டியார் நன்மை கடைப்பிடி என்றருளினர் போலும். இக் கொள்கையை உறுதியாகக் கைக்கொள்வோர் வெகு சிலரே எனவும் கூறலாம். சண்டீச நாயனார் தான் மண்ணியாற்றங்கரையில் மணலாற் சிவலிங்கம் எழுப்பிச் சிந்தை நெகிழ்ந்து தூய்மையான பசுக்களின் பாற் பெருக்கைச் சொரிந்து தன்னை மறந்து சிவானந்த வெள்ளத்தில் மூழ்கித் திளைத்தார். இவர் பக்திப் பெருக்கினை யுணராத தந்தையார் மறைந்திருந்துகண்டு சினந்து தன் காலால் அப்பாற்குடங்களை உதைத்தார். அவர் செயலைத் தடுக்க வெண்ணினவராய் ஆங்கு கிடந்த ஒரு கோலையை எடுத்துத் தகைய அந் நாணல் வாளாயுதமாய் மாறி அவர் காலை வெட்டிய தென்பது சரிதம். நன்மையைக் கடைப்பிடிப்பதில் அவருக் கிருந்த உறுதி யன்றோ துரும்பை இரும்பாக்கியது ?

இது போலவே பிரகலாதன் தந்தை சொன் மிக்க மந்திரமில்லை என்னும் பொது விதிக்கு மாறாக தந்தையின் ஆணவத்திற்கு வைரியாகச் சிறந்து திருமாலின் மூல மந்திரத்தையே புகன்று பயங்கரமான கொடிய தண்டனைகளையும் பொருட்படுத்தாது அனைத்தையும் ஏற்று எவ்வித இடையூறு மின்றிப் பொலிந்து இன்றும் என்றும் திகழ்கின்றான். இதுவன்றோ உறுதியாக நன்மையில் நிற்பதற்கு உதாரணமாகும். அப் பாலன் முன்பு விடம் தோய்ந்த ஆயுதங்கள் நாணி மழுங்கின. அருங்கலைவல்ல குலகுருவாகிய சுக்கிரபகவான் ஆற்றலிழந்து அடங்கி யொடுங்கினர்.

மத மீறிய யானை பணிந்து வலங் கொண்டேகியது. காடு முரடான மலை முடிச் சிகரம் மெல்லிய பூக்கள் பரப்பிய பஞ்சணை போலாகியது. கலங்கா வுறுதிக்கு மேற்பட்ட வன்மை எப் பொருளுக்குண்டு. மனம் உறுதியுடையதாயின் அவர்கட்குச் சாதிக்க முடியாத காரியமே யில்லை. போர் வீரனாக வேண்டு மெனினும் கலாவல்லுநனாக வேண்டினும் அறத்திற் சிறந்தவனாக வேண்டினும் உலகினை அடக்கியாள வேண்டினும் அஷ்டமா சித்திகளில் பயிற்சி வேண்டினும் முற்றத் துறக்க வேண்டினும் மனம் உறுதிப்பாடு உடையதா யிருப்பதே காரணமன்றி வேறுண்டோ? எதிலும் நிச்சயபுத்தி யில்லாதவர்கட்கு மனத்திடம் எத் துறையிலும் பயன்தரா தென்பது திண்ணம். மனோ திடம் வாய்ந்த மகான்களைக் காற்றும் அசைக்காது; தணலும் எரிக்காது. புனலும் அமிழ்த்தாது. புவியும் மடிவிக்காது என்பதற்கு திருவருட் பிரகாச வள்ளலார் அருளிச் செய்தன்ன,

"காற்றாலே புவியாலே ககனமதனாலே
கனலாலே புனலாலே கதிரா தியாலே
கூற்றாலே பிணியாலே கொலைக்கருவியாலே
கோளாலே பிறவியற்றம் கொடுஞ் செயல் களாலே
வேற்றாலே யென்ஞான்றும் அழியாதே விளங்கும்
மெய்யளிக்க வேண்டு மென்றேன்
விரைந் தளித்தார்"

என்ற விருத்தமே உதாரணமாகும். அத்தகைய மனவுறுதியைத் தான் புண்ணியச் செயல்களில் கொள்ள வேண்டு மென மூதாட்டியார் கட்டளை யிடுகின்றார். இதுவே இரு பாலார்க்கும் பொது நீதியாகும். நன்மை கடைப்பிடிக்கும் பண்பு இயற்கையாகவே அமையப் பெற்றவர்களின் வாழ்வின் பெருமைதான் இதிகாச புராணங்க ளென விரிந்த மத நூல்களாகும். நன்மையின் உறுதி யில்லாவிடில் சீதா பிராட்டியார் உண்டோ? பாஞ்சாலி, கண்ணகி, முதலிய கற்பரசிகள் தானுண்டோ? கண்ணப்பர், சிறுத்தொண்டர், திருநீலகண்டர் முதலிய பக்த சிகாமணிகள் தானுண்டோ? இதை விளரிப்பின் பல அத்தியாயங்களாக விரியுமன்றோ! இவ்வித உறுதிப்பாடு தீமையில் உரம் பெறுவதும் கண் கூடு. அதுவே மிகுதியு மென்றும் சொல்லலாம். நன்மை கடைப் பிடிப்பதனால் எத்துணை உயர்வு எற்படுமோ, அத்துணை தாழ்வும் கேடும் தீமை கடைப் பிடிப்பவர்களுக்கு உண்டாதல் இயல்பு. நன்மை கடைப்பிடித்தவர்கள் மேன்மையினின்றும் ஒருகாலும் இறங்காதது போலவே தீமை கடைப்பிடித்தவர்களும் ஒருகாலும் தாம் பெற்ற தாழ்வினின்றும் மேலேற மாட்டார்கள். ஆதல் பற்றியே நமது பாட்டியார் நன்மை கடைப்பிடி என்றார். அறவோர் பாவ மென்றும் புண்ணிய மென்றும் வகுத்த செயல்களை நன்குணர்ந்து அதன் வழி தங்கள் செயல்களைத் திருத்திக் கோடல் வேண்டும். இதற்காக நீதியை விளக்கும் எண்ணிறந்த நூல்கள் பாலர்கள் மனப்பாடமாகச் செய்ய வேண்டு மென்பது பண்டைக்காலப் போதனா முறையாக விருந்தது. இளைஞர் நினைவில் இலேசாகப் பதியும்படி மிக எளிதாகவும் சிறுசிறு பதங்களாகவும் அமைத்தே நீதிகளை உணர்த்தும் தொடர்கள், வெண்பா வாதிய அனைத்தும் விளங்குவது எவரும் உணர்ந்ததே. நீதி நூலாசிரியரான அறிஞர் வேதநாயகம் பிள்ளையும்,

"பூச்சியைப் பிடித்துக் கொல்லாதே உந்தன்
ஆச்சி சொன்னாலும் அபத்தம் சொல்லாதே"

"பாட்டனார் பூட்டனா ரெங்கே போக
மாட்டோ மென்றாலு மாணம் நம்பங்கே"

"எத்தனை பேர்புவி யாண்டார் புவியில்
அத்தனை பேர்களும் ஐயையோ மாண்டார்"

என்பவைகள் கற்கும் சிறுவர்களுக்கு எளிதாகவும், அழகாகவும் உவப்பூட்டக் கூடியவைகள் என்பது சிந்திப்போர்க்குப் புலனாகும். அந்நாளில் அதிகாலை தானே பிள்ளைகள் துயிலெழுந்து பற்றுலக்கி முகங்கழுவித் திருநீறணிந்து பள்ளிக்கேகி பழம் பாடங்களையும் முதுமொழிக் கோவைகளையும் மனப் பாடம் செய்து கொள்ளுவது கட்டாய பழக்கமாயிருந்தது. அவர்கள் நினைவூற் றும் வற்றாதிருந்தது. தற்காலமோ மூளைக்குக் கொதிப்பேறி கற்றது மறக்கும். இரண்டாம் ஜாமமே வயிறுதிணிய உண்டு பள்ளிக்கேகும் காலமாக ஏற்பட்டு விட்டது.

பனியால் உறைந்து வெளியே தலைநீட்ட முடியாத மேல்நாட்டினர் கல் விக் கூடங்களுக்கேகும் காலை ஒன்பது மணியே கொடிய உஷ்ண பிரதேச மாகிய இந்நாட்டினர்க்கு உரிய காலமாகுமா? காலைத் துயிலெழுவோரைக் காக்கைகளுக்கு ஒப்பிடுவது சர்வ சாதாரணமாகிவிட்டது. விடிய ஐந்து நாழிகை முதல் விடிந்து ஐந்து நாழிகைவரையிலுமே இந்நாட்டிற் பிறந்தவர் களுக்கு மூளையும் மனமும் குளிர்ச்சியாகவும் தெளிவாகவும் சுறுசுறுப்பாகவும் இருக்கக்கூடிய நேரமாகும். அந்த அரிய நேரத்தின் பயனை நுகர்வோர் தற் கால மாணாக்கர்களிலோ அநேகமாய் இல்லை யென்றே சொல்லவும் கூடும். மனதையும் மூளையையும் அமைதியாக வைத்துக்கொள்ளக் கற்காதவர்களுக்கு நன்மைகளை உறுதியுடன் கைக்கொண்டு ஒழுக எங்ஙனம் முடியும்? பேயும் உறங்கும் யாமம் வரையில் பொய்ம்மையான காதற் கதைகளாகிய நாவல்கள் என்னும் புனை கதைகளைப் படிப்பதும், கண்ணொளியைக் கவர்ந்து பகற் குரு டாக்கும் படக்காட்சிகளைக் காண்பதும், நித்திய விதியாகக் கொள்வோர் விடியற் காலையில் எப்படி துயிலெழக் கூடும்? இதுவே முடியாதவர்கள் நன்மை கடைப்பிடிக்க எவ்வாறு முடியும்? நடையுடை உண்டி ஸ்நானம் முத லியவைகளில் ஒழுங்குடன் பயிற்சி பெற்றாலொழிய எந்த நன்மையும் கைகூடாது.

எனவே நன்மை கடைப்பிடிக்க வேண்டுவோர் எல்லாக் கடமைகளிலும் ஒழுங்காக அடியிலிருந்தே நடத்தல் வேண்டும். தீமைகளைத் தெரிந்து ஒதுக் குதல் வேண்டும். நற்காரியங்களை விடாமல் உறுதி பூண்டு செய்பவர்களே வாழ்க்கையில் வெற்றி பூண்டவர்களாவர்.

இனி, நாடோப்பன செய் என்பது. நீ வாழும் நாட்டில் உள்ளோர் பல ரும் ஒத்துக் கொள்ளத்தக்க நல்ல காரியங்களை நீ செய் என்று பணித்த தாகின்றது. இது ஆழ்ந்து சிந்திக்குங்கால் நமக்கு மிக மிகப் பெரிய உண்மை களை நினைப்பூட்டுவதாகின்றது. பழைய வழக்கங்களில் வெறுப்புள்ள பல சீர் திருத்தக்காரர்கள் தமக்கேற்ற முறையில் மாறுபாடுகளைச் செய்ய விரும்புகின்றனர். முனைகின்றனர். தங்கள் கொள்கைகளை எதிர்ப்பவர்களை

சபிக்கின்றனர். சில சமயங்களில் ஸத்தியாக்கிரகமும் செய்கின்றனர். உண்ணு விரத மிருந்து உயிரை விடவும் துணிகின்றனர். ஆனால் இவைகளின் முடிவு சிறிது பலன் தருவதுபோலத் தோன்றினும் பெரும்பான்மையரான நாட்டினர் மாறுதலை ஏற்கவில்லை யென்பதையே காட்டுவதாகும். பெரும் பான்மையோர் ஏற்கக்கூடிய பக்குவ காலம் வந்திருந்தால் இத்தனை அதித முயற்சிகளும் கூச்சல்களும் வேண்டியதேயில்லை. பலபேர் கூடியும் ஒரு விரற்கடைகூட நகர்த்த முடியாத மிகப் பாரமான ஓர் வஸ்துவைக் கூச்சல் போட்டுப் புரட்ட முயல்வதையே இது ஒத்திருக்கிறது. என்ன கோவிந்தம் போட்டாலும், அவ்வஸ்துவின் வன்மைக்கு மேற்பட்ட விசேஷ பலம் வந்தாலன்றி அதனை அசைக்கமுடியவில்லை. இவர்கள் அதிக முயற்சியால் சில சமையம் அப்பாரமான வஸ்து ஆழமாகப் பூமியில் புதையவும் இடமேற்படும். அப்படிப்பட்ட நிலையில் அவ்வஸ்துவைக் கிளப்பக்கூடிய உபாயங்களைத் தேர்ச்சியாளர் செய்தல் கட்டாயமாக முடிகின்றது. எந்த பாரத்தையும் இலேசாகப் புரட்டிச் செல்லக்கூடிய சக்தி பொதுஜன ஆதரவேயாகும். அது உருக்கொள்ளாத வரையில் எத்தனை சிறந்த மாறுதல்களும் நடைபெற முடியாது. ஆகையால்தான் நமது மூதாட்டியார் உன் செயல் வீணாகும்படி (நாட்டினர் ஒவ்வாததாயின்) செய்யாதே என்று போதிக்கின்றார் சாத்தானியர் என்னும் ஒரு பிரிவினர்கள் சிகை வைத்துக்கொள்ளுதல் வழக்கத்தில் இல்லை. ஆனால் வேடிக்கையாக அவர்கட்குத் தலைக்குள்ளே குடுமியுண்டெனக் கூறுவதுண்டு. சிலர் தாங்கள் நினைப்பதுபோல ஒரு சிலர் ஆமோதித்தால் அதுவே உலக அபிப்பிராயமென்று நம்பி ஏமாற்றம் அடைவதுமுண்டு. இது மிகவும் வருந்தத்தக்க நிலை. தங்கள் கொள்கையை எதிர்ப்பவர்கள் தம்மிலும் குறைந்த கல்வியாளராக விருக்கலாம். என்றாலும் அவர்கட்கு நாட்டிற் பெரும்பாலோர் ஆதரவு உண்டெனில் அதுவே வெற்றி பெறும். ஏகோபித்த அபிப்பிராயங்களுக்கு முன் பட்டங்களும் பதவிகளும் கனமும் தனமும் எதுவும் செய்யவல்லமையுடையவைகளாகா. இதை மனதில் கொண்டு நாட்டினர் ஒவ்வாத வழி களில் ஈடுபட வேண்டா மென்றும் நாட்டினர் உடன்படும் நற்காரியங்களையே நீ செய்வாயாக என்றும் மூதறிவுடைமையால் பெருமாட்டியார் புகன்றனர். பரமஹம்ஸரும் உலகியலை எதிர்த்தேறும் ஆற்றல் மகான்களிலும் பலருக்கு வாய்க்கக்கூடியதன்று. உலகம் தோன்றியகால முதலாகப் பார்த்தாலும் மூவரே காணப்படுகின்றனர் அவர்கள் துருவன், பிரகலாதன், விபீஷணன் என்பவர்களேயாவர் என்று அருளிச்செய்திருக்கின்றார். ஆதலினால் எல்லா மாந்தரும் எல்லா அறிஞரும் நாட்டினர் ஒவ்வாத ஒரு திருத்தத்தை அநுஷ்டானத்தில் கொண்டுவர முடியுமென்று நினைப்பது தவறு. இதனைத் திருக்குறளாசிரியரும் கல்வி யென்பது உலகத்தோடொப்ப நடக்கக் கற்பதுதான் என்று விளக்கிக் காட்டியுள்ளார். இம்மட்டோடும் அமையாமல் உலகினர் கொள்கையை எதிர்ப்பவர் பேய்க்குச் சமமாக பாவிக்கப்படுவர் என்றும் இழித்து மனதிற்றைக் தமாறு கூறுகினார். எனவே நாட்டினரை எதிர்த்து ஒரு செயலாற்றுதல் அறிவுடைமையாகா தென்பது மூதாட்டியாருடைய திடமான அபிப்பிராயம் என்றுணர்தல் கடனாகும்.

நாடொவ்வாத செயலை ஒரு தனி மனிதன் செய்தல் தவறென்பது மட்டில் அன்று. நாட்டினை ஆளும் அரசனாயினும் தன் கருத்தின்படி நாட்டினர்



# பண்டைக்காலத் தண்டமிழ் உழவர்

(உக்கடை-வி. சிவக்கொழுந்து.)

"மேழிச் செல்வம் கோழை படாது"

என்பது ஆன்றோர் திருவாக்கு.

இம் மலர் தலையுலகின் கண்ணே பன்னெடுங் காலமாக நாகரிகத்தில் தலைசிறந்து விளங்கிய நாடு நம் இந்திய நாடு. இது பலருந் தேர்ந்த உண்மை. அதிலும் இவ்விந்திய நாட்டின் தென் பகுதியாகிய தமிழ்நாடு இயற்கையன்னையின் எழினலம் மிக்கதொரு நிலமாக வெப்பமுந் தட்பமும் மிகாமலும் குறையாமலும் எஞ்ஞான்றும் ஒரு நிகர்த்தாய்ப் பல்வளமும் கொழித்து வருகின்றது. மக்கட் கூட்டத்தினருக்குத் தோற்றமாயிருந்ததும் இத்தமிழ்நாடெனவே ஆன்றோர் பலர் கூறிவருகின்றனர். ஆதியில் மக்கட் கூட்டத்தினர் காய்கனி கிழங்குகளை உணவாகவுண்டு உடுக்க உடையின்றி மரங்களினடியிலும் குகைகளினுள்ளேயும் தங்கித் தம் வாழ்வை நடத்திவந்தனர். காலஞ் செல்லச் செல்ல நாகரிக முதிர்ச்சிக் கேற்ப மக்கள் தங்களில் பயிர்த்தொழில் செய்து தங்கள் உணவைச் சீர்திருத்திக்கொள்ளவும் குடியிருத்தற்கு வீடுகளை அமைத்துக்கொள்ளவும் உடுப்பதற்கு ஆடையை நெய்துகொள்ளவும் தொடங்கினர். அங்ஙனமாக அவர்தம் நாகரிக வளர்ச்சிக்குத் தொடக்கமாயிருந்தது உழவுத் தொழிலே யாகும்.

மனிதன் காடுகளில் காய், கனி, கிழங்குகளைத் தின்று திரிந்துகொண்டிருந்த காலத்தே அக்கனி கிழங்குகள் மண்ணுட் புதையுண்டு அவை தமக்

---

ஏற்காத வகையில் ஆட்சி செலுத்துதல் இயலாது. அத்தகைய அரசு விரைவில் வீழ்ந்துபடும். பண்டைக்காலத்திலிருந்த முடி மன்னர்களில் முக்கியஸ்தர்கள்கூட குடும்பக்கலகம் விளைவித்ததாக (சுயநல விருப்பத்தால்) உணர்கின்றோமன்றி நாட்டில் வாழும் மக்களின் உணர்ச்சியைப் புறக்கணித்ததாக உதாரணம்கூட இல்லை. அப்படி செய்திருந்தால் நீண்டகாலம் அவர்கள் ஆட்சி செலுத்தியிருக்க முடியாது. ஆதலினால் தனி மனிதர் எவரும் நாட்டினர் ஒவ்வாத எச்செயலையும் செய்தல் அறிவுடைமையாகாது என்பதும், அவ்வாறு செய்யின் இன்னல்பல நேர்ந்து இடர்விளையு மென்பதும் அம்மையார் நீதியின் கருத்தாகும்.

கேற்ற மழை பெய்யுங் காலத்து மூளை தோன்றி வளர்தலையும் பின்னர் அவை மரம், செடி, கொடிகளாக முற்றிப் பயன் தருதலையும் ஊன்றிக் கவனித்திருத்தல்வேண்டும். பகுத்தறிவுடைய மனிதன் அவ்வூன்றிய கவனத்தின் பயனாகத்தானே விதைகளைத் தேர்ந்தெடுத்து நிலத்தைப் பண்படுத்தி அந்நிலத்தில் அவற்றை விதைத்து ஏற்ற காலத்தில் நீர் விட்டு மூளைக்கும்படி செய்திருத்தல்வேண்டும். இவ்வாறாக மக்கள் தன் முயற்சியால் தமக்கு வேண்டும் உணவுப் பொருள்களை பலவாறாகத் தோற்றுவிக்கலாயினர். இன்றைஞான்று உலகிற்றோன்றியுள்ள ஒவ்வொரு விஞ்ஞானப் பொருள்களும் மனிதனது முயற்சியால் விளைந்திருப்பதைக் காண்கிறோம். எனவே மக்கள் கூட்டத்திற்கு அவர்தம் உயிர்வாழ்விற்கு இன்றியமையாததாய உணவுப் பொருளுக்கென ஏற்பட்ட உழவுத் தொழிலிலிருந்தே நாகரிகம் தோன்றியிருத்தல் வேண்டும்.

இதனைத் திருவள்ளுவ நாயனர்,

"சுழன்றும் ஏர்ப்பின்ன துலகம் அதனால்
உழன்றும் உழவே தலை."

என்று கூறினர்.

மக்களுக்கு உயிர்நாடி போன்றிருப்பதொரு தொழில் உழவுத் தொழிலே. அவ்வுழவுத் தொழில் மிகப் பழைய காலந்தொட்டே நம் தமிழ் நாட்டில் மேன்மையுற்று விளங்கி மற்றைய நாடுகளையும் தன் வருவாயால் போற்றிப் பாதுகாத்து வந்தது. உழவுத் தொழிலைச் சிறக்க நடத்தி நாட்டிலுள்ள அரசு, படை, குடி முதலிய வெல்லாம் தம்மைச் சூழ்ந்து நிற்கச் செய்வாராயினர் நம் தமிழ் மக்கள். இதனை நம் தெய்வத் திருவள்ளுவனர்,

"உழுதுண்டு வாழ்வாரே வாழ்வார் மற்றெல்லாம்
தொழுதுண்டு பின்செல் பவர்."

என்று கூறுவாராயினர். இற்றை ஞான்று பிறநாடுகளி லிருந்து பெருந்திரளாக நெல் முதலான உணவுப் பொருள்கள் குறைந்த விலையில் வந்து நம் நாட்டில் இறக்குமதி செய்யப்படுகின்றன. இதேபோன்று பிறநாடுகளுக்கு நம் நாட்டு உழவுத் தொழிலான் விளைந்த பல்வேறு பண்டங்களும் ஏற்றுமதி செய்யப்பட்ட காலம் பலவாகும்.

இவ்வாறாக உழுவான் உலகத்துக் குயிராயிருந்தமையின் அவ்வுழவர் பெருமக்களின் கழ்பெருஞ் சிறப்பைச் செந்தமிழ் வானத்திலே இரு இள ஞாயிறெனத் திகழ்கின்ற தொல்காப்பியமும் திருக்குறளும் முதலாகப் பல்வேறு நூல்களும் எடுத்துக் கூறுவனவாயின. ஒரு நாடு நன்னிலை யெய்துதற்கு உணவுப் பொருள் முதலாவதாக நிறைந்திருத்தல்வேண்டும். வேண்டவே அவ்வுணவுப் பொருளைப் படைத்தற்கு உழவுத் தொழில் சிறப்புற்றிருத்தல் இன்றியமையாதது. இவ்வுண்மையைத் திருக்குறளில்,

"தள்ளா விளையுளும் தக்காரும் தாழ்விலாச்
செல்வரும் சேர்வது நாடு"

என உடன் பாட்டானும்,

"உறுபசியும் ஓவாப் பிணியும் செறுபகையும்
சேரா தியல்வது நாடு"

என எதிர் மறையானும் முதற் கண்ணதாக உழவைச் சிறப்பித்துத் திருவள்ளுவனார் கூறுதல் காண்க. இக்குறள்களுக்கு பரிமேலழகர் எழுதியுள்ள மெய்யுரை அறியத்தக்கது. இன்னும் செந்தமிழ்ப் பெரு நூல்களிலே முதன் முதலாகக் கூறப்படுகின்ற நாட்டுச் சிறப்பு நகரச் சிறப்புக்களில் உழவுத் தொழிலையும், உழவர்களையும் பற்றிக் கூறப்படாத நூல் யாதுண்டு? ஏரெழுபது முதலான நூல்கள் முழுதும் அவ்வுழவர்களின் தனிப்பெருஞ் சீரிய சிறப்பினை எடுத்துரைக்க எழுந்தனவே யன்றோ? அக்காலத் தண்டமிழ் மக்கள் அனைவரும் உழவர்களாகவே இருந்ததுமன்றி நாட்டில் அரசு செலுத்தியும் அரசர்களுக்கு மகட் கொடைக்கு உரியவர்களாகவும் சிறப்புப்பெற்றிருந்தனர். அம்மக்கள் இங்ஙனம் உழவுத் தொழிலைச் சீருற நடத்தி அத்தொழிலைத் தமக்கே உரிமையாகக் கொண்டு உலகுபுரந்து வந்ததனாலன்றோ கிழாரெனவும், வேளாளரெனவும், வேளாண் மாந்தரெனவும் பெயர் பெறுவாராயினர். அழுந்தூர்வேள், நாங்கூர்வேள், கொங்கு வேளாளர், துளுவவேளாளர், கார்காத்த வேளாளர், சோழிய வேளாளர் எனவும், சேக்கிழார், திலக்கிழார், நுடிசைக்கிழார் எனவும் அவர்கள் சிறப்புப் பெற்றிருத்தல் காண்க. மற்றும் மாங்குடிகிழார், நொச்சி நியமங்கிழார், அரிசில் கிழார், ஆவூர்கிழார், கோவூர் கிழார், உறையூர்கிழார், ஓடைக்கிழார் எனவும் பெயர்பெற்று வேளாண்மாந்தராயினமை காண்க. அவ்வாறு உரிமைபெற்ற கிழார்கள் பலரும் புலவராயிருத்தலும் அறிந்து மகிழற் பால தன்றோ? அதுவன்றி அக்காலத்து எட்டி, காவிதி, ஏனாதி முதலிய சிறப்புப் பெயர்கள் பெற்றவரும், அவ் வேளாண் மாந்தரேயன்றோ?

இனி அத்தண்டமிழ் உழவர் பெருமக்களின் தொழிற் சிறப்பையும் அவர்களது வஞ்சமில்லா எஞ்சா நாகரிக வாழ்க்கையையும் சங்க இலக்கியங்களின் துணையைக் கொண்டு ஒரு சிறிது நோக்குவாம்.

அக்காலத் தமிழ்ப் புலவர் பெருமக்கள் உழவர்கள் உலகு புரந்து வருதலை நன்கு அறிந்து தங்களால் பாடப்படும் தீந்தமிழ்ப் பாட்டுக்களில் அவர்களைப் பற்றி மிக அழகாகக் குறிப்பிட்டிருக்கின்றனர். சிலப்பதிகார நாடகாசிரியரான ஆசிரியர் இளங்கோவடிகள்,

"இரப்போர் சுற்றமும் புரப்போர் கொற்றமும்
உழவிடை விளைப்போர்" (சிலப் 10: 149;)

எனக் கூறியிருக்கின்றார். இக்கருத்து, உலகில் ஒப்பற்ற நூலாக விளங்குகின்ற திருக்குறளிலும்,

"பலகுடை நீழலும் தங்குடைக் கீழ்க்காண்பர்
அலகுடை நீழ லவர்."

எனப் பொலிவது காண்க.

புறப்பாட்டு என்னும் புறநானூற்றிலே வெள்ளைக்குடி நாகனார் என்னும் புலவர் பெருமான் அரசனிடம் தாம் நேரே சென்று "நினக்கு எதிராய பகைவரிடத்து நின் பொருகின்ற படை சென்று வென்று வருகின்ற

வெற்றிச் செல்வம் யாம் உழு நிலத்தே ஊன்றிய சாலினால் விளைவதாகும். ஆகலின் நீ உழவிடை விளைப்போராகிய எம்மை முதலிற் காப்பாற்றுதல் வேண்டும்" எனச் செவியறிவுறுத்தி யிருக்கின்றார். அப்பாட்டு,

"பொருபடை தரூஉம் கொற்றமும் உழுபடை
யூன்றுசால் மருங்கி னீன்றதன் பயனே
..........................................
பகடுபுறந் தருநர் பார மோம்பி
குடிபுறந் தருகுவை யாயின் நின்
அடிபுறந் தருகுவர் அடங்கா தோரே." என்பதாகும்.

அவ்வுழவர் தங்கள் பொய்யாத் தொழிலால் நாட்டைச் சீரும் சிறப்பும் உறுமாறு செய்துவந்தனர். அதனால் மக்கள் கவலையற்று வாழ்ந்துவந்தனர். தண்டமிழ்நாடு "புகழ்சால் விளைவயல்"களை யுடையதாகவும், "கரும்பல்லது காடறியாப் பெருந்தண் பணைகளை" யுடையதாகவும் இருந்தது. அத்தகைய யாணர் அறுஅவைப்பிற் காமர்கிடக்கையையுடைய அவர் அகன்றலை நாட்டை ஞானசம்பந்தப் பெருமான்,

"மஞ்சாரும் மாடம் மனைதோறும் ஐயம்உளதென்று வைகிவரினும்
செஞ்சாலி நெல்லின் வளர்சோ றளிக்கும் திருமுல்லை வாயிலதுவே."

எனச் சிறப்பித்துப் பாடுவாராயினர்.

தமிழ் நாடானது நுண்ணறிவு வாய்ந்த தமிழ் மக்களால் நானிலமாகப் பகுக்கப்பட்டது. இப்பரந்த உலகிற்கு "நானிலம்" எனப் பெயர் வந்ததும் இது குறித்தேயன்றோ! பொதுவாக நால்வகை நிலத்தும் உழவுத் தொழில் நடத்தப்படினும், கழனிசூழ் நிலமாகிய மருதநிலமே உழவுத் தொழிலுக்கு இன்றியமையாச் சிறப்பினதாயிருந்தது. அம்மருத நிலமக்கள் உழவுத் தொழிலினையே தங்கள் பெருந் தொழிலாகக் கொண்டு ஏனை நிலத்தார்க்கும் தங்கள் தாளாண்மையால் உணவு அளித்துவந்தனர், இதனை,

"கானுறை வாழ்க்கைக் கதநாய் வேட்டுவன்
மான்றசை சொரிந்த வட்டியும் ஆய்மகள்
தயிர்கொடு வந்த தசும்பும் நிறைய
ஏரின் வாழ்நர் பேரில் அரிவையர்
குளக்கீழ் விளைந்த களக்கொள் வெண்ணெல்
முகந்தனர் கொடுப்ப உகந்தனர் பெயரும்
தென்னம் பொருப்பன் நன்னாடு........."

எனப் புறநானூற்றில் கூறப்படுகின்றது. மற்றும்,

"முள்ளெயிற்றுப் பாண்மகள் இன்கெடிறு சொரிந்த
அகன்பெரு வட்டி நிறைய மனையோள்
அரிகாற் பெரும்பயறு நிறைக்கும் ஊர் எனவும்,

"வளைவல் பாண்மகள் வாலெயிற்று மடமகள்
வரால் சொரிந்த வட்டியுள் மனையோள்
யாண்டுகழி வெண்ணெல் நிறைக்கும் ஊர்."

எனவும் ஐங்குறுநூறு கூறுதல் காண்க. இச்சங்க இலக்கியப் பாட்டுக்கள் பிற்காலத்து எழுந்த துளியைக் கடலாகவும், அணுவை மலையாகவும் கூறும் உயர்வு நவிற்சிப் பாட்டுக்கள் போன்றனவா? அன்று; அன்று. சங்க இலக்கியங்கள் அத்தனையும் தன்மை நவிற்சி அணிகள் நிறைந்து உள்ளதை உள்ளவாறு எடுத்துக் கூறும் நூல்களாகத் திகழ்கின்றன. அவற்றில் ஒன்றேனும் வெற்றெனத் தொடுத்தலாகக் காணப்படமாட்டா. நிற்க, இத்திறமாகப் புலவர் மனத்தைத் தம் இருப்பிடமாகக் கொண்டு திகழ்ந்த தமிழ் வேளாளர் ஈகையிற் சிறந்து விளங்கிவந்தனர் என்பதையும் மேற்காட்டிய பாட்டுக்கள் விளக்குதல் நோக்குக. இன்னும் நற்றமிழ் வல்ல ஞானசம்பந்தர் திரு ஆக்கூருக்குச் சென்று பாடுங்கால்,

"வேளாளர் என்பவர்கள் வள்ளன்மையால் மிக்கிருக்கும்
தாளாளர் ஆக்கூரிற் றான்றோன்றி மாடமே." எனவும்,

"இன்மையாற் சென்றிரந்தார்க் கில்லையென்று தீந்துவக்கும்
தன்மையார் ஆக்கூரிற் றான்றோன்றி மாடமே."

எனவும் அழகுபடப் பாடுதல் காண்க. வேளாளர் என்ற பெயருக்குப் பல பொருள் உண்டேனும் அச்சொல் சிறப்பாகக் கொடைப் பொருளையே குறிக்கும். எனவே வண்மை யடியாகப் பிறந்த வேளாளர் என்ற பெயரையே தமக்கு உரிமையாக உடைய அவ்வுழவர்தம் ஈகைச் சிறப்பை எங்ஙனம் எடுத்துப் புகழ்வது?

"இரவார் இரப்பார்க் கொன்றீவார் கரவாது
கைசெய்தூண் மாலையவர்"

என்று வள்ளுவர் கூறிய வாய்மொழியை நோக்குக. இதைவிட அவர்தம் கொடைச் சிறப்பை எடுத்துரைத்தற்கு வேண்டிய சான்று யாது? அப் பொய்யா மொழி பொய்யா மொழியே.

"பெருவிறல் யாணர்த்தாகி யரிகர்
கீழ்மடைக் கொண்ட வாளையு முழவர்
படைமிளிர்த் திட்ட யாமையு மறைநர்
கரும்பிற் கொண்ட தேனும் பெருந்துறை
நீர்தரு மகளிர் குற்ற குவளையும்
வன்புலக் கேளிர்க்கு வருவிருந் தயரும்
மென்புல வைப்பின் நன்னாடு."

என்ற புறப்பாடல் எவ்வளவு அழகாக அவ்வேளாண் மாந்தர்தம் பேரிற் கிழத்தியரின் வள்ளண்மையை எடுத்துரைக்கின்றது. அகநானூறு என்னும் தமிழ் இலக்கிய நூலிலே பாலைத்திணைக்குரியதாகிய வேனிற் காலத்தைக் கூறுகிற இடத்தில் உழவரின் சீரிய தொழிலைப் பற்றிக் கூறப்படுகின்றது. அப்பாடல் வருமாறு:—

"......................தலிமகி ழுழவர்
பொங்கழி முகந்த தாவில் நுண்துகள்
மங்குல் வானின் மாதிரம் மறைப்ப
வைகுபுலர் விடியல் வைபெயர்த் தாட்டித்
தொழிற்செருக் கனந்தர் வீட வெழிற்றகை
வளியொடு சினை இய வண்டளிர் மாஅத்துக்
கிளிபோல் காய கிளைத்துணர் வடித்து
புளிப்பத னமைத்த புதுக்குட மலிர்நிறை
வெயில்விரி நிறத்த பயிலிதழ்ப் பசுங்குடை
கயமண்டு பகட்டிற் பருகிக் காண்வர
கொள்ளொடு பயறு பால்விரை வெள்ளிக்
கோல்வரைந் தன்ன வாலவிழ் மிதவை
வாங்குகை தடுத்த பின்றை யோங்கிய
பருதியங் குப்பை சுற்றிப் பகல்செல
மருத மரநிழ லெருதொடு வதியும்
காமர் வேனில்................"

இச்செய்யுளில் உழவர் கழனியில் விளைந்த நெல்லைக் களத்தேகொண்டு வந்து அவற்றை வைக்கோலிலிருந்து பிரிப்பதும் பிரித்த பின்னர் அவற்றைப் பொலி தூற்றுதலும் அங்ஙனம் தூற்றுங்கால் அவற்றிலிருந்து உண்டான துகள் சென்று மாதிரம் (திக்கு) மறைத்தலும் வைகறைக் காலத்தே அவர்கள் வைக்கோலைப் பரப்பி கடா விடுதலும் இவ்வாறெல்லாம் செய்த தொழில் மிகுதியான் உண்டான களைப்புத் தீரும்படி மாவடுவினை ஊறுகாயாகச் செய்து புளிப்பத மமைத்து புதுக்குடமலிர் நிறையுடன் அதனைப் பருகுதலும் அத்துடன் அமையாமல் கொள்ளும் பயறும் கலந்து சமைத்த கூழை வாங்கி உண்ணுகின்ற கையானது போதும் போதுமெனத் தடுக்குமாறு உண்ணுதலும் தம் முயற்சியால் தொகுத்த நெல்லை மிக உயரமாகச் சேரிடுதலும் வெயில் மிகுதியா யிருத்தலினாலே அவ்வெயில் தணியும்வரை மருத மரத்தின் தண்ணிழலில் தம் துணையாய எருதுகளுடனே தங்குதலுமாகிய கழிபெருஞ் சிறப்பானது கூறப்பட்டிருத்தல் படிக்குந்தோறும், படிக்குந்தோறும் பெரு மகிழ் வளிப்பதா யிருக்கின்றது.

இம்மட்டோ! சிலப்பதிகாரக் காப்பியத்திலே நாடுகாண் காதையில் அவ்வுழவரைப் பற்றிய செய்தியே மிகுதியும் கூறப்பட்டுள்ளது. புறப்பொருள் வெண்பாமாலை யென்னும் புறத்திணை இலக்கணத்திலே கிணைப் பொருநர் வாழ்த்துக் கூறுங்கால் உழுதொழி லுடையோரையே வாழ்த்துகின்றனர். ஆண்டு,

"தண்பணை வயலுழவனைத்
தெண் கிணைவன் திருந்துபுகழ் கிளந்தன்று"

என இலக்கணமும்,

"பகடு வாழ்கென்று பனிவயலுள் ஆமை
அகடுபோ லங்கட் டடாரித்—துகடுடைத்து
குன்றுபோற் போர்விற் குரிசில் வளம்பாட
இன்றுபோ மெங்கட் கிடர்."

என இலக்கியமும் கூறினர் ஐயனாரிதனார். அதுவன்றி அக்காலத்து அரசருக்கும் போர் வீரருக்கும், இரப்போர்க்கு இல்லை யென்னாது கொடுப்போர்க்கும் அவ்வழவரையும் அவர்தம் செயலையும் உவமையாக வைத்துப் பாடுவாராயினர் புலவர்கள். அவ்வெண்பா மாலையே அரசன் வீரத்தைப் பாடுமிடத்து அவனை உழவனாக உருவகித்து உரைத்திருக்கின்றது. அது,

"அஞ்சவருதானை அமரென்னும் நீள்வயலுள்
வெஞ்சினம் வித்திப் புகழ்விளைக்கும்—செஞ்சுடர்வேல்
பைங்கட் பனைத்தாட் பகட்டுழவ னல்கலால்
எங்கட் கிடையா விடர்"— என்பதாகும்.

நம் பழம் பெருந் தொல்காப்பியம் வாகைத் திணையில்,

"ஏரோர் களவழி யன்றிக் களவழித்
தேரோர் தோற்றிய வென்றியும்."

எனக் கூறுதல் காண்க. மற்றும் அகநானூற்றில் நெய்தல் நிலவலையர் தங்கள் வலைவளத்தை இரந்தோர் வறுங்கலம் மல்க வீசுதலை "பெருங்களந் தொகுத்த உழவர்போல" என்ற உவமையால் விளக்கப்பட்டிருக்கின்றது. இன்னும் குறுந்தொகை என்னும் நூலிலே வினைமுற்றி மீளுகின்ற தலைமகனொருவன் தன் கிழத்தியைக் காண்பதற் பொருட்டு விரையும் தன்னெஞ்சிற்கு உவமையாக ஈரம் பொருந்திய புலத்தில் விதை விதைத்தற்பொருட்டு அப்புலம் நோக்கி விரையும் ஓர் ஏர் உழவனைக் கூறப்பட்டிருத்தல் மனதிற்கு விம்மிதம் தருவதாயிருக்கின்றது. அப்பாட்டு,

"ஆடமைபுரையும் வனப்பிற் பணைத்தோட்
பேரமர்க் கண்ணி யிருந்த வூரே
நெடுஞ்சே ணாரிடை யதுவே; நெஞ்சே
யீரம்பட்ட செவ்விப் பைம்புனத்
தோரே ருழவன் போலப்
பெருவிதுப் புற்றன்று னோகோ யானே." என்பதாம்.

இவ்வாறாக உலகத்தோற்றம் முதல் மக்கள் கூட்டத்தில் நாகரிக வளர்ச்சிக்கும் புலவராற் பாடப்படுவதற்தும் அரசராற் பெருஞ் சிறப்புறுதற்கும் பண்டைக் காலத் தண்டமிழ் உழவரென்னும் வேளாளர் தலை சிறந்தனராயிருந்தனரென்பது பெறப்பட்டது. அவ்வேளாண் மாந்தர் உலகிற்கு உயிராயிருந்தமை பற்றியே,

"உழுவா ருலகத்தார்க் காணி யஃதாற்று
தெழுவாரை யெல்லாம் பொறுத்து."

எனத் திருவள்ளுவர் கூறுவாராயினர்.

"உழவுக்கும் தொழிலுக்கும் வந்தனை செய்வோம் வீணில்
உண்டுகளித் திருப்போரை நிந்தனை செய்வோம்." பாரதி.

# நமது தற்கால நிலை

———(0)———

(வீ. சங்கரையர்.)

(தொகுதி 20: 676-ம் பக்கத் தொடர்ச்சி)

இனி நாம் யோசித்துத் தீர்மானிக்க வேண்டியது என்னவென்றால் 'சில காலம் அதிக சுகம் அனுபவித்து அற்பாயுளாகி மாண்டு போவதா, அல்லது வெகு காலம் கொஞ்சம் சுகம் அனுபவித்து பூர்ணாயுளாகி வாழ்வதா' என்பதாகும். நவநாகரிகர்கள் கூறுவது 'ஒரு நிமிஷம் அளவற்ற இன்பம் பெற்று மரிப்பதே மேல்' என்பதேயாகும். நவநாகரிகத்தைப் பின் பற்றத் தொடங்கி யிருக்கின்ற பலர் அற்பாயுள் உள்ளவர்களாகவே யிருக்கிறார்கள் என்பதை நாம் தினமும் காண்கிறோம்.

நவநாகரிகத்தின் காரணத்தால் பலவித விஷஜுரங்கள் முதலிய நவ ரோகங்கள் தினே தினே விருத்தி யடைகின்றன. முன் காலத்திலோ, கவிகளும், பண்டிதர்களும், அரசர்களும், மற்றவர்களும் சிரஞ்ஜீவிகளா யிருந்து பரலோகம் சென்றிருப்பதாக நாம் பல புராணக் கதைகளிலிருந்து தெரிந்து கொள்கிறோம். நவநாகரிகம் சிறு வயதிலேயே ஜரையையும் நரையையும் உண்டுபண்ணி விடுகிறது. நமது ஆங்கில அரசாட்சியில் அநேக வைத்திய சாலைகள் எங்கும் ஏற்பட்டிருக்கின்றன. மருந்துக் கடைகளும் அங்ஙனமே. தினசரி, மாதப் பத்திரிகைகளில் பாதிக்கு மேல் மருந்து முதலியவைகளின் பிரசுரமே அதிகமாகக் காணப்படுகின்றன. ஆனால், வைத்தியம் இவ்வளவு தூரம் முன்னேற்ற மடைந்தும், எங்கும் வைத்தியசாலைகள் இருந்தும், அதிகமான அகால மரணம் ஏற்பட்டுக் கொண்டே தான் வருகிறது.

இதற்குக் காரணம் தும்பைவிட்டு வாலைப் பிடிப்பது போலவும் தண்ணீர் பூராவும் சென்ற பின் அணை போட நினைப்பது போலவுமேயாம். வியாதிகளைச் சம்பாதித்து வைத்தியனைத் தேடுவதைவிட வியாதி வாராமல் தடுப்பதே மேலாம்.

வியாதிகள் உண்டாகக் காரணம், மனிதனின் நடத்தை, உடை, ஆகாரம் இவைகளே யாகும். மருந்துகளைத் தேடுவதை விட நமது தினசரியைச் சரிப்படுத்திக் கொண்டால் வியாதியே நம்மை யணுகாது.

ஆகாரம்:—முன் கூறியிருப்பினும் இங்கே திரும்பவும் கூற வேண்டியிருக்கிறது. நம் முன்னோர் அன்ன விக்கிரயம் . மகா பாபம் என்று கூறி பிறர் மனைகளில் உண்ணார். சுமார் 50 வருஷங்களுக்கு முன் நமது நாட்டில் அன்ன விக்கிரய ஸ்தாபனங்கள் (காப்பி, சாப்பாட்டு ஹோட்டல்களே) கிடையா. இதனால் எவ்வாறு வியாதி பரவுகிறது என்பதை எடுத்துக் கூறு

வதானல் இங்கு இடம் போதாது. அந்த ஹோட்டல்களில் எவ்வாறு சாமான்கள் பக்குவம் செய்யப்படுகின்றன? யார் யார் எந்தெந்த விதத்தில் உட்சென்று சிற்றுண்டி முதலியவைகளை அருந்துகிறார்கள்? எத்தனை வியாதியஸ்தர்களின் எச்சில் முதலியன அங்கே சம்பந்தப்படுகின்றன? பாத்திரங்கள் எவ்வாறு சுத்தம் செய்யப்படுகின்றன? என்ற அசாஸ்திரீயமாகவும், ரோக ஹேதுவாயுமுள்ள பல விஷயங்களைக் கூர்ந்து ஆராய்ந்து யோசிக்கின்றவன், அன்றே அந்த ஹோட்டல்களுக்கு செல்லும் துர்வழக்கத்தை நிறுத்தி விடுவான். சந்தேகமேயில்லை.

வேதத்தில், அன்னம் பிரம்மம், அன்னம் பிராணம் என்றும், அன்னமே காலன், யமன் என்றும் கூறப்பட்டிருக்கிறது நம் முன்னோர்களுக்கு ஆகார மூலம், வியாதிகள் பரவுகிறது என்ற விஷயம் நன்கு தெரியும். வாத பித்த கபங்கள் இம் மூன்றும் நாம் புசிக்கும் ஆகார சாதனங்களிலிருந்து தான் உண்டாகிறது.

நிற்க, நோய் தீருவதும் ஆகாரத்தாலே தான்; மருந்துகளாலல்ல; மருந்து கொடுக்கும் வைத்தியர்கள் பத்தியத்தையே பிரதானமாகக் கூறுகிறார்கள். ஐரோப்பிய வைத்தியர்களும் வியாதிகளைத் தீர்க்க மருந்து உண்ணும் போது ஆகார நியமம் இருந்தாலன்றி வழியில்லை என்று கண்டு பிடித்திருக்கிறார்கள்.

விற்பனைப் பொருள்கள் சுத்தமாக இருக்க மாட்டா; விற்பவர்கள் லாபத்தையே கருதுவார்கள். ருசியும், சுகந்தமும், மனோரம்யமாகவும் உள்ள பதார்த்தங்களையே ஹோட்டல்களில் தயாரிப்பார்களே யன்றி ஆரோக்கியத்தைக் கொடுக்கும் பதார்த்தங்களை தயாரிக்க மாட்டார்கள்.

ஐரோப்பியர்கள் வைத்திய விஷயத்தில் ஆராய்ச்சி செய்து கண்டு பிடித்திருக்கும் சில விஷயங்களைக் கூறுகிறேன். அவைகளிலிருந்தே நமது பூர்வீகர்களின் புத்திசாலித்தனமும் நமது சாஸ்திரங்களின் மஹிமையும் நன்கு விளங்கும். நவநாகரிக பிரமை எவ்வளவு கெடுதலை யுண்டு பண்ணுகிறது என்பது நமக்கு நன்கு விளங்கும்.

ஆதிமுதற் கொண்டே குழந்தைகளை நல்வழிப் படுத்துவது தாயின் கடமையாகும். அதனாலேயே தான் 'தாயைப் போலப் பிள்ளை, நூலைப் போல சேலை' என்றும் 'தாயைப் பார்த்து பெண்ணைக் கொள், பாலைப் பார்த்து பசுவைக் கொள்' என்றும் கூறுகிறார்கள். ஆகையால் தாய் குழந்தைப் பருவம் முதல் குழந்தைகளுக்கு நல்லறிவைப் புகட்ட வேண்டும்; சோம்பலின்றி எவ் வேலையையும் அச்சமின்றி சரிவர செய்யப் பழக்க வேண்டும்; பெரியோர்க்கு கீழ்ப் படிந்து நடக்கும்படிச் செய்ய வேண்டும். 'இளங்கன்று பயமறியாது' என்றபடி சிறுவர்கள் நன்மை தீமை என்ற விவேகமின்றித் தங்கள் மனம் போனபடி செய்வார்களாகையால் நல்வழியில் திருப்பி நடத்துவது தாய்மார்கள் கடமையாகும். தந்தையும் இவ் விஷயத்தில் துணை புரிய வேண்டும். அறிவு புகட்டும் பல கதைகளை அவர்களுக்குச் சொல்ல வேண்டும்.

குழந்தை அழுகிறதென்பதற்காக அதன் மனம் போனபடி கேட்டவைகளைக் கொடுத்து வழக்கப்படுத்துவது தப்பாகும். உண்மையையே பேசப்

பழக்க வேண்டும்—கோபத்தை அடக்கவும், செட்டும் சிருமாக இருக்கும்படி உணர்த்தவும் வேண்டும். காலேயில் துயிலெழுந்து கைகால் கழுவி, ஸ்நானதிகள் செய்து சுசியாயிருக்கவும், செய்வனவற்றை திருந்தச் செய்யும்படியும் பழக்க வேண்டும்—நவநாகரிகர் குழந்தைகளே அவர்களின் போக்குப் போலவே நடத்தி அவர்களேக் கெடுத்து விடுகிருர்கள்.

"சிக்காகோ மெடிக்கல் ஸ்டாண்டார்ட்" பத்திரிகையில் டாக்டர் ஆக்ஸெல் எமில் ஜிப்ஸன் என்பவர் சர்க்கரையைப் பற்றி கூறவதின் சுருக்கம் இதனடியில் கூறுகிறேன்,

"சர்க்கரை நமது சரீரத்துக்குள் சென்ருல் ஒருவித உற்சாகத்தைக் கொடுத்தாலும், வயிற்றிற் போய் அங்குள்ள பிராணவாயுவை உறிஞ்சி ஜீரண அக்னியைக் குறைத்து புளிச்ச ஏப்பத்தை உண்டாக்கக் கூடிய திராவகத்ஹை உண்டாக்குகிறது."

எலிஜபெத் ராணி காலத்தில் ஒரு பவுண்டு (ராத்தல்) சர்க்கரையின் விலே 28 ஷில்லிங் அதாவது சுமார் 20 ரூபாய் என்று கேட்க எல்லாரும் ஆச்சரிய மடையலாம். இப்பொழுது ஒரு பவுண்டு சர்க்கரையின் விலே சுமார் ஒரு அணுவே யாகும். ஆகையால் சர்க்கரை ஜனங்களுக்கு சர்வ சாதாரணமாகி விட்டது. விலேயும் நயம்; ருசியும் அப்படியே—அது வயிற்றில் புளிப்பு நீரையும் போதை நீரையும் சிருஷ்டித்து அதனுல் சரீரம் ஒவ்வொரு மூட்டிலும், கூட்டிலும் முறிவு ஏற்படுகிறது. தவிர வயிற்றிலுள்ள ஜீரண நீர்களே அதிகப் படுத்தி சரீரத்துக்கு விஷத்தை ஊட்டி அதனுல் தலேவலி, சளி, நரம்புச் சிக்கல், ஜீவ தாதுக்களின் தளர்ச்சி இவைகள் ஏற்படும்படிச் செய்கிறது. சர்க்கரை அதிகமாக உபயோகப் படுத்துவதனுல் உண்ணுக்கு வளர்தல், கொலேக் கட்டி என்ற கல்லீரல், மண்ணீரல் பெருக்கும் உண்டாகிறது. சுமார் $\frac{1}{8}$ பாகம் ஜனத் தொகை 1931-ம் வருஷம் சர்க்கரை சேர்த்ததனுல் உண்டான ரோகத்தால் இறந்ததாகக் கணக்கிடப் பட்டிருக்கிறது. காப்பி, டீ முதலியவைகள் வழியாகவும், ஹல்வா, ஜிலேபி, மைசூர் பாகு முதலியவைகள் மூலமாகவும் நாம் எவ்வளவு சர்க்கரையை உட்கொள்ளுகிருேம் என்பதை ஆலோசிக்கவும்.

ஆகையால் நாம் நம்முடைய ஆகாரம் முதலிய தினசரியைகளே சரிப்படுத்த வேண்டியது அவசியமாகும். இவைகளேக் குறித்தே நமது சாஸ்திரங்களும் கூறுகின்றன. நாம் எல்லோரும் அனுதியாக வளர்ந்து நமக்கு ஆரோக்கியத்தைக் கொடுக்க கூடியதுமான பண்டைய நல்ல கொள்கைகளே அனுசரித்து அரோக திடகாத்திரர்களாக இருக்கும்படிக்குக் கடவுள் அருள் புரிவாராக.



# "கோபாலன்" கடிதங்கள்

சீதாபதி துணை

.....................

பேரன்புடைய அண்ணா!

மலரடியைத் திசைநோக்கித் தொழுகின்றேன். இங்கு நலம்; அங்கு அஃ்து அறிய அவா. அன்பிற் கெளியராய தங்களின் உயர்ந்த குணமும், ஆடம்பரமற்ற வாழ்வும், அநுபவஞானப் பெருக்கும் அடியனை அடிமை கொண்டு விட்டன. "மித்திரன்" முதலிய பத்திரிகையில் தங்கள் அரிய அநுபவக் கட்டுரைகளைப் பல வருடங்களாகப் படித்து மகிழ்ந்து வருபவர்களில் யானும் ஒருவன். தாங்கள் வரைந்து வெளியிட்டுள்ள சிறு சிறு கதைகள் என் மனதைக் கவர்ந்தன......மாதப்பத்திரிகை தங்களை ஆசிரியராகக் கொண்டு வெளிவருகிறது என்பதை யறிந்ததும் யானும் ஓர் சந்தாதாரனைச் சேர்ந்து இந்த ஓராண்டாகப் படித்து வருகின்றேன். தங்கள் பத்திரிகைக்கும் பிற பத்திரிகைகளுக்கும் ஒரு பெரிய வேறுபாடு கண்டேன். மற்ற பத்திரிகைகள் ஆசிரியருடைய ஒரே ஒரு கட்டுரையையோ, அதுவும் இல்லாமலோ நேயர்களுடைய கட்டுரைகளைத் தாங்கி வெளி வருகின்றன. ஆனால் இப் பத்திரிகையோ தங்களுடைய உழைப்பையே பெரிதும் கொண்டு வெளி வருகின்றது! நகைச் சுவைக்கென்று பலர் வரைந்த பற்பல வகையான கட்டுரைகளையும் கதைகளையும் படித்திருக்கின்றேன். எனினும் தங்கள் "பரமசிவம் படி யளக்கிற கொள்ளை"தான் என் மனதைக் கொள்ளை கொண்டது!

தங்கள் அன்பைப்பெற்ற அளவிறந்த பெயர்களில் யானும் ஒருவனாக வேண்டுமென்ற ஆசை அடியேற்கு இந்த ஓராண்டுகாலமாக உண்டு. ஆனால் அந்த ஆசை எவ்வாறு கைகூடும் என்ற எண்ணத்தோடு பல இரவுகளைக் கழித்தேன். இறுதியில் ஒரு வழி புலனாயிற்று. ஒரு சிறுகதை அல்லது கட்டுரை யெழுதி யனுப்பித் தங்களின் அன்பிற்கு உரியவனாகலாம் என்று தீர்மானித்தேன். என்னவோ தீர்மானம் இலகுவில் செய்து விட்டேன். அதை முற்றுவிக்கும் அறிவும் திறனும் உண்டா என்பதை என் ஆசைப் பெருக்கில் நான் சிந்திக்கவில்லை. இது வரை எந்தப் பத்திரிகைக்கும் கற்பனைக் கதைகளோ கட்டுரைத் தொகுதியோ வரைந்தனுப்பி வெளிவந்ததைக் கண்டு மகிழ்ந்தவ னல்லன். அங்ஙனமாக அநுபவஞானப் பெருக்கிற் சிறந்து வெளிவரும் இவ்வரிய வெளியீட்டிற்கு என்ன எழுதலாம் என்று நெடுகச் சிந்தித்து, கதரைப்பற்றி ஒரு சிறுகதை வரைந்தனுப்பினேன். அனுப்பிய பின்பு தங்கள் திருவுளத்திற்கு அது ஏற்றதாகுமோ, ஆகாதோ என்ற ஐயுற்று வரும் மாதத்தின் முதல் நாளை எதிர்பார்த்த வண்ணம் இருந்தேன். ஆனால் இவ்வளவு விரைவில் தங்கள் முழு அன்பிற்கு உரியவனாகும் பாக்கியம் கிடைக்கும் என்று ஒரு சிறிதும் எதிர்பார்க்கவில்லை. கட்டுரை யனுப்பிய ஆறும்நாள் தங்கள் ஆசிக்கடிதம் பெற்றேன்! ஆம், ஆசிக் கடிதந்தான்; பாராட்டுத்தான் என்று கொள்வேன். பின்பு வரைந்தனுப்பிய "துரைதாச சுந்தரத்"தைக் குறித்துத் தாங்கள் எழுதிய கடிதத்தில் "இது பாராட்

டக் கடிதமல்ல, ஆசிக் கடிதமுமல்ல; மனதைத் திறந்தெழுதிய உண்மைக் கடிதம். நண்பர்கள் பலரின் பந்தும் இக்கடிதம் உடையது" என்று எழுதியிருக்கின்றீர்கள்! இவை யெல்லாம் எளியனை மேலும் மேலும் ஊக்கி நல்ல நிலைமைக்குக் கொண்டுவர வேண்டும் என்ற தங்கள் மேலான சிந்தையையே காட்டுகின்றன.

தங்கள் அன்பிற்குரிய பல்லாயிரம் நேயர்களில் யானும் ஒருவனுகி விட்டேன். இனி ஒரே ஒரு குறை! அன்பும் அறிவும் ததும்பிப் பொலியும் தங்கள் புனித வதனத்தைத் தரிசித்து மகிழவேண்டாமா? பயிர்த்தொழிலாளர்களுக்கு வருடத்தில் பல மாதம் வேலையில்லையென மகாத்மா முதற்கொண்டு கூறுகின்றார்கள். ஆனால் எனது துரதிர்ஷ்டமோ என்னவோ ஓய்வென்பதே வாய்ப்பதில்லை. கடல் அலையைப்போல் ஒன்றன்பின் ஒன்றாக எதேனும் ஓர் வேலை வந்துகொண்டே இருக்கிறது! இன்று செல்வோம், நாளைச் செல்வோம் எனத் திங்கள் பல கழிந்தன. நாட்கள் செல்லச் செல்ல எனது ஆசையும் அதிகரிக்கிறது.

"எப்பொழுது ரங்கம் செல்வேன்? எம்பெருமானைக் காண்பேன்?
ஒப்பருங் குணத்தான் மிக்க உத்தமர் தம்மைக் காண்பேன்?"

எனும் கீதமே எனது நா உச்சரித்த வண்ணம் இருக்கின்றது!

இங்ஙனம்,
தங்களைத் தரிசிக்க விழைந்து நிற்கும்
தம்பி கோபாலன்.

---

சீதாபதி துணை

அன்புமிக்க அண்ணா!

வணக்கம். நலம்; வேணு முதலியவர்களின் நலம் அறிய அவா. அந்த நாளை—ஆடித்திங்கள் பதினெட்டாம் நாளை—தங்கள் மெய்த்திருவுருவைத் தரிசித்து மகிழ்வதற்கு ஏதுவான அப் புனித தினத்தை மறவேன். என் வாணாளில் என்றும் மறவேன். காவிரியும் கொள்ளிடமும் கை கூப்பித் தொழுவனபோல், திரைக்கரத்தால் மலர்தூவி இருமருங்கும் சென்றிடும் அத் திருவரங்கப் பெருநகரை யடைந்ததும் "பஞ்சணைப் பாம்பணையாகப் பள்ளிசேர் அஞ்சனவண்ணனை ஆதி மூர்த்தியை சேவித்துப் புனிதனானேன். தங்களைத் தரிசித்துத் தன்யனானேன். "இப்பெரிய இவ்வுலகில் என்னை இனி யேச்சு? என் பிறவித் துன்பமெலாம் இன்றோடே போச்சு!"

.........அண்ணா, அடியேன் அரங்கத்திற்குப் பலமுறை வந்திருப்பினும், தங்கள் அன்பிற்கு உரியவனான பின்பு வந்தது இதுதான் முதல் தடவை. ஆதலின் தங்கள் திருமாளிகை இதுவென அறியேனாதலின்...... வீதியிலுள்ள ஒவ்வொரு இல்லத்தையும் கவனித்து வருகையில் ஒரு வீட்டின் முகப்பின் விளங்கிய "ரங்கநிலயம்" என்ற எழுத்துக்கள் என் மனதைக் கவர்ந்தன. உடனே யான் அம்மாளிகையின் தாழ்வாரத்திற்குச் சென்றேன்.

அங்கே அறையில் கதருடை தரித்து, மேலே அங்கியோ ஆடையோ இன்றி நின்று கொண்டிருந்த ஒருவர் "யாரைப் பார்க்கிறீர்கள்?" என்று கேட்டார். …………"நாயுடுகார் வீட்டில் இருக்கிறார்களா?" என்று வினவினேன். அவர் நான் கேட்ட கேள்விக்கு மறுமொழிதராது "நீங்கள் யார்?" என்று என்னைக் கேட்டார். நான் எனது பெயரைக்கூறிய அளவில் "சேயைக் கண்ட தாயைப்போல் விரைந்து வந்து எளியனை இரு கரத்தாலும் அணைத்துத் தழுவி "உங்கள் அன்புத்தளையால், பிணைக்கப்பட்டு, நாள்தோறும் உங்கள் வருகையை எதிர்பார்த்துக் கொண்டிருக்கும் அண்ணன் நான்தான்" என்று புன்னகையோடு கூறிய அக்காட்சி எளியேன் மனதைவிட்டு என்றுமே அகலாது. நான் தங்களைத் தரிசிப்பதற்கு முன்பு தங்கள் திருவுருவைப் பின் வருமாறு சித்திரித் திருந்தேன். அரையில் உயர்ந்த பட்டாடை தரித்து, மேலே ஷர்ட்டும் கோட்டும் கழுத்துப்பட்டையும் பூண்டு, முகத்தில் உயர்தர மூக்குக்கண்ணாடி மின்ன, கையில் பிரம்பு பிடித்து நரைத்துப் பழுத்த தங்கள் உடலை இவ்வாறு அழகு படுத்திக்கொண்டு வெளியே உலாவுவீர்கள் என்றும்; புத்தகங்களும் பத்திரிகைகளும் நிறைந்த அழகிய பீரோக்கள் பல வரிசை வரிசையாகக் காட்சி தரும் அறையில் சில புத்தகங்கள் திறந்தும் சில மூடியும், பல பத்திரிகைகள் அடுக்கப்பட்டும், சில இறைந்தும் உள்ள மேஜைக்கருகே மெத்தை தைத்த சுழல் நாற்காலியில் அமர்ந்து, "ஊற்றுப் பேனா"வால் எழுதிக் கொண்டிருப்பீர்கள் என்றும் தீர்மானித் திருந்தேன்! ஆனால் பெரிய ஏமாற்றம்! கட்டமைந்த—அழகு பொலியும் தோற்றம்! அடியேன் தங்களைத் தவறாக உருவகம் செய்ததற்குக் காரணம் இல்லாமலில்லை. பல வருடங்கட்கு முன்பிருந்தே அநுபவஞானமணிகளை அள்ளியிறைத்து வந்திருக்கின்றீர்கள். அத்தகைய அறிவில் தேர்ச்சிபெற ஆண்டுகள் பல நிறைவெய்தி யிருக்கவேண்டுமென எண்ணினேன். சொல்வனவும் செய்வனவும் வெவ்வேறாகவே மலிந்து கிடக்கும் இக் காலத்தின் போக்கைக்கொண்டு தங்கள் புறத்தோற்றத்தைத் தீர்மானித்தேன். ஆனால் தாங்கள் வயது பதினேழு நிரம்புவதற்கு முன்பே பத்திராசிரியர் தொழிலை மேற்கொண்டதை ஏழையேன் எவ்வாறு அறிவேன்? தமிழ் எழுத்தாளர்களில் தங்கள் நடையே ஒரு புது வகை. சுவைக்குதவாத—உலகியற்குப் பயன்படாத கட்டுரைகளைப் பலர் எழுதித் தள்ளி "சிறந்த எழுத்தாளர்கள்" என்று தமக்குத்தாமே தருக்கி மகிழும் இந்நாளில் மக்கட்கு இன்றியமையாத புத்தி போதனைகளைத் தேன்பிலிற்றும் தெள்ளிய நடையில் உபகரித்து, ஆடம்பரமின்றி அமைதியுருவாய்ப் பொலிகின்றீர்கள்! தங்கள் உரை நடையும், போதனையும் போலவே தங்கள் குணாதிசயங்களும் தனிப்பெருமை வாய்ந்தவை! தாங்கள் உவந்தளித்த கதைக் களஞ்சியத்தைச் சுவைத்துப் படித்தேன். அடுத்த கடிதத்து அதைப்பற்றி வரையலாம் என்று எண்ணி யுள்ளேன். தங்கள் ஆணைப்படி "இலம் வாங்குவதின் அநுபவம்" என ஒரு கட்டுரை அனுப்பியுள்ளேன். ஏற்றருள்க.

தங்கள் அன்பிற்குரிய தம்பி
கோபாலன்.

---

# சூதாட்டம்

[கோட்டாறு-தே. ப. பெருமாள்.]

பண்டைநாளில் பொழுது போக்கிற்கு நமது நாட்டுமக்கள் கையாண்ட விளையாடல்கள் பல. அவைகளை நல்லன தீயன என இருவகையாகப் பிரிக்கலாம். நல்லன மக்கள் உடற்கு உரன் நல்கி அவரது வாழ்விற்குச் செம்மை பயந்தன. தீயனவோ உடல் நலனைக் கெடுத்து அவரது வாழ்விற்குத் துன்பத்தை ஈந்தன. இத்தகைய இவ்விரு திருவிளையாடல்களுள்ளும் நல்லன என்பன நாட்போக்கில் மறைந்தன. தீயனவோ நாட்போக்கில் நன்கனம் செம்மைபெற்று வருவவாயின. அவ்வாறு ஆக்கம் பெற்ற தீய விளையாடல்களுள் ஒன்று சூதாட்டம்.

சூதாட்டம் முன்னாளில் ஒன்றிரண்டு வகையாகவே இருந்தது அவற்றுள்ளும் கட்டை உருட்டுதலே தலைமை சான்றிருந்தது. ஆனால் இஞ்ஞான்று அவ்விளையாடல் பல பிரிவாகப் பிரிந்துள்ளது. இன்று எம்மக்களிடமும் காணப்படும் சீட்டாட்டம், சங்குசக்கர விளையாட்டு, வட்டு வீசுதல், தாயம் ஆடல் ஆகியன இச்சூதின் பிரிவுகளே. அஃதுடன் வளையம் வீசுதல், வளையஞ் சுற்றுதல், சீட்டெடுத்தல், காகிதக்கூடு பிரித்தல் ஆகியனவும் இதன் கூறுகளேயாம்.

இச்சூதாட்டத்திற்குரிய கருவிகள் பலவும் முன்னாளில் நமது நாட்டிலேயே செய்யப் பெற்றுவந்தன. ஆனால் இன்று அக்கருவிகளெல்லாம் மேனாட்டினின்றும் நமது நாட்டிடை வந்திரங்குகின்றன. ஆண்டுதோறும் எண்ணிக்கையற்ற பணத்திற்கு மேனாட்டு மக்கள் நமது கண்ணைக் கவருந்தன்மையவான இக்கருவிகள் செய்து இவண் அனுப்புகின்றார். அவ்விளையாடு ஆடும் முறைமையையும் அவற்றின்கட் பொறித்து அனுப்புகின்றார். இதனால் நம் மக்கள் அக்களியாட்டின் இயல்பறிந்து மிகுந்த போழ்தையும் அவ்விளையாட்டிற்காகச் செலவு செய்கின்றனர். விளையாட்டுப் போழ்து பெருகவே சூது கருவிகளும் அதிகம் செலவாகுகின்றன. கருவிகளின் செலவு பெருகவே மேனாட்டு மக்கட்கு பணமும் அதிகம் கிடைக்கின்றது.

இச்சூது விளையாடுதலால் வருந்தீமைகள் பல. அவை எண்ணிலும் எட்டிலும் அடங்காவாய்ச் செல்லும். பண்டையோர் பொழுது போக்கிற்குக் கையாண்ட விளையாடல் பின் அவர் வாழ்வையே கவ்வுதலாயிற்று. சிறுகயல் கொண்டு பெருமீன் கவருந் தூண்டிலையொப்ப இச்சூது முதற்கண் மகனைத் தன்னில் இழுக்கிறது. இதன் வயப்பட்ட மகன் பொருளை இழக்கிறான். பொருளில்லான் வாழ்வு புனிதம் இழக்குமன்றோ? அவன் வறுமையுறுகிறான். உண்ண உணவில்லை. அவனுக்கு உடுக்க உடையும் இல்லை.

அவன் தூய-கொழுமை தாங்கிய உடல் கவலையால் வாடுகிறது. நலிந்து மெலிந்து துரும்பின் உருவை எய்துகின்றது. உண்ணுதற்கு உணவில்லா இவன் பின் உடற்கு உரனெனத் தோன்றும் மதுவை உண்ணப்புகுகின்றான். மதுவுண்டவன் செய்கையினைக் கூறவும் இயலுமோ? விலங்கினும் இழிவு எய்துகின்றனன். இவன் குடிமயக்கத்தால் வாயில் வந்தன உளறி வழிநெறி பின்சண் உருண்டு புரளுகின்றான். இதைக்கண்டு நகைக்கும் மக்கள் பலர். தூற்றுவரோ எண்ணிலர். மனிதப் பிறப்பின் மாண்பு அவனை அஃதுடன் விட்டகலுகின்றது. பின் அவன் அன்பற்று அருளற்று அழகுப் பொலிவுமற்று வாழ்வு நடாத்தத் தொடங்குகின்றான். இவ்வாழ்வு நல்வாழ்வாகுமோ? இன்ப வாழ்வாகுமோ? இறைகளோ டிசைந்த வாழ்வாகுமோ ? இவ்வாழ்வு இவனைக் கடைதேற்றாது துன்பக் குழியில் அமிழ்த்தி வெந்துய ருழக்கச் செய்யும் கொடிய வாழ்வன்றோ?

நளன் சூது ஆடியதால் எத்தகைய துயருழந்தான் ? அவன் நாட்டை இழந்தான்; நகரை இழந்தான்; வீட்டை மறந்தான்; வேண்டுவோரையுந் துறந்தான். பின் வெங்கானகமன்றோ ஏகினான். அங்காவது அவன் நல்வாழ் வடைந்தானோ? காதலியைப் பிரிந்தான். கடுநவை எய்தினான். மேனியின் மேனிறம் குன்றப் பெற்றான். தன்னினும் இழிவுபட்ட மன்னனிடம் வாகு கனுயுமன்றோ அமைந்தான்!

சூதைக்கொண்ட பாண்டவர் எத்தகைய துன்புற்றார்? காடு நகர் வீடு வாசல் யாவும் இழந்ததோடு தங்காதலியையு மன்றோ இழந்தனர்? என்னே சூதின் வன்மை! பிறன் தங்காதலியை அவையின் முன்னர் அவமானஞ் செய்ய அதுகண்டு கண்சிவந்தும், உதடு துடித்தும், நெஞ்சு குமுறியும், நெடு வுடல் ஆடவும் பெற்றனரேயன்றி வேறு என் செயப்பெற்றார்? பாண்டவர் சூது ஆடாதிருப்பின் இங்ஙனம் வருவாரோ? இவ்வாறு அயலான் தம் மனை வியை மானமழிக்க வாளா விருப்பரோ?

இன்னும் பாண்டவர் போர் நிகழ்தற்கும் ஏதுவாயிருந்தது இச்சூதே யன்றோ! அப்போரில் இறந்த பரிகள் எத்தனை! மடிந்த கரிகள் எத்தனை! கையிழந்த சட்டிளைஞர் எத்தனை! காலிழந்த போர்வீரர் எத்தனை! நிலை யிழந்த வலியோ ரெத்தனை! தலையிழந்த தறுகணாள ரெத்தனை ! அங்கு அலையும் கூளியும் எழுந்தாடச் செங்குருதி யாறன்றோ பெருக்கெடுத்தோடி யது. இஃதெல்லாம் இச்சூதால் விளைந்ததன்றோ! சூதின் வன்மையை உன்ன நெஞ்சம் குமுறுகின்றதே! நிலை தளருகின்றதே!

இச்சூது இன்னும் நண்பனையும் கொடும் பகைவனாக்குகின்றது. இணை பிரியாத நண்பர் இருவர் இச்சூதினை விளையாடுவாராயின் அவர்தம் நட் பிற்கு இறுதி விளைதல் காணலாம். அவர் தம்முள் பிணக்குக்கொண்டு ஒரு வரை யொருவர் தூற்றதல் செய்து கலாம் விளைக்கின்றனர். கலாம் முதிரவே அவண் ஆயுதம் நடமாடத் தொடங்குகின்றது. பின்னர் அவண் குருதி கொப் புளித்தலைக் காணலாம். நண்பர் எந்நிலை ஆயினார்! சூதால் வந்த வினைதானே இஃதும்.

சூது விளையாடல்கூடாது எனப் பழந்தமிழர் தமது பின்வரும் மக்கட்கு அறிவுறுத்தி வந்தனர். தமது பின்னோரின் நன்மையைக் கோரிய அன்னார்

சிறார் கற்கும் சிறுநூற்களின் வாயிலாகவும் அதன் கேட்டை விளக்கி அச் சூதை விளையாடாதவாறு தகைந்து வந்தார். சூதும் வாதும் வேதனை செய்யும், 'சூது விரும்பேல்' என்பன போன்ற பொன்மொழிகள் சிறார் கற்கும் அந் நூற்கண் அமைந்து விளங்குதலே அதற்கு ஏற்ற சான்றும். பழந்தமிழர் அதன் கேட்டை விளக்கி வெளியிட்ட சில பொன்மொழிகள் வருமாறு:—

வேண்டற்க வென்றிடினுஞ் சூதினை வென்றதூஉந்
தூண்டிற்பொன் மீன்விழுங்கி யற்று.
ஒன்றெய்தி நூறிழக்குஞ் சூதர்க்கு முண்டாங்கொல்
நன்றெய்தி வாழ்வதோ ராறு.
சிறுமை பல செய்து சீரழிக்குஞ் சூதின்
வறுமை தருவ தொன்றில்.
உடைசெல்வ மூணொளி கல்வி யென்றைந்து
மடையாவா மாயங் கொளின் —திருவள்ளுவனார்.

அறத்தை வேர்கல்லு மருநரகிற் சேர்க்குந்
திறத்தையே கொண்டருளைத் தேய்க்கு—மறத்தையே
பூண்டு விரோதஞ் செய்யும் பொய்ச் சூதை மிக்கோர்கள்
தீண்டுவரோ வென்றார் தெரிந்து.
உருவழுக்கு முண்மை யுயர்வழிக்கும் வண்மைத்
திருவழிக்கு மானஞ் சிதைக்கு—மருவு
மொருவரோ டன்பழிக்கு மொன்றல்ல சூது
பொருவரோ தக்கோர் புரிந்து. —புகழேந்தியார்.

சீலநற் றருமமெய் சிதைக்குந் தெண்டிரை
வேலை முற்றிரு நிலக்கிழமை வீழ்த்திடு
மாலுறத் திடுங்கவ றுடன் மன்னகேள்
கோலிழுக் கரசர்தங் கொள்கைத் தென்பவே.
என்னுக சூதினை யிகலி வென்றதூஉங்
கன்ன மேற்கொடு வலைகரந்து வேட்டுவ
ருன்னுற வமைத்திடு முணவை யோர்கிலாப்
புள்ளின மருந்தின போலு மென்பவே.—அதிவீரராம பாண்டியர்.

புலைமயக்கம் வேண்டிற் பொருட் பெண்டிர்த் தோய்தல்
கலைமயக்கம் கள்ளுண்டு வாழ்தல்—கொலைமுனிந்து
பொய்மயக்கஞ் சூதின்கட் டங்கலிவை மூன்று
நன்மையிலாளர் தொழில். —நல்லாதனார்.

இவ்விருபதாம் நூற்றாண்டைக் கவிஞர் பாரதியார் சூதின் கேட்டை,

"வஞ்சகத்தினில் வெற்றியை வேண்டார்
மாயச் சூதை பழியெனக் கொள்வார்"

என்ற பொன்மொழிகளால் விளக்குவா ராயினர்.

அன்று இச்சூது மறைமுகமாகவே விளையாடப்பட்டு வந்தது. சூதினை விளையாடுவோர் பிறமக்கள் பழிச்சொல்லுக்கு அஞ்சிக் கங்குற் பொழுதினில் விளையாடி வந்தனர். சூது விளையாடும் இடமும் பாழ்மண்டபமும் ஆரவமற்ற இடமுமாகவே இருந்தது.

ஆனால் இன்று இச்சூது யாண்டும் விளையாடப்படுகிறது. மக்கள் சூதினை இழிதொழிலாகக் கருதுகின்றாரில்லை. பெரியோர் முன்னிலைக் கண்ணும் இன்றைய மக்கள் நாணம் வெட்கம் இலராய்ச் சூதினை ஆடுகின்றார். ஆலயம், நூல் நிலையம், கல்விக் கழகம், கடற்கரை யாதிய தெய்வ மணங்கமழும் இடமெல்லாம் இன்று சூதுக் கழகங்களாகவே ஒளிர்கின்றன.

ஆலயம் என்றால் என்னே? ஆண்டவன் உறையும் இடமன்றே ஆலயம். அவ்வாலயத்தின்கண் மக்கள் எற்றுக்குச் செல்கின்றார்? ஆண்டு இறைவனைக் கண்டு வழிபட்டு இன்பநிலை யெய்துதற்கன்றே ? ஆண்டு மனம் எத்துணை அமைதியாய் இருத்தல்வேண்டும்! எத்துணைப் பக்தியாய் இருத்தல்வேண்டும்? அமைதியும் பக்தியும் இல்லையாயின் நம்மிடை அவ்வாண்டவன் அருள் எங்ஙனம் சுரக்கும்? அமைதி விரும்பும் இடத்திலா இழிந்த சூதினை விரும்புவது? இது எத்துணை அறியாமை! எத்தகைய கொடுஞ்செய்கை! அங்குச் சூதினை ஆடுவோர்க்கு ஆண்டவன் அருள் சுரப்பனோ? அன்பு பெருக்குவானோ? இன்பம் ஈவானோ? நலம் நல்குவானோ? அவ்வாண்டவன் அவர்களை ஒறுக்கவே செய்வன். அதனால் அவர்கள் வாழ்வு குலைந்து மன்பதையில் துன்பம் உழன்று பின் நரகிடை வீழ்குவர்.

பண்டை மக்கள் இயற்கையை இறைவனாகக் கண்டார்கள். அறியாமை அரும்பிய மக்கட்கு அவ்விறைவனைப் புலப்படுத்துதற்குத் திருக்கோயில் செய்தார். அத்திருக் கோவிலின்கண் இயற்கையின் முடிபாய இறைவன் ஒளிர்கிறான். இறைவன் ஒளிரும் அத்திருக் கோயிலின்கண் ஐந்தீந் தொழிலில் ஒன்றாய சூதினை யாடுவோர் துன்பம் உழலாது வேறென் செய்வர்? நரகிடைச் செல்லாது பிறி தெங்குறுவர்?

நூல் நிலையம் மக்களின் அறிவைப் பெருக்குதற் கென்று அமைக்கப்பட்டது. பயன் கருதாப் பணியாற்றும் பெருமக்கள் பலர் ஊர்கடோறும் செல்லு மக்களைக் கண்டு பொதுப்பணிக்கென அவரிடம் செல்வம் பெற்று சிற்சில நூல் நிலையங்களை ஆண்டாண்டே அமைத்தார். அவண் உயரிய நூற்களையும் பெருக்கிவைத்தார். இன்று அந்நிலையத்தின் நிலையென்ன? பரிதியெழுந்தது முதல் அது அடையுங்காறும் ஆண்டுச் சூதாட்டம் நடைபெறுகின்றது. நூற்களைக் கற்கவருவோர் நிலையத்தை நடாத்தும் நண்பருடன் சூதினைப் பயில்கின்றார். இதைக்கண்டு நிலையம் நிறுவிய நல்லறிஞரும் தமது உழைப்பின் போக்கை எண்ணி மனம் உழலுகின்றார். அவரால் என்செய்ய இயலும்? நூல் நிலயத்தை நடாத்தும் நண்பர் அவர்தம் கிளைஞராய் அமைந்தார். கடுத்துப் பேசி அத்தொழிலைத் தகைதற்கும் தமக்கு அச்சம். அதிலும் அந்நிலையம் நிறுவுதற்குச் செல்வம் அதிகம் ஈந்தவருள் அந்நிலையத்தை நடாத்

தும் அந்தணபரும் ஒருவராவர். இத்தகைய இடைநிலையில் அவர் வாளா இருந்தார்.

கல்விக்கழகமோ மக்கள் அறியாமையைக் கல்லுதற்கு அமைந்த கழகம். அக்கழகம் அருள்கொண்டது. அன்பு கொண்டது. மாசற்றது. இறைவன் இயல்புகளை இயம்புவது. இக்கழகம் இன்று சூது நிலயமாய் விளங்குகிறது பாடம் தொடங்கும் முன்னரும் பாடம் முடிந்தபின்னரும் இக் கழகத்திலே சூதாட்டம் நடைபெறுகின்றது. மாணவன்மாரே இவ்வாட்டம் ஆடற்கு முனைந்துநிற்கிறார். இன்று கல்விச்சாலை மாணவர்மீது கருத்தை இருத்துங்கால் அவரில் சூது அறியாத தீதற்றோரைக் காண்டல் அரிது. யாவரும் சூதில் தேர்வு பெற்றவராகவே இருக்கின்றனர். ஒரு மாணவர் ஒருகால் சூதாடுதற்கு அறியாதிருப்பினும் அவர் பிற மாணவரால் எள்ளி நகையாடப் படுகிறார். என்னே மாணவர் சூதிற் குகந்த பெற்றிமை! சில போழ்தில் மாணவருடன் ஆசிரியன்மாரும் விளையாடுகிறார். இவர் தமது உயரிய மதிப்பையும் பொறுப்பையும் அறிகிறாரில்லை. இத்தகைய பொறுப்பறியாத ஆசிரியர் ஆசிரியராவரோ? இவர் புல்லரினும் கீழ்ப்பட்டோரன்றோ! மாணவரைக் கெடுக்கும் மடமையர் இவரேயன்றோ?

கடற்கரைக்கு மக்கள் என் செல்கிறார்? தூயகாற்றை நுகர்ந்து உடற்கு நலன் தேடுதற்கன்றோ? ஆங்குமா சூதினை விளையாடல் வேண்டும்? இவ்வினவை நாம் அவண் விளையாடுவோர் மாட்டு வினவுங்கால் அவர் அதற்கு நேர்மையற்ற பதிலுரைப்பர். பொழுது கழியவில்லை யென்றும் சுறுசுறுப்பு பெறுதற்கென்றும் அவரது நா நவில்கின்றது. இது வெற்றுரையேயாம். அறிவுடைமக்கள் இங்ஙனம் கூறார். அறிவகன்ற புன்மக்களே இங்ஙனம் உரைப்பர். கடற்கரை என்பது என்னை? அழகெலாம் திரண்டு பொலியும் ஒரு இன்ப நிலயமன்றோ. அங்குக் காலையிலும் மாலையிலும் எத்தகைய இயற்கை அழகுகள் எழும்புகின்றன? காலைக்கதிரவன் எழுச்சி ஆழிக் கரையில் பொன்னுகவன்றோ பொலிகிறது. இத்தகைய அழகைக் கண்டன்றோ நம் முந்தையர் இன்பந் துய்த்தார். மாலையில் கதிரவன் மறைவு. எங்கும் செம்மை நிறம். கடலிலே அலைகள் உயர்ந்து எழும்புகின்றன. அத்திரைகள் பாறைகளில் விரைந்து உராய்கின்றன. என்ன இனிமையான ஒலி! இவ் வொலியிலன்றோ பாவலர் இன்பம் கண்டார்! இறை கண்டார்! இவ் வையத்தின் இயற்கை யெழிலனைத்தும் ஒருங்குகண்டார்! பொழுது கழியாத மக்கள் இத்தகைய இன்னொலியில் சிந்தை செலுத்தலாமன்றோ? சுறுசுறுப்பில்லா மக்கள் ஆதித்தன் சாயும் அழகினில் உள்ளத்தை உறைவிக்கலா மன்றோ. தம் முணர்வை தடுகரையின்றி நிற்கும் ஆழியின் உயரிய நுட்பத்தில் பதிக்கலாமன்றோ? இஃதெல்லாம் விட்டா சூதினில் கருத்தை இருத்துதல் வேண்டும்?

இனி இச்சூது தனி நடனம் புரியும் காலம் ஒன்றுளது. அதுவே திருவிழாக்காலம். திருவிழாவின்போது மக்கள் எண்ணிக்கையற்ற பணத்தினைச் சூதால் இழக்கின்றார். அப்பணத்தை இழந்த அவருள்ளம் அலமந்து எத தகைய தீச்செய்கையும் செய்ய ஊன் பெற்று நிற்கிறது. சூதால் பணமிழந்து மனம் நொந்த அன்னார் எத்தகைய தீச்செய்கை செய்கிறார்! அம்மா! நினைக்க நெஞ்சு நெட்டுயிர்ப்புக் கொள்ளுகின்றது. தனது உயிரனைய நட்டாரை வெறுத்தல் செய்கிறார். பின்னர் மதுவை யருந்துகிறார். மதுவருந்திய

பின்னர் அவர் செய்யும் செய்கையே கொடுஞ்செய்கையாகும். அச்செய்கை பெண்களின் கற்பைக் கெடுத்தலாம்.

திருவிழா என்பது பண்டைநாள் தொட்டு நாட்டிடை இறைவற்கு நடத்திவரும் ஒரு பூசனையாகும். இதி னுட்கருத்தை ஆயுங்கால் திருவிழாக் காலத்திலாதல் மக்கள் இறைவனை நினைந்து வழிபடல் வேண்டுமென்பதே. ஆனால் இற்றைஞான்று திருவிழாக் காண வருவோரனைவரும் ஆண்டவனைத் கண்டு வழிபடற்குவருபவரல்லர். இவருட் பெரும்பாலரும் திருவிழாக் காலத் திலாதல் சூதினை மகிழ்வாய்—செழிப்பாய் விளையாடலாம் என்னும் நோக் கத்துடன் வருபவரேயாம். இதற்காக இவர் முன் கருதல் மிகக்கொண்டு திருவிழாவின் ஒன்றிரு திங்கட்குமுன்னரே செல்வத்தைச் சேர்த்தும் வைக் கின்றனர். திருவிழாக்காலத்தில் வருந்திச் சேர்த்த அச்செல்வ மனைத்தையும் ஒருஞான்றில் தோற்றும் விடுகிறார். இவரின் அறியாமை இருந்தவாறு என் னே! பின்னரே இவரது உள்ளம் தீச்செயலுட் புகுகின்றது. ஆண்டவனைத் தொழ வைத்த திருவிழாவின் போக்கென்னே! என்னே!

இஞ்ஞான்று இச்சூதாட்டத்தை வாணிபமாக வைத்து வயிறுவளர்க்கும் புல்லறிவாளர் பலர். இவர் காட்சிசாலை என்னும் பெயரான் ஆண் டாண்டே சூதக்கழகம் நிறுவியுள்ளார். ஈண்டு சூதின் பல திற விளையாட்டுக் களைக் காணலாம். இஃதுடன் ஈண்டு நடனம், நாடகம், கண்கட்டி வித்தை, வட்டக் காட்சி ஆகியனவும் நடத்தப்பட்டு வருகின்றன. ஒருநாள் யாமும் இக்கழகம் செல்ல நேர்ந்தது. சூதால் பணத்தை தோல்வியுற்ற ஒரு நண்பரி டம் யாம் இவ்விளையாடல்களெல்லாம் சூதுடன் நடத்தும் காரணம் என்ன வென வினவினேன். அவர் எம்மீது காய்ந்து வீழ்ந்தார். அவர் காய்ந்து வீழ்ந்த காரணம் என்னவென பிறிதொரு நண்பரிடம் வினவினேம். அதற்கு அந்நண்பர் மற்றவர் சூதால் அன்று தாம் கொணர்ந்த பணமனைத்தும் இழந் ததே அதற்குக் காரணம் என்றுரைத்தார். இவரிடையே மற்றக் களி விளை யாட்டு நடத்தக் காரணமென்ன வென வினவினேன். அவர் அதற்கு மாற்ற முரைத்தார். என்னவெனின் சூதால் பணமிழந்தோர் மனம் இவ்விளையாட் டிலாதல் சாந்தி அடைதல்வேண்டும் என்னுங் கருத்துக்கொண்டே கழகத் தாரால் இவ் விளையாட்டுக்கள் வைக்கப்பட்டன என்பதே. அவருரைத்த பதில் ஆண்டவனே! இது எத்தகைய ஏமாற்று! இவர்கட்கு உன்னருள் பாலிக்குமோ? நீ இவர்களை நல்வழியில் நடாத்துவாய்!

இத்தகைய சூதை நாம் விளையாடுதல் கூடாது. சூது விளையாடும் இடங்களிற் சென்று நோக்குதலும் கூடாது. ஏனெனின் சூதுவிளையாட்டை நாம் நோக்குங்கால் நமக்கு அதன்கண் அவா எழும். அவ்வவா எழாதவாறு இயற்கையாகவே நாம் கரந்த நடை கொள்ளல்வேண்டும்.

இச்சூது நாட்டைவிட் டகன்றாலன்றி நாடும் நன்னிலை பெறாது. சூது டைய நாட்டிலே அவாவென்னும் வெம்புனல் யாறு பெருக்கெடுத்தோடும். தன்னலமெனும் பயிர் தழைத்தோங்கும். அப்பயிர் வெகுளி, காழ்ப்பு கொலை யாதிய கொடுமணி விதைகளை ஈனும். அம்மணிவிதைகளை உண்டநாடு பின் என்நிலையடையும்? அந்நாடு அறமிழந்து ஆக்கமிழந்து, ஊனிழந்து ஊக்க மிழந்து உழலும். அந்நாட்டிலே அன்பு தலைக்காட்டாது. பிணக்கு பெருகியி ருக்கும். கொலை நிறைந்திருக்கும். கொலைநிறைந்த நாட்டிலே ஆண்டவன் ஒளிர்வானோ? அவன் அருள் கொடுப்பானோ? அந் நாட்டிலே ஆண்டவன்

# தமிழ்நாட்டு வீரசைவர்களும் அவர்க்குரிய நூல்களும்

(சிதம்பரம்-K. V. சிவசுப்ரமணியன், B. A.)

இந்தியாவின் பல பாகங்களிலுமுள்ள வீரசைவர்கள் அந்தந்த நாட்டு நடையுடை பாவனைகளைப் பின் பற்றி காலோப் பன செய்து ஒழுகுவாராயினர். வட நாட்டு வீரசைவர்கள் கன்னடியர் (கன்னிடையர் அன்று) என்றும் சங்கமர் என்றும் வழங்கப் பெறுகின்றனர். வட நாட்டார் அய்யா, அப்பா, செட்டியார் முதலிய பல பட்டப் பெயர்களைப் பெற்றுள்ளனர். ஆனால் தமிழ் நாட்டு வீர சைவர்கள் "ஐயர்" என்ற ஒரே சிறப்புப் பட்டத்தைப் பெற்றனர். நம்மிந்தியாவில் முதல் முதல் வீர சைவம் தோன்றிய இடம் யாது என வினவின் அதற்குத் தக்கபதில் கூற வியலாது. என்னை ? வீரசைவ சமயாசாரியர்கள் நாட்டின் நாற்பாலும் தோன்றி ஒரே காலத்தில் தமது சித்தாந்தத்தை யுபதேசித்து சமய வளர்ச்சியில் ஈடு பட்டனர். இருபத் தெட்டு ஆகமங்களிலுள்ள உத்தரகாண்ட மனைத்திலும் வீரசைவசமயமானது, ஏனைய மதங்களைப் போல் ஒரோவழி கூறப்படாமல் ஒவ்வொரு ஆகம உத்தர காண்டத்திலும் சிறப்பாக வீராகம வாதுளாகமங்களி லும் விரிவாகக் கூறப்பட்டுள்ளது. எனவே, இம் மதத்தின் தொன்மை நன்கு விளங்கும். இச் சமயத்தைப் பற்றிய நூல்கள் பல கன்னடம், தெலு

---

ஒளிரவும் செய்யான். அருளும் சுரக்கான். அந்நாடு இவ்வையகத்திலே கொடிய நாடாகப்பொலியும். மறப்பயிரின் கொழுமையை அந் நாட்டிலேயே நன்கு காணுதல் இயலும். பிற எந்நாட்டிலும் அத்தகைய கொடுமையைக் காணுதல் இயலாது.

தொடங்குங்கால் இன்பமாய் துன்பம் பயக்கும் இச்சூதை நாட்டைவிட் டகற்றுதற்கு ஒவ்வொருமகனும் முயலுதல் வேண்டும். சூது ஆடும் மக்களி டம் நாம் சூதின் தன்மையை விரித்துரைத்தல் வேண்டும். அதனால்வரும் இன்னலை சான்றோடு பகர்தல் வேண்டும். மேலும் அவர் அவ்வாடலை விளை யாடாவாறு—அக் கொடுவினையில் புகாதவாறு தகைதல் வேண்டும். அதன் பின்னரும் நமது நல்லுரையை மறந்து அவர் சூதினை விளையாடுவாராயின் அவர்மாட்டு 'சத்தியாக்கிரகம்' செய்தாவது அதை அகற்றல்வேண்டும். வேண் டுங்கால் சூதினை அகற்றுதற்கு நமதுயிரையும் அளித்தல் வேண்டும். அத் தொண்டே நற்றொண்டாகும். அத்தொண்டே நாட்டை நலம்பெறுவிக் கும். அறமுண்டாகச் செய்யும். இன்பம் எழச்செய்யும். நாட்டை உய்விக் கச் செய்தலும் அத்தொண்டேயாம். ஆதலின் அத்தொண்டையே நாம் புரி தல் வேண்டும்.

ங்கு, நாகரம் முதலிய மொழிகளில் இயற்றப்பட்டுள்ளன. இம் மொழிக ளெல்லாம் கற்றறிந்த ஒரு சில தமிழ் வீர சைவர்களுக்கே இவை பயன்றரும். தமிழ் நாட்டு வீரசைவர்களுக் குதவுமாறு தமிழில் ஒரு சில நூல்களே யுள் ளன. இப் பெருங் குறையை சேலம் நாகி செட்டியா ரென்னும் வீரசைவப் பெரியார் பல நூல்களைத் தமிழில் வெளிப்படுத்தி நீக்கி வருகின்றார். தம் முதுமைப் பருவத்தில் அன்னார் மேற் கொண்டுள்ள அரும்பணிக்கு அன் பர்கள் துணை புரிவார்களாக. தமிழ் வீரசைவர்கள் தம் மொழியிலுள்ள நூல் களை யோதி யுணர்வராயின் அதுவே சமயத்திற்கு ஆக்க மளித்தல் கூடும். இக் கட்டுரையில் வீரசைவ சித்தாந்தத்தைப் பற்றிய நூல்களைப் பற்றி எனது சிற்றறிவுக் கெட்டியவாறு ஒரு சிறிது ஆராய்ச்சி செய்ய முற்படுகி றேன்.

இந்தியாவில் வீரசைவ மடத்திற்கு ஆக்கந் தேடும் மடங்கள் ஐந்து. அவை ஐம் பெரும் ஆச்சாரியர்களால் நிறுவப் பெற்றன. அவை (1) மைசூர் ராஜ்யத்தில் பாளே ஹொன்னூர் என்னும் ரம்பாபுரி மடம். (2) கடூர் ஜில் லாவிலுள்ள உஜ்ஜயினி (3) பல்லாரி ஜில்லாவிலுள்ள ஸ்ரீ சைலம். (4) இமயமலைச் சாரலிலுள்ள பதரிகேதாரம். (5) வாரணாசி எனப்படும் காசி. இவைகளுள் ஒன்றாயினும் தமிழ் நாட்டிலில்லை. ஆனால் அவற்றைச் சார்ந்த கிளை மடங்கள் பலவுண்டு. அவை (1) கும்பகோணம் சாரங்க தேவர் பீடம். இது இப்போது தக்க தலைவரின்றிச் சீர்குலைந்துள்ளது. இது மிகவும் தொன் மையானது. இதன் சரித்திரம் கிடைத்திலது. (2) இறைக்குடி பச்சகந்தைய சுவாமியின் மடம். (3) திருவண்ணாமலை குகை நமசிவாயர் மடம். (4) பொம் மபுரம் சிவஞான பாலைய சுவாமிகள் மடம். (6) சித்ரகல்துருகம் மடம். முதலியன. இத் துணை மடங்கள் தமிழ் நாட்டிலிருந்தும், வீரசைவ சமயம் தழைத்தோங்காததற்குக் காரணம் என்னை? மதப் பற்றின்மையேயாம்.

இனி இச் சமயத்திற் குரிய நூல்கள் பலவற்றையும் ஒரு சிறிது ஆராய் வாம். தமிழ்நாட்டு வீரசைவர்க்குரிய நூல்களில் பெரும்பாலும் துறைமங்க லம் சிவப்பிரகாச சுவாமிகளால் இயற்றப்பெற்றவை.

(1.) சித்தாந்த சிகாமணி:—இது, இலிங்கதாரணஞ் செய்து கொள் வது வேதாகம விதியெனு முண்மையை விளக்குகிறது. சிவயோகி ராட் என்பவரால் இந் நூல் முதன் முதல் வட மொழியி லியற்றப்பட்டது. இதை சிவப்பிரகாசர் 880 செய்யுள்களைக் கொண்ட ஒரு தமிழ் நூலாகச் செய்த னர். இரு மொழிகளிலுமுள்ள சித்தாந்த சிகாமணிகளை ஒப்பிட்டு நோக்க வல்லார்க்கு சிவப்பிரகாசரின் கல்வித் திறம் அங்கை நெல்லிக்கனி யென விளங்கும். இந் நூல் இப்போது சென்னை குரு பசவா & Co. —ல் உரை யுடன் வெளியிடப்பட்டுள்ளது. இந் நூல் அங்கத்தலம், இலிங்கத்தலம் என்னும் இரு பெரும் பிரிவுகளையும், மாகேசத்தலம், பிரசாதித்தலம், பிராண லிங்கித்தலம் என்றவை போன்ற 108 தலங்களையும் உடையது. வீரசைவ னுவான் பின் பற்றுதற்குரிய நெறியும் வீரசைவ சித்தாந்தமும் இதனாலுணர்த் தப் படுகின்றது.

(2.) பிரபுலிங்க லீலை:—சொற் சுவை பொருட் சுவை மிக்க பாக்களை யுடையது. சிவப்பிரகாச அடிகளின் தமிழ்ப் புலமையை விளக்குவதற்கு இலக்கா யமைந்தது. அடிகனார் காஞ்சியம் பதியில் சில காலம் வசித்திருந்த

போது இந் நூலைப் பாடினர் என்ப. இது வீரசைவ குருதேவரான அல்லமாப் பிரபு தேவரின் திருவிளையாடல்களைக் கூறுகின்றது. கற்பனை நயம் கற்போருளத்தை கவரத்தக்கதா யுள தாகலின், இது பல வாண்டுகளாக வித்துவான் தேர்வுக்குப் பாடமாக வைக்கப் படுகின்றது. இந் நூலில் முற்பகுதி கதைகளாகவும் பிற்பகுதி சித்தாந்தமாகவும் அமைந்துளது. இந் நூலின் சிறப்பறிந்த வீரசைவரல்லாதாரும் இதனைக் கற்கின்றனர்.

(3.) வேதாந்த சூடாமணி:—நிஜகுண்ணயோகி என்பவரால் வடமொழியி லியற்றப்பட்ட விவேக சிந்தாமணி எனும் நூலின் மொழிபெயர்ப்பு. வேதாந்த மார்க்கத்தைப் பின்பற்றிய ஒரு வீரசைவன் எய்தும் பலனைக் கூறுவது. யானறிந்த மட்டும் இதன் அச்சுப்பிரதி கிடைத்திலது. வேதாந்த சூடாமணியும் சித்தாந்த சிகாமணியும் இரேணுக கணநாதரால் அகத்தியருக்கு உபதேசிக்கப்பட்டன என்பர்.

(4.) சிவஞான பாலைய சுவாமிகள் பிள்ளைத் தமிழ்:—இது பருவம் ஒன்றுக்குப் பத்து செய்யுள்கள் வீதம் 10 பருவங்களையும் 100 பாக்களையும் உடைய ஒரு ஆண்பாற் பிள்ளைத் தமிழ். சிவப்பிரகாச சுவாமிகளின் சொல்லாற்றல் இந் நூலில் ஆங்காங்கே மிளிர்கின்றன.

(5.) சிவஞான பாலைய சுவாமிகள் கலம்பகம்:—இஃது நூறு பாக்களையும் அகப் பொருட்டுறைகள் பலவற்றையும் கொண்ட ஒரு சிறந்த நூல். சிவப்பிரகாசர் சிவஞானபாலைய சுவாமிகளைக் கண்டு ஞானோபதேசம் பெற வேண்டு மெனும் நோக்கங் கொண்டு இவ் விரு நூல்களையும் பொம்ம புரத்தில் சுவாமிகளின் அவையில் அரங்கேற்றினர்.

(6.) இஷ்டலிங்க அபிஷேகமாலை:—இந் நூல், மதித்தற்கியலா மாணிக்கம் போன்ற பத்துப் பாக்களை யுடையது. அப் பாக்களுக்கு பொருள் காண்பது மிகவும் கடினம். இஃது முசிறி வீரசைவத் திருவாளர் குமார வீரய்யரவர்களால் வெளியிடப் பட்டுள்ளது. அவர் அதற்குச் சிறந்த உரையும் எழுதியுள்ளார்.

(7.) சதமணி மாலை:—இந் நூல் 100 பாக்களாலானதா யிருப்பினும் இப்போது அச்சுப் பிரதிகள் கிடைத்தில. ஆனல் 75 பாக்கள் மட்டு மடங்கிய ஒரு கையெழுத்துப் பிரதி என் நண்பர் ஒருவரிடம் இருக்கிறது. ஏனைய 25 பாக்களையும் பெற்று வெளியிடுவதாக எண்ணியுள்ளோம்.

(8.) நிரஞ்சனமாலை (9) கைந்தல மாலை:—இவை சிவப்பிரகாச சுவாமிகள் பிரபந்தத் திரட்டிலுள்ளன. இதுவரையில் இந் நூல்கள் உரையுடனேனும் அன்றித் தனி மூலமேனும் கிடைத்தில.

(10.) இஷ்டலிங்க அகவல்:—இது சிவப்பிரகாசரின் உடன் தோன்றவார் கருணைப் பிரகாசரா லியற்றப்பட்டது. இது நான்கு மாதங்களுக்கு முன் சென்னை குருபசவா கம்பெனியாரால் உரையுடன் வெளியிடப் பட்டது.

(11.) குமார தேவ ரபிடேக மாலை:—இது திருமுதுகுன்றிலிருந்த சொக்கலிங்க சுவாமிகளால் பாடப்பட்டது. அபிடேக முறையைப் பற்றிப் பத்து செய்யுள்களைக் கொண்டது.

(12.) வசவ புராணம்:—இது முதன் முதல் சோமநாத பண்டிதரால் தெலுங்கி லியற்றப்பட்டது. பின்னர் பீமகவி யென்பார் அதைக் கன்னட மொழியில் பெயர்த்தெழுதினர். அதன் பிறகு தமிழ்மொழியில் செய்யப் பட்டது. தமிழ் வசவ புராண ஆசிரியர் இன்னாரென விளங்கவில்லை. இது சங்காரரியர் என்பவரால் வடமொழியி லியற்றப்பட்டுள்ளது. இந் நூலின் சிறப்பைக் கண்ட ஆங்கிலேயர்களும் இதை ஆங்கிலத்தி லெழுதியுள்ளனர். இராமாயணம் சிறந்த நூலாகலின் அது இந்திய நாட்டு மொழிக ளெல்லாவற்றிலு மியற்றப்பட்டுள்ளது. அஃதே போல் நுணுகி யாரா ய்வாருக்கு நுண் பொருள் பலவற்றை வெளிப்படுத்தும் இந் நூலும் பல மொழிகளில் பல புலவர்களால் மொழி பெயர்க்கப்பட்டுள்ளது. ஏனைய நாடுகளில் இந் நூல் வீறுபுகழ் கொண்டு விளங்கினும், தமிழ் நாட்டு மக்களின் ஆதரவின்மையால் தமிழ் வசவபுராணம் கடந்த 1931-ம் ஆண்டு வரை கண் ணுற் காணவும் கிடைத்திலது. தமிழ்நாடு செய்த தவப் பயனால் வீரசைவத் துறை விளங்க, திரு. நாகி செட்டியாரவர்கள் அரும் பாடு பட்டு ஏட்டுப் பிரதி யொன்றினைப் பெற்று ஊக்கமது கைவிடாது உயர்ந்ததோர் உரைய மியற்றி 1931-ம் ஆண்டில் ஆயிரம் பக்கங்கள் கொண்ட ஒரு சித்திரப் படப் பதிப்பு நூலாக வெளியிட்டுள்ளார். இறக்குந் தருவாயிலிருந்த இந்நூலுக்கு வடமொழி, ஆங்கில, கன்னடமொழிப் புலவராகிய செட் டியாரவர்கள் உரை எழுதி காலத்தினாற் செய்த உதவி ஞாலத்தின் மாணப் பெரிது என்பதை நிலைநிறுத்தினர். தமிழுலகம் திரு. உ. வே. சாமி நாதையரவர்களுக்கு கடமைப்பட் டிருத்தல்போல் வீரசைவர்கள் இப்பெரி யார்க்கு கடமைப் பட்டவராவர். இந்நூல் வசவண்ணர் சரிதத்தைக் கூறுவ தால் இப்பெயர் பெற்றது. வசவண்ணர் பிஜபூரிலுள்ள இங்குளாபுரியில் அந்தண குலத்தில் அவதரித்து ஹோய்சளதேச மன்னனை விச்சலனிடம் அமைச்சுத் தொழில் பூண்டு வீரசைவ தீக்ஷை பெற்று வீரசைவப் பிரசாரம் செய்து அரசனையும் சைவராக்கினர். இவரது காலம் 10-அல்லது 11-ம் நூற் றுண்டாகும். B. L. ரைஸ் என்பார் தொகுத்துள்ள "The Mysore Inscriptions" ("மைசூர்க் கல்வெட்டுகள்") என்ற நூலிலுள்ள கல்வெட்டு களைக் கொண்டும், சரித்திர நூல்களைக்கொண்டும் இயன்றவரை ஆராய்ச்சி செய்து, வசவேசரது வரலாறு, அவரியற்றிய வியத்தகு செயல்கள், அவரது காலம், நூலின் நுண்பொருள்கள், செய்யுள் நயம் முதலியவற்றைப் பற்றித் தனிக்கட்டுரையாக எழுத எண்ணி யுள்ளேன்.

(13.) (14.) கைத்தலமாலை, நிரஞ்சனமாலை:—"மாலும் நான்முகனும் காணற்கியலாத இஷ்டலிங்கப் பெருமான் எனது அங்கையில் அமர்ந்தருள என்ன மாதவஞ் செய்ததோ என் கைத்தலமே" என வியந்து கூறுவதாகிய பல பாடல்களைக் கொண்ட திந்நூல். பின்னது இட்டலிங்க வழிபாட்டுப் பெருமையைக் கூறுவது. இவை இன்னும் தனியாக அச்சியற்றப் படவில்லை.

(15.) பிற நூல்கள்:—இவையே யன்றி வீரசைவ சமய சம்பந்தமான நூல்கள் பல பிறமொழிகளிலும் உண்டு. யான் சென்னைப் பல்கலைக் கழக நூல் நிலையத்திற் சென்று ஆராய்ந்தபோது இச்சமயத்தைப் பற்றிய ஆங்கில நூல்களும் கட்டுரைகளும் இருப்பதாகத் தெரிந்தது. ஆங்கில மறிந்த அன்பர் கள் அவற்றைத் தமிழில் மொழிபெயர்த்து பத்திரிகைகளி லெழுதி ஏனை யோர்க்கு உதவுவார்களாக.

(16.) உரைநடை நூல்கள்:—வீரசைவ விளக்க வினாவிடை, வீரசைவமும் ஸ்ரீவைணவமும், வீராசாரக் கட்டளை, கனனமும் தகனமும், அக்கமகாதேவி சரித்திரம், அல்லமாப் பிரபு சரித்திரம், மணிவாசகப் பெருமான் வரலாற்று வினாவிடை முதலிய பல வீரசைவ உரைநடை நூல்கள் திரு. சாமி செட்டியாரவர்களா லியற்றப் பட்டுள்ளன.

நமது தமிழ்நாட்டில் வீரசைவர்கள் இல்லாத தாலுக்காக்களில்லை என்றே கூறலாம். அவர்களுள் பெரும் பகுதியினர் திருச்சி, சேலம், வடஆற்காடு, தென்னாற்காடு, தஞ்சாவூர் ஜில்லாக்களில் வசிக்கின்றனர். இவர்களெல்லோரும் சேர்ந்து முதன் முதல் "தமிழ்நாட்டு வீரசைவ மகாநாடு" என்ற ஒரு தனிப் பெருங் கூட்டத்தைக் கூட்டுவது இயலாத தொன்றாகையால் ஒவ்வொரு ஜில்லாவிலும் தனிப்பட்ட சங்கங்களை அமைத்தல்வேண்டும். அந்த ஜில்லாவிலுள்ள சைவ, வீரசைவப் பெரியார்கள் அச்சங்க முன்னேற்றத்திற்கு ஆதரவளிக்கவேண்டும். ஆதரவு தருதலென்றால் காசு பணம் கொடுக்கவேண்டியதில்லை. வாய்ப் பேச்சுகளினாலேயே பல காரியங்களைச் செய்யலாம். ஆனால் முயற்சிதான் வேண்டும். குறிப்பிட்ட எல்லையாகிய ஒரு ஜில்லாவுக்குள் கூடும் சங்கத்திற்கு பணச்செலவு மிகக் குறைவே. 25 ரூபாய்களிருந்தால் போதும். அதைக்கொண்டு மனமிருந்தால் மங்களகரமாக நடத்தலாம். நூற்றுக் கணக்காக வீரசைவர்கள் நிறைந்துள்ள ஒரு சில்லாவில் 25-ரூபாய் சேர்ப்பது மிகப் பெரிய காரியமல்ல. ஒருவர் ஒரு அணுவீதம் கொடுத்தாற்கூட போதியதே. அன்பும் மதப்பற்று மிருந்தால் அரிய செயல்கள் பல செய்யலாம். அங்ஙனங் கூடும் கூட்டங்களில், ஒருவித காரணமும் ஆதாரமுமின்றி வீரசைவர்களிடையே மல்கிக் கிடக்கும் போலியாசாரங்களைக் களைந்தெறிய முதலில் முயலவேண்டும். வீரசைவர்களுள் நிகழும் "நீ வேறு நான் வேறு" என்ற பிரிந்த நோக்கை ஒன்றுபடுத்த வேண்டும். அதற்குச் சமய நூலறிவு இன்றியமையாதாகையால், அச்சங்கங்களுள் சிறு புத்தகசாலைகள் ஏற்படுத்தி அந்நூல்களைப் பலரும் கற்கச் செய்யவேண்டும். இங்ஙனம் தொண்டாற்றுவதற்கு ஒருவன் தன் காலம் முழுதும் இதிற் செலுத்த வேண்டுவதில்லை; தன் தொழின் முறைக்குச் சென்ற காலம் போக எஞ்சிய நேரத்தை வீணாக்காது இத் துறையில் செலவிட்டால் போதும். இங்ஙனம் சங்கங்கள் நிறுவப்பெற்றால், ஓராண்டில் மிகச் சீர்திருத்த மடைபக்கூடும். போலி வைதிகமென்னும் பேய் பறந்தோடும்.

இங்ஙனம் செய்த பின்னர் ஒவ்வொரு ஜில்லாவிலுமுள்ள வீரசைவ சங்க அங்கத்தினர் பலரும் ஓராண்டிற் கொருமுறை, எல்லோருக்கும் பொதுவான ஒரு பெரிய நகரில் கூடி "தமிழ்நாட்டு வீரசைவ மகாநாடு" என்ற பெரிய சங்கத்தை யமைக்கவேண்டும். இத்தகைய பெரிய மகாநாடு நடைபெறுதற்குரிய செலவை ஜில்லா சங்கநிதிச் சேமத்தினின்றும் உதவுதல் கூடும். எத்தனையோ துறையில் பயனின்றிப் பணம் செலவிடும் வீரசைவர்களுக்கு தம் சமய முன்னேற்றத்திற்காக இரண்டொரண கொடுத்தல் இயலாத காரியமா? அச் சிறு பொருளைக்கொண்டு பெரிய காரியங்கள் செய்யலாம். தொடக்கத்தில் பல இடையூறுகளுறினும் அவற்றைப் பொருட்படுத்தாது நடத்தினால் சில ஆண்டுகளில் ஏனைய சமய சங்கங்களைப்போல் புகழூடன் விளங்குமென்பது திண்ணம். அங்ஙனம் கூட்டும் பொதுக்கூட்டங்களில் ஒவ்வொரு சில்லாவிலு மிருந்து வருவோர் தத்தம் குறையை எடுத்துக்

கூறவேண்டும். அவற்றை நீக்கத் தகுந்த முறைமையையும் ஆலோசித்தல் வேண்டும். வீரசைவர்கள் வேளாண்மை, வாணிபம், கைத்தொழில், உத்தியோகம் முதலிய பலவற்றில் எத்துறையை மேற்கொண்டிருப்பினும் அவர்களது பொருளாதார நிலையைப் பெருக்கத்தக்க சொற்பொழிவுகள் நிகழ்த்தி அத்துறைகளில் செய்தற்குரிய சீர்திருத்தங்களைச் செய்ய முயலவேண்டும். அவற்றிற்கெல்லாம் பல இடையூறுகள் குறுக்கிடும். துன்ப முற்றவர்க்கலால் இன்பமில்லை யாதலின் "இச் சகத்துளோர்க ளெதிர்த்து வந்த போதிலும் அச்சமில்லை அச்சமென்ப தில்லையே" என்ற பாரதியாரின் வீரமொழிப்படி முயற்சிகொண்டு முயலுதல் வேண்டும். இங்ஙனம் நாலைந்தாண்டுகள் நடந்தால், பின் சங்கச் செலவிற்குப் பொருளீட்டுவது எளிய காரியம். மக்களிடையே சமயப்பற்று ஏற்படும். பலர் தொண்டாற்ற முன் வருவர். இச் சமயத்தாரிடையே மலிந்து கிடக்கும் குறைகள் பகலவன் முன் பனியென நீங்கும். இவற்றை நன்கு மனதிற்கொண்டு செயலிற் காட்டவேண்டும். வடநாட்டு வீரசைவர்கள் வீறுபெற்று பெரும் புகழுடன் விளங்கி அருஞ் செயல்கள் பலவற்றைச் செய்வது கண்டும், தென்றமிழ்நாட்டு வீரசைவர்கள், தம் மதத்தின் பெருமையையும் பழமையையும் அறியாது, உலகில் உயர்தர உத்தியோகம் பெற்றுப் பொருளீட்டும் வகை யறியாது, உண்மை வீரசைவ மின்னதென அறியாது போலிப் பூசல்கள் பல புரிந்து, உயிரற்ற நடைப் பிணங்களாய் இருத்தல் இவர்களுக்கு இகழ்ச்சியைத் தரவில்லையா? அங்ஙன மறியின், சமய சமூக முன்னேற்றங்கருதி முயலா திருப்பதென்னை? வீரசைவமெனும் சொல்லில் வீரம் உளதேயன்றி செயலளவில் மக்களிடத்தில் எட்டுணை வீரமும் இல்லாதிருப்பது யாவரானும் வருந்தத் தக்கதொன்றே. வீரசைவசித்தாந்தத்தை நன்கு ஓதி யுணர்வார், பெண்மக்களுக்கு சமஉரிமை, தாழ்த்தப்பட்ட வகுப்பினர்க்கு ஆதரவு, சமூக ஒத்துழைப்பு, பால்யவிவாக மறுப்பு முதலிய பல சிறந்த கொள்கைகள் இச் சமயத்திற் பொதிந்து வைக்கப்பட்டுளதென நன்குணர்வர். அங்ஙனமாகவும், வீரசைவர்கள் தன்னைத்தானறியாது, தன் மதிப்பிழந்து, ஊக்க மிழந்த மடிகளாய் நாட்டின் நாற்பாலும் வதிகின்றனர். அவர்களது வாணாளின் குறிக்கோள்தா னென்னே! பல்லாயிர மாண்டுகளுக்கு முன் நாட்டின் நாற்பாலும் நலம் பெறுபுகழுடன் விளங்கிய இச்சமயம் இப்போது இருக்கு மிடம் தெரியாது மங்கிவிட்டது. இப்போது கிறிஸ்து பிறந்து 20 நூற்றாண்டுகள் கழிந்தன. இதுகாறும், சிறியவும் பெரியவுமான பல மதங்கள் சிறிது சிறிதாக முன்னேற்ற மடைந்துவிட்டன. ஆனால் வீரசைவ சமயம் மாத்திரம் உறங்கும் காரண மறியேன். வீரசைவ மெய்யன்பர்களே! ஆகையால் நும்மத முன்னேற்றத்திற்கு நும்மாலியன்ற உதவி புரிமின்! ஆக்கந் தேடுமின்! அவமே நாட்களைப் போக்காதீர். அரிய நூல்களைப் படிமின்! சமய மெய்ந்நெறியை யறிமின்! அறிந்து அதன்படி நடமின்! நடந்து நம்பர்க் கடியராகி நனிபுகழ் பெறுமின்! வீரம் பொலிந்த மக்களாய் வாழ்மின்! அல்லமன் அலர்த்தாளை அனுதினமும் பரவுமின்!

---

# மன அடக்கம்

(சே. சின்னத்துரை.)

"அடக்கம் அமரருள் உய்க்கும் அடங்காமை
ஆரிருள் உய்த்து விடும்."

தெய்வப் புலமைத் திருவள்ளுவ நாயனார் மன அடக்கத்தின் பெருமையை வியந்து கூறுமிடத்து அடக்க முடைமையானது ஒருவனைத் தெய்வ உலகில் உய்க்குமென்றும் அடங்காமை நீங்காத நரகத்துள் தள்ளிவிடும் என்றும் கூறுவதைக் காண்க. மன அடக்கமுடைமையே ஒருவனுக்குப் பெரும் செல்வமாகும். எத்துணைச் செல்வம், சிறப்பு, மேன்மை முதலியன ஒருவனிடத்தில் இருந்தபோதும் மனஅடக்கமில்லையாயின் அவன் துன்பத்துள் அகப்பட்டு மேலும் மேலும் இவ்வுலக வாழ்விலே கிடந்துவருந்துவன். இதனாலன்றோ நமக்கு எக்காலமும் பெருமையைக் கொடுக்கின்ற நம் சமயாசாரியராகிய அப்பர், சுந்தரர், சம்பந்தர், மணிவாசகர் ஆகிய சைவ திலகங்கள் உலக வாழ்வின் அநித்தியத்தை அறிந்து மனதை ஒரு வழிப்படுத்தி முத்திப் பேறு பெற்றனர். நாமும் அவர்கள் அடைந்த மெய்ஞ்ஞான ஆனந்த வாழ்வைப் பெறவேண்டுமாயின் மனதை அடக்கப் பழகவேண்டும்.

"மனம்" என்னும் விஷயத்தில் மேல் நாட்டுத் தத்துவ ஆராய்ச்சிக்காரர் பலவிதமான ஆராய்ச்சி யுடையவர்களாயிருந்து வருகின்றனர். இந்த அரியபெரிய பொருள் உலகத்துள்ள எல்லாத் தத்துவ ஞானிகளின் ஆராய்ச்சிக்கும் அப்பாற்பட்டதாயுள்ளது. மனதைப்பற்றி அதிக ஆராய்ச்சி இக்காலத்திலிருந்த போதிலும் அதைப்பற்றிய செப்பமான தெளிந்த அறிவும் முடிவும் இல்லையென்றே கூறவேண்டும். அது எவ்வாறுயிருப்பினும் மனம் என்பதை ஒருவன் அடக்குவானுகில் அவனுக்கு அழியாத—எப்பொழுதும் விட்டு நீங்காத ஆனந்தமும், சாந்தமும், பொறுமையும் ஏற்படும். மனத்தின் தன்மை ஆன்மாவின் தன்மையைப்பற்றி ஒருவாறு நிற்கின்றது. ஆன்மாவின் இலட்சணமாவது, ஆணவம், மாயை, கருமம் என்னும் பாசங்களால் கட்டுப்பட்டிருத்தல். சிற்றறிவும் சிறு தொழிலுமுடையதா யிருத்தல், தனக்கொரு இறைவனை முதல்வனுய்க் கொண்டிருத்தல் முதலியனவாம். ஆகையால் மனம் மல சம்பந்தத்தின் தன்மையில் தங்கியிருக்கிறது. மனம் எந்த நேரமும் அலைந்து திரிகின்றது. உலகத்திலுள்ள பொருட்களில் எல்லாம் ஆசைப்பட்டு அவற்றைத் தேடுவதிலே நாட்டமுள்ளதா யிருக்கின்றது. அது ஒரு குரங்குத் தன்மை போன்றது. மண், பொன், பெண், முதலிய மூவாசைச் சுழலிலே நித்தமும் கட்டுண்டு நிற்கின்றது. மனத்துக்கு உதவிசெய்து கொண்டிருக்கும் ஐம்புலன்களிருக்கின்றன. ஐம்புலன்கள் எப்பொழுதும் மனதை அடிமைப்படுத்தி இழுத்துக் கொண்டிருக்கின்றன.

சிலர் சில கெட்ட பழக்கங்களை பழகிவிட்டு அவற்றைவிட முடியாதவர்களாகி அப் பழக்கங்களுக்கே அடிமைகளாகி அலைகின்றனர். ஒரு கெட்ட பழக்கத்தைப் பழகியவன் அதை விடுவதானால் மிகவும் கஷ்டப்படுகின்றான். ஆகையால் மனதை ஐம்புலன்களானவை அடிமைப்படுத்துகின்றன. ஐம்புலன்கள் தம்வழி செல்லும் வரைக்கும் மனத்துக்குச் சாந்தமே கிடையாது. மனதை அடக்கி ஆளுவது மிகவும் கஷ்டமான காரியமாகும். வீண் விஷயங்களில் மனதை விடாமல் நல்வழியில் செலுத்துகிறபொழுதே ஒரு சிறிதாயினும் மனதுக்குச் சாந்தமேற்படும். இச்சாந்தத்தை எப்படிப் பெறலாமென்பதை ஆராய்வோம்.

மண், பெண், பொன் என்று சொல்லப்படுகின்ற மூவாசைகளிலும் மனம் கட்டுண்டிருந்தபோதும் இவற்றின் மேலுள்ள ஆசையைக் கூடியவரையில் குறைக்கவேண்டும். இவற்றில் எவ்வளவு ஆசை கூடுகின்றதோ அவ்வாசைக்குத் தக்க அலைச்சலுமுண்டு. யாக்கை, செல்வம் முதலியன நிலையற்றனவென்றும் உலகவாழ்வு அநித்திய மென்றும் நாள்தோறும் நினைத்து வரவேண்டும். இப்படி நினைப்பதால் மனம் லௌகிக விஷயங்களில் ஈடுபடுவதற்கு அதிகம் ஏவாது. பெரியோர் அநுபவ வாக்குக்களால் செல்வம் நிலையாமையை அறிக. ஆகையால் அழிவுள்ள பொருட்களில் ஆசை வையாது நித்தியப் பொருளாகிய கடவுளிலே மனதைச் செலுத்தப் பழகிக் கொள்ள வேண்டும். உடம்பு, செல்வம் முதலியன அழியும் பொருள்கள் என்பதை பூரணமாய் உணர்ந்தால்தான் நம்முடைய மனம் அடக்கமடைந்து நிற்கும். சிலர் பிறர் பொருள்களில் ஆசைப்பட்டுப் பொறாமை கொள்கிறார்கள். இப்படியிருத்தல் கூடாது. ஒருவன் இன்னொருவனிலும் பார்க்கக் குறைந்த பதவியிலிருப்பது அவன் முற்பிறவிகளிற் செய்த கர்மங்களினாலன்றோ? ஆதலின் நமது கஷ்டங்களையும், துன்பங்களையும் குறைவுகளையும் நாமே தேடிக் கொண்டபடியால் மற்றவர்களின் மேன்மையைக்கண்டு பொறாமை கொள்ளாதிருக்கவேண்டும். குளிக்கப் போய்ச் சேறு பூசுவதைப்போல நாம் பிறவி எடுத்ததின் பயனையறியாது பாவங்களைத் தீர்க்க நினையாது நாம் மற்றவர்களின் செல்வம் முதலியவற்றைக் கண்டு பொறாமை கொள்வதினால் மேலும் பாவங்களைக் கட்டிக் கொள்வோம். ஆனமையால் இத்தகைய மனப் பொறாமையாகிய கொடிய அக்கினிக்கு இடங் கொடாமலிருக்க நாம் பழக வேண்டும். நாம் முற்பிறவியிற் செய்த பாவ புண்ணியங்களின் பலனைத் தான் இப்போது அநுபவிக்கிறோமென்பதை நன்கு உணர்ந்தால் மனம் பொறாமை கொள்ள அதிகம் ஏவாது.

நாம் நம் ஐம்புலன்களையும் ஒடுக்கத் தண்டிக்க வேண்டும். கண் நாக்கு வாய் முதலியவற்றால் அனேக பாவங்களை நாடோறும் செய்கிறோம். மனமானது இப் புலன்கள் வழியே தனது தொழிலைச் செய்து வருகின்றது. ஆகையால் நாம் ஐம்புலன்களை அடக்கவே மனமும் அடங்கும். "ஒருமையுள் ஆமை போல் ஐந்தடக்கலாற்றின் இருமையும் ஏமாப்புடைத்து" என்று நாயனார் கூறுகின்றார். ஐம்புலன்களை அடக்குவதால் நமக்கு இருமாந்த நிலை கிடைக்கும். அவற்றை அடக்கும் வரைக்கும் நாம் வேறு அடிமைகளா யிருப்போம். அனேகர் தமது நாவினால் மற்றவர்களை வைதும் புறங் கூறியும் வாழ்ந்து வருகின்றனர். இப்படிச் செய்வதினால் மன அடக்கம் சிறிது மற்று அதிக துன்பத்துக்கு ஆளாகி வாழ நேரிடும். மனம்போன வழி நடவாமல் ஐம்புலன்

களை நமக்கு அடிமைகளாக்கி வாழுவதே மன அடக்கத்தின் முக்கிய அங்கமாகும்.

கடவுளை நாம் நாடோறும் இடையறாது சிந்திக்கவேண்டும். "நின்றும் இருந்துங் கிடந்தும் நடந்தும் என்றும் சிவன் தாள்நினை" என்று கூறியிருப்பதை அறிக. இறைவனுடைய திருவருளாகிய அரிய மருந்தை நாம் தேடுவோமானால் மன அடக்கம் தானே அமையும். கடவுள் ஒருவரே நித்தியம். அவரை அடைவதே அழியாத செல்வம் என்று நினைத்து அவரை மனம் நெக்கு நெக்குருக வணங்கவேண்டும். கரையிலாக் கருணைமா கடலாகிய இறைவனின்மேல் அன்பு அதிகம் செலுத்த உலக விஷயங்களில் மனம் அதிகம் நாடாது. ஆசையால் மன அடக்கத்துக்கு ஒரு சூட்சமமான வழி கடவுள் தியானமே. ஆலய வழிபாடு நித்தமும் செய்யவேண்டும். ஆலய வழிபாட்டிற்காகவே இறைவன் நம் உடலைப் படைத்திருக்கின்றார். கடவுளை வணங்காவிட்டால் நம்முடைய அவயவங்களினால் உண்மையான பிரயோசனமில்லை. "கோளிற் பொறியிற் குணமிலவே எண்குணத்தான், தாளை வணங்காத் தலை" என்றார் நாயனாரும். ஆலய வழிபாடு நமக்குச் சாந்த நிலையைக் கொடுக்கும். நாம் நல்லவர்களோடு சகவாசம் செய்யவேண்டும். மனம் சார்ந்ததன் வண்ணமா யிருத்தலால் நல்லவர்களுடன் சினேகம் செய்தலால் மனம் கெட்ட வழிகளிற் செல்லாது நல்லவற்றையே நாடும். "நல்லா ரிணக்கமும் நின்பூசை நேசமும் ஞானமுமே, யல்லாது வேறு நிலையுள்ளதோ" என்றார் பட்டினத்தடிகள். சந்தனமரத்தைச் சார்ந்த ஏனைய மரங்களும் அந்தச் சந்தன மரத்தின் வாசனையைச் சிறிது பெறுவதுபோல மன அடக்கமுடைய பெரியோரினது சகவாசத்தினால் நாம் மன அடக்கத்தைச் சிறிதாயினும் பெற்றுக் கொள்ளலாம். நாம் தேவார திருவாசகங்களை நாடோறும் ஓதுகின்ற பழக்கத்தைக் கொண்டுவரவேண்டும். "பாடவேண்டும் நான் போற்றி நின்னையே பாடி நைந்து நைந்துருகி நெக்காடவேண்டும்" என்றார் திருவாசகம் என்னும் திவ்வியத் தேனை உலகத்தாருக்குப் பயந்த மணிவாசகப் பெருமான். தேவார திருவாசகங்கள் ஓதுவதனால் மன அடக்கம் ஏற்படும். நாம் நற்செய்கைகளில் ஈடுபடுவதினால் மனம் கெட்ட தொழில்களில் செல்ல இடமில்லை. நித்தமும் பொய்சொல்லி மற்றவர்களைப் புறங்கூறிப் பொறாமைகொண்டு திரிபவனிடம் எங்ஙனம் மனச்சாந்தம் ஏற்படும்? தருமசிந்தனை உடையவனிடத்தில் சாந்தம் குடிகொள்ளும். மனத்திருப்தி யுண்டாக வேண்டும். சிலரிடம் எந்த நல்ல நிலபரங்களி லிருந்தபோதும் பெரிய செல்வர்களா யிருந்தபோதும் மனத்திருப்தியே கிடையாது. மூதேவியே அவர்களிடத்தில் உறைகிறாள். அவர்கள் எந்நேரமும் இன்னும் பணம் சம்பாதிக்கவேண்டுமென்ற சிந்தை யுடையவர்களா யிருக்கிறார்கள். "போதுமென்ற மனமே பொன்செய்யு மருந்து" மனத்திருப்தி ஒரு அரிய பெரிய செல்வம். மனத்திருப்தி ஒருவனுக்கு ஏற்படின் அவனுக்கு மனதை அடக்குவது இலகுவான காரியம். புறங்கூறலே சிலருடைய தொழிலாகக் காணப்படுகிறது. இருவர் நின்று பேசும்பொழுது இன்னொருவரைப்பற்றி இழிவாகப் பேசுவதைக் காணலாம். இக் கெட்ட பழக்கம் நம்மவர்கள் அனேகரில் காணப்படுகின்றது. மனதை மற்ற கருமங்களில் செலுத்தி விடுவோமானால் மன அடக்கம் பெறுவது எங்ஙனம்? உலகத்திலிருக்கும் வரைக்கும் புளியம்பழமும் ஓடும் போலிருந்து வாழவேண்டும். அவசியமற்ற பேச்சுக்களிலும் சண்டைகளிலும்

மனதைச் செலுத்தக்கூடாது. கூடிய வரையில் மனதைச் சாந்தப்படுத்தக் கூடிய விஷயங்களிலே முயற்சிக்கவேண்டும். ஏனைய விஷயங்களில் பிரவேசிப்பதினால் மனம் சிதைவடைந்து கெட்ட வழிக்கு வரநேரிடும். இதனாலன்றோ உலகத்திலிருக்கின்ற சில அறிஞர்கள் பற்றற்ற நிலையில் நின்று காலத்தைக் கழித்து வருகின்றார்கள்.

இதுகாறும் நாம் மனதை அடக்கக்கூடிய வகைகளைப் பற்றிக் கூறினோம். இனி இம்மனதை அடக்குவதினால் வரும் பலன்களைப்பற்றி ஆராய்வாம். மனதை அடக்கப் பழகுவதாயின் பெரும் கஷ்டமான காரியமாகும். இதை அடக்குவதைப்போல் பெருங்காரியம் உலகத்தி லொன்றுமில்லை. ஆகையால் தான் தாயுமான சுவாமிகளும் "கந்தக மதக்கரியை வசமாய் நடத்தலாம்" என்னும் பாட்டில் கூறுமிடத்து "சிந்தையை அடக்கியே சும்மா விருக்கின்ற திறமரிது" என்றார்.

இராமலிங்க சுவாமிகளும் "மனமடங்கும் திறத்தினி லோரிடத்தே யிருந்தறியேன் அறிந்தோரை எதநிடவும் அறியேன்" என்று கூறியிருப்பதை அறிக. மனதை ஒருவழிப்படுத்தி இறைவனிலே பதியச் செய்பவனே பெரியவன், புகழ், செல்வம், கல்வி முதலியன பொருந்தியவன் பெரியவனல்லன். ஐம்புலன்களை அடக்கி நல்லநெறியில் ஒழுகுபவனே பெரியவன்.

"உரனென்னுந் தோட்டியான் ஓரைந்துங் காப்பான்
வரனென்னும் வைப்புக்கோர் வித்து." என்றும்,

"ஐந்தவித்தா னாற்ற லகல்விசும்பு ளார்கோமா
னிந்திரனே சாலுங் கரி."

என்றும் பொய்யாமொழிப்புலவர் கூறி யிருப்பதைக் காண்க. காணுதார்க்கும் கண்ணளிக்கும் கண்டவர்க்கும் கண்ணளிக்கும் கண்ணுகிய இறைவனின் திருவருளைப் பெற்றவனே பெரியவன். அவனே மன அடக்க முடையவன். "ஆருக்குப் பொன்னம்பலக் கிருபையிருக்குதோ அவனே பெரியவனும்" என்று பெரியோர் கூறி யிருப்பதைக் காண்க. உலகத்திலுள்ள பொருட்களில் எந்த நேரமும் பற்றிக்கொண்டு கணப்பொழுதாயினும் ஆறுதலடையாத மனதை அடக்குவது பெரும் கஷ்டமான காரியம். மனதை அடக்கி ஆண்டு இறைவனுடைய பேரருளில் நின்று திளைத்தவர்களே நமது சைவ சமயத்தை நிலைநாட்டிய சமயாசாரியராகிய அப்பர், சம்பந்தர், சுந்தரர், மணிவாசகர் ஆகிய நாயன்மார்கள் உலகத்தவர்கள் மனதைக் கொண்டு லௌகிக விஷயங்களை நினைப்பதுபோல பெரியார் மனதை இறைவன் திருவருளைப் பெறுவதிலே நாடினர். இத்தகைய நிலைமை யன்றோ நம்மனோரால் வேண்டற்பாலது. தேவபெண்கள் திருநாவுக்கரசு சுவாமிகளின் முன்னின்று நிர்வாணமாக ஆடியும் அப்பர் சுவாமிகள் அதைக் கவனியாததும் உழவாரத் திருத்தொண்டு செய்யும்பொழுது செங்கற்கள் பொன் கற்களாக மாறியதைக்கண்டும் அவற்றை மண்ணோடு அள்ளிப் போட்டதினால் இப் பெருமானின் மன அடக்கத்தின் முதிர்ச்சி அறியக் கிடக்கின்றது.

பெரிய புராணத்திற் கூறப்பட்டிருக்கும் நாயன்மார்களின் சரிதங்களை நாம் அன்போடு வாசிப்போமானால் அவர்கள் எவ்வளவு மன அடக்க முடையவர்களாக வாழ்ந்தார்களென்பதும் அவர்கள் பெற்ற நித்திய வாழ்வு எத்தகை

# மதத்திரையங்கள்

(திரு. கே. எஸ். சடகோபராமாநுஜ நாயுடு.)

ந்துமதமானது துவைதம், அத்துவைதம், விசிஷ்டாத்வைதம் என்னும் மூன்று பெரும் பிரிவுகளை யுடையது. ஒருவகை ப்ரஸ்தானத் திரையமாகிய உபநிஷத், வேதாந்த சூத்திரம், ஸ்ரீபகவத்கீதை, ஆகிய மூன்றற்கும் ஏகவாக்கியஞ் செய்து பொருள் கூறுவோரே ஆசாரிய ராக அங்கீகரிக்கப்படுவர். சங்கரர், ராமாநுஜர், மாத்வர் ஆகிய மூன்று ஆசாரியர்களும், அவ்விதமே மூன்றற்கும் ஏகவாக்கியஞ் செய்து பொருள் கூறியிருப்பினும், மூவரும் மூன்றுவிதமாக பாஷியங்கள் செய்திருப்பதால், அவர்களுடைய சித்தாந்தங்கள் முறையே அத்துவைதம், விசிஷ்டாத்வைதம், துவைதம் என்று வழங்கப்படுகின்றன. ஆகையால், பாஷியகாரர்களுள் யார் கூறுகின்ற பொருள், உபநிஷத், வேதாந்த சூத்திரம், ஸ்ரீபகவத்கீதை ஆகிய மூன்றற்கும் பொருந்துகின்றதென்பதை ஆராய்ந்துணர்ந்து கொள்ள வேண்டியது அவரவருடைய கடமை. நாம் எடுத்துக்கொண்ட விஷயம் ஒவ்வொருவருடைய சித்தாந்தமும் என்ன கொள்கைகளை யுடையது என்பதை ஆராய்வதே யாகையால் அவற்றை ஈண்டு விசாரிப்போம்.

## அத்துவைதம்

பிரம்மம் ஒன்றே சத்தியமாயுள்ளது; இரண்டாவது வஸ்து வாஸ்தவமா யில்லை, உலகம் சத்தியமன்று; அசத்தியம். உலகமும் அதிலுள்ள பொருள்களும் அழியுந் தன்மையவென்பது எல்லா மதத்தினர்க்கும் உடன்பாடே. அத்துவைத பக்ஷத்தில் உலகம் அசத்திய மென்பதின் கருத்து யாதென்றால், நாம் செய்யும் சகல காரியங்களும் நாமரூபமுள்ள வஸ்துக்களும், பரமார்த்த தசையில் மித்தை (பொய்) விவகார தசையில் சத்தியம் (உண்மை). பிரம்ம மானது நிர்க்குணமாயும், நிராகாரமாயும், அவிகாரமாயும், சச்சிதானந்த

---

யது என்பதும் நன்கு அறிவோம். திருவருளின்பாற்பட்டு அதையே சிந்திப்பதும் காண்பதும், அறிவதும் உணர்வதுமாய் இருந்தபடியால் ஆனந்தமாகிய பெரிய உன்னத வாழ்வை உடையவர்களானார்கள். "இன்பமே எந்நாளும் துன்பமில்லை" என்றார் அப்பர் சுவாமிகள். அவர்கள் புலன்கள் வழி மனதைப் போகவிடாமல் மனதை அடக்கித் திருவருளைத் தேடினபடியால் அவர்களுக்கு அப் பெருவாழ்வு கிடைத்தது. இம்மன அடக்கத்தால் அவர்கள் முத்திப் பேற்றையும் பெற்றிருக்கின்றார்கள். முத்திப் பேற்றிற்கு வேண்டியது மன அடக்கமே. மன அடக்கத்தினால் மும் மலக்கட்டுகளும் அறுந்துபோம். சமயாச்சாரியராகிய பெருமக்களின் வாழ்வை நாம் ஓர் இலக்காகக்கொண்டு மன அடக்கமுள்ளவர்களாக வாழ்ந்து இறைவனின் திருவருளைப்பெறக் காருண்ணிய கடலாகிய பெருமான் கருணை பாலிப்பாராக.

மாயும், எங்கும் நிறைந்த அகண்டபரிபூரணமாயும், பற்றில்லாததாயும், ஞானப் பிரகாசமாயு மிருக்கிறது. அந்தப் பிரம்மமே மாயா சம்பந்தத்தாலே ஈசுவர னென்றும், அவித்யா சம்பந்தத்தாலே ஜீவனென்றும விவரிக்கப்படுகின்றது. அநாதியாகவுள்ள மாயையினிடத்து விக்ஷேபம், ஆவரணம் என்று இரண்டு விதமான சக்திகள் இருக்கின்றன. சகல வஸ்துக்களையும் தோற்றுவிக்கிற சக்திக்கு விக்ஷேபமென்று பெயர். இதைத்தான் மாயை யென்று சொல்லு கிறது. வஸ்துக்களினுடைய யதார்த்த சொரூபத்தைத் தோன்றவொட்டா மல் மறைக்கும் சக்திக்கு ஆவரண மென்று பெயர். இதைத்தான் அவித்தை யென்று சொல்லுகிறது. மாயா சம்பந்தமுடைய ஈசுவரன் சர்வக்ஞனு யிருக்கிறான். அவித்யா சம்பந்தமுடைய ஜீவன் கிஞ்சிக்ஞனாக இருக் கிறான். ஆகையினாலேயே; ஜீவன் ஒன்றை மற்றொன்றாகப் பிரமித்து, ஸம்ஸார பந்தத்தை யடைகிறான். இந்த ஸம்ஸார பந்தத்திலிருந்து விடுபட வேண்டுமென்று பிரயத்தனப்படும் முமுக்ஷுவானவன், வேதோக்தமான கர் மங்களை ஈசுவரார்ப்பணமாகச் செய்து சித்த சுத்தி யடைந்து, சதாசார்ய னுடைய உபதேசத்தால் அந்த பிரம்மமே நான் என்ற ஞானத்தை யடைந்து மூக்தி யடையவேண்டும். முக்தியானது, ஜீவன் முக்தி யென்றும் விதேக முக்தி யென்றும் இருவகைப்படும். பிராரப்த கர்மம் தவிர, ஸஞ்சித ஆகாமிய கர்மங்களின் பலன்கள் நசித்து, சகல பற்றுக்களையும் விட்டு இருக்கும் நிலையே ஜீவன் முக்தி தசை. பிராரப்த முடிவில், ஸ்தூல சூக்ஷ்ம காரண தேகங்கள் நசித்து பிரம்மமாகவே இருக்கும் நிலைமைக்கு விதேக முக்தி யென்று பெயர்.

## விசிஷ்டாத்வைதம்

விசிஷ்டாத்வைதம் என்னும் பதம் விசிஷ்டம் அத்வைதம்—என்றிரண் டாகப் பிரிகிறது. விசிஷ்டம் என்றால் விசேஷணங்களுடன் கூடினது என்று பொருளாகும். அத்வைதம் என்றால் இரண்டற்றது. ஆகவே, விசிஷ்டாத்வைத மென்றால் விசேஷணங்களுடன் கூடி யிருக்கும் ஒன்று என்று பொருளாகும். அதாவது சித், அசித், என்னும் விசேஷணங்க ளுடன் கூடிய பிரம்மம் ஒன்று என்று சித்தாந்தம். சித், அசித், பிரம்மம் ஆகிய மூன்றும் தத்துவத்திரையங்கள் என்று சொல்லப்படும். இவற்றுள், பிரம்மமானது பரத்வம், வ்யூகம், விபவம், அந்தர்யாமித்வம், அர்ச்சை என் னும் ஐந்து நிலைகளிலுள்ளது. பரத்வமாவது, பரமபதத்திலே எழுந்தருளி யிருக்கிற ஆதியஞ்சோதி யுருவான பரவாஸுதேவர். வ்யூகமாவது, ஸ்ருஷ்டி, ஸ்திதி, ஸம்ஹார கர்த்தாக்களான ஸங்கர்ஷணர், ப்ரத்யும்நர், அநிருத்தர் என்ற மூவரும், பாற்கடலில் பள்ளிகொண்டிருக்கும் அவதாரங்களுக்கு மூல காரணராகிய வாஸுதேவரும். விபவமாவது ராமகிருஷ்ணாதி அவதாரங்கள். அந்தர்யாமித்வம் இரண்டு படிப்பட்டிருக்கும்; அதாவது "எனதாவி" என்றும், "என்னுயிர்" என்றுஞ் சொல்லுகிறபடியே ஆத்மாவுக்குள்ளும், லக்ஷ்மீஸஹித னாய் விலக்ஷண விக்ரஹனாய்க்கொண்டு ஹிருதய கமலத்துள்ளும் எழுந்தருளி யிருக்கு மிருப்பு. அர்ச்சாவதாரமாவது, கண்ணுக்கு விஷயமாம்படி கோயில் களிலும் கிரஹங்களிலும் எழுந்தருளியிருக்கும் நிலை. பரப்பிரம்மமானது ஸ்வதந்திரமாய், சத்தியமாயுள்ளது. சித்தாகிய அணுசொரூபமான ஜீவாத் மாக்களும், அசித்தாகிய ஞானசூன்யமான ஜட பதார்த்தங்களும், பரப் பிரம் மத்தை ஆச்ரயித்தவைகள். ஒரு புஷ்பமானது, மணம், நிறம் முதலிய

குணங்களோடு கூடி யிருப்பதுபோலும், புஷ்பத்தையும் அதன் குணங்களை யும் வேறாகப் பிரிக்க முடியாதது போலும், பரப்பிரம்மமானது சேதனு சேதனங்களுடன் சேர்ந்து ஒரே வஸ்துவா யிருக்கிறது. பரப்பிரம்மமானது சித்து அசித்துக்களைச் சரீரமாக வைத்துக்கொண்டு, தான் எல்லாவற்றிலும் சரீரியாயும் அந்தர்யாமியாயும் இருக்கிறது பானை செய்வதற்கு மண் உபா தான காரணமாக இருப்பதுபோல, பிரம்மாண்ட சிருஷ்டிக்கு அசித்தாகிய மூலப் பிரகிருதியே உபாதான காரணமாகிறது. ஒவ்வொரு மனிதனிடத்தி லும் இருக்கும் ஜீவாத்மா வெவ்வேறு. ஜீவன் ஞானத்தால் எங்கும் வியாபித்தவனாக இருந்தாலும், அவனுடைய ஞானம் கர்மபந்தத்தா லடங்கி யிருக்கிறது. மோக்ஷம் அடையும் வரையில் ஜீவனைக் கர்மம் விடாது. ஜீவன் ஜனனமரணமாகிய ஸம்ஸார பந்தத்திலிருந்துவிடுபட்டும், பகவதநுபவமாகிய பெரும்பேற்றை யிழந்து, அப்ராக்ருத ஸூக்ஷ்ம சரீரத்திலிருந்துகொண்டு அநுபவிக்கும் ஆத்மாநுபவமே கைவல்ய மோக்ஷ மெனப்படும். வைகுண்ட மென்னும் ஒரு அப்ராக்ருதமான லோகத்தில் பரமாத்மாவாகிய நாராயணனுக் குச் சமீபமாய்ச் சென்று, ஜகத்ஸ்ருஷ்டி, ஸ்திதி ஸம்ஹாரங்கள் முதலிய ஜகத் வியாபாரங்கள், லக்ஷ்மிபதித்துவம் இவைகள் தவிர, மற்றெல்லா விஷ யங்களிலும் பரமாத்மாவுக்குச் சமானமா யிருந்து, பிரம்மானந்தத்தை யநு பவிப்பதே, பிரம்மானந்த மோக்ஷமாம். ஜீவன் பிரம்மத்தில் லயமாகிறதென்ற வியவகாரம் இந்த சித்தாந்தத்தில் கிடையாது.

ஜீவாத்மாக்கள், நித்யர், முக்தர், பத்தர் என்று மூவகைப்படுவர். அர சன் என்று ஒருவன் இருந்தால், அவனுக்கு மந்திரி பிரதானிகள் ஏற்பட் டிருப்பதுபோல, வைகுண்ட லோகத்தில் பரமாத்மாவுக்குக் கைங்கர்யஞ் செய்வதற்காக அவனைப்போலவே அநாதிகாலமாக அங்கு உள்ள நித்ய ஸூரி களுக்கு நித்யர் என்றும் பெயர். ஒருகாலத்தில் ஸம்ஸாரத்தில் இருந்து பிறகு முக்தி யடைந்து, வைகுண்ட லோகத்தில் நித்யர்களோடுகூட பர மாத்மாவுக்குக் கைங்கர்யஞ் செய்பவர்கள் முக்தர் ஆவர். நம்மைப்போல் ஸம்ஸாரத்தில் உழன்றுகொண்டு, பகவானை யடைய முயற்சிப்பவர்கள் பத்தர் எனப்படுவர்.

கர்மம், ஞானம் ஆகிய இரண்டும் பக்தியை யடையும் சாதனங்களாம். ஜீவன் பகவானிடத்தில் பக்தி அல்லது ப்ரபத்தி என்கிற ஆத்ம ஸமர்ப்பணம் செய்து அவனுடைய கிருபையைப்பெற்று மோக்ஷ மடைகிறான். பசு, பக்ஷி முதல் சகல ஜீவன்களும் எப்போதாகிலும் ஒரு காலத்தில் மோக்ஷ மடைந்தே தீரும். எண்ணற்ற ஜீவாத்மாக்கள் இருப்பதால், எல்லாம் மோக்ஷத்திற்குப் போய்விட்டால் பிறகு இங்கு மோக்ஷத்திற்குப் போகவேண்டிய ஆத்மா கிடையாதே யென்று சொல்வதற் கிடமில்லை.

## துவைதம்

துவைத சித்தாந்தத்திற்கும், விசிஷ்டாத்வைத சித்தாந்தத்திற்கும் அதிக வித்தியாசமில்லை. விஷ்ணுதான் சர்வேச்வரன், அவனிடத்தில் பக்தி செய்வதுதான் முக்தி யடைவதற்கு உபாயம் என்கிற கொள்கைகள் இரண்டு சித்தாந்தங்களுக்கும் பொதுவானவைகளாகும். ஆனால் பின்வரும் விஷயங் களில் மாத்திரம் வித்தியாச முண்டு. விசிஷ்டாத்வைத சித்தாந்தப்படி ஜீவாத்மாக்கள் நித்யர், முக்தர், பத்தர் என்று மூவகைப்பட்டிருப்பர் என்று சொன்னோம். துவைதசித்தாந்தம் நித்யர், முக்தர்களை ஒப்புக்கொள்வ

தோடு, பக்தர்களிலும் மூன்றுவகை யிருப்பதாகச் சொல்லுகிறது. சத்வ குணம் நிறைந்தவர்கள் மோக்ஷத்திற்குப் போக நியமிக்கப்பட்டவர்க ளென்றும், ரஜோகுணம் நிறைந்தவர்கள் எப்பொழுதும் ஸம்ஸாரஸாகரத்தில் பிறந்திறந்துழலும்படி நியமிக்கப்பட்டவர்களென்றும், தமோகுணம் நிறைந்தவர்கள் மீட்சியின்றி சதாகாலமும் நரகத்தில் இருந்து கஷ்ட மனுபவிக்கும்படி நியமிக்கப்பட்டவர்களென்றும் இப்படி பக்தர் மூவகைப்படுவர். இவர்களுக்கு முறையே முக்திக்கு யோக்கியர்களென்றும், நித்திய சம்சாரிகளென்றும், நித்திய நாகிகள் என்றும் பெயர். ஜீவர்களுடைய சொரூபத்திலும் மனுஷிய, பசு, பக்ஷியாதி அனந்த பேதங்களுண்டு. முக்திக்கு அருகர்களான ஜீவர்கள் தவிர மற்ற ஜீவர்களுக்கு முக்தி யென்பதில்லை. முக்திக்கு யோக்கியர்களான ஜீவர்கள், தங்கள் தங்கள் சொரூபம் எதுவோ, அந்த சொரூபத்துடன் முக்தி யடைகிறார்கள். மோக்ஷத்திலும் அவரவர்களுடைய உபாசனைக்குத் தகுந்த மாதிரி தாரதம்மிய முண்டு. சேதனு சேதனங்களோடு கூடிய உலகமானது கடவுளுக்குச் சரீரமாக இருப்பதை துவைத சித்தாந்தம் ஒப்புக்கொள்வதில்லை. விஷ்ணு, ஜீவன், பிரகிருதி ஆகிய இம்மூன்று நித்யமான தத்துவங்களும், தனித் தனியே சத்தியமாய் ஒன்றுக்கொன்று வேறு யுள்ளவை. ஆனால், பிரகிருதியும் ஜீவனும் விஷ்ணுவின் அதிகாரத்திற் குட்பட்டவை. இப்படி, ஈசுவரன், சேதநா சேதநங்கள் ஆகிய இரண்டையும் அடியோடு வேறுபடுத்திக் கூறுவதால், இதற்குத் துவைதம் என்றும், ராமாநுஜருடைய சித்தாந்தம், இந்த வித்தியாசத்தை ஒப்புக்கொண்டாலும், சேதநா சேதநங்களாகிய விசேஷணங்களையுடைய பிரம்மம் ஒன்றே ஸத்தியம் என்று சொல்வதால் விசிஷ்டாத்வைதமென்றும், சங்கருடைய சித்தாந்தம், அவ்வித வித்தியாசத்தை ஒப்புக்கொள்ளாமல் சகலமும் பிரம்மமே என்று சொல்வதால் அத்வைதம் என்றும் சொல்லப்படுகிறது.

பிரபஞ்சத்திலுள்ள அணுவவ்வளவு பிரதேசத்திலும் ஜீவாத்மாக்கள் நிரம்பி யிருந்தாலும், துவைத சித்தாந்தப்படி அவை ஒன்றற்கொன்று வித்தியாசமான சுபாவத்தை யுடையவை.

இனி, இம் மூன்று சித்தாந்தங்களுக்கும் பொதுவாக உள்ள கொள்கைகளைத் திரட்டிச் சொல்லுவோம்.

மத விஷயத்தில், சுருதியில் சொல்லப்பட்டுள்ள ஆத்மஞான, ஆத்மானுபவ விஷயங்களே பிரமாணமேயன்றி ஒருவருடைய அபிப்பிராயம் பிரமாணமல்ல. அநேக ரூபங்களையும் பெயர்களையும் உடையவராகச் சொல்லப்பட்டாலும், அப்படி யிருக்கும் பரிபூர்ணராகிய கடவுள் ஒருவரே. ஸம்ஸாரத்தில் அகப்பட்டுழலும் ஆத்மாக்களின் ஒரு ஜன்மத்தின் நிலைமையானது, அதற்கு முன் ஜன்மங்களில் அவர்கள் செய்த கர்மத்திற்குத் தக்கபடி ஏற்படுகிறது. ஜனன மரணமாகிய இந்த ஸம்ஸாரத்திலிருந்து விடுதலையடைய விரும்பும் ஒவ்வொருவரும், தூய்மை, தன்னடக்கம், அவாவின்மை, ஸத்தியம், அஹிம்ஸை ஆகிய இவற்றைக் கடைப்பிடித்து, ஒரு தர்மாத்மாவாக ஆவதற்குப் பாடுபடவேண்டும். ஒவ்வொருவரும், பரதேவதையாகிய பகவானை ஆராதித்து, அவருடைய முகோல்லாஸத்தையும், பூர்ணகிருபையையும் அடைவதற்குப் பாடுபடவேண்டும். ஒருவன் ஜனன மரணமாகிய துன்பத்தினின்று விடுபட்டு, கடவுளின் தன்மையை யடைவதே மோக்ஷ மெனப்படும்.

---

# ஐயோ, கடவுளே!

(ஆரியூர்-வ. பதுமநாப பிள்ளை.)

ஒரு நாட்டிலே, ஒரு அரசர், இருபத்தைந்து வருஷகாலம் சிங்காசனத்தில் அமர்ந்திருந்து அரசாண்டு விட்டால், அவரது ஆட்சிக்குட்பட்ட எல்லா முக்கிய நகரங்களிலும் வெகு ஆடம்பரமாக 'வெள்ளி விழா' கொண்டாடப்படுகிறது. ஒரு மகாசபை ஐம்பது வருஷகாலம் சிறப்பாக நடைபெற்றால், அதற்கு நாடெங்கும் மிகுந்த குதூகலத்துடன் 'பொன் விழா' கொண்டாடப்படுகிறது. ஒரு ஸ்தாபனம் அறுபது வருஷ காலமாக நிலைத்திருந்துவிட்டால், அதற்கு 'வைர விழா' கொண்டாடப்படுகிறது. வட இந்தியர்களாலும் தென்னிந்தியர்களாலும் பிராமணர்களாலும் பிராமணரல்லாதாராலும் ஒருங்கே பல்லாயிர வருஷ காலமாகப் பெரிதும் போற்றித் துதிக்கப்பட்டு வந்திருப்பவரும், எத்தனையோ அரசர்களின் அரசாட்சிகளைக் கண்டிருப்பவரும், எண்ணிறந்த மன்னர்களால் பூஜிக்கப்பட்டு வந்திருப்பவரும், இன்றும் அரங்கமா நகரில் செங்கோல் செலுத்திக் கொண்டிருப்பவருமாகிய ராஜ பூஜித மகாராஜராகிய ஸ்ரீ ரங்க ராஜரே! திருவரங்கப் பெருநகரிலே, சிங்காசனத்திலிருந்து கொண்டு கையில் செங்கோல் தாங்கி, தாங்கள் பல்லாயிர வருஷங்களாகப் பாரத நாட்டை—ஏன்?—தேவலோகம் பூலோகம் பாதாளலோகம் முதலிய எல்லா உலகங்களையுமே ஆண்டுகொண்டு வந்திருந்தும், தங்களது ஆட்சிக்கு விசேஷ விழா கொண்டாட 'ஜூபிளி' நிதி திரட்ட இதுவரையில் எவருமே முன்வரவில்லையே! அறுபது வருஷகாலம் ஒரு அரசர், தமது மகுடம்—செங்கோல்—உயிர் எனும் மூன்றையும் ஒருங்கே விடாமல் பிடித்துக் கொண்டிருந்து தமது பதவியைக் காப்பாற்றிக்கொண்டு விட்டால், அவரது அரசாட்சியின் அறுபதாவது ஆண்டு நிறைவை முன்னிட்டு கொண்டாடப்படுவது 'வைர விழா'வானால், பல்லாயிர வருஷங்களாக அரசாண்டுவரும் தங்களுக்குக் கொண்டாடப்படும் விழாவுக்கு என்னவென்று திருநாமம் சூட்டுவது? இந்தத் தேசம் முழுவதிலும் தங்களுக்கு லட்சக்கணக்கான பக்தர்களிருந்துங்கூட, தங்களது அரசாட்சியின் பழமையையும் சிறப்பையும் குறித்து எங்கும் பிரசங்கங்கள் செய்து 'ஜூபிளி நிதி' திரட்ட ஒருவர்கூட முன்வரவில்லையே! ஐயோ, கடவுளே! தங்களது அதிர்ஷ்டஹீனம் இப்படியா இருக்கவேண்டும்?

ஐயனே! அயோத்தியிலிருந்து அரங்கமாநகருக்குவந்து குடியேறியவரும்; ஆழ்வார்களின் தமிழ்ப் பாடல்களைப் பெற்று, அவற்றைச் செவி குளிரக் கேட்பதற்காகவே பிரபலமான அத்தியயனோற்சவமும் கண்டருள்பவரும்; 'நம்பெருமாள்' 'அழகிய மணவாளப் பெருமாள்' எனும் கலப்பற்ற தனித் தமிழ்த் திருப்பெயர்களைச் சூட்டிக் கொண்டிருப்பவருமாகிய தாங்கள் ஆரியரா? அல்லது தனித் தமிழரா? தற்சமயம் அவ்விருகட்சிகளைச் சேர்ந்த பக்தர்களும் பரஸ்பரம் வாதப் போர்செய்ய முனைந்து நிற்பார்களானால், தாங்கள் எந்தக் கட்சியாரை ஆதரிப்பீர்கள்? வடநாட்டில் பல்லாயிர வருஷங்க

ளாக வாழ்ந்திருந்து தென்னாட்டை அடைந்து பல்லாயிர வருஷங்களாகக் குடியிருந்துவரும் தாங்கள் ஆரியரா? அல்லது தமிழரா? என்பதை தங்களாலேயே இன்னும் நிச்சயிக்க முடியாமலிருக்கும்போது, தங்களால் எந்தக் கட்சியாரை ஆதரிக்க முடியும்! ஐயோ, தெய்வமே! இது என்ன தர்ம சங்கடம்?

ஒருமுறை உச்சரிக்கும்போதே உயிரையும் உள்ளத்தையும் ஒருங்கே பரவசப்படுத்தும் தங்களது 'அரங்கநாயகர்' எனும் அழகிய திருநாமம், தற்காலத் தமிழர்களால் 'றெங்கநாதர்' 'ரங்கநாதர்' 'ரெங்கநாதர்' 'இரங்கநாதர்'—என்று எப்படி எப்படியெல்லாம் சித்திரவதை செய்யப்பட்டு வருகிறது! வடமொழித் திருநாமமாகிய அது பலவிதமாகச் சித்திரவதை செய்யப்பட்டு வருவதனாலல்லவா, எவராலும் எளிதில் உச்சரிக்கக் கூடியதும் ஒவ்வொரு தமிழனும் மிகுந்த உற்சாகத்துடன் சொந்தம் பாராட்டிச் சொல்லக் கூடியதுமாகிய 'நம்பெருமாள்' எனும் தனித்தமிழ்த் திருப்பெயரைத் தாங்கள் சூட்டிக் கொண்டு விட்டீர்கள்! அப்படியிருந்தும், தற்காலத்தமிழர்களில் ஆயிரக்கணக்கானவர்கள், தங்களுக்கு அப்படிப்பட்டதொரு தனித்தமிழ்த் திருப்பெயர் உண்டென்பதைக்கூட இன்னும் உணர்ந்துகொள்ள வில்லையே! ஐயோ! தமிழ்த்தாயின் 'தவக்குறை' இருந்தபடி என்னே! என்னே!!

இன்றைய பூவுலகிலே, 'சர்வாதிகாரி' என்னும் பட்டத்தை வகித்துக்




கொண்டிருப்பவர்கள், 'ஹிட்லர்' 'முஸ்ஸோலினி' முதலிய பிரபலஸ்தர்கள் சிலர் இருக்கிறார்கள். ஆனால், அவர்களது 'சர்வாதிகாரத்வம்' அவர்களது ஆட்சிக்குட்பட்ட நாட்டிலன்றி, வேறு எந்த நாட்டிலும் செல்லாது! எவ்வுலகுக்கும் இறைவரும் அரசபதவியை வகிக்கும் எந்த மன்னருக்கும் தலைமை அதிகாரியுமாகிய தங்களது தற்கால நிலைமையை நினைக்க நினைக்க, என் கண்களிலிருந்து இரத்தம் சொட்டுகிறது. மண்டபத்தில் மகா வைபவமாகத்

தாங்கள் உற்சவம் கண்டருளி மிகுந்த சோர்வுடனும் சிரமத்துடனும் ஆஸ்தானத்திற்கு எழுந்தருளும்போது, 'தாசில்தார்' 'மாஜிஸ்ட்ரேட்' 'டிப்டி கலெக்டர்' முதலிய உத்தியோகஸ்தர்களில் எவருடைய திருவுள்ளத்திலேனும் தங்களைப் பார்க்கவேண்டுமென்னும் எண்ணம் தோன்றி, அவர்களது கட்டளை சந்நிதிக் 'கொராட்டு மணியகார'ருக்குக் கிடைத்தவுடன், தாங்கள் எந்த நேரத்தில்—எந்த இடத்தில்—எந்த நிலையில் எப்படி இருந்தாலும், அதே இடத்தில் அப்படியே தாங்கள் நின்றுவிட நேர்ந்து விடுகிறது! ஒரே ஒரு தாலூகாவில் அதிகாரம் செலுத்தும் ஒரு 'குட்டி அதிகாரி'யின் கட்டளைக்கு, எல்லா உலகங்களுக்கும் தனிப்பெரும் தலைவராக விளங்கும் சர்வாதிகாரியாகிய தாங்கள்கூட கட்டுப்பட்டு நடக்கவேண்டிய காலமும் வந்துவிட்டதே! ஐயோ, கடவுளே! இது என்ன காலம் ஸ்வாமீ?

தமிழர்களிடம் கொண்ட அன்புப் பெருக்கினாலல்லவா, சரயுநதித் தண்ணீரை வெறுத்துக் காவேரியாற்றுத் தண்ணீரில் மோகம்மிகுந்து, அயோத்தியைத் துறந்து தாங்கள் அரங்கமாநகரை அடைந்தீர்கள்! அதன் பொருட்டல்லவா தங்களது கீர்த்தி சக்தி வீரம் முதலிய எல்லாவற்றையும் ஒரு சின்னஞ்சிறு உருவில் அடக்கிக்கொண்டு, தாங்கள் மற்றெல்லோரையும் ஆட்டிவைப்பது போய், பக்தர்களால் தாங்கள் தற்சமயம் பலவாறு ஆட்டி வைக்கப்பட்டு வருகிறீர்கள்! எவ்வளவோ தூரத்திலிருந்து எவ்வளவோ சிரமப்பட்டு வந்து சேர்ந்து எவ்வளவோ பேரன்புடன் தங்களைப் பேட்டி காணத் தங்களது இருப்பிடத்திற்குள் ஒரு அன்பர் நுழைவாரானால், தற்காலத்தில் தங்களது சந்நிதியில் பேசும் த்வார பாலகர்களாக வேலை பார்த்துவரும் 'ஸ்வாமிகள்' அவ்வன்பரைச் சிறிதும் கருணையின்றி உள்ளே நுழைய முடியாதபடி தடுத்து விடுகிறார்களே! அவர்களுக்குச் செலுத்த வேண்டிய 'மரியாதை'யை (நமஸ்காரத்தை யல்ல; 'ஸ்வர்ணபுஷ்ப' சம்பாவனையை)க் கொடுக்கக்கூடிய சக்தியற்றவராக ஒருவர் இருந்தால், அந்த அன்பர் எவ்வளவு கஷ்டப்பட வேண்டியிருக்கிறது! சந்நிதிவாசலின் இருபுறமும் கை கால் அசைக்காமல் வாய் திறக்காமல் காவல்செய்து நிற்கும் த்வாரபாலகர்களுக்குப் போட்டியாக வேலைபார்த்துவரும் ஸ்வாமிகளின் திருக்கரத்தில் ஒருவர் ஸ்வர்ணபுஷ்ப சம்பாவனை செலுத்திவிட்டால், அவருக்காக தாங்கள் எவ்வளவு கஷ்டப்பட வேண்டியிருக்கிறது! அவர் ஒருவரை சந்தோஷப் படுத்துவதற்காக, காவிரி நீரின் குளிர் தாங்க முடியாமல் பாம்பின்மேல் இருட்டறைக்குள் படுத்துக் கொண்டிருக்கும் தாங்கள் சுடர்விட்டெரியும் கைவிளக்கின் கொடிய வெப்பத்தையும் கற்பூரப்புகையையும், எவ்வளவு மன வேதனையுடன் சகித்துக் கொள்ள வேண்டியிருக்கிறது! சம்பாவனைக் கட்டணம் செலுத்துபவர்களுக்கே சேவை யளிக்க, தாங்கள் கண் காட்சிச் சாலையில் வைக்கப்பட்டிருக்கும் விநோதப் பொருளா என்ன? தாங்கள் எந்த நோக்கத்துடன் அரங்கமாநகரில் அரவணையின் மேல் பள்ளி கொண்டுள்ளீரோ, அந்த நோக்கம் இக் காலத்தில் சிறிதும் நிறைவேறவில்லையே! ஐயோ, ஆண்டவனே! இது என்ன விபரீதம்?

முற்காலத்திலிருந்த ஹரிஜன பக்தர் ஒருவரிடம் ஜாதித்திமிரினால் அபசாரப்பட்ட ஒரு பரம வைதிகப் பிராமணரை, அந்த ஹரிஜன பக்தரைத் தமது தோள்களில் தூக்கிக் கொண்டு கோயிலுக்குள் வருமாறு செய்வித்தீரல்லவா? இந்தக் காலத்தில், எவ்வளவு ஹரிஜன பக்தர்கள் தங்களது திருக்கோயிலுக்குள் நுழைய முடியாமல் கண் கலங்கிக் கருத்தழிந்து வருந்தி நிற்

கிறார்க ளென்பது, தாங்கள் அறியாததா என்ன? அக்காலத்தில் தாங்கள் கொண்டிருந்த கருணை இக்காலத்திலும் தங்களுக்கு இருக்குமானல், இந் நாட்டில் ஆயிரக் கணக்கான தேசியத் தொண்டர்களின் அருந் தியாகத்தினுல் ஒழிக்க முடியாமற் போன தீண்டாமைப் பேய், எவ்வளவு விரைவில் இந் நாட்டை விட்டு ஓடிப்போய் விடும்! "இழி குலத்தவர்களேனும், எம். அடியார்களாகில்—தொழுமின்; நீர் கொடுமின்—கொண்மின்"—எனும் ஆழ்வாரது அருள் வாக்கு, வெறும் 'ஏட்டுச்சுரைக்கா' யாகும்படி விட்டு விடத் தாங்கள் திருவுள்ளம் கொண்டு விடலாமா?

"ஆண்டவனே! ரங்கநாதா! நீ தான் என்னைக் காப்பாற்ற வேணும்! நான் கேட்காமலிருக்கும் போதே—என்னைக் கலந்து கொள்ளாமலே—என்னுடைய சம்மதத்தைப் பெறாமலே, எனக்கு முக்கால் டஜன் பிள்ளை குட்டிகளைக் கொடுத்து விட்டாய்! எனது குடும்பத்தைக் காப்பாற்றுவதற்காக, நான் இது வரையில் எவ்வளவோ பாவங்களைத் தெரிந்தோ தெரியாமலோ செய்திருப்பேன்; இனிமேலும், வேறு வழியில்லாமல் செய்ய வேண்டியிருந்தாலும் இருக்கும். வயிற்றுப் பிழைப்புக்காக எவ்வளவோ பித்தலாட்டங்கள் செய்ய வேண்டியிருக்கும். எல்லாப் பாவங்களையும் நீ தான் தீர்க்க வேணும். 'இனிமேல் கெட்ட காரியங்கள் எவையும் செய்யவில்லை' என்று இப்போதே நன்னடக்கை ஜாமீன் கொடுக்க நான் தயாராக இல்லை. இருந்தாலும், நீ தான் என்னைக் கைவிட்டு விடாமல் காப்பாற்ற வேணும். நான் செய்கிற பாவங்களைக் கூட தீர்க்கக் கூடிய சக்தி உனக்கில்லா விட்டால், 'கருணாநிதி' என்ற பெயர் உனக்கு எப்படிப் பொருந்தும்?'—என்று தங்கள் சந்நிதியில் நின்று கொண்டு தங்களிடம் முறையிடுகிறார் ஒருவர். அட, கடவுளே! 'கருணாநிதி' என்ற பட்டத்தைக் கொண்டிருப்பதற்காக, தாங்கள் நெஞ்சிரக்கமற்ற கொடிய வஞ்சகர்களின் தீச் செயல்களுக்குங் கூட துணை நிற்க வேண்டுமா என்ன?

பூலோகத்திலேயே சொர்க்க போகத்தை அனுபவிக்கக் கூடிய இடம் ஒன்று உண்டென்றால், அத்தகைய இடம் 'மாமனார் வீடு' ஒன்றே என்பது தற்காலத்திய புது மாப்பிள்ளைகளில் பெரும்பாலோரின் எண்ணம். தாங்களோ நீண்ட காலத்திலிருந்தே இன்று வரையில் 'அழகிய மணவாளப் பெருமாள்' என்னும் பெயருடன் என்றும் உற்சாகம் குன்றாத உல்லாஸ மாப்பிள்ளையாகவே வாழ்ந்து வருகிறீர்கள்! ஒரு மாமனாருக்குப் பதிலாக, ஐந்து மாமனார்களைப் பெற்றிருக்கிறீர்கள்! ஆயினும், அரங்கமா நகரில் குடியிருக்கும் தங்களுக்கு, மாமனார் வீட்டில் மாமியார் செய்யும் ராஜோபசாரங்களை ஏற்றுப் பரவச மடையக் கூடிய பாக்கியம் மாத்திரம், ஒரு முறை கூட வாய்ப்பதில்லையே! அரங்கமா நகரில் தாங்கள் எவ்வளவோ ராஜோபசாரங்களை இப்பொழுதும் ஏற்று அனுபவித்து வருகிறீர்கள்; ஆயினும் அந்த ராஜோபசாரங்களெல்லாம், மாமனார் வீட்டில் நுழைந்தவுடன், கதவிடுக்கில் நாணிக் கோணி நின்று கொண்டு "வாங்கோ, மாப்பிள்ளே!"—என்று அன்பும் வெட்கமும் பரிவும் மகிழ்ச்சியும் பொங்கித் ததும்பும் இன்பக் குரலில் மாமியார் வரவேற்கும் ஒரு வார்த்தைக்கு ஈடு கட்டக் கூடுமோ? ஐயோ, பாவம்! 'மணவாளப் பெருமாள்' எனும் பெயர் பெற்றுள்ள தங்களுக்கு, மாமியார் வீட்டில் நடக்கக் கூடிய உபசாரங்களைக்கண்டு களிக்கும் பாக்கியம்

ஒரு முறையேனும் வாய்க்காமலிருப்பது வேறு எதனாலும் ஈடு செய்ய முடியாத மிகப் பெரிய குறையேயன்றோ?

தங்களது முதல் மாமனார் வீட்டின் ஒப்புயர்வற்ற சிறப்புகளை, எவ்வளவோ புதல்வர்கள் வர்ணித்து வர்ணித்து அலுத்துப் போய் விட்டார்கள். இப்பொழுதும், துறைமுக முன்ன ஒவ்வொரு நகரிலும் தினந்தோறும் ஆயிரக் கணக்கானவர்கள், தங்களது மாமனா வீட்டு முற்றத்திலே மாலை தோறும் உல்லாசமாக உலவிய வண்ணம் மகத்தான பேரின்பத்தை அனுபவித்து வருகின்றனர். சென்னையிலுள்ள 'மெரினா' போன்ற இடங்களில் விளையும் இன்பத்தை அனுபவித்து ஆனந்திக்க வேண்டுமேயன்றி, கேவலம் வர்ணனையால் விளக்கிக் காட்ட முடியுமோ? தினந்தோறும் ஆயிரக் கணக்கானவர்கள் தஙகளது மாமனார் வீட்டின் இன்பத்தை அனுபவித்து வரும்போது, தாங்கள் மட்டும் ஏன் கடலிலிருந்து வெகு தூரத்திலிருப்பதும் குளிர் நிறைந்ததும் கொசுக்கடி துன்பம் மிகுந்ததுமான சின்னஞ்சிறு தீவில் காலங் கழிக்க வேண்டும்? ஐயோ, பாவம்! இதுவும் விதியின் கொடுமையா என்ன?




இந்த நாட்டில் பரம வைதிக நாகரிகம் சிறந்து விளங்கிய காலத்திலேயே, தாங்கள் 'கலப்பு மணத்திற்கு வழிகாட்டத் துணிந்ததை என்னென்பது! ஏற்கெனவே ஆறு காதலிகளைப் பெற்றிருந்தும், டில்லிமா நகருக்குச் சென்று மகமதிய மன்னரின் மாளிகையிலிருந்த மங்கையைக் காதலித்து மணந்து கொள்ளத் துணிந்த தங்களது விசாலமான சீர்திருத்த மனப் பான்மையை—உண்மைக் காதலின் வலிமையை கேவலம் சாதிப் பேயின் கொடுமை ஒடுக்கிவிட முடியாதென்னும் உண்மையை உலகுக்கு உணர்த்தியருளிய தன்மையை, என்னென்று

வியப்பது? அவ்வாறு மணந்து கொண்டதுடன் நில்லாமல், அக் காதலியைத் தங்களது கோயிலுக்குள்ளேயே வைத்துக் கொண்டு தினந்தோறும் ரொட்டியும் வெண்ணெயும் உண்டு வருவதையும், திருமஞ்சன காலத்தில் உடுத்திக் கொள்ள மற்றெல்லாத் துணிகளையும் விட்டு விட்டு மகமதியக் கைலியையே தேர்ந்தெடுத்துக் கொண்டு விட்டதையும் நினைக்க நினைக்க எவ்வளவு வியப்பா யிருக்கிறது! ஆனால், அவற்றை எல்லாம் கண் குளிரக் கண்டு களிக்கும் சௌகரியம், தற்காலத்திலுள்ள முஸ்லீம் சகோதரர்களுக்கு இல்லையே! அத்தகைய சௌகரியத்தை அவர்களுக்கு அளித்தருளத் தாங்கள் திருவுள்ளம் கொண்டு விட்டால், இந்த நாட்டில் ஹிந்து—முஸ்லிம் ஒற்றுமை எவ்வளவு எளிதில் உறுதிப்பட்டு விடும்!

'நவாபு கால'த்தில் ஐம்பத்தேழு கிராமங்களின் வருமானத்தை அனுபவித்துக் கொண்டிருந்த தாங்கள் அக் கிராமங்களை யெல்லாம் பறி கொடுத்து விட்டு, இக் காலத்தில் சர்க்காரால் கொடுக்கப்பட்டு வரும் பணம் நித்தியபடிச் செலவுக்கே போதாமல், ஐந்தாறு இடங்களில் உண்டிகள் வைத்தும், முத்தங்கி—இரத்தின அங்கி சேவைகளுக்கு டிக்கெட்டுகள் ஏற்படுத்தியும், அடிக்கடி லாட்டரி போட்டும் பணம் சம்பாதிக்க வேண்டிய காலமும் வந்து விட்டதே! ஐயோ, கடவுளே! செல்வத்திற்கு அதிதேவதையாகிய திருமகள் தங்களது திருமார்பை விட்டு ஒரு பொழுதும் பிரியாதிருந்தும், பாழும் பணப் பஞ்சப் பேய் தங்களையும் நெருங்க எப்படித்தான் துணிந்ததோ?

'ஸ்ரீரங்கத்து உலக்கை' எனும் வழக்கச் சொல்லைத் தமிழர்கள் இன்னும் மறந்து விட வில்லையே! பல்லாயிர வருஷங்களாக 'வைடமின்' சிறிதும் நீங்காமல் பக்குவமாகத் தீட்டப் பெற்ற கைக் குத்தரிசிச் சாதத்தையே சாப்பிட்டு வந்த தாங்கள், தற்சமயம் மெஷினில் குத்தப்பட்டு நாற்றம் படிந்து வெப்பமடைந்து சத்தை இழந்த அரிசிச் சாதத்தைச் சாப்பிடும் படியும் நேர்ந்து விட்டதே! பழையபடியே தங்களது கோயிலுக்குள் தங்களுக்கு வேண்டிய அரிசியை உரலில் குத்திக் கொடுக்கும் கைங்கர்யத்தை, பெண்மணிகள் ஒருவரோடொருவர் போட்டி போட்டுக் கொண்டு உற்சாகத்துடன் ஏற்றுக் கொள்ளக் கூடிய காலமும் இனி வருமோ?

ஐயோ, அரங்கேசரே! தற்காலத்தில் தங்களைச் சேவிக்க வரும் அன்பர்கள் எல்லோரும், தங்களிடம் தத்தம் குறைகளை முறையிட்டு அவற்றை நீக்கியருளுமாறு தங்களை வேண்டி நிற்கிறார்களே யன்றி, ஒருவரேனும் தற்சமயம் தங்களுக்கு இருந்து வரும் குறைகளைச் சிந்தித்துச் சிறிதேனும் வருந்தவில்லையே! அவர்களைப் போலவே அடியேனுக்கும் மூட்டை மூட்டையாகப் பல வகைப்பட்ட குறைகள் இருந்தாலும், தற்சமயம் சர்வலோக நாயகராகிய தங்களுக்கிருந்து வரும் குறைகளை நினைக்கும்போது, எளியேன் குறைகள் எம் மாத்திரம்? மற்றவர்களைப் போலவே அடியேனும் எனது குறைகளை முறையிட்டுத் தங்களது திருச் செவிகளைப் புண் படுத்தாமல், தற்சமயம் தங்களுக்கிருந்து வரும் குறைகளை நினைத்து நினைத்துப் பெரிதும் மனம் குமுறி உடல் பதறி நிற்கிறேன். இப்படிப்பட்ட அடியேனை ஆசை தீரக் கட்டித் தழுவிக் கொண்டு, ஒரு முறை வாய் விட்டுப் புலம்ப வேண்டுமென்னும் எண்ணம் தங்களுக்குத் தோன்றுமல்லவா? ஆனால், ஐயோ, கடவுளே! அவ்வாறு ஒரு முறை அடியேனைக் கட்டிக் கொண்டு அழுவதற்குக் கூட, தற்சமயம் தங்களுக்குச் சுதந்தரம் இல்லையே!




# பிரம சூத்திரம்

(சித்தூர் பண்டித-பூ. ஸ்ரீநிவாசன்)

(813-ம் பக்கத் தொடர்ச்சி.)

## இரண்டாவது அத்தியாயம்—முதல் பாதம்

### ஸ்மிருத் யதிகரணம்

2-வது சூத்திரம். அவதாரிகை:—வேதாந்த மதத்தை யங்கீகரிப்பதாயின் சாங்கிய ஸ்மிருதிகள் அப்பிராமணங்களாய்விடுமே என்று பூர்வபக்ஷிகள் வாதிக்கையில், சாங்கியாதி ஸ்மிருதிகள் சுருதிகளின் கருத்துக்கு விருத்தமாக விருத்தலின் அவை அப்பிரமாணங்களே. பிரம்மமே ஜகத்காரணமென்றும் பிரதானம் சுதந்திரமற்றதும் ஜடமுமா யிருத்தலின் பிரபஞ்சத்தை யுண்டாக்கும் சாமார்த்தியம் அதற்கில்லை யென்றும் கூறும் சுருதியின் கருத்துக்கு விரோதமாக பிரதானமே ஜகத்காரணமென்று கூறும் சாங்கியஸ்மிருதிகள் அப்பிரமாண மென்பதில் தடையில்லை யென்று முன்னர் கூறப்பட்டது.

இக்கருத்து மீண்டும் வற்புறுத்தப்படுகிறது.

சூ. 2. "இதரேஷாம்சாநுபலப்தேঃ"

பதவுரை:—இதரேஷாம்ச=பிரதானத்தினும் வேருன தத்துவங்களுக்கு, அநுபலப்தேঃ=சுருதி ஸ்மிருதிகளில் உபலப்தி இல்லாமையால் (சாங்கிய ஸ்மிருதி அப்பிராமாணிகமே).

கருத்து:—பஞ்ச விம்சதியாகிய சாங்கிய மத தத்துவங்களைச் சேர்ந்த பிரதானத்தைக் குறிக்கும் பதம் சுருதி ஸ்மிருதிகளில் காணப்பட்டாலும் மற்ற சதுர்விம்சதி தத்துவங்களும் சாங்கிய மதானுசாரமாக அவற்றில் கூறப்படாமையின் சாங்கிய ஸ்மிருதிக்கு பிராமாண்யம் சம்பவிக்காது.

### 2. யோக ப்ரத்யுக்த் யதிகரணம்.

3-வது. சூத்திரம். அவதாரிகை:—சாங்கிய ஸ்மிருதியைப் போலவே யோக ஸ்மிருதியும் வேத விருத்தமென்று காட்டப்படுகிறது. இங்கு பூர்வபக்ஷிகளின் வாதம் என்னவென்றால்:

"இந்திரியங்களை யடக்குவதாகிய யோக வித்தையால் பிரம்ம பிராப்தியுண்டாகுமென்று கடோபநிஷத்து கூறுகின்றது. இதனை அனுசரித்தே,

"அவனைக் காணுதற்குரிய உபாயம் யோகம்" என்று யோகஸ்மிருதி சொல்லுகின்றது. மேலும், "ச்ரோதவ்யோ மந்தவ்யோ நிதித்யாஸிதவ்ய:" என்னும் வாக்கியத்திலுள்ள நிதித்தியாசனம் என்னும் பதம் யோகாப்பியாசத்தையே குறிக்கின்றது. ச்வேதாச்வதரோபநிஷதம் ஆசனாதிகளோடு கூடிய யோக விதானத்தை நன்கு போதிக்கின்றது. இத்தியாதி காரணங்களால் யோக சாஸ்திரம் பிரம்மப் பிராப்திக்கு மிகவும் முக்கியமானது.

ஸூ. 3. "ஏதேநயோக: ப்ரத்யுக்த:"

பதவுரை:—ஏதேந=பிரதானவாத நிராகரணத்தால், யோக:=(அதனோடு ஒப்பான) யோக மதமும், ப்ரத்யுக்த:=நிராகரிக்கப்பட்டது.

கருத்து:—முன்னே சாங்கிய ஸ்மிருதியை நிராகரித்ததனாலேயே அதனோடு சமானமான யோகஸ்மிருதியும் நிராகரிக்கப்பட்டதாகும். ஆகலின் இதன் நிராகரணம் தனியாக வேண்டுவதில்லை. நிற்க,

யோகத்தால் உண்டாகும் பலன் அணிமாதி அஷ்ட ஐசுவரிய சித்தியேயன்றி விவேகத்தோடு கூடிய பிரபஞ்ச வைராக்கியமல்ல. ஆகலின் யோகமானது மோக்ஷப் பிராப்திக்குப் பிரத்தியக்ஷ சாதனமாகாது. வேதாந்தமாகிய ஆத்மைகத்வ விஞ்ஞானத்தைவிட வேறெதுவும் மோக்ஷப் பிராப்திக்குச் சாதனமாகாது என்பது சுருதிகளின் கருத்து. ஆகலின், சாங்கிய ஸ்மிருதி ஞானத்தாலாவது யோக மார்க்கத்தாலாவது மோக்ஷப் பிராப்தியுண்டாகாது.

சாங்கியம் என்பதற்கு ஞானம் என்றும் யோகம் என்பதற்கு தியானம் என்றும் வேதாந்திகள் பொருள் கொள்ளுவர். சாங்கியமும் யோகமும் பிரம்மப் பிராப்திக்கு பரம்பரைச் சாதனம் என்று கூறினால் வேதாந்திகளுக்கு அது உடன்பாடேயாகும்.

3. நவிலக்ஷணத்வாதி கரணம்.

(குறிப்பு:—பின்வரும் இரண்டு சூத்திரங்களும் பூர்வபக்ஷ சூத்திரங்கள்.)

4-வது. சூத்திரம். அவதாரிகை:—வேதாந்த மதத்தின்மேல் தார்க்கிகர்கள் சில தோஷங்கள் கூறுகின்றனர். அவற்றுள் ஒன்று இது. யாகாதி கர்மங்களால் அடையப்படுகின்ற சுவர்க்காதிகள் வேதம் முதலியவற்றால் அறியப்படுவனவேயன்றி யுக்திகளால் அடையப்படுவனவல்ல என்று சொன்னாலும் அது ஒரு வேளை ஒப்புக்கொள்ளத்தக்கதாகும். ஆனால் பிரம்மத்தின் விஷயமாக அவ்வாறு சொல்லலாகாது. பிரம்மமும் வேதாந்தத்தால் அறியப்படுவதாயினும் அது எப்போதும் தனக்குத்தானே விளங்குவதாய் முக்காலத்திலும் பாதிகத்தகாத வஸ்துவாய் இருப்பதால் அதைக் குறித்த அனுமானம் முதலிய தர்க்கப் பிரமாணங்கள் உபயோகப்படலாம். அவ்வாறு தர்க்கித்தால் அந்தப் பிரம்மத்திற்கு ஜகத் காரணத்தன்மை பொருந்தாது," என்று நிரூபிப்பதற்காக,

ஸூ. 4. "நவிலக்ஷணத்வாதஸ்ய, ததாத்வஞ்ச சப்தாத்."

பதவுரை:—விலக்ஷணத்வாத்=காரண ரூபமாகிய பிரம்மத்தைவிட காரிய ரூபமாகிய பிரபஞ்சம் வேறுபட்ட லக்ஷணத்தை யுடையதாக இருத்த

லால், அஸ்ய=இந்தப் பிரபஞ்சத்திற்கு, ந=பிரம்மம் காரணமன்று. ததாத்வஞ்ச=அத்தகைய வேறுபட்ட லக்ஷணம், சப்தாத்=வேதத்தால் (அவகம்யதே=அறியப்படுகின்றது.)

கருத்து:—சச்சிதானந்த வடிவமுடைய பிரம்மம் அசித்து ஜடதுக்க வடிவமுள்ள இப்பிரபஞ்சத்திற்கு முதற்காரண (உபாதான காரண) மாக இராது. "மனிதனுக்கு சுஷுப்தி மூர்ச்சை முதலிய காலங்களில் சைதன்யப் பிரபை (அவனிடத்துள்ள அறிவின் ஒளியானது) அடங்கி பிரதி பந்தத்தின் விசேஷத்தால் ஜீவன் ஜடனைப்போல எப்படி காணப்படுகிறானோ அப்படியே பிரம்ம சைதன்யத்தின் ஒளியும் உபாதிவசத்தால் சில விடங்களில் விஸ்தாரமாக விளங்குவதில்லையே யொழிய வாஸ்தவத்தில் சேதன (அறிவுடைய) பதார்த்தமே பிரபஞ்சத்திற்கு உபாதான காரணம்" என்று சித்தாந்திகள் (வேதாந்திகள்) ஒருகால் சொல்லுவார்கள். ஆனால் அது சரியன்று. ஏனெனில், பிரம்மத்தினிடத்து ஒரு பாகம் அவிஞ்ஞை அசிருத ஜடத்தன்மை இருப்பதாக "விஜ்ஞானஞ்சா விஜ்ஞானஞ்ச," "ஸத்யஞ்சாந்ருதஞ்ச ஸத்யமபவத்"—என்பனபோன்ற வாக்கியங்களால் காணப்படுகின்றது. ஆகையால் அசேதன பதார்த்தமே (பிரம்மத்தின் ஒரு பாகத்திலுள்ள அசேதன (அறிவற்ற) பதார்த்தமே) ஜகத்திற்குக் காரணமாயிருக்கவேண்டும்.

பிரம்மத்தினிடத்து அசேதனபாகமும் இருப்பதாகக் கூறப்பட்டிருந்தாலும் அந்தப் பாகம் ஜகத்திற்குக் காரணமன்று; விஞ்ஞான வடிவமாகவிருக்கிற பரமாத்மாவின் பாகமே இப்பிரபஞ்சத்திற்கு உபாதான (முதற்) காரணமெனவும், அதனால் இப்பிரபஞ்சம் முழுதும் சேதனமேயெனவும் சொன்னால் அதுவும் யுக்தமன்று. ஏனெனில், விஞ்ஞான வடிவமாகிய பரமாத்ம பாகத்திலும சேதனத்தன்மை உபசாரமாகச் சொல்லப்பட்டிருப்பதாகச் சில வாக்கியங்களைக் கொண்டு எண்ணவேண்டி யிருக்கிறது. "நான் மேன்மையின் பொருட்டு ஆகின்றேன்" என்று அந்தப் பிராணங்கள் விவாதப்பட்டுக் கொண்டு பிரம்மாவினிடம் சென்றன." "எங்களில் உயர்ந்தவன் எவனோ நீ எங்களுக்குச் சொல்லவேண்டும் என்று பிராணங்கள் கூறின" என்பன போன்ற வாக்கியங்களைக் காண்க. இதனால் விஞ்ஞானவடிவ பரமாத்ம பாகத்திலும் சேதனத்தன்மை உபசாரமாகச் சொல்லப்பட்டிருக்கின்றதென்பது விளங்குகின்றதே.

5-வது சூத்திரம். அவதாரிகை:—பிரபஞ்சத்தினிடத்தில் எந்தப் பாகம் அசேதனம் எனறு தார்க்கிகர்கள் சொல்லுகின்றார்களோ அந்தப் பாகத்தில் சைதன்யலிங்கம் (சேதனத்தன்மையின் அடையாளம்) காணப்படுகின்றது என்று ஒருவேளை சித்தாந்திகள் (வேதாந்திகள்) சொன்னால் அதுவும் சரியன்று எனறு பூர்வபக்ஷிகள் வாதிப்பதை இச்சூத்திரம் காட்டுகின்றது.

சூ 5. "அபிமானிவ்யபதேசஸ்து விசேஷாநுகதிப்யாம்".

பதவுரை:—விசேஷாநுகதிப்யாம் = முன்னே காட்டப்பட்ட சுருதிகளில் சேதனாசேதன பிரவிபாக விசேஷமிருத்தலாலும் வேற சுருதியிலும் அப்படியே விபாகம் போதிக்கப்பட்டிருத்தலாலும், அபிமானி வ்யபதேசः= பிருதிவி முதலிய பூதங்களின் அபிமானி தேவதைகளின் தோற்றமே காணப்படுகின்றது, து=ஆகலின் சித்தாந்தி (வேதாந்தி) களின் வாதம் சரியன்று.

கருத்து:—"விஜ்ஞானஞ்ச அவிஜ்ஞானஞ்ச" என்பது போன்ற வாக்கியங்களால் சிருஷ்டியில் ஒரு பாகம் ஜடமாய் இருப்பதாக நன்றாகச் சொல்லப்பட்டிருப்பது மன்றி, கௌஷீதகீ பிராம்மணத்தில் பிருதிவி முதலாகிய பூதங்களுக்கு அபிமானி தேவதைகள் இருப்பதாகவும் சொல்லப்பட்டிருக்கின்றது. பிருதிவி முதலிய அசேதனப் பொருள்களில் அதனதன் அபிமானி தேவதைகளின் வசத்தால் சைதன்ய லக்ஷணம் அவற்றினிடத்துக் காணப்படுகின்றதே யன்றி வேறில்லை. உண்மையில் அவை அசேதனங்களே. ஆகையால், அதனதன் அபிமானி தேவதைகளே அந்தந்த வியாபாரங் (தொழில்)களைச் செய்தார்களென்று தோன்றுதலால் பிரம்மம் ஜகத் விலக்ஷணம் என்றும் அதனினும் பின்னமானதென்றும் தெரிகின்றது. (என்பது பூர்வபக்ஷிகளின் வாதம்).

6-வது. சூத்திரம். அவதாரிகை:—மேல் இரண்டு சூத்திரங்களினால் பூர்வபக்ஷிகளாகிய தார்க்கிகர்கள் செய்த வாதம் மறுக்கப்படுகின்றது.

சூ. 6. "த்ருச்யதே து."

பதவுரை:—த்ருச்யதே=காரணத்தினும் வேறான லக்ஷணமுடைய காரியத்தின் உற்பத்தி உலகத்தில் காணப்படுகின்றது, து=ஆதலால் பூர்வபக்ஷங்கள் யுக்தமன்று.

கருத்து:—காரணத்தினும் வேறான லக்ஷணமாகக் காரியங்கள் உற்பத்தியாவதை உலகத்தில் நாம் காண்கின்றோம். இதற்கு இரண்டு உதாரணங்கள் காட்டுவோம்.

(1) சேதனர்களாகிய மனிதர்களிடத்தி லிருந்து அசேதனங்களாகிற நகம் மயிர் முதலியன உற்பத்தியாகின்றன.

(2) அசேதனங்களாகிய சாணம் வியர்வை முதலியவற்றினின்று சேதனங்களாகிற தேள், கொசுகு, பேன் முதலியன உற்பத்தியாகின்றன.

ஒரு வேளை இதற்கு ஒருவகை மறுப்புக் கூறலாம். அதாவது நகம் மயிர் இவைகள் சேதனனாகிய மனிதனிடத்தினின்று உற்பத்தியாவதில்லை. மனிதனது சரீரமாகிய அசேதனத்தினின்றே உற்பத்தியாகின்றன. அப்படியே அசேதனமாகிய சாணம் முதலியவற்றினின்று தேள் முதலியவற்றின் சரீரமாகிய அசேதனமே உற்பத்தியாவதன்றி சேதனம் உற்பத்தியாவதில்லை என்றிவ்வாறு கூறலாம். ஆனால் இங்கு ஒரு விஷயம் கவனித்தால் இந்த மறுப்பு சரியல்லவென்று தெரியும். அதாவது:—

அசேதனமாகிய சரீரத்தினின்றே அசேதனமாகிய மயிர் நகம் முதலியன உற்பத்தியாவதா யிருந்தால் உயிரில்லாத சரீரத்தினின்றும் தோன்றவேண்டும். அப்படிக்கில்லை. கேவலம் அசேதனமாகிய சாணம் முதலியவற்றினின்று தேள் முதலியவற்றின் கேவலம் அசேதன சரீரம் மாத்திரம் தோன்றுவதில்லை. அவற்றினிடத்து சேதனத்தின் தோற்றம் காணப்படுகின்றது. ஆகலின், சேதனத்தை அதிஷ்டான (ஆதார)மாகவுடைய அசேதனமே காரிய உற்பத்திக்குக் காரணம் என்று சொல்லவேண்டுமே யன்றி பிரத்தியேகமாய் அத்தகைய காரணமாகுமென்று சொல்ல முடியாது. மேலும்,

உலகத்தில் காணப்படும் எல்லாப் பொருள்களினிடத்தும் "அஸ்தி—பாதி—பிரியம்" (அஸ்தி=இருக்கிறது, பாதி=விளங்குகிறது, பிரியம்=

பிரியமாயிருக்கிறது. அஸ்தி: சத்து—பாதி: சித்து—பிரியம்: ஆனந்தம். (அதாவது சச்சிதானந்தம்) என்னும் பிரம்ம லக்ஷணங்களின் அனுபவமிருத்தலால் பிரபஞ்ச முழுதும் பிரம்மத்தின் காரியமாய் பிரம்ம மயமாய் இருக்கின்றது என்பதற்கு ஆக்ஷேபமில்லை. தவிர,

"கேவலம் தர்க்கம் பிரம்மஞானத்தை யடைவதற்குப் போதாது. சுருதியோடு கூடிய தர்க்கம் அத்தகைய ஞானோதயத்திற்குச் சாதனமாகும்" இச் சிருஷ்டி எவனிடத்தினின்று மாயிற்றோ அவனே எவன் அறிவான்" என்பன போன்ற வாக்கியங்களே யாராயுமிடத்து, பிரம்மம் உருவம் லிங்கம் (அடையாளம்) முதலியவை இல்லாததாய் மன வாக்குகளுக் கெட்டாததாயிருப்பதால், அது புத்தி பூர்வமான தர்க்க விஷயமன்று. அது வேதத்தால் மாத்திரம் அறியத்தக்கது. சுருதியோடு கூடிய தர்க்கமே அதனை அறிதற்கு ஆதாரம். மற்றவை பயனற்றவை.

7-வது சூத்திரம். அவதாரிகை:—இதற்குமேல் பூர்வபக்ஷிகள் மறுபடியும் பின்வருமாறு வாதமிடுகின்றனர். அதாவது: சேதனமும் சுத்தமும் சப்தா ஹீனமுமாகிய பிரம்மம் இதனினும் மாறுபட்டதும் அசேதனமும், அசுத்தமும், சப்தாதிகளையுடையதும், காரிய வடிவமுமாகிய பிரபஞ்சத்திற்குக் காரணமென்று சொன்னால் சத்காரியவாதிகளாகிய வேதாந்திகளுக்கு அசத்காரியவாதாபத்து (அசத்காரிய வாதமுடைமை) சம்பவிக்கின்றது. ஒன்றுக்கொன்று விரோதமான தர்மங்களுடையதா யிருத்தலால் காரியமாகிய அசேதனம் தன் உற்பத்திக்கு முன் காரணமாகிய சேதனத்தினிடத்தில் இருக்கிறது என்று சொல்ல முடியாது. ஆகையால் காரியத்தின் உற்பத்திக்கு முன் அசத்தே அதாவது அபாவமே இருந்தது என்று சொல்லவேண்டியிருக்கும்.

இவ்வாறு உண்டான தோஷத்தைப் போக்குவதற்காக உத்தர சூத்திரம் உபதேசிக்கப்பட்டது. "பதார்த்தத்தின் உற்பத்திக்கு பிராகபாவம் ஒரு காரணம் என்பது தார்க்கிகமதம். ஆகையால் அதற்கு அசத்வாதம் என்று பெயர். காரியோத்பத்திக்கு முன்பு எல்லாப் பதார்த்தங்களும் காரணவடிவமாக இருக்கின்றன என்பது வேதாந்த மதம். ஆகலின், அதற்கு சத்வாதம் என்று பெயர். கடத்தின் (குடத்தின்) உற்பத்திக்கு முன்பு கடாபாவம் எப்படி யிருந்ததோ அப்படியே பிரபஞ்சத்தின் உற்பத்திக்கு முன்பு பிரபஞ்சத்தின் அபாவம் இருந்தது. இவ்வளவே யன்றி பிரபஞ்சம் பிரம்மாத்மகமாய் இருந்ததாகச் சொல்லமுடியாது. ஆகையால் வேதாந்த மதத்தில் அபசித்தாந்தம் (தவறான கொள்கை) என்னும் தோஷம் காணப்படுகின்றது. இவ்வாறுண்டான வாதம் நிராகரிக்கப்படுகின்றது.

சூ. 7. "அஸதிதிசேந்நப்ரதிஷேதமாத்ரத்வாத்."

பதவுரை:—அஸத்=சிருஷ்டிக்கு முன்பு அபாவமே இருந்தது, இதி சேத்=என்று இவ்வாறு கூறுவாயானால், ந=அது சரியன்று; ஏனெனில், ப்ரதிஷேத மாத்ரத்வாத்=முக்காலத்திலும் இந்தப் பிரபஞ்சத்திற்கு காரணத்திலும் வேறான சுதந்தர ஸ்திதி (இருப்பு) இல்லாமற் போவதால்.

கருத்து:—வேதாந்த மதத்தில் அசத்வாதத்தின் அடைவு உண்டாகாது. ஏனெனில், வாஸ்தவமாகப் பிரபஞ்சமே இல்லை. ஆராய்ச்சிக்குப் பிறகு அது அசத்தியம் என்று தெரிவிப்பதற்கே பிரபஞ்சத்தின் வர்ணனம் செய்யப்

பட்டதன்றி வேறில்லை. இங்கு தள்ளுவதற்கு தள்ளப்படத் தகுந்த வஸ்து ஒன்றில்லை. சப்தாதிகளையுடைய பிரபஞ்சத்திற்கு சப்தாதிகளில்லாத பிரம்மம் காரணம் என்று சொன்னமாத்திரத்தில் பிரபஞ்சத்தின் உற்பத்திக்குமுன் அபாவமே (இன்மை) இருந்ததென்று சொல்லமுடியாது. (இந்த விஷயம் இனி காரிய காரண அநந்யத்வ வாதத்தில் விரிக்கப்படும்.)

ரஜ்ஜு சர்ப்ப பிராந்தியில் ரஜ்ஜு (கயிறு) பிராந்திக்கு (மயக்கத்திற்கு) ஆதாரம். சர்ப்பம் காரியம். இந்த ஸர்ப்பம் (பாம்பு) உண்மையில் மயக்கத்திற்கு முன்புமில்லை; மயக்க காலத்திலு மில்லை; மயக்கம் தெளிந்த பின்புமில்லை. இப்படியே பிரம்மத்தினிடத்து ஜகத்து தோற்றினதே யன்றி உண்மையில் அது மூக்காலத்திலுமில்லை. முன்னே காட்டிய கயிற்றரவு (ரஜ்ஜு ஸர்ப்ப) திருஷ்டாந்தத்தில் சர்ப்பபிராந்தியுடையவனுக்கு அவனுடைய புத்தியானுசாரமாகக் காணப்பட்ட பாம்பை பாம்பாகவே யனுவதித்து (பாம்பின் தன்மையை விளக்கி) பிறகு அது பாம்பல்ல என்று நீக்குவதே பாம்பின் தன்மையை விளக்குவதன் பயனாகும். இந்த விசாரமே (ஆராய்ச்சியே) அத்தியாரோபம் அபவாதம் என்று சொல்லபபடும். பிரபஞ்சத்திற்கும் பிரம்மத்திற்கும் உள்ள சம்பந்தம் கயிற்றிற்கும் பாம்பிற்கு முள்ள சமபந்தம் போன்றதே. இவ்வளவேயன்றி மண்ணிற்கும் குடத்திற்கும் உள்ளதுபோன்ற சம்பந்தமல்ல. எனவே, பிரபஞ்சத்திற்கு பிரம்மம் விவர்த்தோபாதான காரணமேயன்றி பரிணாமியுபாதான காரணமல்ல என்பது சித்தாந்தம்.

(விவர்த்தோபாதான காரணம் பரிணாமியுபாதான காரணம் என்பவை அடுத்த சஞ்சிகையில் விளக்கப்படும்.)

# தாயன்பு தலையன்பு

—:(o):—

(தே. வீரராகவ அய்யங்கார்.)

(ஒரு பிரஞ்சுகவியின் கருத்தைத் தழுவி எழுதியது.)

ஒரு கிராமத்தில் ஒரு சிறு வீடு; மச்சு வீடல்ல; குச்சு வீடு; தெற்கே பார்த்தது. அதில் ஒரு வயது சென்ற கிழவி தன் ஒரே மகனுடன் வசித்து வந்தாள். கிழவிக்குக் கணவன் வைத்துச் சென்ற ஆஸ்தி கொஞ்சமுண்டு. கிழவிக்கு மகன்மேல் உயிர். சற்றுநேரம் அவனைக் காணாவிட்டால் தவித்துவிடுவாள் கன்றைப் பிரிந்த பசுவைப்போலே. மிக்க செல்வமாக மகனை வளர்த்து வந்தாள் கிழவி. 'செல்வம் கொடுத்தால் கல்வி வருமா? பையன் பள்ளியிற் சேர்ந்தும் கல்வி பயிலாது விட்டுவிட்டான்.

பையனுக்கு வயதாயது. "பட்டாள்" பட்டத்துடன் நின்றிருந்தால் நன்றாயிருந்திருக்கும். தீயோர்க் கூட்டத்தில் சேர்ந்து "அயோக்கியன்" என்ற மற்றொரு பட்டத்தையும் பெற்றான். அக்கிராமம் அதிகமாகவும் நம் இளைஞனுக்கு—இனி இவனைப் பருவத்தை நோக்கி, இளைஞன் என்று சொல்லுவதே சரி—ஒரு தீமாதின் நட்பேற்பட்டது. மாது தன் தொழிலில் கைதேர்ந்தவளாகையால், இளைஞனின் செல்வம், சுகம், கௌரவம் முதலியவற்றைக் கவர்ந்துகொண்டு அவனையோர் ஓட்டாண்டியாக்கி விட்டாள். ஆயினும் அவள் அவனை விட்டாளில்லை. அவனும் அவளை விட்டபாடில்லை.

ஒருநாள் இரவு அம்மாது இளைஞன் தன்மீது கொண்டுள்ள காதலின் நிலையைக் கண்டறிய விரும்பினாள். இளைஞன் தன் வீட்டிலிருந்து வரும் சமயம் பார்த்திருந்து தெருக்கதவைத் தாளிட்டுக்கொண்டாள். இளைஞன் தன் வீட்டிலிருந்து வந்தான். என்றுமில்லாமல் அன்று தன் காதலியின் வீட்டுத் தெருக்கதவு தாளிட்டிருப்பதைக் கண்டு ஆச்சரியங்கொண்டான். அதன் காரணத்தை அறியக் கதவைத் தட்டினான். சிறிது நேரம் வரையில் பதிலில்லை. தன் காதலியின் பெயரைச் சொல்லிப் பலமாகக் கதவைத் தட்டினான். அவள் மெதுவாகக் கதவினருகே வந்து நின்றுகொண்டு,—கதவைத் திறக்காமலேயே—"நான் விரும்புவதைத் தருவாயேல் இன்று கதவைத் திறப்பேன். இன்றேல் உன்னிருப்பிடம் செல்லலாம்" என்றாள்.

இளைஞன் சற்றும் தயங்காமல், "என் உயிர் வேண்டினும் தருவேன். உன் விருப்பத்தைச் சொல்" என்றான்.

"நீ என்னிடம் பெருங்காதல் கொண்டிருப்பது உண்மையாயின், அதை யானறியும்படி நேரே உன் வீட்டிற்குச் சென்று, உன் தாயைக் கொன்று, இரத்தம் சொட்ட அவள் இருதயத்தை அறுத்து எடுத்துவா" என்றாள் அவன் காதலி.

"இது ஒரு பெருங்காரியமா? இதோ கொண்டு வருகின்றேன். பார்!" என்று சொல்லிக்கொண்டே, இளைஞன் தன் வீட்டை நோக்கி ஓடினான்.




**சூரிய கெடிகாரம்.**

நமது முன்னோர்கள் சூரியனைக் கொண்டே நாழிகையைக் கணக்கிட்டு வந்தனர். முதன் முதலாக பாபிலோனியர்களே சூரிய கெடிகாரத்தைக் கண்டு பிடித்தனராம்.

***

**பதுமைகளுக்கு ஆபத்து.**

விளையாட்டுக் கருவிகளில் பதுமைகளுக்கு ஒரு காலத்தில் ஆபத்து ஏற்பட்டிருந்தது. மதவெறி கொண்ட சிலர் அவற்றின் மீது பாணந் தொடுத்தார்களாம்.

***

**532 உயரமுள்ள மாதாகோவில்.**

உலகிலேயே அல்ம் என்னுமிடத்திலுள்ள மாதாகோவில்தான் மிக உயரமானதாம். அது 532 அடி உயரமுடையதாக இருக்கிறதாம்.

***

**பாரசீக அரசர் கிரீடம்.**

பாரசீக மன்னரது கிரீடமானது ஒரு புஷ்பத் தொட்டியைப் போன்றிருக்கிறதாம். அதில், கோழிமுட்டைப் பருமனுள்ள ரத்தினமொன்று பதிக்கப்பட்டிருக்கிறதாம்.

***

**விளம்பரத்துக்கு 7 கோடி பவுன்.**

பிரிட்டிஷ் வியாபாரிகள் விளம்பரத்துக்காக மட்டும் வருஷமொன்றுக்கு 7 கோடி பவுன் செலவழித்து வருகிறார்களாம். இதில் பத்திரிகை விளம்பரத்துக்கு மாத்திரம் 3 கோடி பவுன் செலவிடப்படுகிறதாம்.

---

தாய் தூங்கிக் கொண்டிருந்தாள். மெதுவாக அரிவாளை எடுத்துத் தாயின் தலையைத் துணித்தான்; மார்பைப் பிளந்தான். தன் காதலி விரும்பியவாறே இருதயத்தை அறுத்து எடுத்துக்கொண்டு, வெகு வேகமாகத் தன் காதலி வீட்டை யடைந்தான்.

வீட்டினுள் புகும்பொழுது சற்றுக் கால் வழுக்கித் தரைமீது குப்புற வீழ்ந்தான். அவன் கையிற் பிடித்துவந்த இருதயம் கையைவிட்டு நழுவியது. ஆயினும் அறுபட்ட அவ்விருதயமானது தன் மகனை நோக்கி "குழந்தாய்! உனக்கேதேனும் காயம் பட்டதோ? மெதுவாக எழுந்திரு. அழாதே" என்றது.

இக் கதையைப் படித்து யாரும் நகைக்கவேண்டாம். அன்பினாற் கட்டுண்ட ஒருயிரானது தான் துன்பமடைந்த காலத்தும், தனக்குத் தீங்கு செய்தாரையும் நேசிக்கும் என்று இக்கதையின் உட்பொருளாகும்.




மனிதர்களுடைய தேகத்தில் 249 எலும்புகள் இருக்கின்றன.

* * * *

பறவைகள் அதிகமாகத் தற்கொலை செய்துகொள்ளுகின்றனவாம்.

* * * *

நியூயார்க்கில் நவீன அரபிமொழியில் ஆறு பத்திரிகைகள் வெளியிடப் பட்டு வருகின்றனவாம்.

* * * *

விஞ்ஞான சாஸ்திரிகள் சிலர், குதிரை வால் மயிரே மிகவும் அழுத்த மான தென்று கருதுகின்றனர்.

* * * *

காடுகளில் சஞ்சரிக்கும் யானைகளின் சராசரி வயது 150 எனக் கூறப் படுகிறது.

* * * *

சிங்கத்தைக் காட்டிலும் புலிக்குப் பலம் அதிகமாம்.

* * * *

உலகிலுள்ள முக்கிய தேசியக் கொடிகள் 25. அவற்றில் 19 கொடி களில் சிவப்பு வர்ணங் கலந்திருக்கிறதாம்.

* * * *

ஒருவர் பேசினால் அதன் எதிரொலி யுண்டாவதற்கு 1/12 விநாடியாகிற தாம்.

* * * *

ஒரு பவுண்டு பட்டு நூலை உற்பத்தி செய்வதற்கு 27,600 சிலந்திகள் வேண்டுமாம்.

* * * *

கல்மழை விநாடிக்கு 70 அடி வேகத்தில் பெய்கிறதாம்.

* * * *

ஒரு மனிதனுடைய வாழ்நாளில் 23 வருஷகாலம் தூக்கத்தில் கழிந்து விடுகிறதாம்.

* * * *

உலகில் இப்பொழுது 10 கோடி ஜெர்மனியர் இருக்கிறார்களாம்.

* * * *

நல்ல தென்னை மரமொன்று ஒரு பருவத்தில் 40 காலன் இளநீரை உற் பத்தி செய்கிறதாம்.

* * * *

சோவியத் ருஷியாவில் 150 பாஷைகள் பேசப்படுகின்றனவாம்.

* * * *

ஒரு காட்மீன் வயிற்றில் வரிசையாக 8,000,000 முட்டைகள் இருந் தனவாம்.

# ஆசிரியர் குறிப்புக்கள்

## சொல்லொன்று செயலொன்று

சென்ற மாதம் பம்பாயில், ஸ்ரீராமகிருஷ்ண பரமஹம்ஸரின் திருநாளை ஒட்டிச் சர்வ சமய மகாநாடு ஒன்று நடைபெற்றது. மேற்படி மகாநாட்டில் எல்லாச் சமய தீர்க்கதரிசிகளின் படங்களும் வைக்கப்பட்டிருந்தது கவனிக்கத்தக்கது. ஸ்ரீமான்கள் எம். ஆர். ஜெயகர் அவர்களும், ஸர் ராதாகிருஷ்ணன் அவர்களும் முறையே அம்மகாநாட்டின் வரவேற்புக்கழகத் தலைவராகவும், தலைவராகவும், இருந்தனர். முதலில் வரவேற்புக் கழகத்தலைவர் ஸ்ரீராமகிருஷ்ணரின் உபதேசங்களையும் தத்துவங்களையும் எடுத்துக் கூறினார். அச்சமயத்தில் அவர் பேச்சும் செயலும் ஒன்றியிருக்க வேண்டிய அவசியத்தை நன்கு வற்புறுத்தினார். ஐரோப்பியரிடையே பேச்சும் செயலும் வேறுபட்டிருப்பதற்கு உதாரணமாக இத்தாலி — அபிஸீனியப் போரை ஸ்ரீமான் ஜெயகர் குறிப்பிட்டது மிகவும் பொருத்தமாயிருந்தது. "சுயேச்சை, சுதந்தரம், நாகரிகம் இவைகளைக் குறித்துப் பிரமாதமாகப் பேசிவரும் ஐரோப்பியர் தாங்கள் பேசும் தத்துவங்களை மறந்து நேர்மாறாக ஆப்பிரிக்காவில் நடந்து கொண்டிருக்கின்றனர்" என்று ஸ்ரீமான் ஜெயகர் சுட்டிக் காட்டினார். இக் கருத்தை மகாநாட்டுத் தலைவரான ஸர் ராதாகிருஷ்ணனும் ஆதரித்துப் பேசினார். "சுயநலமும் அறியாமையும் மக்களிடம் இருக்கும் வரை போராட்டங்கள் ஒழியமாட்டா. மக்களின் தத்துவங்களில் மாறுபாடு இருந்து வருவதால்தான் உலகில் ஒற்றுமைக் குறைவும், கக்ஷிப் பிளவுகளும் ஏற்பகின்றன. மனிதர்கள் இன்னும் பரிபக்குவம் அடையவில்லை. விலங்கு நீர்மை இன்னும் அவர்களை விட்டு நீங்கவில்லை. பிறருக்கு நலம் செய்ய வேண்டும் என்ற எண்ணமும், சகிப்புத் தன்மையும் ஒவ்வொருவரிடமும் ஏற்பட வேண்டும்" என்று ஸர் ராதாகிருஷ்ணன் கூறிய அறிவுரைகள் அமலுக்கு வரும் நன்னாள் எது? ஸர் ராதாகிருஷ்ணன் குறிப்பிட்டது போல் நாகரிகம், பாதுகாப்பு, சமத்துவம் முதலிய உயர்ந்த தத்துவங்களைப் பேசிக் கொண்டிருக்கும் சர்வதேச சங்கத்தின் கண் முன்பாகவே இத்தாலி அபிஸீனியாவை விழுங்கி விட்டது. இதற்கென்ன காரணம்? சொல்லொன்று செயலொன்று என்பதைத் தவிர வேறு என்ன கூறுவது? "உலக சமாதானம் உண்மையில் ஏற்பட வேண்டுமானால் மேனாட்டுத் தத்துவ சாஸ்திரிகளும், கீழை நாட்டுத் தத்துவ சாஸ்திரிகளும் ஒன்று கூடி ஆராய்ந்து உலகிற்கு வழி காட்ட வேண்டும். கீழ்நாட்டாரிடம் அமைந்துள்ள தன்னடக்கமும், தியாகமும், சுயநலமின்மையும் மேனாட்டாரிடமும் ஏற்பட வேண்டும்," என்று தத்துவ நிபுணர் ஸர் ராதாகிருஷ்ணன் அறிவுறுத்தினார். ஜடநாகரிகத்தின் வேகம் ஸர் ராதாகிருஷ்ணனின் அறிவுரைகளை எளிதில் மதிக்கச் செய்யுமா?

---

## சபாஷ் திருவாங்கூர்!

திருவாங்கூர் சமஸ்தானத்திலுள்ள பொதுப் பாதைகள், கிணறுகள், சத்திரங்கள், பள்ளிக்கூடங்கள் முதலியவைகள் சாதிசமய வேற்றுமையின்றி எல்லாருக்கும் திறந்துவிடப்பட்டிருப்பதாக வெளிவந்துள்ள உத்தரவைக்

கண்டு மகிழ்ச்சிப்பெருக்கு அடைகின்றோம். இதுகாறும் இந்துக்களல்லாத கிறிஸ்தவர்கள், முஸ்லிம்கள் போன்றவர்கள் அனுபவித்துக் கொண்டிருந்த உரிமைகள் இந்துக்களாகிய தாழ்த்தப்பட்ட மக்கட்கு மறுக்கப்பட்டிருந்தன. 1934-ஆம் ஆண்டில் சர்க்காரின் பொது வருமானத்தின் மூலம் நிருவகிக்கப்பட்டு வரும் பொது ரஸ்தாக்கள் முதலியவைகள் எல்லாருக்கும் திறந்து விடப்படும் என்ற உத்தரவு பிறப்பிக்கப் பட்டிருந்தது. தற்போதைய உத்தரவு அதன் அபிவிருத்தியே ஆகும். கேரளத்தில் தீண்டாமையின் கொடுமை அதிகம். வைக்கம் சத்தியாக்கிரகம் தெருவில் நடக்கும் உரிமை பெறவே ஏற்பட்டது நேயர்கட்கு நினைவிருக்கலாம். இப்பொழுது பொதுக் கிணறுகள், சத்திரங்கள், பள்ளிக்கூடங்கள் முதலியனவும் எல்லாருக்கும் உரிமை ஆகும் நிலைமை ஏற்பட்டிருப்பது கூர்ந்து கவனிக்கத்தக்கதாகும். திருவாங்கூர் மஹாராஜா அவர்கள் ஆண்டில் இளைஞராயும் மேனாட்டுச் சுற்றுப் பிரயாண அனுபவ முடையவராயும், தற்கால உலகியல் போக்கின் உண்மை யுணர்ந்தவராயும் இருப்பதால் இத்தகைய சீர்திருத்தங்கட்கு ஆக்கம் அளித்து வருகிறார். திருவாங்கூர் மற்ற சமஸ்தானங்களுக்கும் பிரிட்டிஷ் இந்தியாவுக்கும் சமூகத் துறையில் தக்க வழிகாட்டியாய் இருக்கும் என்றே எதிர்பார்க்கின்றோம். திருவாங்கூர் சமஸ்தானத்திலும் கொச்சி சமஸ்தானத்திலும் உள்ள தாழ்த்தப்பட்டவர்களாகிய ஈழவ சமூகத்தினர் தீண்டாமைக் கொடுமையைச் சகிக்காமல் "நாங்கள் இந்து மதத்தை விட்டு நீங்கி விடுகின்றோம்" என்று மகாநாடுகளிலும் கூட்டங்களிலும் தீர்மானங்கள் செய்து கொண்டு வருகின்றனர். திருவாங்கூர் சமஸ்தானத்தார் தீண்டாமை விலக்கு விஷயத்தில் சிரத்தை காட்டி வருவதால் இனிமேல் ஷை ஈழவ சமூகத்தினர் தங்கள் தீர்மானத்தை மாற்றிக் கொள்ளுவார்கள் என்றே எதிர்பார்க்கின்றோம். தாழ்த்தப்பட்ட மக்கட்கு இன்னும் ஆலயப் பிரவேச உரிமை அளிக்கத் திருவாங்கூர் சமஸ்தானத்தார் முன் வரவில்லையானாலும் படிப்படியாக அந்த உரிமையும் கூடிய விரைவில் ஏற்பட்டுவிடும் என்றே எதிர்பார்க்கின்றோம் பிரஸ்தாப உத்தரவைப் பிறப்பித்த திருவாங்கூர் சமஸ்தானாதிபதிகட்கு நாம் வாழ்த்துக் கூறுகின்றோம். சபாஷ் திருவாங்கூர்!

---

## கோடைகால அரசியற் பயிற்சிக் கூடம்

தமிழ்நாடு காங்கிரஸ் கமிட்டியாரின் ஆதரவில் சென்னை ராயப்பேட்டையிலுள்ள காங்கிரஸ் மாளிகையில் கோடைகால அரசியற் பயிற்சிக் கூடம் திறக்கப்பட்டிருப்பதை அறிந்து மகிழ்ச்சிப்பெருக்கு அடைகின்றோம். ஸ்ரீமான் டி. செங்கல்வராயன் அவர்கள் ஷை பயிற்சிக்கூடத்தைத் திறந்து வைக்குமாறு ஸ்ரீமான் சத்தியமூர்த்தியைக் கேட்டுக் கொள்ளும் முகத்தான் அதன் நோக்கங்களையும் அவசியத்தையும் தெளிவாக விரித்துரைத்திருக்கிறார். புதிய சீர்திருத்த அரசியல் அமலுக்கு வரப்போகிறது. அதற்குரிய தேர்தல் ஏற்பாடுகள் துரிதமாக நடைபெற்றுக் கொண்டிருக்கின்றன. காங்கிரஸ் எல்லா ஸ்தாபனங்களையும் கைப்பற்ற வேண்டும் என்று முனைந்து நிற்கிறது. இதற்குப் பிரசாரம் செய்யப் பயிற்சி பெற்ற தொண்டர்கள் தேவை. "அறிவு தொண்டின் மதிப்பைப் பெருக்கும். தொண்டு இல்லாத அறிவும் பயன்படாது. எனவே காங்கிரஸ் இவ்விரண்டையும் சேர்த்துப் பலனுண்டுபண்ணும் நோக்கத்துடன் இப்பயிற்சிக் கூடத்தை ஏற்படுத்துகிறது"

என்று ஸ்ரீமான் டி. செங்கல்வராயன் கூறிய பொருளுரையை நாம் வரவேற்கின்றோம். இப்பயிற்சிக் கூடத்தில் அரசியல் சாஸ்திரம், உண்மையான இந்த தேச சரித்திரம், பொருளாதார சாஸ்திரம், நிலப்பிரச்சினை, கூட்டுறவு இயக்கம், பிரசாரம் செய்யும் முறை முதலிய விஷயங்களைப்பற்றித் தொடர்ச்சியாகச் சொற்பொழிவுகள் நிகழ்த்தப்படும். இதுகாறும் பல வேறிடங்களிலிருந்தும் நாற்பது பேருக்குமேல் இதில் சேர்ந்திருப்பதாக அறிகின்றோம். இப்பயிற்சிக்கூடம் ஆறுவாரங்கள் வரை நடைபெறும். "சட்டசபைகளுக்கும் ஸ்தல ஸ்தாபனங்கட்கும் அங்கத்தினர்களாகச் சுமார் 5000-பேர்கள் நம்மாகாணத்தில் வேண்டும். இவர்கள் தகுந்த அறிவு பெற்றவர்களா யிருக்கவேண்டும். இந்தப் பயிற்சிக்கூடம் அதற்கு நிரந்தர சாதனமாயிருக்கும் என்று நம்புகிறேன்" என்று ஸ்ரீமான் சத்தியமூர்த்தி அவர்கள் கூறியதைத் தமிழ் மக்கள் ஊன்றிக் கவனிக்கவேண்டும் என்று சுட்டிக்காட்ட விரும்புகின்றோம். இதைப்போல் நமது மாகாணத்தில் நிலையான பயிற்சிக்கூடம் ஒன்று இருக்க வேண்டும் என்பது நமது விருப்பமாகும். சென்னையில் நடைபெற்று வரும் கோடைகால அரசியற் பயிற்சிக்கூடம் வெற்றிபெற வேண்டும் என்று வாழ்த்துகின்றோம்.

---

## "அந்தமான் நரகம் அன்று சுவர்க்கம்"

பெரிய குற்றங்களைச் செய்த கைதிகள் அந்தமான் தீவுக்கு அனுப்பப்படுகின்றனர். கடுந்தண்டனைக்கு அறிகுறியே அந்தமான் வாசம். இப்பொழுதும் வங்காள பயங்கர இயக்கத்தைச் சேர்ந்தவர்களாகக் கருதப்படுவோர் நூற்றுக் கணக்கானவர் அங்கே கடத்தி வைக்கப்பட்டிருக்கின்றனர். "அந்தமான் தீவுகள் மக்கள் வசிக்கத் தகுதியற்றவை, அவை நோய்க் களஞ்சியங்கள்" என்ற புகார் மேன் மேலும் கிளம்பிக் கொண்டிருந்தது. இந்த உண்மையை விசாரிக்க ஒரு கமிஷனும் நியமிக்கப்பட்டது. அந்தக் கமிஷன் புகாரை உறுதி செய்து அங்கே கைதிகளை அனுப்பக் கூடாது என்று சிபார்சு பண்ணிற்று. அரசாங்கத்தாரும் அந்தச் சிபார்சை ஏற்றுக் கொண்டனர். என்ன காரணத்தாலோ பிறகு அவர்கள் மனம் மாறி விட்டது. மேன் மேலும் கைதிகளை அனுப்பிக் கொண்டே தான் இருக்கின்றனர். அந்தமானில் உள்ள கைதிகளிற் சிலர் உண்ணாவிரதம் போன்ற முறைகளில் தங்கள் குறைகளைத் தெரிவித்தனர். இதைப்பற்றி அடிக்கடி இந்தியா சட்டசபையிலும் கேள்விகள் எழுந்தன. எனவே, அரசாங்கத்தார் இப்பொழுது அந்தமானைச் சுவர்க்கம் ஆக்க முனைந்திருக்கின்றனர் என்று எண்ணவேண்டி யிருக்கிறது. கொஞ்ச காலத்துக்கு முன் நமது மாகாணக் கைதிகளின் கருணை பிரபு கோபதி நாராயணசாமி செட்டியார் அந்தமானுக்குப் போய்விட்டு வரவேண்டும் என்று சர்க்காரால் கேட்டுக் கொள்ளப்பட்டார். அவர் சென்று மீண்டதும் அந்தமான் தீவுகளை ஆகாயம் அளாவப் புகழ்ந்தார். தமக்கு அதை விட்டுப் பிரிந்துவரக் கூட மனமில்லை என்று சொன்னதாக எமக்கு ஞாபகம். இப்போது இந்திய அரசாங்க உள்நாட்டு மந்திரி ஸர். ஹென்றி கிரெய்க் அங்கே போய்விட்டு வந்து புகழத் தொடங்கியிருக்கிறார். "அந்தமான் தீவுகள் இயற்கை வளப்பில் சிறந்தவை. சுகவாசத்துக்கு ஏற்றவை. நவீன வசதிகள் உண்டு. நாகரிகமாக வாழலாம். வேலையில்லாத் திண்டாட்டமே இல்லை. அவை கைதிகளின் சுவர்க்கம்" என்று வரு

ணிக்கிறார் ஸர். கிரெய்க். இது மட்டுமோ? "பயங்கர இயக்கக் கைதிகளை வைத்திருக்கும் சிறைக்கூடத்தை தூரத்திலிருந்து பார்த்தால் பம்பாய் மலபார் ஹில் என்ற இடத்தில் கட்டப்பட்டுள்ள லக்ஷப் பிரபுக்களின் மாளிகைகளைப்போல் விளங்குகின்றது. இந்தக் கைதிகளுக்குச் சாப்பாட்டு வசதி, வாசகசாலை வசதி, பத்திரிகைகள் வசதி எல்லாம் முதல் தரம்" என்று இங்குள்ளவர் நாவில் நீர் ஊறக் கூறுகிறார் கிரெய்க். எல்லாம் சரி. இனிமேல், வைஸிராய்—கவர்னர்கள் எல்லாரும் நீலகிரி மலைகளையும் ஸிம்லாவையும் விட்டொழித்துவிட்டு ஆண்டுதோறும் அந்தமான் தீவுகளுக்குச் சுகவாசத்தின் பொருட்டுப் போய்வரவேண்டும் யோசனை கூறுகின்றோம். ஏன்? சுவர்க்க இன்பத்தையும் பார்த்து விடலாம் அல்லவா?

---

## "பூணூலை அறுத்துவிட்டு நெருப்பில் குதிக்க வேண்டும்"

பண்டைக்காலத்தில் தங்கள் அறிவாற்றல்களைக் காட்டக் கவிராயர்களிடையே அரிகண்டம் பாடுவது, எமகண்டம் பாடுவது, தலையை வெட்டுவது, காதைக் குடைவது, தலையில் குட்டுவது போன்ற வழக்கங்கள் உண்டு என்று கன்ன பரம்பரையாகக் கேள்விப்பட்டுவருகின்றோம். ஆனால் இக்கால அறிஞர்களிற் சிலர் "அவை யெல்லாம் பொய்யான கட்டுக் கதைகள்—கல்வியறிவு ஒழுக்க நீதிகளிற் சிறந்த வித்வான்கள் அப்படிச் செய்யத் துணிவார்களா?" என்று அச்செய்திகளைப் புறக்கணித்து ஒதுக்கித்தள்ளி வருகின்றனர். சென்றமாதம் கும்பகோணம் சாஸ்திரிகளிடையே ஏற்பட்ட வாதப் பிரதிவாதங்களும், ஒருவர் விதித்த நிபந்தனையும் பழைய சங்கதிகள் உண்மையாக இருக்கலாமோ என்று எண்ணுமாறு தூண்டுகின்றன. கும்பகோணம் பச்சையப்பன் தெருவில் சிறுகுடி பண்டித சீதாராமசாஸ்திரி என்பவர் சின்னாட்களாக ஸ்ரீ வால்மீகி ராமாயணம் பிரசங்கம் செய்து கொண்டிருந்தார். அவர் வால்மீகியின் சுலோகங்களுக்குப் பழைய சம்பிரதாயப் படியின்றிப் புதிய வியாக்கியானங்களைச் செய்தாராம். இது பழைமையில் பற்றுள்ள உள்ளூர்ப் பண்டிதர்கட்கும் சாஸ்திரிகட்கும் பிடிக்க வில்லை. எனவே புதிய வியாக்கியானங்களை எதிர்த்துப் போராடுவதற்கு "சமஸ்கிருத மேதாவிகளும் பண்டிதர்களும்" ஸ்ரீ சங்கராச்சாரியார் மடத்தில் வாதப்பிரதிவாத விவாதத்திற்கு ஏற்பாடு செய்தனர். இதற்கு ஒரு திவான்பகதூர் பட்டம் பெற்ற மாஜி ஜில்லா ஜட்ஜு தலைமை. ஒவ்வொரு கக்ஷிக்கும் பதினைந்து பதினைந்து நிமிஷம் காலவரையறை. எதிர்க்கக்ஷியின் சார்பில் பேசத் தெரிந்தெடுக்கப்பட்டவர் ஒரு மஹாமஹோபாத்தியாயப் பட்டம் பெற்றவர். "ராமன் மனிதனே. அவன் வாலியோடு பகிரங்கமாகப் போர் புரிந்தான்" என்பது பண்டித சீதாராம சாஸ்திரிகள் கக்ஷி. இதற்கு மாறுதலைபானது மஹாமஹோபாத்தியாயர் கோஷ்டியின் கக்ஷி என்று தெரிகிறது. "இந்த விவாதத்தில் தோற்றுப் போகின்றவர் பூணூலை அறுத்தெறிந்து விட்டு அக்கினிப் பிரவேசம் செய்ய வேண்டும்" என்பது ஸ்ரீ சீதாராம சாஸ்திரியார் விதித்த நிபந்தனை இது பெரிய கூச்சலுக்கும் குழப்பத்திற்கும் காரணமாகிவிட்டது. இந் நிபந்தனை முதலில் அறிக்கையில் விதிக்கப்படவில்லை என்று எதிர்க்கக்ஷியினர் ஆரவாரம் செய்தனர். ஷை நிபந்தனை ஒப்புக்கொள்ளப் படாவிட்டால் விவாதத்தில்

கலப்பதில்லை என்று சாஸ்திரியார் பிடிவாதம் செய்தார். உடனே சாஸ்திரியாரை கையப் புடைக்க மஹாமஹோபாத்தியாயர் கோஷ்டி வரிந்து கட்டிக் கொண்டதாம். சாஸ்திரியாரை மீட்டுக் கொண்டு போகப்பட்ட பாடு பெரும் பாடாகிவிட்டதாம். நாம் கும்பகோணப் பண்டிதர் விவகாரங்களில் தலையிட்டுக்கொள்ள விரும்ப வில்லை. டி விவகாரத்தில் தீர்ப்புக் கூறவும் முன் வரவில்லை. ராமாயண ஐயப்பாடுகளை நீக்கிச் சொல்லும் முறை இது தானா என்று மாத்திரம் அந்தக் கற்றறிந்த பண்டிதர்களையும் சாஸ்திரிகளையும் கடாவுகின்றோம். இக் காலத்தில் பத்திரிகைகள் இல்லையா? இவர்களே இப்படி மண்டைகளை உருட்டிக் கொள்ளத் துணிந்தால் மற்றவர்களைச் சீர்திருத்த இவர்களுக்கு யோக்யதை உண்டா? புராணேதிகாசங்கள் விஷயத்தில ஒரு அலக்ஷிய பாவம் மேலோங்கி வரும் இந் நாளில் கும்பகோணப் பண்டிதர் செய்கைகள் மேன்மேலும் அதற்கு ஆக்கம் அளிப்பனவாகவே இருக்கின்றன என்று நினைவூட்டும் அளவில் நாம் நின்றுவிட விரும்புகின்றோம்.

---

## பிரஜா உரிமைச் சங்க ஏற்பாடு

பம்பாயில் பண்டித ஜவஹர்லால் நேரு அவர்களின் முன்னேற்பாட்டின் படி பிரஜா உரிமைச் சங்க அமைப்பைப்பற்றி யோசிக்கப் பல கக்ஷிப் பிரமுகர்களின் கூட்டம் ஒன்று சென்ற மாதம் நடைபெற்றது. பிரஜா உரிமைகளைப் பாதுகாக்க இந்தியாவில் ஒரு சங்கம் அவசியம் ஏற்படவேண்டும் என்பதைப் பற்றிப் பண்டிதர் விரிவாகப் பேசினார். மேனாடுகளில் இத்தகைய சங்கங்கள் செய்து வரும் அரிய வேலைகளையும் குறிப்பிட்டார். சட்டமறுப்பு நிறுத்தப்பட்டிருந்தும் அடக்குமுறை தாண்டவம் ஆடும் கொடுமையை விரித்துக் காட்டினார். "புத்தகங்கள் தடை செய்யப்படுகின்றன. பத்திரிகைச் சட்டங்களோ மிகவும கடுமையாக இருக்கின்றன. கிரிமினல் லா திருத்தச் சட்டங்கள் எல்லையில்லாத் தீங்கைச் செய்து கொண்டிருக்கின்றன. விசாரணை யின்றிப் பலர் சிறைகளில் அடைத்து வைக்கப்பட்டிருக்கின்றனர். எல்லைப்புற நிலைமை மிகவும் மோசமானதாயிருக்கிறது. மனிதவர்க்க தருமத்திற்கே விரோதமாக இத்தொல்லைகள் ஏற்படுத்தப்பட்டிருக்கின்றன"— இவைகளுக்கெல்லாம் ஒரு பரிகாரம் தேடும் நோக்கத்துடனேயே பிரஜா உரிமைச் சங்கம் வேண்டும் என்று பண்டித ஜவஹர்லால் நேரு வற்புறுத்தினார். எல்லாக் கக்ஷியினரும் இதில் ஒத்துழைக்கவேண்டும் என்று பண்டிதர் கேட்டுக் கொண்டார். இதன்மேல் சாதகபாதகமான அபிப்பிராயங்களைப் பலர் எடுத்துக்காட்டினார்கள். அக் கூட்டத்தில் கலந்துகொண்ட பலவேறு கொள்கையுடைய பிரமுகர்களிற் பெரும்பாலோர் இச் சங்க ஏற்பாட்டை வரவேற்றது குறிப்பிடத்தக்கதாகும். கடைசியில் இதை நிருமாணிக்க ஒரு கமிட்டி ஏற்படுத்தப்பட்டது. பிரஜா உரிமைச் சங்கத்திற்கு நாட்டுமக்கள் எல்லாரும் ஆதரவு நல்க வேண்டும் என்று நாம் கேட்டுக் கொள்ளுகின்றோம். இச் சங்கத்தின் மூலம் மக்களின் ஜீவாதார உரிமைகள் நன்முறையில் வற்புறுத்தப்பட்டு நிலைநிறுத்தப்படும் என்பதில் சிறிதும் ஐயமில்லை. ஒவ்வொரு கிராமத்திலும் இச்சங்கக் கிளை வேலை செய்யவேண்டும் என்று ஆசைப்படுகின்றோம். இதைப்பற்றி இன்னொருமுறை விரிவாக எடுத்துக் காட்டுவோம்.

---

## டாக்டர் அன்சாரியின் பிரிவு

ஹிந்து—முஸ்லிம் ஒற்றுமையின் திருவுருவாய் விளங்கிய டாக்டர் எம். ஏ. அன்சாரி அவர்கள் சென்ற மாதம் முஸோரியிலிருந்து டில்லிக்கு ரயிலில் வரும்போது மார்பு அடைப்பால் இவ்வுலக வாழ்வை நீத்தார் என்ற செய்தி அறிந்து திடுக்கிட்டோம். டாக்டர் அன்சாரி வைத்தியத் துறையில் பேரும் புகழும் பெற்ற நிபுணர். ராஜ வைத்தியர். மேல்நாட்டு அனுபவம் மிகப் பெற்றவர். தமது முக்கிய அலுவல்களையும் லக்ஷியம் செய்யாது நாட்டு முன்னேற்றத் தொண்டில் ஈடுபட்டவர். சட்ட மறுப்பில் சிறை செல்லுதல் போன்ற அரிய தியாகங்களையும் செய்தார். சென்னை காங்கிரஸ் தலைவராக விளங்கினர். இவர் ஹிந்து—முஸ்லிம் ஒற்றுமைக்காக அரும்பாடுபட்டிருக்கிறார். இவரது பிரிவு நாட்டுக்கு ஈடு செய்ய முடியாத பெரிய நஷ்டமாகும். இப்பெரியாரைப் பிரிந்து வருந்தும் குடும்பத்தாருக்கு எமது மனப்பூர்வமான அநுதாபத்தைத் தெரிவித்துக் கொள்ளுகின்றோம். அவரது ஆன்மா சாந்தி அடைவதாக.



## தக்ஷிணாமூர்த்தி பிள்ளை மறைந்தார்!

தென்னிந்திய சங்கீத உலகில் பேரும் புகழும் வாய்ந்து விளங்கிய பிரபல மிருதங்கம்—கஞ்சிரா வித்துவான் புதுக்கோட்டை ஸ்ரீமான் ஆர். தக்ஷிணாமூர்த்தி பிள்ளை அவர்கள் இவ்வுலக வாழ்வை நீத்தார் என்ற செய்தி அறிந்து மிகவும் வருந்துகின்றோம். ஸ்ரீமான் பிள்ளை அவர்கட்கு இறக்கும் போது வயது 61. திடகாத்திர முடையவராகவே இருந்ததினால் இவ்வளவு விரைவில் மறைவார் என்று யாரும் எதிர்பார்க்கவே இல்லை. தென்னிந்தியாவில் மிருதங்கம்—கஞ்சிரா ஆகிய இருவகை வாத்திய வாசிப்பிலும் ஸ்ரீமான் பிள்ளை அவர்கள் நிகரற்று விளங்கினார்கள். சிறந்த சங்கீத ஞானமும், நீண்டநாள் அநுபவமும், பாடகர்களின் மனப் போக்கை உணர்ந்து வாசிக்கும் திறமையும், உயரிய நற்குணங்களும், தெய்வ பக்தியும் நிறைந்த உத்தமமான ஸ்ரீமான் தக்ஷிணாமூர்த்தியாரின் பிரிவு சங்கீத உலகில் ஈடு செய்ய முடியாத பெரிய நஷ்டமாகும்: இவருடைய குமாரர் மிருதங்க வித்துவான் ஸ்ரீமான். சாமிநாத பிள்ளை அவர்களுக்கும் குடும்பத்தாருக்கும் எமது மனப்பூர்வமான அநுதாபத்தைத் தெரிவித்துக் கொள்ளுகின்றோம். காலஞ்சென்ற ஸ்ரீமான் ஆர். தக்ஷிணாமூர்த்தி பிள்ளை அவர்களின் ஆன்மா சாந்தி அடைவதாக.






# லக்ஷ்மிபாய்

அல்லது

# ஆற்காட்டு முற்றுகை.

(எம். லக்ஷ்மண முதலியார்.)

(879-ம் பக்கத் தொடர்ச்சி.)

## ஆறும் அத்தியாயம்

இந்த அத்தியாயம் சர்தார் மாபத்கானுக்கும் இராஜா சாஹேபு விடமிருந்து வந்த பாச்சா சாஹேபு என்பவருக்கும் நடந்த சம்பாஷணையைப் பற்றியதாகும்.

மாபத்கான்:—நீங்கள் கோட்டைக்குள் எப்படி வந்தீர்கள்?

பாச்சா சாஹேப்:-எச்கா படாகாம்! பாரசிக தேசத்திலிருந்துவரும் இரத்தின வியாபாரி என்று சொன்னேன். இதோ இந்த இரத்தினங்களைக் காண்பித்தேன். உடனே மிகுந்த மரியாதையுடன் உள்ளே விட்டுவிட்டனர்.

மா:—பஹுத் அச்சா!

பா:—நான் வந்த விஷயம் ஒருவருமே அறியமாட்டார்கள்.

மா:—ராஜா சாஹேபு என்ன செய்தி சொன்னார்?

பா:—நீங்கள் இருவரும் கடிதம் மூலம் செய்துகொண்ட ஒப்பந்தப்படி காரியத்தை ஜல்தி முடிவு செய்யச் சொன்னார். வருகிற ரம்ஜான் பண்டிகைக்குள் பூர்த்தியாகவேண்டும். தாமதம் என்பதே கூடாது. ஏனென்றால் ஆற்காட்டில் தோல்வியடைந்தது கூடப் பெரிதாய்த் தெரியவில்லை. இதனால் அவர் கிலாட்பிடித்தவர்மாதிரி இருக்கின்றார். பணத்தைப்பற்றி ஆலோசிக்க வேண்டியதில்லை.

மா:—இப்போது ஏதாவது சிலவுக்கு அனுப்பியிருக்கின்றாரா?

பா:—(தனது சொக்காயிலிருந்து ஒரு சிறிய பட்டுப்பையை எடுத்து மாபத்கானிடம் கொடுத்தான். அதைத் திறந்து பார்த்ததும் எல்லாம் விலையுயர்ந்த ரத்னங்களாய் இருக்கக்கண்டு சர்தார் மாபத்கானுடைய கண்கள் பூத்துப் போயின.) இதை இப்போது உங்களிடம் கொடுக்கச்சொன்னார். இவையெல்லாம் அந்தக் காலத்தில் டில்லி தர்பாரிலிருந்து கொண்டு வரப்பட்டன. இதன் மதிப்பு ஒரு லக்ஷம் வராகன். ராஜா சாஹேபுவின் எண்ணம் பூர்த்தியாகி விட்டால்—நல்ல இனும்!

மா:—சை, சை. இனும் கினும் நமக்கு வேண்டாம். அந்த ஹராம்ஜாதா

வின் கொட்டம் அடக்கினால் போதுமானது. அவன்மேல் உள்ள பழி தீர்ந்தால் போதுமானது. அதுவும் அல்லாமல் இப்போது சந்தாசாஹேபுவின் கைபலம் மிகவும் குன்றிப்போய் இருக்கிறது. ஆற்காட்டில் தோல்வியடைந்த பிறகு அவர்களின் படைவீரர்கள் இவரைவிட்டு ஓடிவிட்டார்களாமே. இப்படி இருக்கையில் அவர் குமாரனான ராஜா சாஹேபுவிடமிருந்து திரண்ட திரவியத்தையாவது உயர்ந்த பதவியையாவது நான் எப்படி எதிர்பார்க்க முடியும்?

பா:—பிரதி பிரயோஜனம் ஒன்றும் எதிர் பார்க்காமலே நீங்கள் இந்த சூழ்ச்சியை நிறைவேற்றிக் கொடுப்பீர்கள் என்று அவர் பூரண நம்பிக்கையுடன் இருக்கிறார்.

மா:—அந்தப் பெண்ணைப் பிடித்துத் தருவதென்றால் இன்றுகூட செய்துவிடலாம். ஆனால் அந்த சூரப்பயலான ஹுசேன் எப்படியாவது எல்லோரையும் கண்டுபிடித்து விடுவான். அவனை நினைத்துதான் பயமாய் இருக்கிறது.

பா:—அப்படியானால், முதலில் அவனை வேலை முடித்துவிடுகிறது.

மா:—ஓ! அரண்மனையில் கொலை செய்தால் அது வெளிவராமல் இருக்குமா?

பா:—அல்லது அவனைச் சிறையில் போடும்படி ஓர் சூழ்ச்சி செய்ய வேண்டும்.

மா:—அதைப்பற்றிதான் சில தினங்களாக ஆலோசனை செய்துகொண்டு வருகிறேன்.

பா:—என்ன ஆலோசனை? அவன் லக்ஷ்மிபாயுடன் காதல் கொண்டிருக்கிறான் என்பதை வெளிப்படுத்துவது தானே?

மா:—ஆம். இப்பொழுதும் அரண்மனையில் தினம்தினம் அவர்களிருவரும் அந்தரங்கமாய்ச் சந்திப்பதுண்டு. நமது ஆள்கள் அதைக் கவனித்து வந்திருக்கிறார்கள். சேடிமார்களிடமிருந்தும் நமக்கு சேதி வந்திருக்கின்றது. இருவரும் சந்தித்திருக்கும்போதே கையும் களவுமாய்ப் பிடித்து ராஜாவிடம் கொண்டுபோய் விடலாம். ஆனால் அந்த, அந்த புலிக்குட்டி இருக்கும் வரையில் யாருக்கும் துணியவில்லை. இதல்லாமலும் இந்த சூழ்ச்சி சிறந்ததில்லை. ஏனென்றால் ராஜாவே ஒரு சமயம் அவன்பேரில் உள்ள பிரியத்தினாலும் தங்கள் அரண்மனைப்பெண்ணின் கௌரவத்திற்கு பங்கம் ஏற்படுவதினாலும் நமது பேரிலேயே கோபப்பட்டாலும் படுவார். அப்படியில்லாவிட்டாலும் ராஜா அவர்களிருவரையும் சிறையில் வைத்துவிடுவார். அப்போது நமது எண்ணம் கைகூடி வராது. இலக்ஷ்மிபாய் சிறைக்குள் போய்விட்டால் நாம் அவளை எப்படி அபகரிக்க முடியும்?

பா:—ராஜாவுக்கு முஸ்லீம் என்றால் பிடித்தம் தானே?

மா:—ஆம்.

பா:—குடி படைகளுக்கு?

மா:—நை. ஏன் தெரியுமா? முன்பு *சையத் சைட் என்ற ஒரு மந்திரி

*இந்த மந்திரியின் சமாதி இப்பொழுதும் தஞ்சை வடவாற்றின் தென் கரையில் சையத்கோரி என்ற பேரால் வழங்கி வருகிறது.

யிருந்தான். அவன் ரொம்ப ரொம்ப ஜுலூம் செய்து தானும் கொலையுண்டது மன்றி இந்த ராஜ்யத்தில் முகம்மதிய அதிகாரிகளுக்கே பெருத்த அபக்கியாதியை உண்டுபண்ணி விட்டான். இல்லாவிட்டால் நான்கூட இதுவரைக்கும் பிரதானியாகி இருக்கமாட்டேனே?

பா:-இப்போது ஹுசேன்பேரில் குடிபடைகளுக்கு வெறுப்பு ஏற்படும் படிசெய்து அவர்களைக் கலகம் செய்யும்படி தூண்டுதல் செய்யக் கூடாதா?

மா:—சே! அது முடியாத காரியம். இந்த ராஜ்யத்தில் உள்ள குடிகள் பூராவும் அவனைத் தங்கள் உயிருக்கு உயிராய் நினைத்திருக்கிறார்கள். அவன் முகம்மதியனுச்சே என்ற துவேஷம் ஒருவருக்குமே கிடையாது. அப்படி ஒரு சமயம் குடிகள் கலகம் செய்தாலும் அரசனுடைய தயவு அவனுக்கு இருக்கும்போது அவனை யார் என்ன செய்ய முடியும்?

பா:—வேறு என்ன வழி இருக்கிறது?

மா:—அவன்பேரில் அரசனுக்கு வெறுப்பு ஏற்பட செய்ய வேண்டும்.

பா:—எப்படி?

மா:—அதற்குத்தான் ஓர் அருமையான வழியிருக்கிறது. அது நிறைவேறி விட்டால் சர்தார் ஹுசேன்கான் கையில் விலங்கு தரித்துக்கொண்டு ஆயுள் பரியந்தம் சிறைவாசம் செய்வார். பிறகு லக்ஷ்மிபாயைப் பயமுறுத்தி நாம் அவளிஷ்டத்துடனேயே அழைத்துக்கொண்டு போய்விடலாம்.

பா:—ஹே!

மா:—ராஜாவுக்கு சென்னப்பட்டணத்திலுள்ள ஆங்கிலேயர்களைக் கண்டால் பிடிக்காது. அவர்கள் இந்தக் கோட்டைக்குள்ளேயே வரக்கூடாது. ஏன் தெரியுமா? விபரமாய்ச் சொல்லிவிடுகிறேன். இப்போதுள்ள பிரதாப சிங் மஹாராஜாவுக்கு ஒரு எதிரி உண்டு. அவர் பெயர் ஷாஹாஜி. ஜனங்கள் அவனைக் காட்டுராஜா என்றும் அழைப்பார்கள். பத்து வருஷங்களுக்கு முன் பிரதாப சிங் மஹாராஜா மைனராய் இருந்தபடியால் அவருடைய தாயாராகிய ராணி வீஜான்பாய் அரசு புரிந்துவந்தார். அப்பொழுது இந்த காட்டுராஜா அப்போதிருந்த ஒரு மந்திரிபடன் சதியாலோசனை செய்து ராணியை சிறைசெய்துவிட்டுத் தான் பட்டத்திற்கு வந்தார். ஆனால் ஆற்காட்டு நவாபு அந்த மந்திரியை கொலை செய்துவிட்டு காட்டு ராஜாவையும் சிறை செய்து பிறகு இப்போதிருக்கும் பிரதாபசிங் மகாராஜாவுக்குப் பட்டம் கட்டி வைத்தார். இது நடந்து ஏழு வருஷங்களுக்குப் பிறகு இந்தக் காட்டு ராஜா சென்னப் பட்டணத்தில் கோட்டைக் கட்டிக்கொண்டிருக்கும் கும்பேனியாரிடம் தனக்கு உதவி செய்யும்படி மனு செய்துகொண்டார். ஆனால் அவர்களுக்கு அப்பொழுது நமது ராஜாவின்பேரில் பகைஇல்லை. அப்படியிருக்க, அவர்கள் நமது ராஜாவை ஒரு வார்த்தை கேட்காமல் ஒரு படையை அனுப்பி சிதம்பரத்திற்கு அருகாமையிலுள்ள தேவிக் கோட்டையைத் தாக்கினார்கள். அதுமுதல் அவர்களைக் கண்டால் நஞ்சைப்போல் வெறுத்து வருகிறார் மஹாராஜா.

பா:—ஓ, ஓ!

மா:—இப்போது திருச்சிராப்பள்ளிக் கோட்டையில் சந்தா சாஹேபு

வின் முற்றுகையில் அகப்பட்டுக்கொண்டிருக்கும் மகம்மது ஆலி இருக்கிறார் அல்லவா?

பா:—ஆம்.

மா:—அவருக்கு உதவி செய்வதற்காக சென்னப்பட்டணத்திலிருந்து க்ளைவ் வரப்போவதாக சர்தார் ஹுசேனுக்கு அவர் எழுதிய கடிதம் ஒன்று என்னிடம் சிக்கிக்கொண்டிருக்கிறது.

என்று சொல்லி தன்னிடமிருந்த ஒரு கடிதச் சுருளை பாச்சா சாஹேபு விடம் கொடுத்தார். அதில் பின்வரும் சமாச்சாரம் இங்கிலீஷில் எழுதி யிருந்தது:—

"..,......................உங்கள் தஞ்சையா நகரிலிருந்து 6000 படை வீரர்களை திருச்சிராப்பள்ளிக்கு மகம்மது ஆலிக்கு உதவியாக அனுப்புவதாக மஹாராஜா உறுதி சொல்லியிருப்பதாகத் தெரியவந்தது. ரொம்ப வந்தனம். நானும் மேஜர் லாரென்ஸும் திருச்சிராப்பள்ளிக்கு ஒரு பெரும் படையோடு சந்தா சாஹேபுவையும் பிரெஞ்சுக்காரரையும் விரட்டி யடிப்பதற்காக வரப் போகின்றோம். விபரம் பின்னாடித் தெரிவிக்கின்றோம்.

ராபர்ட் க்ளைவ்.

மா:—கடிதம் முழுவதும் வாசித்தீர்களா?

பா:—ஆம்.

மா:—கும்பேனியாருக்கும் நமது ராஜாவுக்கும் உள்ள மனஸ்தாபத்தைப் பற்றி முன்னமேயே தெரிவித்திருக்கின்றேன், அல்லவா?

பா:—ஆமாம்.

மா:—இந்தக் கடிதத்தில் இதேமாதிரி மசியினால் இந்த எழுத்துக்களைப் போலவே இரண்டு வரி எழுதி சேர்த்துவிட்டால்—முப்பது நாழிகை நேரத் திற்குள் சர்தார் ஹுசேன்கானை கையில் விலங்குடனே சிறைச்சாலையில் காணலாம். பிறகு லக்ஷ்மிபாய் வலியவே வந்து என் காலில் விழுவாள்.

பா:—சபாஷ்! ஆனால் அந்தமாதிரி இங்கிலீஷில் எழுதுவதற்குத் தகுந்த ஆள் வேண்டுமே.

மா:—ஆம். அதைப்பற்றித்தான் ஆலோசனை செய்து கொண்டு இருக் கிறேன்.

பா:—யாராவது ஒரு கிறிஸ்தவப் பாதிரியைக் கொண்டுதான் இது செய்யவேண்டும். அவர்கள் இங்கிலீஷ் படித்திருப்பார்கள்.

மா:—ஓ! அவர்கள் இதற்கு உடன்படுவார்களா? ஆனால் பார்க்கலாம். தரங்கம்பாடி பாதிரிகளில் ஒருவரை வரவழைத்துப் பார்க்கிறேன்.

பா:—அவர்களுக்கு ஏதாவது உபகாரம் செய்தால்......

மா:—ஆம். இந்த ராஜ்யத்தின் எல்லைக்குள் ஓர் மாதா கோவில் கட்டிக் கொடுத்தால் போதுமென்று நினைக்கிறேன்.

பா:—ஆம், ஆர். அதுவும் நல்ல யோசனைதான்.

இந்த சம்பாஷணை நடந்து சில தினங்களில் இரன் பயனாக அரண்மனை யில் நடந்த ஓர் சம்பவம் யாவரையும் திடுக்கிடச் செய்தது.

# "ஆனந்தபோதினி" பஞ்சாங்கம்.

**தாதுஞு ஆனிமீ—கலியுகாதி 5038, சாலிவாகனம் 1859, பசலி 1345-46, கொல்லமாண்டு 1111, ஹிஜரி 1355, இங்கிலீஷ் 1936ஞு ஜூன்மீ—ஜூலைமீ**

| ஆனிமீ | ஜூன்மீ | வாரம். | திதி. | நக்ஷத்திரம் | யோகம். | விசேஷங்கள். |
|---|---|---|---|---|---|---|
| | | | | | | [சீதி புண்யகாலம் |
| 1 | 14 | ஞா | தச44-13 | ரே41-35 | அ41-35சி | மிதுனரவி நா-4-35, ஷட |
| 2 | 15 | திங் | ஏகா37-25 | அஸ்36-50 | சித்60 | சர்வ, மத்வ ஏகாதசி |
| 3 | 16 | செவ் | து30-35 | பர32-0 | சித்60 | கிருத்திகை (ஆலய அனுஷ் |
| 4 | 17 | புத | திர23-58 | கி✱27-25 | அ27-25சி | கிருத்திகை விரதம் [டானம் |
| 5 | 18 | வியா | ச● 17-50 | ரோ23-23 | மர60 | சர்வத்திர அமாவாசை |
| 6 | 19 | வெள் | அமா12-25 | மிரு20-8 | சித்60 | கரிநாள், தான்யம் செலவிட |
| 7 | 20 | சனி | பிர8-15 | திரு18-3 | சித்60 | சந்திர தெரிசனம் |
| 8 | 21 | ஞா | துதி5-25 | புன17-20 | சித்60 | சர்வ முகூர்த்தம் செய்ய |
| 9 | 22 | திங் | திரி3-38 | பூச18-13 | சித்60 | மாச சதுர்த்தி விரதம் [இ |
| 10 | 23 | செவ் | சது4-3 | ஆயி20-45 | சித்60 | ஸ்கந்த பஞ்சமி, நவகிரகசாங் |
| 11 | 24 | புதன் | பஞ்6-33 | மக24-58 | சி24-58அ | சஷ்டி, வாகனமேற |
| 12 | 25 | வியா | சஷ்10-13 | பூர30-25 | சி30-25ம | விஸ்வத் சப்தமி [கூர்த்தம் |
| 13 | 26 | வெள் | சப்15-0 | உத்37-0 | சித்37-0அ | ஆனித்திருமஞ்சனம், சர்வமு |
| 14 | 27 | சனி | அஷ்20.33 | அஸ்44-13 | மர60 | சுபகாரியங்கள் நீக்க |
| 15 | 28 | ஞா | நவ26-23 | சித்51-20 | சித்60 | வியாதிஸ்தர் மருந்துண்ண |
| 16 | 29 | திங் | தச31-50 | சுவா58-8 | அ58-8மர | லக்ஷிமி விரதாரம்பம் |
| 17 | 30 | செவ் | ஏகா36-35 | விசா60 | மர60 | சர்வ, மத்வ ஏகாதசி [கன் |
| 18 | 1 | புதன் | த40-15 | விசா4.5 | சித்60 | சாதுர்மாஸ்ய விரதாரம்பங் |
| 19 | 2 | வியா | திர42-35 | அனு8-43 | சித்8-43பி | சுபமுகூர்த்தம் செய்ய |
| 20 | 3 | வெள் | சது43-18 | கே12-0 | மர12-0அ | குளம், கிணறு வெட்ட |
| 21 | 4 | சனி | ○43-8 | மூல13-58 | சித்60 | பௌர்ணமி, வியாச பூஜை |
| 22 | 5 | ஞா | பிர41-5 | பூரா14-33 | சி14-33அ | ணிதாரம்பம் செய்ய |
| 23 | 6 | திங் | துதி38-5 | உத்13-58 | ம13-58அ | |
| 24 | 7 | செவ் | திரி34-13 | திரு12-15 | சித்60 | |
| 25 | 8 | புதன் | சது29-28 | அவி9-50 | பி9-50சி | |
| 26 | 9 | வியா | பஞ்24-23 | சத6-48 | மர6-48சி | |
| 27 | 10 | வெள் | சஷ்18-50 | பூர3-18<br>உத்59-35 | சித்60 | |
| 28 | 11 | சனி | சப்13-5 | ரே55-50 | சி55-50ம | |
| 29 | 12 | ஞா | அஷ்7-15 | அஸ்52-0 | சித்60 | |
| 30 | 13 | திங் | நவ1-33<br>தச56-5 | பர48-30 | சி43-30ம | |
| 31 | 14 | செவ் | ஏகா51-0 | கி✱45-20 | சி45-20அ | கிருத்திகை 10-க்குள் மழை |
| 32 | 15 | புதன் | து46-28 | ரோ42-40 | சித்60 | தக்ஷிணாயன புண்யகாலம் |

1936ஞு ஜூலைமீ

| | | செ-புத சுக் | சூரி சே |
|---|---|---|---|
| சனி<br>— | 2-மிது-செவ்<br>4-மிது-சுக்<br>21-மிது-புத<br>28-கடக-சுக் | | — |
| ராகு | குரு | | |

PRINTED & PUBLISHED BY N. MUNISAWMI MUDALIAR,
AT THE "ANANDA BODHINI" PRESS.
NO. 6, LAWYER CHINNATHAMBI MUDALI STREET, MADRAS